# நளவெண்பா

[மூலமும் உரையும்]



உரையாசிரியர் :

கழகப்புலவர், செல்லூர்க்கிழார்,

திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை அவர்கள்.

கழக வெளியீடு: ௭௬௧

புகழேந்திப் புலவர்

இயற்றிய

# நளவெண்பா

மூலமும்



கழகப்புலவர், செல்லூர்க்கிழார்,

திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை அவர்கள்

எழுதிய உரையும்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
திருநெல்வேலி :: சென்னை - 1.

# பதிப்புரை

நளவெண்பா எனப் பெயரிய இந்நூல் முத்தமிழ்ப் புலமை வாய்ந்த நல்லிசைப் புலமை வல்லுநர் புகழேந்திப் புலவரால் ஆக்கப்பட்டுத் தமிழ்மொழிக்கு அணியாக இலகுவது.

இந்நூல் சொற்பொருள் அணியும் ஆழமும் மிக்கது; கற்கக் கற்கக் கழிபேரின்பம் தருவது; எண் வகைச் சுவையும், காப்பியச் சிறப்பும் கவினுறத் திகழ்வது.

இத்தகைய சிறப்புமிக்க இந்நூலுக்குப் பன்னெடுங் காலமாகப் பலப்பல உரைகள் வெளிப்போந்துள்ளன. ஆயினும், அவைகள் மறுபதிப்பு வாராது நாட்டில் அருகலாயின.

எனவே, இக்குறைபாட்டை நன்குணர்ந்து இந் நூற்குப் புத்தம் புதிய முறையில் சொல்லுரை, கருத்துரை, இலக்கணக்குறிப்பு, மேற்கோள் முதலிய யாவும் கெழுமிய விளக்கவுரையை எம் கழகப் புலவர், செல்லூர்க்கிழார், திரு. செ. ரெ. இராமசாமிபிள்ளை யவர்களைக்கொண்டு எழுதுவித்து, அழகிய முறையில் பதித்து வெளியிட்டுள்ளோம்.

வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பகமாகிய நம் தமிழக மக்கள் யாவரும், வாங்கிக் கற்றும் கற்பித்தும் இலக்கியச் சுவைஞர்களாக இலகுவதுடன், எம்மையும் இதுபோன்ற இத்தமிழ்ப் பெரும்பணியில் மேன் மேலும் ஊக்குவிப்பார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# அணிந்துரை

## இயற்கை இன்பம்:

காலை ஞாயிறும் மாலை மதியமும், காலை வெள்ளொளியும மாலைச் செவ்வொளியும், வானின் முத்துப் போன்ற விண்மீன் ஈட்டமும், கடலின் கருநிறமும், மாலையின் மாண்பெருந் தோற்றமும், காட்டின் செறிவும், மலர்களின் கூட்டமும் கட்புலன்கட்குப் பெருவிருந்தாவன; வண்டின் முரற்சியும், கடலின் இரைச்சலும், வானம்பாடியின் மகிழ்வுறு பாடலும், புட்கூட்டங்களின் பேரொலியும், தவளைகளின் தத்துறுபாடலும், மழைபெய் மாஞெலியும் செவிப்புலன்கட்கு இசையின்பம் செய்வன; வீசு தென்றலும், வீங்கிள வேனிலும், நிலவின் தண்ஞெளியும், நீரின் குளிர்வும், ஞாயிற்றின் வெப்பமும் உடலுக்கு ஊற்றின்பம் தருவன; வெண்மை செம்மை பொன்மை கருமை பசுமை முதலிய பன்னிற மலர்களின் நன்மணமும், மரஞ் செடி கொடிகளின் நறுவிய பல்வகை மணங்களும் மூக்குப் புலனுக்கு முற்ரு இன்பம் பயப்பன; நறுவிய மா பலா வாழைத் தீங்கனிகள், நரந்தம் கிச்சிலி முதலியவைகளின் கனிகள், நாப்புலனுக்கு நல்விருந் தாக்குவன. இவைகளை இயற்கை படைத்துத் தந்து கண்ணின்பமும், காதின்பமும், ஊற்றின்பமும், முகர்வின்பமும், சுவையின்பமும் நாம் ஒருங்கே பெற்று நல்வாழ்வு வாழத் துணைபுரிகின்றது.

இயற்கை தந்த செல்வங்களை யெல்லாம், நாம் ஒரு சேரக் கண்டு களித்தற்கு நம் கண் முதலிய உறுப்புக்கள் துணைபுரிகின்றன. இவ் வியற்கைப் பொருள்களன்ரோ நாம் உயிர்வாழ உணவும், நீரும், காற்றும் முதலியன தந்து பேருதவியாக அமைந்துள்ளன. கைம்மாறு கருதாது ஆற்றும் கடப்பாடுடைய இயற்கைப் பொருள்களின் நன்றிக்கு யாம் யாது கைம்மா ருற்ற வல்லேம்!

காலைக் கதிரவன் தோன்றிப் பகல் செய்து நாம் தொழின் முறையாற்றத் துணைபுரிகின்ருன்; மாலையில் திங்கட் செல்வன் தோன்றி இருள் கடிந்து, தன் தண்ணிளங் கதிரால் அயர்வகற்றி இன்பம் செய்து நம்மைத் துயிற்றுகின்ருன்; வேனில் வருகின்றது; செலவு பெறுகின்றது; குளிர் போதருகின்றது; செல்கின்றது; இவ்வாறு பருவங்கள் ஒன்றன்பின் ஒன்ருகத் தோன்றி மறைகின்றன. ஆ! இவ்வியத்தகு தோற்ற மறைவுகள், மாந்தர்களாகிய நமக்கும் ஏனைய உயிர்வகைகட்கும் எவ்வளவு துணையாக—நலஞக—இலகுகின்றன! அறிந்து உணர்மின்!

வேனிற் காலமாகவே இருப்பின், நம் உடல் வெப்பமாகி நம்மைப் பெருஞ் சூட்டுக்குள்ளாக்கி வருத்துதலும், அன்றிக் குளிர் காலமாகவே இருப்பின் வாடைக்காற்றும் குளிர்பனியும் நம் உடலை நடுக்கிக் கைகால்கள் வலிப்பச் செய்தலும் காண்டுமன்றோ? எனவே, இந்நிலை, நிலை பெற்று நிற்கா வண்ணம், உலகுயிர்களைக் காத்தற் பொருட்டு எல்லாம்வல்ல இயற்கையாகிய இறைவன் எல்லாப் பொருள்களையும் ஒரே நிலையில் நிறுத்தாது மாற்றஞ் செய்து வருவானாயினன். இதனை மணிமொழிப் பெருமான்,

'அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
......கொட்கப் பெயர்க்கும் குழகன்.'

என்று உண்மை நிலையை உணர்த்தியருள்வா ராயினார்.

இவ் வியத்தகு காட்சிகளை நாம் நாள்தோறும் காண்கின்றோம்; கேட்கின்றோம்; முகர்கின்றோம்; சுவைக்கின்றோம்; உற்றறிகின்றோம்; ஆனால், அவ்வுணர்வுகள் நிகழ்ந்தவுடன், அவ்வப்போதே நிலைக்கொள்ளாது மறைவுறுகின்றன.

நாம் ஓர் இசையரங்கிற்குச் சென்று ஏழிசை இன்பப் பாடல்களைச் செவி கருவியாகக் கேட்போமானால், கேட்ட அவ்வின்பம் அற்றைப் பொழுதிலேயே அவ்வரங்கை விட்டு வெளிவந்தவுடன் மறைகின்றது. மலையிடஞ் சென்று அதிலிருந்து இழுமென் ஒலியுடன் கீழிறங்கி வரும் அருவிக்காட்சிகளையும், அதிலுள்ள தெங்கு சந்தனம் அகில் மா பலா வாழை முதலிய மரங்களையும் செடி கொடி முதலியவற்றையும் கண்டு களித்து வருவோமாயின், நாம் திரும்பி இல்லஞ் சேர்ந்தவுடன் அவை நம் மனத்தில் நிலைக் கொள்ளாது மறைகின்றன. இவ்வாறு கேட்பன காண்பன யாவும் நிலைபெறாது மறைதல், என்றும் எல்லோரிடமும் நிகழும் இயற்கைத் தன்மையாகும்.

**இலக்கிய மாண்பு:**

இக்காட்சிகளை - உலக நிகழ்ச்சிகளை - என்றும் மறையாது - மறவாது - நிலைபெறுத்துவனவே இலக்கிய வான்பெருஞ் செல்வங்கள். இவைகளை நம் தமிழ்ப் பெருமக்கள் பண்டுதொட்டே நன்கு கூர்த்தறிந்து அவ்வறிவின் மதுகையால் அவைகளைப் பாக்களென்னும் பெரும் பேழையுள் திரட்டிப் பொதிந்து வைத்துச் செல்வாராயினர். அவைகளை இன்று உலகில் வரலாற்று நூல்

களாக - இயற்கை நிகழ்ச்சிகளைக் காட்டுந் திரைகளாக - ஓவியங் களாக - காவியங்களாக - கடலெனப் பரந்து கிடப்பனவாகும்.

இவ் விலக்கியச் செல்வங்கள் இன்றேல் நம் பண்டைக்காலத் தமிழ்நாட்டின் காட்சிகளைக் காண்டல் ஒல்லுமோ! அறிஞர்களை- அரசர்களை - வள்ளல்களை - ஏனையோர் வரலாற்றுண்மைகளை - இயற்கைகளை - கடலை - மலையை - விலங்கை-பறவையை-காதலை- அறத்தை - வீரத்தை - ஆக்கத்தை - கற்பனைகளை - பிறவேறு நன்னிலைகளை - அறிதல் கூடுமோ! இவ்விலக்கியங்களன்றோ அவைகளை நமக்கு நன்கு விளக்கிக் காட்டும் கண்ணாடிகளாக ஒளிர் கின்றன! இவைகளன்றோ நாட்டை நாடாக்குவன; மக்களை மாண் புடையராக வளர்ப்பன. இதனானன்றோ இவைகளை ஆக்கித்தந்த புலவர்கள் புகழ், என்றும் நின்று நிலவுவதாயிற்று. இதனானே, முனிவர் பெருமான் குமரகுருபர அடிகளார்,

> 'கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
> மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்-மலரவன்செய்
> வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு
> மற்றிவர் செய்யும் உடம்பு.'

என்றருள்வாராயினர். இவ்வாறான அரும்பெறற் பொருள்களைத் தந்தவர், புலவர் பெருமானாகிய நம் புகழேந்தியார.

## இந்நூற் பெருமை:

இவர் ஆக்கித்தந்த நற்பெருங் காப்பியமே 'நளவெண்பா' எனப் பெயரிய இந்நூல். இது வடநாட்டு வேந்தனான நளமன் னன் வரலாற்றைச சுருங்கிய முறையில் சித்திரித்துக் கட்டுரைப் பது. இஃது ஒரு மன்னன் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் கூறுவதா யினும், இதன்கண் பொதிந்து கிடக்கும் அறம் மறம் மானம் நன்றி யறிதல் அன்பு அருள் ஆக்கம் ஊக்கம் காதல் கற்பு முதலிய மக்கட்கு வேண்டும் அறப்பண்பாடுகளும், கற்பனை, வருணனை முதலியவைகளும், கற்பார்க்கு வற்றாத வான்பெரும் அறிவுச் செல் வத்தை வாரிவாரி வழங்கி நன்னிலையில் நிறுத்தி, மகிழ்வுடன் வாழத் துணைபுரிவனவாகும்.

நம் தமிழ்ப் பெரும்புலவர்கள், எதையும் பயனின்றி வெற்றார வாரமாகச் செய்பவ ரல்லர். அவர் உள்ளுவ வெல்லாம் உயர் வுள்ளலையே கடப்பாடாகக் கொண்டவர்; காய்தல் உவத்த லின்றித் தம் கருத்தைப் பொதிந்துவைத்து உண்மையுரைக்கும் ஒண்மையர் ஆவர். வண்டமிழ்வாணராகிய புகழேந்தியார், நம் மினம், நாடு, கலை வாழ, இந்நூலகத்து அமைத்து வைத்திருக்கும்

அரும்பொருள்கள், கற்பாரைத் தம்மிடத்தே ஈர்த்து, என்பையும் உருக்கி இன்பம் பெருக்கும் நீர்மையன; கலை மாண்ட கேள்வி வல்லார் கவியானதால், வான்துறைகள் பல வாய்ந்து திகழ்வன; எண்வகைச் சுவைகள் இசைந்து இன்பம் பயப்பன; வற்றாவளம்; இன்ப ஊற்று; சுரந்துசுரந்து துன்பம் நீக்கும் துவ்வா மருந்து; அமிழ்து; அறியாமை வேவை யகற்றும் அரிய மழை; இம்மழை அறிவுப் பயிரை வளர்ப்பன; 'நவில்தொறும் நூல் நயம் போலும்' என்னும் பொய்யா மொழியை என்றும் பொய்யா மொழியாக்கும் பொற்புடையன. இவைகளில் பயில்வோர், 'வேறொருவர் வாய்க் கேட்ப நூலுளவோ?' என்னுமாறு சிறப்புமிக்கன. அவைகள் ஒவ்வொன்றையும் இத்தகைத்து; இந்நீர்மையது; சிறந்தது; பண்பிற்று; வண்மைத்து எனக் கட்டுரைப்பதாயின், இடம் போதா; ஏடும் விரியும்; ஆதலான், இந்நூலைக் கற்கப் புகுவார்க்கு அவ்வவ் விடங்களைத் தேர்ந்து தெளிதற்கு வாய்ப்பாக ஒரு சிலவற்றை ஈண்டுக் காட்டிச் சென்று ஆற்றுப்படுத்துவாம். வேவை-வெப்பம்.

இந்நூல், பாக்களுள் முதன்மை வாய்ந்ததான வெண்பாவால் ஆக்கப்பெற்றது. அஃது இயற்கையாகப் பேசுவதுபோல் எழும் செப்பலோசையுடையது; சங்ககாலப் புலவர்கள் மிகுதியாகக் கையாண்ட நீர்மையது; திட்ப நுட்பம் மிக்கது; அறநூல் புதுக்கிய திருவள்ளுவரும் சிற்றளவானதான குறள்வெண்பா என்னும் இப்பாவகையினாலே அறமுறைகளை அமைத்து அடக்கிக் கூறினர். இத்தகைய வெண்பாவினுள், தம் நுண்மாண் நுழைபுலநலனால் நேரிசை வெண்பாக்களால் இந்நூலை யாத்துத் தந்துதவினர்.

(i) உவமத் திறம்:

> 'வினைபயன் மெய்உரு என்ற நான்கே
> வகைபெற வந்த உவமத் தோற்றம்.'

எனத் தொல்காப்பியர் கட்டுரைத்த வினை, பயன், மெய், உருவம் என்னும் நால்வகை உவமத்தையும் அழகுறச் சித்திரித்துக் கற்பார் நெஞ்சங் கரைந்துருகுமாறு திட்ப நுட்பஞ் செறிய அமைத்துக் காட்டியிருக்கும் ஒட்பம், பேரின்பந் தருவதாய் அமைந்துள்ளமை காண்மின். இவற்றுள் வினை உவமமாவது தொழில்பற்றிய-செயல்பற்றிய நிலையைக் கூறும் உவமமாகும். அது:

தமயந்தி நளன்பாற் பெருங் காதல் கொள்கின்றாள். அதனால் அவள் கண்களுக்கு நளன் உருவம், உருவெளி (பொய்யுரு)த் தோற்றமாக வெளிவருகின்றது. அதை உண்மையுருவ மெனக் கொண்டு கலக்கமடைகின்றாள். அதனால் அவள் கண்ணிற் கருமணி போன்று, ஒரு நாளும் பிரியாது, உயிர்போன்று பழகிய

நாணையும் இழந்து நடுக்கங் கொள்கின்றாள்; அவள், உண்டல் உறங்கல்களையும் மறந்தாள்; சொல் நலங் கனிந்த காமச் சுவையை ஓர் உருவமாக்கி இன்னலந் தெரியவல்லார் எழுதிய ஓவியம் போல் தன்னையும் துறந்து மறந்து நிற்கின்றாள். இத்தகையாள் தளர்வுற்ற நிலைக்கு - வாடிய தன்மைக்கு, ஓர் ஒப்புக் கண்டுரைக் கின்றார் ஆசிரியர். இளந்தளிர் மென்மையது; அது ஞாயிற்றின் ஒளிகண்டாலே வாடும் தன்மையது; அக்கதிர்கள் தன் மேற் படின். தளர்ந்து சாம்பி வாடி வதங்கும் இயல்பினது; இத்தகை மெல்லிய தளிரை நெருப்பிலிடின் எத்தன்மைத்தாம்? தன் உருச் சிதைந்து அதன் மாணிறமும் குன்றிக் கருகுமன்றோ? அது போல் தமயந்தி, உடாது உண்ணாது தளர்ந்து தன் இயற்கையழகு குன்றி நின்ற நிலைக்கு வினையுவமமாகக் கொண்டு,

'நெடுங்கண் வெள்ளம்போய் வேகின்ற மென்தளிர்போல்
......உள்ளாரிக்கச் சோர்ந்தாள் உயிர்.' (சுயம்: கூ௫)

என்று, சித்திரித்துக் காட்டிய உவமம், நெஞ்சை அள்ளும் நீர்மைய தாக மிளிர்தலை உணர்க.

பின்னும் மற்றோரிடத்தில் தமயந்தி ஒரு சோலையிடத்தே நளனுடன் ஊடல் கொள்கின்றாள். அப்போது, 'சோலை இத் தன்மையதோ?' என, நளனிடம் வினவ எழுந்தபோது அவளது சிறுசினத்தால் விரைந்து நன்கு விளக்கிச் சொல்ல நாவெழ வில்லை; அதைத் தடுமாறித் தடுமாறித் தன் மழலைச்சொற் களால் சொல்கின்றாள்; அச் சொல் நன்கு வெளிப்பட்டுத் தோன்றிற்றில்லை; சொல்வது தெரிகின்றதே தவிர, சொல்வது இன்னதெனக் நன்கு புலனாகவில்லை. இதற்குப் புகழேந்தியார் அமைத்துக் காட்டும் வினையுவமம் வியப்பும் மகிழ்வும் ஊட்டும் மேன்மையது.

அழகும் மென்மையும் இளமையும் மிக்க மங்கைப் பருவம் அடைந்த கன்னிப்பெண்கள், தம் அன்னையர் காவலில் அமைந்து அடங்கிக் கிடப்பர்; ஆனால் பருவத்துக்கேற்ற காதலுணர்வு தோன்றாமல் இராது. அவர்கள் பூப்பெய்திக் கன்னிமாடத் துறைபவராவர். அவர்தம் மனத்தெழுந்த காதல் வேட்கையை அடக்கவும் இயலவில்லை; வெளிக் கொணரவும் முடியவில்லை; அவர் மனத்தே தோன்றியும் தோன்றாத நிலையில் - அடக்கியும் அடக்கவொணாத நிலையில் நின்று - தத்தளிப்பை அவர்கட்குத் தருவது இயற்கை. இந் நிலையைத் தமயந்தி கூறப்போந்த சொற் கட்கு வினையுவமமாகப் பொருத்தி,

**'கன்னியர்தம் வேட்கையே போலும் களிமழலை**
**தன்மணிவாய் உள்ளே தடுமாற.'** **(கலிதொடர்: உக)**

என, வெளித்தோன்றாது குறிப்பால் உணர்தற்கேற்ற தன்மையைத் தொழிலுவமமாகக் குறித்த திறப்பாடு, போற்றி மகிழ்தற்குரித்து. இதனால் மக்கள் உள்ளப் பாங்கினையும் அறியும் ஒண்மையாளராகவும் இலகுதலை நன்குணரலாம்.

பின்னரும், நளமன்னன்பாற் கலிமகன் சார்ந்து அவனைத் துன்புறுத்த இருக்கும் நிலைக்கு, அவன் சார்ந்த காட்சியை இறைவனது திருமந்திர மொழியை ஓதி, அவன்றன் அருள் பெறாத மாக்களிடத்துத் தீவினைத் துன்பங்கள் யாவும் சேர, அவைகளால் அவர் துன்புறுவதுபோல, நளன்பால் சேர்ந்தான் என்று கூறுவது மகிழற்பாலதாக அமைந்துள்ளமை காண்மின் :

'நாராய ணாய நமவென் றவனடியில்
சேராரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்
..............சேர்ந்தான் கலி.' (கலிதொடர் : ௩௩)

என்பதில் மக்களாய்ப் பிறந்தோர் யாவரும் இறைவனை வணங்குதல் வேண்டுமெனவும், அவ்வாறு வணங்குவோரிடத்துத் தீவினையணுகாது எனவும், அவர் நலத்தோடு என்றும் வாழ்வரெனவும் குறிப்பால் உணர, அரிய கருத்தையும் உள்ளடக்கிக் கூறி, மக்கள் மக்கட் பண்போடு வாழும் வழியையும் காட்டுகின்றார். இதில் தீவினை சேர்தலாகிய வினையுவமம் குறித்த அறிவின் நுட்பம் இன்புறற்பாலது.

இதன் பின்னரும் கலிமகன் நளமன்னனை விட்டு நீங்கிச் சென்ற நிலையை விளக்கப் போந்தகாலை, ஓர் அரிய உவமத்தை அதற்குக் காட்டித் தம் நன்றியறிவையும் புலப்படுத்துகின்றார் :

சந்திரன் சுவர்க்கி யென்னும் அரசன், அறிவும் திறனும் மிக்க ஆண்டகை; இவன் கற்றார்பால் வற்றா அன்புடையான்; நம் புகழேந்தியாரை ஆதரித்துப் போற்றிய புகழாளன்; இவனால் இந் நூல் தமிழுலகில் தோன்றிற்றென்றால் அவன் புகழுக்கு அளவு வரையுண்டோ? இத்தகைய புகழ்மிக்கானின் சிறப்பும் ஆற்றலும் மொழியருமை யறியும் மதுகையும், கலைப் பண்பாட்டு நீர்மையும், தம் நன்றியறியும் கடப்பாடுந் தோன்ற,

'.........சந்திரன் சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி.' (கலிநீங்கு: ௬அ)

என, நளமன்னனைப் பற்றியிருந்த கலி நீங்கிய தன்மைக்குச் சந்திரன் சுவர்க்கியால் கொண்டாடிப் போற்றப் பெறுகின்ற புலவர்களின் பசிப்பிணி முதலிய துன்பங்கள் நீங்குவதுபோல நீங்கிற்

றென்று தொழிலுவமங் காட்டிக் குறித்த அரும்பெறல் அறிவுத் திறல் போற்றும் பொற்புடையதாக இருத்தலை ஓர்க.

பிறண்டும் இவ் வினை பயன் மெய் உரு முதலியவாம் உவமங்களையெல்லாம் ஆங்காங்கே இடத்துக்கேற்ப அமைத்துப் பொருந்தக் காட்டியிருக்கும் திறங்கள், அறிந்து அறிந்து இன்புறற்பாலன. கற்பார் அவைகளை ஊன்றிக் கற்றின்புறுக.

(ii) அருஞ்சொல் ஆட்சி

தாம் ஒரு பொருளைக் குறிக்குங்கால் அவ்வவற்றின் செவ்விய தன்மை தோன்றப் பண்பியைப் பண்பாகவே உரைத்து இறும்பூதுற அமைத்துத் தருவது இவர்தம் இயற்கை. இவர் தமக்கென அமைந்த இச் சொற்சித்திரங்கள், கற்பார்க்குப் புது விருந்தாக அமைந்து இன்பம் தருவதாகும். 'எல்லார்க்கும் ஒவ்வொன் றெளிது,' என்று கூறற்கேற்ற பெற்றிமை மிக்கனவாம். இவர்க்கு இச் சொல்லாட்சிகள், இவர் தேடிக் கொணராது தாமே வந்து பணிபுரிகின்றன. இஃது அருங் கவிஞர்பால் தனித்து அமைந்த செப்பமாகும். அவைகளுட் சில :

காவிரியாறு வற்றா வளமுடையது; அது, தள்ளா விளையுளை ஆக்குவது; செல்வத்தைப் பெருக்கும் திருவினை யுடையது; அதன் நீர், அமிழ்தினை ஒப்பது. இதனைச் சுயம்வரத் திருமணங்காண வந்த அரசர்களைத் தோழி ஒருத்தி, தமயந்திக்கு, 'இவன் இவ்வூர் வேந்தன்; இவன் இந்நாட்டு மன்னன்,' என்று சுட்டிக்காட்டுகின்ற போது, சோழ மன்னனை அவளுக்குச் சுட்டிக்காட்டி அறிவிக்குங்கால், இக் காவிரி பாயும் நாட்டு மன்னனெனக் கூறுகின்றாள். அது :

'பொன்னி அமுதப் புதுக் கொழுந்து.' (சுயம்வர : கரு-ச) என்பது; 'காவிரியாற்றின் புதியநீரின் பெருக்கு,' என்பதே இதன் திரண்ட பொருளாகும். அதன் நீரை, 'அமுதம்,' என்றும் அதன் பெருக்க உயர்ச்சியைக் 'கொழுந்து' என்றும் கூறி, நறுஞ்சுவை நயந்தோன்ற அருஞ் சொற்களை பெய்துரைத்த ஆசிரியரின் அறிவின் சிறப்பை என்னென்பேம்! என்னென்பேம்!

மற்றோரிடத்துத் தமயந்தியின் பேரழகைக் குறிக்கின்றார். உலகில் மகளிர்களிற் பெரும்பாலோர் தம்மை உயிரோவியமாகப் புனைந்துகொள்ளும் நீர்மையராவர்; அவர் தம்மை ஆடைகளாலும் அணிகளாலும் மணப்பொருள்களாலும் கொண்டு கூட்டி இயற்கையழகோடு செயற்கையழகும் பொதுள அணிகொள்வர்; இயற்கை ஒரு பங்கும், செயற்கை பல பங்கும்கொண்டு, பூவினும்

சாந்தினும் புலால் மறைத்து யாக்கும் பொதுநிலையினர். தமயந்தியோ அத்தகையா ளல்லள்; இயற்கையழகே குடிகொண்டவள்; அழகுருவெல்லாம் அவளிடம் அடைக்கலமாக அடைந்தன; இவளுக்கு அணி ஆடைகள் அழகு செய்யா; இவளின் உடலுறுப்புக்களை அவைகள் சாரின், அவ் வணிமுதலியவைகளே அழகு பெறுவனவாம், என, அரியசொற் சித்திரத்தை அமைத்து, இன்புறக் காட்டுகின்றார். அது:

'பூணுக் கழகளிக்கும் பொற்றொடி.' (சுயம்வர: கடுக)

என்பதாம். மீண்டும் இவர், அவள்தன் சிறப்பை,

'வேலை பெறாஅமுதம் வீமன் திருமடந்தை' (சுயம்வர: கடுள)

எனப் பாராட்டுவர். கடலிற் பிறந்த அமிழ்து நாவுக்குமட்டும் சுவை தருவது; அது, அஃறிணைப் பொருளான கடலிடைத் தோன்றியது; அறிவற்றது. இவ் வமுது, நாவுக்குமட்டும் அன்று, கண் காது முதலிய ஏனைய நாற்புலன்கட்கும் சுவை விருந்தாக அமைவது; ஆறறிவு படைத்த உயர்திணையாகிய மக்கட்குலத்தே தோன்றியது; அறிவுமிக்கது என்பன முதலாம் நயங்கள் யாவும் ஒருங்கேதோன்ற மேற்குறித்த சொல்லோவியத்தால் தீட்டிக் காட்டினார்.

இன்னும் தமயந்தியின் கண் முதலிய உறுப்புக்களையெல்லாம் கற்பார் நெஞ்சம் களி நெடுங்கடலிற் குளிப்பக் காட்டும் அறிவுத்திறன் ஏனைய புலவர்கட்கு அமையாத வொன்றாம்.

'இன்னுயிர்க்கு நேரே இளமுறுவல்.' (சுயம்வர: கசுச)

என, அவள்தன் பற்களின் சிறப்பையும்,

'குழைமேலும் கோமான் உயிர்மேலும் கூந்தல்
மழைமேலும் வாளோடி மீள.' (சுயம்வர: கசுஅ)

என, அவள்தன் காது கூந்தல் கண்கள் முதலியவற்றின் இயற்கையழகையும் கற்பவர் நெஞ்சக் கண்கள் கண்டு களிக்குமாறு உருவப் படமாக ஆக்கியுதவிய நம் புலவர் பெருமகனார் ஒட்பம், மலையினும் மாண உயர்ச்சிமிக்கதாக ஒளிர்தலை ஓர்க.

உலகில் எல்லா இன்பத்தினுஞ் சிறந்தது மக்களின்பம். ஏனைய இன்பங்களெல்லாம் தோன்றித்தோன்றி மறைய, இவ்வின்பம் ஒன்றுமட்டும் நிலைப்பதாயிற்று. இக் கருத்தானே எல்லாம் வல்ல இறையுருவை இளங் குழந்தையாக—மழலை ததும்பு மாண் குழவியாக—முருகனைக்கொண்டு வழிபடுவாராயினர், எம் தமிழ்ப் பெருமக்கள். இக் குழந்தையின் சிறப்பை,

'மக்கள் மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.'

'தம்பொருள் என்ப தம்மக்கள்.'

எனப் பலவாறு போற்றியுரைப்பர், நம் திருவள்ளுவப் பெரு மகனார்.

'செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச் சிறுவர்.'

எனவும்,

'மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே.'

எனவும் மகிழ்ந்துரைப்பர், செல்லூர் கோசிகன் கண்ணனாரும், பாண்டியன் அறிவுடைநம்பியும்.

நளனும் தமயந்தியும் உரையாடியகாலை இத்தகைய புதல்வர் களின் காட்சியைத் தாய்மைத் தன்மைபெற்ற தமயந்தியின் வாயிலாக,

'குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தர்.' (கலிதொடர்: சுசு)

என்றனர்.

குழந்தைகளைக் காண்டலே ஒரு கண்காட்சி யென்றும், அதி லும் குற்றமில் காட்சி யென்றுங்கூறி, அவர்தம் காட்சிக்குச் சுவை தருவது, அவரின் மழலை மாறா இளங் குதலைச் சொல் அச் சொல் லும் எழுத்துப் பெறா இளஞ் சொல்லாதல் வேண்டும். அவ்வாறு பேச அமைவது தளர்நடைப் பருவத்துக்கு முந்திய பருவமே யாகும். எனவே, அவ் வெல்லாப் பொருண்மைகளும் இலக, 'குதலைவாய்,' என்றும், 'மைந்தர்,' என்றும் போற்றி யுரைத்த அறி வின் வரம்பு, ஆற்ற இனிமைமிக்கதாக அமைந்திருத்தலை ஓர்க.

நளமன்னன் சிறப்பைக் கூறுங்கால் ஆடவர்களுட் சிறந்த வீர னாகவும், அறவோனாகவும் இனிதெடுத்து மொழிவர். முதற்கண், அவனை நால்வகைப் படையுங்கொண்ட நானிலவேந்தனாக அமைக் கின்றார். வேந்தர்கட்குச் சிறப்புக் கூறப்போந்த செந்நாப்போ தாரும், தம் அறநூலில்,

'படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.'

என்றார். இதில் முதற்கண் படையையே படைத்துக்காட்டியது, அதன் இன்றியமையாமை நோக்கி. என்னே? நாட்டில் நன் முறையை நிறுத்துதற்குத் துணையாக அமைவன, அன்பும் அச்சமுமாம். உலகில் மக்கள் எவரும் பணியாற்றுவது, அன்பு அல்லது அச்சத்தாலன்றி வேறொன்றான் ஆகா. ஒரு தொழிலாளி ஒரு பணிநிலையத்தில் நன்கு பணியாற்றுகின்றானென்றால் தன்குடி உயர்தல்வேண்டும், அதனால் தன் மனைவி மக்கள் தான் நன்கு வாழ் தல்வேண்டுமென்ற அன்பு உந்துதல் ஒருபாலும், யாம் இத்தொழி லைச் செம்மைபெற ஆற்றாவிட்டால் இந்நிலைய முதல்வர் நமமைக் கடிவர், வேலையினின்றும் நீக்குவரென்ற அச்சம் ஒருபாலும் அலைத்தலாலேயே என்பதை நாம் அறிகின்றோமன்றோ! இதனானே நாவுக்கரசரும் தம் நெஞ்சுக்கு இறைவனை வழிபடுமாறு அறிவுறுத் துங்கால்,

'அஞ்சி யாகிலும் அன்புபட் டாகிலும்
நெஞ்சம் வாழிநினை நின்றி ஊமைநீ.'

என்று, நாம் இறைவனை நினைக்காவிடின் பல்வகைத் துன்பங்கள் வந்து வருத்துமே, பிறவிப்பிணி முதலியன விடாவே, என, அவை கட்கு அஞ்சியாவது, அன்றி மக்களாய்ப் பிறந்த நாம், இறைவ னுக்கு அன்பு பூண்டொழுகுவது கடமையாயிற்றே, எம் இறைவ னைத் தினைத்தனைப் பொழுதும் மறந்திருத்தல் சாலாதன்றே, அவன்றன் திருவடி பிடித்து ஒழுகுதல் என் கடப்பாடெனக்கருதி அன்பு கொண்டாவது அவனை வணங்குதல் வேண்டுமென்று, அடி கள் அருளுவது ஈண்டு நோக்குதற் குரித்து.

இவ்வாறே நாட்டில் அச்சுறுத்தியோ, அன்பை நிலைபெறுத் தியோ அரசு நிலைபெறுவது இயற்கை. அச்சத்தை ஊட்டுவன படைகளே. அதனால் அரசர்கட்குப் படைகள் முதலுறுப்பாக அமைந்தன. அச்சமின்றி அல்லது அன்பின்றி ஆற்றும் எப்பணி யும் உருவாகா. அச்சமென்பது வாளா நடுக்கிடுவதன்று. தம் தகைமைக்கு ஒவ்வாத - உலகியலோடு ஒத்துவாராத - ஒழுக்கத் துக்கு மாறுபட்ட நிலைகட்கு மனநடுக்கங்கொண்டு, அவற்றைச சாராதிருத்தலேயாம். இதனையே வள்ளுவப்பெருமான்,

'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
அஞ்சல் அறிவார் தொழில்.'

என்றருள்வாராயினர்.

எனவே, தீமையைக் கடிந்து நல்லாற்றில் உலகை நிறுத்து தற்குப் படைப்பெருக்கம் வேண்டும். அப்படைகளும் கூற்றுவன்

வந்து எதிர்த்தாலும் அஞ்சி ஓடாது கூடி எதிர்த்துப்போராடும் வன்மை பெற்றதாதல்வேண்டும் படைவீரர் தம் நெஞ்சத்திட்பம், கண்ணில் ஒருவன் வேல்கொண்டு குத்தினும் கண்ணைச் சிமிழ்த்தாது விழித்தகண் விழித்தபடியிருக்கும் நெஞ்சுரம் பெற்றவராக மிளிர்தல்வேண்டும். இவைகளைப் பெற்றவனையே 'வீரன்' எனக்கூறி மகிழ்வர், நம் வள்ளுவர் பெருந்தகை.

இவ் வீரத்தன்மைகள் நிறைந்த படைவலிமை பெற்றவனென, நளவேந்தனைப் படைத்துக்காட்டுகின்றார், நம் புகழேந்தியார். அவற்றுள் முதற்கண்,

'ஓடாத தானை நளனென் றுளனொருவன்.' (சுயம்வர: கஅ)

என்றும், அப்பால் அவன்றன் செங்கோல் மாட்சியை,

'சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை அறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான்.' (சுயம்வர: கூ)

என்றும், அவன்றன் அறத்தின்மாறா அளியினை,

'செம்மனத்தான் தண்ணளியான்.' (சுயம்வர: உசு)

'அறங்கிடந்த நெஞ்சும் அருளொழுகு கண்ணும்
மறங்கிடந்த திண்டோள் வலியும்.' (சுயம்வர: உஎ)

என்றும் எடுத்துக்காட்டி, மக்களுட் சிறந்த மாண்புடையனாக நளமன்னனை நமக்குத்தந்து, அவன் வரலாற்றை விளக்கியுரைப்பாராயினர்.

(iii) அறமுறைகள் :

'அறமாவது விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் ஆம்' என்பர் ஆசிரியர் பரிமேலழகியார். எனவே, நல்லன செய்தலே அறமென்பது பெறப்படும். இதனை நம் புலவர் மேதகை, நளமன்னன் காதைத்தொடர்களுள், ஆங்காங்கே இடையிடையே பொதிந்து உவமமாகவும் வேறுபல நிகழ்ச்சிகளின் வாயிலாகவும் உரைத்து மன்பதையுலகம் அறிந்து கடைப்பிடிக்கத் தெளிவுபடுத்துவர். அவற்றுட் சில :

'காதல், கவருடல், கள்ளுண்டல், பொய்ம்மொழிதல்,
ஈதல் மறுத்தல்.' (கலிதொடர் : கூ)

என்பன.

(க) **காதல்**: மிக்க காமம். காதல் மிகுதியால் தன் மனையாளையன்றி வேறு பல மாதர்களையும் விரும்புதல். இதனால் ஒருவன்

தன் ஒழுக்கங்கெடுவதோடு, அவன் உடல்நலங்கெட்டு விரைவில் இவ்வுலக வாழ்வையும் துறக்கும் நிலை, நேர்கின்றது. அதனால் உலகில் பழியும் பகையும் அச்சமும் தீமையும் ஒருங்கே அடைகின்றான். எனவே, இது கூடாது என்று விலக்குகின்றார்.

(உ) **கவறு ஆடல்:** சூது விளையாடல். இது ஒன்றினைப் பெற ஆசைகொண்டு, அதனால் தன்னுடைய பல பொருள்களையும் இழக்க நேரிடுகின்றது. எனவே, மாந்தர்கள் தாம் மக்களாகப் பிறந்த மாண்பயன் கருதி, நாடு மொழி கலை முதலியவற்றுக்குச் செய்யும் கடப்பாடுகளும் கைவிடப்படுகின்றன; தன் இல்லத்துக்கு ஆற்றவேண்டிய கடமைகளும் மறக்கப்பெறுகின்றன; அதனால் இச்சூதைக் கைக்கொண்டோன் வாழ்வில் இஃதே எண்ணமாய் அல்லும் பகலும் சூதாடி ஆடி அலமருவன். எனவே, இதுவும் ஒவ்வாது; கூடாது எனக் கடிந்து கூறுகின்றார். இதற்கு இந்நளமன்னன் வரலாறே சான்று.

(ந) **கள்ளுண்டல்:** கட்குடித்துக் களித்தல். இதனை விரும்பியுண்டவன் அறிவை ஒருங்கே கெடுத்து, அவனை எந்த வழியினும் நடக்கவிடாது அதை உண்டு உண்டு மயங்கிக்கிடக்கவே செய்யும். இது, வாழ்க்கையில் ஒருவனுக்குக் கொடியதேயாகும். இதிற் பழகினோர் பின்னர் இதனைக் கைவிடுதல் அரிதினும் அரிதாம். குடித்துக்குடித்துத் தன் செல்வத்தையெல்லாம் ஒருங்கே தொலைப்பதோடு, அறிஞர்களால் கீழ்மகன் எனவும் வெறுக்கப் படுகின்றான். வள்ளுவர் இக்கள்ளுண்போனைக் குறித்துக் கூறும்போது, 'ஒருவன் கள்ளுண்டு களிப்பதைப் பெற்றதாய்கூடப் பொறுக்கமாட்டாளெனின், இவன் சான்றோரின் அன்பை எவ்வாறு பெறுவான்?' என்று எளனமாக உரைக்கின்றார். ஆகவே, இதுவும் எற்றதன்றென ஆசிரியர் கூறினார்.

(ச) **பொய்ம்மொழிதல்:** உண்மையல்லாதவற்றைக் கூறுதல். அஃதாவது, தான் அறியாதவொன்றை அறிந்ததாகக் கற்பனை செய்து கூறி, பிறர்க்குத் தீமை பயக்குமாற்றைச் செய்தல். இது மிகக் கொடியது. இதனால், ஒருவன பொய்சொல்லாத அறத்தைக் கடைப்பிடித்தொழுகுவானாயின் அவன் வேறு எந்த அறமும் செய்யவேண்டுவதில்லையென்றும், அவனை உயர்ந்த ஒருவனாக மதித்துப் போற்றுவரென்றும், அவன் உலகத்தார் உள்ளத்திலெல்லாம் விளங்குவனென்றும் அறநூல்கள் யாவும் முழங்குகின்றன. ஆதலால், பொய் கூறுதலை நீக்குதல்வேண்டும் என்று ஆசிரியர் விலக்குவாராயினர்.

(ரு) **ஈதல் மறுத்தல்:** ஒருவனுக்கு மற்றொருவன் ஒன்றைக் கொடுக்குங்கால், அதைக் கொடுக்காதவாறு தடுத்து நிறுத்துதல்.

இது, ஒருவன் மனத்தில் தோன்றும் அழுக்காற்றினால் நிகழ்வது. அழுக்காறுடையான் நெஞ்சம், ஒருகாலும் நல்லனவற்றை எண்ணாது; அஃதுடையான் நெஞ்சகம் எஞ்ஞான்றும் எரிந்து கொண்டேயிருக்கும். பிறருக்குத் தீங்கு செய்வதிலேயே கண்ணுங் கருத்துமாக இருந்து அவரைக் கெடுக்கவே முயல்வான். இவனால் ஒரு வறிஞனுக்குக் கிடைக்கும் பயன் கெடுவதோடு, கொடுப்போனுக்கு வரும் அறமும் அழிக்கப்பெறுகின்றது. ஆதலால், இது மக்கட் பண்பொடு பட்டதல்ல. எனவே, இதுவும் கூடாதென விலக்கப் பட்டது.

(௬) **பிற அறங்கள்:** பின்னரும் அருள், மானம், தெய்வ வழிபாடு, செங்கோல்முறை முதலிய பல்வகை அறங்களும், பெரியோர்க்குப் பிழை செய்யாமை முதலிய கடப்பாட்டோடு கூடிய அறங்களும் ஆங்காங்கே ஆசிரியரால் கட்டுரைக்கப் பெற்றுள்ளன.

**இந்நூற்பயன்:**

இன்னும் இந்நூலை ஊன்றிப் பயில்வார்க்கு, 'நவில்தொறும் நூல்நயம் போலும்' என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்பப் பல நயங்கள் தந்து இம்மையின்பம் பயப்பதோடு, மறுமை இன்பமும் பெற அறமுறையும் நன்கு கூர்த்தறிந்து நடத்தற்கு வழிகாட்டியுமாகும். எனவே, அவர் தெள்ளுற்ற தமிழமுதின் சுவையில் திளைத்து சீரிளமைத்திறங் குன்றாது சிறப்புடன் வாழ்வரென்பது ஒருதலை.

**நன்றியுரை:**

இத்தகைய அரிய பெரிய இம்மாபெருங் காப்பியத்துக்குச் சிறந்த உரைகள் பல, அவ்வக்காலப் புலமைச் சான்றோர்களால் வரையப்பெற்று வெளிவந்துள்ளன. ஆயினும் இச்சிறியேனை இதற்கு உரையெழுதுமாறு கட்டளையிட்டு இப்பணிக்கு ஊக்கிய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழக ஆட்சிப் பொறுப்பாளர், **உயர்திரு. வ. சுப்பையாபிள்ளை யவர்கட்கு** எனது உளமுவந்த நன்றியுடன் வணக்கமும் உரியவாகுக. இவ்வுரையெழுதத் தோன்றாத் துணையாயமர்ந்து என் உள்ளத்தினின்றும் உணர்த்தியருளிய எல்லாம் வல்ல இறைவன் திருவடிகளை மன மொழி மெய்களால் வணங்குகின்றேன்.

சென்னை-1,
29—11—1954.

**செல்லூர்க்கிழார், செ. ரெ. இராமசாமி,**
உரையாசிரியன்.

# புகழேந்திப் புலவர் வரலாற்றுச் சுருக்கம்

தண்டமிழ்வேலித் தமிழ்நாட்டகத்து நின்றுநிலைஇப் புகழ் பூத்த தொண்டை நாட்டின்கண், பொன்விளைந்த களத்தூரில் இந் நூலாசிரியராகிய புகழேந்திப் புலவர் பிறந்தனரென்ப. இதனை, 'மாலார் களந்தைப் புகழேந்தி யும்தொண்டை மண்டலமே' 'ஐயன் களந்தைப் புகழேந்தி யாண்டான்' 'காரார் களந்தைப் புகழேந்தி' என, வருகின்ற தொண்டைமண்டல சதகச் செய்யுளடிகள், இதற்குச் சான்றாக உணர்த்தல் அறிக. இப் பொன் விளைந்த களத்தூர், செங்கற்பட்டுக்கு அடுத்துள்ளது.

ஆசிரியரின் இயற்பெயர் புலனாகவில்லை. 'புகழேந்தி' என்பது, இவர் அறிவறிந்த பேரறிஞராய்ப் புலமையில் நிறைந்த புகழ் பெற்ற காரணத்தால் தமிழ்கூறு நல்லுலகு, இப்பெயர் சூட்டி இவரை அழைத்ததெனக் கொள்ளலாம். அறிஞருட் சிலரும் இவ் வாறே கருதுப.

இவர் துளுவ வேளாள மரபினரெனக் கூறுவர். இவர் தாய் தந்தையரைப் பற்றிய பெயரோ பிறவோ அறிதற்கில்லை. இவர் இந்நூற்கண் நாட்டு வருணனைகள் கூறுங்கால் 'சடைச் செந்நெல் பொன் விளைக்கும் தன்னாடு' போன்ற தொடர்களால் மருதநிலப் பண்புகளைக் கிளந்தெடுத்துக் கூறுதலானும் இவர் வேளாண் மரபினராதலை வலியுறுத்தும்; 'வேளாண் மாந்தர்க்கு உழுதூண் அல்லது, இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி' (தொல். மரபியல்: அ0) எனத் தொல்காப்பியர் உரைத்தலால், உழவுத்தொழிலிற் பழக்கமாக இம்மரபினர்க்கே அமைதல் சிறப்பென்க.

இவர் வாழ்ந்த காலம், கம்பர் இருந்த காலமெனக் கூறுவர். இரண்டாங்குலோத்துங்கன் காலமே அஃதாகும் என ஆராய்ச்சி வல்லுநர் ஆய்ந்துரைப்பர்; ஆனால் வரையறை செய்தற்கு ஏற்ற அகச்சான்றுகள் இல்லை; இதைக்கொண்டால் பன்னிரண்டாம் நூற்றாண்டெனக் கருதலாம். எனவே, இற்றைக்கு எண்ணூறாண்டுகட்குமுன் தோன்றி வாழ்ந்தவரெனக்கோடலாம்.

புகழேந்தியார் சமயம், வைணவமேயென்று அறுதியிட்டு உரைக்கலாம். இந்நூல் மூன்று காண்டத்தினும் திருமாலுக்கே முதற்கண் 'ஆதித்தனிக்கோலமானான்' (பாயிரம்) எனவும், 'முந்தை மறைநூல் முடியெனலாம்' (கலிதொடர்: க) எனவும், 'மூலப் பழமறைக்கு முன்னேயும் காணலாம்' (கலிநீங்கு: க) எனவும் வாழ்த்துக்கூறுதலானும் ஏனைய இடங்களிலும் திருமாலையே விதந்து கூறுதலானும் தெற்றென அறியக்கிடக்கின்றது.

கல்வி கேள்விகளிற் சிறந்து பாண்டி மன்னன் பேரவையை அணிசெய்த பேரறிஞர்களுள், இவர் தலைமணியாகத் திகழ்ந்தாரென அறிஞர் கூறுவர். இவ்வாறு இவர் பாண்டிமன்னன் பேரவையில் தலைமை சான்ற புலமையாளராக விளங்கியிருக்குங்கால், குலோத்துங்கசோழன் பேரவைப் புலவராகிய ஒட்டக்கூத்தர், சோழமன்னனுக்குப் பெண்கோடற்குப் பாண்டியன்பால் வந்து பெண்கேட்டகாலைப் புகழேந்தியாருக்கும் ஒட்டக்கூத்தருக்கும் வாக்குவாதம் நிகழ, இருவரும் தம்தம் அறிவின் ஆற்றலைக் காட்டினரென்றும், அதனால் ஒட்டக்கூத்தர் புகழேந்தியாரின் ஆற்றலுக்கு ஆற்றாதுபோயினரென்றும் பண்டுதொட்டு வரலாறாக ஆன்றோர் கூறுவர். பின்னர்ப் பாண்டியன் புதல்வியைச் சோழமன்னனுக்கு மணம்புணர்த்தினர்; அதற்கு மகட்கொடை (சீதனம்) ஆகக் கொடுத்த பொருள்களுடன், புகழேந்தியாரையும் விடுத்தனன் எனவும், ஏற்கெனவே நிகழ்ந்த உரையாடலினால் மனவயிரங்கொண்ட ஒட்டக்கூத்தர், இவரைச் சிறைப்படுத்தினர் எனவும், அதுகாலையே '**அல்லியரசாணி மாலை,**' '**பஞ்சபாண்டவர் வனவாசம்,**' போன்ற அம்மானை நூல்கள் பாடினாரென்றும் கூறுவர். ஆனால், அதை உண்மையென்று கோடற்குரிய அகச் சான்று புறச்சான்றுகள் யாதுமின்று. அறிஞருலகு உண்மை கண்டுணர்க. அதனால் வருந்திய புகழேந்தியார் தன்மையை அரசி தெரிந்து சிறையினின்றும் அரசனால் விடுவிக்கச் செய்தாளெனவும், அப்பால் சந்திரன் சுவர்க்கி மன்னன் ஆதரவினால் தம் வாழ்க்கையை இனிது நிகழ்த்தினரென்றும், அம்மன்னன் வேண்டுகோட்கிணங்கியே இந்நூலை ஆக்கி உதவினாரென்றும் கூறுப. அதற்கு அகச்சான்றாக இந்நூலகத்துச் சந்திரன் சுவர்க்கியின் புகழ் கூறப்பெறுதலால் அறியலாம்.

இந் நளவெண்பா நூலுக்கு முதல்நூல் வடமொழி மகாபாரதத்தில் ஆரணிய பருவத்தின்கண் வரும் '**நளோபாக்கியாநம்**' ஆகும். எனவே, நந்தமிழகமாந்தர் நளமன்னன் வரலாற்றை உணர்ந்து கோடற்கு அதன் கிளைக்கதையாகக்கொண்டு முதற் பாவாகிய வெண்பாவினாலே ஆக்கித்தந்தனர். இதனாலே மக்கள் அறமும் அன்பும் பண்பும் உடையராய்க் காவியப்பண்பு கண்டு இன்புறும் நீரராய் வாழ, வழிவகுத்துத்தந்த வள்ளலுமாவர். இவர் புகழ் என்றும் நின்று நிலவ இந் நூலைப்போற்றிக் கற்றலே புலவர் பெருமகனார்க்கு ஆற்றும் கடப்பாடாகும். புகழேந்தியார் புகழ் சிறப்பதாக.

---

# நளமன்னன் வரலாற்றுச் சுருக்கம்

நிடதநாட்டு வேந்தனாகிய நளன், குடிகளை நன்கு புரந்து கோல்முறை கோடாது ஆட்சிபுரிந்தனன்; அவன் வேனிற் காலத்தே ஒருநாள் சோலைவளங் காணச் சென்றான். ஆங்கோர் அன்னப்புள் தோன்றிற்று; அஃது அவணுள்ள தடாகமொன்றில் வாழ்ந்து வந்தது. அதன் அழகை வியந்து கைப்பற்றினான். அது அரசனைக்கண்டு 'தன்னைக் கொன்றுவிடுவானோ?' என்று கருதி, அஞ்சி, வாடியது; மன்னன் அதன் அழகை வியந்து களித்துக் கைப்பிடியினின்று அதனை வெளிச்செல்ல விட்டனன. அன்னம் பறந்து சென்றது; ஏதோ கருதி நளன்பால் மீண்டு வந்தது. அது, 'வேந்தே! உனக்கு ஒரு நலஞ்செய்யக் கருதியுள்ளேன்; அது நின் அழகுக்கேற்ற ஆரணங்கொருத்தியை நின்தோளுக் கிசைய மணம்புணர்விப்பதே ஆகும். அவ்வாரணங்கு, வீமன் குலத்துக்கு ஒரு மெய்த்தீபம்; அழகு சுமந்திளைத்த ஆகத்தாள்; அவள் தமயந்தி யென்னும் பெயரினாள்' எனச் சாற்றியது. அன்னங்கூறிய உரையால அவள்பாற் காதல்கொண்டு அவ்வன்னத்தைத் தமயந்திபால் தூதாக அனுப்பினான். அது தமயந்தி பாற்சென்று அவள் உடன்பாடு பெற்றுவந்து கூறிற்று. பின் சுயம்வரம் நிகழ்ந்தது. இந்திரன், வருணன், இயமன், அக்கினி முதலிய தேவர்களும் தமயந்தியை மணத்தற்கு நளனுருக்கொண்டு அச் சுயம்வர மண்டபத்தில் வீற்றிருந்தனர்; மண்ணுலக வேந்தர்கள் யாவரும் கடலெனத் திரண்டு வந்திருந்தனர். ஆயினும் தமயந்தி நளமன்னனுக்கே மாலைசூட்டி மணவாளனாகக் கொண்டு மகிழ்ந்தனள்.

இந்திரன் முதலிய தேவர்கள் திரும்பிச் செல்லுங்கால் வழியில் கலிமகன் எதிர்ப்பட்டனன்; அவனிடம் திருமண நிகழ்ச்சியை உரைத்தனர்; அதுகேட்ட கலி சினங்கொண்டான். உடனே அவன், 'நளனைக் கீழ்மைப்படுத்துகின்றேன்; தமயந்தியையும் அவனைவிட்டுப் பிரிக்கின்றேன்' என்று சூளுரை செய்தான். பின்னர்ச் சில்லாண்டுகள் கழிந்தன; கலி, காலம் பார்த்திருந் தான்; புட்கரன் என்னும் மன்னனை நளனொடு சூதாட ஏவினான்; நளன் சூதாடித் தன் நாடு நகர் முதலிய அரசச் செல்வமெல்லாம் பணையமாக வைத்துத் தோற்றான். அப்பால் தன் மக்கள் இருவரையும் தன் மனைவி பிறந்த குண்டினபுரத்துக்குத் தன் மாமன் வீமனிடம் சேர்ப்பிக்கச்செய்து, தான் மனைவியோடு நாட்டினின்றும் நீங்கித் தீக்கானகம் சென்று ஆங்கே உறைந்து வருவானானான்.

ஒருநாள் இரவில் காட்டகத்து நள்ளிரவில் ஒரு பாழ் மண்டபத்தே நளனும தமயந்தியும் உறங்கினர்; நளன் விழித்தெழுந்தான்; கலியின் வலியால் அக்காட்டில் தன்னந்தனியாகத் தமயந்தியை விட்டுவிட்டு நீங்கினான். உறக்கம் நீங்கியெழுந்த தமயந்தி நளனைக் காணாது வருந்திப் புலம்பி வணிகனொருவன் உதவியால் சேதிநாடு சேர்ந்து, அங்குநின்றும் விதர்ப்பநாடு சென்று தன் தந்தை வீமனைக்கொண்டு தூதுவன்மூலம் நளனை நாடவிட்டனள். இவளின் செய்தி இவ்வாறாக, பிரிந்துசென்ற நளன், காட்டில் தீ வாய்ப்பட்டு வருந்திய கார்க்கோடகனென்னும் பாம்பரசனை எடுத்துப் புறத்தேவிட்டு, அவனால் கடியுண்டு உருவம் கறுத்தனன். தன் பழைய உருவம் பெற நினைந்தால் உடுத்துககொள்ளும்படி அக்கார்க்கோடகனால் கொடுத்த ஆடைகள் இரண்டைப் பெற்றுக் கொண்டு அயோத்தி சென்று, அந்நகர் மன்னன் இருதுபன்னன்பால் மடைத்தொழிலும், தேர்த்தொழிலும் செய்யும் பணிஞனாக வாகுவனென்னும் பெயருடன் அமர்ந்திருந்தான்.

நளனைத் தேடவிடுத்த தூதுவனான அந்தணனொருவன், இவன் அங்கிருத்தலை உய்த்துணர்ந்துவந்து தமயந்திக்கு அறிவித்தனன். அவள் 'தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் நிகழப்போவதாக இருதுபன்னனுக்குக் கூறுக' என்று போக்குவிக்க, அவன் வாகுவனென்னும் பெயரமைந்த நளனால் தேரோட்டிக் கொண்டு வந்து குண்டினபுர நகரையெய்தினன்.

இவ்விருவர் வருகை கண்ட தமயந்தி, தேரோட்டிபால் தன் மக்களை அனுப்பி நிகழ்ந்ததைத் தோழி மூலம் அறிந்து, தன் தந்தையுடன் வாகுகனிடம் சென்று உண்மையுருவைக் காட்டும்படி வேண்டினள்; வாகுகன் உருமாறி நளமன்னனாகத் தோன்றினான்.

அப்பால் நளவேந்தன் தன் மனைவி மக்களுடன் படைகள் புடைசூழ நிடதநாடு சென்று, தன் மாவிந்தநகரம்புக்குப் புட்கரனோடு மறு சூதாடி வென்று, தன் நாடு நகர் முதலிய செல்வங்களையெல்லாம் கைப்பற்றி, முடிசூடி, மன்னர் மன்னனாகக் கொடுங்கோலஞ்சிக் குடிபுரவுண்டு இனிது வாழ்ந்திருந்தனன்.

---

# உள்ளுறை

பக்கம்

உ

# நளவெண்பா

## மூலமும் உரையும்

---

### பாயிரம்

### கடவுள் வாழ்த்து

*பிள்ளையார்*

**நேரிசை வெண்பா**

க. நேசரிதங் கூர நிலவலயம் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாம்—ஈசன்
கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட
கரியா னனத்தான் கழல்.

**(இதன் பொருள்)** ஈசன் - சிவபெருமானும், கரியான் - திருமாலும், அ(ன்)னத்தான் - நான்முகனும், கருது - எண்ணி வணங்குகின்ற, புகழ்பூண்ட - புகழினை ஏற்ற, கரி ஆனனத்தான் - யானைமுகக் கடவுளின், கழல் - திருவடிகளானவை, நேசர் - தன்பால் அன்புடையார், இதம்கூர - நன்மை மிகுதிப்பட, நில வலயம் - இம் மண்ணுலகத்தை, தாங்கும் நளன் - பாதுகாக்கின்ற நளவேந்தனது, மாசரிதம் - பெருமைமிக்க வரலாற்றினை, கூற - பாடுதற்கு (சொல்வதற்கு), அரும்துணை ஆம் - சிறந்த துணையாக முன்னின்றருள்புரியும். (ஆதலால் அவைகளை வணங்குவாம்.)

**(கருத்து)** நளன் சரிதம் கூறப் பிள்ளையாரின் திருவடிகள் துணையாகும்

(**விளக்க உரை**) நேசராவார் அரசனுக்கு மந்திரக்கிழமை பூண்ட அமைச்சரும் படைத்தலைவர் முதலியோரும் குடிமக்களு மாவர். அரசன் அவர்கட்கு நலஞ்செய்து பாதுகாக்கவேண்டும் கடப்பாடுடையனுகலான், 'இதங்கூர' என்றார்.

நிலவலயம் - பூமியாகிய வட்டம்: இது இருபெயரொட்டுப் பண்புத்தொகை; இடவாகு பெயராய் நாட்டில் வாழும் மக்களை உணர்த்திற்று; 'ஊரடங்கிற்று' என்பது போல. மா - பெருமை: பலபொருள் குறித்த உரிச்சொல். சரிதம் - வரலாறு. 'ஆம்' என்பதிலுள்ள மகரம் குறைந்து 'ஆ' என நின்றது, கடைக்குறை விகாரம். ஈசன் - எல்லாச செல்வமும் உடையான்; அஃது, ஈண்டுச சிவபெருமானைக் குறித்தது. கரியான்-கருமை என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். கருநிறமுடையான் என்பது பொருள். கருநிறமுடைய இந்திரன், மன்மதன் முதலியோரைக் குறிக்குமாயினும் சிறப்புப்பற்றித் திருமாலைக் குறித்தது: காரண இடுகுறிப்பெயா. அனத்தான் - அன்னப்பறவையை ஊர்தியாகக் கொண்டோன். ஆனதால் நான்முகனைச் சுட்டிற்று. அனம் - அன்னம்: இடைக்குறை விகாரம். கருதுதல் - எண்ணுதல். அஃதாவது தம்மினும் உயர்வாக நினைத்தல். புகழ்-சிறப்பித்துப் பிறரால் கூறப்படும் உயர்சொல்; இறவாத புகழ். இதனைப் 'பொருள்சேர் புகழ்' என்பர், வள்ளுவர்பெருமான். கரி-யானை. ஆனனம் - முகம். கரி - கருமை நிறமுடையது என்னும் பொருட்டாய் யானைக்கு ஆயிற்று; இகரம் உரிமைப்பொருள் உணர்த்தும் விகுதி. அல்லது கருமை-பெருமை யெனக்கொண்டு உருவிற் பெரிதாகிய யானையை உணர்த்திற்று என்று கோடலு மாம். 'ஈசன் கரியான் அனத்தான்' எண்ணும்மைத் தொகை. பூண்ட: இறந்தகாலப் பெயரெச்சம்; கரியான் என்னும் பெயர் கொண்டு முடிந்தது. கழல் - காலிலணியும் வீரக்கழல். அஃது ஈண்டுத் தானியாகுபெயராய்த் திருவடிகளைக் குறித்தது. 'ஈசன், கரியான், அனத்தான், கரி ஆனனத்தான்' - சிவன், திருமால், நான்முகன், யானைமுகன் ஆகிய நாலு கடவுளர்தம், கழல்கள் இந்நூலை ஆக்குதற்கு அரிய துணையாகும் என்று பொருள் கொள்ளலுமாம். கழல்துணையாகும். ஆதலால் அவைகளை வணங்கு வோம் என்பது குறிப்பெச்சம். **நேசரிதம், மாசரிதம்** என்பன **முதல் மடக்குத் திரிபும், கரியானனத்தான், கரியானனத்தான்** என்பன **அடிமுதல் மடக்கும்** ஆகிய **சொல்லணிகள்**. வருந் துணையா - துணையா வரும் என மாற்றித் துணையாக வரும் என்று **பொருளுரைத்தலுமாம்.** (க)

## நம்மாழ்வார்

உ. [1]நேசரிதங் கூர நிலவலயம் தாங்குநளன்
மாசரிதங் கூற வருந்துணையாம்—பேசரிய
மாமகிழ்மா றன்புகழாம் வண்தமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்தாள் மலர்.

(இ - ள்.) பேச அரிய - புகழ்தற்கு அருமையான, மாமகிழ் மால் - திருமகள் மகிழ்ச்சிகொள்ளுகின்ற திருமாலினது, புகழ் ஆம் - பெருமை பொருந்தியதான, வண்தமிழ் வேதம் விரித்த - வளப்பமுள்ள (திருவாய்மொழியாகிய) தமிழ் மறையைப் பாடியருளிய, மாமகிழ்மாறன் - பெருமையுள்ள மகிழ மலர்மாலையை யணிந்த நம்மாழ்வாரின், தாள்மலர் - திருவடித்தாமரை மலர்கள்; நேசர் இதம்கூர..................அருந்துணையாம்—.

(க - து.) நம்மாழ்வார் திருவடிகள் நளன் வரலாறு கூறத் துணையாகும்.

(வி - ரை.) பேச அரிய மால் - புகழ்தற்கு அருமையான திருமால்; திருமாலின் புகழை ஏத்தி உரைப்பது, திருவாய்மொழி. வடமொழியிலுள்ள மறைபோலத் தமிழில் சிறந்த பொருளை மக்களுக்குத் திரட்டித்தந்து மேல்நெறிக்குய்த்தலின், 'வண்தமிழ் வேதம்' என்றார். வண்மை: சிறப்பு, கொடை, வளப்பம் முதலிய பொருள்களை உணர்த்தும் பண்புப்பெயர்; ஈண்டுத் தமிழுக்கு அடையாகவந்து சிறப்பித்தது. நம்மாழ்வார், இறைவன் திருவடிப்பேற்றின் உண்மையை உலக மக்கட்குத் திருவாய்மொழித் திருநூலின் வழியாக அருளிசெய்தாராகலின், அதன் சிறப்புத் தோன்ற, 'வேதம் விரித்த......மாறன்' என்றார். பிள்ளைப்பெருமாள் ஐயங்காரும் தமது மாலையில் நம்மாழ்வாரருளிய திருவாய்மொழியைச் சிறப்பித்து,

> '....................கண்பாராய்
> நாராய ணாஅடியேன் நாடும் தமிழ்வேத
> பாராய ணாசடகோ பா.'

என்று பாராட்டுவாராயினர். மாறன் - கொடிய வினைகளுக்கு மாறுபட்டவன், என்பது பொருள். இவர் இவ்வாறு மாறுபட்

---

(பாடம்) 1. 'வளன்கூர் வயல்சூழும் மாநிடத மன்னன்
நளன்சீர் நவிலுநலம் நல்கும்.'

டிருந்ததனுல் 'மாறன்' எனப்பட்டார். இவர் **பராங்குசன், நாவீறுடையபிரான், வகுளாபிரான், குருகைப்பிரான், சடகோபர்** என்னும் வேறு பெயர்களாலும் அழைக்கப்பெறுவர்.

முதற்பாட்டில் 'நேசரிதம்' என்று தொடங்கும் முன் அடிகள் இரண்டுக்கும் பொருள் விரித்திருத்தலால், ஈண்டு அவ்வடிகட்கு உரை வரையப்பெறவில்லை.

தாள் மலர் - தாளாகிய மலர் : இருபெயரொட்டு. மலர், தாமரைப்பூவைக் குறிக்கும்; "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என்பது பெரியார் திருமொழியாகலான். (உ)

## திருமால்

௩. ஆதித் தனிக்கோலம் ஆனுன் அடியவற்காச்
சோதித் திருத்தூணில் தோன்றினன்—வேதத்தின்
முன்னின்ருன் வேழம் முதலே என அழைப்ப
என்னென்ருன் எங்கட் கிறை.

(**இ - ள்.**) ஆதி தனி கோலம் ஆனுன் - முன்காலத்தில் தன் ஒப்பில்லாத வராக அவதாரம் எடுத்தவனும், அடியவன்கு ஆ - தன் அடியவனுன பிரகலாதனுக்காக, சோதி திருத்தூணில் தோன்றினன் ஒளி பொருந்திய அழகிய தூணிடத்து நரசிம்ம மூர்த்தியாக வெளிப்பட்டவனும், வேதத்தின் முன் நின்ருன் - வேதத்தில் முதன்மையான பிரணவப்பொருளாக நிலைபெற்றிருந் தோனும், வேழம் முதலே என அழைப்ப - கசேந்திரன் என்னும் யானை முதன்மையானவனே என்று ஓலமிட்டழைக்க, என் என்ருன் - என்னவென்று அதன்முன் தோன்றிவந்து துயர் தீர்த்தவனுமாகிய திருமால், எங்கட்கு இறை - எமக்கு இறைவன் ஆவான். (அவனை வாழ்த்துவோம் : வணங்குவோம்.)

(**க - ரு.**) திருமால் எம்மைக் காக்கும் கடவுளாவார்; அவரை வணங்குவோம்.

(**வி ரை.**) கோலம் - வராகம்: வடசொல்; தமிழில் பன்றி யென்பது பொருள். ஆதித் தனிக்கோலம் என்றதனுல் ஆதி வராக உருவெடுத்த திருமால் அவதாரத்தைக் குறித்தது. ஊழிக் காலத்தில் இவ்வுலகம் அழியாவண்ணம் வராக (பன்றி உரு) அவ தாரமெடுத்துத் தன் கொம்பினுல் பூமியைத் தாங்கினுனென்பது புராணக் கதை. அடியவன் : பிரகலாதன். அவனுக்காகத் திரு

---

1. நால்வர் நான்மணிமாலை : ௬0.

மால் நரசிங்க அவதாரங்கொண்டு தூணிலிருந்து வெளித்தோன்றிப் பிரகலாதன் தந்தை இரணியனை அழித்தானென்பதும் கதை. வேழம் - யானை. கசேந்திரனென்னும் யானையை முதலை நீரிலிருந்து பிடித்திழுக்க, அது, அஞ்சி 'ஆதிமூலமே' என அழைக்க, அதைக் காக்க முன்வந்து நின்றான் என்பதும் அக்கதை இவ்வளவு அரும் பெருஞ்செயலை மேற்கொண்ட பெருமானே, எமக்கு நலம்செய்ய முன்னின்றருள்வான் என்னும் குறிப்பினால், 'எங்கட்கு இறை' என்றார். வேதவிழுப்பொருளாய், வேதத்தில் முதன்மையாகக் குறிக்கக்கூடியவனாய் உள்ளவன் என்பது மறைகளின் முடிபு. ஆதலால் 'வேதத்தின் முன் நின்றான்' என்றார்.

ஆனான், தோன்றினான், நின்றான், என்றான் என்பன இறந்தகால வினையாலணையும் பெயர்கள்; இவை, எழுவாயாய் வந்து இறையென்னும் பெயர்ப்பயனிலை கொண்டு முடிந்தன. அன்றி ஒரு பெயருக்குப் பல பயனிலையாக வந்ததெனலுமாம்.

இந்நூலாசிரியர் ஆன்றோர்கொண்ட முறைப்படி முதலில் பிள்ளையாருக்கு இந்நூற்குத் தடையுண்டாகாமற் காக்குமாறு வணக்கங்கூறிப் பின்னர்க் காத்தற்கடவுள் திருமாலாதலால் அவரை வழிபட்டு வாழ்த்துமுன் 'தொண்டர்தம் பெருமை சொல்லவும் எளிதோ?' என்பவாகலின் நம்மாழ்வார் வணக்கமும் கூறினார். (௩)

## சிவபெருமான்

௪. [1]கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை
உலாவு சடைமேல் உறையும்—நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகம்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு.

(இ - ள்.) கலாபம் மயில் இருந்த பாகத்தார் - தோகையுடைய மயிலையொத்த சாயலுள்ள உமையம்மை அமர்ந்திருக்கின்ற இடபாகத்தையுடையாரும், கங்கை உலாவு சடைமேல் - கங்கைநீர் பாய்கின்ற சடைமுடிமீது, உறையும் நிலாவை - இருக்கின்ற நிலவின் ஒளிக்கதிரை, வழியவார்த்தால் அன்ன மா நீற்றார் - பரந்து தம் உடல் எங்கும் வழியுமாறு தெளித்தாற்போன்ற திருவெண்ணீறணிந்தவரும், நாகம் கழிய ஆர்த்தார் நமக்கு ஓர் காப்பு - நாகப்பாம்புகளை மிகுதியாக அணிந்தவருமாகிய சிவபெருமான் நமக்கு ஒப்பில்லாத காவற்கடவுளாவர்.

---

(பாடம்) 1. மயிலுகந்த.

(க - ரை.) சிவபெருமான் நம்மைப் பாதுகாக்கும் கடவுளராவர் ; வணங்குவோம்.

(வி - ரை.) கலாபம் - மயில்தோகை. மயில்போன்ற சாயலுடைய உமையம்மையை மயிலென்றார்; இது, உவமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை. நிலவு - அதன் ஒளியைக் குறித்தலால் முதலாகு பெயர். பாகத்தார், நீற்றார், ஆர்த்தார்: வினையாலணையும் பெயர்கள்; ஈண்டுச் சிவபெருமான்.

இறைவன் பெண்ணொரு கூறுடையனாக இருந்து உலகத்தைக் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடுகின்றானென்பது, சைவசமயப் புராணமரபு.

[1]"நீலமேனி வாலிழை பாகத்து, ஒருவன்.'

எனவும், [2]'பெண்உரு ஒருதிறன் ஆகின்று' எனவும், சங்க நூல்களினும், [3]'பெண்ணாகிய பெருமான்.' எனத்திருஞான சம்பந்தரும் பிற ஆன்றோர்களும் கூறுதல் காண்க.

உலகத்தைக் கூர்ந்து நோக்கினால் உயிருடைப் பொருள்கள் யாவும் ஆண் பெண் என இருவகைப் பகுப்பாகவே இலங்குகின்றன. ஏனைய உயிரில்லாத பொருள்களைத் தொழிற்படுத்த முற்பட்டால், இரண்டு பொருள்கள் கூடினால்தான் செய்ய இயல்கின்றது. ஒரு பொருளை வைக்கும் செப்பை யெடுத்துக் கொள்வோமானால் அது மேல்மூடியுடன் இணைந்துள்ளது. பெட்டிக்கு அடிபாகம் மேல்பாகம், பூட்டுக்குப்பூட்டு திறவுகோல் ஆகிய இரண்டுபொருள் வேண்டும். இவைகளைப்போன்றே உலகத் தோற்ற ஒடுக்கத்தைச் செய்யும் முழுமுதல்வனுக்கு ஆணுரு பெண்ணுருவாகிய ஈருருவம் வேண்டுமென்று கருதினர்; அவ்விறை அவ்வியற்கையனாக இருத்தலால், பெண்ணொரு கூறுடையனாகக் கொண்டு அம்மையப்பனாக வழிபட்டனர். அதனால் 'கலாப மயிலிருந்த பாகத்தார்' என்றார்.

இதில் இறைவன் நாகத்தை யணிந்ததென்பது, வேண்டுதல் வேண்டாமை இல்லாத அவன் பேரருளின் அடையாளமாகக் குறித்ததாம்.

காப்பு - காவல்: தொழிற்பெயர்; காவலுடைய இறைவனைக் குறித்தலால், தொழிலாகு பெயர். (ச)

---

1. ஐங்குறுநூறு: க. 2. புறம்: க.
3. திருஞானசம்; தேவாரம், பதி, கO: க.

## முருகவேள்

௫. [1]நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழல்நாறிக்
காலை இருள்சீக்கும் காய்கதிர்போல்—சோலை
மணித்தோகை மேல்தோன்றி மாக்கடல்சூர் வென்றோன்
அணிச்சே வடியெம் அரண்.

(இ - ள்.) நீல நெடும் கொண்மூ - நீலநிறம் பொருந்திய நீண்டமேகத்தின், நெற்றி நிழல் நாறி - உச்சியின்கண் ஒளியை வீசி, காலை இருள் சீக்கும் காய்கதிர்போல் - விடியற்காலைப் பொழுதில் இருளை ஓட்டுகின்ற ஒளியெறிக்கின்ற சூரியன்போல, சோலை மணித்தோகை மேல் தோன்றி - பொழிலின்கண் வாழ்கின்ற அழகிய மயிலின்மேல் இருந்து காட்சியளித்து, மாகடல் சூர்வென்றோன் - கடலிடத்து மாமரமாக நின்ற சூரனை வென்றவனாகிய முருகவேளின், அணி சேவடி எம அரண் - அழகிய சிவந்த திருவடிகள் எமக்குப் பாதுகாப்பாக இருக்கும். (ஆகவே, அவ்வடிகளை வணங்குவாம்.)

(க - து.) முருகவேளின் திருவடிகள எமக்குப் பாதுகாப்பாகும்; அதனை வணங்குவோம்.

(வி - ரை.) கொண்மூ - மேகம்; நீர்கொண்டுள்ளது என்பது பொருள். முருகவேள் மயிலின் கண் எழுந்தருளி வரும் காட்சி, சூல்கொண்ட மேகத்தின் நடுவில் தோன்றிக் காலைப்பொழுதில் இருளை ஓட்டும் இளஞாயிறுபோல் தோன்றுகின்ற தென்பாராய் 'காய்கதிர்போல்' என்றார். இக் கருத்தை யொப்பவே,

> [2]"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு
> பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு
> ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி.'

என, நக்கீரரும்,

> [3]"உததி இடை கடவுமரகதவருண குலதுரக.'

என, அருணகிரிநாதரும் அருளுமாற்றால் தெளிக.

தோன்றி - தோன்றுவோன் என்று பெயராகக் கொள்ளினும் அமையும். அன்றித் தோன்றியென வினையெச்சமாகக் கொண்

1. இப் பாடல் சில பதிப்புகளில் காணப் பெறவில்லை.
2. திருமுருகாற்றுப்படை : ௧ - ௩. 3. திருவகுப்பு : ௧.

டாலும் பொருள் மாருகாது. மணி - அழகு; அல்லது கருமை யென்று கூறலுமாம் தோகை - மயிலின் வால்இறகுகள்; அதனையுடைய மயிலுக்கு ஆதலால் ஆகுபெயர். சூர சூரபன்மன்; சூரபன்மன் கடலிடை மாமரமாக நின்றபோது அதனை வெட்டிச சாய்த்து, அவன் கொற்றத்தை யழித்து வெற்றிகொண்டார் என்பது கந்தபுராண வரலாறு. சே + அடி = சேவடி. செம்மையை யுடைய திருவடிகள். அரண் - பாதுகாப்பு. இதுகாறும் கடவுள் வணக்கம் கூறி முடித்தார். இனி, அவையடக்கங் கூறுகின்ருர். இவர் எல்லாக் கடவுளர்கட்கும் வணக்கங் கூறுதலால் சமரோக் குடையர், சமய வேறுபாடற்றவர் என்பது புலனுகின்றது. (ரு)

## அவையடக்கம்

௬. வேந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
தந்துவினல் கட்டச் சமைவதொக்கும்-பைந்தொடையில்
தேன்பாடும் தார்நளன்தன் தெய்வத் திருக்கதையை
யான்பாடல் உற்ற இது.

(இ - ள்.) பைந்தொடையில் தேன்பாடும் தார் நளன்தன் தெய்வ திருக்கதையை - பசிய மலர்களின் வரிசையில் வண்டுகள் பாட்டுப் பாடுகின்ற மாலையையணிந்த நளமன்னனின் தெய்வத் தன்மையுள்ள வரலாற்றை, யான் பாடல் உற்ற இது - நான் பாடத் தொடங்கிய இச் செயல், வெம் தறுகண் வேழத்தை வேரி கமலத்தின் தந்துவினல் கட்ட சமைவது ஒக்கும் - சினத் தால் அஞ்சாத நெஞ்சுடைய கடாயானையை மணமுள்ள தாமரை நூலினற் கட்டுதற்கு முயல்வது போன்றுள்ளதாம்.

(க - ு.) நளமன்னன் வரலாற்றை யான் பாட லுற்றது யானையைத் தாமரை நூலினல் கட்டுதல் போன்றது.

(வி - ரை.) தறுகண் - அஞ்சாமை; யானைக்கு அடை. மிக வலிமையுடைய யானை, அது கட்டுக்கடங்காதது. இத்தன்மைத் தாய யானையைத் தாமரை நூலினல் கட்டி அடக்குவதாயின், அஃது எவ்வாறு அடங்காதோ அது போன்று, நளமன்னன் பெருமைமிக்க வரலாற்றைக் கூற எண்ணிப் பாடலுற்றேன், இஃது எனது அவா. என் சொல்லில் பாடலில் அடங்காது, ஆனல் பாடுகின்றேன்; கற்ற பெரியார் ஏற்றருள்வாராக என்னும் குறிப்புக்கொண்டு ஆசிரியர் இவ்வாறு கூறினர். இது குறிப் பெச்சம்.

கமலம் - தாமரை; அதன் நூலைக் குறித்தலால் முதலாகு பெயர். தொடை - தொடுக்கப்படுவது. தேன் - வண்டு; தேனை உண்ணுதல்பற்றி வந்த பெயர்; ஆதலால் ஆகுபெயர்.

நளன் வரலாற்றில் இந்திரன் முதலிய தேவர்களும், கலிபுருடனும், கார்க்கோடனும் தொடர்பு கொண்டிருப்பதால், 'தெய்வத் திருக்கதை' என்றார். அன்றியும் நளவேந்தன், மறங்கடிந்து அறத்தாற்றில் நின்று உலகத்தைக் காத்த முடியுடைப் பேரரசனாதலான்,

> "முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
> இறையென்று வைக்கப் படும்.'[1]

என்று தமிழ்மறையும்,

> "திருவுடை மன்னரைக் காணின்
> திருமாலைக் கண்டேனே என்னும்.'[2]

என்று ஆழ்வாரும் குறித்தலான், தெய்வத்தன்மையுடைய கதையென்று கொள்ளலுமாம்.

எத்துணை ஆற்றல் படைத்தவராயினும் பணிவு வேண்டுமாதலால் ஈங்கே அறிவுடைச் சான்றோர்கு அடக்கம் கூறினார். என்னை?

"[3] எல்லார்க்கும் நன்றாம் பணிதல்' என்பது திருவள்ளுவர் செம்மொழி. (௬)

## நூலாசிரியர் பெயர்

> ௭. பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவால்
> பேரார் புகழேந்தி பேசினான்—தாரார்
> செழியனையும் சென்னியையும் சேரத் திறைகொள்
> மொழியின் சுவையே முதிர்ந்து.

(இ - ள்.) தார் ஆர் செழியனையும் சென்னியையும் - மாலையையணிந்த பாண்டியனையும் சோழனையும், சேர திறைகொள் - ஒருங்கே தமக்கு அடக்கமாக்கிக் கொள்ளும், மொழியின் சுவையே

1. திருக் : ௩௮௮. 2. திருவாய்மொழி, ௩௪ : ௮.
3. திருக் : ௧௨௫.

முதிர்ந்து - (தமது) சொற்களின் இனிமை மிகுந்திருக்குமாறு, வெண்பாவால் - நேரிசை வெண்பாக்களினால், பாரார் நிடதபதி நளன்சீர் - பூவுலகிற் சிறந்த நிடதநாட்டு மன்னனாகிய நளனின் சிறப்பு மிக்க வரலாற்றை, பேர் ஆர் புகழேந்தி பேசினான் - (கல்வி கேள்விகளினால்) சீர்த்தி வாய்ந்த புகழேந்திப் புலவர் பாடினார்.

(க - ரை.) புகழேந்திப் புலவர் நளமன்னன் வரலாற்றை நேரிசை வெண்பாக்களாற் பாடினார்.

(வி - ரை) 'பாரார் நிடதம்' என்றதனால் மற்ற எந்நாடும் இந் நாட்டுக்கு ஒப்பாகா வண்ணம் விளைவும் செல்வமும் சிறப்பு மிக்க நாடென்பது பெற்றாம். "நற்றவஞ் செய்வார்க் கிடந் தவஞ் செய்வார்க்கு மஃதிடம், நற்பொருள் செய்வார்க்கும் அஃதிடம்" என்றார், ஏமாங்கத நாட்டைச் சிறப்பித்துக் கூற வந்த திருத்தக்க தேவரும் வள்ளுவரும் 'நாடென்ப நாடா வளத்தன நாடல்ல, நாட வளந்தரும் நாடு' என்றார். இங்குக் கூறப்பட்டவைகட்கு ஏற்ப, எல்லா நலங்களும் தரும் தன்மைத்தாய்ப் பிற நாட்டை எதற்கும் நாடிச் செல்லா நாடாக மிளிர்தலான் இவ்வாறு சிறப்பித்துக் கூறினார.

'நிடதம்' என்னும் மலையின் பெயர் அதனையுடைய நாட்டை உணர்த்தி நின்றது. நிடதமலை மேருமலைக்குத் தெற்கேயுள்ளதான நிடதம் ஏமகூடம் மந்தாரம் என்னும் மலைகள் மூன்றனுள் ஒன்றாகக் கூறுவர், ஆன்றோர். ஆர் : முக்கால வினைத்தொகை. புகழேந்தி - புகழை ஏந்தியவர் என்று பொருள்படும். இது காரணப் பெயராக இருக்கின்றது. இவரின் இயற்பெயர் மறைந்து இப் பெயரே பெருவழக்காய் வழங்குவதாயிற்று. இவ்வாறு முற்காலப் புலவர்கள் பெயர்கள் அவர்கள் பாடிய பாடல்களினாலும், ஊரப் பெயர்களினாலும் வழங்குதல் காணலாம். '**கல்பொருசிறுநுரையார்**,' '**தேய்புரிப் பழங்கயிற்றினார்**,' **தொடித்தலை விழுத்தண்டினார்**' இவை அவர்கள் பாடிய பாடல்களின் சொற்றொடரினால் வந்த பெயர்கள். '**அரிசில்கிழார்**,' **கோவூர்கிழார்**,' ஊரினால் வந்த பெயர்கள் தற்காலப் புலவர்களினும் **பண்டிதமணி** என்பதும், **பாரதியார்**, **பாரதிதாசன்**, **கவிமணி**, **நாட்டார்** என்பவைகளும் அவ்வவர் தம் இயற்பெயரைக் குறிக்காமல் சிறப்புப் பெயராக வழங்குதல் போலக் கொள்க.

செழியன் - பாண்டியன். புகழ், பொருள்களில் மிக்கோன் என்பது பொருள். சென்னி - சோழன். திறைகொள்ளுதல் - தம் வயப்படுத்தல்.

1. சீவக சிந் : எஎ. 2. திருக் : எந௮.

"சதுரன் எழில்சோண சைலன் துதிப்பன்
மதுரமொழி அன்பர் மனமாம் - குதிரை திறை
கொண்டவனென் றேத்தும்குரை கழற்கால் யானை திறை
கொண்டவனை என்மனத்தே கொண்டு.[1]"

என்பதில், 'திறை' இப்பொருள் தருதலை ஓர்க.

மொழி - தமிழ்மொழி. அதன் சுவை ஈர்த்து ஈர்த்து என்பையும் உருக்கும் தன்மையது. இயற்கையோடிசைந்த இன்மொழி தமிழாகலான் அது, செழியனையும் சென்னியையும் தனக்குத் திறையாகக் கொண்டது.

'தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார் இங்கமரர் சிறப்புக் கண்டார்' என்பது ஆன்றோர் வழக்காதலால் அவர்கள் இம்மொழிப் பண்பில் ஈடுபட்டுத் தம் நெஞ்சைத் திறையாகக் கொடுத்தனர். புகழேந்தியார் பாண்டி நாட்டினும் சோழ நாட்டினும் வாழ்ந்தவராகலான், இவ்விருபெரு வேந்தர்களை மட்டும் குறிப்பிட்டார்.

இப்பாடல், புகழேந்தியார் தம்மையே பிறர்போல் மாந்திக் கூறியதாகக் கொள்ளுதல் வேண்டும். ஒரு சிலர், இச் செய்யுள் ஒட்டக்கூத்தர் பாடியதென்றும், கம்பர் பாடியதென்றும் கூறுவர். அக்கூற்றுக்கு யாதொரு அகச்சான்றும் புறச்சான்றும் இல்லை. இவ்வாறே தேவார ஆசிரியர்களான திருஞான சம்பந்தரும் சுந்தரரும் தேவார ஒவ்வொரு பதிகத்திறுதியிலும் தம்மையே பிறர் போல் வைத்துக் கூறுதல் காண்க.

சுவை முதிர்தல், எண்வகை மெய்ப்பாட்டுணர்ச்சிகளான, நகை அழுகை இளிவரல் மருட்கை அச்சம் பெருமிதம் உவகை வெகுளிகள். இதனைக் கற்றோர் உடலில், இவவுணர்ச்சிகள் தோன்றுமாறு உணர்ச்சி மிக்கதாக அமைத்தல்.

அன்னத்தைத் தமயந்திபால் தூதாக அனுப்பிய நளன், அது சென்றவுடன் அதன் வருகையை எதிர்பாாத்திருந்தான்; வழிமேல் விழி வைத்து ஏமாந்திருந்தான்; அப்போது அவன் மனநிலை ஒரு நிலை கொள்ளாது, 'இந்நேரம் தமயந்திபால் சென்றிருக்குமா? இந்நேரம் அவளைக் கண்டிருக்குமா? இந்நேரம் நம் செய்தியைக் கூறியிருக்குமா? இந்நேரம் திரும்புதல் கூடுமா? என்றென்றெல்லாம் கூறிக் கூறி, அவன் வருந்திய அவலநிலை

1. சோணசைல மாலைக் காப்பு.

யைக் கற்பார் காணுமாறு அமைத்த சிறப்பும், பிறண்டும் பல நிகழ்ச்சிகளைக் கூறிய சிறப்பும் நம் புகழேந்தியாரின் புகழ்குன்றாப் பாக்களுக்கே புரியது.

‘இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற் காணுங்கொல்
இவ்வளவிற் காதல் இயம்புங்கொல்—இவ்வளவில்
மீளுங்கொல் என்றுரையா விம்மினான் மும்மதம்நின்று
ஆளுங்கொல் யானை அரசு.’

என்னும் இந்நூல் சுயம்வர காண்டச (சுக) செய்யுளில் அவன்றன் அவலம், மருட்கை, அச்சம் முதலியன வெளிப்படுதல் காண்க.

(எ)

# ௧. சுயம்வர காண்டம்

## நூல்

### தோற்றுவாய்

**தருமராசன் வனத்தில் வாழ்தல்**

அ. **பாண்டவரின் முன்தோன்றல் பார்முழுதும் தோற்றேநாள்**
ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி—வேண்ட
மறுத்தான் இருந்தானை மண்ணோடும்போய் மாளப்
பொறுத்தான் இருந்தான் புலர்ந்து.

(**இ - ள்.**) *பாண்டவரின் முன்தோன்றல் - பாண்டு மன்னன் மக்கள் ஐவரில் மூத்தவனான தருமன், பார்முழுதும் தோற்று - (சூதாடித் துரியோதனனுக்கு) தன் நாடு யாவற்றையும் இழந்ததனால், ஆண்தகையே தூதுவனாய் சென்று அவனி வேண்ட - ஆண்களிற் சிறந்தவனாகிய (கண்ணபிரானே) தூதனாகத் (துரியோதனன் முன்னிலையில்) போய் நாட்டைத் தருமாறு அவனைக் கேட்க, மறுத்தான் இருந் தானையொடும் மண்ணொடும் போய் மாள - அதனைக் கொடுக்க மறுத்தவனான துரியோதனன் மிக்க படைவீரர்களோடும் நாட்டினோடும் தன் உரிமையற்று மாண்டொழியும்படி, பொறுத்தான் ஒருநாள் புலர்ந்து இருந்தான் - பொறுமையுடன் இருந்தவனான தருமன், ஒருநாள் வனத்தில் துன்பத்தால் வாடி இருந்து வந்தான்.*

(**க - து.**) *தருமராசன் வருத்தத்துடன் வனத்தில் வாழ்ந்து வருவானானான்*

(**வி - ரை.**) *பாண்டவர் - பாண்டுவின் மக்கள். முன்தோன்றல் - முன்னே பிறந்தவன்; தமையன். மறுத்தான், பொறுத்தான் என்பன, இறந்தகால வினையாலணையும் பெயர்கள். மாள - இறக்க: காரணப் பொருட்டாய் வந்த எதிர்காலச் செயவெனெச்சம்.* (க)

**மன்னர் பலர் வனத்தில் தருமனைக் காணல்**

உ. **நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோர்**
ஈட்டங்கள் சூழ இருந்தானைக்—காட்டில்
**பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழில்தோள் வேந்தர்**
வருந்தகையர் எல்லாரும் வந்து.

(இ - ள்.) நாட்டின்கண் வாழ்வை துறந்துபோய் - தன் நாட்டில் இன்பத்தோடு வாழ்ந்து வந்த சிறந்த வாழ்க்கையை விட்டுவிட்டுப்போய், நால்மறையோர் ஈட்டங்கள் சூழ காட்டில் இருந்தானை - நால்வகை வேதத்தின் விழுமிய பொருளைக் கற்றுணர்ந்த முனிவர் கூட்டங்கள் சூழ்ந்திருக்க வனத்திலுறைந்த வனை, பெரும் தகையை பெரிய சிறப்பு வாய்ந்த தரும ராசனை, பேர் எழில் தோள் வேந்தர் வரும் தகையர் எல்லாரும் - பேரழகு வாய்ந்த தோள்களையுடைய அரசர்களுள் வருதற்கு ஏற்ற தகுதி யுடையார் எல்லோரும், வந்து கண்டார்கள் - அங்கு வந்து கண்டார்கள்.

(க - ரு.) வருவதற்கிசைந்த மன்னர்கள் யாவரும் காட்டில் தருமனை வந்து பார்த்தார்கள்.

(வி - ரை.) ஈட்டம் - கூட்டம். இருந்தானை - இருந்தவனை தருமனை: இது இறந்தகால வினையாலணையும் பெயர். ஐ - தலைவன் எனப் பொருள் கொள்ளலுமாம். 'வரும் தகையர் வேந்தர் எல்லோரும் வந்து பெருந்தகையைக் காட்டிற் கண்டார்கள்' எனக் கூட்டி வினைமுடிபு செய்க. பெருந்தகை: பெரிதாகிய தகுதியுடையவன் எனப் பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. (உ)

காட்டில் தருமராசனை வேதவியாசர் வந்து காணல்

கo. கோற்றவேல் தானைக் குருநாடன் பாலணைந்தான்
எற்றுநீர் ஞாலத் திருள்நீங்க—முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாம் தந்தான்
மொழிமுறையே கோத்த முனி.

(இ - ள்.) எற்றுநீர் ஞாலத்து இருள் நீங்க - மோதுகின்ற அலைகளையுடைய கடல்சூழ்ந்த இவ்வுலகின் (அறியாமையாகிய) இருள் நீங்கும் பொருட்டாக, வழிமுறை முற்றும் வந்த - ஆசிரியர் மாணாக்கரின் வழிவழியாகக் கேள்விமுறை கற்றல் முறையாக முழுதும் வந்த, மறை எல்லாம் தந்தான் - நால்வகை மறைகளையும் தன் மாணவர்க்குக் கற்பித்தவனும், மொழிமுறையே கோத்த முனி - அம் மறைப்பொருளைப் புராண முறையில் ஒழுங்குபடுத்திய வனுமான வேதவியாச முனிவன், கொற்றவேல் தானை குரு நாடன் பால் அணைந்தான் - வெற்றிவேலேந்திய படைகளை யுடைய குருநாட்டுக்குரியவனான தருமராசனிடத்திற்கு வந்தான்.

(க - து.) வேதவியாச முனிவர் காட்டிலிருக்கும் தருமராசனிடத்திற்கு வந்தார்.

(வி - ரை.) கொற்றம் - 'கொல்' என்னும் பகுதியும் 'அம்' மென்னும் விகுதியும் பெற்றுவந்த தொழிற்பெயர்; றகரம் எழுத்துப்பேருக வந்து றகரமாக லகரங்கள் திரிந்தன. 'வெற்றம்' என்னும் சொல்லும், 'வெல்' என்னும் பகுதியடியாக வந்தது போற்கொள்க. தானைக்கு அடையாக வந்தது, தானையின் வீரப் பண்பை வேலின்மேல் ஏற்றிக் கூறினார். இவ்வாறே,

"காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர்.'

எனவும்,

'திருந்து வேல் குமணன்.'

எனவும் பிற ஆன்றோர் கூறுதலும் காண்க. குருநாடு - குரு வென்பவனால் ஆளப்பட்ட நாடு. அதனால் குருகுலத்தார் என்று தருமன் முதலியோரை வழங்குவர். 'வழிமுறையே வந்த மறை யெல்லாம் தந்தான்' என்பது, சிவபுராணம், விட்டுணு புராணம், பிரமபுராணம் என்று முறைப்படுத்திச் சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் குணமுடையவைகளாகச் செய்தாரென்பதனால் இவ்வாறு கூறினரென்க. அதனால் இவர்க்கு வியாசரென்னும் பெயருடன் 'வேதம்' என்னும் அடைகொடுத்து வேதவியாசரென வழங்கலாயினர்.  (ூ)

தருமராசன் வேதவியாசரை வரவேற்றல்

கக. மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயரம் எல்லாம்—அறவே
பிழைத்தேன்யான் என்றனைப் பேராழி யானை
அழைத்தேவல் கொண்ட அரசு.

(இ - ள்.) அப் பேர் ஆழியானை - அந்தப் பெருமையுள்ள சக்கரப்படையுடைய கண்ணபிரானை, அழைத்து ஏவல்கொண்ட அரசு - வரவழைத்துத் தூதுபோக்கியும் பிறசெயல்களுக் கெல்லாமும் ஏவிய தருமராசன் (வியாசமுனிவரை நோக்கி), மறை முதல்வ நீ இங்கே வந்து அருள பெற்றேன் - மறைகளுக்கு முதன்மையானவரே நீர் என்னிடத்து எழுந்தருளும் பேறு பெற்றேன்; (ஆதலால்), பிறவி பெரும் துயரம் எல்லாம் அறவே

1, 2. புறம்: சக. கசூ.

பிழைத்தேன் யான் என்றான் - என் பிறவி நோயாகிய பெருந் துன்பங்களெல்லாம் அறவே நீங்கிப்போகும்படி உய்ந்தேன் என்று கூறினான்.

(க - து.) தருமராசன் வியாசரைப் பார்த்து அடிகள் ஈண்டு எழுந்தருளியதால் பெரும்பேறுற்று உய்ந்தேன் என்றான்.

(வி - ரை.) மறை முதல்வன் என்பது இறைவனைக் குறிக்குமாயினும் ஈண்டு வேதத்தை முறைப்படுத்திய சிறப்பினால் வியாசரைச் சுட்டிற்று. வியாசரைக் கண்டதும் தருமனுக்கு உள்ளன்பு மீதூரப் பெரியார் துணையால எத்துன்பமும் நீங்கும் என்னும் கருத்தினனாகப் 'பிறவிப் பெருந்துயரம் ........ பிழைத்தேன்' என்றான். பிறவித்துன்பத்தைக் குறித்துப் பேசாத ஏடுகளே இடையா. இதைப் பட்டினத்தடிகள் இறைவனிடத்து முறையீடு செய்யுங்கால்,

> "மாதா உடல் சலித்தாள் வல்வினையேன் கால்சலித்தேன்
> வேதாவும் கைசலித்து விட்டானே—நாதா
> இருப்பையூர் வாழ்சிவனே இன்னுமோர் அன்னை
> கருப்பையிலே வாராமற் கா."

என, வேண்டுவாராயினர்.

பேர் ஆழியான் என்பதற்குப் பெரிய பாற்கடலில் அறிதுயில் கொள்ளும் இறைவனென்று பொருள் கொள்ளலுமாம், கண்ணன் திருமால் அவதாரமாகக் கோடலான். ஏவல் கொள்ளுதல் - தன் குறிக்கோளுக்கு ஏற்றபடி வேலை வாங்குதல் பாண்டவர்க்காகக் கண்ணபிரானனவர் அழைத்தபோது வந்து பல்வகை உதவிகளை, நட்பு முறையிலும் உறவு முறையிலும் செய்தனராகலான் 'ஏவல் கொண்ட' என்றார். அரசு - வேந்தன்: எழுவாயாக வந்தது. (ச)

**தருமன் மனத்துயரின் காரணத்தை வியாசர் வினவல்**

கஉ. மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கும் உள்ளத் துரவோனே—சித்தம்
வருந்தியவா றென்னென்றான் மாமறையால் உள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் தேர்ந்து

---

1. பட்டினத்: இருப்பையூர், க.

(இ - ள்.) மாமறையால் உள்ளம் திருந்தி - பெருமை பொருந்திய வேதத்தினால் மனசெம்மைபெற்று, அவாம் மெய் தவதவேதான் சேர்ந்து - (யாவராலும்) விரும்புதலையுடைய உண்மைத் தவவலிமை பெற்ற வியாசமுனிவர் ஆராய்ந்து, மெய் திரு வந்து உற்றாலும் வெம் துயர் வந்து உற்றாலும் - (தருமனை நோக்கி) நிலைபெற்ற செல்வங்கள் வந்து சேரினும் கொடுமையாகிய வறுமைத் துன்பம் முதலியன வந்து சேரினும், ஒத்து இருக்கும் உள்ளத்து உரவோனே - விருப்பு வெறுப்பின்றி ஒரு நிலைபெற்ற மனப்பண்புடைய அறிஞனே!, சித்தம் வருந்தியவா என் என்றான் - நீ மனக் கலக்கமுற்றிருப்பதற்குரிய காரணம என்னவென்று கேட்டான்

(ந - து.) வியாசர், தருமனைப் பார்த்து, 'நீ மனம் வருந்தியிருப்பதற்குக் காரணமென்ன?' என்று கேட்டார்.

(வி - ரை.) மெய்த்திரு - உண்மையான செல்வம்: கல்விப் பொருள், செல்வப் பொருள்களைக் குறிக்கும். ஆனால், வெந்துயர் என்று பின்வருவதால் ஈண்டுப் பொருட்செல்வத்தையே குறித்து நின்றது. கல்விப்பொருள் அழிதலும் சிதைதலும் இல்லா விழுப் பொருள். செல்வம் செல்வதும் வருவதுமாகிய நிலை பேறில்லாதது. ஆதலால், செல்வம் பெறினும் வறுமைவரினும் கலங்காத திண்மை யுள்ளம் பெற்றவன் என்பாராய் 'உள்ளத்து உரவோன்' என்றார். துயர் எல்லாத் துன்பத்தையும் ஒருங்கே தரவல்லது வறுமை யாதலின், இதற்கு வறுமையென்று பொருள் கூறப்பெற்றது. என்னை?

"இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது.'

என்பது திருவள்ளுவர் திருமொழி யாகலான் என்க.

ஆறு - ஆ எனக் கடைக் குறைந்து நின்றது. மெய்த்தவம் - உண்மையான தவம். அது தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராக இருக்கும் மெய்ம்மைநெறி. வேதவியாசர் பிறர்க்கென வாழ்ந்து உலகத்துக்கு வேண்டும் நலஞ்செய்ய வேதத்தை முறைப்படுத்தின ராகலான் இவ்வாறு, 'மெய்த தவதவோன்' என்றார். (ரு)

**தருமன் தான் மனம் வருந்தியதற்குக் காரணம் உரைத்தல்**

கசு. அம்பொற் கயிலைக்கே ஆகத் தரவணிவார்
தம்போற் படைக்குத் தமியனு—எம்பியைமுன்
போக்கினேன் என்றுரைத்தான் பூதலத்தும் மீதலத்தும்
வாக்கினோர் இல்லாத மன்.

1. திருக: கபசக.

(இ - ள்.) பூதலத்தும் மீதலத்தும் வாக்கில் நேர் இல்லாத மன் - மண்ணுலகினும் விண்ணுலகினும் வாய்மையே உரைப்பதில் தனக்கு யாரும் ஒப்பில்லாத தருமராசன், அம் பொன் கயிலைக்கே - அழகிய வெள்ளிமலையில் எழுந்தருளி யிருக்கின்ற. ஆகத்து அரவு அணிவார் தம் பொன்படைக்கு - மார்பில் பாம்பை அணியாகப் பூண்ட சிவபெருமானின் பொன்னொளியுள்ள பாசுபதாத்திரப் படையைப் பெற்றுக்கொண்டு வருமாறு, தமியன் ஆ - தன்னந்தனியனாக, எம்பியை முன் போக்கினேன் என்று உரைத்தான் - என் தம்பியாகிய (அருச்சுனனை நெடுநாட்களுக்கு) முன்பாகவே செல்ல விடுத்தேன் என்றான்.

(க - ரு.) 'பாசுபதாத்திரப் படை பெறுதற்கு அருச்சுனனைக் கைலைமலையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான்பால் அனுப்பி நெடுநாட்கள் ஆயின' என்று தருமன் கூறினான்.

(வி - ரை.) 'பொன் கயிலை' என்பது ஈண்டு வெண்பொன்னாகிய வெள்ளியைக் குறித்தது: ஒன்றொழி பொதுச்சொல். பொன்படை - அழகிய படை என்றலுமாம். 'ஆக' என்பதன் ஈற்றுக் 'ககர உயிர்மெய்' கெட்டு 'ஆ' என வந்தது விகாரம். மன் - நிலைபேறுடையவன் என்பது பொருள். (௩)

'அருச்சுனன் மிக்க தோள்வலியுடையான்' என்று வியாசர் கூறல்

கச. காண்டா வனம்தீக் கடவுளுணக் கைக்கணையால்
நீண்ட முகில்தடுத்து நின்றாற்கு—மீண்டமரர்
தாளிரண்டும் நோவத் தனித்தனியே ஓடியநாள்
தோளிரண்டும் அன்றோ துணை.

(இ - ள்.) காண்டா வனம் தீ கடவுள் உ(ண்)ண - காண்டா வனத்தைத் தீக்கடவுள் (அக்கினி பகவான்) எரித்துக் கொளுத்துமாறு, கைக்கணையால் நீண்ட முகில் தடுத்து நின்றாற்கு - தன் கையம்புகளினால் விரிந்து மூடிய மேகங்களை (மழைபெய்ய வொண்ணாமல்) தடுத்து வெற்றியுற்று வந்த அருச்சுனனுக்கு, அமரர் மீண்டு தாள் இரண்டும் நோவ தனி தனியே ஓடிய நாள் - தேவர்கள் புறமுதுகுகாட்டி தம்தம் கால்கள் இரண்டும் நோவும் வண்ணம் தனித்தனியாகப் பிரிவுபட்டு ஓட்டமெடுத்தபோது, தோள் இரண்டும் அன்றோ துணை - அவனுக்குத் தன் தோள்கள் இரண்டுமன்றோ உதவியாக இருந்தன? (ஆதலால் அத்தகையானைக் குறித்து நீ வருந்தவேண்டா)

(க - ரை.) 'காண்டவவன தகனஞ் செய்த காலத்தில் அருச்சுனற்குத் தன் தோள்கள் இரண்டும்தாம் உதவியாக இருந்தன' என்றார் வியாசர்.

(வி - ரை.) காண்டவவனம் - கண்டவனென்னும் அரக்கன் இருந்த வனமாகலால் இப் பெயர் பெற்றது. இதை அக்கினி பகவான் உண்ண நினைத்தான், அருச்சுனன் உதவியாக இருந்து எரிக்கச்செய்தான் என்பது பாரதம். விரிவு பாரதத்தில் காண்க. 'அமரர்.........ஒடிய நாள்' கூறுகண்மை கொண்ட வீரனாதலால் தான் ஒருவனே நின்று போர்செய்து வென்றான் என்று அருச்சுனன் பெருமிதத்தைச் சுட்டிக் காட்டிற்று: இசையெச்சம்.

**தருமன் தன் வனவாழ்க்கைக் காரணத்தை வினவல்**

கரு. பேரரசும் எங்கள் பெருந்திருவும் கைவிட்டுச்
சேர்வரிய வெங்கானம் சேர்தற்குக்—காரணம்தான்
யாதோவப் பாவென்றான் என்றும்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பாரகாத்த சேய்

(இ - ள்.) என்றும் தன் வெண்குடை கீழ் தீது ஓவ பார் காத்த சேய் - எக்காலத்தும் தன் வெண்கொற்றக் குடைக்கீழ் (குடிமக்கட்கு)த் துன்பம் நீங்கி இன்பமுற ஆட்சிபுரிந்த தரும ராசனானவன், அப்பா - என் ஐயனே!, எங்கள் பேர் அரசும் பெரும் திருவும் கைவிட்டு - எங்களது பெரிய அரசுரிமையையும், அளவற்ற செல்வத்தையும் இழந்து, சேர்வு அரிய வெம் கானம் சேர்தற்கு - (மக்கள் எவரும் வந்து) அடைதற்கு அரியதான கொடிய காட்டில் நாங்கள் வந்து வாழ்வதற்கு, காரணம் யாது என்றான் - காரணம் என்னவென்று கேட்டான்.

(க - ரை.) தருமன், தன்னைச் சார்ந்தோருடன் காட்டில் வந்து வாழ்தற்குக் காரணம் என்னவென்று வியாசரை வினவினான்.

(வி - ரை) பெருமை + அரசு-பேரரசு என முதனீண்டது. பண்புப் பெயராகலான், [1]'ஆதிநீடல்' என்ற நன்னூல் விதிப்படி வந்தது. அப்பா! என்றது, வியாசர் தருமனுக்குப் பிதாமகனார் என்னும் முறைபற்றி அழைத்தான் என்க. சேய் - செம்மையை யுடையான். இளமையும் அழகும் பண்பும் மிக்காரைச் 'சேய்' என்பது ஆன்றோர் மரபு. இறைவனையும் இப் பெயரால் வழுத்துவர். [2]'எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்' என்றார் நக்கீரரும்.

---

1. நன்னூல் : கநுச.	2. திருமுருகு : சுக.

**வியாசர், சூதாடுதல் அரசர்க்கு இயல்பே எனல்**

கசு. கேடில் விழுச்செல்வம் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண் — வாடிக்
கலங்கலைநீ என்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலைநூல் மார்பன் எடுத்து.

(இ - ள்) காமருவு நாடற்கு சோலைகள் நிறைந்த குரு நாட்டு வேந்தனை தருமனுக்கு, இலங்கு அலைநூல் மார்பன் - வெண்மைநிறம் பொருந்திய அசைகின்ற பூணூலை யணிந்த திருமார்பினையுடைய வியாசர், கேடுஇல் விழுச்செல்வம் கேடு எய்து சூது ஆடல் - என்றும் அழிவற்ற பெருஞ் செல்வமும் அழிந்து போகுமாறு சூதாடுதல், ஏடு அவிழ்தார் மன்னர்க்கு இயல்பே - இதழ்விரிந்த மலர்மாலை யணிந்த அரசர்கட்கு இயற்கையேயாகும்; வாடி கலங்கலைநீ - நீ அதற்காக வருந்தி உடல் மெலிவடையாதே என்று, எடுத்து உரைத்தான் - காரணங்காட்டிக் கூறினன்.

(க - ரு.) 'சூதாடுதல் அரசர்கள் இயல்பே. ஆதலால், நீ அதற்கு வருந்தாதே' என்று வியாசர் தருமனுக்குத் தேறுதல்மொழி கூறினர்.

(விரை) [1]'கேடில் விழுச்செல்வம்' கொடுக்கக் கொடுக்கக் குறையாப் பெருஞ் செல்வம். அச் செல்வம் பிற எதனாலும் அழியாது சூதால் அழியும் என்பாராய் 'கேடெய்து சூதாடல்' என்றார். காண் : அசைநிலை; அல்லது 'நீ அறிந்துகொள்' என்று கூறலுமாம். (கசு)

**தருமன், 'என்னைப்போல் காட்டில் வாழ்ந்தோருண்டோ?' என்று வினவல்**

கஎ. கண்ணிழந்து மாயக் கவறாடிக் காவலர்தாம்
மண்ணிழந்து போந்து வனம்நண்ணி — விண்ணிழந்த
மின்போலும் நூல்மார்ப மேதினியில் வேறுண்டோ
என்போல் உழந்தார் இடர்.

(இ - ள்,) விண் இழந்த மின்போலும் நூல் மார்ப - மேகத்தினின்றும் வெளித்தோன்றிய மின்னலைப் போன்ற பூணூலணிந்த மார்புடையானே, கண் இழந்து மாயம் கவறு ஆடி - (அறிவாகிய)

1. திருக்: ௪௦௦-இல் இச்சொல்தொடர் வருதலறிக.

கண்கெட்டு வஞ்சக சூதாடி, மண் இழந்து போந்து வனம் நண்ணி - தம் நாட்டினைத் தொலைத்துப்போய்க் காட்டினையடைந்து, என்போல் இடர் உழந்தார் - என்னைப்போல் துன்பப்பட்டவர், மேதினியில் காவலர் வேறு உண்டோ - உலகத்தில் என்னையன்றி வேறு அரசர் யாரேனும் உண்டோ?

(த - ரை) 'என்னைப்போல் அறிவிழந்து சூதாடி நாட்டை யிழந்து காட்டை யடைந்த அரசர் வேறு யாரேனும் உண்டோ?' என்று தருமராசன் வியாசரைக் கேட்டான்.

(வி - ரை.) கண் கண்போன்று நல்லன தீயனவற்றை விளக்கி நலம்தருதலால் உவமவாகு பெயராய் அறிவைக் குறித்தது 'மாயக் கவறு' என்றதனால் 'அறிவை மயக்கும் சூது' என்பது தெளிவாயிற்று. இழந்து, ஆடி, போந்து, நண்ணி முதலியன இறந்தகால வினையெச்ச அடுக்குகள் ஒன்றன்பின் ஒன்றாக வந்தன. அவை உழந்தார் என்னும் பெயர் வினைகொண்டு முடிந்தன. உண்டோ என்பதில் ஓகாரம் வினாப்பொருளில் வந்தது. (கo)

## வியாசர், தருமனுக்கு நளமன்னன் வரலாறுரைத்தல்

கஉ. சேமவேல் மன்னனுக்குச் செப்புவான் செந்தனிக்கோல்
நாமவேல் காளை நளனென்பான—யாமத்
தொலியாழி வையம் ஒருங்கிழப்பப் பண்டு
கலியான் விளைந்த கதை.

(இ - ள்.) தனி செங்கோல் நாமவேல் காளை நளன் என்பான் - தனக்கு ஒப்பற்ற செங்கோலையும் அச்சந்தரும் வேற் படையையும் கொண்ட ஏறுபோன்றவனாகிய நளவேந்தனானவன், யாமத்து - நள்ளிரவிலும், ஒலி ஆழிவையம் - ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த இம் மண்ணுலகமெல்லாம், ஒருங்கு இழப்ப - ஒருமிக்க இழக்குமாறு, பண்டு கலியால் விளைந்த கதை - முன் காலத்தில் சனிபகவானால் நிகழ்ந்த வரலாற்றை, சேமவேல் மன்னனுக்கு செப்புவான் - குடிமக்களுக்கு நலஞ் செய்கின்ற வேலேந்திய மன்னனாகிய தருமனுக்கு (வேதவியாச முனிவர்) கூறத் தொடங்கினார்.

(த - ரை) வியாசர் தருமராசனுக்கு நளமன்னன் வரலாறு கூறத்தொடங்கினார்.

(வி - ரை) சேமம் - காவல். 'வேல் மன்னன்' வேற் படையை ஏந்திய அரசன். செந்தனிக்கோல் தனிச செங்கோல் என மாற்றியுரைக்கப்பட்டது. அன்றி: இடைப்பிறவாலுமாம். காளை நளன் - காளைபோன்ற நளன், உவமைத் தொகை. நாடு ஒருங்கிழப்ப: இரண்டாம் வேற்றுமைத் தொகை. ஆழி - ஆழ மானது என்பது பொருள்: கடல். (கக)

## நளமன்னன் வரலாறு

### நிடத நாட்டுச் சிறப்பு

கஉ. காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலும் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டும் நாடு.

(இ - ள்.) சாகரம் சூழ் நல் நாட்டின் முன் நாட்டும் நாடு - கடல் சூழ்ந்த நல்ல நாடுகளில் முதன்மையானதெனக் குறிப்பிட்டுரைக்கும் நிடத நாடானது, காமர் கயல்புரள - அழகிய கெண்டை மீன்கள் பிறழ்ந்து வருதலாலும், காவிமுகை நெகிழ - கருங்குவளைகளின் அரும்புகள் விரிதலாலும், தாமரையின் செந்தேன் தளை அவிழ - செவ்வியான தேனையுடைய தாமரை அரும்புகள் மலர்தலாலும், பூமடந்தைதன் நாட்டம் போலும் தகைமைத்து - திருமகளின் கண்களை யொத்த சிறப்பு வாய்ந்தது

(க - து.) நிடதநாடு திருமகளின் கண்களைப்போன்ற சிறப்பினையுடையது.

(வி - ரை.) கயல்மீன்களின் பிறழ்ச்சியும், கருங்குவளை தாமரைகளின் கட்டவிழ்ந்த மலர்களின் காட்சியும் திருமகளின் கண்ணிலுள்ள வெண்ணிறம் கருநிறம் செந்நிறம்போல் கண்டார் வியக்குமாறு தோன்றுகின்றன. இவைகள் அந்நாட்டில் யாங்கணும் இருத்தலால், அந்நாடு நிலவளனும் நீர்வளனும் மிக்கதாயிற்று. அங்கே மழைபெய்து மாதிரங் கொழுப்ப விளைவுமல்கி, அந்நாட்டில் பசியும் பிணியும் நீங்கி, வசியும்வளனும் சுரந்து நிற்கின்றது.

பூமடந்தை என்பதற்கு நிலமகள் என்று பொருள் கொள்ளலுமாம். அயோத்தி நகரைப் புகழ வந்த கம்பநாடர்,

[1]"நிலமகள் முகமோ திலகமோ கண்ணோ
நிறைநெடு மங்கல நாணோ.'

என்று நிலமகளின் முகமாகவும் கண்ணாகவும் கூறுவது காண்க.

---

1. கம்பராமா, நகர : ~ .

நாட்டம் - கண் : நாடுதலையுடையது என்பது பொருள்.

சாகரம் - கடல்: சகரர்களால் தோண்டப்பட்டதென்பது புராணக் கதை. "சகரர் தொட்டலால் சாகரம் எனும் பெயர் தழைப்ப, மகரவாரிதி சிறந்தது' என்பது கம்பர் காட்டும் உண்மை. (கஉ)

மாவிந்த நகரச் சிறப்பு

உ௦. கோதை மடவார்தம் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீதக் களபச் செழுஞ்சேற்றால்—வீதிவாய்
மானக் கரிவழுக்கும் மாவிந்தம்[2] என்றுளதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

(இ - ள்.) கோதை மடவார்தம் கொஙகைமிசை திமிர்ந்த - பூமாலையணிந்த இளம்பெண்களின் மார்பிடத்தில் பூசப்பெற்ற, சீத களப செழும் சேற்றால் - குளிர்மையுள்ள கலவைச் சாந்தாகிய வளமுள்ள குழம்பினால், வீதிவாய் மானக்கரி வழுக்கும் - தெருக்களில் பெரிய யானைகள் (கால்) சறுக்குகின்ற, மாவிந்தம் என்று உளது - மாவிந்தம் என்னும் பெயருடையதாக உள்ளது, ஞான கலைவாழ் ஓர் நகர் - உண்மையறிவுக் கலை செழித்திருக்கின்ற ஒரு நகரம்.

(க -று) நிடத நாட்டில் ஞானநூல் வலலார் மிக்கிருக்கின்ற மாவிந்தம் என்னும் ஒரு நகரம் உள்ளது என்பதாம்.

(வி - ரை.) கோதைமடவார் என்றமையால் இளமை நலமிக்க பெண்கள் என்பது பெறப்பட்டது. அவர்கள் நாள்தோறும் நீராடும்போது அவர்கள் பூசியிருந்த கலவைச சாந்துகளே எங்கும் சேறாக நிறைந்து அச்சேற்றில் உருவினும் வலியினும் பெரிதான யானைகள்கூடக் கால் வழுக்குமென றமையால், அந்நாட்டுச செல்வ வளனும் மகளிர் ஒப்பனை செய்துகொள்ளும் திறனும் கூறியவாறாயிற்று. ஒரு நாடு செல்வத்திற் சிறந்ததென்பதற்கு எடுத்துக் காட்டாக அந்நாட்டு மக்களைத் தோற்றத்தாலும் ஆடை அணி முதலிய புனைபொருள்களாலும் அறியலாம். அதினும் பெண்களே அவைகளைப் புனைந்து கோலங் கொள்வராதலால், அதனை மடவார்மேல் வைத்துக் கூறினார். அந்நகர் செல்வ வளத்தோடு உண்மைக் கல்வியும் பெற்ற நகர் என்பாராய் 'ஞானக்கலை வாழ் நகர்' என்றார். ஞானம் மெய்யறிவு அங்கே போலிக்கலை இல்லை. உண்மைக் கலையில் வல்லுநரே உள்ளனர் என்பதை நகரின் மேல்

1. கம்ப. அகலிகை : சஙு. (பாடம்) 2. என்பது.

வைத்துக் கூறினார். எனவே அங்குச் செல்வமும் கல்வியும் சிறந்திருப்பதால் செல்வச் சிறப்பினால் வருந்தி வந்தவர்க்கீதலும் விருந்து புறந்தருதலும் அருந்தவரைப் பேணுதலுமாகிய அறமும், கல்விச் சிறப்பினால் ஆடலும் பாடலும் அரும்பொருள் ஆய்தலும் கற்றலும் கேட்டலும சிறந்து களிப்புமிக்கவர்களாக இன்பவாழ்வும் பெற்று வாழும் சிறப்பும் குறித்தார் ஆயிற்று. எனவே அந்நகரின் கல்வி செல்வப் பெருமிதங்களைச் சுட்டிக் காட்டியவாறும்.

### அந்நகர் மாடங்களின் பெருமை

உக. நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்றும் அகில்கமழும் என்பரால்—தென்றல்
அலர்த்தும் கொடிமாடத் தாயிழையார் ஐம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து.

(இ - ள்.) தென்றல் அலர்த்தும் கொடிமாடத்து - தென்றற் காற்று விரித்து அசைக்கின்ற கொடிகள் கட்டியுள்ள மாளிகைகளில், ஆய் இழையார் ஐம்பால் புலர்த்தும் புகை வான் புகுந்து - (தமக்கேற்ற அணிகளை) ஆராய்ந்தெடுத்து அணிந்துள்ள பெண்கள் தம் கூந்தலுக்கு ஊட்டும் புலர்த்தும் நறும்புகை வானிடமெல்லாம் சென்று நிறைந்திருப்பதால், வானம் நின்று புயல் பொழிந்த நெடும்தாரை - வானத்தில் பரவி நின்று மேகங்கள் பெய்த நீண்ட மழைத்தாரைகள் யாவும், என்றும் அகில் கமழும் என்பர் - எக்காலத்தும் அகிலின் நறுமணம் கமழ்ந்து கொண்டே இருக்குமென்பார்கள்.

(க - து) அந்நகர் மேல்மாடங்களினின்றெழும் புகையினால் மழைநீர்த்தாரையும் அகில்மணங்கமழும் என்பதாம்.

(வி - ரை) 'நின்று புயல் வானம்' வானம் நின்று புயலெனக் கொண்டு கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. நெடுந்தாரை: பண்புத்தொகை. மண்ணிடம் அந்நகரில் கலவைச் சேறால் நிரம்பியது. விண்ணிடம் அகிற்புகையால் நிரம்பியது. மேலும் வீழும் மணங்கமழ்ந்து கொண்டேயிருக்கும் பெற்றியது மாவிந்த நகரம் என்று அதன் செல்வ மேன்மை இங்கும் விரித்துரைத்தவாறும். (கசு)

### அந்நகர் மக்களின் சிறப்பு

உஉ. வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன—கஞ்சம்
கலங்குவன மாளிகைமேல் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு.

(இ - ள்.) கோடுவன - கோணியிருப்பன, வெஞ்சிலையே (அந்நகரில் எவரும் இல்லையாகையால்) கொலைத்தொழிலுடைய விற்களே, சோருவன - தளர்ந்திருப்பன, மென்குழலே - (அந்நகரில் வேறு எவரும் இல்லையாகலான்) மெல்லிய (பெண்களின்) கூந்தலே, வாய்விட்டு அரற்றுவன - வாய்திறந்து கதறுவன, அம்சிலம்பே - (அந்நகரில் வேறு எவருமில்லையாகலான்) பெண்களின் காலிலணிந்துள்ள அழகிய தண்டைகளே, கலங்குவன - கலக்கமடைவன, கஞ்சம் - (அந்நகரில் வேறு எவருமில்லையாகலான்) தண்ணீரே, மெய்நெறியை விட்டு விலகுவன - உண்மை வழியைவிட்டு விலகிப்போவன, காரிகையார் கண்ணே - (அந்நகரில் வேறு எவருமில்லையாகலான்) பெண்களின் கண்களேயாகும்.

(க - ரு) அந்நகரில் குற்றமுள்ளோருந் தளர்வோரும் புலம்புவோரும் கலங்குவோரும் நல்ல நெறியைவிட்டு விலகி நடப்போரும் ஒருவருமிலர் என்பதாம்.

(வி - ரை.) வெஞ்சிலை - கொடியவில்; கோடுதல் - வளைதல். அந்நாட்டில் ஒருதலைச்சார்பாய் நடுவின்றி நன்பொருள் அவாக் கொள்வாரில்லை என்றவாறும். சோர்தல் - தளர்ச்சியுறல்: தன்னிலை குலைதல் உள்ளார் யாருமேயில்லை எனக் குறித்தவாறும். எனவே மாவிந்தநகரில் குறையில்லாதவரே உள்ளனர் என்பதைக் குறிப்பால் உணர்த்தினார்.

கம்பர் தாம் ஆக்கியருளிய இராமாயணப் பெருங்காப்பியத்தில் அயோத்திநகரைக் குறிக்கும்போது,

[1]"எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே
இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ"

என்றார். அக்கருத்தைத் தழுவியே இவரும் இவ்வாறு கூறினரென்க. (கரு)

**அந்நகர் மக்களுள் கல்லாரும் இல்லாரும் இன்றெனல்**

உசு. தெரிவன நூல் என்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கள் மருங்கே—ஒருபொழுதும்
இல்லா தனவும் இரவே இகழ்ந்தவரும்
கல்லா தனவும் கரவு.

1 கம்பராமா, நகர: எச.

(இ - ள்.) என்றும் தெரிவன - (அந்நகரமாந்தர்) என்றைக்கும் ஆராய்ந்தறிவன, நூல் - (அறிவைப் புகட்டும் நல்ல) நூல்களேயாகும், தெரியாதனவும் வரிவளேயார் தங்கள் மருங்கே - (அவர்கட்குத்) தெரியாதவை பல்வகை வரிகள் அமைந்த வளேயலணிந்த பெண்களின் இடைகளேயாகும், ஒருபொழுதும் இல்லாதனவும் இரவே - எக்காலத்தும் இல்லாதவைகள் பிச்சையெடுக்கும் தொழில்களே யாகும், எவரும் இகழ்ந்து கல்லாதனவும் கரவு - எப்படிப்பட்டவரும் இகழ்ச்சிசெய்து கற்றுக்கொள்ளாதவைகளும் வஞ்சிக்கும் தொழில்களேயாகும்.

(க - ரு.) அந்நகரமாந்தர்கள் நல்ல கல்வியறிவுள்ளோர்; இரப்பதும், வஞ்சிப்பதும் இன்னவென்றே அறியாதவர்கள் என்பதாம்.

(வி - ரை.) 'தெரிவன நூல்' என்றார், அந்நகரமக்கள் யாவரும் கல்வி கேள்விகளிற் சிறந்தவரென்று குறித்தற்கு. அந்நகரில் இரப்போரும் வஞ்சித்துப் பொருள் கவருவோரும் இல்லை என்றார். எல்லா மக்களும் அன்பும் அறனும் கடைப்பிடித்தொழுகும் நலமிக்கார் என்றவாறாம். தெரிவன: வினையாலணையும்பெயர். இரவு - இரத்தல் யாசகம் வாங்குதல். இது மக்கட்பிறப்பின் மாண்பினைக் கெடுக்கும் தீமையாதலால், அந்நகரில் இரத்தல் முதலிய இழிந்த நிலை இல்லை யென்பாராய், 'இல்லாதனவும் இரவே' என்றார். இதனைத் திருவள்ளுவரும் தம் அறப்பெருநூலில், 'ஒருவனை இரந்தே வாழும்படி படைப்போன் படைத்திருப்பானானால், அப்படைப்புக்கடவுள் இறந்து தொலைக' என்று கடிந்து பேசுகின்றார். அப்பொன்னுரை:

"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்"[1]

என்பதாகும். (கசு)

அந்நகர் முரணை நகரை ஒத்ததெனல்

உச மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகும் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.

(இ - ள்.) பார் ஆளும் வேந்தன் பதி - நிடதநாட்டு மன்னனாகிய நளனுடைய மாவிந்த நகரை, தாமரையாள் வைகும் தடம்

1 திருக். க0சுஉ.

தோளான் - திருமகள் வீற்றிருக்கின்ற உயர்ந்த தோள்களையுடையானும், காமரு பூந் தாரான் - அழகிய பூமாலையை அணிந்தவனும், மாமனு நூல் வாழ வரு சந்திரன் சுவர்க்கி - சிறந்த மனுநீதி நூல் (உலகில்) மேம்பட வந்து பிறந்தவனுமாகிய சந்திரன் சுவர்க்கி என்பவனது, புரணை நகர்தான் என்று சாற்றல் ஆம் - புரணையம்பதி போன்றதென்றே இந்நகரை உயர்த்திச் சொல்லலாம்.

(க. - ரு.) மாவிந்த நகரத்தைச் சந்திரன் சுவர்க்கியின் புரணை நகரென்றே சொல்லலாம், என்பதாம்.

(வி - ரை.) இது, நூலாசிரியர் கூறுவது; வியாசர் கூறுவதன்று. இவரை ஆதரித்துப் புரந்துவந்த சந்திரன் சுவர்க்கியென்னும் அரசன் தமக்கு ஆற்றிய நன்றியை உணர்த்துவதற்கு இது போன்று பற்பல இடங்களில் அவனை இந்நூற்கண் புகழ்ந்து அவன்றன் பொன்றாப் புகழை உலகினுக்கு எடுத்துக் காட்டி நிலை நிறுத்துவர். சந்திரன் சுவர்க்கியென்னும் இவன், சோழ நாட்டுச் சிற்றரசன். இவன்றன் வேண்டுகோட்கிசைந்தே இந் நூலைப் பாடி அரங்கேற்றினார். இவன் நீதி தவறாது குடிமக்கள்பால் அன்பு காட்டி நாட்டை ஆண்டான் என்பதை 'மாமனு நூல் வாழ வரு சந்திரன் சுவர்க்கி' என்னும் தொடரினால் காட்டுகின்றார். இவன் இவர் போன்ற பல புலவர்களை ஆதரித்து வேண்டுவன நல்கிப் புரந்து வந்த அருளாளன் என்பதைக் கலிநீங்கு காண்டத்து, நளனைப் பற்றியிருந்த கலி அறவே நீங்கிச் சென்றுவிட்டதைக் குறிக்கு முவமையாக,

> 'வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
> தண்டார் புனைசந்திரன்சுவர்க்கி—கொண்டாடும்
> பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
> காவலன்பால் நின்ற கலி.' (௩அ)

'சந்திரன் சுவர்க்கி வேந்தனாற் கொண்டாடப்படுகின்ற பாவலன்பால் நின்ற பசிப்பிணி அறவே இல்லாமல் போவதுபோல், நளவேந்தன்பால் நின்ற கலி நீங்கினான்' என்று எவ்வளவு சிறப்பாகத் தம் நன்றி மறவாத நலத்தையும், தம்மைப் புரந்த அரசன் புகழையும் நிறுவிக் காட்டுகின்றார்.

இவ்வாறே கம்பநாடரும் தம்மைப் புரந்து வந்த சடையப்ப வள்ளலைத் தாம் ஆக்கியருளிய இராமாயணப் பெருங்காப்பியத்தில் இடம் நோக்கி ஆங்காங்கே அமைத்து அவர்தம் நன்றியைத் தெரிவித்திருப்பதும் இதனோடொப்பக் காண்க.

'மன்னவர் வறுமைநோய்க்கு மருந்தன
சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன
படைக்கலம் அருளினானே.'

என்பது அதில் ஒன்றாம்.

தாமரையாள் - திருமகள். 'தாளுளாள் தாமரையினாள்' என்பதினும் தாமரையாள் இப்பொருட்டாதலை அறிக. காமரு அழகு. காமர்: உகரச் சாரியை பெற்று வந்தது.

[3]'காமரு மடந்தையர் கடைதொறும் கடைதொறும்.'

எனக் குமரகுருபரர் திருவாரூர் நான்மணி மாலையில் அருளியதும் காண்க.

முரணை நகரை மாவிந்த நகருக்கு உவமை கூறினார். தாம் அறிந்த முரணை நகர் செல்வச் சிறப்பாலும் கல்விச் சிறப்பாலும் வெற்றி வீரம் மானம் கொடை முதலியன பல்கி யாவரும் வந்து தங்குதற்கு ஏற்ற தன்மை நிரம்பியதாக இருத்தல்போல, இந் நகரும் இருக்கின்றதென்று விளக்குவாராய் 'முரணை நகர்தான் என்று சாற்றலாம்' என்றார். இவ்வாறே கம்பரும் இராமன் கோசல நாட்டைவிட்டு முடிதுறந்து கானேகும்போது அந்நாடு எத்தகைத்து என்று கூறுங்கால்,

[4]'காவிரி நாடன்ன கழனிநாடு ஒரீஇ.'

என்று தாம் வாழ்ந்திருந்த சோழ நாட்டைக் கோசல நாட்டுக்கு உவமை கூறியது காண்க. (கஎ)

### அந்நகரை ஆண்டோன் நளமன்னன் எனல்

உ௫. ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாரும் செல்வப் பெடைவண்டோ—டூடா
முருகுடைய மாதர் முலைநனைக்கும் தண்தார்
அருகுடையான் வெண்குடையான் ஆங்கு.

(இ-ள்) ஆங்கு - (இத்தகைச் சிறப்பு வாய்ந்த) அந்நகரில், பீடு ஆரும் செல்வ பெடை வண்டோடு ஊடா - பெருமை பொருந்திய காதல் மிக்க பெண் வண்டு, ஆண் வண்டோடு பிணக்க முற்றதினால், முருகு உடைய - (மலரிலிருந்த) தேன் உடைபட்டு வழிந்

1. கம்ப ராமா, பால. வேள்வி: க. 2. திருக்குறள்: கூகஎ.
3. திருவாரூர் நான்: உ௫. 4. கம்ப ராமா, குகப்: க.

தோடு அருகு மாதர் முலை நனைக்கும் தண்தார் உடையான் - பக்கத்திலுள்ள பெண்களின் மார்பிடமெல்லாம் நனைக்கின்ற குளிர்ச்சி மிக்க மாலையை மார்பில் உடையவனும், வெண்குடையான் - வெண் கொற்றக் குடையையுடையவனும் ஆகிய, ஓடாத தானை நளன் என்று ஒருவன் உளன் - (பகைவர் படைக்கு அஞ்சிப் புறமுதுகிட்டு) ஓடாத, சேனைகளையுடைய நளனென்று சிறப்பித்துக் கூறப்படுகின்ற அரசன் ஒருவன் இருந்தான்

(கு - ரை.) அந்நகரில் படைவலிமை மிக்க நளன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான் என்பதாம்.

(வி - ரை.) 'வீடாரும் செல்வம்' என்றது உண்மைக் காதலை. உயர்ந்த பொருள்களைச் 'செல்வம்' என்று பாராட்டுவது நம் தமிழ்ச் சான்றோர் மரபு. வள்ளுவர்,

[1]'அருட் செல்வம் செல்வத்துட் செல்வம்.'

என்றும்,

[2]'கேடில் விழுச் செல்வம் கல்வி.'

என்றும்,

[3]'செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்.'

என்றும்,

[4]'பொருளென்னும் செல்வச் செவிலி.'

என்றும், அருள், கல்வி, கேள்வி, பொருள் முதலியவற்றை யெல்லாம் செல்வம் என்றார். அவர்தம் வழிவந்தவரான இவர், காதலைச் 'செல்வம்' என்றார். இச் செல்வம் உலகியலை ஒழுங்குற நடத்திச் செல்லும் சிறப்புடையது; ஆண் பெண் இரு பாலாரின் உள்ளத்தை ஒருமைப் படுத்தி உயர்வுதரும் பண்புடையது. இத் தகைக் காதலை உயர்த்துவது, நிலைத்திருக்கச் செய்வது ஊடல்; ஊடல் இன்றேல் காதல், கனியும் கருக்காயும்போல் செவ்வி கெடுதலால் அதனை உயர்த்துப் பேசப்பெறும். பெடை - பெண் வண்டு; வண்டு - ஆண் வண்டு. (கஅ)

**நளன், அறநெறியோடு அரசுபுரிந்தான் எனல்**

உகூ. சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை அறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியும் ஆடல் பருந்தும்
ஒருகூட்டில் வாழ உலகு.

1, 2, 3, 4. திருக்: உசக, சOO, சகக, எருஎ.

(இ - ள்.) தாது அவிழ் பூ தாரான் - மகரந்தப்பொடி சிந்துகின்ற மலர்மாலையை அணிந்த நளமன்னன், மாதர் அருகு ஊட்டும் பைங்கிளியும் - பெண்கள் தம் அருகில் (வைத்துக் கொண்டு பாலும் பழமும்) ஊட்டி வளர்க்கின்ற பச்சைநிறக் கிளியும், ஆடல் பருந்தும் - போராடுகின்ற பருந்தும், ஒரு கூட்டில் வாழ - ஒரே கூட்டிற்குள் (பகைமை நீங்கி) வாழும்படி, சீதம் மதி குடைகீழ் குளிர்ந்த தண்நிலவுபோன்ற வெண்கொற்றக்குடை நிழலிடத்து, செம்மை அறம் கிடப்ப - சிறந்த அறங்கள்நிலைத்துநிற்க, உலகு தனி காத்தான்-தான் ஆளுகின்றநாட்டைத் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாமல் ஆண்டுவந்தான்.

(க - ரு.) நளன், கிளியும் பருந்தும் பகையின்றி ஒரேகூட்டில் வாழுமாறு அறமுறை தவறாமல் அரசாட்சி செய்தான்.

(வி - ரை.) சீதமதி - குளிர்ந்த திங்கள். குடைக்கீழ் - இதிலுள்ள கீழ் என்னுஞ் சொல் அதன் நிழலை உணர்த்திற்று. கிளியும் பருந்தும் ஒரு கூட்டில் வாழ்தலாவது, அவை ஒன்றுகொன்று பகைமையுடையன; இம்மன்னன் ஆட்சிமுறையினால் ஐயறிவுயிரினமான இவைகளே, பகையின்றி வாழ்வனவாயின், ஆறறிவு படைத்த மக்களானவர் மனமொத்து வாழ்தல சொல்லவேண்டா என்னும் குறிப்புத் தோன்றக் கூறியதை நோக்குக. இவவாறே இளங்கோவடிகளும் பாண்டிய மன்னர்தம் செங்கோற் சிறப்பைக் கூறப் போந்தகாலை,

"அரவும் சூரும் இரைதேர் முதலையும்
உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா
செங்கோல் தென்னவர் காக்கும் நாடு.'[1]

என அருளியதும், கம்பநாடர் தசரதமன்னன் நெறிதவறா ஆட்சியைச் சிறப்பிக்குங்கால்,

"வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசையர்
உள்ளமும் ஒருவழி ஓட நின்றவன்
தள்ளரும் பெரும்புகழ்த் தசரதன்.'[2]

என்று அருளியதும் இதனோடு ஒத்த கருத்தாதலை அறிக. தனிக்காத்தல் - தன்னொவார் பிறரன்றித் தானே காத்தல் என்பதாம். பசுமை + கிளி - பைங்கிளி எனவந்தது, பண்புப்பெயராகலான் என்க. (கக)

1. சிலப்: கரு: எ-சு. 2. கம்பராமா, பால, அரசியற்: சு.

**நளன் பூங்காவனத்துக்குச் சென்றான் எனல்**

௨௭. வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான்-தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

(இ-ள்.) தேம் குவளை தேன் ஆடி வண்டு சிறகு உலர்த்தும் நீர்நாடன் - இனிமையுள்ள குவளைமலரின் தேனில் குளித்து முழுகி எழுந்து வண்டுகள் தம் சிறகுகளை உலர்த்துகின்ற நீர்வளம் பொருந்திய நிடதநாட்டு மன்னனான நளன், பூநாடி சோலை புக - பூக்கள் கொய்துவர விரும்பிச் சோலைக்குட் செல்லுங்கால், வாங்கு வளை கையார் வதனமதி பூத்த - வளைவான வளையலை யணிந்த மகளிரின் முகமாகிய நிலவினிடத்து மலர்ந்துள்ள, குவளை பூ காடு இடையே போயினான் - (கண்களென்னும்) நீல மலர்க்கூட்டத்தின் நடுவிலே சென்றான்.

(க-ரு.) நளன், பெண்களின் கண்கள் தன் அழகையே விரும்பிப் பார்த்துக்கொண்டிருக்கப் பூங்காவனம் நோக்கிச் சென்றான் என்பதாம்.

(வி-ரை.) வாங்குவளை விலைகொடுத்து வாங்குகின்ற வளை எனவும், காதலால் உடலுறுப்புகள் மெலிய அதனால் கழன்று விழுகின்ற வளை எனவும் பொருள் கூறலுமாம். காதல் மிகுதியால் வளைகள் கழன்று விழுமென்பதைத் திருவள்ளுவர் 'உறுப்பு நலன் அழிதல்' என்னும் அதிகாரத்தில்,

"பணைநீங்கிப் பைந்தொடி சோரும் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்."[1]

என அருளுதலுங் காண்க. நளன் அழகில் ஈடுபட்டு இமை கொட்டாமல் விழித்தகண் விழித்தபடியே நிற்கும் இளநங்கையர் தம் கண்களை 'வதன மதி பூத்த பூங்குவளைக் காடு' என்றார். கருங்குவளை நீரினன்றி நிலவிடத்தும் பூத்தன வென்று வியப்பணி தோன்றவுரைத்தார். குவளைமலர்த்தேனை வண்டுகள் உண்டு மயங்கி மேலெழுந்து சிறகுலர்த்தும் என்றதனால் நிடத நாட்டு நீர்வளனும் நிலவளனும், இவ்வளங்களால் நாட்டுச் செல்வ வளனும் குறித்தனரென்க. வண்டுகள் தேனுண்டு முழுகும் என்பதைச் சேக்கிழார் தடுத்தாட்கொண்ட புராணத்தில்,

1. திருக். ௧௨௩௪.

"...குண்டகழ்க் கமல வண்டலர் கைதைத்
துன்ற நீறுபுனை மேனியவாகித்
தூய நீறுபுனை தொண்டர்கள் என்ன.'[1]

என்ற அருளியதும் இக் கருத்துடன் ஏற்ற பெற்றி அமைந்திருத்தல் காண்க. குவளை - உவமஆகுபெயராய்க் கண்களைக் குறித்தது. பார்வை நளன்மேற்பட்டு விலகாமல் இருப்பதைக் காடு என்று வியப்புப்பெறக் குறித்தார். போயினான் - சென்றான்: இறந்தகால வினையாலணையும் பெயர். இது, நாடனென்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் வந்தது. (உ0)

## நளன் சென்ற காலம் இளவேனில் எனல்

உ௧. வென்றி மதவேடன் வில்லெடுப்ப வீதியெலாம்
தென்றல் மதுநீர் தெளித்துவர—நின்ற
தளவேனல் மீதலரும் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனில் வந்த தெதிர்.

(இ - ள்) நின்ற தளவு ஏனல்மீது அலரும் - (முல்லை நிலத்தில்) வளர்ந்த முல்லைக்கொடி பற்றிப் படர்ந்து (குறிஞ்சி நிலத்தில் வளர்ந்துள்ள) தினைத்தட்டையின் மீது மலர்கள் பூக்கின்ற, தாழ்வரை சூழ் நாடற்கு எதிர் - மலைச்சாரல் சூழ்ந்த நிடதநாட்டு மன்னனாகிய நளனுக்கு எதிரில், வென்றிமதவேள் தன் வில் எடுப்ப மன்மதனாகிய வன் வெற்றிமிக்க தன் (கரும்பு) வில்லைத் தாங்கி வரவும், தென்றல் வீதி எலாம் மதுநீர் தெளித்துவர - தென்றற் காற்றானது தெருக்கள்தோறும் மலர்த்தேனாகிய நீரைச் சிதறிக்கொண்டு வரவும், இளவேனில் வந்தது - இளவேனிற் பருவம் வந்துற்றது

(க - து.) மன்மதன், தன் வில்லெடுத்தும், தென்றல், நீர் தெளித்தும்வர, இளவேனிற் பருவமானது நளமன்னனை எதிர்கொண்டு வந்தது என்பதாம்

(வி - ரை.) வென்றி - வெற்றி: இங்கே மெலிந்து நின்றது. இளவேனிற் காலத்தில் மரஞ்செடி கொடிகள், தளிர்த்து அரும்பு கொண்டு மலர்வது இயற்கை. அம் மலர்களிலுள்ள தேன்களைச் சிறு சிறு துளிகளாகச் சிதறித் தென்றல் எங்கும் பரப்புவதும், அக்காலத்துப் பருவம் வாய்ந்த ஆடவர்க்கும் மகளிர்க்கும் காதல் கைம்மிகுமாகலின், அக் காதற் கடவுள் மன்மதன் காலத்துக்

---

1. பெரியபுரா, தடுத்தாட் · கக.

கேற்ற தன்மையில் உணர்ச்சியை ஊட்டுவான் என்பதைக் கொண்டு 'மதவேடன் வில்லெடுப்ப வீறியெலாம் தென்றல் மதுநீர் தெளித்துவர' என்றார். மதவேடன் மன்மதனாகிய வேடன் என்றலுமாம் வில்லெடுப்போன் வேடன் ஆதலால். தளவு - முல்லைச்செடி. அது காட்டில் வளர்வது; தினை - தினையென்னும் ஒருவகைப் புல், மக்கட்கும் மற்ற உயிர் வகைகட்கும் உணவாகக் கொள்ளப்படுவது. அது, மலைசாரலில் உண்டாவது. முல்லைக்கொடி அதன்மேற் படர்வதென்பது, முல்லைநிலக் கருப்பொருள் குறிஞ்சிநிலக் கருப்பொருளோடு கலப்பதால் ஒன்றாகச் சேருவதாயிற்று இதனை ஆன்றோர் திணைமயக்கம் எனபர். இதனைத் திருவிளையாடற் புராண ஆசிரியரும் தாம் ஆக்கிய திருவிளையாடற்புராண நாட்டுப்படலத்தில் ஒரு நிலப்பொருள் மற்றொரு நிலத்தில் வந்து ஒன்றாகக் கலப்பதை மிக அழகுற அமைத்துள்ளார். அதில் ஒன்று:

[1] ஆறு சூழ்கழிப் புலால்பொரு தசைந்துகூன் கைதை
சோறு கால்வன ஆம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறு வார்எனத் தவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வார்எனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை.

இதில், நெய்தல் மருதம் குறிஞ்சி முல்லை என்னும் நானிலங்களின் கருப்பொருள்கள் கலந்திருத்தலை அறிக. விரிப்பின் பெருகுமாதலால் விடுத்தாம். எதிர்வருதல் - நளமன்னனுக்கு முன்பு தென்றல் தேன்துளிகளைத் தூற்றிப் போதல்: (உக)

**நளன் பூங்காவை அடைந்தான் எனல்**

உ௨. தேரின் துகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனல்நனைப்ப வேயடைந்தான்—நார்வண்டு
தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருள்வெய் யோற்கொதுங்கிப்
புக்கிருந்தால் அன்ன பொழில். [கிப்

(இ - ள்) தூங்கு இருள் வெய்யோற்கு ஒதுங்கி - மிக்க இருளானது சூரியன் ஒளிக்கதிர்களின் முன் விலகி, புக்கு இருந்தால் அன்ன - ஒளித்துக்கொண்டிருந்தாற் போன்ற, கார் வண்டு தொக்கு இருந்து ஆலித்து உழலும் பொழில் - கருநிற வண்டுகள் ஒன்றுகூடிக் களித்துச் சுற்றித்திரிகின்ற சோலையை, தேரின் துகளை திருந்து இழையார் பூ குழலின் - தன்னுடைய தேர்உருளைகளிற் படிந்த புழுதிமண்களைத் திருத்தமான அணிகள்

1. திருவிளை, நாட்டுப்: சக.

அணிந்த மகளிரின் பூச்சூடிய கூந்தலினின்று ஒழுகி வழிகின்ற, வேரி புனல் நனைப்ப அடைந்தான் - பூந்தேனென்னும் நீர் நனைத்துக் கரைக்கும்படி (நளன்) போய்ச் சேர்ந்தான்.

(க - து.) பெண்கள் கூந்தலில் முடித்த பூந்தேன் தன் தேர்க்காலின் புழுதிகளைக் கரைக்க நளமன்னன் சென்று பூங்காவை அடைந்தான்.

(வி - ரை.) தேரின் துகள் - தேரிடத்துள்ள புழுதி. தேர்- ஆகுபெயராய் அதன் உருளைகளை உணர்த்திற்று. வேரி - தேன். தூங்கு இருள் - விலகாத இருளென்று கூறலுமாம். சோலை மரங்களின் நெருக்கத்தினால் வெளிச்சமின்றி இருட்டி இருப்ப தானது அங்கே, ஞாயிற்று ஒளிக்கதிர்கள் தம்மை வெருட்டும் என்னும் அச்சத்தால் தனியிடம் பார்த்து, அக் கதிர்கள் நுழையாத இடத்தில் இருள் ஒளிந்துகொண்டிருந்தது போன் றிருப்பதாகக் குறித்தார்.

[1]"பரிதியஞ் செல்வன் விரிகதிர்த் தானைக்கு
இருள்வளைப் புண்ட மருள்படு பூம்பொழில்.'

என்றும்,

[2]'வெயினுழைபு அறியாக் குயினுழை பொதும்பர்'

என்றும் கூறினார், மணிமேகலை ஆசிரியரும். (உஉ)

நளன்முன் அன்னம் வெளிப்பட்டதெனல்

௩௦. நீள்நிறத்தால் சோலை நிறம்பெயர நீடியதன்
தாள்நிறத்தால் பொய்கைத் தலம்சிவப்ப—மாண்நிறத்தான்
முன்னப்புள் தோன்றும் முளரித் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே ஆங்கு.

(இ - ள்.) ஆங்கு - அச் சோலையிடத்தே, மாண்நிறத்தான் முன் - மிக்க அழகுபடைத்த நளன் முன்பாக, அப்பு உள் தோன்றும் - நீரில் முளைத்தெழுகின்ற, முளரி தலைவைகும் - தாமரைமலரில் தங்கி வாழ்கின்ற, அன்னப்புள் - அன்னப் பறவை ஒன்று. (தன்) நீள் நிறத்தால் சோலை நிறம் பெயர - தன் உடலின் வெண்ணிறத்தினால் சோலையின் நிறம் வெண்ணிறங் காட்டவும், தன் நீடிய தாள் நிறத்தால் பொய்கை தலம் சிவப்ப -

1, 2. மணிமேகலை. ௪ : ௧-௨; ௫.

தன் கால்களின் செந்நிற மிகுதியினால் அங்குள்ள தடாகத்தின் நீருள்ள இடமெல்லாம் செந்நிறமாகக் காட்டவும், தோன்றிற்று - அங்கு வந்தது.

(க - து.) அச்சோலையிடத்தே அங்குள்ள தாமரை மலரில் வாழும் அன்னப் பறவை நளனுக்கு முன் தோன்றிற்று என்பதாம்.

(வி - ரை.) நீள் நிறம்: வினைத்தொகை. தாள் நிறம்: ஆறும் வேற்றுமைத் தொகை அன்னத்தின் உடலின் வெண்ணிற ஒளியும், கால்களின் செந்நிற ஒளியும் சோலையை வெண்ணிறமாகவும், நீர்நிலையைச் செந்நிறமாகவும் மாற்றிற்று. அதன் வெண்ணிறமும் காலின் செந்நிறமும் விளங்குதல் காண்க. அஃதாவது அன்னத்தின் சிறப்புக் கூறியவாறு. முளரி - முட்களையுடையதென்னும் பொருளாய்த் தாமரை மலரைக் குறித்தது: ஆகுபெயர். நிறத்தான்-மார்பையுடையான் என்று கூறலுமாம். அப்பு - நீர்: தொட்டால் ஒட்டுதலையுடையதென்பது பொருள். 'உள்'-, ஏழாம் வேற்றுமை இடப்பொருளுருபு, பிறிதின் கிழமைப் பொருளில் வந்தது. (உ௩)

நளன், அன்னத்தைப் பிடிக்கச் சேடி ஒருத்தியை ஏவுதல்

௩௪. பேதை மடவன்னம் தன்னைப் பிழையாமல்
மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்
கடித்துத்தான் முத்துமிழும கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா என்றான் பெயர்ந்து.

(இ - ள்.) மேதி குலம் ஏறி - எருமை மந்தை (கொல்லைகளில்) சென்று, மென் கரும்பை கோதி கடித்து - மெல்லிய கரும்புகளைக் கடித்துக் குதப்பி, முத்து உமிழும் (அவைகளுக்குள் இருக்கின்ற) முத்துக்களைக் கக்குகின்ற, கங்கை நீர் நாடன் - கங்கை நீர் வளமிக்க நிடத நாட்டு மன்னனாகிய நளன், பேதை பெயர்ந்து - (சேடி ஒருத்தியைப் பார்த்து) ஏ, பேதாய்! நீ போய், மட அன்னம் தன்னை பிழையாமல் பிடித்து தா என்றான் - இவ்விள அன்னத்தைத் தப்பிப்போக விடாமல் பிடித்துக் கொண்டு வந்து கொடு என்றான்.

(க - து.) நளன், தன் பக்கத்திலிருந்த சேடி ஒருத்தியை நோக்கி, 'இந்த இள அன்னத்தைத் தப்பாமற் பிடித்துக் கொண்டு வந்து கொடு' என்றான்.

(வி - ரை.) பேதை: அண்மைவிளி யாகலான் இயல்பாயிற்று.

'அண்மையின் இயல்பும் ஈறழிவும் சேய்மையின்'[1]

என்னும் நன்னூல் விதிகாண்க. மேதிக்குலம் - எருமை மாட்டுக் கூட்டம். நீர்வளத்தால் கரும்புகள் வளர்ந்து செழித்துள்ளன; அவைகளை எருமைகள் மென்று தின்னும்போது அவைகளின் கணுக்களிலிருந்து முத்துக்கள் உதிர்கின்றன. எனவே, கரும்பு மிகச் செழிப்புடன் வளர்ந்துள்ள நிலையைக் காட்டுகின்றது. முத்துக்கள் இருபது இடங்களிற் பிறப்பனவாக இந்நூலாசிரியர் அருளிய 'இரத்தினச் சுருக்கம்' என்னும் நூலால் அறியக்கிடக்கின்றது. ஆதலால், 'முத்துமிழும்' என்றார். அரசன் செங்கோல் முறையினால் நாடு செழிப்ப மழை பெய்து விளைவு மல்கும் திருநாடு எனப்பாராய்க், 'கங்கை நீர் நாடன்' என்றார். அரசன் செங்கோன் முறையினால் மழைபெய்யுமென்பதை,

[2]'மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயிர் எய்திற் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதகவு இல்.'

எனச் சிலப்பதிகாரத்தில் சேரன் செங்குட்டுவன் கூற்றாக இளங்கோவடிகள் அருளுமாற்றால் அறியப் பெறும். (௨௪)

### சேடிகள், அன்னத்தைப் பிடித்துவந்து அரசன்முன் வைத்தார் எனல்

௩௨. நாடிமட அன்னத்தை நல்ல மயிற்குழாம்
ஓடி வளைக்கின்ற தொப்பவே—நீடியநல்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.

(இ-ள்) நீடிய நல் பைங்கூந்தல் வல்லியர்கள் - நீண்டு நன்றாய்ச் செழித்து வளர்ந்த கூந்தலையுடைய பூங்கொடியொத்த சேடியர்கள், நாடி (அவ்வன்னத்தைப் பிடிக்க) விருப்பமுற்று, மட அன்னத்தை நல்ல மயில்குழாம் ஓடி வளைக்கின்றது ஒப்ப - அந்த இள அன்னத்தை அழகான மயிலின் கூட்டங்கள் ஒன்றுபட்டு ஓடிச் சென்று வளைப்பதுபோல் வளைந்து, பற்றிக்கொடு போந்து - பிடித்துக்கொண்டு வந்து, தம் கோவின் முன் தாழ்ந்து வைத்தார் - தம் வேந்தனாகிய நளனுக்கு முன்பாக வணங்கி நின்று வைத்தார்கள்.

1. நன்னூல்: ௩௧௩. 2. சிலப்பதி, ௨௫ : ௧௦௦-௪.

(க - ரை) மயிலின் கூட்டங்கள் ஒன்றுகூடி வளைப்பதுபோல் அன்னத்தை வளைந்து பிடித்துத் தம் வேந்தன் முன் வணங்கி நின்று வைத்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) பறவையைப் பிடிப்பார் மற்றொரு பறவையைக் கொண்டே பிடிப்பார் ஆகலான், மயிற் பறவையின் சாயல் படைத்த மெல்லியலார், அன்னப் பறவையைப் பிடித்துக்கொண்டு வந்தனர் என்னும் நயந்தோன்றுதல் காண்க. அம் மங்கையர் அன்னத்தைப் பிடிக்குங்கால் கூந்தல் அவிழ்ந்து தொங்க அசைய ஆடைகள் குலைய இடை நுடங்க ஓடிப் பிடித்தாராகலாதலின், 'பைங்கூந்தல் வல்லியார்கள்' என்று கூறினார். அரசர் முன்னிலையிற் பணிசெய்வோர் அஞ்சி ஒடுங்கிப் பணிபுரியவேண்டுமாதலால 'தாழ்ந்து வைத்தா'ரென்றார். வல்லிக்கொடி போன்ற பெண்களை வல்லி என்றது, ஆகுபெயர். புகுந்து - போந்து என மரூஉமொழியாயிற்று. கொண்டு என்பது, கொடு என இடைக் குறைந்து நின்றது. அரசன், ஒருத்திக்கு அன்னத்தைப் பிடித்துக் கொணரும்படி கட்டளையிட்டான். ஆயினும் அவன்றன் அருளைப் பெறும் பொருட்டுச் சேடிப்பெண்கள் பலர் சென்று அன்னத்தைப் பிடித்தனர் என்க. (உ௫)

அரசனைக் கண்டு அன்னம் அஞ்சி வருந்துதல்

உ௬. அன்னம் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே—அன்னம்
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

(இ - ள்.) ஆய் இழையார் - ஆராய்ந்தெடுத்த வளையலணிந்த சேடிப்பெண்கள், அன்னம் த(ன்)னைப் பிடித்து அங்கு கொண்டு போய் அன்னத்தை அங்கே பிடித்துக்கொண்டு சென்று, மன்னன் திருமுன்னர் வைத்தலும் - அரசனுடைய முன்னிலையில் வைத்தவுடனே, அன்னம் -, தன் உடைய வான்கிளையைத் தேடி மலங்கிற்று - தன்னுடைய சுற்றமாகிய மற்ற அன்னங்களைக் காணாமல் தேடி வருந்தமுற்று, மன்னவனைக் கண்டு கலங்கிற்று - அரசனைப் பார்த்து மனக்கலக்கம் கொண்டது.

(க - ரை.) அன்னப் பறவையைச் சேடிகள் பிடித்துக் கொண்டுபோய் அரசன்முன் வைத்தலும் அது தன் கிளையைத் தேடி வருந்தி அரசனைக்கண்டு அஞ்சி மயங்கிற்று என்பதாம்.

(வி - ரை.) திருமுன்னர் என்பது அரசன் செல்வச் சிறப்பாலும், வெற்றிமேம்பாட்டினாலும் கொடை அளி செங்கோல் குடிஓம்பல் முதலிய அறநெறி முறையிற் சிறந்திருத்தலாலும் அவன் முன்னிலையைச் சிறப்பித்துக் கூறியவாறாம். திரு என்னும் சொற்குத் திருச்சிற்றம்பலக் கோவையாருக்கு உரைகண்ட பேராசிரியர், [1]'கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' என்று கூறியதும் காண்க.

மலங்குதல் - வருந்துதல். கலங்குதல் - மனவுணாவு குறைதல். மன்னவன் வேட்டமாடுதலானும் போர் முதலியன புரிந்து வீரத்திற் சிறந்திருத்தலானும், மறங்கடிந்து அறத்தைப் பாது காக்கக் கொலையிற் கொடியாரை ஒறுத்தலானும் தன்னை என் செய்வானோ என்று அன்னம் எண்ணி வருந்தியதாதலான் 'மன்னவனைக்கண்டு கலங்கிற்று' என்றார். 'மலங்கிற்று' என்பதை முற்றெச்சமாகக் கொண்டு பொருள் கூறப்பெற்றது: வினைமுற்றாகக் கொள்ளினுமாம். (உரு)

நளன் அன்னத்தை அஞ்சாதே என்று கூறல்

௩௪. அஞ்சல் மடஅனமே உன்றன் அணிநடையும்
வஞ்சி அனையார் மணிநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகாண் என்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்.

(இ - ள்.) களி வண்டு மாண பிடித்த தார்மன் - தேனுண்டு களிகொள்ளும் வண்டினங்கள் மிகுதியாக மொய்த்துள்ள மலர் மாலை யணிந்த நளமன்னன், மட அ(ன்)னமே -, அஞ்சல் - அஞ்சாதே, உன் தன் அணிநடையும் - உனது அழகிய நடையும், வஞ்சி அனையார் மணி நடையும் - வஞ்சிக்கொடி போன்ற மங்கையரின் சிறந்த நடையும், விஞ்சியது காண பிடித்தது காண் என்றான் - (இவைகளுள்) எந்நடை சிறந்தது என்று கண்டு தெளியும் பொருட்டே உன்னைப் பிடித்துக்கொண்டு வந்ததன்றி வேறில்லை நீ தெரிந்துகொள் என்றுரைத்தான்.

(க - ரை.) நளமன்னன், 'அன்னமே! நீ அஞ்சாதே; உன்னைப்பிடித்தது, உன் நடை சிறந்ததா? மங்கையர் நடை சிறந்ததா? என்று அறிவதற்கே, காண்பாயாக' என்றான்.

---

1. திருக்கோவையார், க. பாட்டு உரை.

(வி - ரை.) அஞ்சல் - அஞ்சாதே என்னும் பொருள் தரும் அல்லீற்று வியங்கோள். இஃது உடன்பாட்டினும் எதிர்மறையினும் வரும்;

"பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி எனல்.'

என வரும் திருக்குறளில், அவவிரண்டும் முறையே எதிர்மறை - உடன்பாடாக வந்தன காண்க.

மட அனம் இளமைச் செவ்வியும் அழகும் மிக்க அன்னம் என, அதன் உயர்ந்த அழகில் கவர்ச்சி தருதலைக் கூறியவாறும். அணி, மணி என்பன, அழகு என்னும் பொருள் தந்து நின்றன. 'களிவண்டு மாணப்பிடித்த தார்மன்' என்பது, அரசன் தண்ணளியுடையான் என்பதைக் குறிப்பாக் காட்டிய குறிப்புச் சொல். (உஎ)

அன்னம் அச்சம் நீங்கல்

௩௫ செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம்—வெய்ய
அடுமாற்றம் இல்லா அரசன்சொல் கேட்டுத்
தடுமாற்றம் தீர்ந்ததே தான்.

(இ - ள்.) செய்ய கமல திருவை நிகர் ஆன - செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளைப் போன்றவளான, தையல் பிடித்த தனி அன்னம் - சேடிப்பெண் பிடித்துக்கொண்டு வந்த ஒப்பற்ற அழகுடைய அன்னப்பறவை, வெய்ய அடு மாற்றம் இல்லா-கொடுமையான கொல்லுதல் தன்மையில்லா மாறுபாடற்ற, அரசன் சொல்கேட்டு - நள மன்னனின் (இனிய) சொற்களைக் கேட்டு, தடுமாற்றம் தீர்ந்தது - மனக்கலக்கம் தீர்ந்தது.

(க - ரு.) அன்னம், நளனுடைய இனிய சொற்களைக் கேட்டு அச்சம் நீங்கியிருந்தது என்பதாம்.

(வி - ரை.) செய்ய - செம்மையென்னும் பண்படியாகப் பிறந்த பெயரெச்சம். கமல திரு - தாமரை மலரில் வாழ்கின்ற திருமகள். அழகும் இளமையும் மிக்க பெண்டிர்க்குத் திருமகளை உவமங்கூறுதல் தமிழ்ச்சான்றோர் மரபு. ஆதலால், 'திருவை நிகரான தையல்' என்றார்.

1. திருக் : ககூ.

"[1] திருவினும் நல்லாள் மனைக்கிழத்தி யேனும்.'

என்று குமரகுருபர அடிகளார் நீதிநெறி விளக்கத்தில் கூறுவதுங் காண்க. அடுமாற்றம் - அடுதற்கான மாறுபாடு: கொல்லத்தக்க பகைமை. இல்லா - இல்லாத என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அடுமாற்றம் · தொழிற்பெயர்; ஒரே சொல். எயும் தானும் அசைச் சொற்கள். (உ.வே.)

அன்னம், நளனுக்குத் தமையந்தியைப்பற்றிக் கூறல்

௧௯ திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே உன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள் — வசையில்
தமையந்தி என்றோதும் தையலாள் மென்றோள்
அமையந்தி என்றோர் அணங்கு.

(இ - ள்.) திசை முகந்த வெண் கவிகை தேர் வேந்தே எட்டுத் திக்குகளிலும் பரவிய வெண்கொற்றக் குடையை யுடைய தேரினையுடைய மன்னனே!, உன்தன் இசைமுகந்த தோளுக்கு - உன்னுடைய புகழ்மிக்க தோள்களுக்கு, மென் தோள் அமை அந்தி என்று ஓர் அணங்கு - மெல்லிய தோள்களாகிய மூங்கில் அழகி என்னும் ஒப்பற்ற தெய்வமகளாகிய, வசை இல் தமையந்தி என்று ஓதும் தையலாள் - குற்றமற்ற தமயந்தி என்று பெயர் கூறப்படுகின்ற ஒருத்தி, இசைவாள் - பொருத்த முடையவளாவாள்.

(க - து.) அன்னம் நளனைப் பார்த்து, 'வேந்தே! உன் இசைமுகந்த தோளுக்கு மூங்கில் போன்ற தோளு ளுடைய தமயந்தியே ஏற்றவளாவாள்,' என்றது.

(வி - ரை.) நளமன்னன், திசைமுகந்த தோளழகன், தமயந்தி மூங்கில் போன்ற தோள் அழகினள்; இருவருக்குமே மணம் பொருத்தமாகும் என்றபடி. திருமணத்துக்கு நாட் குறிக்கும் முன, ஆட்பொருத்தம் பார்த்தல்வேண்டும் ஆகையால், தோட்பொருத்தம் கூறினர்.

திசை முகத்தல் - திக்குகளைத் தன்னிடத்தடக்குதல். நள மன்னன் தன் ஆட்சிமுறையினால் எங்கும் புகழ் மணக்க இருந்து ஆண்டான் என்பது குறிப்பு. கவிகை - கவித்தலையுடைய தென்னும் பொருட்டாய் ஈண்டுக் குடையைக் குறித்தது; கிலை, புதையல், படை என்பனபோல.

---

1. நீதிநெறி : ௮௦.

தமையந்தி: ஐகாரம் இடைப்போலி; எதுகை நோக்கி வந்தது. அணங்கு: அணங்குபோல்வாளாகிய தமயந்தி என விரித்துப் பொருள்கொள்ளக்கிடத்தலால் உவமவாகு பெயர். அந்தி அந்தத்தை (அழகை) உடையாள். அந்தம் - அழகு; அதனையுடையாள் அந்தி யெனப்பட்டாள். (௨௯)

**'தமயந்தி, யார் மகள்?' என்று நளன் அன்னத்தை வினவல்**

௩௦. அன்னம் மொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச் சொன்னமயில்
ஆர்மடந்தை என்றான் அனங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து.

(இ - ள்.) அன்னம் மொழிந்த மொழி புகாமுன் - அன்னப் பறவை எடுத்துக்கூறிய அச்சொல் தன் செவியில் நன்கு நுழையும் முன்பே, மனக்கோயில் கன்னிபுக்கு கைக்கொள்ள - தன் மனமாகிய கோவிலுக்குள் தமயந்தி சென்று (அதைத்) தனக்குரிமையாக்கிக் கொண்டதனால், அனங்கன் சிலைவளைப்ப - மன்மதன் தன் கரும்புவில்லை வளைத்து அம்பு தொடுத்தெய்ய, பார்மடந்தை கோமான் பதைத்து - நிலமகளுக்குத் தலைவனான நளன் துடிதுடித்து (காதலால் மயக்கமுற்று), சொன்னமயில் ஆர் மடந்தை என்றான் - நீ கூறிய மயிலனையாள் யார் பெற்ற மகளென்று வினவினான்.

(க - து.) அன்னஞ் சொன்னசொல் தன் காதில் படுமுன் 'அவள் யார் மகள்?' என்று நளன் அன்னத்தைக் கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) புகா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அனங்கன் - உடலற்றோன்: மன்மதன். சிலைவளைப்ப - எண்ணுக் காரியப்பொருட்டாய்வந்த செயவெனெச்சமாதலால், 'வில்லை வளைத்து அம்பு தொடுத்தெய்ய' என்று பொருள் கூறப்பட்டது. மயில்போன்ற சாயலுடையாளை மயிலென்றது ஆகுபெயர். கன்னி - கட்டழகுடையவள். பார்மடந்தை கோமான் - நிலமகளுக்கு முதல்வனானவன். இக்கன்னிக்காகப் பதைத்து நின்றான் என்னும் நயம் தோன்றுகின்றது. ஆர்: யார் என்பதன் மரூஉ; யானை - ஆனை; யாறு - ஆறு; யாடு - ஆடு என்பன போலக் கொள்க. (௩௦)

### அன்னம், தமயந்தி வீமராசன் மகள் எனல்

௩௮. எழுவடுதோள் மன்னா இலங்கிழையோர் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை—உழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயும் மாடொலிநீர் நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு.

(இ - ள்) எழு அடு தோள் மன்னா - தூணைவென்ற தோள்களையுடைய வேந்தே,[1] இலங்கு இழை - (நான் சொன்ன அந்த) ஒளியெறிக்கின்ற அணிகளையணிந்த பெண்ணானவள், உழுநர் ஏர் தூண்ட - உழவர்கள் ஏரிற்பூட்டிய மாடுகளைத் தூண்டி நடத்த, கொழு நுதியில் சாய்ந்த குவளை - (அப்போது) கொழுவின் முனையால் கிறப்பட்டுச் சாய்ந்து கீழ்வீழ்ந்த குவளை மலர்களை, மடை மிதிப்ப தேன்பாயும் - நீர்வரும் மடைகளில் அவர்கள் காலால் மிதித்தலினால் அதிலுள்ள தேனைப்பிழிந்து பாய்ந்தோடுகின்ற, மாடு ஒலி நீர் நாடன் - வயற்புறங்களில் நீர் ஓடுகின்ற ஒலிகள் மிக்க நீர்வளப்பம் பொருந்திய நாட்டையுடையவனாகிய, கொடை விதர்ப்பன் பெற்றது ஓர் கொம்பு - ஈகையிற் சிறந்த விதர்ப்ப நாட்டு மன்னன் பெற்றெடுத்து வளர்த்த ஒப்பற்ற பூங்கொம்பு போன்றவள் ஆவாள்.

(க - து.) அன்னம் நளனை நோக்கி 'அரசனே! நான் கூறிய பெண் விதர்ப்பநாட்டு மன்னன் வீமன் பெற்றெடுத்த கொம்புபோல்பவள்' என்றது.

(வி -ரை.) 'எழு' எழுதல்: உயர்தல் என்னும் பொருட்டாய் உயர்ந்துள்ள தூணைக் குறித்தது; ஓங்கல் என்பது, மலையைக் குறித்தல்போல. அடு - அடுதல்: முதனிலைத் தொழிற்பெயர். தன் உயர்ச்சியாலும் வலிமையாலும் தூணை அழித்தது என்பதாகும். ஒத்த என்ற பொருள்கூறல், சிறப்பன்று. ஏர் - ஏரிற்பூட்டிய எருதுகள்: ஆகுபெயர். குவளை: ஆகுபெயர். கொடைவிதர்ப்பன் - 'வேண்டுவார் வேண்டுவதே ஈயும் பண்பாளன்.' என. அரசன் கொடைத்திறம் கூறலால், உனக்கும் இம்மங்கையைக் கொடுப்பான் என்னும் தன் உள்ளக் கருத்தை அன்னம் அரசனுக்குக் குறிப்பால் உணர்த்திற்று. பூங்கொம்பு - மலருள்ள கொம்புபோல்வாள். அம்மையின் திருவுருவைக் கூறப் போந்த பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணத்துள் [1]'குமிழலர்ந்த செந்தாமரைக் கொடி' என்றதூஉங் காண்க. அதுபோல் 'ஓர்கொம்'பென்றாரெனக் கொள்க. (௩௮)

1. திருவிளை, நகரப் : ௧௭.

### தமயந்தி பெண்ணரசு செய்கிறாள் எனல்

௩௧. நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை அரசு.

(இ - ள்.) நால்குணமும் நால்படையா - (நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும்) நான்குவகைக் குணங்களுமே (தேர், யானை, குதிரை, காலாள் என்னும்) நான்குவகைச் சேனைகளாகவும், ஐம்புலனும் நல் அமைச்சா-(மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும்) ஐம்பொறிகளின் வழிச்செல்கின்ற அறிவே சிறந்த அமைச்சர்களாகவும், ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா - ஒலிக்கின்ற (காலிலணிந்துள்ள) சிலம்பே அழகிய பேரிகையாகவும், வேல் படையும் வாளுமே கண்ணா - வேற்படையும் வாட்படையும் ஆகிய இரண்டுமே இரு கண்களாகவும், வதன மதி குடைகீழ் - முகமாகிய நிலாவட்டக் குடையின்கீழாக, பெண்மை அரசு ஆளும் - அவள் பெண் இயல்பாகிய அரசை ஆட்சி செய்கின்றாள்.

(க - ரு.) தமயந்தி தன்னுடைய நாற்குணம முதலியவைகளையே நாற்படை முதலியனவாகக்கொண்டு பெண்ணரசாள்கின்றாள் என்பதாம்.

(வி - ரை.) நாற்குணம்: பெண்மக்கட்கு இன்றியமையாத நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்கு பண்புகள். இவைகளுள், நாணம் என்பது இயற்கையாகப் பெண்களுக்கு ஏற்பட்டுள்ள வெட்கம். இதனை வள்ளுவர் [1]"திருநுதல் நல்லவர் நாண்' என்பர். [2]'உயிரினும் சிறந்தன்று நாண்' என்றார் தொல்காப்பியர். மடம் என்பது, அறிந்தும் அறியாதுபோன்றிருக்கும் தன்மை. இதனைக் [3]"கொளுத்தக்கொண்டு கொண்டது விடாமை' என்பர் நச்சினார்க்கினியர். அச்சம் என்பது, அஞ்சவேண்டுபவைகட்கு அஞ்சி நடக்கும் தன்மை. இதனை, [4]"அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில்' என்பர் வள்ளுவர். இதனை, [5]"அன்பு காரணத்தால் தோன்றிய உட்கு' எனபர், நச. பயிர்ப்பு என்பது, [6]"கண்டறியாதன கண்டுழி மனங்கொள்ளாத பயிர்ப்பு' (அரு

1. திருக் : ௧0௧௧. 2. தொல், பொருள் : ௧௧௩.
3. தொல், பொருள் : ௯௯. நச்சினார்க்கினியர் உரை.
4. திருக் : ௪௨௮. 5, 6. தொல், பொருள் : ௯௯.

வருப்பு.) என்பர், நச. திருவிழா முதலிய கூட்டங்களில் ஏனைய ஆடவரால் தன் உடலைத் தீண்ட நேர்ந்தபோது உண்டாகும் மனநடுக்கமே இது இவைகளை நால்வகைப் படைகளாகக் கொண்டு பெண் தன்மையை ஆள்வதாகக் குறித்தார். பிறவும் அவ்வாறே பெண்மை - பெண் தன்மை. எவரையும் தன் கனிந்த குணத்தால் வயப்படுத்தும் இயல்பு.

படையாக அமைச்சராக என்பவைகளிலுள்ள இறுதிக் 'ககர உயிர்மெய்' குறைந்து நின்றது. (கஉ)

### தமயந்தியின் இடை மென்மை எனல்

௪௦. மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு—நாட்டேன்
அலம்புவார் கோதை அடியிணையில் வீழ்ந்து
புலம்புமாம் நூபுரங்கள் பூண்டு.

(இ - ள்.) இடை - தமயந்தியின் இடையானது, மோடு இளம் கொங்கை - உயர்ந்துள்ள இளம் கொங்கைகளை, முடிய சுமந்து ஏறமாட்டாது என்று - அவள் வாழ்நாள்வரையும் தாங்கி நிற்கும் வலிமையுடையதாகாதென, நூபுரங்கள் - (அவள் தன் காலிலணிந்துள்ள) சிலம்புகள், நாள்தேன் அலம்புவார்கோதை - புதிய தேன் மேலெழும் (மலர்சூடிய) கூந்தலாளின், அடி இணையில் வீழ்ந்து - இரண்டு அடிகளிலும் தாழ்ந்துகிடந்து, பூண்டு புலம்பும் - (அக்கால்களுக்கு அணியாக) அமைந்து வாய் திறந்து ஒலிக்கும்.

(க - து.) 'தமயந்தியின் நுசுப்பு கொங்கைகளைத் தாங்கா' தென்று சிலம்புகள் புலம்புகின்றனபோல் ஒலிக்கின்றன வென்பதாம்.

(வி - ரை.) மோடு - உயர்வு முடிய - முற்றமுடிய, தனங்கள் மேலும் வளரும்வரை சுமந்து தாங்க இயலாததாய்த் தமயந்தியின் இடை உள்ளதென அதன், நுண்மை கூறியவாறு காலிற் கிடந்தும் சிலம்பும் சிலம்பின் ஒலியை இடையின் பாரந் தாங்கலாற்று மென்மைகண்டு புலம்புவதாகக் கூறினார். தற்குறிப் பேற்றவணி.

கோவலனும் கண்ணகியும் மதுரைமா நகரடைந்தபோது அந்நகர்க் கொடிகள் காற்றினால் அசைந்த காட்சியைப் பின் கோவலற்கு நேரும் தீமைகண்டு, அந்நகர்மங்கை தன் கைக

ளென்னும் கொடிகளால் 'வாராதே' என்று தடுப்பதுபோற் காட்டிற்றென்று இளங்கோவடிகள் கூறுகின்றார். அத்தொடர்,

> [1]"போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
> வாரல்என் பனபோல் மறித்துக்கை காட்ட."

என்பதாகும். இவவாறே கம்பநாடரும் இராமபிரான் மிதிலைமா நகர்க்குச் சீதாதேவியின் திருமணங் காணச்சென்றபோது, நகர்க் கொடிகள் 'வருக வருக' என அழைப்பதுபோல் தோன்றின வாகக் குறிப்பிட்டார்; அது:

> [2]"...........செழுமணிக் கொடிகள் என்னும்
> கைகளைநீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்
> ஐயனை ஒல்லை வாவென் றழைப்பது போன்ற தம்மா."

என்பதாம். இவைகளிற் கூறிய தற்குறிப்பேற்ற அணிபோற் கொள்க. (௯௨)

**தமயந்தியின் இடை, என்றும் நுடங்குமெனல்**

௪௧. என்றும் நுடங்கும் இடைஎன்ப ஏழுலகும்
நின்ற கவிகை நிழல்வேந்தே—ஒன்றி
அறுகால் சிறுபறவை அஞ்சிறகால் வீசும்
சிறுகாற்றுக் காற்றாது தேய்ந்து.

(இ - ள்.) ஏழ் உலகும் நின்ற கவிகை நிழல் வேந்தே - இம் மண்ணுலகின் ஏழு தீவுகளிலும் நிலைபெற்றுள்ள குடை நிழலை யுடைய வேந்தே!, அறுகால் சிறுபறவை - ஆறுகால்களையுடைய சிறிய பறவைகளாகிய வண்டுகள், ஒன்றி அம் சிறகால் வீசும் - ஒன்றுகூடித் தம் அழகிய சிறகுகளினால் உண்டாக்குகின்ற, சிறு காற்றுக்கு ஆற்றாது - மெல்லிய காற்றுக்கும் பொறாமல், தேய்ந்து என்றும் நுடங்கும் என்ப - மெலிவுற்று எப்போதும் துவளும் என்று கூறுவர்.

(க - ரு.) தமயந்தியின் இடை, வண்டுகளின் சிறையி லிருந்துவரும் மெல்லிய காற்றையும் பொறுக்கலாற்றாது துவளும் என்பதாம்.

---

1. சிலப்பதி, கங : க௮௯-க௯0.
2. கம்பராமா, மிதிலைக் : க.

(வி - ரை.) தமயந்தியின் இடை, அவள் இருக்கும்பொழுதும் நிற்கும்பொழுதும் நடக்கும்பொழுதும் துவளுமென்பாராய், 'என்றும் நுடங்கும்இடை' என்றார். வண்டின் அழகிய சிறகினது காற்றினால் அவள் இடை நுடங்குமென்றதனால் அவ்விடையின் சிறுமை இயல்பும், அதனால், பெண்கட்குரிய சிற்றிடை அமைந்தவள் தமயந்தி யென்பதையும் உணர்த்தியவாறறிக.

மீனாட்சியம்மையாரின் வனப்பை வகுக்கப்போந்த குமர குருபர அடிகளார், அம்மையின் சிறிய இடை, பணிப்பெண்கள் வீசுகின்ற கவரியின் காற்றினால் நுடங்குமென்பாராய்,

"......தளரும் சிறு நுண் மருங்குல்..........
தெய்வமகளிர் புடையிரட்டும்
செங்கைக் கவரி முகந்தெறியும்
சிறுகாற் கொசிந்து குடிவாங்க.'[1]

என நயம்பெறக் கூறியதும் இக்கருத்தோடொப்பதை அறிக.

"தூலொத்த நேரிடை நொய்ம்மை
எண்ணாது நுண் தேனசையால்
சாலத்த காதுகண் டீர்வண்டு
கள்கொண்டை சார்வதுவே.'[2]

எனத் திருக்கோவையாரின் வண்டோச்சி மருங்கணைதல் துறையினும் இடைநுண்மை கூறியதும் நோக்கத்தக்கது. (௩௪)

**தமயந்தியின் நெற்றியே மன்மதன் அம்புதீட்டுமிடம்**

௪௨. சேந்தேன் மொழியாள் செறிஅளக பந்தியின்கீழ்
இந்து முறியென் றியம்புவார்—வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
ஏவாளி தீட்டும் இடம்.

(இ - ள்.) பூ வாளி வேந்தன் - மலரம்புகளையுடைய மன்மதன், என்றும் வந்து - எக்காலத்தும் வந்துற்று, பொரு வெம் சிலை சார்த்தி - போர்செய்கின்ற கொடிய வில்லைப் பொருந்த வைத்து, ஏ ஆளி தீட்டும் இடம் - அம்பின் வரிசைகளைத் தீட்டிப் பதமாகக் கூர்மை செய்யுமிடம், செம்தேன் மொழியாள் - நல்ல தேன்போன்ற இனிய சொற்களையுடைய தமயந்தியின், செறி அளக பந்தியின்கீழ் - நெருங்கிய முன்னுள்ள கூந்தல் வரிசையின் பக்கலி

---

1. மீனாட்சி, பிள்ளைத் சுக. 2. திருக்கோவையார் : ௪௫.

லுள்ள, இந்துமுறி என்று இயம்புவார் - பிறைத்துண்டமாகிய நெற்றியெனக் கூறுவர்.

(க - து.) தமயந்தியின் நெற்றியாகிய பிறைத்துண்டம், மன்மதன் தன் அம்புவரிசைகளைத் தீட்டுகின்ற இடனாகும் என்பதாம்.

(வி - ரை.) செந்தேன் மொழியாள், கேட்டார்க்கு இன்பஞ் செய்யும் இனியமொழியாள் எனத் தமயந்தியின் சொல் சிறப்புக் கூறியவாறு. அளகம் - கூந்தல்; பந்தி - வரிசை. தமயந்தியின் கண்கள், அடிக்கடி பிறழ்ந்துகொண்டிருப்பதாலும் நெற்றிப் பக்கலிலேயே கண்கள் உளவாகலினாலும் அவைகளை மன்மதன் தீட்டுவதாகக் குறித்தார். தீட்டுதல் இவள் கணைகளின் செவ்வி யைக் காண்டொறும் காண்டொறும் ஆடவர்கள் அகலாது நிற்றற்குரிய செவ்வியாக்குதல். எனவே, தமயந்தியின் கண்கள், நெற்றிப்பக்கலில் அமைந்துள்ள கூந்தல்வரிசை, நெற்றி இவை களின் சிறப்புக்கூறியவாறு. பந்தி, இந்து என்பன வடசொற்கள். ஏ வாளி எனக்கொண்டு அம்புகள் எனப் பொருள் கூறலுமாம்: ஒருபொருட் பன்மொழி. (௨௪)

### நளன், அன்னத்தை நோக்கி 'உனக்கும் அவட்கும் தொடர்பு என்?'னென வினவல்

௨௫. அன்னமே நீ உரைத்த அன்னத்தை என் ஆவி
உன்னவே சோரும் உனக்கவளோ—டென்ன
அடைவென்றான் மற்றந்த அன்னத்தை முன்னே
நடைவென்றாள் தன்பால் நயந்து.

(இ - ள்.) அந்த அன்னத்தை - (இவ்வாறு கூறிய) அந்த அன்னப்பறவையை, முன்னே நடைவென்றாள் தன்பால் நயந்து - நடைசசிறப்பினால் மிக இளம்பருவத்திலேயே வெற்றிபெற்றவ ளாகிய தமயந்தியின்மேல் விருப்பம் வைத்து, அன்னமே - அன்னப்பறவையே!, நீ உரைத்த அன்னத்தை - நீ கூறிய அன் னத்தை ஒத்தவளை, உன்னவே என் ஆவி சோரும் - நினைக்கும் போதே என் உயிர் வாட்டமுறுகின்றது, அவளோடு உனக்கு என்ன அடைவு என்றான் - அவளுடன் உனக்குத் தொடர்பு என்னவென்று (நளன்) கேட்டான்.

(க - து.) நளன், 'அன்னமே! உனக்கும் தமயந்திக்கும் என்ன சம்பந்தம்?' என்று அன்னத்தை நோக்கிக் கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) அன்னமே: விளி. அன்னம்போன்ற தமயந்தியை 'அன்னம்' என்றது உவமையாகு பெயர். அவள் தன் அழகைக் கூறியதைக்கேட்ட நளனுக்கு அவள்பாற் காதல் கிளர்ந்தெழுந்தது; அதனால், அவன் நெஞ்சம் அழிந்து நின்றான். ஆகவான், 'ஆவி உன்னதே சோரும்' என்றான். 'அவளைப்பற்றி நீ இவ்வகையு எடுத்துரைக்கும் தன்மையிருப்பதால் உனக்கு அவள்பால் என்ன தொடர்புண்டு' என வினவி, அவள் தன் மற்ற நிலைகளையெல்லாம் நன்கு அறிந்துகொள்ள விரும்பியவனாய், 'என்ன அடைவு?' என்று கேட்டான். நடை வெல்லுதல் அன்னத்தின்நடை தமயந்தி நடைக்கு முன்னர் ஒப்பாகாமல் பின்னிடல். (௪௩)

### அன்னம் தமயந்தியின் நடையைக்கற்க அவள்பால் வந்ததாகக் கூறல்

சச. **பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவள்தன்**
**மாமனைவாய் வாழும் மயிற்குலங்கள்—காமன்**
**படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாத**
**நடைகற்பான் வந்தடைந்தேம் நாம்.**

(இ - ள்.) காமன் படைகற்பான் வந்து அடைந்தான் - மன்மதன் (அவள் தன் கண் அம்பைக்கொண்டு) அம்பெய்து பழகுந்தொழிலைக் கற்கும்பொருட்டு அங்குவந்து சேர்ந்தான், நாம் - நாங்கள் பைந்தொடியாள் பாதநடை கற்பான் வந்து அடைந்தேம் (அவனைப்போன்றே) அப்பசும்பொன் வளையலணிந்தவளுடைய கால்நடையைக் கற்றுக்கொள்ளும் பொருட்டாக (அங்கு) வந்து சேர்ந்தோம், யாம் பூமனைவாய் வாழ்கின்ற புள்குலங்கள் - யாங்கள் மலர்மாளிகைகளில் வாழ்ந்து வருகின்ற பறவை இனங்கள், அவள்தன மாமனைவாய் வாழும் மயில் குலங்கள் - (ஆனாலும்) அவளுடைய பெரிய மாளிகையில் இருக்கின்ற அவளின சேடிப்பெண்கள் (என்னும்படி அவளோடு பழக்கங்கொண்டுள்ளோம்)

(க - ரு) 'தமயந்தியிடம் காமன் படைத்தொழில் கற்கவந்தான்; நாங்களும் அவள்பால் நடை கற்க வந்தோம்' என்று அன்னம் நளனிடம் கூறிற்று.

(வி - ரை.) பூமனை - பூவாகிய மனை என விரிதலால் இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மனைவாய் வாழும் புட்குலங்கள்;

ஏழாம் வேற்றுமை, பிறிதின்கிழமையில் வந்தது. பூவெனப் பொதுப்படக் கூறினாரேனும் சிறப்புப்பற்றி இங்கே செந்தாமரை மலரையே குறிப்பதாயிற்று. என்னை?

[1]"பூ மேற்றிருந்த புலமா மகளோடு."

எனச் சிந்தாமணியினும்,

[2]"பூவெனப் படுவது பொறிவாழ் பூவே."

என நால்வர் நான்மணிமாலையினும்,

[3]"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை."

எனத் தேவாரத்தும் மற்ற நூல்களினும் வருதல்கொண்டு தெளியலாம். மன்மதன் தமயந்தி மங்கைப்பருவமெய்திய காலமுதல் அவளை கட்பார்வை கண்டார மனத்தை விரைந்துபற்றும் தன்மையுடையதாயிருப்பதால் தான் விடும் பாணமும் ஆண்மை முதிழ்த்த ஆடவர்தம் மார்பிற் பாய்ந்து அவர்தம் நெஞ்சைக் கலக்கித் தம் வயமிழந்து நிற்கும் தன்மையை எய்த விரும்பி இவள் கண்ணைப் பார்த்துப்பாராதது அதைப்போல் தன் அம்பைத் தீட்டி அராவ முற்பட்டான் என மொழிவாராய்ப் 'படைகற்பான் வந்தடைந்தான்' என்றார். கண்ணின் இயல்பை,

[4]"பூவொத் தமருந் தகைய எவ்வாத்
தெல்லாரும் அறிய நோய்செய் தனவே
... ......................
பரீஇ வித்திய எனல்
குரீஇ ஓப்புவாள் பெருமழைக் கண்ணே."

எனக் குறுந்தொகையினும் வருதல் காண்க. படை - படைத்தன்மை: காரணவாகு பெயர். மயில்போன்ற சாயலையுடைய பெண்களை 'மயிற்குலங்கள்' என்றது ஆகுபெயர். முன்னரும் 'நல்ல மயிற்குழாம்' என்றதூஉங் காண்க. படை - படுத்தல்: கொல்லுதல் தொழிலையுடையது: நடை, கொடை, விடை, மடை என்பனபோன்ற ஐகார விகுதிபெற்ற தொழிற்பெயர். அன்னங்களைப் பெண்கள் நடைக்கு உவமங்கூறுதல் மரபு. அவள் நடையும் அதன் நடையை ஒத்ததே. ஆயினும் தமயந்தியின் நடை அந்தநடையை விஞ்சிநிற்பதால் அன்னம் 'நடைகற்பான் வந்தடைந்தேம் நாம்' என்று அவள் தன் கூந்தல் கண் முதலிய உறுப்புக்களின் அழகைச் சொல்லியதோடமையாது அவள் தன் நடையழகைக்கூறித் தான் அங்குவந்து சேர்ந்ததற்குரிய காரணத்தையும் அன்னம் எடுத்துரைத்தவாறும் (கஎ)

1. சீவகசிந். நாமகள் : க. 2. நால்வர் நான். ௪0.
3. திருநாவு. தேவா : கக-உ. 4. குறுந்தொகை, எஉ.

நளன், தமயந்திபால் காதல்கொள்ளல்

சரு. இற்றது நெஞ்சம் எழுந்த திருங்காதல்
அற்றது மானம் அழிந்ததுநாண்—மற்றினிஉன்
வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான் வெங்காமத்
தீயுடைய நெஞ்சுடையான் தேர்ந்து

(இ - ள்.) இற்றது நெஞ்சம் - (இவ்வாறு அன்னங் கூறிய வைகளையெல்லாம் கேட்ட நளனுக்கு) மனநிலை அழிந்தது, இரும் காதல் எழுந்தது - (தமயந்தியை நினைந்து நினைந்து) மிக்க காதல் மேலோங்கியது, மானம் அற்றது - பெருமை நீங்கிற்று, நாண் அழிந்தது - வெட்கம் இல்லையாயிற்று, வெம் காம தீ உடைய நெஞ்சு உடையான் - கொடிய காமமெனும் தீப் பற்றிய மனமுடையனாகிய அவன், தேர்ந்து - சற்றே அறிவு தெளிந்து, மற்று இனி என்னுடைய வாழ்வு - பின்பு என் உயிர வாழ்க்கை, உன் உடைய வாய் உடையது என்றான் - உன்னுடைய வாயின் சொற்களின் இடமாக இருக்கின்றதென்று கூறினான்.

(க - ரு.) நளன், அன்னத்தை நோக்கி 'என் வாழ்வு உன் வாய்ச்சொல்லில்தான் இருக்கிறது' என்றான்.

(வி - ரை.) நெஞ்சம் இறுதல் - மனம் தன்னிலை தடுமாறல். இதனைப் பிறசான்றோர்கள் 'கையறு நெஞ்சம்' என்பர். கண்ணகியார், தன் கணவனைப் பிரிந்துறைந்திருந்த காலத்தில் யாதொரு கோலமுங் கொள்ளாராய் அவலமுற்றிருந்த நிலையைக் கூறப்போந்த இளங்கோவடிகளார்,

"[1] கையறு நெஞ்சத்துக் கண்ணகி.'

என்று படம் வரைந்ததும் நோக்குக. இராவணன்பால் சூர்ப்பநகை வந்து, சீதையின் அழகுருவையெல்லாம் கூறி அவற்குக காமத்தீ மூட்டியகாலத்தில் அவன் பிறவற்றையெல்லாம் மறந்து சீதையைமட்டும் மறவாத நிலையன் ஆயினான் என்று கூறப் போந்த கம்பநாடர்,

"[2] கரனையும் மறந்தான் தங்கை மூக்கினைக் கடிந்து நின்றான்
உரனையும் மறந்தான் உற்ற பழியையும் மறந்தான் வெற்றி
அரனையும் கொண்ட காமன் அம்பினான் முன்னைப் பெற்ற
வரனையும் மறந்தான் கேட்ட மங்கையை மறந்திலாதான்.'

1. சிலப். ச : ருஎ. 2. கம்பராமா. மாரீசன் : அக.

என்று, காமத்தால் அழிவுண்டு மனநிலை திரிந்த இலங்கை வேந்தன் தன்மையை விளக்கியதறிக. காதல் கைம்மிக்கார்க்கு மானம் நாணம் முதலிய இயற்கைகுணங்கள் திரிவது இயற்கையாதலால் 'அற்றது மானம் அழிந்தது நாண்' என்றார். மறைபொருளான ஒன்றைக்கூற முற்படுவார்க்கு தாம் சொல்லப்போம் காரியத்தை விரைவில் சொல்லவொண்ணாது தடுமாற்றமுறுவர். இஃது உலக இயல்பு. அதுபோல் நளன், 'இனி, உன் வாய்ச் சொற்களால்தான் இருக்கிறது; நீ தமயந்தியிடம் சென்று என்னிலையைக் கூறி மனமகிழ்ந்துகொள்ளுதற் கேற்றவைகளைச் செய்,' என்று சொல்ல முற்படுவோன், சொல்லற்குத் தடுமாற்ற முற்று 'உன் வாயுடையது' என்றான். அன்றி உன் வாயினிடத்தே உள்ளது எனச் சுருங்கச்சொல்லிக் குறிப்பால் உணர்த்தினான் எனலுமாம். தேர்தல் - மனம் தெளிவாதல். (கூ அ)

அன்னம் தமயந்தியிடம் செல்லுதல்

சுகூ. வீமன் திருமடந்தை மென்முலையை உன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்—சேம
நெடுங்குடையாய் என்றுரைத்து நீங்கியதே அன்னம்
ஒடுங்கிடையாள் தன்பால் உயர்ந்து.

(இ - ள்.) சேம நெடுங்குடையாய் - (உலகமக்கட்கு) நன்மை செய்கின்ற விரிந்த (வெண்கொற்றக்) குடையையுடையவனே, வீமன் திருமடந்தை மென் முலையை - வீமராசனின் செல்வ மகளான தமயந்தியின் இளமார்பினை, உன் உடைய வாம நெடும் புயத்தே வைகுவிப்பேன் - உன்னுடைய அழகிய உயர்ந்த தோள்களைப் பொருந்தச் செய்விப்பேன், என்று அன்னம் உரைத்து - என்று அன்னப்பறவை கூறி, ஒடுங்கு இடையாள் தன்பால் - சிற்றிடையாளாகிய தமயந்தியினிடத்து, உயர்ந்து நீங்கியது - பறந்து போயிற்று.

(க - து.) 'தமயந்தியை உனக்கே மனைவியாக்குவேன்' என்று நளனிடம் கூறிவிட்டு, தமயந்திபால் அன்னம் பறந்து சென்றது.

(வி - ரை.) வீமன் திருமடந்தை, வீமராசனின் அழகிய மகள் என்றலுமாம் 'தமயந்தியைப் பிறர் எவருக்கும் மாலை சூட்டாமல் உனக்கே மாலைசூட்டி மணம்புணரச் செய்வேன்' என்று அன்னம் நளனுக்கு உறுதிமொழி உரைத்தது. 'சேம நெடுங்குடை' உலகில்வாழும் உயிர்கட்கெல்லாம் அறநெறி

தவறுமல் காக்கும் முறையுடையான் என்பதைக் குடைமேல் ஏற்றிக் கூறினார். 'ஒடுங்கிடையாள்' ஒடுங்கிய இடையினை யுடையாள்; நல்லிலக்கணம்வாய்ந்த பெண்களுக்கு நெற்றியும் அடியும் இடையும் சிறுத்திருப்பதே இயற்கையாகலான், அவ்விலக்கணம் யாவும் முற்றும் நிரம்பியவள் என்பதை உணர்த்தியவாறும்.

> "அகலல்குல் தோள்கண்ணென மூவழிப் பெருகி
> நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகி" (௩௯)

என்றார் கலித்தொகையினும்.

### அன்னம் எப்போது திரும்பிவருமென நளன் எதிர்பார்த்திருத்தல்

௪௭. இவ்வளவிற் செல்லுங்கொல் இவ்வளவிற்காணுங்கொல்
இவ்வளவிற் காதல் இயம்புங்கொல்—இவ்வளவில்
மீளுங்கொல் என்றுரையா விம்மினான் மும்மதம்நின்
றாளுங்கோல் யானை அரசு.

(இ - ள்.) மும்மதம் நின்று மூன்றுவகை மதங்களும் மிகுந்து, ஆளும் கோல் யானை அரசு - (பாகனுடைய) அவைகளின் வழிப்பட்டு நிறகும் கொல்லுந்தொழில உடைய யானையையுடைய நளவேந்தன், இ அளவில் செல்லுங்கொல் - (அன்னமானது) இத்தனைநேரம் (குண்டினபுரம்) சென்றிருக்குமோ. இ அளவில் காணும்கொல் - இத்தனை நேரம் (தமயந்தியைக்) கண்டிருக்குமோ, இ அளவில் காதல் இயம்பும்கொல் - இத்தனை நேரத்துக்குள், (எனக்கு அவள்பாலுள்ள) மெய்யன்பை உரைத்திருக்குமோ, இ அளவில் மீளும்கொல் - இத்தனைநேரம் (அங்கிருந்து) திரும்பி வந்துகொண்டிருக்குமோ. என்று உரையா விம்மினான் - என்று சொல்லிச் சொல்லிப் பெருமூச்சுவிட்டு ஏங்கிக்கொண்டிருந்தான்.

(க - து.) நளமன்னனானவன், இத்தனைநேரம் குண்டினபுரத்துக்கு அன்னம் சென்றிருக்குமோ என்பது முதலாகச் சொல்லி வருந்திக்கொண்டிருந்தான் என்பதாம்.

(வி - ரை.) 'இவ்வளவிற் செல்லுங்கொல்' முதலியன, நள மன்னன் காதல்மிகுதியால் தவித்து நிற்கும் தன்மையை

1. கலி. ௧0௮.

உணர்த்துகின்றன. இது, கைக்கிளையின்பாற்படும். [1]"கைக்கிளையாவது ஒருமருங்குபற்றிய கேண்மை' என்பர், நச்சினார்க்கினியர். அஃதாவது, காதல்கொண்ட ஆடவரோ பெண்டிரோ தாம் காதலித்தாரை நினைந்து வருந்தும் நிலைமை. இதனைக் [2]'கைக்கிளை என்பது ஒருதலை காமம்' என்றார், அகப்பொருள் விளக்க ஆசிரியராகிய நம்பியார். இதுமுதல் ஒருதலைக் காமம்பற்றி, அஃதாவது நளன் தமயந்தியிடத்துக் கொண்ட காதல் மிகுதி பற்றி ஐந்து பாடல்களால் குறிப்பிடுகின்றார். மும்மதம் கன்னம் (காது) கபோலம் (தலை. மத்தகம்) பீசம் (ஆண்குறி) இவைகளிடத்துத் தோன்றி ஒழுகும் மதநீர். இஃது ஆண்யானைகளுக்கு உண்டாவது இயல்பு. மும்மதங்களினால் யானை தன் அறிவு திரிந்து செருக்குற்றுக் கண்டவற்றையெல்லாம் அழிக்கும் நீர்மையுடையதாகலான், 'மும்மதங்கொண்டு ஆளும் கொல்யானை' என்றார். இத்தகைய ஆற்றல்மிக்க யானையையுடையான், தன் ஆற்றல் அழிந்து காதல் வயத்தனாய்க் கலக்கமுற்றான் என்பது குறிப்பு. அரசு: அரசுக்குரிய தன்மையுடையவனைக் குறித்தலால் பண்பு ஆகுபெயர். கொல்: ஐயமும் அவலமும் கொண்ட இடைச்சொல். இது நான்கிடத்தும் வந்து அரசன் வருந்தும் தன்மையை விளக்கிநின்றது. [3]'குளித்து மலர்க்கொண்ட கல்லா இளமை, அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ' என்னும் புறநானூற்றில் கொல் அவலப் பொருள்தருதலை ஓர்க. (சO)

### நளன், தமயந்தியை நினைந்து நினைந்து ஏங்குதல்

சக. சேவல் குயிற்பெடைக்குப் பேசும் சிறுகுரல்கேட்
டாவி உருகி அழிந்திட்டான்—பூவின்
இடைஅன்னம் செங்கால் இளஅன்னம் சொன்ன
நடைஅன்னம் தன்பால் நயந்து.

(இ - ள்.) பூவின் இடை அன்னம் - தாமரை மலரில் வாழ்கின்றதும், செங்கால் இள அன்னம் - சிவந்த கால்களும் இளமையும் உடையதான அன்னப்பறவையால், சொன்ன - சொல்லப்பட்ட, நடை அன்னம் தன்பால் நயந்து - அன்னம்போன்ற நடைபழகுள்ள தமயந்தியின்மீது காதல்கொண்டு, சேவல் குயில் - ஆண்குயிலானது, பெடைக்கு பேசும் சிறுகுரல கேட்டு - பெட்டைக்குயிலுடன் பேசுகின்ற இன்குரலைக் காதாற்கேட்டு, ஆவி உருகி அழிந்திட்டான் - உயிர் தளர்வுற்று அறிவு வேறுபட்டான்.

1. தொல். அகத்திணை : க. 2. நம்பி அகப் : உ.
3. புறம் : உசரு.

(ந - ரை.) ஆண்குயில் பெண்குயிலுடன் இனிமையுறப் பேசுதலை நளன் கேட்டு அறிவுநிலை கலங்கினான் என்பதாம்.

(வி - ரை.) குயில் சேவல், சேவற்குயிலென வந்தது: சொன்னிலை மாறிய இலக்கணப்போலி: வாயில், நகர்ப்புறம் போலக் கொள்க. காதலால் குயிலின் ஆணும் பெண்ணும் கலந்து பேசுகின்ற குரலைக்கேட்டதும் நளனுக்குக் காதல் வேட்கை மிக்கெழுந்தது. காதலர்களுக்கு - அதிலும் பிரிந்து தன்னந் தனியராய் வாழ்வார்க்கு மிக்க வேட்கையெழுவது இயற்கை அம்முறையில் கைக்கிளைக் காமமீதூர்ந்த நளனுக்கு அவைகள் பேசிய குரலைக்கேட்டு நெருப்பிலிடு வெண்ணெயென நெஞ்சுருகினான். இவ்வாறே காதலியைப் பிரிந்து கானத்துறைந்த அயோத்தியேந்தல் இராமபிரான் கானில் தத்தம் காதலொற் கலந்து திரிகின்ற ஆணும் பெண்ணுமாகிய யானை, மான், மயில், குயில் முதலியனவற்றைக் காண்டொறும் காண்டொறம் காதல் மனத்தைக் கவற்ற வருந்தி நின்றானென்று சொல்லிப்போந்த கம்பர் கருத்துக்களும் இதனோடு ஒப்பவைத்து மகிழற்பாலன.

[1]"மயிலும் பெடையும் உடன்திரிய மானும் கலையும் மருவிவரப்
பயிலும் பிடியும் கடகரியும் வருவ திரிவ பார்க்கின்றான்
குயிலும் கரும்பும் செழுந்தேனும் குழலும் யாழும் கொழும்பாகும்
அயிலும் அமுதும் சுவைத்தமொழியைப் பிரிந்தால் அழியானோ.'

அழிதல் - மனநிலை வேறுபடல். பூவின் இடையன்னம், இளவன்னம், நடையன்னம் என்பன, சொற்பின் வருநிலையணி. அன்னங் கூறக்கேட்ட தமயந்தியையும் 'நடை அன்னம்' என நயந்தோன்றக் கூறினார், இயற்கைக்கவி ஆகலான். (௪௧)

**நளன், மயில் ஆடுதலைக்கண்டு மனம் மறுகுதல்**

**௪௨. அன்னம் உரைத்த குயிலுக் கலசுவான்**
**மென்மயில்தன் தோகை விரித்தாட—முன்னதனைக்**
**கண்டாற்று துள்ளம் கலங்கினான் காமநோய்**
**கொண்டார்க்கி தன்றோ குணம்.**

(இ - ள்.) அன்னம் உரைத்த குயிலுக்கு அலசுவான் - அன்னம் சொல்லிய குயிற் குரல்போன்ற குரலுடைய தமயந்தி

1. கம்பராமா. அயோமுகிப் : ௨௧.

யைப்பெறத் தளர்ந்து நிற்கும் நளன், மென் மயில் தன் தோகை விரித்து ஆட - மெல்லிய தன்மையுடைய தன் தோகையை மயில் விரித்தாடிக்கொண்டிருக்க, முன் அதனைக் கண்டு - தன் எதிரில் அதைப்பார்த்து, ஆற்றாது உள்ளம் கலங்கினான் - பொறுக்க லாற்றாமல் தன் மனம் கலக்கமுற்றான், காமநோய் கொண்டார்க்கு- காதல் நோய் மிக்கார்க்கு, குணம் இது அன்றோ - இயற்கைத் தன்மை இஃதல்லவா? (நளன் வருந்துவது கூறவேண்டா வன்றோ என்றபடி.)

(க - ரை.) அன்னஞ் சொன்ன குயிலாகிய தமயந்திக் காகக் கலக்கமுற்று நிற்கும் நளன், மயிலாடப் பார்த்து நெஞ்சம் கலக்கமுற்றான்.

வி - ரை.) குயில்: ஆகுபெயராய்த் தமயந்தியைக் குறித்தது. அலசுதல்- தளர்தல்; "இறங்கொடி நுசுப்போடு இனைந்தடி வருந்தி" என்றவிடத்தும் 'இனைந்து' என்பது இப்பொருள் தருதலை ஓர்க. ஆண்மயில் ஆடுதலைக்கண்ட பெண்மயில் மகிழ்வது, இவற்றுக்குத் 'தன்னைக்கண்டு தமயந்தி களித்துளும்புங்காலம் வருமோ?' என்ற எண்ணம் மேலிடச்செய்தது. அதனால் நளன் அலசினான்; உள்ளங் கலங்கினான். பின், ஆசிரியர் கூற்றாகக் 'காமநோய்கொண்டார்க்கு இதன்றோ குணம்': காமத்தால் உலகில் யாவரும் தம் சீர்கெட்டு அழிதலைக் கண்டும் கேட்டும் நன்கறிந்த பேரறிஞர் ஆகலான், உலகமக்கள் இவ்வாறு வருந்துதல் கூடாது என்னும் கருத்தை உட்கொண்டுரைத்தார்.

கோவலன் காவலனால் வெட்டுண்டு இறந்துபட்ட செய்தியைக் கூறிப் பின் உலகமக்கட்கு ஊழ்வினைவலி சொல்லாது, ஆதலால் யாவரும் 'அறஞ் செய்மின்; நன்னெறியில் ஒழுகுமின்,' என்று இளங்கோவடிகள் அறிவுறுத்திய பாடலும் இக் கருத்துக்கு ஒத்த தாகலான், அதனை இதன்கீழ்த் தருகின்றோம்:

"[2] நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகி தன்கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை.'

என்பதும் இக் கருத்துக்கு ஒத்ததாக உள்ளதை அறிக. அது போற்கொள்க. அன்றோ என்பதில் ஓகாரம், வினைப்பொருளில் வந்தது. குணம் - தன்மை. 'இது' என்பது மேற்கூறிய நளன் தன்மையைக் குறித்த அண்மைசுட்டு. (சஉ)

1. சிலப், க0: நடஅ. 2. சிலப், கசு: இறுதி வெண்பா.

### நளன், தமயந்தி இடையையொத்ததெனக் கொடியைக் கும்பிடல்

௫௦ வாரணியும் கொங்கை மடவாள் நுடங்கிடைக்குப்
பேருவமை ஆகப் பிறந்துடையீர்—வாரீர்
கொடியார் எனச்செங்கை கூப்பினான் நெஞ்சம்
துடியா நெடிதுயிராச் சோர்ந்து

(இ - ள்.) நெஞ்சம் துடியா - மனந்துடிப்புற்று, நெடிது உயிரா - பெருமூச்சுவிட்டு, கொடியார்-ஏ பூங்கொடிகளே!, மடவாள் நுடங்கு இடைக்கு - தமயந்தியின் துவள்கின்ற நுசுப்பிற்கு, பேர் உவமை ஆக - சிறந்த ஒப்புடைப் பொருளாக, பிறந்து உடையீர் - தோன்றி (அதன் பயனைப்) பெற்றுள்ளீர், வாரீர் - (ஆதலால் உம் அழகு அவள் இடைபோன்றதா எனப் பார்த்தல் வேண்டும் என்னிடம்) வம்மின், என்ன சோர்ந்து - என்றுகூறி மெலிந்து, செங்கை கூப்பினான் - (நளன்) தன் சிவந்த கைகளைக் குவித்து அவைகளைத் தொழுதான்.

(க - து.) நளன், தமயந்தியின் இடைபோல் இருப்பதால் பூங்கொடிகளைக் கண்டு கைகூப்பித் தொழுதான் என்பதாம்.

(வி - ரை.) மடவாள்: மடமை யென்னும் பண்படியாகப் பிறந்த குறிப்பு வினைப்பெயர். கொடியார் - கொடிகள்: அண்மை விளியாதலான் இயல்பாயிற்று. கொடிகளே! கொடுமைத்தன்மையுடையாரே! என்னும் சிலேடை நயமும் காண்க. வாரீர்: முன்னிலையேவற் பன்மை. இர், ஈர், விகுதிகள் முன்னிலைப் பன்மைக்கு வரும் விகுதியாகலான், ஈண்டு 'ஈர்' விகுதிபெற்று வந்தது. கொடியார், படர்க்கை எனக்கொண்டு இடவழுவமைதியாகக் கொள்ளலுமாம்.

காதலரோ, இயற்கை நட்புக்கொண்டாரோ, அவரையொத்த பொருள்களையோ சார்ந்தனவற்றையோ உயர்வு தாழ்வு கருதாது வணங்குவாராகலின், ஈண்டும் தமயந்தியின் இடைபோற் காணப்பெறும் கொடிகளைக்கண்டு வணங்கினான்; அன்றியும் அவைகளை நன்கு கண்டுகளிக்க 'வாரீர்' எனத் தன்பால் அழைத்தான். ஒரே கொடியைக் கொள்ளின், அன்பால் ஒருமை, பன்மையாக மாறிற்றெனக் கோடலுமாம்.

"உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே.'

என்பது, நன்னூல் விதியாகலான் என்க. இவ்வாறே சீவக வேந்தன்பால் தூதுவிட்ட கிளியை பெண்ணாக்கி இருந்து வருந்திய குணமாலையார் வருந்துங்காலை,

"செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்கொ லோரின் னுரைதாந்
தந்தாரோ லென்றார்.'

எனக், கிளிக்கு உயர்வுப்பன்மை கொடுத்துப் பேசுவதாக ஆசிரியர் திருத்தக்கதேவர் அருளிய பாடலும் காண்க.

துடியா கெடி துயிரா என்பன, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்ச உருபுகள், சோர்ந்து என்னும் வினைகொண்டு எச்சமாகிக் கூப்பினன் என்னும் வினைப்பெயர்வினை கொண்டு முடிந்தது. (௫௰)

**தமயந்தியின் கொங்கை முதலியவற்றால் தன் காதல் தணியுமென நளன் எண்ணல்**

௫௧. கொங்கை இளநீரால் குளிர்ந்தஇளஞ் சொல்கரும்பால்
பொங்குசுழி என்னும் பூந்தடத்தில்—மங்கைநறும்
கோய்தாம வாசக் குழல்நிழற்கீழ் ஆறேனோ
வெய்தாமக் காம விடாய்.

(இ - ள்.) மங்கை - தமயந்தியினுடைய, கொங்கை இளநீரால் - கொங்கைகளாகிய இளநீரினாலும், குளிர்ந்த இளம் சொல் கரும்பால் - குளிர்ச்சிபொருந்திய மெல்லிய சொற்களாகிய கருப்பஞ்சாற்றினாலும், பொங்குசுழி என்னும் - (அழகு) மிக்க உந்திச்சுழி யென்னும், பூந்தடத்தில் - தாமரைப் பொய்கையில், நறும் கொய்தாமம் - மணமிக்க அப்பொழுது கொய்து அணிந்த மலர்மாலையினையுடைய, வாச குழல் நிழல்கீழ் - மணமுள்ள கூந்தலின் நிழலில், வெய்து ஆம் அ காமவிடாய் ஆறேனோ - கொடுமையான அந்தக் காமவெப்பத்தை ஆற்றிக்கொள்ளப் பெறேனோ?

(க - ரு.) 'தமயந்தியின் கொங்கைகளாகிய இளநீர் முதலியவைகளினால் என் காமவெப்பத்தை ஆற்றிக்கொள்ள மாட்டேனோ?' என நளன் வருந்தினான் என்பதாம்.

---

1. நன்னூல்: ௩௭௯. 2. சீவகசிந்: குணமாலையார். ௯௮௯.

(வி - ரை.) இளநீர், கரும்புச்சாறு, நீர்த்தடாகம், சோலை நிழல் முதலியன ஞாயிற்றின் வெப்பத்தால் களைப்புற்றார்க்கு வெப்பத்தைத் தணிக்கும் பொருள்கள். இவைபோன்றே, காதல் வெப்பத்தால் கலங்கிய நளமன்னனுக்குத் தமயந்தியின் கொங்கையாகிய இளநீர் முதலியன காமவெப்பத்தை நீக்குமென எண்ணி ஆற்றாமையால் வருந்திக் கூறினன். இளமைசெவ்வியும் திரட்சியும் உடைமைபற்றிச் கொங்கை இளநீரெனவும், இனிமை பற்றிச் சொல் கரும்பெனவும், சுழிந்து ஆழமாக இருப்பது குறித்துக் கொப்பூழைப் பூந்தடமெனவும், கூந்தல் நெருக்கம் பற்றி நிழல் எனவும் உருவகப்படுத்தக் கூறப்பட்டன. காதல் கொண்டார்க்கும், போர்முனை முதலியவற்றில் சென்று புண்கண் உற்றார்க்கும் மங்கையின் சார்பே ஆற்றுவிக்கும் என்பதனை,

'[1] யானைவெண் கோடு அழுத்திய மார்பும்
நீள்வேல் கிழித்த நெடும்புண் ஆகமும்
எய்கணை கிழித்த பகட்டெழில் அகலமும்
வைவாள் கிழித்த மணிப்பூண் மார்பமும்
மைம்மலர் உண்கண் மடந்தையர் அடங்காக்
கொம்மை வரிமுலை வெம்மைவே துறீஇ.'

என, இளங்கோவடிகள் அருள்வதும் காண்க.

கரும்பு: முதலாகு பெயர். சுழி - சுழித்தல்; முதனிலைத் தொழிற்பெயர்: தொழிலாகு பெயர். வெய்து: வெம்மை யென்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் படர்க்கைப் பெயர். 'ஆறேனோ' என்பதில் ஓகாரம் இரக்கப்பொருள் குறித்து நின்றது. நளனின் ஆரா அயராக் காதலைக் குறித்தவாறு. (சச)

### தமயந்திபால் அன்னம் போய்ச்சேர அவள் அன்னத்தை வினவல்

ருஉ. மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி அருகணைய—நன்னுதலும்
தன்ஆடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னாடல் சொல்லென்றாள் ஈங்கு.

(இ - ள்.) மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற - நள மன்னனால் தூதாக அனுப்பப்பட்ட அழகினால் சிறந்துள்ள, அன்னம்போய் கன்னி அருகு அணைய - அன்னமானது பறந்து

1. சிலப். உஅ : கக - கரு.

சென்று தமயந்தியின் பக்கலில் சேர்தலும், நல்நுதலும் - அழகிய நெற்றியையுடைய தமயந்தியும், தன் ஆடல்விட்டு - தன்னுடைய பந்தடித்தல் முதலிய பொழில்விளையாடல்களை விட்டுவிட்டு, தனி இடம் சேர்ந்து - யாருமில்லாத ஒரு தனித்த இடத்தில் (அழைத்துப்) போய், ஆங்கு அதனை - அவ்விடத்தே அவ்வன்னத்தைப்பார்த்து, ஈங்கு என் நாடல் சொல் என்றாள் - நீ இங்கே (என்னை) நாடிவந்தது என்ன சொல் என்றாள்.

(க - ரை.) அன்னத்தைக் கண்ட தமயந்தி, அதைத் தனியிடத்தில் அழைத்துச் சென்று, 'நீ இங்கே என்னை விரும்பி வந்ததென்ன?' என்றாள் என்பதாம்.

(வி - ரை.) விடுத்த : தன்வினைப் பெயரெச்சம், அன்னம் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. கன்னி - கட்டழகுடையாள். தமயந்தி மங்கைப்பருவமுடையாளென்பதைக் குறித்தது. தனி இடம் - தனிமையாகிய இடம், பிறாக்குத் தெரியலாகாதென்ற கருத்தினால் விளையாடும் இடத்தைவிட்டு நீங்கித் தனித்த இடத்தில் அன்னத்தைக் கூட்டிச்சென்றனளென்க. (சுரு)

## தமயந்தியிடம், 'உனக்குக் கணவன் நள மன்னனே' என அன்னம் உரைத்தல்

**ருங. செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்கையர்கள்**
**தம்மனத்தை வாங்கும் தடந்தோளான்—மெய்ம்மை**
**நளன்என்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்**
**உளன்என்பான் வேந்தன் உனக்கு.**

(இ - ள்.) செம்மனத்தான் தண் அளியான் செங்கோலான் - நன்மனம் உள்ளவனும் அன்புகலந்த இரக்கமுடையவனும் அறநெறிதிறம்பா ஆட்சியுடையவனும், மங்கையர்கள் தம் மனத்தை வாங்கும் தடம்தோளான் - இளம் பெண்களின் மனத்தைத் தம்பால் இழுக்கின்ற நீண்டுயர்ந்த தோள்களையுடையவனும் ஆகிய, மெய்ம்மை நளன் என்பான் - உண்மையுள்ள நளனென்னும் பெயரையுடையான், மேல்நிலத்தும் நால்நிலத்தும் மிக்கான் - விண்ணுலகினும் மண்ணுலகினும் தனக்கு ஒப்பாரும் மிக்காருமின்றிப் புகழால் உயர்ந்தோன், உளன் - இருக்கின்றான், உனக்கு வேந்தன் - அவனே உனக்குத் காதலனாவான்.

(க - ரை) 'செம்மனம் முதலிய நற்பண்புடைய நளமன்னனே உனக்கு ஏற்ற கணவனாவான்' என, அன்னம் தமயந்தியை நோக்கிக் கூறிற்று என்பதாம்.

(வி - ரை.) செம்மனம் தண்ணளி செங்கோல் தடந்தோள் முதலியன அரசனின் ஏற்றத்தைக் குறித்து நின்றன. பண்பட்டு நல்வழிகளிற் படரும் நெஞ்சமும் அதுகாரணமாக எல்லா உயிர்களின்மீதும் செல்லும் இரக்கப்பண்பும். அவ்விரக்கத்தினால் நிகழும் சிறந்த அறமுறை தவறா ஆட்சித்திறனுங் கூறி, அவனது அகநிலை அழகைச் சுட்டிக்காட்டி, புறவழகான அவன் தோட் சிறப்பையும் தமயந்தி மனங்கவருமாறு எடுத்துரைத்தது. அன்னம், தான் நளமன்னற்குத் தூதாக வந்துள்ளமையால் தான் மேற்கொண்டு வந்த வினையை நன்கு விளக்கிக்காட்டி முடிக்கவேண்டுந் தன்மையைக் கருத்துட்கொண்டு அவள் உளங் கொள்ளுமாறு இவ்வாறு கூறிற்றென்க. மேல் நிலம்-மேலிடத்தி லுள்ள வானுலகம்; நால்நிலம், நால்வகைப்பகுப்புடைய இம் மண்ணுலகம். நால்வகை நிலம்: முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன இந்நிலங்களில் வாழும் மக்கள் வெவ்வேறியல்பினர். அவர்களுள்ளும் உயர்ந்த நிலனான விண்ணினும் இவனுக்கு ஒத்தநிலையினரில்லையென 'மிக்கான்' என்ற சொல்லால் விளக்கினர். செம்மனத்தான் முதலியன, பண்படியாகப் பிறந்த குறிப்புவினைப் பெயர்கள் வேந்தன் - ஈண்டுக் கணவன், தலைவனாதலால்.

உலக இயல், தாய்தந்தையர், செல்வமும் கல்வியும் உடையானுக்கே தம் மகளை மணமுடிக்க விரும்புவர்; உறவினர் நல்ல குலத்தை விரும்புவர்; வாழ்க்கைப்படும் பெண், தனக்கு மணவாளன் ஆகும் ஆடவன் அழகையே விரும்புவாள். இக்கருத்தினால், அன்னம், நளன் இவ்வெல்லாம் ஒருங்கே நிறைந்தவனென்பதை விரித்துக்கூறி இறுதியில் தோளின் அழகை விளக்கமாகத் தமயந்திக்குக் கூறிற்று. இக்கருத்தை வரும் நீதிவெண்பாவானும் அறிக.

'பெண்ணுதவுங் காலைப் பிதாவிரும்பும் வித்தையையே
எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய்—நண்ணிடையிற்
கூறியநற் சுற்றங் குலம்விரும்பும் காந்தனது
பேரழகு தான்விரும்பும் பெண்.' (அக)

என்பதறிக. (௨௩)

அன்னம், நளனுக்குத் திருமாலும் ஒவ்வான் எனல்

௨௪. அறங்கிடந்த நெஞ்சும் அருள்ஒழுகு கண்ணும்
மறம்கிடந்த திண்தோள் வலியும்—திறம்கிடந்த
செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு.

(இ - ள்) அறம்கிடந்த நெஞ்சும் - தருமம் குடிகொண்ட மனமும், அருள் ஒழுகு கண்ணும் - இரக்கவுணர்வே வழிகின்ற கண்களும், மறம்கிடந்த திண்தோள் வலியும் - வீரஞ்செறிந்த திண்மையான தோள்களின் வலிமையும் (உள்ளவனுகை இருப்பதால்), அம் கண்மா ஞாலத்து அவற்கு - அழகிய இடத்தையுடைய இப்பெரிய மண்ணுலகத்தில் அந்நளனுக்கு, செம்கண் மால் அல்லனேல் மேதக வேந்தர் ஒப்பரோ - செங்கண்ணனுகிய திருமாலே ஒவ்வாணுைல் மற்றத் தேரூர்ந்து செல்லும் அரசாகள் இவனை ஒத்தவராகக் கூறலாமோ? (கூறலாகாதென்றபடி.)

(க - ரை.) ஆற்றல்மிக்க திருமால்கூட இந் நளனுக்கு ஒவ்வான்; அவ்வாறுனல் மண்ணுலக அரசர் அவனுக்கு எவ்வாறு ஒப்பாவர்? யாரும் இல்லை, என்பதாம்.

(வி - ரை.) மால் - தன் அளவற்ற பெருமையால் எல்லோரையும் மயக்குவோன் என்பது பொருள். ஒப்பரோ - என்பதில் ஓகாரம், ஒவ்வார் என்ற பொருளைத் தருதலால் எதிர்மறைப் பொருளில் வந்தது. அவற்கு என்பதிலுள்ள நான்காம் வேற்றுமைக்'கு'வ்வுருபு, நேர்சியிப்பொருளில் வந்தது. அரசர்கள் கண்ணேட்டம் இல்லாதவர் என்பது பொதுவாகக் கூறப்படும் உண்மை. [1]'கண்ணிலன் உள் வெயர்ப்பிலன்' எனக் குமரகுருபரரும், [2]'மாக்கண்ணே மண்ணாள்வார்கண்' என முதொள்ளாயிரமும், [3]'நாக்கரியும் தயமுகனர் நாகரிகர் அல்லாமை' எனக் கம்பரும் கூறுவனபோலன்றி இவன் பேரிரக்கமிக்கானென்பாராய், 'அருள் ஒழுகு கண்' என்றார். அருள் ஒழுகுதலாவது முறைவேண்டினேர்க்கும் குறைவேண்டினேர்க்கும் அவை கேட்டு அருள்செய்கின்ற இரக்கப்பண்பு. (சஎ)

அன்னத்தால் நளன் சிறப்பைக்கேட்ட தமயந்தி
காதலால் நிறம் வேறுபடல்

௫௫. புள்ளின் மொழியினேடு பூவாளி தன்னுடைய
உள்ளம் கவர ஒளியிழந்த—வெள்ளை
மதியிருந்த தாமென்ன வாய்ந்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன்.

(இ - ள்.) வண்டின் பொதி இருந்த மெல் ஓதி பொன் - வண்டுக் கூட்டங்கள் தங்கிய மெல்லிய கூந்தலையுடைய திருமக

1. நீதிநெறி : சக. 2. முதொள் : க0க.
3. கம்பரா, சூர்ப்ப : கஉ௫.

ளையை தமயந்தியானவள், புள்ளின் மொழியினெடு - அன்னத்தின் சொல்லுடன், பூவாளி - (மன்மதனுல் விடப்படுகின்ற) மலரம்புகள், தன் உடைய உள்ளம் கவர - தன் மனத்தைக் கொள்ளைகொண்டு தன் வயப்படுத்தியதால், ஒளி இழந்த - தன்னுளி குறைந்த, வெள்ளைமதி இருந்தது ஆம் என்ன - வெண்ணிலவு இருந்த தென்னும்படி, வாய்ந்து இருந்தாள் - (காதலால் உள்ளம் கவற்ற) வெண்மை நிறம்பொருந்தி (வெளுத்து) இருந்தாள்.

(க - ரு) நளன் பெருமையைக்கேட்ட தமயந்திக்குக் காதல்மிக்கு வளர்ந்தமையால் தன் நிறம் குன்றி வெளுத்துப் போயிருந்தாள் என்பதாம்.

(வி - ரை.) புள் என்னும் பறவைப் பொதுச்சொல் ஈண்டு அன்னத்தைக் குறித்து நின்றது. பூ ஆளி - பூவையே தனக்கு உரிமையாகக் கொண்டு ஆட்சி புரிவோன் என்றும், பூவாளி: பூவாகிய வாளியையுடைய மன்மதன் எனப் பண்புத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகையாகவும் கோடலுமாம். கவர: செயவென் வாய்பாட்டு வினையெச்சம், ஈண்டுக் காரணப் பொருட்டாய் இறந்தகாலங் காட்டிற்று. காதல் மிககாக்கு உடல் உறுப்புகளெல்லாம் மெலிதலும், அதனுல் மேனி வெளுத்தலும் இயற்கையாதலால், 'வெள்ளை மதியிருந்ததாமெனவாய்ந்திருந்தாள்,' என்ருர். வெள்ளை மதி-பகற்பொழுது காணப்பெறும் சந்திரன். அஃது ஒளி குன்றி வெளுத்திருப்பது போன்றதன்மை. இவ்வாறே திருவள்ளுவரும்,

> [1]'சாயலும் நாணும் அவர்கொண்டார் கைம்மாறு
> நோயும் பசலையும் தந்து.'

என்று கூறுவதும் காண்க. (௩௮)

நளன் காதலை அன்னம் கூறத் தமயந்தி மயங்குதல்

௩௯. மன்னன் மனத்தெழுந்த மையல்நோய் அத்தனையும்
அன்னம் உரைக்க அகமுருகி—முன்னம்
முயங்கினுள் போல்தன் முலைமுகத்தைப் பாரா
மயங்கினுள் என்செய்வாள் மற்று.

1. திருக்: ககஅங.

(இ - ள்.) மன்னன் மனத்து எழுந்த - நளவேந்தன் நெஞ்சில் தோன்றியுள்ளதான, மையல்நோய் அத்தனையும் - (தமயந்திபால் கொண்ட) காதல்நோய் எல்லாவற்றையும், அன்னம் உரைக்க - அன்னப்பறவை எடுத்து விளக்கிச்சொல்ல, அகம் உருகி - (தமயந்தியின்) உள்ளம் கரைந்து, முன்னம் முயங்கினாள்போல் - (நளனுக்கு மாலை சூட்டுதற்கு) முன்பே அவனைச் சேர்ந்தவள் போன்று (மிக்க ஆசையுடையளாய்), தன் முலைமுகத்தைப் பாரா மயங்கினாள் - தன்னுடைய மார்பைப் பார்த்து (நளன்பால்) காதல் மயக்கம் கொண்டாள், மற்று என் செய்வாள் - வேறு அவள் யாது செய்ய முடியும்?

(க - ரு.) நளன் கொண்ட காதலை அன்னம் கூறக் கேட்ட தமயந்தி மிக்க காதல்மயக்கங்கொண்டாள் என்பதாம்.

வி - ரை. நளன் கொண்ட காதலை அன்னம் கூறக் கேட்டவுடன் தமயந்தி மிக்க காதல்கொண்டு மனங் கரைந்தாள். அதனால் அவள்தன் கொங்கைகள் விம்முதலுற்றன. அதனால் அதைப் பார்த்துப் பார்த்து மயக்கமுற்றாள் என்க. காதல் கொண்டார்க்குத் தோள் மெலிதலும் உடல் மெலிதலும் இயற்கை. ஆனால் கூடினாற்போல் மனங் களிகொள்வார்க்கு உறுப்புக்கள் யாவும் விம்மிப் பெருமிதங்கொண்டு மேலும் மேலும் காதலர்க்குக் காதலுணர்ச்சியை வளர்ப்பனவாகும். இதனைக் கம்பநாடர் இராமாயணப் பெருங் காப்பியத்தில் 'இராமன் வில்லை எடுத்தான், வளைத்தான், முறித்தது' என்று கன்னிமாடத்திருந்த சீதைக்கு அவள் தோழி சொல்லினாள். அவள், இராமனுடைய அங்க அடையாளங்களையெல்லாம் சீதை இராமனைக் கண்ட காட்சிப்படி கூறினாள். அதைக் கேட்டதும் அவள் உறுப்புக்களெல்லாம் காதலால் விம்மின; வளர்ந்தன; ஆனால், அதனினும் சிறப்பாகப் பெண்ணுறுப்பு வளர்ந்தது என்று கட்டுரைக்கின்றார்.

"கோமுனி உடன்வரு கொண்டல் என்றபின்
தாமரைக் கண்ணினான் என்னும் தன்மையால்
ஆமவ னேகொலென் றையம் நீங்கினாள்
வாமமே கலையினுள் வளர்ந்த தல்குலே.'

என்பதாம். காமம் தன்னைக் கொண்டாரைச் சுட்டெரிக்கும் தன்மைத்தாகலின் 'என்செய்வாள்?' என்றார்.

---

1. கம்பராமா. கார்முகப் : ௬௨.

"[1]ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு
நீருட் குளித்தும் உயலாகும்—நீருட்
குளிப்பினும் காமம் சுடுமேகுன் றேறி
ஒளிப்பினுங் காமம் சுடும்'

என்பது ஆன்றோர் திருமொழி ஆகலின். (சக)

### தமயந்தி, தன் நிலையை நளனுக்கு உணர்த்த அன்னத்தை விடுத்தல்

ருஎ. வாவி உறையும் மடவனமே என்னுடைய
ஆவி உவந்தளித்தாய் ஆதியால்—காவி னிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி என்று
பார்வேந்தன் பாவை பதைத்து உரைத்தாள்

(இ - ள்.) பார்வேந்தன் பாவை - உலகத்துக்கு அரசனாகிய வீமராசனுடைய மகளாகிய தமயந்தி, பதைத்து - மனந்துடிப்புற்று, வாவி உறையும் மட அனமே - (பூந்) தடாகத்தில் வாழ்கின்ற இள அன்னமே!, சென்று - (நீ இங்கிருந்து) போய், காவின் இடைத் தேர் வேந்தற்கு - பூஞ்சோலையில் இருக்கின்ற தேரையுடைய நளமன்னனுக்கு, என் நிலைமை உரைத்தி - என் தன்மையை (இப்போது நீ காண்கின்றவாறே) உரைப்பாயாக: (அவ்வாறு உரைத்தால்), என் உடைய ஆவி உவந்து அளித்தாய் ஆதி - என்னுடைய உயிரை எனக்கு விருப்பத்தோடு தந்தாயாகின்றாய். என்று உரைத்தாள் - என்று தமயந்தி கூறினாள்.

(க - து) 'ஏ அன்னமே! நீ சென்று என் நிலைமையை நளவேந்தனுக்கு எடுத்துரைத்தால் என் உயிரை நீயே தந்ததாகும்' என்று தமயந்தி அன்னத்தை நோக்கிக் கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) வாவி - தடாகம். பூவில் அன்னப் பறவைகள் வாழ்வதால் பூந்தடாகம் என்று பொருள் உரைக்கப்பட்டது. காதல் மிகுதியினால் தமயந்தியின் உயிர் போவது வருவதாக ஊசலாடிக் கொண்டிருக்கின்றது. அதனால் தன்னுயிர் போகும்; தான் இறந்துபடுதல் கூடுமென்னும் எண்ணத்தினால் விரைந்து சென்று என்னிலைமையை வேந்தனுக்கு உரைப்பாயாக என வேண்டுவோளாய்த் 'தேர்வேந்தற்கு என்னிலைமை உரைத்தி, ஆவி

1. நாலடியார் : ௯௦.

உவந்தளித்தாய் ஆதி' என்றாள் என்க. 'உவந்தளித்தாய்' என்பது தெளிவுபற்றி ஈண்டு எதிர்காலம் இறந்த காலமாகக் கூறப்பட்டது. ஆதி - ஆவாய்: முன்னிலை ஒருமை. தேர் வேந்தன் என்றமையால் விரைவில் வருந் தகுதியுடையான் என்னும் கருத்துடை அணியாக அமைந்தது. (ருO)

தமயந்தியிடமிருந்து நளன்பால் அன்னம் திரும்பிவரல்

ருஅ. மன்னன் புயநின் வனமுலைக்குக் கச்சாகும்
என்ன முயங்குவிப்பேன் என்றன்னம்—பின்னும்
பொருந்தவன்பால் ஓதிமலர்ப் பூங்கணைகள் பாய
இருந்தவன்பால் போன தெழுந்து.

(இ - ள்.) மன்னன் புயம் - நளமன்னனுடைய தோள்கள், நின் வனமுலைக்கு - நின் அழகிய கொங்கைகட்கு, கச்சு ஆகும் என்ன - மார்க்கச்சு ஆகும் என்னும்படி, முயங்குவிப்பேன் என்று - தழுவச் செய்வேன் என்று, பின்னும் பொருந்த - மறுபடியும் தமயந்தியின் மனம் ஏற்றுக்கொள்ளுமாறு, அன்பால் ஓதி - அன்போடு கூறிவிட்டு, மலர் பூ கணைகள் பாய இருந்தவன் பால் - (மன்மதனுடைய) அழகிய மலரம்புகள் தைக்கும்படி (அவைகட்கு இலக்காக) இருந்த நளனிடத்து, எழுந்து போனது - உயரப் பறந்து சென்றது.

(க - து.) 'உன்னை எவ்வாற்றானும் நளமன்னனை மணக்கச் செய்வேன்' என்று அன்னப்பறவை தமயந்திக்குச் சொல்லிவிட்டு நளனிடம் சென்றது, என்பதாம்.

(வி - ரை.) 'நளவேந்தன் தோள்கள் தமயந்தியின் கொங்கைகட்குக் கச்சாகும்படி முயங்குவிப்பேன்' என்றது, அவன்றன் தோள்களைத் தண்வளியும் இடையறுத்துச் செல்லாவண்ணம் இறுகத் தழுவி மறைத்தல் என்று கூறியவாறும். முயங்குவிப்பேன்: பிறவினை எதிர்காலத் தன்மை வினைமுற்று. 'அன்பால் ஓதி' என்பதில் 'ஆல்' உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. அன்பால் ஓதல், மனக்கசிவோடு எடுத்துரைத்தல். பாய: செயவெனெச்சம், நிகழ்காலம் காட்டிற்று. போனது: இறந்த கால ஒன்றன்பால் படர்க்கை வினைமுற்று. போயினது என்பது போனதென மரூஉ ஆயிற்று. (ருக)

### தோழிகள், தமயந்தியின் காதல் நிலையை அவள் தாய்க்குரைத்தல்

௫௯. கோற்றவன்தன் தேவிக்குக் கோமகள்தன் தோழியர்கள்
உற்ற தறியா உளநடுங்கிப்—பொற்றொடிக்கு
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி.

(இ - ள்.) கோமகள்தன் தோழியர்கள் - வேந்தன் மகளாகிய தமயந்தியினுடைய தோழிப் பெண்கள், உற்றது அறியா உளம் நடுங்கி - அவளுக்குற்ற காதல் நோயை அறிந்து நெஞ்சம் துணுக்குற்று, கொற்றவன்தன் தேவிக்கு - வீமராசனுடைய மனையாளிடம் (போய்), பொன்தொடிக்கு வேறுபாடு உண்டு என்றார் - பொன்வளையலையணிந்த (உன் மகளாகிய) தமயந்திக்கு (இதுகாலை என்றுமில்லாத) வேறுபாடு உண்டு என்று கூறினார்கள், அதனை - அச் செய்தியை, பெற்ற கொடி வேந்தனுக்கு கூறினாள் - அவளைப் பெற்றவளாகிய வீமன் மனைவி வீமராசனுக்கு அறிவித்தாள்.

(க - து.) தமயந்தியின் வேறுபாடுற்ற நிலைமையைத் தோழியர் அவள் தாய்க்குக் கூற அவள் அரசனுக்கு அறிவித்தாள் என்பதாம்.

(வி - ரை.) தேவிக்கு - தேவியிடம் என்று பொருள் தருதலால் வேற்றுமை மயக்கம்.

> [1]"யாதன் உருபிற் கூறிற் றாயினும்
> பொருள்செல் மருங்கில் வேற்றுமை சாரும்."

என்பது தொல்காப்பியம் கூறும் விதியாகலான். அறியா - அறிந்து: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம், இறந்த காலம்;

> [2]"செய்து செய்பு செய்யாச் செய்யூ
> செய்தெனச் செயசெயின் செய்யிய செய்யியர்
> வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
> ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும்."

1. தொல். சொல்: ௨௬. 2. நன்னூல், ௩௪௩.

என்னும் நன்னூல் விதி அறிக. 'உளம் நடுங்குதல்' யாது நேருமோ, அரசன் ஒறுப்புக்கு ஆளாக நேருமோ என அஞ்சி ஒடுங்குதல். வேறுபாடு உண்டு என்றார் என்பது, அரசிக்கு வெளிப்படையாகக் கூறாமல் குறிப்பால் உணர்த்தியவாறாம். பொற்றொடி, கொடியென்பன, அன்மொழித் தொகைகள். (௩௨)

**வீமன், தமயந்தியின் மாளிகைக்குச் செல்லுதல்**

௩௰. கருங்குழலார் செங்கையினால் வெண்கவரிப் பைங்கால்
மருங்குலவ வார்முரசம் ஆர்ப்ப—நெருங்கு
புரிவளை நின்றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற
வரிவளைக்கை நல்லாள் மனை.

(இ - ள்.) கரும் குழலார் - கரிய கூந்தலையுடைய பணிப் பெண்கள், செம்கையினால் - சிவந்த தம் கைகளினால், வெண் கவரி - வெண்மை நிறமுள்ள சாமரைகளின், பைங்கால் மருங்கு உலவ - குளிர்ந்த காற்று வருமாறு தன் இருபக்கங்களிலும் வீசச் செல்லவும், வார் முரசம் ஆர்ப்ப - வாரால் கட்டப்பட்ட பேரிகை முழங்கவும், நெருங்கு புரிவளை நின்று ஏங்க - நெருக்கமுற்றுச் சுழிந்துள்ள சங்குகள் தவறாமல் முழங்கவும், போய்-(வீமமன்னன்) சென்று, பெற்ற வரி வளை கை நல்லாள் மனை புக்கான் - தான் பெற்றெடுத்த அழகிய வளையலையணிந்த கைகளையுடைய தமயந்தியின் மாளிகைக்குச் சென்றான்.

(க - து.) சாமரை யிரட்டவும் பேரிகை முழங்கவும் சங்கம் ஒலிக்கவும் வீமன்சென்று தமயந்தியின் மாளிகையைச் சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) கருங்குழல்: பண்புத்தொகை. கருமை செம்மை வெண்மை பசுமை இவைகள் பண்புப்பெயர்கள், ஒன்றுக்கொன்று முரணு (மாறுபாடா)க வந்தமையால் முரண்தொடைகள். உலவ, ஆர்ப்ப, ஏங்க என்பன செயவென் எச்சங்கள், வினைச்செவ் வெண்ணக வந்தன. உல - உலா. குறிலின்கீழ்வந்த ஆகாரம் குறுகிவந்தது; புறா, புறவு, நிலா, நிலவு, சுறா, சுறவு என்பன போலக் கொள்க.

"குறியதன் கீழ்ஆ குறுகலும் அதனோடு
உகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின்.'[1]

என்னும் நன்னூல் விதிப்படி குறுகி உகரம் ஏற்றது காண்க.

---

1. நன்னூல்: ௧௭௨.

அரசர்கள் தாம் செல்லுங்கால் அவர்தம் வினைஞர்கள், உரிமைச் சின்னங்களான கவரி, முரசு, சங்கு முதலியவற்றுடன் சென்று, தத்தம் வினையாற்றுதல் மரபாதலால், வீமராசன் தன் மகளின் அந்தப்புர இருக்கைக்குச் சென்றபோதும் இவைக ளுடன் சென்றனென்க. (௫௩)

### தமயந்தி தன் தந்தையை வணங்குதல்

௫௪. கோதை சுமந்த கோடிபோல் இடைநுடங்கத்
தாதை திருவடிமேல் தான்வீழ்ந்தாள்—மீதெல்லாம்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தாரம் மெல்லோதிப் போன்.

(இ - ள்.) களிவண்டு காந்தாரம் பாடி - தேனுண்டு களி கொள்கின்ற வண்டுகள் காந்தாரமென்னும் பண்ணிசைத்துப் பாடி, மீது எல்லாம் நின்று அரற்றும் மேலெல்லாம் தங்கி இசைக்கின்ற, பூ தார் அம் மெல் ஓதி பொன் - பூமாலைபுனைந்த அழகிய மெல்லிய கூந்தலையுடைய திருமகள் போன்ற தமயந்தி, கோதை சுமந்த கொடிபோல் - கூந்தலைத்தாங்கிய பூங்கொடி போலாக, இடை நுடங்க - இடை துவள, தாதை திருஅடிமேல் வீழ்ந்தாள் - தன் தந்தையாகிய வீமமன்னன் திருத்தாளகளின் மேல் விழுந்து வணங்கினாள்.

(க - ரு.) தமயந்தி, கோதைசுமந்த கொடிபோல் இடைதுவளத் தன் தந்தையின் திருவடிகளில் விழுந்து பணிந்தாள் என்பதாம்.

(வி - ரை.) பொன் - திருமகள். தன் தந்தையைக் கண்ட வுடன் தமயந்தி எழுந்து அவன் திருவடிகளில் விழுந்து பணிந் தாள்; பணியச்செல்லுங்கால் அவள் கூந்தல்பாரம் பின் இழுக்க, நடையின் விரைவு முதலியன முன் இழுக்க, அவைகளின் சுமை தாங்கலாற்றாத சிற்றிடை, மெலிந்து துவண்டு நின்றதனை, 'இடை நுடங்க' என்றார். அன்றலர்ந்த மலர்களால் தொடுக்கப் பெற்ற மாலைகளைக் கூந்தலில் புனைந்து விளங்குகின்றாளாகலின், அம்மாலையிலுள்ள தேன்களை உண்டு களித்த வண்டுகள், அம் மகிழ்வின் பெருக்கால் காந்தாரம் பாடிப் பறந்து, தமயந்தி உடலகமெங்கும் மற்ற வெளியிடங்களிலும் நின்றகாட்சியைக் 'காந்தாரம்பாடிக் களிவண்டு நின்றரற்றும்' என்று வியப்புத் தோன்ற உரைத்தார். இவ்வாறே,

[1]"பொன்பாற் பொருவும் விரையல்லி
புல்லிப் பொலிந்த பொலந்தாது
தன்பாற் றழுவும் பொறிவண்டு
தமிழ்ப்பாட் டிசைக்கும் தாமரையே.'

என்றார் கம்பநாடரும். இடையின் சிறுமையைத் தலைவன் கூற்றாகத் திருவள்ளுவரும்,

[2]"அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.'

என வியந்ததூஉம் இதனோடு ஒப்ப நோக்கி மகிழ்க. ஓதி - கூந்தல். மென்மை அதன் சிறப்பை விளக்கவந்தது. (நு௪)

**தமயந்தியின் உள்ள நிலை யுணர்ந்து வீமன் சுயம்வரம் காண எண்ணல்**

சு௨. பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதல்மேல்
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப்—பாராக்
குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளும் மணம்.

(இ - ள்.) பேர் அழகு சோர்கின்றது என்ன - மிக்க அழகானது பொங்கித் ததும்பி வழிந்தோடுவதுபோல், பிறைநுதல் மேல் - மூன்றாம் பிறையையொத்த நெற்றிமீது, நீர் அரும்ப நின்றாள் தன் பேதையை - வியர்வைநீர் தோன்ற நின்றவளாகிய தன் மகளை, குலவேந்தன் பாரா - (சூரிய) குலத்தோன்றலாகிய வீமமன்னன் கண்டு, கோ வேந்தர் தம்மை - இம்மண்ணுலக அரசர்களை, மலர் வேய்ந்துகொள்ளும் மணம் - (அவருள் ஒருவனைத் தன் கணவனாகக் கொண்டு) பூமாலை சூட்டுகின்ற தன் உரிமை (சுயவர)த் திருமணம் (ஏற்படுத்த), சிந்தித்தான் - (அக்கால்) எண்ணினான்.

(க - நு.) வீமமன்னனனவன் தமயந்தியின் நெற்றி வியர்வை நீரைக்கண்டு தமயந்திக்குக் காதல் மிக்கதெனை உணர்ந்து, சுயம்வரம் ஏற்படுத்த எண்ணினான் என்பதாம்.

(வி - ரை.) பேர் + அழகு - பெரிய அழகு. அஃதாவது தலைசிறந்த அழகு. பெருமை என்னும் பண்புப்பெயர், மைவிகுதி

1. கம்பராமா, பம்பாநதிப்: உ௬. 2. திருக்: ககக௫.

கெட்டு 'ரகர' மெய்யின்மேல் ஏறிநின்ற உகரம்போய் முதனிலை நீண்டு அழகு என்னும் வருமொழியுடன் புணர்ந்து 'பேரழகு' என்றாயிற்று.

[1]'ஈறு போதல் இடைஉகரம் இயாதல்
ஆதி நீடல் அடிஅகரம் ஐயாதல்
தன்னொற் றிரட்டல்முன் னின்றமெய் திரிதல்
இனமிகல் இனையவும் பண்பிற் கியல்பே.'

என்னும் நன்னூல் விதியும் காண்க.

நெற்றிமீது வேர்வைநீர் சொட்டுதல், காதலால் ஆம் செயல் எனக் குறிப்பினால் உணர்ந்த மன்னன், தன் மகளுக்குச் சுயம்வரம் காண எண்ணினான் என்பாராய் 'குலவேந்தன் சிந்தித்தான்' என்றார்.

கோ - பூமி; மண்ணுலகம். கோ என்பது பூமி யென்பதனை,

[2]'அந்தரம் குலிசம் பாசிஞே டத்திரம்
வந்த நீர்திசை மலைவேல் மன்னவன்
விழிபசு கோவென வேண்டினர் புலவர்.'

என்னும் சேந்தன் திவாகர நூற்பாவால் அறிக.

கோவேந்தர் - அரசர்க்கரசர் என்று பொருள் கொள்ளலுமாம். மலர் வேய்தல் - மணமாலை சூட்டல். (ருரு)

### வீமன், தமயந்தியின் சுயம்வர நாளைக் குறிப்பிட்டு எங்கும் அறிவித்தல்

சுரு. மங்கை சுயம்வரம்நாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடும் நன்னாடன்
வேந்தர்மேல் தூதோட விட்டு.

(இ - ள்.) பைங் கமுகின் கூந்தல் மேல் - பசுமை நிறம் பொருந்திய பாக்குமரத்தின் கூந்தற் பாளையின்மீது, கங்கை கொழுந்து ஓடும் நல்நாடன் - கங்கையாற்றின் வெள்ளநீர்த் திரள்கள் பாய்ந்து ஓடுகின்ற நீர்வளமிக்க நல்ல விதர்ப்பநாட்டு

1. நன்னூல்: கருசு.
2. சேந்தன் திவாகரம், அந்தத்துப்பொருள்.

வேந்தனாகிய வீமமன்னன், வேந்தர்மேல் தூது ஓடவிட்டு - மற்ற நாட்டு மன்னர்கள்பால் விரைந்துசென்று (சுயவரம் நாளை) அறிவிக்குமாறு தூதுவர்களை ஏவி அனுப்பி, மங்கை சுயம்வரம் நாள் ஏழ் என்று - தமயந்தியின் சுயம்வரத் திருமணநாள் இன்னும் ஏழு நாட்களில் என்று, வார் முரசம் - வார்தூக்கிக் கட்டிய பேரிகையை, எங்கும் அறைக - தன்நாடு முழுதும் அடியுங்கள், என்று இயம்பினான் - என்று (முரசறைவோர்க்குக்) கட்டளையிட்டான்.

(க - ரை.) வீமன், தமயந்தியின் சுயம்வரத் திருமணம் இன்னும் ஏழுநாட்களில் என்று வேற்றுநாட்டு அரசர்க்கு ஆள் அனுப்பியும், தன் நாடு நகர்களில் பறையறைந்தும் தெரிவித்தான் என்பதாம்.

(வி - ரை.) சுயம்வரம் - ஒரு பெண் தானே தன் விருப்பப் படி ஒரு கணவனை மணத்தல். நீர்வளத்தினும் நிலவளத்தினும் தன்னேரில்லாத் தனிமுதல் நாடு என்பதை உணர்த்தற்கு 'பைங்கமுகின்........... நன்னாடன்' என்றார். கொழுந்து - நுனி. கங்கைக் கொழுந்து - நீரின் மேலிடம். ஏழ் - ஏழென்னும் நாள் அளவினைக் குறித்தலால் எண்ணல் அளவையாகு பெயர். (ருசு)

தமயந்தி சுயம்வரச் செய்தியறிந்த அரசர் பலரும் எங்கும் நிறைந்து வருதல்

கூசு. மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்கும்
தாமத் தரிச்சந் திரன்சுவர்க்கி—நாமத்தால்
பாவேய்ந்த செந்தமிழாம் என்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம்.

(இ - ள்.) மாமுத்த வெண்குடையான் - சிறந்த முத்துப் போன்ற வெண்மை நிறம் பொருந்திய வெணகொற்றக் குடையை யுடையோனும், மால் களிற்றான் - பெரிய யானையையுடை யோனும் ஆகிய, வண்டு இரைக்கும் - வண்டுகள் பாடுகின்ற, தாமத்து அரிசசந்திரன் சுவர்க்கி - மலர் மாலையை அணிந்த சிங்கேறு போன்ற சந்திரன் சுவர்க்கியினுடைய, நாமத்தால் - பேர்கொண்டு, பா வேய்ந்த - பாடல் பாடிய, செந்தமிழ் ஆம் என்ன - செந்தமிழ் என்று கூறும்படி, கோ வேந்தர் செலவ குழாம் - பூவுலகாளும் மன்னர்களின் சிறந்த கூட்டம், பரந்தது - (வீமன் நகருக்கு வருதற்கு நான்கு திசைகளிலும்) பரவிவந்தது.

(ந - து.) தமயந்தி சுயம்வரத்திற்காக வருவதற்கு அரசர் கூட்டம், நான்கு திசைகளிலும் எங்கும் பரவியது என்பதாம்.

(வி - ரை.) மாமுத்த வெண்குடை: உவமத் தொகையாகக் கொண்டு முத்துப்போன்ற வெண்மை நிறம் பொருந்திய குடையென்று பொருளுரைக்கப்பட்டது. மால்களிறு - மதங்கொண்டு மயக்கமிக்க யானையெனப் பொருள் கொள்ளலுமாம். சந்திரன் சுவர்க்கிமீது புனைந்த பாக்கள் மண்ணுலகெல்லாம் பரவிப் பெருகுவதுபோல, இவ்வரசர் குழாமும் பெருகிற்று என, தமக்கு நலஞ்செய்த வேந்தனை ஏற்ற இடத்தில் அவன் புகழ்ச்சி தோன்றக் கூறினார். குழாம் - கூட்டம். (௩எ)

சுயம்வரத்துக்கு வந்த அரசர் கூட்டம்
நகரெங்கும் பரந்திருந்தது

௩௫. சேந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள் வளர்மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய்—வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரில் ஈண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து.

(இ - ள்.) சேந்து அடையும் - மகரந்தப் பொடியில் மொய்க்கின்ற, வண்டு உறைதார் - வண்டுகள் தங்குகின்ற மலர்மாலையணிந்த, செய்யாள் வளர்மார்பன் - திருமகள் வாழுகின்ற மார்பையுடைய வீமமன்னனின், கந்து அடையும் - கட்டுத் தறியைச் சார்ந்து நிற்கின்ற, வேழ கடை தலைவாய் - யானைகளையுடைய தலைவாசலிடத்து, கோவேந்தன் மாதை குறித்து - வேந்தா வேந்தனான வீமராசன் மகளின் சுயம்வரத்தை முன்னிட்டு, வந்து அடைந்த - வந்து சேர்ந்த பூவேந்தர் தங்கள் கிளை - மண்ணுலக அரசர்களின் கூட்டம், பொன் நகரில் ஈண்டிற்று - அழகான அக் குண்டினபுரத்தில் பரந்திருந்தது.

(க - து.) தமயந்தியின் சுயம்வரம் காணவந்த அரசர் கூட்டம் அரண்மனையிலன்றி நகர் முழுதும் நெருங்கிப் பரவி இருந்தது என்பதாம்.

(வி - ரை.) சேந்து - மகரந்தப் பொடி; பூந்துகள். வண்டுகள் தேனைவிரும்பி மொய்க்குமாதலால், வீமராசன் தேன் பொருந்திய மாலையணிந்த திருமகள் வாழும் மார்பினையுடையான்

என அரசன் ஏற்றம் கூறியவாறும். செய்யாள் - செம்மையுடையாள். திருமகள்:

"அகனமர்ந்து செய்யாள் உறையும்."[1]

என்னும் திருக்குறளையும் நோக்குக. பொன் நகர் - திருமகள் குடியிருக்கின்ற செல்வமிக்க நகரெனக் கோடலுமாம். ஈண்டுதல் - நெருங்குதல் : சேர்தல். (௫அ)

மன்னர் கூட்டம் பொய்கை முதலியவற்றிலும் சோலைகளிலும், பரவியிருந்ததெனல்

௬௬. புள்ளுறையும் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமும் இனிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்தன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

(இ - ள்.) தெள் அரி கண் பூமகளை - விளங்கித் தோன்றுகின்ற (செவ்) வரிபரந்த கண்களையுடைய திருமகளையொத்தவளும், பொன்னை - பொன்னையொத்த மேன்மைமிக்கவளும், பொருவேல் விதர்ப்பன் தன் கோமகளை - போர்புரிகின்ற வேற்படையையுடைய விதர்ப்ப நாட்டுவேந்தனாகிய வீமனுடைய செல்வமகளுமாகிய தமயந்தியை, தம் மனத்தேகொண்டு - தத்தம் மனங்களில் (ஆசை) வைத்துக்கொண்டு, புள் உறையும் சோலைகளும் - பறவைகள் வாழ்கின்ற சோலையிடங்களிலும், பூ கமல வாவிகளும் - அழகிய தாமரை படர்ந்த தடாகக்கரை ஓரங்களிலும், உள்ளும் புறமும் - அவைகளின் உள்ளிடம் வெளியிடங்களிலும், இனிது உறைந்தார் - இன்பத்துடன் தங்கியிருந்தார்கள்.

(க - ரு) தமயந்திமேல் ஆசையுற்றூராய் மன்னர்கள் பலரும் சோலையிடத்தும், தடாகத்திடத்தும் இன்பத்துடன் இருந்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) புள் உறைதல் - பயன்மரம் உள்ளிப் பழுந்தேர் பறவைகள் பலவும் தங்கியிருத்தல்; எனவே, சோலையின் வளங் கூறியவாறும். தடாகங்களில் சிறப்புமிக்கது, தாமரைகள் படர்ந்தது என்ப. இதனைச்,

"சந்திரன் இல்லா வானம் தாமரை இல்லாப் பொய்கை."[2]

என்னும் விவேக சிந்தாமணித் தொடரினுல் அறியலாம்.

1. திருக்குறள் : அசு. 2. விவேகசிந்தாமணி : சஎ.

'பூமகளை பொன்னை பொருவேல் விதர்ப்பன்தன் கோமகளை' என்றது, ஒரு பொருள்மேல் மூன்றடுக்கிவந்த சிறப்புச் சொற்கள். சுயம்வரம் காணிய வந்த அரசர்கள், அரசன் அரண்மனையில் இடம் போதாமையால், 'சோலைகளினும் பொய்கைகளினும் உள்ளிடத்தும் வெளியிடத்தும் தங்கி இன்பமாக இருந்தனர்' என, அரசர் கூட்டம் மிகுதியை உணர்த்தியவாறும். பொன் என்பதற்குப் பொன்னையொத்த மேன்மைமிக்கவளை யென உவமையாகக் கொண்டு பொருள் கூறப்பெற்றது, குணத்தாலும் ஒளியாலும் சிறப்பாலும் சிறப்புடையதாகலின். பொன்னை நெருப்பிலிட்டு உருக்கிவார்த்துப் புடம் போடப்போட மட்டற்ற மாற்றாக உயர்ந்து விளங்குவதுபோல, இவள் தன் தன்மை துன்பம் வந்தகாலத்தும் தன் கற்புத்திறத்தாலும் குணநலச் செம்மையாலும் உயர்ந்திருக்கின்றாளாதலால் பொன்னை ஒத்தனள் என்க. இவ்வாறே கம்ப நாடர் இராமாயணப் பெருங்காப்பியத்தில் காதைத் தலைவியாகிய சீதாதேவியைக் குறிக்குமிடத்தெல்லாம், [1]'பொன்னின் சோதி பூவினில் நாற்றம்' என்றும்,

[2]'பொன்னின் ஒளி பூவின்வெறி சாந்துபொதி சீதம்.'

என்றும்,

[3]'பொன்னைத் தீயிடைப் பெய்தல்
அப்பொன்னுடைத் தூய்மை, தன்னைக் காட்டுதற்கு.'

என்றும் பல்லிடங்களில் கூறிப்போந்தமை உணர்க.

[4]'சுடச் சுடரும் பொன்போல்.'

என்றார் திருவள்ளுவரும்.

'பொருவேல் விதர்ப்பன்' என்றது, கொலையிற் கொடியாரைக் கொன்று வென்று குடிகளைப் பாதுகாக்கும் நெறிமுறை தவறாத்தன்மையை. இதனை உட்கொண்டே கரிகாற் பெருவளத்தானைக் குறித்து அவன் ஏற்றங்கூறப்போந்த கடியலூர் உருத்திரங் கண்ணனார் என்னும் புலவர்பெருமகனார், அவன் வேலின் சிறப்பையேகுறித்து, பாலைநிலத்தின் வெப்பத்துக்கும் கொடுந் தன்மைக்கும் உவமையாக்கி,

[5]'வேலினும் வெய்ய கானம்.'

என்றதூஉம் காண்க. எனவே யிம மன்னனின் செங்கோல் திறனும் குடிபுறந்தரூஉம் கொள்கையையும் விளக்கியவாறும். (௩௯)

---

1, 2, 3. கம்பரா, மிதிலைக், ௨௩. கோலங்காண், ௨௮. மீட்சி: ௧௨௩.

4. திருக்குறள்: ௨௬௭. 5. பட்டினப்பாலை: ௩00.

தமயந்திபால் சென்ற அன்னம் வந்ததை, நளன் காண்டல்

சுஎ. வழிமேல் விழிவைத்து வாள்நுதலாள் நாம
மொழிமேல் செவிவைத்து மோகச்—சுழிமேல்தன்
நெஞ்சோட வைத்தயர்வான் கண்டான் நெடுவானில்
மஞ்சோட அன்னம் வர.

(இ - ள்.) வழிமேல் விழிவைத்து - (அன்னஞ்சென்ற) வழியின்மீதே தன் கண்பார்வையை நிறுத்தி, வாள்நுதலாள் நாம மொழிமேல் செவிவைத்து - ஒளிபொருந்திய நெற்றியையுடைய தமயந்தியின் பெயராகிய சொல்லின்மீதே தன் காதுப்புலனை நிறுத்தி, மோக சுழிமேல் தன் நெஞ்சு ஓட - (தமயந்தி மேற்கொண்ட) காதலென்னும் நீர்ச்சுழியில் தன்மனம் சுழன்று செல்லவிட்டு, அயர்வான் - வருந்துகின்றவனாகிய நள மன்னன், நெடுவானில் - நீண்ட வானத்தினிடத்துள்ள, மஞ்சு ஓட - மேகங்கள் (தன் சிறகின் காற்றினால் அலைப்புண்டு) ஓடும்படி, அன்னம் வர கண்டான் - அன்னம் (விரைவாக) வருவதைப் பார்த்தான்.

(க - து.) அன்னம் போனவழியை நோக்கி வருந்திக் கொண்டிருந்த நளன், அது திரும்பி வருதலைக்கண்டான் என்பதாம்.

(வி - ரை.) முன் அன்னம் தமயந்திபால் சென்றகாலை 'இவ்வளவிற் செல்லுங்கொல், இவ்வளவிற் காணுங்கொல்' என்று வருந்தியிருந்தானாகலான், அவன்றன் காதலுக்குக் கையாறுற்றிருந்த நிலையை 'வழிமேல் விழிவைத்து' என்றதுபோன்ற சொல் தொடர்களினால் விளக்கினார்.

மஞ்சு + ஓடு + அ + அன்னம்வர எனப் பிரித்து, வெண்ணிறமுள்ள மேகங்களுடன், அந்த அன்னமும் வெண்மைநிறமுடையதாகலின் வியப்புடன் மேகம் என்னும் படி வரக்கண்டான் என்று கொள்ளலுமாம். (சு0)

நளன், அன்னம் கூறுவதை விருப்புடன் கேட்டல்

சுஅ. முகம்பார்த் தருள்நோக்கி முன்இரந்து செல்வர்
அகம்பார்க்கும் அற்றேரைப் போல—மிகுங்காதல்
கேளா விருந்திட்டான் அன்னத்தைக் கேளாரை
வாளால் விருந்திட்ட மன்.

(இ - ள்.) கேளாரை வாளால் விருந்து இட்ட மன் - பகை வேந்தர்களைத் தன் வாளினால் பிணந்தின்னும் பறவை முதலியவை கட்கு விருந்துகொடுத்த நளமன்னன், செல்வர் முகம் பார்த்து - செல்வமிக்காரின் இன்முகக் குறிப்பைக் கண்டு, அருள் நோக்கி - அவர்களின் இரக்கத்தால் உண்டாகும் இன்சொல்லை எதிர் பார்த்து, முன் இரந்து - முன்னே இரப்புரை கூறிச் சென்று, அகம்பார்க்கும் - அவர்கள் தம் உள்ளக்கருத்தை அறிய எதிர் நோக்கி இருக்கும், அற்றோரை போல - வறிஞரைப்போன்று, மிகும்காதல் - தன்மேல் தமயந்திக்கு உண்டாகின்ற மிக்க ஆசையை, அன்னத்தை கேளா இருந்திட்டான் - அன்னத்தி னிடம் கேட்டுக்கொண்டிருந்தான்.

(க - ரு.) நளன், வேறொன்றின்மீது கருத்தைச் செலுத்தாமல், காதல் மிகுதிகொண்டு தமயந்தியைப் பற்றிக் கூறுகின்ற அன்னத்தின் சொற்களைக் கேட்பதில் கருத்தைச் செலுத்தினான் என்பதாம்.

(வி - ரை.) வறுமைமிக்கானொருவன், தனக்கு நலம்பெற விழைந்து செல்வர்தம் கடைவாயிலிற் சென்று அவர்தம் முகக் குறிப்பும் அகக்குறிப்பும் அறிந்து அவர் இட்ட வேலையைச் செய்து பின்திரிந்து இரந்துநிற்றல் உலகியல்பாதலான், 'முகம் பார்த்.............அகம்பார்க்கும் அற்றோரைப் போல' என்றார். திருவள்ளுவரும், கல்விகற்க விழைவான் ஆசிரியனிடத்துப் பணிவுடன் இருந்து கற்கவேண்டுமென்பதை விளக்கி உணர்த் துங்கால்,

[1]'உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றுங் கற்றார்.'

என்றார். அற்றோர் - வறியார்.

[2]'அற்றார் அழிபசி தீர்த்தல்.'

என்றவிடத்தும் இப்பொருள் தருதலை ஓர்க.

கேளா - கேட்டு: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இருந்திட்டான்: இறந்தகால வினையாலணையும் பெயர். இடு: துணைவினை. வாளால் விருந்திடுதல், தன்னை யெதிர்த்த பகை வரைக் கொன்று குவித்து அவர்தம் உடல் பிணந்தின் உயிரி களான கழுகு பருந்து நாய் நரி முதலியவைகட்குப் பயன்படச் செய்தல். இதனால் நளன் வெற்றிப்பெருமிதமும் வீரப் பண்பும் விளக்கியவாறாம். இருந்திட்டான், விருந்திட்டான் என்பன, சொல்லணி நயந்தோன்ற நின்றன. (சுக)

---

1, 2. திருக்குறள்: ௩௯௫; ௨௨௬.

நளன், 'தமயந்தி நலந்தானோ?' என அன்னத்தினிடம் வினவல்

௬௬. அன்னக் குலத்தின் அரசே அழிகின்ற
என்னுயிரை மீள எனக்களித்தாய்—முன்னுரைத்த
தேமொழிக்குத் தீதிலவே என்றான் திருந்தாரை
ஏமொழிக்கும் வேலான் எடுத்து.

(இ - ள்.) திருந்தாரை எம் ஒழிக்கும் வேலான் - பகை வேந்தர் செருக்கை அடக்கும் வேற்படை ஏந்திய நளன், அன்னச்குலத்தின் அரசே-அன்னப்பறவை இனத்திற்கு அரசே!, அழிகின்ற என் உயிரை - (தமயந்தியின் பொருட்டாக) வாடுகின்ற எனதுயிரை, மீள எனக்கு அளித்தாய் - மீண்டும் நிலைத்திருக்கும்படி எனக்குத் தந்தாய், முன் உரைத்த தேம் மொழிக்குத் தீது இலவே - முன்பே எனக்கு நீ சொல்லிய தேன்போலும் இன்சொல்லுடையாளாகிய தமயந்தி நலத்துடன் இருக்கின்றனளா? (என்று), எடுத்து என்றான் - உயர்குரலால் வினவினான்.

(க - ரு.) நளன், 'அன்னமே! உன் சொற்களால் என் உயிரைத் தந்தாய்; நீ முன்பு கூறிப்போன தமயந்தி நலந்தானோ?' என்று கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) அன்னத்தின் அழகும் உயர்பண்பும் தோன்ற, 'அன்னக்குலத்தின் அரசே!' என்றான். தமயந்திபால் தான் கொண்டிருந்த காதல், இருவருக்கும் ஒத்த தன்மையானதறிந்து, 'என் உயிரை மீள எனக்களித்தாய்' என்றான். அக்காதல் தமயந்திபால் மாறுபடுமாயின், தான் இறந்துபடுதல் ஒருதலை என்பதை நளன் அன்னத்திற்கு விளக்கிக்காட்டினான் என்க. ஏம்: ஏமம் என்பதன் கடைக்குறைந்து நின்றது; இன்பம் என்பது பொருள். [1]'ஏமமே சேமம் காவல் இன்பம்பொன் இரவே மையல்' என்னும் சூடாமணி நிகண்டால் அறிக. என்றான் என்பது வினவினான் என்னும்பொருளில் வந்தது. எடுத்தல் - குரலோங்கப் பேசுதல் என்னும் பொருளில் வந்தது. இஃது இப்பொருள் தருதலை,

[2]'எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பில்.'

என்னும் நன்னூலிலும் காண்க. (௬௬)

2. சூடாமணி, மகரயெதுகை : ௨. 1. நன்னூல் : ௮௮.

தமயந்தியின் காதலைக்கேட்ட நளன் அறிவழிதல்

எ0. கோற்றவன் தன் ஏவலினால் போயக் குலக்கோடிபால்
உற்றதுவும் ஆங்கவள் தான் உற்றதுவும்—முற்றும்
மொழிந்ததே அன்னம் மொழிகேட் டரசற்
கழிந்ததே உள்ள அறிவு.

(இ - ள்.) கொற்றவன்தன் ஏவலினால் - நளமன்னனுடைய வேண்டுகோளினால், போய் - (அன்னம்) தான்சென்று, அ குலக் கொடிபால் உற்றதுவும் - அக்கற்பின் கொழுந்தாகிய தமயந்தியினிடத்துச் சேர்ந்ததையும், ஆங்கு - அவ்விடத்து, அவள் உற்றதுவும் - அவள் (நளன் அழகு ஆற்றல் முதலியவற்றைக் கேட்டவுடன்) கொண்ட காதல்நோய்த்தன்மையையும், அன்னம் முற்றும் மொழிந்தது - அன்னப்பறவையானது யாவும் எடுத்துக் கூறிற்று, மொழி கேட்டு - அச்சொற்களைக் கேட்டவுடன், அரசற்கு - நளனுக்கு, உள்ள அறிவு அழிந்தது - எஞ்சியிருந்த அறிவும் மயங்கிற்று.

(க - து.) நளன், அன்னத்தால் தமயந்தியின் தன்மையைக் கூறக்கேட்டவுடன் உள்ள அறிவும் அழிந்தான் என்பதாம்.

(வி - ரை.) நளன் தமயந்தியின் தன்மைகளைச் சொல்லக் கேட்டபோதே அறிவுதிரிந்திருந்தான்; இதுகாலை அன்னம் போய் 'அவள் சம்மதிபெற்று வந்தேன்' என்று சொல்லியதைக் கேட்டவுடன், சிறிது இருந்த அறிவும் நிலைகலங்கித் திரிந்தது என்பாராய், 'அழிந்ததே உள்ள அறிவு' என்றார்.

கொற்றம் - வெற்றி. தொழிற் பெயரடியாகப்பிறந்த ஆண் பாற்படர்க்கைப் பெயர்; கொற்றவன் என வந்தது. நள மன்னன் காதல்மிக்க நிலையை இதனால் எடுத்துக் கூறினார். (சுரு)

அறிவழிந்த நளன் செயலற்றுக்கிடத்தல்

எக. கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
ஓட்டை மனத்தோ டுயிர்தாங்கி—மீட்டும்
குழியில் படுகரிபோல் கோமான் கிடந்தான்
தழலில் படுதளிர்போல் சாய்ந்து.

(இ - ள்) கேட்ட செவி வழியே - தமயந்தியின் நிலையைக் கேட்ட காதின்வழியாகவே, கேளாது உணர்வு ஓட - தன்னை யறியாமலே அறிவு ஓடிப்போக, ஓட்டை மனத்தோடு - உடைந்து போன நெஞ்சத்தோடு, உயிர்தாங்கி - உயிரைச் சுமந்துகொண்டு, மீட்டும் - அதன்பின்னரும், தழலில் படுதளிர்போல் சாய்ந்து - தீயினுள்பட்ட இளந்தளிரைப்போல் விழுந்தும், கோமான் குழியில் படுகரிபோல கிடந்தான் - நளமன்னன் கொப்பத்தில் விழுந்த யானைபோல் செயலற்றும் கிடந்தான்.

(க - ரு.) தமயந்தியைப்பற்றிக் கேட்ட நளன், தன் அறிவுமயங்கிச் செயலற்றுக்கிடந்தான் என்பதாம்.

(வி - ரை) கேட்ட செவிவழியே, முன் அன்னஞ் சொன்ன வற்றைக் கேட்டுக்கொண்டிருந்த காதின்வழியே, பின் கேளா தாயிற்று, காதலால் உணர்வுமயங்கிய காரணத்தால் என்பாராய்க் 'கேளா துணர்வோட' என்றார். கேட்ட : உடன்பாட்டு வினைப் பெயரெச்சம். கேளா : ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இவை முரண்தொடையாக வந்தன. ஓட்டை - உடைவு. மனம் தன் செயல் செய்யாது மயங்கி இருந்தமைதன்பதைச் சுட்டிக் கூறுவாராய், 'ஓட்டை மனம்' என்றார். அவன் மேனி நலம் வாடிற்று; கீழே படுத்தநிலையில் உணர்விழந்திருந்தான் என்பவை களைத் 'தழலிற் படுதளிர்போல், குழியிற் படுகரிபோல்' என்று உவமவாயிலாக எடுத்துக்காட்டிக் கூறினார். கோமான் : கோமகன் என்ற சொல்லின் மகர அகரம் நீண்டு, ககர வுயிர்மெய் கெட்டு நின்றது. யானையைப் பிடித்தற்குப் படுகுழிவெட்டி மேலே மூங்கிற் சட்டங்களைப் பரப்பி மண்போட்டு வாழை முதலிய தழை களை நட்டு வைப்பர். அதை உண்பதற்குக் கால் வைத்தவுடன் அக் குழியில் விழுந்து ஏறமுடியாது தத்தளித்துக் கிடந்து வருந்தும். பின்னர்ப் பன்னாள் அக்குழியில்போட்டு வதைத்துக் கொணர்வர். இது யானைகள் பிடிப்பார் இயல்பு. இக்கருத்தை உள்ளத்தமைத்த ஆசிரியர், நளன தமயந்திபாற் கொண்ட காதல் உணர்வு மயக்கத்துக்கு இவ்வியானை நிலையை உவமையாக அமைத்துக் குழியிற் படுகரிபோல்' என்றார். (எக)

வீமன் அனுப்பிய தூதுவர், நளன்பால்
தமயந்தி சுயம்வரச்செய்தி கூற வருதல்

எஉ. கோதை சுயம்வரநாள் கோறறவனுக் குற்றுரைப்ப
ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார்—போதில்
பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்
அடையாத வாயில் அகம்.

(இ - ள்.) கோதை சுயம்வரநாள் - தமயந்தியினது சுயம்வரமணத்திருநாளை, கொற்றவனுக்கு உற்று உரைப்ப - நளமன்னனுக்குச் சென்று அறிவித்தற்கு, ஏதம் இ(ல்)லா காட்சியர் - குற்றமற்ற தூதர்கள், போதில் பெடையோடு வண்டு உறங்கும் - மலர்களில் ஆண்வண்டுகள் தம் பெண்வண்டுகளுடன் தூங்குகின்ற, பேர் ஒலி நீர்நாடன் - மிசக ஓசையையுடைய நீர்வளம்பொருந்திய நிடதநாட்டு வேந்தனாகிய நளனுடைய, அடையாதவாயில் அகம் வந்து எய்தினார் - என்றும் அடைக்கப்பெறாத அரண்மனைத் தலைவாசலிற் சென்று சேர்ந்தனர்.

(க - ரு.) தமயந்தி சுயம்வரமணநாளை அறிவிக்க வீமன் விட்ட தூதுவர் நளன் அரண்மனைவாயிலில் சென்று சேர்ந்தனர் என்பதாம்.

(வி - ரை.) கோதை - ஆகுபெயராகத் தமயந்தியை உணர்த்திற்று. உற்று : பகுதி இரட்டித்து, இறந்தகாலம் காட்டிய வினையெச்சம். நீர்ப்பெருக்கு என்றும் மாறாத தட்பம் மிக்க நிடதநாடு என்பாராய்ப் 'பேரொலி நீர்நாடு' என்றார். 'அடையாத வாயிலகம்' என்பது, குறைவேண்டினோர்க்கும் முறைவேண்டினோர்க்கும் காட்சிக் கெளியனாயக் கருது பேரளியனாய் இருக்கும் நளன் சிறப்பை ஏற்றிக் கூறியவாறும்.

[1]"அடையா நெடுங்கதவும் அஞ்சலென்ற சொல்லும்
உடையான் சடையப்ப னூர்."

என்னும் கம்பநாடர் பாடலும் இதனை வலியுறுத்தும். (சுகு)

### தூதர், செய்தி அறிவித்தலும் நளன் குண்டினபுரம் புறப்படுதல்

எ௭. காவலன்தன் தூதர் கடைக்கா வலர்க்கறிவித்
தேவலிற்போய் ஈதென் றியம்புதலும்—மாவில்
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து.

(இ - ள்.) காவலன்தன் தூதர் - வீமராசனின் தூதுவர்கள், கடை காவலர்க்கு அறிவித்து - வாசற்காவலர்க்குத் (தாம் வந்த வகையைக்) கூறி, ஏவலினபோய்-நளன கட்டளையினால் உள்ளே சென்று, ஈது என்று இயம்புதலும் - யாம் வந்ததன்மை இஃது (தமயந்தி சுயம்வரம் நிகழ்கின்றது) என்று சொல்லுதலும்,

1. தனிப்பாடல் திரட்டு, கம்பர் : உ௫.

பூவாளி பாய - (அதனுற் காதல் கிளர்ந்தெழ மன்மதனுடைய) மலரம்புகள் பாய்தலினுல், மெலிந்த தோள்வேந்தன் - தளர்ந்த தோள்களேயுடைய நளமன்னன், மாவில் பொலிந்ததேர் - குதிரை களினுல் சிறப்புற்ற தேரை, விரைந்து பூட்டு என்ருன் - மிக விரைவில் ஆயத்தம் செய்க என்று (தன் தேரோட்டுவோனுக்குக்) கட்டளேயிட்டான்.

(க - ரு.) வீமராசன் தூதுவர்கள், தமயந்தி சுயம் வரம் இன்னநாளென்று நளனுக்கு அறிவிக்க, அவன், தன் தேரோட்டுவோனே அழைத்துத் 'தேரை விரைவில் ஆயத்தஞ்செய்க' என்ருன் என்பதாம்.

(வி - ரை.) கடைக்காவலர் : ஏழாம்வேற்றுமைத் தொகை. மா - குதிரை. 'மாவில் பொலிந்ததேர்' என்றமையால் விரைவும் அழகும் மிக்க குதிரைகள் என்பது பெறப்பட்டது. குதிரைகள் நல்லிலக்கணமுடையவாயின் விரைந்து குறித்த காலத்தில் குறித்த இடத்துக்குச் செல்லுமாதலாலென்க. நளன் தமயந்தி சுயம் வரத்தையே எதிர்பார்த்திருந்தானுகலின் விரைந்து போதற்கு இவ்வாறு கூறினுனென்க..

நளன், தமயந்தியை எண்ணியெண்ணிக் காதலாற் பிணிப் புண்டு இருந்தமையால், தோள் வாடிற்று; அறிவு பிறிதாகியது; பார்ப்பனயாவும் கேட்பனயாவும் தமயந்தியாகத் தோன்ற மன்மதன் பூவாளிகள் வந்து நெஞ்சினும் தோளினும் பாய்ந்து வருத்த நின்ருனுதலால், 'பூவாளி பாய மெலிந்ததோள் வேந்தன்' என்ருர். முன்னரும், 'புள்ளின் மொழியினுெடு பூவாளி தன்னு டைய - உள்ளங் கவர' என்று தமயந்திக்குக் கூறிய செயலேயே இங்கு நளனுக்கும் ஏற்றிக் கூறினுர், ஒத்த காதலால் ஒருவர்க் கொருவர் பிணிப்புண்டு நின்ற மனநிலே ஒருமையை வெளிக் காட்ட. பூட்டு - கட்டு : ஏவல் வினே. இதற்கு நீ என்னும் முன் னிலேப்பெயர் தோன்ருத எழுவாயாகக் கொள்க. (சுசு)

**நளன், தமயந்தி சுயம்வரத்துக்கு விரைந்து தேர்செலுத்தத் தேர்ப்பாகனுக்குக் கூறல்**

எச. **கேட்ட சிறுமருங்குல் கீழ்மகளிர் நீள்வரம்பில்**
**இட்ட பசுங்குவளே ஏரடித்த—கட்டி**
**கரையத்தேன் ஊறும் கடல்நாடன் ஊர்க்கு**
**விரையத்தேர் ஊரென்ருன் வேந்து.**

(இ - ள்.) வேந்து - நளமன்னன், கெட்ட சிறு மருங்குல் கீழ்மகளிர் - இளேத்துப்போயுள்ள சிறிய இடையையுடைய கடைசி

யர்கள், நீள்வரம்பில் இட்ட பசுங்குவளை - நீண்ட வயல்களின் வரப்பின்மேல் களையாய்ப் பறித்துப்போட்ட பசுமையான குவளைப்பூக்களினின்றும், ஏர் அடித்த கட்டி கரைய - ஏர்களால் உழுது உண்டாகிய மண்கட்டிகள் கரைந்துபோமாறு, தேன் ஊறும் - தேன் ஊற்றெடுத்துப் பெருகி ஓடுகின்ற, கடல்நாடன் ஊர்க்கு - நெய்தல் நிலஞ்சூழ்ந்த விதர்ப்பநாட்டையுடைய வீமனது குண்டினபுரத்துக்கு, தேர் விரைய ஊர் என்றான் - தேரினை விரைவாகச் செலுத்துக என்று தேர்ப்பாகனுக்குக் கட்டளையிட்டான்.

(க - து.) நளமன்னன், தேர்ப்பாகனை நோக்கி 'விரைந்து குண்டினபுரத்துக்குத் தேர் செலுத்துக' என்று கட்டளையிட்டான் என்பதாம்.

(வி - ரை.) கெட்ட : இறந்தகால வினைப்பெயரெச்சம். கீழ் மகளிர் : கீழ்க்குலப் பெண்களென்று பொருளல்ல. மேல், கீழ் என்ற பொருளால் மேற்கு கிழக்கு எனத் திசைகட்குப் பெயர் வந்தது, அதன் மேடு பள்ளங்களின் தன்மையால் என்க. [1]'காணின் கிழக்காம் தலை' என்ற திருக்குறளில் கிழக்கு கீழிடம் என்னும் பொருள் தருதலை ஓர்க. பள்ளமுள்ள நீர்நிலை மிக்க மருதநிலப்பாங்குகளில் வாழ்ந்து வேளாண்மை புரிபவராகலான் அவர்கள் 'பள்ளர்' எனப்பட்டனர். இன்றும் அவர்கள் இப் பெயரால் வழங்கப்பெறுதல் அறிக. அதனால் 'கீழ்மகளிர்' என்றாரென்க. விதர்ப்பநாடு நீர்வளம் நிலவளமிக்க நாடாதலால் அங்கே வயல்கள்தோறும் களையாக மண்டிக்கிடப்பன, நெய்தலும் ஆம்பலும் தாமரையும் முதலிய நீரில்வளரும் கொடிகளே. அவைகளை அவர்கள் பறித்து வயல்களின் வரப்பின்மேற் போட்டவுடன் வரப்பிலுள்ள மண்கட்டிகள் கரைந்துபோம்படி தேன்கள் பெருகுகின்றதெனை அக்குவளையின் செழிப்பை விளக்கிக் கூறினார். அதனால் அந்நாட்டின் வளங்கூறியவாறும். கடல் - கடல்சார்ந்த நிலத்தை உணர்த்தலால் ஆகுபெயர். வேந்து : பண்புப்பெயர். (சுஎ)

நளன் குண்டினபுரத்தைச் சேர்தல்

எஅ. சடைச்செந்நெல் பொன்விளைக்கும் தன்னாடு பின்னாக்
கடல்தானை முன்னாகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொன்தாம வீமன் திருமகளாம்
நல்லுயிரும் வாழும் நகர்.

1. திருக்குறள் : சஅஅ.

(இ - ள்.) செம்நெல் சடை பொன்விளக்கும் - செந்நெற் பயிர்கள் சடைபோன்ற கதிர்களில் பொன் போன்ற நெல் மணிகளை விளக்கின்ற, தன்நாடு பின் ஆ - தன் நிடதநாடு பின்னிருக்க, கடல்தானை முன் ஆக - கடல்போல் பெருக்கமுள்ள படைகள் முன் செல்ல, அடற்கு அமைந்த வில்லியரும் - போர் செய்ய அமைந்த விற்படை வீரர்களும், பொன்தாம வீமன் திருமகள் ஆம் - அழகிய மலர்மாலையணிந்த வீமமன்னனுடைய செல்வத் திருமகளான, நல் உயிரும் வாழும் - சிறந்த (தன்) உயிர் போல்வாளாம் தமயந்தியும் வாழ்ந்திருக்கின்ற, நகர் கண்டான் - குண்டினபுர நகரைக் கண்ணுற்றான்.

(க - து.) தன் நாடு பின்னிருக்க, தன் சேனை முன் செல்லச் சென்ற நளன், குண்டினபுரத்தைக் கண்டான் என்பதாம்.

(வி - ரை.) செந்நெல்சடை - சடைச் செந்நெல் எனச் சொல் மாறி நின்ற இலக்கணப்போலி. கதிர்முற்றி விளைந்திருக்கும் நெல்மணிகள் பொன்போன்ற செந்நிறமுடையனவாக இருத்தலால் 'பொன் விளக்கும்' என்று நயம்படக்கூறினார். பொன்விளக்கும் செல்வத்தைத்தரும் எனக் கொள்ளலுமாம். சடைபோன்று கதிர்கள் நீளமாகப் பின்னிப் பிணைந்திருப்பதால் 'சடைச் செந்நெல்' என்றார். பின்னு முன்னாக என்பன முரண்தொடை அழகு தோன்ற நின்றன.

கடல்தானை: கடல்போன்று கட்டுக்கடங்காது படர்ந்து விரிந்திருக்கும் தானை என, நளன்றன் படைப்பெருக்கும், அதனால்வரும் வெற்றியும் விளக்கியவாறும். குண்டினபுரத்தின் சிறப்புக் கூறுதற்கு முதலில் 'வில்லியரையும், பின்னர் நல் உயிரையும்' கூறினார். ஒருநாடு சிறப்புறுவது, காவலால்தான். அக்காவல் செய்தற்குரியார் வேலும் வாளும் வில்லும்கொண்ட படைமறவர். இவரைக் [1]'காலனும் காலம் பார்க்கும் பாராது, வேலீண்டு தானை விழுமியோர்' எனப் பிறரும் கூறினர். அரசன் கொற்றத்துக்கு முதன்மையாக இருப்பது, அரசன் அறநெறி, அந்நெறியை நிலைநிற்கச்செய்வது படை. அதனால் குண்டினபுர நகர், படைப்பெருக்கத்தால் காக்கப்பெற்று நலத்துடன் திகழ்வது முன்பும் அந்நகருக்கு அணியாகத் திகழ்வோள் தமயந்தியாகலான் 'வீமன் திருமகள்' எனப் பின்பும் கூறினர் நளன் இவளைத் தன்னுயிரினும் சிறந்தாளாகக் கொண்டிருத்தலால் 'நல்லுயிர்' என்றார். நகர்: நகர்தல் தன்மையால் நகரத்துக்கு இட்ட காரணப்பெயர். என்னை? நகர்தல், ஊர்தல்: செல்லுதல்

1. புறம். சுக.

என்னும் பொருளன; அதன் இறுதி நிலையாகிய தொழிற்பெயர் விகுதிகுறைந்து, முதனிலைப்பெயர்களாக நகர், ஊர் என நின்றன. ஆகவே, இவை தொழிலாகுபெயராக மக்கள் கட்டிடம் கட்டிக் குடியிருந்துவாழும் இடத்தை உணர்த்தின என்க. (சுஅ)

நாரதர் தேவர் உலகு செல்லுதல்

எசு. நெற்றித் தனிக்கண் நெருப்பைக் குளிர்விக்கும்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்-உற்றடைந்தான்
தேனாடும் தெய்வத் தருவும் திருமணியும்
வானாடும் காத்தான் மருங்கு.

(இ - ள்.) தேன் நாடும் தெய்வ தருவும் - வண்டுகள் தேடிச் செல்கின்ற தெய்வத்தன்மைபொருந்திய கற்பகமரங்களையும், திருமணியும் - அழகிய சிந்தாமணியையும், வான் நாடும் - வானுலகத்தையும், காத்தான் மருங்கு (தனக்குரிமையாய்ப் பெற்றுக்) காப்பவனாகிய தேவேந்திரனிடத்து, நெற்றி தனி கண் நெருப்பை குளிர்விக்கும் - சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணாகிய தீயையும் குளிரச்செய்கின்ற, கொற்ற தனி யாழ் குலமுனிவன் - இசையில் வெற்றிகொண்ட உயர்வொப்பற்ற மகதி யென்னும் யாழையுடைய சிறந்த தவமுனிவனாகிய நாரதன், உற்று அடைந் தான் - போய்ச் சேர்ந்தான்.

(க - ரு.) நாரத முனிவன் தேவேந்திரனிடம் போய்ச் சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) இசைப் பாடலுக்குப் பாம்பு முதலிய கொடிய உயிரிகளும் உருகி அதன் வயப்படுவது இயற்கை என்பதை உட்கொண்டு சிவபெருமான் நெற்றிக்கண்ணின் நெருப்புக்கூட இதைக்கேட்டுக் குளிருமென்பாராய் 'கண் நெருப்பைக் குளிர் விக்கும்' என்றார். குலமுனிவன் - தவமிக்க நாரத முனிவன். உறுதல் - போதல் என்னும் பொருள் தருவது.

"திருஞான முனிவரர சிருந்ததிருப் பூந்துருத்திக்
கருகாக எழுந்தருளி எங்குற்றார் அப்பர்.'[1]

என்னும் பெரியபுராணச் செய்யுளில் உற்றார் என்பது, சென்றார் என்றும் பொருள்தருதலை அறிக. இந்திரனுக்குரிய சிறப்புடைச் செல்வங்கள் ஐந்துதருவும், சிந்தாமணியும், சங்கநிதி பதுமநிதி முதலியனவுமாம். ஆனதால், இச் செல்வமிக்க இந்திரன்பால் முனிவன் சென்றானென்க. (சுகூ)

1. பெரியபுராணம், திருநாவுக் : ௩௯௬.

தேவேந்திரன் நாரதனரைப் பார்த்தல்

எஎ. வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்
ஆரும் இலரால்என் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினான் நாகம் சிறகரிந்த
மின்முகவேல் கையான் விரைந்து.

(இ - ள்.) நாகம் சிறகு அரிந்த - மலைகளினுடைய சிறகுகளை வெட்டியொழித்த, மின்முகவேல் கையான் - ஒளிவீசுகின்ற வச்சிரப்படையை ஏந்திய கையையுடைய இந்திரன், வீரர் விறல் வேந்தர் - வீரராகிய வல்லரசர், விண் நாடு சேர்கின்றார் - இவ்வானுலகுக்கு வருவோர், ஆரும் இலரால் என்று ஐயுற்று - ஒருவருமில்லையே யென்று கூறி ஐயமுற்று, நாரதனார் நன்முகமே விரைந்து நோக்கினான் - நாரதருடைய நல்ல முகத்தை விரைவாகப் பார்த்தான்.

(க - ரு.) வெற்றிவேலரசரில் எவரும் விண்ணுலகுக்கு வருவாரில்லையே யென்று ஐயங்கொண்டு நாரதனை இந்திரன் பார்த்தான்.

(வி - ரை.) நாகம் - மலை. ஒரு காலத்தில் மலைகளுக்குச் சிறகிருந்ததென்றும் அச்சிறகுகளை இந்திரன் அறுத்தொழித்தான் என்றும் கூறும் புராணக் கதையை ஒட்டி 'நாகம் சிறகரிந்த' என்றார். (எO)

மன்னர் எல்லோரும் தமயந்தியின் சுயம்வரத்துக்குப் போனாரென நாரதர் கூறல்

எஅ. வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சயம்வரத்து—மாமன்னர்
போயினார் என்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன்.

(இ - ள்.) பொய்யாத வாயினான் - பொய்க்காத வாக்கை உடையாரும், மாதவத்தோர் மன் - சிறந்த தவமுனிவர்கட்கு அரசருமாகிய நாரத முனிவர், வீமன் மடந்தை - தமயந்தியின், மணத்தின் - திருமணத்துக்காக ஏற்பாடு செய்த, விரை தொடுத்த தாமம் புனைவான் சயம்வரத்து - மணமிக்க மலர் மாலையை அணிந்துகொள்ளும்பொருட்டாகச் சுயம்வரத்துக்கு,

புரந்தரற்கு போயினர் என்றான் - அவர்கள் சென்றுள்ளார்கள் என்று தேவேந்திரனிடம் கூறினர்.

(க - து.) தமயந்தியின் சுயம்வரத்துக்காக மன்னரனைவரும் சென்றாரென இந்திரனுக்கு நாரதர் கூறினாரென்பதாம்.

(வி - ரை.) விரை - மணம். புனைவான் என்பதில் 'வான்' வினையெச்ச வாய்பாடு. சயம்வரம், சுயம்வரம். மா - பெருமை. வாயினான்: வாய்ச்சொல்லை யுடையான் எனப் பொருள்கொள்ளக் கிடப்பதால் கருவியாகு பெயர். (எக)

தமயந்தியின் அழகு முதலியன கூறல்

எஉ. அழகு சுமந்திளைத்த ஆகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தல் பாவை—மழகளிற்று
வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம் மற்றவளே
காமன் திருவுக்கோர் காப்பு.

(இ - ள்.) அழகு சுமந்து இளைத்த ஆகத்தாள் - (தமயந்தியானவள்) அழகையே தாங்கி அதனால் இளைப்புற்ற உடலினையுடையாள், வண்டு பழகு கருங்கூந்தல் பாவை - வண்டுகள் (எந்நாளும் தேனை விரும்பி) நெருங்கிப் பழகுகின்ற கரிய கூந்தலையுடைய பாவைபோல்வாள், மழகளிற்று வீமன் குலத்துக்கு - இளங்களிற்று யானையையுடைய வீம மன்னன் மரபுக்கு, ஓர் மெய்தீபம் - ஒப்பற்ற அணையா விளக்கொளி போல்வாள், மற்று அவளே - இன்னும் அத் தமயந்தியே, காமன் திருவுக்கு ஓர் காப்பு - மன்மதனுடைய காதற் செல்வத்துக்குச சிறந்த பாதுகாவலாக அமைந்துள்ளாள்.

(க - து.) தமயந்தி பேரழகினாள், வண்டுகள் பழகும் கூந்தலாள், வீமன் குலத்திற்கு விளக்கொளி, காமன் திருவுக்குக் காப்பாக அமைந்துள்ளாள் என்பதாம்.

(வி - ரை.) பெண்களுக்குரிய புற அழகும் அக அழகும் மிகுந்து விளங்குவதால் 'அழகு சுமந்து இளைத்த ஆகத்தாள்' என்றார். அவளின் சிறப்புக்கூறியவாறு. தமயந்தியின் கூந்தல் இயற்கை மணங்கமழ்ந்து கொண்டிருப்பதால் அந்த மணத்தை அறிந்து வண்டுகள் அவளைவிட்டு நீங்காது தொடர்ந்தே திரிவதை 'வண்டு பழகு கருங்கூந்தல் பாவை' என்றார். பெண்கள் கூந்தலில் இயற்கை மணங் கமழும் என்பதை வரும் குறுந்தொகைச் செய்யுளால் அறிக:

"[1] கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறியெயிற்று அரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீயறியும் பூவே.'

தமயந்தியின் கற்பால் வீமன்குலம் விளக்கமுற்று உலகில் எங்கும் என்றும் புகழ் விளங்குமென்பாராய் 'மெய்த்தீபம்' என்றார். அவளுடைய கட்டழகும் கட்பார்வையும் கண்டாரை யெல்லாம் தம் வயப்படுத்திக் காமன் ஆட்சிக்கு ஆதரவளித்து மயங்கவைத்தலின் 'திருவுக்கு ஓர் காப்' பென்றார். காமன் திரு: உண்மைக் காதலுக்கு என்றுமாம். இவ்வாறே மணிமேகலையாரின் இளமைச் செவ்வியையும் அழகையும்கூறி இயற்கைத் தன்மையை விளக்கப் போந்த ஆசிரியர் கூலவாணிகன் சாத்தனார், சுதமதி வாயிலாக,

"[2] மணிமேகலைதன் மதிமுகந் தன்னுள்
அணிகெழு நீலத் தாய்மலர் ஓட்டிய
கடைமணி உகுநீர் கண்டனன் ஆயின்
படையிட்டு நடுங்கும் காமன் பாவையை
ஆடவர் கண்டால் அகறலும் உண்டோ.'

என்றார். இக்கருத்தோடு அக் கருத்தும் ஒப்புமையாக இருப்பது கண்டு மகிழற்பாலது. மழகளிறு - இளை ஆண் யானை. 'மழவும் குழவும் இளமைப் பொருள' என்பது தொலகாப்பியம். (எஉ)

இந்திரன் முதலிய தேவர்களும் தமயந்தி சுயம்வரத்துக்குச் செல்லுதல்

௭௩. மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் திருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து.

(இ - ள்) மால்வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் - பெரிய மலைகளின் சிறகைத் தன் வசசிரப்படையால் அறுத்தொழித்த தேவேந்திரனும், வானவரும் - அக்கினி இயமன் வருணன் என்னும் மற்றைத் தேவர்களும், கோல்வளைதன் மாலை குறித்து - அழகான வளையலணிந்த தமயந்தியின் சுயம்வர மண மாலையைப் பெற எண்ணி, சால்புடைய விண்ணாடு நீங்கி - பெருமை பொருந்திய (தம்) வானுலகத்தை விட்டு, விதர்ப்பன்

---

1. குறுந்தொகை : உ. 2. மணிமே. ௩ : ௨௦ - ௪.

திருநகர்க்கு - வீமராசனுடைய அழகுமிக்க குண்டினபுர நகருக்குச்செல்ல, மண்நாடு நோக்கி மகிழ்ந்து எழுந்தார் - பூவுலகத்தைப் பார்த்து மகிழ்வுடன் புறப்பட்டார்கள்.

(க - து.) நாரதர் வாயிலாகத் தமயந்தியின் சுயம்வரம் கேட்டு இந்திரன் முதலிய தேவர்கள், குண்டினபுரத்துக்குப் புறப்பட்டார்கள் என்பதாம்.

(வி - ரை.) கோல்வளை : பண்புத் தொகைநிலைக் களத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய்த் தமயந்திக்கு ஆயிற்று. சால்பு : உரிச்சொல். அது, நிறைவு என்னும் பொருளது. இஃது, இப்பொருட்டாதலை,

[1]"இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.'

என்னும் திருக்குறளா னறியப்படும். விண்ணாடு எல்லாச் செல்வமும் நிரம்பி வேண்டிய வேண்டியாங் கெய்தும் சிறப்புமிக்கதாகலின் 'சால்புடைய விண்ணாடு' எனப்பட்டது. 'விதர்ப்பன் திருநகர்' என்பதற்கு விதர்ப்ப மன்னன் மகளாகிய தமயந்தியிருக்கின்ற நகருக்கெனப் பொருள்கூறலும் ஆம். மிதிலைக்கு இராமபிரான் சென்ற காலை அந்நகர் இராமனைத் தன் கொடிகளென்னும் கையால் விரைவில் 'வருக வருக' வென அழைப்பது போல் கொடிகள் ஆடிற்று எனக் கூறவந்த கம்பநாடர், அந்நகர் சீதையைப் பெற்றிருப்பதாகக் குறித்தார். அது :

[2]"மையறு மலரின்நீங்கி யான்செய்மா தவத்தின் வந்து
செய்யவள் இருந்தாள்.'

என, வருதல் கண்டு மகிழ்க.

'சால்புடைய விண்நாடு நீங்கி, மண்நாடு நோக்கி விதர்ப்பன் திருநகர்க்குக் குறித்து மகிழ்ந்து எழுந்தார்' எனக் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. இச் செய்யுள் கொண்டுகூட்டுப் பொருள்கோளாக உள்ளமை அறிக. (எ௩)

**குண்டினபுரம் நோக்கி வருகிற நளனைத் தேவர்கள் காண்டல்**

அக. பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபால் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போல் தேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானின் தேவர் பெரிது.

1. திருக்குறள் : கூஅஎ. 2. கம்பராமா. மிதிலைக் : க.

(இ - ள்.) பைந்தெரியல் வேல்வேந்தன் - பசுமையாகிய மாலையணிந்த வேற்படை ஏந்திய வீமராசனுடைய, பாவைபால் போயின - பாவைபோன்ற தமயந்தியிடம் சென்ற, தன் சிந்தை கெடுத்து - தன்மனத்தைக் காணுமல் விட்டுவிட்டு, அதனை தேடுவான் - அம் மனத்தைத் தேடிக் காண்பதற்கு, முந்தி வருவான் போல் - எல்லோர்க்கும் முன்பே வருபவன்போல், தேர்மேல் வருவானை - தேரின்மேல் வருகின்ற நளமன்னனை, பெருவானின் தேவர் பெரிது கண்டார் - பெரிய வானுலகில் வாழும் இந்திரன் முதலிய தேவர்கள் இடைவழியில் நன்கு கண்டார்கள்.

(க - ரு.) யாவர்க்கும் முன்பு தமயந்தி சுயம்வரத்துக்குச் செல்கின்ற நளனை இந்திரன் முதலிய தேவர்கள் நேரிற் கண்டார்கள் என்பதாம்.

(வி - ரை.) தெரியல் மாலை. நளன் யாவர்க்கும் முந்தித் தமயந்தியின் சுயம்வரத்துக்குச் செல்லுதலை, தமயந்திபால் பறிபோன தன் சிந்தையைக் காணுது திகைத்து அதைத் தேடிச் செல்பவன்போல் போவதாகக் குறித்தார்: தற்குறிப் பேற்றவணி. இவ்வாறே, ஆரியப்படை கடந்த பாண்டியன நெடுஞ்செழியன், கோவலனைக் கொன்றது தவறெனக் கண்ணகியின் சொல்லால் உணர்ந்ததும் தன் உயிர்விட்டானுக, உடனே அவன் மனைவியும் இறந்தனள். இச் செயலை விளக்கிக்காட்ட ஆசிரியர் இளங்கோவடிகள்,

"[1] தன்னுயிர் கொண்டுஅவன் உயிர்தே டினள்போல்
பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்.'

என அவள் மாய்ந்தது, தன்னுயிரைக் கொண்டு அவனுயிரைத் தேடிய தன்மைபோல் இருந்ததென நயம்படக் கூறியதும் இதுபோன்ற தென்க. 'வான்' எதிர்காலப் பெயரெச்சம் பெரிது - நன்கு என்னும் பொருளில் வந்தது. (எச)

தமயந்தியிடம் நளனைத் தூது செல்லுமாறு இந்திரன் முதலியோர் வேண்ட அவன் இசைதல்

௭உ. காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவல் தொழிலுக் கிசையென்முன்—ஏவற்கு
மன்னவனும் நேர்ந்தான் மனத்திஞன் மற்றதனை
இன்னதென ஓரா திசைந்து.

1. சிலப். உ௫ : அ௫ - சு.

(இ - ள்) காவல் குடை வேந்தை கண்ணுற்று - உலகைத் தன்னிழலிற் காக்கும் வெண்கொற்றக் குடையையுடைய நள மன்னனைக் கண்டவுடன், விண்ணவர்கோன் - தேவேந்திரனனை வன், எவல் தொழிலுக்கு இசை என்ருன் - நாங்கள் ஏவுகின்ற தொழிலுக்கு நீ இணங்கவேண்டுமெனக் கூறினன், மன்னவனும் அதனை மனத்தினல் இன்னது என ஓராது - நள மன்னனும் அதனைத் தன் மனங்கொண்டு இன்னதுதானென்ன ஆராய்ந்தறியா மலே, இசைந்து ஏவற்கு நேர்ந்தான் - மனங்கொண்டு அவ் ஏவல் தொழிலுக்கு உடன்பட்டான்.

(க - ரு.) நளனைக் கண்டவுடன் தேவேந்திரன் தன் 'ஏவலுக்கு இசைக' என்றதும் அவன் ஏற்றுக்கொண்டான் என்பதாம்.

(வி - ரை.) முன் நளவேந்தனைக் கிளியும் பருந்தும் ஒரு கூட்டில் ஒற்றுமையுடன் வாழ அறமுறை திறம்பாது அரசாண் டான் என்றபடி இங்கும் அவன் சிறப்புத் தோன்றக் 'காவற் குடை வேந்து' என்ருர். உடையவன் தொழில் உடைமைமேல் ஏற்றிக் கூறப்பட்டது; சினவாள் என்பதுபோல. கண்ணுற்று, இசைந்து என்பன இறந்தகால வினையெச்சங்கள். (எ௫)

இந்திரன் நளனைநோக்கி 'நீ தமயந்திபால் தூது செல்க' எனல்

அ௬. செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
எங்களிலே சூட்ட இயல்வீமன்—மங்கைபால்
தூதாக என்ருனத் தோகையைத்தன் ஆகத்தால்
கோதாக வென்ருன்அக் கோ.

(இ - ள்.) செம்கண் மதயானை தேர்வேந்தே - சிவந்த கண் களையுடைய மதயானையையும் தேரையும் உடைய நளமன்னனே!, தேம் மாலை எங்களிலே சூட்ட - தேன்பொருந்திய மலர் மாலையைத் தமயந்தியானவள் எங்களில் ஒருவர்க்குச் சூட்டும்படி, இயல்வீமன் மங்கைபால் தூது ஆக என்ருன் - நற்குண நற் செயல்களையுடைய வீமராசன் மகளாகிய தமயந்தியிடத்துத் தூதனுகச் செல்லவேண்டுமென்று (இந்திரன்) கூறினன், அக்கோ அ தோகையை தன் ஆகத்தால் - (அது கேட்டதும்) அந் நளமன்னன் அத் தமயந்தியைத் தன் மனத்தினல், கோது ஆக வென்ருன் - சாரமற்ற பொருளாக எண்ணி அவள்பாள் கொண்ட காதலுணர்வைச் செல்லவிடாமல் அடக்கினன்.

(க - து.) தேவேந்திரன், நளனைத் தமயந்திபால் தூதாகச் செல்க என்றான். அது கேட்டதும் நளன் காதற் கருத்தை அடக்கினான் என்பதாம்.

(வி - ரை.) யானை தேர் என்பனவற்றை எண்ணும்மைத் தொகையாக்கிப் பொருள் கூறப்பட்டன. தேம் மாலை தேன் நிறைந்த நறுமலர்மாலை என்றமையால் இயற்கையான மலர்களைக் கொண்டு தொடுத்த மாலை என்பதாம். கோது - சாரம் நீங்கிய சக்கை. இதனைத் துரும்பு என்றுங் கூறுவர், தொன்னூலாசிரியர் :

[1] "கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்கால்"

என்னும் நாலடிச் செய்யுளில் வருதல் அறிக. சாரமற்ற பொருளை யாரும் எவ்வாறு விரும்பார்களோ, அதுபோல் தமயந்தியையும் எண்ணினான். காதலுணர்ச்சியைப் புலன்களை அடக்கி வென்ற முனிவர்களும்கூட அடக்கவொண்ணாது தம் திறமை ஆற்றல் பண்பு முதலியன இழந்து நின்றனரென்பது பற்பல வரலாறுகளால் தெரிகின்றதாகலான், அத்தகைய நெஞ்சைப் பிணித்து அடிமைகொள்ளும் வன்மைமிக்க இக்காதலையும் தன்மனத்தால் அடக்கிய திட்பமுடையவன் எனக் காட்டக் 'கோதாக' வென்றான்' என்னும் சொல்லமைத்துக் காட்டுவாராயினார். (எசு)

இந்திரனுக்காகத் தமயந்தியிடம் தூதுபோக ஒப்புக்கொண்ட நளன் மனநிலை

அச. தேவர் பணிதலைமேல் செல்லும் திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபால் மீண்டேகும்—பாவில்
குழல்போல நின்றுழலும் கொள்கைத்தே பூவின்
நிழல்போலும் தண்குடையான் நெஞ்சு.

(இ - ள்.) பூவின் நிழல்போலும் தண்குடையான் நெஞ்சு - உலகத்துயிர்களுக்குப் பாதுகாத்து இன்பளிக்கின்ற குளிர்ச்சி பொருந்திய குடையையுடைய நளமன்னனது மனமானது, தேவர்பணி தலைமேல் செல்லும் தேவர்களின் ஏவலைத் தலைமேல் (முதன்மையாகக்) கொண்டு போகும், திரிந்து ஒருகால் மேவும் - அதுமாறி ஒருமுறை மீண்டுவரும், இளம் கன்னிபால் மீண்டும் ஏகும் - திரும்பி இளம்பருவமுள்ள தமயந்தியினிடத்துச் செல்லும், பாவில் குழல்போல நின்று உழலும் கொள்கைத்து - நூற்

1. நாலடியார் : கூ௫.

பாவின் இடத்து அதைச் செலுத்துகின்ற மூங்கிற் குழல்போல அங்கங்கு போய் மீண்டு மீண்டுவருகின்ற தன்மைத்தாகத் திரிந்தது.

(க - ரு.) தமயந்திபால் தூதுபோக ஒப்புக்கொண்ட நளமன்னன் மனமானது ஒருநிலைப்படாது வருந்திற்று என்பதாம்.

(வி - ரை.) தன்மனம் ஒருநிலைப்படாது சுழன்ற நளமன்னன் நெஞ்ச நிலைக்குத் துணி நெய்யும் தொழில்புரிவோருடைய பாவுகுழல் ஓடி ஓடித் திரும்பிவந்து, திரிகின்ற நிலையை உவமை கூறினார். அவன் மனநிலையை நோக்கினால் போக விருப்பம் இல்லை; ஆனால் ஏற்றுக்கொண்டதைச் செய்தாக வேண்டும். இந் நிலையில் மனம் தயக்கமுறுகின்றது. இவ்வாறான இருவேறுபட்ட தன்மையைக் குறித்துக்காட்ட எண்ணி எண்ணி இவ்வரிய உவமத்தை எடுத்தமைத்து 'பாவில் குழல்போல' என்றார். 'பூவின் நிழல்போலு நெஞ்சு' எனக்கொண்டு, தாமரைமலர்போன்ற குளிர்ச்சியும் மாசுமில்லாத நளன் மனம் இவ்வாறு ஒருநிலைப் படாது நின்றதெனப் பொருள் கூறலுமாம். செல்லும் ஏகும் என்பன நெஞ்சின் நிகழ்ச்சியை விளக்கவந்த செய்யுமென் வினைமுற்றுக்கள். (எஎ)

நளன், இந்திரனிடம் 'காவல்களைக் கடந்து எவ்வாறு தமயந்திபால் செல்வேன்?' எனல்

அஅ. ஆவ துரைத்தாய் அதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரில்—காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீர் ஆழி
அடக்குமா றுள்ளத் தவன்.

(இ - ள்.) காமம் நீர் ஆழி அடக்கும் ஆறு உள்ளத்தவன் - காமமென்னும் நீர்ப்பெருக்குள்ள கடலை அடக்குகின்ற தன்மை கொண்ட நெஞ்சுடைய நளன், தேவர்கோனே - தேவர்கட்கு அரசனே!, ஆவது உரைத்தாய் அதுவே தலைநின்றேன்-(உனக்கு) ஆகவேண்டும் காரியத்தையே என்னிடம் நீ கூறினாய் நான் அதை முடிக்க முனைந்து நிற்கின்றேன், அத் திருநகரில் காவல் கடக்கும் ஆறு என் நின்றான் - (ஆனால்,) அவ்வழகிய குண்டினபுர நகரிலுள்ள பாதுகாப்பை நான் கடந்து செல்லும் வழி யாது? என்று கேட்டான்.

(க - து.) நளன், தேவேந்திரனை நோக்கி, 'நீ உனக்கு வேண்டும் காரியத்தையே கூறினாய்; குண்டினபுர நகர்க் காவலை நான் கடந்து தமயந்திபால் செல்வதெவ்வா'றென வினவினான்.

(வி - ரை.) ஆவது, இனிமேல் ஆகும் என்பது எதிர்கால வினையாலணையும் ஒன்றன்பாற் படர்க்கைப் பெயர். தூதுபோவதற்கு ஏற்றுக்கொண்ட நளன், காவல்களையெல்லாம் கடந்து தமயந்திபால் செல்வதெவ்வாறு எனக் கேட்டான் என்பதில் அவன் மனநிலை ஒருவழிக்கொள்ளாது நின்றநிலை தோன்றுதல் காண்க. உள்ளங்கவர்ந்தெழுந்து வரம்பின்றிப் பெருகியோடுகின்ற காதலுணர்வைக் கடலாக்கிக் 'காம நீராழி' என்றார். காமத்தைக் கடலாக்கித் திருவள்ளுவரும்,

[1]'காமக் கடல்மன்னும் உண்டே அதுநீந்தும்
ஏமப் புணைமன்னும் இல்.'

என, அருள்வது கொண்டு தெளிக. (எஅ)

இந்திரன் நளனை நோக்கிக் கூறல்

அகூ. வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்--யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாறும் தாரானைப் பார்த்து.

(இ - ள்.) வார்வெம் சிலை ஒழிய - நீண்ட ('மைந்நாக பர்வதம்' என்னும்) மலை ஒன்றுமட்டும் நீங்க, வச்சிரத்தால் மால் வரையை - தன் வச்சிரப்படையினால் (மற்ற) பெரிய மலைகளையெல்லாம், போர் வெம் சிறகு அறுத்த - போர்செய்து அழிக்கின்ற (அவைகளின்) கொடிய சிறகுகளை வெட்டியெறிந்த, பொன் தோளான் - அழகிய தோளையுடைய இந்திரனானவன், கார் வண்டின் பாண் நாறும் தாரானை பார்த்து - கருநிற வண்டுகளின் பாட்டுகள் முழங்குகின்ற மாலையையுடைய நளனை நோக்கி, யாரும் உனைக்காணார் போய் அவளைக் காண் என்றான் - உன்னைப் பிறர் எவரும் காணமாட்டார்கள்; நீ போய்த் தமயந்தியைப் பார்த்து வருக என்று கூறினான்.

(க - து.) இந்திரன் நளனைப்பார்த்து, 'உன்னை யாரும் கண்டுகொள்ளமாட்டார்கள்; நீ போய்த் தமயந்தியைப் பார்க்கலாம்' என்றான் என்பதாம்.

---

1. திருக்குறள்: ககசுச.

(வி - ரை.) 'வார்வெஞ்சிலை......தோளான்' என்பதுவரை இந்திரனுடைய சிறப்பைக் குறித்தது. ஒரு காலத்தில் மலைகளுக்குச் சிறகு இருந்ததாகவும், அவைகள் நினைத்தபோது பறந்துசென்று நகர்கள் முதலியவற்றை யழித்ததாகவும் அதனால் உயிர்கள் வருந்த அதற்காக அவைகளின் சிறகை அறுத்தானென்றும், அதில் தப்பி ஓடி மைந்நாக பருவதம் கடலுக்குள் ஒளிந்துகொண்டதாகவும் புராணங்கள் கூறும். அப் புராணக் கதையை விளக்குவதால் சிலை யொழிய என்பதற்கு மைந்நாக பர்வதம் என்று பொருள் கூறப்பட்டது. சிலை வில்லெனப் பொருள் கொண்டு வில்லின்றி வச்சிரத்தால் சிறகரிந்தான் எனப் பொருள் கொள்ளுதலும் பொருந்தும். அஃது அவ்வளவு பொருட்சிறப்பின்மையால் இங்கே மேற்கூறியவாறு பொருள் கூறப்பட்டது. இக் கதையை,

[1] 'மலைச்சிற கரிந்த வச்சிர வேந்தற்குக்
கலிகெழு கூடல் செவ்வணி காட்ட.'

என, ஆசிரியர் இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்து அருளுதல் அறிக. பாண் - பாடல். நாறுதல் - தோன்றுதல்: வெளிப்படுதல். இது, கட்புலனுக்குத் தோன்றும் வினையைக் காதின் வினையாகக் கூறினார்;

[2] 'நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்
கூற்றண்டோ.'

என, இராமாயணப் பெருங்காப்பியத்தில் கம்பநாடர் மூக்குப்புலன் புகாதல் உணர்வைக் காதின் உணர்வாகக் காட்டி, 'நாற்றம் கேட்பினும்' என்றது போல.

[3] 'பகைமையும் கேண்மையும் கண்ணுரைக்கும்.'

என்னும் வள்ளுவர் வாய்மொழியும் காண்க. (எக)

**நளன், குண்டினபுரம் செல்லுங்கால் அது வானுலகம்போல் இருந்ததெனல்**

௭௭. இசைமுகந்த வாயும் இயல்தெரிந்த நாவும்
திசைமுகந்தால் அன்ன தெருவும்—வசைஇறந்த
பொன்னாடு போந்திருந்தால் போன்றதே போர்விதர்ப்ப
நன்னாடர் கோமான் நகர்.

1. சிலப். கச: கூச-ரு. 2. கம்பராமா. தாடகை வதை: கூச.
3. திருக்குறள்: ஏ0கூ.

(இ - ள்.) போர் விதர்ப்ப நல்நாடர் கோமான் நகர் - போர் செய்கின்ற திறலில் சிறந்த விதர்ப்ப நாட்டு மக்களுக்கு வேந்தனாகிய வீமனின் குண்டினபுர நகரமானது, இசை முகந்த வாயும் - புகழையெல்லாம் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கின்ற வாயில்களினாலும், இயல் தெரிந்த நாவும் - மனை நூல் முறைப்படி அமைத்துள்ள வீடுகளினாலும், வசை இறந்த பொன்னாடு போந்து இருந்தால் போன்றதே - குற்றமற்ற விண்ணகரமானது நிலவுலகிற்கு வந்து இறங்கித் தன்னிடம் இருந்த தன்மையைப் போலத் தோற்றமளித்தது (நளமன்னனுக்கு).

(க - து.) நளமன்னனுக்கு விதர்ப்பன் நகர் தேவருலகம் போன்று தோன்றிற்று என்பதாம்.

(வி - ரை.) போர்விதர்ப்பன் என்றமையால், 'இசை முகந்த' என்பதற்கு போரால் புகழோங்கின என்று பொருள் கொள்க. இப் புகழ் நாள்தோறும் பல நாட்டிலும் பேசப்படுவதாலும் ஒவ்வொரு நாளும் புகழ் விஞ்சி அந் நகரின் பெயரே முன் எடுத்துக் கூறப்படுவதாலும் 'இசை முகந்த வாய்' என்றார். இயல் - இயற்கையைக் கூறும் நூலுக்காயிற்று : கருவியாகு பெயர். நா - நடு : உள்ளிடத்தை உணர்த்திற்று : அதனிடம் அமைந்த வீடுகள் என்று பொருள் கொண்டமையின் இருமடியாகு பெயராகக் கொள்க. வானுலகம் என்றும் இன்பமிக்கதாய்ச் செல்வத்தால் திகழ்வதால், 'பொன்னாடு போந்திருந்தால் போன்றதே' என்றார். மதுரைமா நகர்ப் பெருமையைச் சிறப்பித்துக் கூறுங்கால் ஆசிரியர் இளங்கோ வடிகள் சிலப்பதிகாரத்தில்,

> [1] 'ஆயிரங் கண்ணோன் அருங்கலச் செப்பு
> வாய்திறந் தன்ன மதிலக வரைப்பு.'

என்றதூஉம் இக் கருத்தோ டொத்திருத்தல் காண்க. அக் குண்டினபுரம் நளமன்னன் காணுங்கால் அவனுக்குப் பொன்னாடு போல் தோன்றிற்று என்று பொருள் கொள்க. இறந்த - கடந்த ; நீங்கிய என்பது பொருள். (அ0)

**கன்னிமாடத்தில் நளனும் தமயந்தியும் நேர்பட்டுப் பார்த்தல்**

அஅ. தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே—ஆங்கு
மதுநோக்கும் தாரானும் வாள்நுதலும் தம்மில்
பொதுநோக்க கெதிர்நோக்கும் போது.

---

1. சிலப். கச : கஅ-க.

(இ-ள்.) ஆங்கு-அந்தப்புரக் கன்னிமாடத்தில், மதுநோக்கும் தாரானும் வாள்நுதலும் - (வண்டுகள்) தேனைவிரும்பி வருகின்ற மலர்மாலை யணிந்த நளமன்னனும் ஒளிபொருந்திய நெற்றியை யுடைய தமயந்தியும், தம்மில் பொதுநோக்கு எதிர்நோக்கும்போது- தமக்குள் இயல்புப் பார்வையினால் நேர்நேராகப் பார்த்தகாலத்து, தேம் குவளை தன்னில் செந்தாமரை மலர - (தமயந்தியின் கண்க ளாகிய) கருங்குவளை மலர்களிலே (நளனுடைய கண்களாகிய செந்தாமரை மலர்கள் மலர, பூங்குவளை தாமரைக்கே பூத்தது - (தமயந்தியுடைய கண்களாகிய) அழகிய கருநெய்தற் பூ (நளன் முகமாகிய) தாமரை மலர்மீது மலர்ந்தது.

(க - ரு.) நளனும் தமயந்தியும் ஒருவரை ஒருவர் பார்த்தபோது குவளைமலரில் செந்தாமரைப் பூவும் செந் தாமரைமலரில் கருங்குவளைப்பூவும் பூத்ததுபோல் இருந் தது.

(வி - ரை.) தேன் குவளை : தேங்குவளை என்றாயிற்று; [1]'தேன்மொழி மெய்வரின்' என்னும் விதியாற் கொள்க. பொது நோக்கு - இயற்கைப் பார்வை. நளனும் தமயந்தியும் ஒருவரை ஒருவர் காண நேர்ந்தபோது, இன்னாரென அறிந்துகொள்ளா ராதலான், மனத்தில் வேறுபாடற்ற பொதுப் பார்வையாயிற்று. இவர்கள் பார்வைகளை (கண்களை) குவளை மலராகவும் தாமரை மலராகவும் உருவகம் செய்தார். குவளை மலர்போன்ற தமயந்தி யின் கண்களைத் தாமரை மலர்போன்ற நளமன்னன் கண்கள் பார்த்தன; பின்னர்க் குவளைமலர்போன்ற தமயந்தியின் கண்கள், நளமன்னனுடைய தாமரை மலர்போன்ற முகத்தைப் பார்த்தன என, நளன் முதலில் பார்த்ததையும் பின்னர்த் தமயந்தி நளனைப் பார்த்ததையும் முறைப்படுத்தித் 'தேங்குவளை...பூத்ததே' என்று நயம்படக் கூறினார். இவ்வாறே கம்பநாடர், அயோத்தி யேந்த லும் மிதிலைச செல்வியும் ஒருவரை ஒருவர் கண்டுகொண்ட காட்சியை,

[2]'அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்.'

எனவும்,

[3]'பருகிய நோக்கெனும் பாசத்தாற் பிணித்து.........
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினார்.'

எனவும் அழகுற அமைத்துக் கூறுதலை அறிக. இவ்வாறே பரவைநாச்சியாரைக் கண்ட நம்பியாரூரர் வாயிலாகச் சேக்கிழார்

1. நன்னூல் : உகச.

2, 3. கம்பராமா. மிதிலைக் : நடு; நஎ.

பெருமான் 'கற்பகத்தின் பூங்கொம்போ' எனவும், பரவை நாச்சியார் வாயிலாக 'முன்னேவந் தெதிர் தோன்றும் முருகனோ'? எனவும் கூறுவது காண்க. மது நோக்குதல்-தேன் வெளிப்படல். தேன் மலரிலிருந்து வெளியில் மிதந்து வருதலை, நோக்குதல் என்ற சொல்லால் குறிப்பிட்டார்.

தாமரைக்கே - தாமரையில் எனப் பொருள்கொள்ளக் கிடப்பதால் உருபு மயக்கம்: நான்கனுருபு ஏழனுருபோடு மயங்கி நின்றது. (அக)

### நளனைக் கண்டவுடன் தமயந்தியின் மனநிறையழிதல்

அகூ. நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று
தீண்டும் அளவில் திறந்ததே—பூண்டதோர்
அற்பின்தாழ் கூந்தலாள் வேட்கை அகத்தடக்கிக்
கற்பின்தாழ் வீழ்த்த கதவு.

(இ - ள்.) நீண்ட கமலத்தை நீல கடை சென்று தீண்டும் அளவில் - (இவ்வாறாக) நளன் கண்களாகிய உயர்ந்த தாமரை மலர்களைத் தமயந்தியின் கண்களாகிய கருநெய்தல் மலர்போய்ச் சார்ந்தவுடன், தாழ்கூந்தலாள் வேட்கை அகத்து அடக்கி - நீண்ட கூந்தலையுடைய தமயந்தியானவள் தன் ஆசையைத் தன் மனமென்னும் உள்ளறையில் அடைத்து, கற்பின்தாழ் வீழ்த்த கதவு - கற்பென்னும் தாழ்ப்பாள் இட்டுப் பூட்டியிருந்த (நிறையாகிய) கதவானது, பூண்டது ஓர் அன்பின் திறந்தது - முன்பே தான் கொண்டிருந்த பேரன்பின் (வேகத்தால்) திறந்து கொண்டது

(க - நு.) நளனைக் கண்டவுடன் தமயந்தியின் மன நிறை அழிந்தது என்பதாம்.

(வி - ரை.) தமயந்தியின் உள்ளத்தை அறையாகவும், மன நிறையை அவ்வறைக் கதவாகவும், கற்பைத் தாழ்ப்பாள் ஆகவும், அன்பைக் கதவைத் திறக்கின்ற வேகமாகவும் உருவகஞ் செய்தது மிக மகிழற்பாலன. நிறை - மனத்தைப் புறத்தே செல்லாது நிலைநிறுத்தல். கமலம் நீலம் என்பன முறையே நளன் தமயந்தியின் கண்களைக் குறித்த உவமவாகு பெயர்: உருவக அணி. (அஉ)

**தமயந்தி பார்க்கப்பார்க்க நளன் அழகு மிகுதிப்படல்**

௯0. உய்ஞ்சு கரையேற ஒட்டுங்கோல் ஒண்தொடியாள்
நெஞ்சு தடவும் நெடுங்கண்கள்—விஞ்சவே
நீண்டதோ அங்ஙனே இங்ஙனே நீள்மலராள்
ஆண்டதோள் மன்னன் அழகு.

(இ - ள்.) ஒள் தொடியாள் நெஞ்சுதடவும் நெடும் கண்கள் - ஒளிபொருந்திய வளையலணிந்த தமயந்தியுடைய நளனது மார்பைத் தொடுகின்ற நீண்ட கண்கள், அங்ஙனே விஞ்சவே நீண்டதோ - அம் மனமிருக்கும் இடமாகிய நளன் மார்பின்மீது மிகுதியாக நீண்டனவோ? நீள்மலராள் ஆண்ட தோள் மன்னன் அழகு - உயர்ந்த செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகள் வாழ்கின்ற தோள்களையுடைய நளனின் அழகாகிய கடல், இங்ஙனே உய்ஞ்சு கரைஏற ஒட்டும் கோல் - (தமயந்தியைத்) தப்பிக் கரையேற விடுமோ?

(க - து.) தமயந்தியின் கண்கள் நளன் அழகைப் பார்த்தபடியே இருந்தன; அவன் அழகுக்கடல் அவளைக் கரையேற விட்டுவிடுமோ?

(வி - ரை.) நளனுடைய மார்பழகைத் தமயந்தி பார்த்தபடியே தன் கண் வாங்காமல் நிற்கின்றாள். ஆனால் அவன் அழகு மேலும் மேலும் வளர்ந்துகொண்டே போகின்றது. இந் நிலையில் காதலுணர்வு மேலும் மேலும் பெருக, நளனின் அழகாகிய கடல் தமயந்தி யென்னும் நெஞ்சத் தெப்பத்தைக் கரையேறவிடாது அலைத்து அலைத்து நிற்கும் என நூலாசிரியர் நளன் அழகை வியந்து கூறுகின்றார். இராமனைக் கண்ட பெண்கள் அவன்றன் அழகு நலம் முழுதும் பார்க்கமாட்டாமல் ஒவ்வோர் உறுப்பையும் பார்த்தது பார்த்தபடியே இருந்தாரெனக் குறித்ததூஉம் இங்கே ஒப்பு நோக்கி மகிழற்பாலது ஆகலான், அதனையும் இங்கே காட்டுதும்:

[1]"தோள்கண்டார் தோளே கண்டார் தொடுகழல் கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரும்அஃதே."

என்பது காண்க.

உய்ஞ்சு - உய்ந்து என்பதற்குப் போலி; ந. ஞ. போலியாக வந்தது. ஐந்நூறு : ஐஞ்ஞூறு. அரைநாண் ; அரைஞாண்,

1. கம்பரா, உலாவியற் : க௯.

[1]"செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற் றம்பலவன்.'

என வருவன காண்க. நெஞ்சு தடவுதல் தமயந்தியின் கண்கள் நளனது மார்பைப் பார்த்த வண்ணமா யிருத்தல். (அ௩)

தமயந்தி நளன்மார்பைத் தழுவ எண்ணல்:
அது நாணத்தால் தடையுறுதல்

௯௧. மன்னுகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னும் புக்கொளிப்பப் புல்லுவனென்—றுன்ன
எடுத்தபே ரன்பை இடையே புகுந்து
தடுத்ததே நாணும் தறி.

(இ - ள்.) வார் அணிந்த மெல்முலையும் - கச்சால் இறுக்கப் பட்ட மெல்லிய கொங்கைகளும், பொன்நாணும் - பொன் சங்கிலியும், மன் ஆகத்து உள் அழுந்தி புக்கு ஒளிப்ப - நளவேந்தனுடைய மார்பிடத்துப் புகுந்து (இடையறவு படாமல்) அழுத்தப்பட்டு மறையும்படி, புல்லுவன் என்று உன்ன எடுத்த பேரன்பை - (நான்) தழுவுவேன் என்று (தமயந்தி) நினைத்துக்கொண்ட பெரிய அன்பென்னும் (யானையை), நாண் ஆம் தறி இடையே புகுந்து தடுத்தது - வெட்கமென்னும் கட்டுத்தறி ஊடே நுழைந்து தடைசெய்தது.

(க - து.) தமயந்தி தன் ஆசைமிகுதியால் நளனைத் தழுவ எண்ணினள்; இடையில் தோன்றிய வெட்கம் அதைத் தடுத்து நிறுத்தியது என்பதாம்.

(வி - ரை.) மன் - நிலை பெறுதல்: அஃதுடையவனைக் குறித்தலால் ஆகுபெயர்.

[2]"மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை அஃதின்றேல்
மன்னுவாம் மன்னர்க் கொளி.'

என்னும் திருவள்ளுவர் திருமறையும்,

[3]"உறங்கு மாயினும் மன்னவன் தன்னொளி
கறங்கு தெண்திரை வையகம் காக்குமால்.'

என்னும் திருத்தக்க தேவா சிந்தாமணியும், இதனை வற்புறுத்துதல் அறிக. நிலைபெறுதலாவது நாட்டில் நடக்கவேண்டிய நெறி முறை மாறாது நடக்குமாறு அமைச்சும் படையும் கொண்டு பாதுகாத்து அமைவுறச் செய்தல்.

1. திருநாவுக். தேவாரம்: ௪: ௮0: ௫. 2. திருக்குறள்: ௫௫௬.
3. சீவகசிந். ௨௪௮.

[1]"மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்.'

என்றார், புறநானூற்றினும். ஆகம் - மார்பு. 'தறி'யென்பதற் கேற்ப யானையென்று கூறுததால்-இஃது ஏகதேச உருவகவணி;

[2]"உரன் என்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்.'

என்ற திருக்குறளில் வருவதுபோற் கொள்க. பேரன்பு-பெரிய அன்பு: அஃதாவது இடையறவு படாமல் வளர்கின்ற காதல். உன்னு: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். (அசு)

தமயந்தி நளனை நீ யாரென வினவுதல்

கூஉ. காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
உள்ளவா சொல்லென்றாள் ஊசற் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு.

(இ - ள்.) ஊசல் குழைமீது (தமயந்தியானவள்) ஊஞ்சல் போல் அசைகின்ற காதணியின்மேல், வாள் வெள்ளநீர் சோர விட்டு - கண்களிலிருந்து வெள்ளம்போல் பெருகிவருகின்ற கண்ணீரை ஒழுகவிட்டு, காவல்கடந்து-இடையிலுள்ள காவல்களை யெல்லாம் தாண்டி, எங்கள் கன்னிமாடம் புகுந்தாய் - எமது அந்தப்புரக் கன்னிமாடத்துக்கு வந்துற்றாய், விஞ்சைக்கு இறைவனோ தேவனோ யாவனோ - நீ மாயவித்தைக்கு முதன்மை யானவனோ தெய்வத்தன்மை யுடையவனோ வேறு எவனோ? (நீ இங்கே வந்தது வியப்பையூட்டுகின்றது), உள்ளவா சொல் என்றாள் - உள்ளபடி மறைக்காமல் கூறுக என்றாள்.

(க - து.) தமயந்தி, தான் இருக்கும் கன்னிமாடத் துக்குள் வந்த நளமன்னனைக் கண்டு வியந்து, 'நீ யார்?' என வினவினாள் என்பதாம்.

(வி - ரை.) காதளவுவரை நீண்ட கண்களாதலால் 'ஊசற் குழைமீது வாள்' என்றார். வாள்போன்ற கண்ணை வாளென்றது உவமவாகு பெயர். நளனைக் கண்டவுடன் யாவனென அறியா திருந்தும் இயற்கை வகுத்த அன்பின் புணர்ப்பால் பேரன்பு கொண்டு அவ்வன்பின் பெருக்கு வெளித்தோன்றுவதுபோல் நீர் பெருகி ஓடிற்றதலான், 'நீர் சோரவிட்டு' என, நயம்பட

1. புறம். ருரு. 2. திருக்குறள்: உச.

மொழிந்தார். அன்புகொண்டவிடத்துக் கண்ணீர் பெருகுமென் பதனைத் திருவள்ளுவரும்,

> [1]"அன்பிற்கும் உண்டோ அடைக்கும்தாழ் ஆர்வலர்
> புன்கணீர் பூசல் தரும்."

எனக் கூறுதல் அறிக.

'யாவனோ' முதலியவற்றில் வரும் ஓகாரங்கள் மூன்றும் வியப்பும் வினாவும் தோன்ற நின்றன. புதியார் ஒருவரைக் காணும்போது அவரிடம் கவரும்தன்மை காணின் யாருக்கும் வியப்பும் ஐயமும் தோன்றுவது இயல்பு. அதிலும் இயற்கை வகுத்த அன்பால் உந்தப்பட்ட மனத்தார் எய்தும் தன்மை கட்டுரைக்கற்பாலதன்றாம். இவ்வாறே சுந்தரரைக் கண்ட பரவைநாசசியார், சுந்தரர்பால் தம்மையறியாது மனத்தை ஈர்த்த அன்பின் வழிப்பட்டாராய்,

> [2]"முன்னேவந் தெதிர்தோன்றும் முருகனோ பெருகொளியால்
> தன்னேரில் மாரனோ தார்மார்பின் விஞ்சையனோ
> மின்னேர்செஞ் சடையண்ணல் மெய்யருள்பெற் றுடையவனோ
> என்னேயென் மனந்திரித்த இவன்யாரோ?"

என ஐயுற்று வியப்புடன் எண்ணியதறிக. (அ௫)

## நளன், தான்வந்த செய்தியையும் தன்னுடைய நாடு நகர்களையும் தெரிவித்தல்

கூகூ. தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும்
நீரால் அவித்துக் கொடுநின்று—வாராத
பொன்னாடர் ஏவலுடன் போந்தவா சொல்லித்தன்
நன்னாடு சொன்னான் நளன்.

(இ - ள்.) நளன் - (அதற்கு) நள மன்னனவன், தீராத காம தழலை - ஆறாத தன் காமத்தீயை, தன் செம்மை எனும் நீரால் - தன்னுடைய உயர்ந்ததன்மையாகிய நீரினால், அவித்துக் கொடு நின்று - தணித்துக்கொண்டு நின்று, வாராத பொன்னாடர் ஏவலுடன் போந்தவாசொல்லி - (மண்ணுலகிற்கு) வரத்தகாத (பெருமை மிக்க) விண்ணுலகத் தேவர்களின் கட்டளையினால் தான் தூதுவனாக வந்த வரலாற்றை எடுத்துச்சொல்லி, தன் நல் நாடு சொன்னான் - தனது (நீர், நில வளமிக்க) நல்ல நாட்டையும் கூறினான்.

---

1. திருக்குறள்: எக. 2. பெரியபுராணம், தடுத்தாட்: கசச.

(க - து.) நளன் தன் காதலை அடக்கிக்கொண்டு தான் வந்த வரலாற்றையும், தன் நாடு நகர் முதலியவற்றையும் சொன்னான் என்பதாம்.

(வி - ரை.) தீராத காமத்தழல் - அடக்கவொண்ணாத காம நெருப்பு. வெளியிற் காணப்பெறும் நெருப்பு வெளிப்புறத்தையே சுட்டு வருத்தும். இது வெளிப்புறத்தையன்றி உட்புறமாகிய அகத்தையும் சுடுதலின் 'தீராத' என்னும் அடைகொடுத்துக் கூறினார்; இதன் தன்மையை,

> [1]'ஊருள் எழுந்த உருகெழு செந்தீக்கு
> நீருட் குளித்தும் உயலாகும்—நீருள்
> குளிப்பினும் காமம் சுடுமேகுன் றேறி
> ஒளிப்பினும் காமம் சுடும்.'

என்று பிறர் கூறுவதும் அறிக. இந் நெருப்பு என்றதற்கேற்ப, அதைத் தன் அடக்கமென்னும் ஆண்டகைக்குணத்தால் அடக்கி நின்றதை நீர் என்றார். இவை உருவக அணி. தான் வந்த வரலாற்றையும் தன் நாடு நகர் முதலியவற்றையும் நன்கு தெளியும்படி கூறினானாதலால் 'வந்தவா......தன் நன்னாடு சொன்னான்' என்றார். ஆறு : ஆ எனக் கடைக்குறைந்து நின்றது. (அரு)

இந்திரனுக்கு மாலை சூட்டும்படி நளன் தமயந்திக்குக் கூறல்

கூச. என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றான் தொடையில்தேன் தும்பிக்கே
ஊட்டுவான் எல்லாம் உரைத்து.

(இ - ள்.) தொடையில் தேன் தும்பிக்கே ஊட்டுவான் - (தன்) மலர் மாலையிலுள்ள தேனை வண்டுகள் உண்ணுமாறு கொடுக்கின்ற நளமன்னன், எல்லாம் உரைத்து - (தான் வந்த வரலாறுகள்) யாவும் அவட்கு எடுத்துக்கூறி, என் உரையை யாது என்று இகழாது - எனது சொல்லை இஃதென்னவென்று புறக்கணித்துவிடாது, இமையவர்வாழ் பொன் உலகம் காக்கும் புரவலனை - கண் இமைக்காதவராகிய தேவர்கள் வாழும் விண்ணுலகை ஆட்சிபுரிகின்ற வேந்தனாகிய தேவேந்திரனுக்கு, மென்மாலை சூட்டுவாய் என்றான் - (உன் சுயம்வரகாலத்தில்)

1. நாலடியார் : கூ0.

மெல்லிதாகிய மலர்மாலையைச் சூட்டுவாயாக என்று மொழிந்தான்.

(க - து.) 'என் சொல்லைத் தட்டாமல் சுயம்வரகாலத்தில் தேவேந்திரனுக்கே நீ மாலை சூட்டவேண்டு' மென, நளன், தமயந்திக்குக் கூறினான் என்பதாம்.

(வி - ரை) தமயந்திக்கு மாலைசூட்டுதற்கு மண்ணுலக அரசரினும் விண்ணுலகத் தேவேந்திரன் சிறந்தவன், செல்வமிக்கான் முதலியன யாவும் தோன்ற, 'இமையவர் வாழ் பொன்னுலகம் காக்கும் புரவலன்' என்றார். புரவலன்: புரத்த (காத்த)லில் வல்லவன் என்பது பொருள்; புரவலனுக்கு எனப் பொருள் கொள்ளக் கிடப்பதால் இது வேற்றுமை மயக்கம்.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாய்ப் புகழெனின் உயிரும் கொடுக்கும் எந்தலாய் இருக்கின்றோன் நளமன்னன் என்பது குறிப்பினால் தோன்ற, 'தொடையில் தேன் தும்பிக்கே ஊட்டுவான்' என்றார். ஊட்டுதல் - உண்ணுமாறு உவப்புடன் கொடுத்தல். (அஎ)

**தமயந்தி, நளனை நோக்கி 'நினக்கே சுயம்வரம் வகுத்த'தெனல்**

கூஅ. இயமரம்நின் றார்ப்ப இனவளைநின் றேங்க
வயமருதோள் மன்னா வகுத்த—சுயம்வரம்தான்
நின்பொருட்டால் என்று நினைகென்றாள் நீள்குடையான்
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து.

(இ - ள்.) நீள்குடையான் தன்பொருட்டால் தளர்ந்து நைவாள் - நீண்ட குடையை உடைய நளமன்னனுக்காகவே மனம் மாழ்கி வருந்துவோளாகிய தமயந்தியானவள், வயம் மருதோள் மன்னா - வெற்றிபொருந்திய தோள்களையுடைய வேந்தே!, இயம் மரம் நின்று ஆர்ப்ப - பல்வகை இசைக்கருவிகள் (ஒரு பக்கம்) நின்று முழங்க, இன வளை நின்று ஏங்க - சங்குக் கூட்டங்கள் (மற்றொரு பக்கம்) நின்று பேரொலி செய்ய, வகுத்த சுயம்வரம் - ஏற்படுத்திய இந்தச் சுயம்வரமானது, நின்பொருட்டுதான் என்று நினைக என்றாள் - உன்னை மணஞ்செய்து கொள்வதற்காகவே அமைத்ததென்று நீ கருதுவாயாக என்று கூறினாள்.

(க - து.) தமயந்தி நளனைப்பார்த்து 'இச் சுயம்வரம் உனக்காகவே ஏற்படுத்தியது என்று நினைத்துக்கொள்' என்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை) இயம் மரம் - ஊதுகருவிகள்: மரத்தால் இயன்ற பொருள்களை மரம் என்றது ஆகுபெயராகக்கொண்டு. அவை நாகசின்னம், புல்லாங்குழல் போன்ற ஊதுகருவிகள் எனக் கொள்க. இனம் வளை: வளை இனம் என மாற்றுக; இஃது இலக்கணப்போலி மருவுதோள்: மருதோள் என உகரம் குறைந்து நின்றது; முக்காலவினைத்தொகை.

அரசமங்கைகட்கு உரிய முறைப்படி வகுத்த சுயம்வரம் ஆயினும் இச் சுயம்வரத்தில் உன்னையே மணப்பேன் ; பிறர் யாரையும் மனத்தாலும் கருதுகிலேன் ; நீ வேறொன்றும் சொல்ல வேண்டா வென்னும் கருத்தினளாய் 'சுயம்வரம்தான் நின்பொருட்டால் என்று நினைக' என்றாள் என்க.

நீள்குடையான் - தன் ஆட்சிமுறை எங்கும் பரந்து செல்லும் தன்மையுடைய வெண்கொற்றக்குடையான் என அவன் குடி புறந்தரூஉம் செந்தண்மை தோன்ற விரித்தவாறும். தளர்ந்து என்னும் வினையெச்சம் நைவாள் என்னும் வினைப்பெயர் கொண்டு முடிந்தது. (அஅ)

தேவர்களையும் நளனையும் தன் சுயம்வரத்துக்கு வருமாறு தமயந்தி வேண்டுதல்

கசு. போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களும் நீயும்
எழுந்தருள்க என்றாள் எடுத்து

(இ - ள்) போது அரிகண் மாதராள் - தாமரை மலர் போன்ற செவ்வரியோடிய கண்களையுடைய தமயந்தியானவள், சோதி செழும் தரள வெண்குடையாய் - ஒளியுள்ள குளிர்ச்சியை யுடைய வெள்ளைக் குடையைக்கொண்ட வேந்தே!, பொன்மாலை சூட்ட ஆதரித்தார் தம்மோடு - அழகிய (சுயம்வர) மலர்மாலையைச் சூட்டுதற்கு விரும்பிய வேந்தர்களுடனே, தேவர்களும் நீயும் அவை அகத்தே எழுந்து அருளக என்றாள் எடுத்து - தேவர்களுடனே நீயும் அவ்வவையிலே வந்திருப்பாயாக என விளக்கமாகக் கூறினாள்

(க - ரு.) தமயந்தி நளனை நோக்கி, 'தேவர்களும் நீயும் சுயம்வரமண்டபத்து வந்திருங்கள்' என்று விளக்க மாகக் கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) போது - தாமரை மலர்.

[1] "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே."

என்றாராகலின். அரி - இரேகை; கண்களில் படர்ந்துள்ள செந்நிற வரிகள். அஃது, தமயந்தியின் கண்ணின் அழகை விளக்கி நின்றது. இதனை,

[2] "மலிபெயற் கலித்த மாரிப் பித்திகத்துக்
கொயலரு நிலைஇய பெயலேர் மணமுகைச்
செவ்வெரிந் உறழும் செழுங்கடை மழைக்கண்."

என்றார் பிறரும். 'தரள வெண்குடையாய்' என இப்பாடலிலும் 'நீள் குடையான்' என முன் பாடலிலும், 'பூவின் நிழல் போலும் தண்குடையான்' என (௭௭) ஆம் பாட்டிலும் பிறாண்டும் கூறிவருவது, நள மன்னன் ஆட்சிச் சிறப்பையும் கோமுறை கோடாக் கொற்றத்தையும் விளக்குதற்கென்க. எடுத்துரைத்தல் - கிளர்ச்சியுடன் விளக்கமாகக் கூறல். மாதர் + ஆள் : எனப் பிரித்து அழகை ஆட்சி செய்பவள் என்றும் பொருள் கோடலுமாம். முன்பு 'அழகு சுமந்திளைத்த ஆகத்தாள்' (௭௬) என்றதூஉம் காண்க. அருள்க : வியங்கோள் வினைமுற்று. (அ௬)

நளன், தமயந்தியிடமிருந்து இந்திரன்பால்
திரும்பிவந்து தொழுது நிற்றல்

௬௭. வானவர்கோன் ஏவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே—தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டார் உவப்பக் கலந்து.

(இ - ள்.) தேன்முரலும் வண்தார் நளன் - தேனுண்ணும் வண்டுகள் முழங்குகின்ற குளிர்ச்சி பொருந்திய மலர்மாலை யணிந்த நள மன்னனானவன், வானவர்கோன் ஏவல்வழி சென்று - தேவர்கள் அரசனாகிய இந்திரனது கட்டளையின்படி (தமயந்தியிடம் தூதாகச்) சென்று, வாள் நுதலை தான் அணுகி - ஒளிபொருந்திய நெற்றியையுடைய தமயந்திபால் தான் சார்ந்து, மீண்டபடி சாற்ற - (கண்டு பேசித்) திரும்பி வந்த தன்மையைக் கூறுதற்கு போந்து - தான் வந்து,

1. நால்வர்நான்மணிமாலை : ௪௦ 2. அகம். ௪௨.

கண்டார் உவப்ப கலந்து - (தன்னைப் பார்த்தவர் ஆகிய) தேவர்கள் மகிழ்வு கொள்ளுமாறு அவர்களோடு (அளவளாவிச்) சேர்ந்து, வச்சிர ஆயுதன் தொழுதான் - வச்சிரப் படையை யுடைய இந்திரனை வணங்கினான்.

(க - து.) நளன் தமயந்தியைக் கண்டு வந்து தேவர்களுடன் அளவளாவி இந்திரனை வணங்கினான் என்பதாம்.

(வி - ரை.) வாள் நுதல்: இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. தேன் - வண்டு: அதன் செயலாகிய தேனுண்ணுதலுடைய என்று கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது. கண்டார் என்னும் பொதுப் பலர்பாற் சொல், ஈண்டு ஒன்றொழிபொதுச் சொல்லாகத் தேவர்களைக் குறித்து நின்றது; 'ஆயிரமக்கள் பொருதார்' என்பது போல. கலத்தல் - ஒன்றுபடல். (௯0)

நளன், தமயந்தியிடம் பேசிவந்த வரலாற்றை உரைத்தல்

௯௧. விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும் நன்குரைத்த-பெண்ணணங்கின்
வன்மொழியும் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியும் சென்றுரைத்தான் மீண்டு

(இ - ள்.) விண்ணவர்தம் ஏவலுடன் - தேவர்களின் வேண்டுதலால், வீமன் திருமகள்பால் - வீமராசனின் அழகிய மகளாகிய தமயந்தியிடத்து, நண்ணுபுகழ் நளனும் - சென்ற கீர்த்திமிக்க நளமன்னனும், தான் மொழிந்த மெல்மொழியும் - (தேவர்கட்காக விருப்புடன்) தான் பேசிய நயஞ் செறிந்த வுரைகளையும், பெண் அணங்கின் நன்கு உரைத்த வல் மொழியும் - பெண்களிற் சிறந்தவளாகிய தமயந்தியானவள் தெளிவுடன் (அதற்குக்) கூறிய உறுதிமொழிகளையும், தேவர் மனம் மகிழ - தேவர்களின் மனம் களி கொள்ளுமாறு, மீண்டு சென்று உரைத்தான் - திரும்பி வந்து கூறினான்.

(க - து.) நளன் தமயந்திபால் போய்வந்து தான் கூறியவற்றையும் அவள் அதற்கு உரைத்தவற்றையும் தேவர்களிடம் கூறினான் என்பதாம்

(வி - ரை) அணங்கு - அழகு: அதையுடைய தமயந்திக் காதலால் குணவாகுபெயர். அல்லது தெய்வப்பெண் போன்றவள் என உரைத்தலுமாம்.

"[1] அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ."

எனத் தேவர் குறளினும்,

"[2] அணிபறித் தழகுசெய்யும் அணங்கின்மேல்."

எனக் கம்பராமாயணத்திலும் வருதல் அறிக. வன்மொழி-வலிமையாகிய சொல்: அஃது உறுதிப்படுத்திச் சொல்லுதற்காயிற்று. அல்லது கடிந்து பேசிய சொல்லென்று கூறுதலுமாம். நளன் இந்திரனுக்கு மாலை சூட்டும்படி தமயந்தியை வேண்டிய போது, அவள் அதற்கு மறுமொழியாக, 'சுயம்வரந்தான் நின் பொருட்டால் என்று நினைக' (அஅ) என்று மறுத்துக் கூறியதைக் கொண்டு தெளிக. தான் கூறியவற்றை 'மென்மொழி' யென்றான். ஒருவர்பால் மற்றொருவர் ஒரு முதன்மையான செயல் குறித்துப் போந்தகாலை அவர் தம் குறிப்பறிந்து காலமும் இடமும் கணித்தாய்ந்து, மெல்லிய இனிய மேவருதகுநவான கனிந்த சொற்களால் கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிந்து, தாம் வந்த காரியத்தை முடிக்க முற்படுதல் இயல்பாகலான் என்க. 'வன்மொழி' 'மென்மொழி' என்பன, அவ்வவற்றின் இயற்கைப் பண்பை விளக்கி நின்றன: பண்புத்தொகை. (கூக)

நீர்க் கடவுளர் முதலியோர் நளனுக்கு வரமளித்தல்

கூகூ. அங்கி அமுதம்நீர் அமபூ அணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றாய் எனவருணன் ஆகண் டலன்தருமன்
மற்றோனும் ஈந்தார் வரம்

(இ - ள்.) வருணன் ஆகண்டலன் தருமன் மற்றோனும் - வருணனும் இந்திரனும் இயமனும் மற்றொருவனாகிய தீக் கடவுளும் ஆகிய நால்வரும், அங்கி அமுதம் நீர் அம்பூ அணி ஆடை - நெருப்பு சோறு நீர் அழகிய பூமாலை அணிகலம் துகில் ஆகிய இவைகளை, எங்கு நீ வேண்டினை - நீ எந்த இடத்தில் பெற விரும்புகின்றாயோ, அவ் இடத்தே சங்கைஅற பெற்றாய் என வரம் ஈந்தார் - அந்த இடத்திலேயே ஐயமின்றி நீ பெறுவாய் என வரம் கொடுத்தார்கள்.

1. திருக்குறள், ௧0அக.

2. கம்பராமா. அங்கதன் தூது : ௧அ.

(க - ரு.) தேவர்கள் நளனுக்கு, நெருப்பு சோறு முதலியன வேண்டும்போது கிடைக்கும்படி வரங்கொடுத்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) நளனுக்கு நெருப்புவரம் ஈந்தவன் அக்கினி தேவன்; சோற்று வரம் ஈந்தவன் இயமன்; நீர்வரம் ஈந்தவன் வருணன்; பூமாலை அணி ஆடை முதலிய வரங் கொடுத்தவனும் அவனே என்று பாரதம் பகர்கின்றது. பன்னிறம் காட்டுதல் நீரின் இயல்பாதலால் அதற்குரிய கடவுளை வருணன் என்றனர் தமிழ் முதுமக்கள்.

[1]'வருணன் மேய பெருமணல் உலகம்.'

என்றார் தொல்காப்பியரும் சங்கை - ஐயம். ஆகண்டலன் - இந்திரன்: பகைவரை நன்கு ஒறுப்பவன் என்னும் பொருளது. மற்றோன் - அக்கினி தேவன்: ஏனையோரினும் தூய்மையும் தன் வயமாக்குவோனுமாதலான் வேறுபிரித்துக கூறினார். அணி ஆடை - அழகிய பூவேலை செய்த கரையையுடைய ஆடையெனப் பொருள் கூறலுமாம். வரம் - வருதல் என்னும் தொழிற்பெயர், ஆகுபெயராய் நல்லன பெறுவதைக் குறித்தது. பிறரெல்லாம் இதனை வடசொல்லென மயங்குவர். குறித்த பொருள்கள் குறித்த காலத்தில் வருதலால் இப்பெயரமைத்தனர் தமிழ்ச் சான்றோர். தவம் முதலிய சொற்களும் இவ்வாறே என்க. பெற்றாய் என்பது, காலவிரைவு பற்றி வநத வழுவமைதி;

[2]'விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉ முக் காலமும் ஏற்புழி.'

என்னும் நன்னூல் விதிப்படி கொள்க. (கூஉ)

நளன் தேவர்களுடன் தமயந்தியின் சுயம்வர மண்டபம் சேர்தல்

கoo. **அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்**
**தங்களோடும் தார்வேந்தன் சார்ந்தனன்மேல்-மங்கை**
**வயமருவு கின்ற மணக்கா வலர்க்குச்**
**சயமரந்தான் கண்டதோர் சார்பு.**

(இ - ள்.) அங்கு அவர்கள் வேண்டும் வரம் கொடுக்கப் பெற்று - அவ்விடத்தில் அத்தேவர்கள் (தாமே கொடுக்க விரும்

1. தொல. அகத்திணை : ரு. 2. நன்னூல், ௩அ௪.

பிய) வரங்களைக் கொடுக்கப் பெற்றுக்கொண்டு, தார்வேந்தன் - மலர்மாலையணிந்த நளமன்னன், மேல் அவர்களொடும் - மண்ணுலகிற்கு மேலுள்ள விண்ணுலகத்தேவருடன், மங்கை வயம் மருவுகின்ற - தமயந்திபால் ஆசைகொண்டிருக்கின்ற, மணக்காவலர்க்கு - மணத்திற்கு வந்த அரசர்களுக்கு, சயமரம்தான் கண்டது ஓர் சார்பு - சுயம்வரமாக ஏற்படுத்தி ஓர் இடத்தைச் சாரும் இடமாக வைத்திருந்தலான், சார்ந்தனன் - இவனும் ஆங்கே போய்ச் சார்ந்திருந்தான்.

(க - ரு.) நளன், தேவர்களுடன் சுயம்வரமண்டபத்தை அடைந்திருந்தான் என்பதாம்.

(வி - ரை.) வேண்டும் வரம் - விரும்பிய பொருள்கள். வயம்: வசம் - பொருந்துதல் என்னும் பொருளுடையது. 'ச' வுக்கு 'ய' போலியாக வந்தது கசம் - கயம். மசக்கை - மயக்கை முதலிய தொடர்களைப்போலக் கொள்க. சயம்வரம்: சுயம்வரம். இதனை மற்ரோரிடத்தும் 'தாமம் புனைவான் சயம்வரத்து' (எக) எனக் கூறியதூஉம் காண்க. மோனை நயம்நோக்கி ஆசிரியர் இவ்வாறு படைத்துக்கொண்டனர் போலும்! சார்பு - சார்தல் என்னும் தொழிற்பெயர், சாருமிடத்தைக் குறித்தலால் தொழிலாகுபெயர்.

[1]"சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்."

இதில் சார்பு என்னும் இடத்தில் இப்பொருட்டாதலை உணர்க. (சுஙு)

### தமயந்தி, நளன் சென்றபின் காதலால் வருந்தல்

க0க. தூதுவந்த காதலனைச் சொல்லிச் செலவிடுத்த
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால்—யாதும்
அயிர்த்தாள் உயிர்த்தாள் அணிவதனம் எல்லாம்
வியர்த்தாள் உரைமறந்தாள் வீழ்ந்து.

(இ - ள்) தூதுவந்த காதலனை - (தேவர்கள் பொருட்டாகத் தன்பால்) தூதாகவந்த தன் காதலனாகிய நளமன்னனை, சொல்லி செலவிடுத்த மாது - (தன் உள்ளக்கிடக்கையை விண்டு) சொல்லிப் போகவிட்ட தமயந்தியானவள், உவந்துபின்போன வல்நெஞ்சால் - மகிழ்வுகொண்டு அவன்பால் சென்ற தன் கொடிய மனத்தினால், (அவன்பால் தன் நெஞ்சு பறிபோனதினால்), யாதும் அயிர்த்

1. திருக்குறள், ருடுக.

தாள் - (நளனிடமுள்ள குணஞ் செயல்கள்) எல்லாவற்றையும் ஐயங்கொண்டாள், உயிர்த்தாள் - பெருமூச்செறிந்தாள், அணி வதனம் எல்லாம் வியர்த்தாள் - அழகிய தன் முகத்தினிட மெல்லாம் வியர்வை அரும்பினாள், வீழ்ந்து உரைமறந்தாள் - (மெய்ம்மறந்து தரைமேல்) விழுந்து பேசசற்றவளானாள்.

(க - து.) நளன் சென்றபின், தமயந்தி தன் நெஞ்சு அவன்பால் பறிபோனதினால் மயங்கி உணர்விழந்து பேச்சற்றாள் என்பதாம்.

(வி - ரை.) தேவர்கள் பொருட்டாக ஒருவன் தூது வந்தான்; அவன் யாரென வினவியபோது தன் காதலனாக இருந்தான். உடனே தமயந்திக்குத் தன்னெஞ்சு துண்ணெனத் துடித்தது; அவனிடமே நின்றது; பின், காதல் கைமிகந்து நிற்குமாறு பிரிந்து சென்றான். அவள் அவனிடம் பல்லாற்றானும் ஐயங்கொண்டாள். அன்னம் நம்பால்வந்து இவன்றன் உயர் குணங்களை, நிறைமிக்க நெஞ்சினானென்றெல்லாம் 'செம் மனத்தான்; தண்ணளியான்' என்றெல்லாம் விரித்துரைத்ததே. அது சொன்னது வேறு. இவன் செயல வேறாகவன்றோ உள்ளது. இவன் அன்னங்கூறிய செயல்கள் குணங்கள் இலனாய்த் தான் தேவர்கட்கு மாலை சூட்டுமாறு எனக்குச சொல்லத் தூதுவனாகப் போந்தானெனின், இவனே நம்மை மணப்பானென்பது என்ன உறுதிப்பாடு என்பதை நினைத்தவளாய் இருந்தாள். ஆதலால், 'வன்னெஞ்சால் அயிர்த்தாள்' என்றார். அக்காதல் துன்பத்தால் 'பெருமூசசு விட்டாள; முகம் வேர்த்தது; பேச உணர்வற்று வீழ்ந்தாள்' எனக் காதலர்க்கு உண்டாம் மககு கலையற்ற அவள் நிலையெல்லாம் இயற்கைப்படம்போல இதன்கண் சுருங்கிய முறையில் விளக்கக் கூறிய சிறப்பாடு மகிழ்தற்குரித்து. அயிர்த்தாள் உயிர்த்தாள் வியர்த்தாள் என்பவைகளை முற்றெச்சமாகக் கொண்டு பொருள் கூறலுமாம். வல் நெஞ்சு தன் வழிப்படாது வன்மைகொண்டு காதலனிடம் செல்லும் கொடிய நெஞ்செனப் பொருள் கொள்ள நின்றது. இதனை,

[1] "கோட்டெங்கு சூழ்கூடற் கோமானைக் கூட என
வேட்டாங்கே சென்றவென் நெஞ்சறியாள்.'

என முத்தொள்ளாயிரத்தும்,

[2] "அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவனெஞ்சே
நீஎமக் காகா தது.'

---

1. முத்தொள்ளாயிரம், ௩௫. 2. திருக்குறள், கஉகக.

[1]'கெட்டார்க்கு நட்டாரில் என்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.'

எனத் திருக்குறளினும் வருதல் இதன் நிலையை விளக்குவனவாம். (கூச)

**தமயந்தி தன் உள்ளம் முதலியன பறிகொடுத்தாள் எனல்**

**கூ0உ. உள்ளம்போய் நாண்போய் உரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்தளிர்போல்-பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் திருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தாள் உயிர்.**

(இ - ள்.) பிள்ளைமீன் - மீன் குஞ்சுகளை (சிறு மீன்களை), புள் அரிக்கும் நாடன் திருமடந்தை - கொக்கு முதலிய ஊன் உண் பறவைகள் மேய்கின்ற விதாப்பநாட்டு மன்னனுடைய திருமகள் போன்ற தமயந்தி, பூவாளி - மன்மதனுடைய மலர்க் கணைகள், உள் அரிக்க - தன் நெஞ்சிற்பாய்ந்து வருத்துதலால் உள்ளம்போய் நாண்போய் உரைபோய் - (தன்னுடைய) எண்ணம்நீங்கி, வெட்கமும்போய், பேச்சும் சோர்ந்து, வரிநெடும்கண் வெள்ளம்போய் வேகின்ற மென்தளிர்போல் - செவ்வரிபரந்த நீண்ட கண்களிலிருந்து நீர் ஊற்றாக ஓடி நெருப்பிற்கிடந்து வேகின்ற மெல்லிய தளிர் போன்று, உயிர் சோர்ந்தாள் - ஆவி தளர்ந்து சோர்வுற்றாள்.

(க - து.) தமயந்தியானவள், காதலால் எண்ணம் நாணம் பேச்சு முதலியன அடங்கி ஆவியும் சோர்ந்தாள் என்பதாம்.

(வி - ரை.) உள்ளம்போய் என்றமையால் அவள் மனம் தன் கட்டுக்கடங்காமல் நின்ற நிலையைக் குறித்தது. மனம் தன்வரை நில்லாதாகவே, நாணமும் இலலாத.யிற்று. 'தாயிற் சிறந்தன்று நாண் தையலார்க்கு' எனவும், தாயைப்பார்க்கினும் பெண்மக்கட்கு நாணம் உயரியது; சிறந்தது; தன்னொடு உயிர்போல் இடையீடுபடாது பழகியது எனவும் திருக்கோவை யாரில் நயம்படவுரைப்பர் ஆனால் காதல மையிகந்தார்க்கு 'நாணுவரை யிறத்தல்' இயல்பாகலான், 'நாண்போய்' என்றார். நாணமறவே அவர் பேசசு யாதுமிலராய்ச சித்திரப்பாவை போல இருந்த நிலையில் இருப்பாராகலான், 'உரைபோய்' என்றார். பேச்சற்ற நிலையில் மனங்கசிந்துருகித் தொடுமணற்கேணி போல் கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்து ஓடுவது இயல்பாகலான்,

1. திருக்குறள், கஉகூ.

'வரி நெடுங்கண் வெள்ளம்போய்' என்றார். காதல் மிக்கார்க்கு நிறையும் நாணம் நீங்கியபோது கண்கள் நீர் சொரியுமென்பதனை இளங்கோவடிகள் தாம் ஆக்கியருளிய சிலப்பதிகாரப் பெருங் காப்பியத்தில் காட்டுகின்றார். கோவலனைப் பிரிந்து தனித்திருந்து காதலால் மெலியும் கண்ணகியார் கண்களும், கோவலனைக் கூடிக் களித்து இன்புற்றிருந்த மாதவியாரின் கண்களும் முறையே பிரிவுத் துன்பத்தாலும் கூடல் இன்பத்தாலும் தத்தம் நிறை நீங்குதலால் நீருகுத்தன என்று நயம்படக் கூறுவது இதனோடு ஒத்திருப்பதாகலான் அதனை ஈண்டுக் குறிக்கின்றோம். அது :

[1]"உள்ளூறு நறுந்தா துறைப்பமீ தழிந்து
கள்ளுக நடுங்குங் கழுநீர் போல
கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
உள்நிறை கரந்தகத் தொளித்துநீர் உகுத்தன."

என்பதாம்.

பிள்ளை மீன், மீன் பிள்ளை என மாற்றியுரைக்க: சொன்னிலை மாறிய இலக்கணப்போலி. அரித்தல் - மேய்தல். விதர்ப்ப நாட்டின் நீர்வளம் நிலவளம் கூறுமுகத்தால் 'புள்ளரிக்கும் நாடன்' என்றார். புள் - மீன் கொத்தி, கொக்கு, உள்ளான் முதலிய பறவைகள். இவைகள் மீன்களைப் பிடித்துண்பதற்கு அமையம் பார்த்திருத்தல் இயல்பு.

[2]"நிலையருங் குட்டம் நோக்கி இனிதிருந்து
புலவுக்கயல் எடுத்த பொன்வாய் மணிச்சிரல்."

எனப் பத்துப்பாட்டுச்சிறுபாணாற்றுப்படையினும்,

[3]"செங்கயல் பாய்ந்து, பிறழ்வன கண்டாங்கு
எறிந்தது பெறாஅ திரையிழந்து வருந்தி
மறிந்து நீங்கு மணிச்சிரல்."

என, மணிமேகலையினும் வருவன காண்க. உள்ளரித்தல் - நெஞ்சின உள்ளீடாகிய நிறை நாண் முதலியன இழந்து வெற்று நெஞ்சினளாதல்.

[4]"கையறு நெஞ்சத்துக் கண்ணகி."

என, இளங்கோவடிகள் அருள்வதுங் காண்க. (கூ௬)

---

1. சிலப். ௫ : உ௩௬-அ. 2. சிறுபாண். கஅ0-க.
3. மணி. ௪ . உஉ-௪. 4. சிலப். ௪. ௬௭.

### தமயந்தி, 'தன் உயிர்போனாலும் நளன்மேற் காதல் ஒழியேன்' எனல்

கஎரு. பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென்
ஆவியார் போனாலும் அவ்வழியே—பாவியேன்
ஆசைபோ காதென் றழிந்தாள் அணியாழின்
ஓசைபோல் சொல்லாள் உயிர்த்து.

(இ - ள்.) அணி யாழின் ஓசைபோல் சொல்லாள் - அழகிய யாழிசைபோன்ற இனிய சொல்லையுடைய தமயந்தியானவள், பூவின்வாய் வாளி - மன்மதனுடைய மலரால்ஆன அம்புகள், புகுந்த வழியே என் ஆவியார் போனாலும் - (என் உடலிற்) பாய்ந்த துவாரத்தின் வழியாக என் உயிர் சென்றுவிட்டாலும், அவ்வழியே - அது போனவழியாகவே, பாவியேன் ஆசை போகாது என்று - பாவியாகிய எனது (நளன் பாலுள்ள) ஆசைமட்டும் போகாது என்று சொல்லி, உயிர்த்து அழிந்தாள் - பெருமூச்சு விட்டு அறிவு மயங்கினாள்.

(க - ரு.) தமயந்தி தன் உயிர் போயினும் நளன் மேற்கொண்ட ஆசைபோகாதெனச் சொல்லிப் பெருமூச்சு விட்டு மயங்கிக் கிடந்தாள் என்பதாம்.

(வி - ரை.) பூவின்வாய் வாளி-பூவால் ஆன அம்பு: மூன்றும் வேற்றுமைக் கருவிப்பொருள். புகுந்தவழி - உடலில் அம்புகள் துளைத்துத் துளைத்துத் துளைகள் திறந்திருக்கும் வழிகள். உடலில் வெட்டுதல் துளைத்தல் அறுத்தல் ஆகிய நிகழ்ச்சிகளால் புண்ணுண்டானபோதும், ஊறு நேர்ந்த காலத்தும் ஆவி போகுதல் இயற்கையாக நிகழும் நிகழ்ச்சி. இவ்வாறு புண்துளை தன் உடலெங்கும் பட்டுருவியிருப்பதால் தன் உயிர் - அரும் பெறல் உயிர் - பிரிவது உண்மையாகும். ஆனால் அது போனவழியாக அது போனதைப் போல நளன்பாற் கொண்ட எனது ஆசை மட்டும் போகாது எனத் தமயந்தி தன் உழுவலன்பு புலப்படக் கூறினாள்.

ஆவியார்: உயர்வு குறித்து 'ஆர்' விகுதி வந்த திணை வழுவமைதி. அன்றி, உயர்வு குறித்து வந்த விகுதியெனக் கோடலுமாம். நாலடியார், திருக்கோவையார், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் என்று நூல்களுக்கு உயர்வு கொடுத்து வழங்கும் வழக்குகளும், குயிலார், மயிலார், கிளியார், வண்டார் எனும் அஃறிணைப்பொருள்களுக்கு உயர்வு கொடுத்துவழங்கும் வழக்குகளும் காண்க.

"[1] செந்தார்ப் பசுங்கிளியார் சென்றார்க்கோ ரின்னுரைதான்
தந்தாரேற் றந்தார்.'

எனச்சீவக சிந்தாமணியில் குணமாலையார், சீவக வேந்தன்பால் தூதனுப்பிய கிளியின்வரவை எதிர்பார்த்திருந்து வருந்திக்கூறும் போது 'பசுங்கிளியார்' என்றதூஉம் காண்க. காதலர்கட்கு ஆவி நீங்கினும் ஆசை நீங்காதிருக்க வேண்டுமென்பதை,

"[2] இம்மை மாறி மறுமை ஆயினும்
நீயாகியர் எங்கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே.'

என்பதும்,

"[3] இம்மைப் பிறப்பில் பிரியலம் என்றேனாக்
கண்ணிறை நீர்கொண் டனள்.'

என்பதும் அறிக. இதனால் தம் காதலரை உயிரென்றே கூறுவது தொன்றுதொட்ட வழக்காதலோடு உண்மை யென்பதனையும் உணர்க. தமயந்தி நெஞ்சத்தின் உண்மையை விளக்கியவாறும். 'பாவி' என்பது தம்மை இரக்கப்படுத்திக் கூறும் பணிமொழி.

"[4] பாவியேன் கண்ட வண்ணம் பரமனார்க் கடுத்த தென்னோ
ஆவியில் இனிய வெங்கள் அத்தனார்க் கடுத்த தென்னோ.'

எனக் கண்ணப்பநாயனார் தாம் அன்பு கொண்ட திருக்காளத்தி அப்பனுக்கு இரங்கித் தம்மைப் 'பாவி' எனக் கூறியதாகச் சேக்கிழார் பெருமான் அருளியதூஉம் அறிக. (கூரு)

இவ்வாறு தமயந்தி வருந்துங்கால் ஞாயிறு மறைதல்

க0௪. வையம் பகலிழப்ப வானம் ஒளிஇழப்பப்
பொய்கையும் நீள்கழியும் புள்இழப்பப்—பையவே
செவ்வாய அன்றில் துணைஇழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு.

(இ - ள்.) வையம் பகல் இழப்ப - பூவுலகம் முழுதும் பகற்பொழுதை இழக்கவும், வானம் ஒளி இழப்ப - விண்ணிட மெங்கும் வெளிச்சத்தை இழக்கவும், பொய்கையும் நீள்கழியும்

1. சீவக. குணமாலை: கஅசு. 2. குறுந்தொகை: சு௯. 3. திருக்குறள்: கங்கரு. 4. பெரிய. கண்ணப்ப: கஎ௭.

புள் இழப்ப - தடாகங்களும் நீண்ட கடற்கரை உப்பங்கழிகளும் (இரைதேர்ந்துண்ணும்) பறவைகளை இழக்கவும், செவ்வாய அன்றில் துணை இழப்ப - சிவந்த வாயையுடைய அன்றிற்பறவை கள் (ஆணும் பெண்ணும் தம் காதலராம்) துணை (இரண்டென் னும் தன்மை)யை இழக்கவும், வெம் வாய்விரிகதிரோன் - வெப் பம் பொருந்திய விரிந்த கதிரொளியையுடைய ஞாயிறானவன், பைய சென்று வெற்பு அடைந்தான் - மெல்ல மெல்லப் போய் (மேற்கு) மலையை அடைந்து மறைந்தான்.

(க - ரை.) வையகம் பகற்காலம் இழப்ப, வானகம் வெளிச்சம் இழப்ப, பொய்கையும் கழியும் பறவைகளை இழப்ப, அனறிற்பறவைகள் தம துணைகளை இழப்ப விரி கதிரோன் மறைநதான் என்பதாம்.

(வி - ரை) ஞாயிறு மறைந்தவுடன் உலகில் பகற்பொழு தும், வானில் ஒளியும், பொய்கை. கழிக்கரைகளில் பறவைகளும், அன்றிற் பறவைகளின் பிரிவும் நீங்கிவிடுமாதலின், வையம் வானம் முதலியன பகல் ஒளி முதலியவற்றை இழப்ப விரி கதிரோன் வெற்படைந்தான் என நயம்பெற மொழிந்தார். இக் குறிப்பினால் தமயந்தியும் முன் நாண் முதலியவற்றைப் பறி கொடுத்த நிலையில் வருந்துந் தன்மையிலிருக்கின்றாள்; இனி, மேலும் வருந்தித் தன்னைசம் இழப்பாளென்னும் பொருள் தோன்ற நினறது. இழப்ப, இழப்ப என்னும் வாய்பாடுகள் மாலைப்பொழுதின் வருகைச் சிறப்பை விளக்குகின்றன. பகற் பொழுது போயிற்று; வானிடம் இருட்டிற்று; பொய்கை களும், கழிக்கரை இடங்களும் விட்டுப் பறவைகள் போயின; அன்றிற் பறவைகள் ஒன்றுகூடித் தம் இருப்பிடத்தைச் சேர்ந் தன; இவ்வாறான பல்வேறு நிலைகள் உலகில் உண்டாகவிட்டு விட்டுக கதிரவன் வெற்புசசென்றடைந்தான் என்று கூறவேண் டுவதை இதனைப் படித்தார்க்கு அத்தோற்றங்கள் என்றும் மனத் தில் ஊன்றி நிற்குமாறு இவ்வாறு கூறினார்.

இளங்கோவடிகள் தாம் ஆக்கியருளிய சிலப்பதிகாரச் செஞ் சொற்கருவூலத்தில் கண்ணகியார், தம் கணவன் கோவலனைப் பிரிந்தாராக, அவர் தம் உள்ளத்தில் காதலற்பிரிவு கடுந்துன் பத்தை வளர்த்தது. அதனால் அவர் கூந்தலை ஒப்பனை செய்யா ராய் நெற்றியில் பொட்டிடாராய், அணியணியாராய் மனங் கலங்கி வருந்தியிருந்த அவர்தம் வடிவத்தை எழுத்தோவியமாகப் புனைந்து, கற்பார் நெஞ்சமும் அவர்தம் கோலங்கண்டு மனங் கவலுமாறு தந்த ஓவியம் கருத்தீர்க்கும் தன்மையது.

[1]' அஞ்செஞ் சீறடி அணிசிலம் பொழிய
மென்றுகில் அல்குல் மேகலை நீங்கக்
கொங்கை முன்றிற் குங்குமம் எழுதாள்
மங்கல அணியிற் பிறிதணி மகிழாள்
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்
திங்கள் வாண்முகம் சிறுவியர் பிரியச்
செங்கயல் நெடுங்கண் அஞ்சன மறப்பப்
பவள வாணுதல் திலகம் இழப்பத்
தவள வாணகை கோவலன் இழப்ப
மையிருங் கூந்தல் நெய்யணி மறப்பக்
கையறு நெஞ்சத்துக் கண்ணகி.'

என்னும் தொடர்களில் அமைந்துள்ள சொற்கள், எவ்வளவு கருத்தமைதி கொண்டனவாய்க் கற்றார்க்கு அவலநிலையை ஊட்டுவனவாய் அமைந்துள்ளன. அவர் ஒவ்வோர் உறுப்புக்கும் ஒப்பனை செய்யாதிருந்ததை மறப்ப இழப்ப முதலிய சொற்களால் அமைத்ததுபோலவே, இவரும் இம்மாலைப் போதைக் கூறவந்த காலை இவ்வாறு கூறினரென்க. இழப்ப, இழப்ப என வருவனவற்றில் உம்மைகள் தொக்கு நின்றன: வினைச் செவ்வெண். 'மயிலாட மரந்தழைப்ப நீர் பெருக மழை பெய்தது' என்பதுபோலக் கொள்க. இது செவ்வெண். 'பையவே சென்றடைந்தான்' என்றார். பைய-மெல்ல என்னும் பொருட்டு. ஒன்று திடீரென நிகழின் எவருக்கும் அச்சத்தை யூட்டி அழிவைச் செய்வனவாம். தமயந்தி காதலால் பிணிப்புண்டு வருந்திக்கிடக்கின்றாள். காதலர்க்கோ பகற்பொழுதினும் மாலைப் பொழுதும் கங்குற்பொழுதும் கழிபெருந்துன்பம் பயப்பனவாகும். இவ்விரு பொழுதுகளும் அடுத்தடுத்து வரவிருக்கின்றன. எனவே, அவைகள் அவ்வாறு வருதல் தமயந்தி மனநிலைக்கு ஏற்றதாகாமல் காதலுணர்ச்சியை மேலும் வளர்ப்பதாக இருத்தலின், அதனைப் படிப்படியாகக் கூறினர். இது கவிகளின் மரபு. இப்பாட்டு மிக்க சுவைபட அமைந்தது. (கஎ)

**ஞாயிற்றை ஆடரங்கில் நடிக்கும் கூத்தன் எனல்**

**க௦௮. மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கில்
பாயிருள் என்னும் படாம்வாங்கிச்—சேய்நின்று
அறைந்தா ரணம்பாட ஆடிப்போய் வெய்யோன்
மறைந்தான் குடபால் வரை.**

1. சிலப். ச: சஎ - ருஎ.

(இ - ள்.) வெய்யோன் - ஞாயிறென்னும் கூத்தன், மா இரு ஞாலத்து - மிகப் பெரிய மண்ணுலகில் இருக்கின்ற, உயிர்காண - உயிர்கள் எல்லாம் கண்டு மகிழும்படி, வான் அரங்கில் - வான் வெளியாகிய கூத்துமேடையில், பாய் இருள் என்னும் படாம் வாங்கி - பரந்துள்ள இருளாகிய திரைச் சீலையை ஒதுக்கி, சேய் நின்று - தூரத்தில் நின்று, அறைந்து ஆரணம்பாட - (பாடுவோர்) உரத்த ஒலியில் மறைமொழிப் பாடல்களைப்பாட, ஆடிப்போய் - கூத்தாடல் செய்து, குடபால்வரை மறைந்தான் - மேற்குமலை யிற்போய் ஒளித்தான்.

(க - ரை.) வான்வெளியாகிய கூத்துமேடையில் ஞாயிறாகிய கூத்தாடி, இருளென்னும் திரைச்சீலையை ஒதுக்கிக் கொண்டு நின்று, பகலெல்லாம் கூத்தாடிமுடித்து மேற்குமலையில் மறைந்தான் என்பதாம்.

(வி - ரை.) வெய்யவனை ஒரு கூத்தாடியாக உருவகஞ் செய்து, அவன் செயல்களையெல்லாம் கூத்தரங்கில் நிகழும் நிகழ்ச்சியாக்கித் தற்குறிப்பேற்ற அணி யமையக் கூறினர். இவ் வாறே கம்பநாடரும் இறை சிவபெருமான் திருக்கூத்துக்கு ஒப் புமையாகக் காட்டி ஞாயிற்றின் தோற்றத்தைக் குறித்திருப்பது, இக்கருத்தோடொத்திருப்பது கண்டு மகிழ்க:

[1]"எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட உலகம் ஏத்த
விண்ணவரும் முனிவர்களும் வேதியருங்
கரங்குவிப்ப வேலை என்னும்
மண்ணுமணி முழவதிர வானரங்கில்
நடம்புரிவா னிரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்களெல்லாம்.'

மா + இரு = மாயிரு என வகர உடம்படுமெய் வர வேண்டுமிடத்து, யகரவுடம்படுமெய் வந்தது.

[2]"இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும்.'

என்னும் நன்னூல் விதிப்படி 'மா' இடைச் சொல்லாதலின் இவ் வாறு வந்ததென்க.

[3]"மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்க.'

எனத் திருமுருகாற்றுப்படையினும் 'கோயில்' என, வழக்கினும்

1. கம்பராமா. மிதிலைக்: கடு. 2. நன்னூல்: உகக.
3. திருமுருகு. கக.

வருதல் காண்க. வான் அரங்கு : வானமாகிய அரங்கென விரிதலால் இருபெயரொட்டுப் பண்புத் தொகை. குடக்கு - மேற்கு : குட எனக்குறைந்து நின்றது. வரை - மலை: இருமடியாகு பெயர். (கூஅ)

ஞாயிறு மறைந்தவுடன் அந்திப்பொழுது தோன்றல்

கஂசு. மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை அந்திப் பொழுது

(இ - ள்.) மல்லிகையே வெண்சங்கா வண்டு ஊத - மல்லிகை அரும்பையே வெண்ணிறச் சங்காகக் கொண்டு வண்டுகள் (வாயில் வைத்து) ஊதிமுழங்கவும், வான் கருப்பு வில்லி கணை தெரிந்து மெய்காப்ப - சிறந்த கரும்பு வில்லையுடைய மன்மதனானவன் மலர்க்கணைகளை ஆராய்ந்தெடுத்துத் தன் உடம்பைப் பாதுகாத்துக் கொண்டுவரவும், முல்லை எனும் மென்மாலை தோள் அசைய - முல்லைமலர் என்னும் மெல்லிய மாலையானது தன் தோள்களில் அணியப்பெற்று ஆடாநிற்கவும், புன்மாலை அந்திப்பொழுது மெல்ல நடந்தது - சிறிய மாலைக்காலமாகிய அந்திப் பொழுதென்னும் (அரசு) பைய நடந்துவந்தது.

(ந - ரை.) வண்டுகள் மல்லிகைச் சங்கை வாய்வைத்து ஊத, கருப்புவில்லி மலரம்புகளைத் தேர்ந்தெடுத்து மெய்க் காவல் புரிய, முல்லை மலரென்னும் மாலை தன் தோளில் கிடந்து அலைய, அந்திப் பொழுதாம் (அரசு) மெல்ல நடந்துவந்தது என்பதாம்.

(வி - ரை.) அந்திப்பொழுது வந்ததை ஓர் அரசன் உலா வருவதாகக் கற்பனை செய்து அவன் வருங்கால் சங்கமுழங்க மெய்க்காவலர்தொடர்ந்துவர மலர்மாலை யணிந்து ஏறுபோற பீடு நடை நடந்துவருதல் இயற்கையாகலின், அவ்வாறு உருவகஞ் செய்து, அந்திப்பொழுதை அரசன் ஆக்கினார். அந்திப்பொழுதின் நிகழ்ச்சிகளை ஆண்மகன் தன்மைபோல் வருணித்தலால் அரசு எனனும் சொல் வருவிக்கப்பட்டது. அக்கால நிலையை அவற்குரிய சிறப்புச் செய்பவராக உருவகஞ் செய்தார். இவ்வளவு சிறப்புங்கூறி அசசிறப்புக்குரிய அரசன் என்று கூறாததால் இஃது ஏகதேச உருவக அணி.

மணிமேகலைப் பெருங்காப்பிய நூலாசிரியரும் பகற்போது போய் மாலைக்காலம் வந்ததை, ஒரு பெண்ணாக உருவகஞ் செய்து, அப் பெண்ணுக்குரிய கணவனைப் பகற்பொழுதைச் சித்திரித்து, அப்பொழுது சென்றதை, போருக்குச் சென்ற தன் கணவன் போர்க்களத்தில் மாண்டுபோனதாகக் கொண்டு அதற்கு அவள் வருந்தி அழுதுகொண்டு தன்னந்தனியளாக ஊருக்குள் வருவதுபோற் குறித்துக் கற்பனை செய்தார். அது:

[1]"அமரக மருங்கிற் கணவனை இழந்து
தமரகம் புகூஉம் ஒருமகள் போல
கதிராற்றுப் படுத்த முதிராத் துன்பமொடு
அந்தி என்னும் பசலைமெய் யாட்டி
வந்திறுத் தனளால் மாநகர் மருங்கென்.'

என வருதல் காண்க. பிறர்பிற ரெல்லாம் இம்மாலைப் பொழுதுக் காட்சியிற் களிகூர்ந்து பற்பலவாறு வருணித்துப் போதருவர். அவையெல்லாம் அவவந் நூல்களிற் காண்க; ஈண்டுரைப்பிற் பெருகுமாதலின்.

ஊத காப்ப அசைய என்பன காரணப் பொருட்டாய் வந்த செயவெ னெச்சங்கள் நிகழ்காலம் காட்டிநின்றன. புன்மாலை - சிறியமாலை: மாலைபொழுது தோன்றி மின்னுப்போல் மறைவதாகலின் இதனைப் 'புன்மாலை' என்றே வழங்குவர்.

[2]'புன்கண்ணை வாழி மருண்மாலை எங்கேள்போல்
வன்கண்ண தோநின் துணை.'

எனவும்,

[3]"புலம்பொடு வந்த புன்கண் மாலை.'

எனவும் வரும் ஆன்றோர் வழக்குகளை உற்றுநோக்குக. அந்தி: பகலும் இரவும் கலந்துள்ள நேரம் என்னும் பொருட்டு. [4]"அந்தி அந்தணர் அருங்கடன் இறுக்கும்' என்றார் பிறரும். (கசு)

அந்திக் காலத்தின் இயற்கை கூறல்

கஎ. புற்கென்றார் அந்தி புனைமலர்க்கண் நீரரும்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்—முற்கொண்டு
அடைகின்ற வேந்தர்க்கும் ஆண்டஞ்சி னோர்க்கும்
இடைநின்ற காலம்போல் இன்று.

1. மணி. 5 : கஉஎ - கூக
2. திருக்குறள் : கஉஉஉ. 3. நற்றிணை: ககஎ. 4. புறம். உ.

(இ - ள்.) அந்தி - (மேற்கூறியபடியுள்ள) அந்திப்பொழுதானது, புற்கு என்றார் - காதலால் உடல் பசலை நிறங்கொண்டவருடைய, புனைமலர்க்கண்நீர் அரும்ப - அழகிய தாமரைமலர் போன்ற கண்களிலிருந்து நீர் சுரக்கும்படி, நிலம்காப்பான் - உலகத்தைத் தத்தம் ஆட்சிக்குக் கொண்டுவரும் பொருட்டாக, முன் கொண்டு - முன்னேறிநின்று, ஆண்டு அடைகின்ற வேந்தர்க்கும் - அவ்விடத்தைச் சேர்கின்ற அரசர்க்கும், அஞ்சினோர்க்கும் - அதற்கு அஞ்சியிருக்கும் அரசர்களும், இடைநின்ற காலம் போல் இன்று நிற்கின்றது - இடைப்பட்டுக் காலம் அவர்கட்குக் கலசுத்தைச் செய்வதுபோல இப்போது நிற்பதாக இருந்தது, அந்தோ - ஐயோ !

(க - ரை.) அந்திப் பொழுதானது, போர் செய்கின்ற இரு வேந்தர்கட்கு இடைநின்று கலக்கஞ் செய்யும் காலம் போல, காதலர்களுக்குக் கலக்கஞ் செய்து ஐயோ! துன்பந் தருவதாக இருந்தது என்பதாம்.

(வி - ரை) புற்கு - கபில நிறம்: கருமை கலந்த பொன்னிறம். அந்நிறம் கொண்ட காதலரைப் புற்கென்றார் என்பது, புற்கென்னும் நிறத்தைப் பெற்றிருந்தார் என்னும் பொருள்பட நின்றது. சில்லென்று இருந்தது ; தண்ணென்று இருந்தது என வரும் வழக்குகளையும் ஓர்க

ஒரு நாட்டைக் கைப்பற்றத் துணிந்து முன்னேறிச் செல்லும் வேந்தர்க்கும், அதற்கு அஞ்சி நின்றவர்க்கும் அவ்வவர்களின் காரியத்துவக்கத்திற்கும் முடிவிற்கும் இடைப்பட்ட காலமானது, நமக்கு வெற்றி கிடைக்குமோ தோல்விதான் கிடைக்குமோ என்னும் அச்சத்தை மேற்கொண்ட நெஞ்சினராய் அவர்கட்குக் கலக்கத்தையே கொடுத்துக்கொண்டிருக்கும் காலத்தன்மைபோல, அந்திப் பொழுதும் காதலுடையவர்க்கு 'நம் காதலர் நம்மைச் சேர்வாரோ அல்லது சேரமாட்டாரோ,' என்னும் மனக்கலக்கத்தை உண்டாக்குதலால், 'அடைகின்ற ......இடைநின்ற காலம்போல்' என்றார்.

ஒரு தலைவி இரவுக்குறி யிடையீடு நேர்ந்தபோது காதலனிடம் தான்செல்ல இயலாத தடுப்பில், தன் தாயும் ஒருத்தியாக இருப்பதை உணர்ந்து, தன் தாயின்மீது வெறுப்புற்ற நெஞ்சினளாய் வருந்திக் கூறியதாக,

"[1] நகைமுக விருந்தினன் வந்தெனப்
பகைமுக வூரில் துஞ்சலோ இலளே.'

1. குறுந். உகஉ.

எனப் போரால் இடையறாத கலக்கங்கொண்டு தூங்காதநிலையில் இருந்தாள் எனப் பிறர் இப்போரையே உவமங்காட்டியதுபோல இவரும் குறித்தது கண்டின்புறற் பாலதாகவுள்ளது. அந்தி - அந்தத்தைச செய்வது; முடிவு என்னும்பொருள் கொண்டதாய் பகல் அற்றுப் போனதைக் குறித்து நின்றது. அறுதல் என்னும் சொல்லே இவ்வாறு சிதைந்து வந்ததென்க. அறுதல்: அதல், அத்தல், அந்தம், அந்தி என்றாயது. (க00)

அந்திப் பொழுதாகிய பெண் சிரித்ததுபோல் நிலவு தோன்றல்

க0ஐ. பைந்தொடியாள் ஆவி பருகுவான் நிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன—வந்ததால்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமேல் ஆரழலைப்
பெய்வான் அமைந்த பிறை

(இ - ள்.) மை ஆர் வேல் கண்ணாள் - மைதீட்டிய வேல் போன்ற கணகளையுடைய தமயந்தியின், வனமுலைமேல் - அழகிய கொங்கை முற்றத்திடத்து, ஆர் அழலை பெய்வான் அமைந்த பிறை - மிக்க நிலவொளியாகிய நெருப்புக் கதிர்களைச் சொரிதற்கு நின்ற நிலா, பைந்தொடியாள் ஆவி பருகுவான் நிற்கின்ற அந்தி முறுவலித்தது ஆம் என்ன வந்தது - பசுமைநிறம் பொருந்திய வளையலணிந்த தமயந்தியின் உயிரை உண்பதற்குப் பொருந்தியிருக்கின்ற அந்திப் பொழுதென்னும் (பெண்ணானவள்) சிரித்ததென்று சொல்லும்படி வானில் தோன்றிற்று.

(க - ரு.) தமயந்தியின் உயிரை உண்பதற்குப் பொருந்திய அந்தியென்னும் பெண் சிரித்ததுபோல் நிலாத் தோன்றிற்று என்பதாம்.

(வி - ரை.) நளன்பால் தன் நெஞ்சைப் பறிகொடுத்திருக்கின்ற தமயந்தியானவள் காண அந்திப்போது வந்தது; அது, காதல் மிக்க அவட்கு மிக்க காதல் துன்பத்தை விளைத்தது; பின் நிலவு தோன்றிற்று. அது உயிர்போக்கும் அளவு பெருந்துன்பந் தருவதாக இருத்தலின், 'ஆவிபருகுவான்' என்றார். அந்நிலவில் தோன்றும் வெண்ணிறக் கதிர்கள் விரிந்து பரந்து நிற்பதை அந்திப் போதென்னும் பெண்ணினல்லாள் இவள் தன் காதல்நிலையறிந்து கேலி செய்து சிரிப்பதுபோல் காட்சியளிப்பதாக உருவகஞ்செய்து, 'முறுவலித்தது ஆம் என்ன' என்றார். பிறரும்,

"நறுமலர்க் கங்குல் நங்கைமுன் கொண்டபுன்
முறுவல் என்ன முகிழ்த்தது வெண்ணிலா.'[1]

என்றார். முறுவலித்தது என்ற வினைக்கேற்ற எழுவாயுருபு பெண்ணென வருவித்துரைக்கப்பட்டது. இஃது ஏகதேச உருவகம்.

பருகுவான் பெய்வான் என்பன 'வான்' என்னும் வாய்பாட்டு எதிர்காலச் செயவெனெச்சங்கள், நிற்கின்ற அமைந்த என்னும் பெயரெச்சவினை கொண்டுநின்று அந்தி பிறை என்னும் பெயர்கள் கொண்டு முடிந்தன. பிறை, அறுவாய் நிறையாத இள நிலவைக் குறிக்காமல் பொதுவாகத் திங்கள் என்பதைக் குறித்து நின்றது. (க0க)

## நிலவு, தமயந்தியின் கொங்கைமேல் நிலவென்னும் நெருப்பைக் கொட்டுதல்

கOஉ. கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டால்
கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள்—ஈட்டுமணிப்
பூணிலா மென்முலைமேல் போதச் சொரிந்ததே
நீணிலா என்னும் நெருப்பு.

(இ - ள்.) கூட்டுமைபோல் சிறந்த கூர் இருளை - சேர்க்கப்பட்ட மை போலக் கருநிறமிகுந்த இருளை, கூன் கோட்டால் கோட்டு மண்கொண்ட குளிர்திங்கள் - வளைவுள்ள தன் கொம்பினால் பெயர்த்தெடுத்த மண்போல் அதன் நுனியில் (களங்கமாக) ஒட்டிக்கொண்டிருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய நிலவு என்னும் ஆனேறு, ஈட்டு மணி பூணநிலாம் மென்முலைமேல் - சேர்க்கப்படுகின்றதான மணிக்கற்களினால் ஆக்கிய நகைகள் விளங்குகின்ற தமயந்தியின் மெல்லிய கொங்கைகளிடத்து, நீள்நிலா என்னும் நெருப்பு போதசசொரிந்தது - வளர்கின்றதான நிலவென்னும் தீயை வேண்டு மட்டும் (மிகுதியாகக்) கொட்டிற்று.

(க - து.) மை போன்ற இருளைப் பெயர்த்தெடுத்துத் தன் கொம்புகளின் நுனியில் மண்போல் ஒட்டிக்கொண்டிருப்பது போன்ற களங்கமுள்ள நிலவென்னும் ஆனேறு, தமயந்தியின் கொங்கையில் நெருப்பைச் சொரிந்தது என்பதாம்.

---

1. பெரியபுராணம், தடுத்தாட் : கசுO.

(வி - ரை.) கூட்டுமை : வினைத்தொகை. கூர்இருள் - மிக்க இருள். கூன் கோடு - வளைவுள்ள கொம்பு. இதற்கேற்ப ஆனே றென்றோ, விடையென்றோ கூறாததால், இஃது ஏகதேச உருவகம். மாடானது தன் வலிமைச் செருக்கினால் தன் கொம்புகளைக் கொண்டு மண்ணைக் குத்திக்கொண்டு ஓடித் திரிவது இயல்பு; அதுபோன்று தன் ஒளியென்னும் வலிமைகொண்டு நிலவென்னும் காளை, தன் கதிர்க்கொம்புகளால் இருளாகிய மண்ணைப் பெயர்த்து எடுத்தபோது அதன் ஒரு சிறுபகுதி ஒட்டிக்கொண்டிருப்பது போல் களங்கம் கருநிறமாகத் தோன்றுகிறது. அதனை உருவக மாக்கிக் 'கோட்டுமண் கொண்ட குளிர் திங்கள்' என்றார் குளிர் திங்கள் நெருப்பைக் கொட்டிற்றென்பதனால் முரண்தொடை அழகு பொலிவதை ஓர்க. நிலாம் - நிலவும் என்பதன் விகாரம். நிலவுதல் - போதல்வருதலாகிய செயல்கள். போத - போதும் அளவினதாக. (கUஉ)

## தமயந்தி, இரவிருட்கும் வாடைக்கும் பிழைத்திரேனென வருந்துதல்

ககO. அன்னங்காள் நீங்களுமவ் வாதித்தன் தானும்போய்
மன்னும் படியகலா வல்லிரவில்—மின்னும்
மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கும் நாங்கள்
பிழைத்தால்வந் தேனேன்னும் பேர்.

(இ - ள்.) அன்னங்காள் - அன்னப்பறவைகளே!, நீங்களும் அவ் ஆதித்தன் தானும் போய் - நீங்களும் அந்த ஞாயிறும் (மறைந்து) சென்று போனபின், மன்னும்படி அகலா வல் இரவில் - (வந்து) நிலைத்திருப்பது போன்றதான கடினமான இரவுப்பொழுதில், மின்னும் மழைத்தாரை வல் இருட்கும் வாடைக்கும் - மின்னுகின்ற மேகநீரொழுக்கோடு கூடிய கொடிய இருட்டினுக்கும் வாடைக்காற்றுக்கும், நாங்கள் பிழைத்தால் - நாங்கள் தப்பி உயிருடன் இருந்தால், பேர் வந்தேன் என்னும் - எம்முடையபேரும் நானும் பிழைத்துவந்தேனென்று உங்களிடம் சொல்லும்.

(க - து.) அன்னப்பறவைகளே! நீங்களும் ஞாயிறும் போனபின் விடியாமல் நிலைத்திருப்பதுபோன்ற இவ்விரவுப் பொழுதில் இருளுக்கும் வாடைக்கும் தப்பிப் பிழைத்தால் நீங்கள் எங்கள் நலத்தை வினவுங்கள் என்பதாம்.

(வி - ரை.) தமயந்திக்குக் காதல்நிலை பெருகிவிட்டதால் அன்னப்பறவைகளிடத்து அன்புடையளாதலின், அவைகளை விளித்து அவைகளிடம் பேசுவதுபோல் தன் காதலை வெளிப்படுத்துகின்றாள். "நீங்களும் அந்த ஆதித்தனும் சென்றபின், இரவுப்பொழுது ஒருபோதும் தொலையாது நிற்கின்றது; காதலுணர்வால் என்னுயிர் ஊசலாடிக் கொண்டு இருக்கின்றது; எந்நேரம் என்னுயிர் பிரியுமென்று தெரியவில்லை; எனவே நீங்கள் திரும்பிவந்தால் என்னைக் காண்பது அரிதரிது. இடைவிடாத இப்பேரிருட்கும் வாடைக்காற்றுக்கும் தப்பிப்பிழைத்தால் என்பேர்கூட உம்மிடம் 'வந்தே'னென்று கூறும்" என்கின்றாள்.

வல் இரவு - கொடிய இரவு; அல்லது மிக்க இரவு என்று கோடலுமாம். காதலர்க்கு விடியா இரவும் வாடைக்காற்றும் துன்பஞ் செய்வதாகலானும், வாடைக் காற்றினால் வருந்துந் தன்மையைச் சித்திரித்துத் தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டிய மன்னனைத் தலைவனாகக்கொண்டு நக்கீரரால் 'நெடுநல் வாடை' எனத் தனிநூல் ஆக்கித் தந்ததும் இவ்வாடையின் பொறுக்கலாற்றாத் தன்மையை விளக்குதற்கேயாம் என்க.

விடியா இரவைக் குறித்து ஒரு தலைவி வருந்துந்தன்மையை விளக்கவந்த பிற்காலப் புலவரொருவர், தலைவியின் வாயிலாக வைத்து,

[1]"அரவு விழுங்கிற்றோ அச்சுத்தான் இற்று
புரவிக் கயிறறுபோச் சோ—இரவிதான்
செத்தானோ வேறுதிசை சென்றானோ என்தோழி
எத்தால் விடியும் இரா"

என, நுணுக்கப் பொருள்வாய்ந்த சொற்சித்திரங்களால் தீட்டியிருப்பதும் காண்க. இவ்வாறே மிதிலைச்செல்வி இலங்கையில் சிறையில் வாடியபோது ஒருநாள் இரவுப்பொழுதைக் குறித்து வருந்திய நிலையை,

[2]"கல்லா மதியே கதிர்வாள் நிலவே
செல்லா இரவே சிறுகா இருளே
எல்லாம் எனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ.'

எனக் காட்டியுள்ள சித்திரமும் இக்கருத்தை ஒத்திருத்தல் காண்க.

பேர்: பெயரென்பதன் மரூஉ. பெயர் பேசாதாயினும் பேசுவதுபோல் சித்திரித்துக் கூறும் மரபுபற்றிக் கூறப்பட்டது.

1. தனிப்பாடல். ஒப்பிலா: கஉ. 2. கம்பராமா. உருக்காட்டு: ச.

'இவ்வூருக்கு அவ்வழி போகும், 'மனமே செல்லும்' முதலிய வழக்குகள்போற் கொள்க.

[1]'கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே.'

என்னும் நன்னூல் விதியும் காண்க. (கO௯)

**விண்மீன்களைத் தமயந்தி நிலவால் எழுந்த கொப்புளம் என்றல்**

கக௧. செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்ப்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுதும்
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயால் தெரிந்து.

(இ - ள்.) செப்பு இளம் கொங்கைமீர் - சிமிழ்போன்ற இளமை பொருந்திய கொங்கைகளையுடைய பெண்காள்!, திங்கள் சுடர் பட்டு கொப்புளம் கொண்ட குளிர்வானை - நிலவொளியாகிய வெப்பம் தாக்கியதனால் கொப்புளம் கொண்டிருக்கின்ற குளிர்ச்சியுள்ள வானத்தை, தெரிந்து இப்பொழுதும் - நீவிர் அறிந்துள்ள இவ்வேளையினும், தேன் பொதிந்த வாயால் - உங்களின் தேன் போன்ற இனிய நீர் நிரம்பியிருக்கின்ற வாய்ச்சொற்களால், மீன் பொதிந்து நின்ற விசும்பு என்பது என் கொலோ - விண்மீன்கள் நிறைந்திருக்கின்ற வானமென்று கூறுகின்றீர்களே? என்ன காரணமோ? (தெரிவியுங்கள்)

(க - ரை.) தமயந்தி தன் தோழியரை நோக்கி, 'நிலவின் சுடரால் கொப்புளங் கொண்டுள்ள வானத்தை இப்பொழுதும் விண்மீன் நிறைந்த வானமென்று கூறுவது ஏன்? காரணம் தெரிவியுங்கள்,' என்றாள் என்பதாம்.

(வி - ரை.) செப்பு - குங்குமச்சிமிழ். செப்பிளங்கொங்கை : உவமத்தொகை. திங்கள் சுடர் - நிலவொளி. தமயந்திக்கு நெடுந்தொலையிலிருக்கும் நிலவின் ஒளி சுட்டு வெப்பத்தை மிகுதிப்படுத்துகின்றது. தோழிகளை அழைத்து நிலவொளி சுடுகின்றதேயெனக் காதல் மயக்கத்தால் மனமயங்கிக் கூறுகின்றாள். அதற்குத் தோழியர், 'அது சுடாதது; தண்ணொளி மிக்க'தெனக் கூறி

1. நன்னூல்: ௪O௯.

அவட்கு மன ஆறுதல் அளிக்கின்றனர். அதற்கு அவள், அவர்களை நோக்கித் "தோழிகளே! நீவிர் இப்போதும் பொய்யே புகல்கின்றீர்கள். அங்கிலவின் கொடுவெப்பத்தால் வானிடமெலலாம் வெப்பமாகிப் பொரிந்து கொப்புளங் கொண்டுவிட்டது; அவைகளை நீவிர், 'வான்மீன்' என்று கூறுகின்றீர்கள அவை வான்மீன்களல்ல; 'கொப்புளமே' யென்று கூறுகின்றாள். தேன் - தேன்போன்ற வாயின் ஊறல். வாய்: ஈண்டுச் சொற்கள்: ஆகுபெயர். தேன்போன்ற மென்மொழியுடையராக இருந்தும் புன்மொழியாம் பொய் புகல்கின்றீர்களே என்னும் கருத்தை உள்ளடக்கி நின்றது.

[1] 'பாகு பொதி பவளம் திறந்து.'

என்றார் இளங்கோவடிகளும். பொதிதல் - நிறைந்திருத்தல். தற்குறிப்பேற்றமாகத் தமயந்தி கூறுவதாக அமைந்தது. (கOச)

## தமயந்தி, சிவபெருமான் காமனை எரித்தது பொய் எனக் கூறுதல்

ககஉ. கானும் தடங்காவும் காமன் படைவீடு
வானுமதேர் வீதி மறிகடலும்—மீனக்
கோடியாடை வையமெல்லாம் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய்.

(இ - ள்.) கானும் தடம் காவும் காமன் படைவீடு - காடுகளும் அகன்ற சோலைகளும் மன்மதனுக்கு ஆயுதசாலைகள், வானும் தேர்வீதி - வானவெளிகளும் அவனுக்குத் தேரோடும் வீதி, மறிகடலும் மீனகொடி ஆடை - அலைகள் மடங்கி ஓடுகின்ற கடலும் அவன் மீன்வடிவு பொறித்த துகிற்கொடி, வையம் எல்லாம் (உம்) கோதண்டசாலை - இம் மண்ணுலகம் யாவும் அவனுக்கு வில்வன்மை காட்டும் இடமாகும். (இவ்வாறு அவன் ஆயுதசாலை முதலியன எங்கும் என்றும் அழியாதிருக்க), பொடிஆடி - திருநீறணிந்த சிவபெருமான், கொன்றது எல்லாம் பொய் - (அவனைத் தம் நெற்றித்தனிக் கண்ணால் எரித்து) அழித்தார் என்று சொல்கிறார்களே அது முழுதும் பொய்யே யாகும் (அவன் அழிந்திருந்தால் இவைகளில் ஒன்றுகூட இராதன்றோ?)

(க - ரை.) **'மன்மதன் தனக்குக் காட்டையும் சோலையையும் படை வீடுகளாவும், வானத்தைத் தேரோடும்**

---

1. சிலப். அ: அO.

வீதியாகவும், கடலைக் கொடிச்சீலையாகவும், பூவுலகை வில் வலி காட்டுமிடமாகவும் கொண்டு ஆட்சிசெய்து உயிர் வாழ்கையில், அவனைச் சிவபெருமான் கொன்றானென்பது முழுப்பொய்' எனத் தமயந்தி கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) மன்மதனுக்குரிய அம்புகள், முல்லை தாமரை நீலம் மா அசோகு என்பனவைகளே. இவைகளுள், முல்லை கொடிப் பூவும் தாமரை நீலம் மா அசோகு முதலியவற்றில் முன்னிரண்டும் நீர்ப்பூக்களும் பின்னிரண்டும் கோட்டுப்பூக்களுமாம். இவை, இலவந்திகைச் சோலையினும் தடாகத்தும் இருப்பனவாகலான், இவைகளைக் கொண்டே மன்மதன் தன் ஆட்சி செலுத்துகின்றான் என்பதைக் குறிக்க, 'காமன் படை வீடு' என்றார். மன்மதனுக்குத் தென்றலே தேர், அது உலவி வருவது வானவெளியிலாகலான் 'வானும் தோய்வீதி' என்றார். அவனுக்குரிய கொடி மீன், அது உலவுவது நீரில்: அந்நீர்ப் பெருக்கம் உள்ளது கடல். 'மறிகடலும் மீனக்கொடி ஆடை' என்றார். இவ்வளவு வாய்ப்புக்கள் இருந்தபோதிலும் அவன் ஆட்சி செலுத்துதற்கு ஏற்றவிடம் அமையாவிடிற் பயனில்லை; அவன் ஆட்சியைக் காதல்கொண்ட ஆடவர் பெண்டிரிடத்துச் செலுத்தி வெற்றிகொள்கின்றானாதலான், அவன் வில்லின் வன்மை தோன்ற, 'வையமெல்லாம் கோதண்டசாலை' என்றார். இவைகளெல்லாம் இவ்வாறு அவனுக்கு அமைந்திருந்து ஆட்சி நடந்துகொண்டிருக்க அவன் சிவபெருமான் நெற்றிக்கண்ணால் எரிக்கப்பட்டு இறந்துபோனான் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்? என, வியப்பாகத் தமயந்தி கூறுவதாக அமைந்தது இப் பாட்டு. இதில் 'பொடியாடி கொன்றதெல்லாம் பொய்' எனனும் தொடரில் எவ்வளவு உருக்கமும் அவலமும் கலந்த நயம் செறிந்திருக்கின்றது! அறிந்து இன்புறுக; தற்குறிப்பேற்றம்.

இக் கருத்தையொப்பவே, மன்மதன் இறந்துபோனதாகக் கம்பர் வேறொரு நயம் கற்பித்து இராவணனிடம் அவன் தங்கை சூர்பணகை சீதையின் வனப்பையெல்லாம் விளக்கியபோது,

[1]'ஈசனார் கண்ணில் வெந்தான் என்னுமி திழுதைச் சொல்லிவ்
வாசகா ரேதி யாளைக் கண்டனன் வல்ல வாற்றால்
பேசலாம் தகைமைத் தல்லாப் பெருமபிணி பிணிப்ப நீண்ட
ஆசையால் அழிந்துதேய்ந்தான் அனங்கன்அவ் உருவம் அம்மா.'

என்று சீதையின் அழகைக் கண்டதனால் ஆசைமேலிட, மன்மதன் இறந்துபோனானே தவிரச் சிவபெருமான் கணணெருப்பால்

1. கம்பராமா. மாரீசன வதை: எக.

இறந்துபோனானென்று கூறுவது பொய்ம்மை என்றாள் என்றார். தமயந்தி தன்னை வருத்துகின்ற தன்மையினால் மன்மதன் இறந்தானென்று கூறுவது பொருந்தாதெனை இதற்கு மறுதலையாகக் கூறியிருத்தல் காண்க. என்னே கவிஞர்தம் மாண்பு! பொடி ஆடி - பொடியைப் பூசியவன்: குறிப்பு வினையாலணையும் பெயர்: ஈண்டுச் சிவபெருமான். (கoரு)

தமயந்தி, தன் உயிர் போகின்றதென்று கூறி வருந்துதல்

ககஅ. கொள்ளைபோ கின்ற துயிரென்னும் கோளரவின்
முள்ளெயிறே மூரி நிலாவென்னும்—உள்ளம்
கொடிதிரா என்னும் குழையும் தழல்போல்
நெடிதிரா வாய்புலரா நின்று.

(இ - ள்.) உயிர்கொள்ளை போகின்றது என்னும் - (தமயந்தியானவள்) என் உயிர் பறிகொண்டு போகின்றதே என்பாள், மூரிநிலா கோள் அரவின் முள் எயிறே என்னும் - வலிமை பொருந்திய பிறைநிலவானது கொடுமைமிக்க பாம்பினுடைய கூர்மை பொருந்திய (நச்சுப்) பல்லோ என்பாள், இரா உள்ளம் கொடிது என்னும் - இவ் விரவுப்பொழுதினது மனம் கொடுமையுடையது என்பாள், தழல்போல் நெடிது இரா - நெருப்பைப்போல் சுடுகின்ற தொலையாத இருட்போதில், வாய்புலரா நின்று குழையும் - வாய் உலர்ந்து மனம் வாடுவாள்

(க - ரை.) தமயந்தியானவள், தன்னுயிர் கொள்ளை போகின்றதென்பது முதலாகச் சொல்லிச் சொல்லி இரவு முழுதும் உள்ளங் குழைந்து வாடினாள் என்பதாம்.

(வி-ரை.) தமயந்திக்குக் காதலால் இரவுப்பொழுது பேரூழி போற் கழிதற்கு அருமையாய்த் தன்னால் தாங்கவொண்ணாததாய் நெருப்பைப்போல் சுடுவதாய் இருத்தலின், 'தழல்போல் நெடிது இரா' என்றார். காதல் கைம்மிக்கு வருந்துவோர் பற்பல சொல்லி மாள்குவராகலின், தமயந்தி, தன் காதல் மனத்தைக் கவற்றி வருத்தக் 'கொள்ளை போகின்றது உயிர்' என்பது முதலாகச் சொல்லிச் சொல்லி வருந்தினாள் என்க. இரவுக்கு மனமென்பது தொன்றில்லையாயினும் தன்னால் தாங்கவொண்ணாத தன்மையை இரவு தருதலால் 'இரா உள்ளம் கொடிது' எனத் தன் துன்பத்தால் கூறினாள் என்க.

இரா - இரவுப்பொழுது; இஃது இரவு எனவும் வரும்; 'குறிலின் கீழுள்ள ஆகாரம் குறுகுதலும் அதனோடு உகரம் ஏற்று

கிற்றலும் செய்யுள் வழக்காதலின், இங்கே, இரா என நின்றது. புலரா : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். இஃது, உலர்ந்து என்னும் பொருளது. நிலவின் பிறைவடிவும் அதன் செயலும் பாம்பின் வாய்ப்பல்லின் நஞ்சுபோல் உடலெல்லாம் தனக்கு வெப்பத்தைக் கொடுத்து வருத்தி உயிர்க்கு ஊறுபயத்தலால் 'கோளரவின் முள்ளெயிறோ' என்றாள். கோள் - கொடுமை. கொடுமையை மிக விளைப்பதற்கு நஞ்சைச் செலுத்துதற்குக் கூர்மைவேண்டும்; கூர்மையுடையதாய் விண்ணினின்று தன் கதிரொளியாம் நஞ்சைத் தன் உடலிற் பாய்ச்சுதலால் 'முள்' என அடைகொடுத்துக் கூறப்பட்டது. (கOக)

## தமயந்தி, இரவுப்பொழுது சுடுதற்கு வருந்துதல்

ககச. வெங்கதிரோன் தன்னை விழுங்கிப் புழுங்கியோ
கோங்கை அனலில் கொளுந்தியோ—திங்கள்
விரிகின்ற வெண்ணிலவால் வேகின்ற தேயோ
எரிகின்ற தென்னே இரா.

(இ - ள்.) இரா - இவ்விரவுப் பொழுதானது, எரிகின்றது என்னோ - சுடுகின்றதே; என்ன காரணமோ தெரியவில்லையே!, வெங்கதிரோனை விழுங்கி புழுங்கியோ - வெப்பமுள்ள ஞாயிற்றைத் தன்னுட் கொண்டதால் தன்னுள் கொதிப்புக் கொண்டோ?, கொங்கை அனலில் கொளுந்தியோ - (அன்றி என்) கொங்கை முற்றத்தெழுந்த நெருப்பால் கொளுத்தப் பெற்றோ?, திங்கள் விரிகின்ற வெண் நிலவாலோ - திங்களினின்றும் படர்ந்து வருகின்ற வெள்ளிய நிலவொளியினாலோ? (எதனாலென அறியக் கூடவில்லையே!) வேகின்றது - என்னைச் சுட்டெரிக்கின்றதே; என்செய்வேன்!

(க - து.) 'இரவுப் பொழுது மிக்க வெப்பமாக இருப்பது, கதிரவனை விழுங்கியதனாலோ? அன்றி, என் கொங்கை நெருப்புப் பற்றியெரிந்ததனாலோ? நிலவின் கதிர் வெப்பத்தாலோ?' எனக்கூறித் தமயந்தி வருந்தினாள் என்பதாம்.

(வி - ரை.) காதல் மிக்கவர்கட்கு இரவுப் பொழுதும், மாலை நேரமும், நிலவொளியும், தென்றல் முதலிய குளிர்ந்த பொருள்களெல்லாமும் சுடுவது இயல்பு. இம்முறையில் காதலால் வருந்தும் தமயந்திக்கு இரவுப் பொழுது ஊழிக்காலம்போல் தொலையாது துன்பந்தருகின்றது; திங்களின் கதிரொளி, தன் உடலைச் சுட்டு வருத்துகின்றது; அதைப் பொறுக்கலாற்றாத அவட்கு இராப்

பொழுதும் நீங்கிற்றில்லை. இரவோ குளிர்மிகுந்தது; அதுவும் இயற்கைக்கு முரணாகச் சுடுகின்றது! என் செய்வாள்! மனம் பலவாறாக அலைப்புறுகின்றது! பலவற்றையெல்லாம் எண்ணி எண்ணி ஏக்கமுறுகின்றது; இரவு சுடுவதற்குக் காரணம் காணவும் காதலால் தாக்குற்ற அவள் மனம் விழைகின்றது. அதனால் இவ்வெப்பம் இயற்கையாக இல்லாத இரவுக்கு வந்தது செயற்கை முறையில் - கூட்டுறவின் கோட்பாட்டால் எனக் கருதுகின்றாள். அதனைப் பலவாற்றால் அமைந்திருக்கலாமென அப் பெண்மை மனம் மீண்டும் எண்ணுகின்றது: பேதுறுகின்றது; அம்மனம், இவ்விரவுப் பொழுதுகருக் கதிரோனைத் தன்னுள் மறைத்து வைத்துக் கொண்டதால் அவன் வெப்பம் சார்ந்து அதனால் வந்த வெப்பமாக இருத்தல் கூடுமோ? அன்றி என்னையன்றி வேறு துணையில்லாதிருக்கும் இவ்விரவுக்கு என் காதல்வெப்பம் பெருகி எரிகின்ற என் கொங்கை அழலால் கொளுத்தப்பெற்று அதனால் வந்த வெப்பமாக இருக்கலாமோ? அல்லது தன் கதிர்களை வீசிக் கனன்றுகொண்டிருக்கின்ற இந் நிலவோடு சார்ந்திருக்கின்ற தன்மையினால் அவ்வெப்பத்தையே தனக்குக் கொண்டதாக இருக்கலாமோ? என்று எண்ணி ஏங்கி, இவ்வெல்லாம் ஒன்று சேர்ந்தன்றோ என்னை வருத்தித் துயருறுத்துகின்றன என்று வருந்துவதாக அமைந்தது, இவ்வழகிய செய்யுள். இதனை, உளநிலைத்தன்மை இஃதெனை யாவரும் அறிய யாத்த புலவரின் சதுரப்பாடு போற்றற்குரியது.

இதில் பகற்பொழுதுபோய்க் கதிரவன் மறைந்த காட்சியை, 'வெங்கதிரோன் தன்னை விழுங்கியோ' என, வியப்புச்சுவை தோன்றக் கூறினார். இவ்வாறே [1]'மதிஉமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தஇம் மருள்மாலை' என்றார் கானல்வரிப்பாடலில் இளங்கோ வடிகளும். ஒப்புநோக்கி இன்புறுக. கதிர்மறைவை, இரவு விழுங்குவதாகக் கூறிய புலவர் பெருமக்களின் பேரறிவு நினைந்து நினைந்து மகிழ்தற் குரித்து. கொங்கை முன்றிலின் வழியாகத் தமயந்தியின் காமவெப்பஞ் செல்லச் செல்லப் பெருகுகின்ற இயற்கை தோன்ற, 'கொங்கை அனலிற் கொளுந்தியோ' என்றார். தன்: அசைச்சொல். வெண்ணிலவால் என்பதில், ஓகாரம் பின் வந்ததைக் கூட்டிச்சேர்த்துப் பொருள் கூறப்பெற்றது. ஓகாரம் மூன்றிடத்தும் ஐயத்துக்கண் வந்த அவலம். புழுங்குதல் - உள்ளே கனற்றி வருந்துதல். கொளுந்துதல் - சுடுதல். [2]'அனல் கொளுந்தும் வெங்காரம் வெய்து' என்னும் நீதிநெறி விளக்கத்தில், 'கொளுந்தல்'-சுடுதல் என்னும் பொருளில் வந்ததறிக. என்னோ என்பதில் ஓகாரம்: ஐயம். இரா - இரவு

1. சிலப். எ : சுக. 2. நீதிநெறி விளக்கம், இக.

நேரம். குறிலின் கீழ்நின்ற ஆகாரம் குறுகாது நின்றது, செய்யுளிசை நோக்கி. (௧0௭)

தமயந்தி, ஓரிரவு பல்லூழி ஆயிற்றேயென்று கூறி வருந்துதல்

௧௧௫. ஊழி பலவோர் இரவாயிற் றேயென்னும்
கோழி குரலடைத்த தோவென்னும்—ஆழி
துயிலாதோ என்னும் சுடர்மதியம் கான்ற
வெயிலால் உடல்உருகா வீழ்ந்து.

(இ - ள்.) சுடர்மதியம் கான்ற வெயிலால் - ஒளியுள்ள நிலவு உமிழ்ந்த கதிரொளியால், உடல் உருகா வீழ்ந்து - உடல் உருகி விழுந்து, ஊழிபல ஓர் இரவு ஆயிற்றே என்னும் - பல ஊழிக் காலம் ஒன்றுபட்டு ஒரே இரவுப் பொழுதாயிற்றே என்பாள், கோழி குரல்அடைத்ததோ என்னும் - (சாமக்) கோழிகள் தாம் (கூவுதல் இன்றிக்) குரலடைபட்டவோ என்பாள், ஆழி துயிலாதோ என்னும் - இக்கடல் (இரவும் பகலும்) தூங்கமாட்டாதோ என்பாள்.

(க - து.) தமயந்தியானவள், காதல் நோயால் வருந்தி, ஊழிபல சேர்ந்து ஓர் இரவுப் பொழுதாயிற்றே என்பன முதலாகச் சொல்லி வருந்தினாள் என்பதாம்.

(வி - ரை.) கானுதல் - கக்குதல். கான்ற - கக்கிய என்னும் பொருளது: இறந்தகாலப் பெயரெச்சம். நிலவொளி வெப்பஞ் செய்தலால் 'வெயில்' என்றாள். காதலர்க்கு ஓரிரவு பல ஊழிபோல் தோன்றி மேலும் மேலும் காதலை மிகுத்துத் துன்பூட்டுதலான், அத்துன்பம் தாங்கலாற்றாளாய்த் தமயந்தி இன்னுமா இரவுப்பொழுது போகாமல் இருக்கிறது? கோழிகள் என்ன காரணத்தாலோ இரவுபோய் விடியற்பொழுது வந்ததை அறிவிக்கவில்லை யென்னுங் கருத்தினளாய்க் 'கோழி குரலடைத்ததோ?' என்றாள். கடல், இரவும் பகலும் எந்நேரமும் ஓவாது அலைகளை வீசிக்கொண்டு பேரிரைச்சலுடன் போவதும் வருவதுமாக இருப்பது தனக்குக் காதலுணர்வை மிகுத்து, தன்வயம் இழக்கச் செய்தலால் 'ஆழி துயிலாதோ?' என்றாள்.

அயோத்தி யேந்தலைப் பிரிந்து இலங்கையில் சிறையிருந்த மிதிலைச் செல்வி, பிரிவாற்றாளாய் இரவும் பகலும் தன் காதற் கணவனை நினைந்து நினைந்து வருந்தி நின்றாள். அவள் பலவாறு

இரவொடும் நிலவொடும் பகர்ந்து வருத்தங்கொண்டு வாழ்ந்த நிலையைச் சொல்லோவியமாக விளக்கப்போந்த கம்பநாடர், அவலமும் காதலும் கலந்த நிலையில் இருந்த காட்சியை விளக்கிய வாறறிக. இக்கருத்துள்ள செய்யுளை (கOக) ஆம் செய்யுளின் மேற்கோளாகக் காட்டப் பட்டுளது; ஆங்கே காண்க. 'என்னும்' என மூன்றிடத்தும் வருவன, செய்யுமென்வினைமுற்று ஒருமைப் பொதுச்சொல். இஃது உயர்திணையில் பலர்பாலுக்கு வாராது. பிற அஃறிணை, உயர்திணைகளுக்குப் பொதுவாகவரும் என்பது நன்னூலார் காட்டும் விதி. என்னை?

[1]"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
செல்லா தாகும் செய்யுமென் முற்றே.'

என்றாராகலான். அவ்விதிப்படி ஈங்கே வந்ததெனக் கொள்க. ()

தமயந்தி காதலால் மிக வருந்துதல்

கககூ. ஆடி வரிவண் டருகே பறக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமேல்—ஓடிப்
பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ மோகத்
துறைவாய் அடங்காத் துயர்.

(இ - ள்.) வரிவண்டு ஆடி அருகே பறக்க - பொறிகளையுடைய வண்டுகள் பூந்தாதில் மூழ்கித் (தமயந்தியின்) பக்கலில் பறந்து நிற்க, வாடி மெலிவாள் - உடல் வாட்டங்கொண்டு மெலிபவளாகிய தமயந்தி, வனமுலை மேல்ஓடி பொறை ஆக சோர்வாள் - அழகான கொங்கைகள் (காதலால் விம்மலடைந்து) மேலெழுந்து பாரமாகத் தளர்ச்சியடைவாள், மோக துறைவாய் அடங்கா துயர் பொறுக்குமோ - காதலென்னும் வழியில் பொறுக்கலாற்றாத் துன்பத்தைப் பொறுக்கும தன்மையளோ? (பொறுக்காள் என்றபடி.)

(க - ரு.) தமயந்தி தன்னருகே பறக்கின்ற வண்டின் சிறைக் காற்றினுக்கும் விம்மும் கொங்கைப் பாரத்துக்கும் தாங்கலாற்றாளாய்க் காதலால் துன்புற்றாள் என்பதாம்.

(வி - ரை.) வரி வண்டு - தன் உடலில் பொறிகளுடைய வண்டுகள். இதனைப் பொறிவண்டெனப் புகல்வர். தமயந்தியின் இடை, நூலினும் நுண்ணிதாகத் தேய்வுற்றிருத்தலால், வண்டின் சிறைக்காற்றுக்கு ஆற்றாமல் தளர்கின்றது; காதலால் கொங்கை

1. நன்னூல்: கூசஅ.

முற்றம் மேலெழுந்து விம்முதலடைதலால் பாரம் மிகுகின்றது; இவைகளினால் தமயந்தி மிக்க வருத்தமுற்றாள் என, அவள் தன் மெல்லிய தன்மை தோன்றக் கூறினார்.

"[1]சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.'

என்றார் பிறரும். நினைத்தாலும் சுடுகின்ற காமம் தொட்டாற் சுடும் நெருப்பினும் கொடிதாகச் சுட்டுருக்கும் தன்மைத் தாதலால் 'மோகத்துறைவாய் அடங்காத் துயர் பொறுக்குமோ' என்றார். [2]'நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ யாண்டுப் பெற்றாள்' எனத் திருவள்ளுவர் படைத்த தலைவன், காதல் கவற்றுவதைத் 'தீ' என்று கூறுவதும் அறிக. 'மெலிவாள், சோர்வாள்' என்பன இயல்பினால் நிகழ்காலம் எதிர்கால மாக வந்த காலவழுவமைதி. 'நாம் முன்பு இங்கே விளையாடுவோம்' என்னும் வழக்கும் காண்க. (௧0௬)

தமயந்தி, வெண்ணிலவை நோக்கி 'உன் ஒளியால் வாட்டுதல்' நன்றன்றெனல்

௧௧௭. ஈர மதியே! இளநிலவே! இங்ஙனே
சோர்குழலின் மீதே சொரிவதேவன்—மாரன்
போரவளித்தான் கண்ணி உனக்குப் புலரா
இரவளித்தான் அல்லனோ இன்று.

(இ - ள்.) ஈரமதியே - குளிர்ச்சியுள்ள வெண்ணிலாவே!, மாரன் உனக்கு இன்று கண்ணிபோர அளித்தான் - மன்மதனானவன் உன்றனக்கு இந்த நாளில் போர் செய்யும்படி (தும்பை) மாலை ஈந்தான், புலரா இரவு அளித்தான் அல்லனோ - (அஃதல்லாமலும்) விடியாத இரவுப் பொழுதையும் (அதற்கு வாய்ப்பாகக்) கொடுத்திருக்கின்றான் அன்றோ?, இங்ஙனே சோர்குழலின்மீது இளநிலவு சொரிவது எவன் - (இவ்வாறு உனக்கு அவன் கொடுத்திருந்தும்) என்னிடத்து என் காற் கீழளவு தாழ்ந்த கூந்தலின் மீது உனது இளங்கதிர்களைக் கொட்டி வருத்துவது என்ன கருதி? (சொல்வாயாக.)

(க - ரை.) தமயந்தி, நிலவை நோக்கி, 'ஈரமதியே! உனக்கு மன்மதன் போர்செய்வதற்கு மாலையும் இரவுப் பொழுதும் கொடுத்திருந்தும் என்மீது நீ உன்கதிர்களைக் கொட்டி வருத்துவதேன்?' என்றாள் என்பதாம்.

---

1. குறுந்தொகை, ௧௮. 2. திருக்குறள், ௧௧0௪.

(வி - ரை.) ஈரமதி - குளிர்ச்சியுள்ள நிறைநிலா. அஃது ஈரமுள்ளதாக இருந்தும் நெஞ்சில் ஈரமில்லாது வருத்தும் நிலையைக் குறிப்பால் சுட்டிற்று. சோர்குழல் - அவிழ்ந்து தொங்கும் கூந்தல்: இங்கு அஃதுடைய தமயந்தி என்று கோடலுமாம். அவ்வாறு கொள்ளின் தன்மைப் படர்க்கையாக வந்த இடவழுவமைதி. சொரிதல் - இடைவிடாது கொட்டுதல். நிலவொளி வானிடமும் மண்ணிடமும் இடையறாது பரந்தெறிப்ப தாலும் அவ்வொளி தன்மேற் படப்படக் காதல் மிகுந்து மனத் தையும் உடலையும் சுட்டெரித்தலாலும் இதனால் 'மீதே சொரிவ தெவன்' என்றாள் என்க.

கண்ணி - நினைத்து என வினையெச்சமாகக் கொண்டு, மன்மதன் எண்ணிப் பார்த்து உன்னைப் போருக்குப் போகவிட் டான்; அதற்கு உதவி செய்வதற்குத் துணையாக இவ்விரவுப் பொழுதையும் விடியாமல் - நீங்காமல் இருக்கும்படி கொடுத்தான் என்று பொருள் கொள்ளுதலும் ஆம். மன்மதனுக்கு உரிமைப் பொருள்களாகக் காதலர்க்குத் துன்பம் ஊட்டுவனவற்றை யெல்லாம் கற்பித்துக் கூறுதல் மரபு அம்முறையில் திங்கள் அவனுக்குக் குடையாகக் கொள்ளப் பெற்றுள்ளது. அஃது மன்மதனுக்குத் துணையாக இருத்தலால் அதனைப் போருக்குச் செல்ல விடுத்தான் எனக் கொண்டு இவ்வாறு தமயந்தி கூறினாள் என்க மேல் வருவனவும் காதல்மிக்க நிலையில் தமயந்தி வருந்தும் துறையே. (கக0)

தமயந்தி காதல் வெப்பத்தால் மாலை கருகுதல்

கக௧. தாங்கு நிலவின் தழல்போய்த் தலைக்கொள்ளத்
தேங்குழல்சேர் வண்டு சிறைவெதும்ப-ஓங்குயிர்ப்பின்
தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
யாமங் கரியாக இன்று.

(இ - ள்.) தாங்கும் நிலவின் தழல்போய் தலைகொள்ள - நிலாவிடத்துப் பொருந்திய ஒளிக்கதிர்களாகிய நெருப்பானது தமயந்தியின் தலையின் மேற்சென்று தாக்குதலால், தேம்குழல் சேர்வண்டு சிறைவெதும்ப - மணமிக்க கூந்தலில் மொய்க்கின்ற வண்டுகளின் சிறகுகள் அதனால் தீயவும், ஓங்கு உயிர்ப்பின் - நீண்ட பெருமூச்சினால், தாமம் கரி ஆ - தமயந்தியணிந்துள்ள மாலைகள் யாவும் கரிந்துபோகவும், இன்று யாமம் கரி ஆக தனியே தளர்கின்றாள் - இந்நாள் இரவுப்பொழுதே தனக்கு இவைகட்குச் சான்றாகத் தன்னந்தனியளாய்த் தவிக்கின்றாள்.

(க - து.) நிலவின் வெப்பத்தால் தமயந்தியின் கூந்தலில் உள்ள வண்டுகளின் சிறைகள் தீய, தமயந்தியின் பெருமூச்சுக் காற்றினால் மாலைகள் கரிந்துபோக இவைகட்கு இரவே சான்றாகத் தான் தன்னந்தனியளாயினாள் என்பதாம்.

(வி - ரை.) தாங்கு நிலவு - தாக்கும் நிலவு என, வலித்தல் விகாரமாகக் கொண்டு வருத்துகின்ற நிலவெனப் பொருள் கூறலுமாம் நிலவின் நெருப்புத் தமயந்தியின் தலையில் தாக்குதலால் அவள் கூந்தலிலுள்ள மலர்த்தேனை உண்ண வந்திருக்கின்ற வண்டுகளின் சிறகுகள் தீய்ந்துபோக, அவள் தன் காதல் தாங்கலாற்றாத் தன்மையால் பெருமூச்செறிய அவ்வெப்பத்தினால் மணமாலைகள் கரிந்துபோக, இவள் இவ்வாறு வருந்தினாளென்று கூறுதற்குப் பிறர்யாரும் வேண்டா. இரவுப்பொழுதே சான்றாக இருக்கிறது; இவள் தன்னந்தனியளாய் இருக்கின்றாள்; எனவே, அவள் துயிலாத இரவாகவே இன்று கழிந்தது என ஆசிரியரே தாம் கொண்ட கருத்தை 'யாமங் கரியாக இன்று' என்று வெளியிட்டுரைத்தனர் என்க.

தேம் குழல் - தேன்பொருந்திய கூந்தல் என்று பொருள் கூறலுமாம். கூறின், மலர்மாலை சூடியிருப்பதால் கசிந்து வழிந்துள்ள தேன் எனக் கொள்க. இரவு கரியாக இருத்தல் இரவுப் பொழுதன்றி வேறு யாருமே இல்லாமல் தனித்திருத்தல். இதனை,

> [1]'மன்னுயிர் எல்லாம் துயிற்றி அளித்திரா
> என்னல்ல தில்லை துணை.'

எனத் திருவள்ளுவர் கூறுதலுங் காண்க. இன்று என்பது, இன்று நாள். துன்புற்ற நாளைக் குறித்தது. (கக௧)

### தமயந்தி, காதல் மிகுதியால் தவஞ்செய்பவர் போன்று தோன்றுதல்

கக௨. மையிட்ட கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து—மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வாள் தவம்.

1. திருக்குறள், ககசஅ.

(இ - ள்.) தேம்மொழியாள் - தேன்போன்ற இனிய சொற்களையுடைய தமயந்தியானவள், மை இட்ட கண் அருவி வார - மைதீட்டிய கண்களிலிருந்து அருவிபோல் நீர் பெருகி வரவும், வளைசோர - (உடல் மெலிவால்) கைவளையல்கள் கழன்று விழவும், கையில் கபோல தலம்வைத்து - தன் கைகளிடத்தில் கன்னத்தைச் (சாய்த்து) வைத்துக்கொண்டு, தேன் இருந்த பூங்கணையே தீ ஆக - தேன் பொருந்தியுள்ள மலரம்புகளே நெருப்பாக, தான் மெய்வருந்தி இருந்து தவம் செய்வாள் - (அவைகளுக்கு நடுவில்) தான் உடல் வருத்தம் கொண்டிருந்து தவம் செய்வாள்போல் இருந்தாள்.

(க - ரை.) தமயந்தியானவள், கண்ணீர் பெருகி ஓட வளைகள் கழல கன்னத்தைக் கைகளில் சாய்த்து வைத்துக் கொண்டு தவஞ்செய்வாள்போல் இருந்தாள் என்பதாம்.

(வி - ரை.) மை இட்ட - அஞ்சன மைதீட்டிய. அருவி: அருவிபோல்வதாகிய கண்ணீரை உவமவாகு பெயராய் உணர்த்திற்று. காதல் மிகுதியால் கண்ணீர் வார்ந்தது; வளையல் கழன்றன; கன்னத்தைச் சாய்த்துக் கைகளின்மேல் வைத்தாள், தவஞ்செய்வாள்போலிருந்தாள் என்பனவற்றுள், படிப்படியாக அவள் காதல்மிகுதி காட்டிற்று. காதலுற்றார்க்குக் கண்ணீர் பெருகுதலும், வளைகள் கழன்றோடுதலும், சோர்வுகொள்ளலும் இயற்கை. அம்முறையில் அதன் செயலை வார சோர வைத்து வருந்தி இருந்து செய்வாள் என முறைமுறையாக அடுக்கிக் கூறினர். தவஞ்செய்த தவமாம் தையலாகிய தமயந்தி, நளனென்னும் இறையைச் சார்ந்து காதலென்னும் பேரின்பந் துய்ப்பதற்கு மன்மதனுடைய ஐங்கணைகளாகிய நெருப்பின் நடுவிலிருந்து இன்பக்கண்ணீர் உகுத்து வழியவிடுதல்போல் காதலாற் கண்ணீர் வழிந்தோடத் தவஞ் செய்தாள் என, உருவக அணியாக்கி உரைத்த திறப்பாடு அறிந்து மகிழற்பாலதாம். தவஞ்செய்வார் இன்பக் கண்ணீர் உகுத்தலும் கைகுவித்து வணங்கலும் உடம்பை வருத்துதலும் நெருப்பினடுவினிற்றலும் முதலியன கடப்பாடாகக் கொண்டிருப்பராகலின், அத்தவ நிலையை இங்குத் தமயந்தி மனங்கலங்கி அழுது சோர்ந்திருந்த காதல்நிலைக்கு ஒப்பாக்கினர். நெருப்பினின்று தவஞ்செய்தலை,

> [1]"ஐவகை நெருப்பின் அழுவத்து நின்று
> ..........................................
> அம்மை முத்தி அடைவதற்கு.'

என, பட்டினத்தடிகள் கூறுவதும் காண்க.

---

1. திருவிடை...மும்: கக.

கண் அருவி - கண்ணிடத்துத் தோன்றும் நீர் : ஐந்தாம்வேற்றுமைத்தொகை நீக்கப்பொருளில் வந்தது. வார சோர வென்பன செயவெனெச்சங்கள். (கக௨)

### அன்று இரவுப் பொழுது விலைமகளிர் உள்ளம் போலிருந்தது எனல்

கரு௦. அள்ளிக் கோளலாய் அடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாய்—உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதையமே போன்ற திரா.

(இ - ள்.) இரா - (அன்று) இரவுப் பொழுதானது, அள்ளிக் கொளல் ஆய் அடைய ஒன்றாய் திரண்டு - கைகளினால் அள்ளிக் கொள்ளும் தன்மைத்தாய் இருள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து, கொள்ளிக்கும் விள்ளாத கூர் இருள் ஆய் - தீயொளிக்கும் கூடப் பெயர்ந்து செல்லாத மிக்க இருட் கூட்டமாய், உள்ளம் புதைய வைத்த - தங்கள் வஞ்சத்தை மறைத்துவைத்த, பொதுமகளிர் தங்கள் இதையமே போன்றது - (தக்கார் தகவிலார் என்பதை நோக்காது பொருளையே நோக்கும்) விலைமகளிருடைய மனத்தையே ஒத்திருந்தது.

(க - து.) அன்றிரவு நிலவு மறைந்ததும் இருள் எங்கும் பரந்து செறிந்தது. அது, கள்ள உள்ளம் படைத்த விலைமகளிர் மனம்போல் இருண்டிருந்தது என்பதாம்.

(வி - ரை.) அள்ளிக் கொளல் - கைகளினால் சேர்த்துப் பிடித்து உள்ளங்கையில் கொள்ளுதல். அள்ள முடியாத பொருள் இருள்; அதன் செறிவு அள்ளிக்கொள்ளும்படியான நிலையில் இருந்ததெனை அதன் மிகுதியை விளக்கியவாறும். இவ்வாறே,

[1] "அள்ளிக்கொள் வன்ன குறுமுகிழ ஆயினும்
கள்ளிமேற் கைந்நீட்டார்."

என்றார் பிறரும். கொள்ளி - கொள்ளிக்கட்டையிலுள்ள நெருப்பென்று கொள்ளினுமாம். இருளின் இயல்பு வெளிச்சம் வந்தவுடன் நில்லாதோடுதல். ஆனால் இவ்விருள் அதற்கும் ஓடாதெனக் கூறல் என்னெனின்? அதன் மிகுதியை உணர்த்த இவ்வாறு கூறினார். இன்னும் அவ்விருட்கு உவமை காண எண்ணினார். அவ்விருள்

1. நாலடியார் : உசுஉ.

கன்னங்கரேலென்று செறிவுடையதாய் வழிச்செல்வார்க்கும் பிறருக்கும் கட்புலன்களுக்கு ஒன்றுந் தோன்றாது செய்து வழி குழி தெரியாமல் மயங்கவைத்தலால், இரக்கமென்னும் ஒன்றற்ற நெஞ்சினராய்ப். பொருளையே நோக்குகின்ற உள்ளத்தராய், நன்னெறியிற் செல்லும் எவரையும் தன்செயலாற் குணத்தாற் பிணித்து அவரை மயங்கவைத்தலின், 'பொதுமகளிர் தங்கள் இதயமே போன்றது' என்று அழகிய உவமை கொடுத்தார்.

இவ்வாறே தொண்டர் புராணத்துள் இருட்செறிவை விளக்கப் போந்த சேக்கிழார் பெருமான்,

[1]"பஞ்சின் மெல்லடிப் பாவையர் உள்ளமும்
வஞ்ச மாக்கள்தம் வல்வினை யும்அரன்
அஞ்செ ழுத்தும் உணரா அறிவிலார்
நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்.'

என்பதில் 'பஞ்சின் மெல்லடிப் பாவையர்' உள்ளத்தை முதற்கண் அமைத்து உவமை கூறியதும், தனக்கு எவ்வாற்றானும் பொருந் தாதவர் நட்புக்கூடாதென விளக்கப் போந்த திருவள்ளுவர், தம் அருமறை நூலில்,

[2]"இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.'

என்றருளியதில் 'மகளிர் மனம்போல' என்பதும் இதற்கொத்த உவமங்களாக அமைந்திருத்தல் ஓர்க.

பொதுமகளிர் - ஒருவர்க்கென வரையறையில்லாது காம மிக்க ஆடவர்க்கெல்லாம் பொருள் பெற்றுக்கொண்டு தம் போகத்தை விற்கும் பெண்கள்.

[3]"பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்.'

என்றார் குமரகுருபர அடிகளாரும். இதயம்: இதையம்; அகரம் ஐகாரமாகப் போலியாயிற்று எதுகை நோக்கி. (கக௩)

அவ்விரவில் ஊர்க்காவலர் இருள் உருக்கொண்டதுபோல் தோன்றினர் எனல்

கஉ௪. ஊக்கிய சோல்லர் ஒலிக்கும் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர்—காக்க
இடையாமம் காவலர்கள் போந்தார் இருளின்
புடைவாய் இருள்புடைத்தாற் போன்று.

---

1. பெரியபுரா. தடுத்தாட் : கடுசு. 2. திருக்குறள், அஉஉ.
3. நீதிநெறி விளக்கம், சுரு.

(இ - ள்.) இருளின் புடைவாய் - அவ்விரவுப் பொழுதின், இடையாமம் - நள்ளிரவில், காவலர்கள் - ஊர்க் காவலாளிகள், ஊக்கிய சொல்லர் - உரத்த ஒலியோடு பேசுவோராய், ஒலிக்கும் துடிகுரலர் - முழங்குகின்ற பறையோசை யுடையராய், வீக்கிய கச்சையர் - அரையிற் கட்டிய கச்சினை உடையராய், வேல் வாளர் - வேற்படை வாட்படை கையிற் பிடித்தாராய், இருள் புடைத்தால் போன்று - இருட்டே தனி உருவமெடுத்து வந்ததுபோல், காக்க போந்தார் - நகர்க்காவல் செய்ய வந்தார்கள்.

(க - ரு.) ஊர்க்காவலர்கள், உரத்தஓசையுடையராய், பறைமுழக்கஞ் செய்பவராய், அரையிற்கட்டிய கச்சினராய், இருளே உருவெடுத்து வந்தாற்போன்று நடுஇரவில் ஊர்க் காவல் செய்ய வந்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) ஊக்கிய சொல் - வெடித்த சொல். அது கேட்டார்க்கு அச்சத்தை ஊட்டுவது; அவர் செல்லுங்கால் பறை முழக்கிக்கொண்டு செல்லுவர்; கச்சிறுக்கி இருப்பர்; வேலும் வாளும் கையிற் பிடித்திருப்பர்; கரியநிறமுள்ள உடலராயிருப்பர் ஆகலான், அவர்தம் தோற்றத்தை நேரில் படமெழுதுவதுபோல் 'ஊக்கிய சொல்லர்.........இருள்புடைத்தாற்போன்று' என்னும் தொடர்களினாற் கூறி உணர்த்தினார்.

காவலர்கள், களவு செய்வோரையும் பிறர்மனை விழைவோரையும் களியர் கொடியர் முதலியோரையும் ஒளிந்து கண்டு பிடித்து ஒறுப்பவர் ஆகலான், கரியநிற உடையணிந்து வருவதியல்பு. அதனால் அவர் உருவும் ஆடையும் ஒரு நிறமாகக் காணப்படுதலால் 'இருள்புடைத்தாற் போன்று' என அவர் உருவைக் குறித்தார்.

ஊக்கிய வீக்கிய என்பன பெயரெச்சங்கள். அவை, சொல்லர் கச்சையர் என்னும் குறிப்புவினைப் பெயர்கள் கொண்டு முடிந்தன. காக்க : செயவெனெச்சம் நிகழ்காலங் காட்டிற்று. இருளின் புடை வாய் - இருட்டினிடம் : ஒருபொருட் பன்மொழி. புடைத்தல் - வெளித்தோன்றுதல். (கக௪)

நள்ளிரவில் உலகத்தார் உறங்கினமை கூறல்

கஉஉ. சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ்வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு—காமன்தன்
பூவாளி ஐந்திற் புகத்துயில் புக்கதே
ஓவாது முந்நீர் உலகு.

(இ - ள்.) களிறு சேமம்புக - ஆண்யானைகள் தத்தம் கட்டுத் துறையில் செல்லவும், தீம்பாலின் செவ்வழியாழ் - இனிமை பொருந்திய துறையினையுடைய செவ்வழியென்னும் பண்ணினை இசைக்கின்ற யாழ் இசைக்கருவியானவை, உறையுள் புகுத - தத்தம் உறைக்குள் நுழையவும், தார் வண்டு - மாலைகளில் மொய்க்கின்ற வண்டுகள், காமன் தன் பூவாளி ஐந்தில் புக - மன்மதனுக்குரிமையுள்ளனவான ஐவகை மலரம்பின் உள்ளே புகுந்து துயிலவும், மூந்நீர் உலகு ஓவாது துயில்புக்கது - கடல் சூழ்ந்த உலகத்து உயிர்கள் எல்லாம் இடையறாது நன்கு தூங்கின.

(க - து.) யானைகள் கட்டுத்துறை சேர, யாழ் தத்தம் உறைகளில் புக, வண்டுகள் மலர்களின் உள்ளே புக, உலகத்துயிர்கள் எல்லாம் நன்கு தூங்கலாயின என்பதாம்.

(வி - ரை.) சேமம் - பாதுகாப்பான இடம் அஃது ஈண்டு யானைகளின் கட்டுத்துறையை உணர்த்திற்று. யானைகளை நள்ளிரவு நேரத்தில் கட்டுத்துறைக் கூடத்தில் கட்டுதலும், யாழிசை இசைப்போர் தமக்குத் துயில் வரும்வரை அதனை இசைத்துக் கொண்டிருந்து தூங்கச் செல்லுங்கால் உறையில் போட்டுவிட்டுச் செல்லலும், மாலையிலிருந்து நள்ளிரவுவரை மலரும் பல்வகைப் பூக்கள்தோறும் பாடிக்கொண்டு சென்று சென்று அவைகளின் இன்தேனை உண்டுவருகின்ற வண்டுகளும் தமக்கு உறக்கம் வருங்கால் தம் படுக்கையாகிய மலர்களின் உள்ளே புகுந்து கொள்ளலும் இயற்கையாக நிகழ்வதாகலின், 'களிறுபுக, யாழ் உறைபுகுத, வண்டு பூவாளிபுக' என்னுஞ் சொற்களால் கற்பார்க்கு இன்சுவை பெருக உரைத்தார். மன்மதனுக்குரிமையான வாளி (அம்பு)கள் மலர்கள் ஆதலால், மலரென்னாது, சுவைபெற 'வாளி' என்றார். மலர் மெல்லிது ஆயினும், காதலர்க்கு அம்புபோல் வருத்துவதாயிற்றென்னும் நயமும் குறிப்பாக அமைந்திருத்தலை அறிக. ஒருவாறு இரவில் நிகழும் நிகழ்ச்சிகளைச் சுருங்கச் சொல்லியவாறும். உலகு: இடவாகு பெயராய் உயிர்கள் எல்லாவற்றையும் உணர்த்துமாயினும் ஈண்டுச் சிறப்பும் இசைவும் நோக்கி மக்களையே உணர்த்திற்று. யாழின் இசைகளுள் செவ்வழியென்னும் பண் மிக்க இன்சுவை பயப்பதாகலின் 'தீம்பாலின்' என, உவமை அடைகொடுத்துக் கூறினார் எனலுமாம். பால் - பகுப்பு. அன்றித், தீம்பால் - இனிமையுள்ள பாலையொத்த எனலுமாம். பால் இருபொருள் நயம் தோன்ற நின்றதறிக. பூக்களுள் சிறப்பில்லாத கவர்ச்சியற்ற பூக்களுமுளவாதலின் மன்மதனுக்கு அம்பாகக் கொள்ளப்பட்ட பூக்களை ஆய்ந்தெடுத்துக் கூறினார். ஓவாது - இடைவிடாது என்னும் பொருளது.

அந்நள்ளிரவில் பேய்களும் உறங்கிற்றெனல்

கஉரு. ஊன்தின் றுவகையால் உள்ள உயிர்புறம்பே
தோன்றும் கழுதும் துயின்றதே—தான்றன்
உரைசோரச் சோர உடல்சோர வாயின்
இரைசோரக் கைசோர நின்று.

(இ - ள்.) ஊன் தின்று உவகையால் - இறைச்சியை உண்டு அதனால் உண்டான களிப்பினால், உள்ள உயிர் புறம்பே தோன்றும் - உள்ளிடத்துள்ள மூச்சும் மிக வெளிப்படுகின்றதாக உள்ள பேய்களும், தான் தன் உரை சோர சோர - தம் சொற்கள் மிகத் தளரவும், உடல்சோர - உடம்பின் நிலை தளரவும், வாயின் இரை சோர - வாயிற் கொண்டுள்ள உணவும் நழுவி விழவும், கைசோர - கைகளெல்லாம் செயலற்றுப் போகவும், நின்று துயின்றது - நின்ற வண்ணமாகத் தூங்கலாயின.

(க - து.) அந்நள்ளிரவில் பெருமூச்சு விடுகின்ற பேய்களும் சொற்கள் தடுமாற உடல்நிலை தளர வாயிரை நழுவக் கைகள் செயலற்றொழிய நின்றவாறே தூங்கின என்பதாம்.

(வி - ரை.) ஊன் - புலாலுணவு. கழுது - பேய். இரவுப் பொழுதிலும் துயில்கொள்ளாது ஊன் தின்பதற்குப் பெரு விருப்பங் கொண்டலைவது, ஆவி வடிவினவான பேய்களின் இயல்பு. அவைகளும் நின்றவாறே தாம் உண்ணும் இரை நழுவ, உடல்நிலைதளரக் 'கைகள் செயலறத் தூங்கினவென' இரவின் நடுப்பகுதியைக் குறித்தார்; தம்மையறியாமலே பேய்களும் தூங்கின என, இரவு மிகுதியாகி எவரையும் மயக்கும் தன்மையைக் 'கழுதும் துயின்றதே' என்ற சிறப்பும்மை கொடுத்துக் கூறினார். இரவுக்காலம் முழுதும் ஊன் கள் முதலிய இழிவுள்ள உணவை உண்ணத் தூங்காது அலையும் பேய்களும் தூங்கிற்றென, இருட்பொழுது மிகுதியை விளக்கியவாறும். என்னை? [1]'கழுதுகண் படுக்கும் பானாள் இரவு' என்றார் பிறரும். 'கழுதும் துயின்றதே' என்று சாதியொருமைபற்றிக் கூறினார்; ஆகலான் இங்கே பன்மையாகக் கொண்டு பொருள் கூறப்பட்டது. 'சோரச சோர' என்னும் அடுக்குமொழிகள் இடைவிடாமையைக் குறித்து நின்றன. படிப்படியாக ஒரு செயல் வருதலைச் 'சோரச்சோர' என்னும் சொற்களால் விளக்கினார். (கசக)

---

1. திருவிளையாடல், காப்பு. உக.

பெட்டை அன்றில் கூவக்கேட்ட தமயந்தி வருந்தல்

கஉச. அன்றில் ஒருகண் துயின்றொருகண் ஆர்வத்தால்
இன்துணைமேல் வைத்துறங்கும் என்னுஞ்சொல்-இன்று
தவிர்ந்ததே போலரற்றிச் சாம்புகின்ற போதே
அவிழ்ந்ததே கண்ணீர் அவட்கு.

(இ - ள்.) *அன்றில் ஒருகண் துயின்று* - (ஆண்) அன்றிலானது ஒரு கண்ணை மூடிக்கொண்டு உறங்கி, மற்று ஒருகண் *ஆர்வத்தால்* - மற்றொரு கண்ணைத் தன்பெடைமேற் கொண்ட பேரன்பினால், *இன்துணைமேல் வைத்து உறங்கும் என்னும் சொல்* - தனது இன்பமிக்க பெண் அன்றிலினமேற் செலுத்தித் தூங்குமென்னும் உலகோர் கூறும் மொழி, *இன்று தவிர்ந்தது* - இன்றைக்கே பொய்யாயிற்று என்பதையறிய, *அரற்றி சாம்புகின்றபோது* - (பெட்டை அன்றில்) கூவி ஒடுங்குகின்ற அந்நேரத்திலேயே, *அவட்கு கண்ணீர் அவிழ்ந்தது* - தமயந்திக்குக் கண்களினின்றும் நீர் பெருகியோடிற்று.

(க - து.) ஆண் அன்றில் உறங்குங்கால் ஒரு கண்ணைத் தன் பெடையின்மேல் வைத்துறங்குமென்னும் சொல் பிழைபட்டதென்னும்படி பெண் அன்றில் வருந்திக் கத்துவதைக் கேட்ட தமயந்திக்குக் கண்ணீர் பெருகிற்று என்பதாம்.

(வி - ரை.) அன்றில்: பொதுப்பெயராயினும் கண் உறங்கும் என்னும் தொடரினால் ஒன்றொழி பொதுச்சொல்லாக ஆண் அன்றிலைச் சுட்டிற்று. ஆர்வம் - இடையறாத அன்பு. இதனை, [1]'அன்பீனும் ஆர்வமுடைமை' என்பர் திருவள்ளுவர். அஃதுடையாரை, 'ஆர்வலர்' என்பர் அவரே. அன்றில், பறவைகளில் மிக்க காதல் அன்புடையது. அவைகள் ஒன்றைவிட்டு ஒன்று பிரியாது வாழும் இயற்கைப் பண்புடையது. ஆகலான், அவை இரவு நேரத்தினும் உறங்குங்கால் தத்தம் கழுத்துக்களை ஒன்றாகப் பின்னிக்கொண்டு உறங்குமென்பர் உலகமக்கள். ஆண் அன்றில் உறங்குங்கால் தன்பெடையை அணைத்துக் கொண்டு ஒரு கண் விழித்தபடியிருப்ப மற்றொரு கண்ணை மூடிக்கொண்டு தூங்குமென்பது உலகோர் கண்டறிந்து கூறும் மொழி. இரவில் அன்று ஏதோ காரணத்தால் அன்றில் ஒன்று கூவுதல் கேட்டுத் தன் ஆண்துணையைப் பிரிந்த பெட்டை

1. திருக்குறள், எச.

யன்றிலே கூவுவதாகக் கருத்துக்கொண்டு ஆடவர் இயற்கை இவ்வாறுமோ என்னுங் கருத்தினுலும், தானும் தன் காதல னுடன் இவைபோல் ஊடலும் கூடலும் கொண்டு வாழுங்காலம் எப்போது கிட்டுமோ என்னும் கருத்தினுலும் கண்ணீர் பெருகி யோட நின்றாள். ஆதலின், 'அவிழ்ந்ததே கண்ணீரவட்கு' என்றார். தமயந்தி நளன்பாற்கொண்ட உண்மைக் காதலைச் சித்திரித்துக் கூறியபடியாம். (கள)

**தமயந்தி 'இருளாய் வேகின்ற துன்பம் என்ன'வெனக் கூறி வருந்தல்**

**கஉ௫. ஏழுலகும் சூழிருளாய் என்பொருட்டால் வேகின்ற**
**ஆழ்துயரம் ஏதென் றறிகிலேன்—பாழி**
**வரையோ எனும்நெடுந்தோள் மன்னவோ தின்னும்**
**இரையோ இரவுக் கியான்**

(இ - ள்.) பாழி வரையோ எனும் நெடும்தோள் மன்னவோ-வலிமையுள்ள மலையென்னும்படி நீண்ட தோள்களையுடைய வேந்தே!, ஏழு உலகும் சூழ்இருள்ஆய் - ஏழு உலகங்களையும் வளைத்துக்கொண்டிருக்கின்ற இருளை உடையதாய், என் பொருட்டால் வேகின்ற ஆழ்துயரம் - எனக்காக வருந்திக்கொண்டிருக் கின்ற மிக்க துன்பத்திற்குக் காரணம், ஏது என்று அறிகிலேன் - என்னவென்றே அறியாதவளாய் இருக்கின்றேன் (இவ்வாறு இருப் பதனுல்), யான் இரவுக்கு தின்னும் இரையோ - நான் இந்த இரவுப் பொழுதுக்கு உண்ணும் உணவோ? (நீரே கூறும்.)

(க - ரை.) 'மன்னவனே! உலகெலாம் இருண்டு எனக்கே இவ்வாறு வேக்காடு செய்கின்ற காரணம் எனக் குத் தெரியவில்லை. ஆனுல், இவ்விரவுக்கு நான் உண்ணப் படுகின்ற இரையா? நீரே சொல்லும்' என்றாள் என்பதாம்.

(வி - ரை.) ஏழுலகும் என்றது எல்லாவுலகங்களையும். வேகின்ற - கனற்றித் துன்பந் தருகின்ற என்னும் பொருளது. இருள் சூழ்ந்து துன்பந்தருதலால் தமயந்தி ஒன்றும் தோன்றாத திகைத்த நெஞ்சுடையளாய் வருந்தினுளாகலின், 'ஆழ்துயரம்' என்றார். ஆழ்துயரம்: முக்கால வினைத்தொகை. அது வருத்திக் கொண்டிருந்தது; வருத்துகின்றது; இனிமேலும் வருத்தும் என அவள் உள்ளத்துடிப்பை உணர்த்தினின்றது. இதை நீக்கும் வலிமை, வன்தோள்படைத்தோர்க்கே உண்டு. இதனை "[1]உய்யவந்து, அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மை என்ன

1. கம்பராமா. கார்முகப்: சக.

ஆண்மையே' என்றார் பிறரும். அஃதுடையான்வேந்தன் என்னும் கருத்துடைஅடைகொளிஅணியாய் 'நெடுந்தோள் மன்னனோ' என்னுஞ் சொல் நின்றது. தமயந்தி இரவு முழுதும் ஏங்கி ஏங்கிக் காதலாற் கண்ணீர்வார ஓர் இமைப்போதும் ஊழிக்காலம்போல் நீள, உடல் மெலிந்து சிறுகத் துன்புற்றாள். உடல் மெலிய மெலிய உடல்நிறை குறையுமாதலின், 'இரவே தன் உடற்பொறையைக் குறைத்து உண்பதாகக்கொண்டு 'இரையோ இரவுக்கியான்' என அரற்றினாள். அறிகிலேன், என்பதில் 'இல்' எதிர்மறை இடைநிலை. பாழி - வலிமை. ஓகாரம் இரக்கப்பொருளில் வந்தது. (கசஅ)

### தமயந்தி தன்னுயிரை உண்பதற்கு ஊதைக்காற்று வந்ததெனல்

கஉசு. கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்குல்
உருவிப் புகுந்ததால் ஊதை—பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போல் மருள்மாலை
உண்டுபோ கட்ட உயிர்க்கு.

(இ - ள்.) கருவிக்கு நீங்காத கார் இருள்வாய் - வாள் முதலிய எந்த ஆயுதங்களாலும் நீக்கவொண்ணாத கரிய இருளினிடத்து, கங்குல் உருவிப் புகுந்தது ஊதை - இவ் விரவுப் பொழுதை ஊடுருவிக்கொண்டு வாடைக்காற்று உள்ளே நுழைந்தது, கார்வண்டு பருகி போகட்ட மலர்போல் - கருநிற வண்டுகள் தேனைக் குடித்துவிட்டுப் போட்டுவிட்ட மலரைப் போல், மருள்மாலை உண்டு போகட்ட உயிர்க்கு - மயக்கத்தைச் செய்கின்ற மாலைப்பொழுதினால் என் உடல் வலிமையெல்லாம் உண்டு போட்டுவிட்டதால் வலிமையின்றியிருக்கின்ற என் உயிரையும் உண்பதற்கு.

(க - து.) மாலைப்பொழுதில் துன்பமடைந்திருந்த தமயந்தியின் மிஞ்சியிருக்கின்ற உயிரையும் வருத்துதற்குக் குளிர் காற்றும் வந்தது என்பதாம்.

(வி - ரை.) ஒரு பொருளை நீக்குதற்கு அதற்குரிய கருவிகளைக்கொண்டு நீக்குவது உலகில் நிகழும் நிகழ்ச்சியாகும். இவ்விரவுப்பொழுதோ எந்தக் கருவிகளாலும் தொலைத்தற்கரியதாய்த் தானாகவும் செல்லாததாய் தமயந்திக்குப் பெருந் துன்பங் கொடுத்துக்கொண்டிருப்பதால் 'கருவிக்கு நீங்காத காரிருள்' என்றார். ஊதை - குளிர்காற்று; வாடைக்காற்று, இது வாயால் ஊதுவதுபோல் 'குபுகுபு' என வருதலால், 'ஊதை'

எனப் பெயர் கொடுத்தனர் ஆன்றோர். இரவுப் பொழுதோடு சேர்ந்த வாடை காதலர்கட்குப் பெருந்துன்பம் விளைப்பதாக லான், இரவை 'ஊடுருவிக்கொண்டு புகுந்த ஊதை' என்றார். இதனை,

"குன்று குளிர்ப்பன்ன கூதிர்ப் பானாள்."[1]

என்றார் நக்கீரனாரும். வண்டு போகட்ட மலர் ஆவது, வண்டுகளால் குடையப்பட்டுத் தேனுண்டு சிதைக்கப்பட்டது. அதன் உள்ளீடாகிய தேனும் அதனை இயற்கைமாண்பும் சிதைந்திருப்பது. அதுபோல, தமயந்தியும் தன் உள்ளீடாகிய அறிவும் புற அழகுடைய தன் மேனியும் மெலிவுற்று இருந்தாளாதலால் 'வண்டு போகட்ட மலர்போல்' என்னும் உவமங்கொடுத்துக் கூறினார். இக் கருத்துப்பட கலித்தொகையினும்,

"கூடினர் கூடிக் குணனுணப் பட்டோர்
சூடினர் இட்ட பூவோர் அன்னர்."[2]

என்றதூஉம் காண்க. மருள் மாலை - மயக்கஞ் செய்யும் அந்திப் பொழுது. அது, காதலர்க்குக் காதல் துன்பத்தை மிகுவிக்கப் பகலெல்லாம் போதாகி மாலையில் மலர்ந்து விரிதலின், காதலுக்கு மாலை மயக்கஞ் செய்வதாயிற்று. அம் மயக்கத்தால் துன்புற்று உயிர் ஊசலாடிக்கொண்டிருப்ப இரவுப்பொழுது அதைக் கொள்ளைகொண்டு போகாநிற்பதால், அதற்குத் துணை என்னும்படி காரிருள்வாய் ஊதையும் புகுந்தது என்றார். (கசக)

### தமயந்தி, காதல் மயக்கத்தால் தாணைக் கட்டியணைத்து நாணுதல்

கஎஎ. எழுந்திருக்கும் ஏமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்கும் தன்னுடம்பை மீளச்—செழுந்தாளத்
தூணோடு சேர்க்கும் துணையேதும் இல்லாதே
நாணோடு நின்றழியும் நைந்து.

(இ - ள்.) (தமயந்தியானவள்) பூமா தவிசின் ஏமாந்து எழுந்திருக்கும் - அழகிய மாந்தளிர் பரப்பிய மலர்ப்படுக்கையினின்றும் (தன் நினைவால் நளமன்னன் உருவெளித் தோற்றங் கண்டு) மயங்கி எழுந்து நிற்பாள், விழுந்திருக்கும் - (அவ்வுரு மறைதலால் மனம்வாடிக்) கீழே வீழ்ந்து கிடப்பாள், தன் உடம்பை மீள செழுந்தாள தூணோடு சேர்க்கும் - பின் (எழுந்து நின்று) தன்

1. நெடுநல்வாடை : கஉ. 2. கலித்தொகை : உரு.

உடலைக் குளிர்ச்சி பொருந்திய முத்துக்கள் பதித்துள்ள தூணுடன் அணைத்துக் கொள்வாள், ஏதும் துணை இல்லாது - (பின) ஒரு துணையுமின்றி, நாணோடு நின்று - அதனால் வெட்க மடைந்து ஒரு பக்கலாக நின்றுகொண்டு, நைந்து அழியும் - தளர்ச்சியுற்று வருந்துவாள்.

(க - து.) தமயந்தி காதலால் எழுந்தும் விழுந்தும் தன் உடலைத் தூணோடு சேர்த்தும் தனக்கு ஏதும் துணையின்றி மனந்தளர்ந்து வருந்தினாள் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தி நளனிடம் கொண்ட காதல்மிகுதியால் எழுந்தும், அவன் உருவெளித் தோற்றத்தைக்கண்டு களித்தும், பின் அவ்வுரு மறைதலால் வருந்தி விழுந்தும், வெப்பந் தாங்கலாற்றாது தூணினைத் தழுவியும தன் காதற் கடலுக்குக் கரை காணாது நின்று தத்தளித்தாள் என்பதை விளக்கியவாறும். பூ மா தவிசு எனப் பிரித்து, மலர் பரப்பிய பெருமைமிக்க இருக்கை என்று பொருள் கூறலுமாம். 'எழுந்திருக்கும் விழுந்திருக்கும் சேர்க்கும்' என்பன செய்யுமென் வினைமுற்று; இவை காதலாற் கட்டுண்ட தமயந்தியின் பல்வேறு செயல்களைக் குறித்தன. ஏமாதல் - மயங்கியிருத்தல். 'ஏமமே சேமம் காவல் இன்பம் பொன் இரவே மையல்' என்னும் சூடாமணி நிகண்டில் இப்பொருள் குறித்தல் அறிக. (கஉ0)

தமயந்தி, தளர்ந்து பெருமூச்செறிந்து வருந்தல்

கஉக. விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருளபோல் சோரும்—புரிகுழலைத்
தாங்கும் தளரும் தழலே நெடிதுயிர்க்கும்
ஏங்கும் துயரோ டிருந்து.

(இ - ள்.) வெள்நிலவின்மீது சொரிகின்ற கார் இருள் போல் - வெண்ணிலவின்மேல் பொழிகின்ற கரிய இருள்திரள் போல், மெல் அமளிமீது சோரும் புரிகுழலை தாங்கும் - மெல்லிய பஞ்சணையின்மேல் அவிழ்ந்து தொங்கும் சுருண்ட கூந்தலைத் (தன் கையால்) ஏந்திக் கொள்வாள், தளரும் - சோர்வாள், தழலே நெடிது உயிர்க்கும் நெருப்புப்போல் சுடும் நீண்ட பெருமூச் செறிவாள், துயரோடு இருந்து ஏங்கும் - துன்பத்தோடு இருந்து இரங்குவாள்.

(க - து.) தமயந்தியானவள், காதல் மிகுதிப்படுதலால், வெண்ணிலவில் கரிய இருள் படிந்தாற்போல

மெத்தையின்மேல் கிடக்கின்ற தன் கூந்தலைக் கையால் ஏந்திக்கொண்டு தளர்வாள்; நெருப்புப்போல் வெப்பமாகப் பெருமூச்சு விடுவாள் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தியின் கூந்தல் கருநிறமுள்ளதாகலாலும் வெண்பட்டு விரித்துள்ள அவள் பஞ்சணை வெண்ணிறமாக இருத்தலாலும் காதலால் தளர்வுற்ற அவள் தன் கூந்தல் சரிந்து அதன்மேல் விழுந்துள்ள காட்சியை இருள் வெண்ணிலவில் படிந்தால் எவ்வாறிருக்குமோ அவ்வாறிருந்ததெனக் வியப்பும் மகிழ்வும் தோன்ற 'வெண்ணிலவின்மீதே .....இருள்' என்றார். 'தாங்கும், தளரும், தழலே நெடிதுயிர்க்கும்,' என்பனவற்றுள், தமயந்தியின் காதலும் அவலக்காட்சியும் புலப்படுதல் காண்க. புரிகுழல் - நெளிநெளியாகச் சுருண்டுள்ள கூந்தல். நெடிது உயிர்த்தல் - நீளமாகப் பெருமூச்சுவிடுதல்; காதலோ துன்பமோ மிக்கார்க்கு இப் பெருமூசசெழுதல் இயல்பாதலின், 'நெடிதுயிர்க்கும்' என்றார்.

சனகன் பெற்ற கொம்பாகிய சீதையின் அழகுருவைச் சூர்ப்பணகை வாயிலாகக் கேட்ட இலங்கை வேந்தன், காதலாற் பிணிப்புண்டு வருந்திநின்ற நிலையை விளக்கப் போந்த கம்பர்,

'உள்நிறை காதல்நோயை உமிழ்ந்தெரி உயிர்ப்ப தானான்.'

என்றதூஉம், கற்புக்கடம்பூண்ட கண்ணகியார் தம் காதலன் கோவலனோடு மதுரைக்குச் சென்ற காலை, மழைவரல் அறியா வல்வெயிற் கானத்துக் கல்லினும் முள்ளினும் நடந்து தம் காலடி கன்றி வருந்தி அவர் மெலிந்து நின்றநிலையைக் கூறப் போந்த இளங்கோவடிகளார்,

"[1] இறங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல உயிர்த்து.'

என்றதூஉம் இதனோடு ஒத்தனவாதலையும் காண்க. (கஉக)

**தமயந்தி, இரவுப்பொழுது போகாமல் இருக்கின்றதெனக் கூறி வருந்தல்**

கஉ௩. உடைய மிடுக்கெல்லாம் என்மேலே ஓச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ—கோடியன்மேல்
மாகாதல் வைத்ததோ மன்னவர்தம் இன்னருளோ
ஏகாத தென்னோ இரா.

1. சிலப் க0: ௩அ - ௩.

(இ - ள்.) உடைய மிடுக்கு எல்லாம் - தனக்குள்ள வன்மை முழுவதையும், என்மேலே ஓச்சி - என்னிடத்திலேயே செலுத்தி, விடியம்டுக்கு இன்மையாலோ - பொழுது புலர்வதற்கு வல்லமை இல்லாத காரணத்தாலோ, கொடியன் மேல் மா காதல்வைத்ததோ - அது கொடியவனாகிய மன்மதனிடத்தே மிக்க அன்புறவு கொண்டிருப்பதனாலோ, மன்னவர்தம் தொன் அருளோ - நள மன்னனது இனிய திருவருளினாலோ, இரா - இந்த இரவுப் பொழுதானது, ஏகாதது எனையோ - விடிந்து போய்விடாததற்குக் காரணம் இன்னதென்றறிகின்றிலேனே!

(ந - து) தமயந்தியானவள், 'இவ்விரவு போகாததற்குக் காரணம், தன் வலிமையெல்லாம் தன்பாற் செலுத்தியதாலோ, அன்றி மன்மதன்மேற் கொண்ட அன்பினாலோ, அல்லது நளமன்னன் திருவருளாலோ, வேறு என்ன காரணத்தாலோ அறிகின்றிலேனே' என்று கூறித் தமயந்தி வருந்தினாள் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தி, கழியாத இரவுப் பொழுதைக் குறித்துச் சிந்தனை செய்துகொண்டிருந்த நிலை, இங்கு விளக்கப் பெற்றுள்ளது. "இரவுப்பொழுது தன் வலிமையையெல்லாம் தன்மேல் போகசுப்பட்டுவிட்டதால், மீட்டுக்கொள்வதற்கு வலியற்றுப் போயிற்றோ? அன்றிக் கொடும்பாவியாகிய மன்மதனோடு அது உறவுகொண்டிருப்பதால் அவனைவிட்டு எப்படிப் பிரிவது என்ற எண்ணத்தினாலோ? அல்லது நளவேந்தன் வீரராயிற்றே அவரால் இவ்விரவைப் போக்கமுடியாதா! முடியுமன்றோ? [1]'வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியா' மாணபுடைய ராதலின், இவ்விரவை எதிர்ப்பது தம் தகுதிக்கு ஏற்றதன்றென்னும் கருத்தால் எதிர்க்காமல் இருக்கின்ற அவர்தம் பேரிரக்கவுணர்வினாலோ? அன்றி வேறே என்ன காரணந்தானோ? இவ்விரவு போகக் காண்கிலேன்! என் செய்வேன்!" என்று, தமயந்தி பலவாறாக எண்ணியெண்ணி ஏங்குகின்றாள். இதனைக்,

[2]'கொடியார் கொடுமையில் தாம்கொடிய இந்நாள்
நெடிய கழியும் இரா.'

எனத் திருவள்ளுவர் தந்த காதலி கூற்றிலும் இரவுத்துன்பம் நீளுதலை அறிந்து மகிழ்க.

இரவுப் பொழுது போகாமல் நீண்டுநின்றதற்குத் தமயந்தி கொண்ட நெஞ்சுகலையைப் படம்போற் சித்திரித்துக் காட்டிய வாறும்.

1. சீவகசிந். மண்மகள் : ௧௬௦. 2. திருக்குறள், ௧௧௬௯.

மன்மதன் பிரிந்தார்க்கும் புணர்ந்தார்க்கும் துன்பங் கொடுக்கும் இரக்கவுணர் வற்றவனாதலின் மன்மதனைத் தமயந்தி 'கொடியன்' என்றாள். கொடியன்: குறிப்பு வினையாலணையும் பெயர். (௧௨௨)

**தமயந்தி, மயங்கியும் தெளிந்தும் வாடியும் கண்ணீர் விட்டிருந்தாள் எனல்**

௧௩௦. மயங்கும் தெளியும் மனம்நடுங்கும் வெய்துற்
றயங்கும் வறிதே உலாவும்—வயங்கிழைபோய்ச்
சோரும் துயிலும் துயிலாக் கருநெடுங்கண்
நீரும் கடைசோர நின்று.

(இ - ள்) மயங்கும் தெளியும் மனம் நடுங்கும் - (தமயந்தியானவள்) மயங்குவாள்; (சிறிது) தெளிவுறுவாள்; மனம் நடுக்கங் கொள்வாள், வெய்து உற்று அயங்கும் - வெப்பம் மிகுந்து வருந்துவாள், வறிதே உலாவும் - (ஒரு காரணமுமில்லாமல்) சும்மா (அங்கும் இங்கும்) உலாவுவாள், வயங்கு இழை போய் சோரும் - விளங்குகின்ற அணிகள் கழன்று விழத் தளர்ச்சி கொள்வாள், துயிலா கரு நெடுங்கண் - தூக்கங் கொள்ளாத கரிய பெரிய கண்களிலிருந்து, நீரும் கடைசோர நின்று துயிலும் - நீரும் கடைக்கண் வழியாகப் பாய்ந்தோட நின்றவாறே தூங்குவாள்.

(க - ரை.) தமயந்தியானவள், காதலால் மயக்கங் கொள்வாள், தெளிவாள், மனம் நடுங்குவாள், கண்ணீர் வார நின்றவாறே தூக்கங்கொள்வாள் என்பதாம்.

(வி - ரை.) மயங்கும் முதலியன செய்யுமென் வினைமுற்று. துயிலா: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தமயந்திககுக் காதல் மிகுதியால் மயக்கமும், தெளிவு, மனநடுக்கமும் உண்டாயின; அவள் அது காரணமாக இன்னது செய்வதென உணராமல் போவதும் வருவதுமாக இருப்பாள்; நின்றபடியே கண்ணீர் பெருகியோட அழுவாள் என்பன, அவள் தன் நிலையைப் படிப்படியாக விளக்கிநின்றன. கரு நெடுங்கண்: கண்ணின் கரு நிறமும் நீட்சியும் கூறப்பெற்றன. தலைவியின் கண்ணின் சிறப்பைக் கூறியருளிய மணிமொழிப் பெருமான் இறைவனுடைய பல்வேறு தன்மைக்கு ஒப்பிட்டுக் கூறிய அழகிய சுவைமிக்க பாடல், கண்களின் கருமையும் நெடுமையும் விளக்கி நிற்றலின் அதனை ஈண்டுக் குறிப்பாம்.

"[1] ஈசற்கு யான்வைத்த அன்பின்
அகன்றவன் வாங்கியவென்
பாசத்திற் காரென் றவன்றில்லை
யின்ஞெளி போன்றவன்தோள்
பூசத் திருநீ றெனவெளுத்
தாங்கவன் பூங்கழல்யாம்
பேசத் திருவார்த் தையிற்பெரு
நீளம் பெருங்கண்களே.'

என்பதை அறிக. இதில் இறைவன் திருப்புகழுக்கே ஒப்புரைத்த கண்ணின் சிறப்பு இன்புறற்குரியது. என்னே! இறையன்பு கொண்ட பெரியாரியல்பு! இதிற் கண்ணின் இயல்பெலலாம் காண்க. (கஉ௩)

**தமயந்தி, பேயும் உறங்கும் இவ்விரவிருளிற் காதலர்க்கு ஆதரவில்லை எனல்**

கஙக. விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பட்டுக்
கழுதும் வழிதேடும் கங்குல்—பொழுதிடையே
நீருயிர்க்கும் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்தம்
ஆருயிர்க்கும் உண்டோ அரண்.

(இ - ள்.) விழுதுபட திணிந்து - விழுது (காலூன்றுதல்) உண்டாகும்படி மிகுந்த, வீங்கு இருள்வாய்பட்டு - நெருங்கிய இருளினிடத்தே அகப்பட்டுக் கொண்டு, கழுதும் வழிதேடும் கங்குல் பொழுதுஇடை - பேய்களும்கூட வழி தெரியாமல் மயங்கி வழியை ஆராய்ந்து தேடுகின்ற இரவுநேரத்தில், நீர் உயிர்க்கும் கண்ணோடு - நீரைப் பொழிகின்ற கண்களுடனே, நெஞ்சு உருகி வீழ்வார்தம் - மனங்கரைந்து வீழ்ந்து வருந்துகின்றவர்களாகிய காதலருடைய, ஆர்உயிர்க்கும் அரண் உண்டோ - அரிய உயிர்கட்கும் பாதுகாப்பு உண்டோ? (இல்லையென்றபடி)

(க - ரு.) 'பேய்களும் வழிதெரியாது மயங்கும் மிக்க இருட்பொழுதில் காதலர் உயிரைப் பாதுகாக்கும் அரணும் உண்டோ?' என்று கூறித் தமயந்தி வருந்தினாள் என்பதாம்.

---

1. திருக்கோவையார்: க0க.

(வி - ரை.) ஆலமரம் விழுதுவிட்டு வேரிறங்கி இருப்பது போல், இவ்விரவுப் பொழுதும் மிகுந்து வேர்விட்டு விடியாதிருக்கிறது என்னுங் குறிப்புணர்த்துமாறு 'விழுதுபடத் திணிந்த வீங்கிருள்' என்றார். விழுது என்ற சொற்கேற்ப ஆலமரம் என்று கூறாததால் ஏகதேச உருவக அணியாகக் கோடலுமாம். கழுது - பேய். இவை, தம் ஆவலால் கள் விற்குமிடம், ஊன் புழங்குமிடங்கள் எல்லாம் அவைகளை உண்பதற்கு அவாவி இரவுமுழுதும் ஓடித்திரிவ தென்பர். இரவுநேரத்தில் எளிதாக நடமாடும் பேய்கள்கூட, வழிதெரியாது மயங்குகின்ற இருள் என்றதனால், இருள் அவ்வளவு மிகுதியெனக் குறித்தவாறும். சோலையின் நெருக்கத்தைக் கூறப்போந்த நக்கீரர் குரங்குகள்கூடத் தாவுதற்கொண்ணாத சோலை யென்றார், ஆற்றுப்படையில். [1] 'மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கம்' என்னும் அச் சொல்லோவியம் காண்க. காதல்மிக்கார்க்குத் தூக்கங்கொள்ளாது தாம் காதலுற்றார்பால் நெஞ்சம்வைத்துக் கவன்றழுதல் இயல்பாக இருத்தலாலும் அதனால் உயிர் போவதும் வருவதுமாக ஊசலாடிக் கொண்டிருத்தலாலும் 'ஆருயிர்க்கும்.........உண்டோ அரண்' என்றார்.

ஒரு தலைவி, தன் கணவனைப் பிரிந்திருந்தபோது அவனை எண்ணியெண்ணி ஏங்கியிருந்தாள்; அவள் ஊண் மறந்தாள்; நல்லுடை புனைவதை மறந்தாள்; ஓவியம் புகையுண்டதையொப்ப இருந்தேங்கினாள்; அவள் தன் தோழியிடம் தன் நிலையைக் கூறுங்கால், தன் கண்கள் துயின்றில வென்று கூறுகின்றாள். அந்நிலையை உணர்த்துவது விவேக சிந்தாமணியிலுள்ள ஒரு அழகிய பாட்டு; அது:

[2] 'சங்குமுழங்கும் தமிழ்நாடன் தன்னை நினைந்த போதெல்லாம்
பொங்கு கடலும் உறங்காது பொழுதோர் நாளும் விடியாது
திங்களுறங்கும் புள்ளுறங்கும் தென்றலுறங்கும் சிலகாலம்
எங்குமுறங்கும் இராக்காலம் என்கண் இரண்டும் உறங்காவே.'

என்பது, இதனோடு ஒத்ததாதல் அறிந்தின்புறுக. (கஉச)

தமயந்தி துன்பம் நீங்கப் பொழுது விடிந்த தெனல்

கஙஉ. பூசுரர்தம் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியும் தாமரையும் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேங் கோதையாள் ஆழ்துயரத் தோடு
புலர்ந்ததே அற்றைப் பொழுது.

---

1. திருமுருகு: சஉ. 2. விவேகசிந்தாமணி, உகூ.

(இ - ள்.) பூசுரர்தம் கைமலரும் - அந்தணர்களுடைய கைக ளாகிய மலர்களும், குமுதப்பூவும் முகிழ்ப்ப - அல்லிப்பூக்களும் குவியவும், காசினியும் தாமரையும் கண்விழிப்ப - உலகமக்கள் முதலிய எல்லாவுயிர்களும், தாமரை மலர்களும் கண்கள் விழித் துத் திறக்கவும், வாசம் அலர்ந்த தேம் கோதையாள் - மண முள்ள தேன்பொருந்திய மலர்மாலையணிந்த தமயந்தியின், ஆழ் துயரத்தோடு - மிக்க துன்பத்துடன், அற்றைப் பொழுது புலர்ந் தது - அன்று இராக்காலம் போயிற்று.

(க - ரை.) அந்தணர்களின் கைகளும் அல்லிப் பூக் களும் குவிய, உலக உயிர்கள் யாவும் தாமரை மலர்களும் கண்கள் திறந்துமலர, அன்று இரவுப்பொழுது நீங்கிற்று என்பதாம்.

(வி - ரை.) 'அந்தணர் என்போர் அறவோர' என்பது தமிழ்மறை. பூசுரர் - மண்ணுலகத் தேவர் என்பது பொருள். அவர் காலையிலெழுந்து நீராடிக் கடவுளரை உசசிக் கூப்பிக் கைதொழுது வணங்குவாராதலால், 'பூசுரர்தம் கைம்மலர் ... ..முகிழ்ப்ப' என்றார். விடியற்காலைப் பொழுது வருங்கால், எல்லாவுயிர்களும் கண்விழித்தெழுதலும், தாமரை மலர்கள் மலர்ந்து மணம் பரப்புதலும் உண்டாகலான், மகளிர் கண்போல் அழகுற மலர்ந்திருப்பதைக் 'கண்விழிப்ப' என, நயம்பெறக் கூறினர். தமயந்திக்கு ஊழிபோன்று நீங்காது நிலைத்துநின்று துன்பஞ்செய்த இரவு நீங்கியவுடன், அவள் துன்பமும் நீங்க வாய்ப்புத் தந்ததாகலின், 'கோதையாள் ஆழ்துயரத்தோடு புலர்ந்தது' என்றார். ஓடு : மூன்றும் வேற்றுமை உடனிகழ்ச்சிப் பொருள்.

காலைப்பொழுதின் காட்சியை வருணிக்கப் போந்த கம்ப நாடர்,

[1]"செஞ்சவே சேற்றில் தோன்றும் தாமரை தேரில் தோன்றும்
வெஞ்சுடர்ச் செல்வன் மேனி நோக்கின விரிந்த.'

என்றார். மணிமேகலை யாசிரியரும்,

[2]"புகர்முக வாரணம் நெடுங்கூ விளிப்ப
பொறிமயிர் வாரணம் குறுங்கூ விளிப்ப......
காரிருள் சீத்துக் கதிரவன் முளைத்தலும்.'

என்றதும் காண்க.

---

1. கம்பராமா. கங்கைப்: கூசு. 2. மணி, எ : ககஙு......உசு.

காசினி - உலகம் : இடவாகு பெயராய் உயிர்களை உணர்த்திற்று. கண்போல் அழகு விரியமலர்ந்த தாமரைமலரைக் 'கண் விழிப்ப' என்றார். [1]"கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்' என்றார் பிறரும். (௧௨௫)

பகலவன், கிழக்குமலையில் தோன்றினான் எனல்

௧௨௬. வில்லி கணையிழப்ப வெண்மதியம் சீரிழப்பத்
தோல்லை இருள்கிழியத் தோன்றினான்—வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயில் செங்கதிரோன் குன்று.

(இ - ள்.) வல்லி மணமாலை வேட்டிடுதோள் - பூங்கொடி போன்ற தமயந்தியின் மணமாலையைப் பெற விரும்பி வந்துள்ள தோள்களையுடைய, வாள் அரசர் முன்னே - வாட்படை யேந்திய மன்னர்கட் கெதிராக, வில்லி கணை இழப்ப - கரும்பு வில்லோனாகிய மன்மதன் தன் மலரம்புகளை இழக்கவும் வெண்மதியம் சீர் இழப்ப - வெண்ணிறக் கதிர்களையுடைய திங்கள் தன் ஒளியின் அழகு குறையவும், தொல்லை இருள் கிழிய - தமயந்திக்குத் துன்பந்தந்த இருட்டு நீங்கவும், குணவாயில் குன்று - கிழக்குப் பக்கமுள்ள மலையிடத்தே, செம் கதிரோன் தோன்றினான் - சிவந்த கதிர்களையுடைய ஞாயிறு தோற்றமுற்றான்.

(க - து.) தமயந்தியின் சுயம்வரத் திருமணமாலையை விரும்பி வந்த அரசர் முன்பு கதிரவன் கிழக்குப்பக்க மலையில் தோன்றினான் என்பதாம்.

(வி - ரை.) ஞாயிறு தோன்றியவுடன் காமன் அம்பு, வெண்ணிலவு, காரிருள் முதலியன முன்னிற்காதாகலான், 'வில்லி கணையிழப்ப' என்று தொடங்கி நயம்பெறக் கூறினார். வெண்மதி செங்கதிர் முரண்தொடை அழகுற அமைந்தன. வில்லி - வில்லாளரானோர்க்கெல்லாம் மேலானோன் ஆதலால், மன்மதனை 'வில்லி' என்றார். ஏனெனின், பிற வில்லாளரெல்லாம் பகைவர் மேற் கொடிய அம்புகளைச் செலுத்தி அவர்தம் உயிரைப் போக்கி அழிப்பர். இவன் பகையும் நொதுமலும் நோக்காது, காதலுற்ற ஆடவர் பெண்டிர் யாவரையும் தன் மெல்லிய மலர்க்கணைகளால் வருத்துவோனேயன்றிக் கொல்வோனல்லனாதலின், வில்லுக்கு வேந்தனாக விளங்குவோனானான். சூரியன் தோன்றுங்கால் சந்திரன் ஒளி குறைதலும் இருள் நில்லாது ஓடுதலும் இயற்கையாத

1. திருமுருகு : ௭௫.

லான், 'வெண்மதியம் சீரிழப்ப' என்றும், 'இருள்கிழிய' என்றும் நயம்பெறக் கூறினர். வாளரசர் : வாட்படை கொண்ட மன்னர்; இது, வீரமிக்கார் என்பதைக் குறித்தது. ஆடவர்க்குச சிறப்பு வீரம் : வீரத்தை வாளின்மேல் வைத்து அரசரைக் குறித்தார்.

> [1]'பொலம்பூந் தும்பைப் பொறிகிளர் தூணிப்
> புற்றடங் கரவின் ஒடுங்கிய அம்பின்
> நொசிவுடை வில்லின் நொசியா நெஞ்சின்
> களிறெறிந்து முரிந்த கதுவாய் எஃகின்
> விழுமியோர்.'

எனப் பரணரும் பதிற்றுப்பத்தில், 'எஃகின் விழுமியோர்' என, எஃகோடு சேர்த்து வீரரைப் பாராட்டுதல் அறிந்து இதன் கருத்தோடொப்ப வைத்து மகிழ்க. எஃகு - வேல். குணவாயில் - கீழ்பக்கம். [2]"குணவாயிற் கோட்டத்து அரசுதுறந் திருந்த, என் பதில் குணவாயில் இப்பொருட்டாதல் காண்க. சூரியன் காலைப் போதில் தோன்றுவது கீழ்பால். அத்திசை, விடியற்காலையில் கருநிறமும் செவ்வொளியும் பரந்த மலைபோல் தோன்றுதலால், அதனைக் 'குன்று' என்று உருவகமாக்கிக் கூறினர், கவிகள் மரபும் அஃதாகலான். (கஉ௬)

**சுயம்வரத்திற்காக மன்னர் பலரும் வந்து கூடினரெனல்**

கந௪. முரைசெறிந்த நாளேழும் முற்றியபின் கோற்ற
வரைசெறிந்த தோள்மன்னர் வந்தார்—விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையும்
காலை முரசும் கலந்து.

(இ - ள்.) முரைசு எறிந்த ஏழுநாளும் முற்றியபின் - (சுயம்வரத்தைக் குறித்து) பேரிகை அடித்துத் தெரிவித்த ஏழு நாட்களும் கழிந்தபின், கொற்றவரை செறிந்த தோள் மன்னர் - வெற்றிபொருந்திய மலைபோலும் தோள்களையுடைய அரசர்கள், விரைசெறிந்த மாலை துவள - மணம் நிரம்பிய பூமாலைகள் அசையவும், முடிதயங்க - தலையிலணிந்துள்ள மணிமுடிகள் ஒளிவிட்டு வீசவும், வால்வளையும் காலைமுரசும் கலந்து வந்தார் - வெண்ணிறம் பொருந்திய சங்குகளும் காலையில் முழக்கும் பேரிகையும் ஒன்றுகலந்து பேரொலி செய்யச் (சுயம்வர மண்டபத்துக்கு) வந்தார்கள்.

1. பதிற்றுப்பத்து, ௪௰. 2. சிலப், பதிகம் : க.

(க - ரு.) சுயம்வரத்தைக் குறித்து அறிவித்து முரசு முழக்கிக் கொண்டிருந்த ஏழு நாட்களும் கழிந்தபின், மன்னர்கள் மாலையசைய, முடிகள் ஒளிவிட்டெறிக்க, சுயம் வர மண்டபத்தில்வந்து கூடினார்கள் என்பதாம்

(வி - ரை.) முரைசு - முரசு: மொழியிடைப் போலியாக 'ஐ' வந்தது. 'ஏழு நாள்' 'நாள் ஏழ்' எனச் சொன்னிலைமாறிய இலக்கணப்போலி. துவள தயங்க என்பன செவ்வெண்கள். வளை முரசு என்பன அவற்றின் ஒலியை விளக்குதலால் பொருளாகு பெயர். கலத்தல் - ஒன்றுபடல். திருமணத்துக்காகச் சுயம்வரம் மண்டபம் அமைத்திருத்தலால் அதில் மங்கலவினை நிகழ்ச்சிகளை யாவரும் அறிதற்பொருட்டு முரசம் முழக்கிக்கொண்டேயிருந்தன ராதலின், 'வால்வளையும் காலைமுரசும் கலந்து' என்றார். அல்லது விடியற்காலையில் அரசர் கோயில்களில் முரசும் சங்கும் முழக்குவது வழக்கமாகலான், அவ்வாறு முழக்கினரெனக் கோடலுமாம். காலையில் சங்கு முரசு முழங்குமென்பதனை, [1]'வால்வெண் சங்கொடு வகைபெற் றோங்கிய, காலைமுரசங் கனைகுரல் இயம்ப' என்றார் இளங்கோவடிகளும். முன்னர், 'மங்கை சுயம்வரம் நாள் ஏழென்று வார்முரசம், எங்கும் அறைகென் றியம்பினான்' என்றதையே இங்கே நினைவாற்றல் கொண்டு படிப்பார் உணர, 'நாள் ஏழும் முற்றியபின்' என்றார். ஏழுநாள்: ஏழாகிய நாள் என விரிதலால் பண்புத்தொகை. (க௨௭)

**நளமன்னன், சுயம்வர மண்டபத்துக்கு வந்திருந்தானெனல்**

க௩௫. மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீலம்—முன்றில்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங் கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்.

(இ - ள்) கன்று குதட்டிய கார்நீலம் - கன்றினங்கள் வாயிற் குதட்டியுமிழ்ந்த கருங்குவளை மலர்கள், முன்றில் குறு விழிக்கு நேர்நாடன் - மனை முற்றங்களில் (மகளிர்தம்) சிறுகிய பார்வைக்கு ஒத்துச் சுருங்கிக் கிடக்கின்ற நிடத நாட்டையுடையவனும், கோதை பெரும் கண்ணின் - மலர்மாலையணிந்த கூந்தலையுடையளாகிய தமயந்தியின் பெரிய கண்களின், சிறு விழிக்கு நோற்று இருந்த சேய் - சிறிய பார்வைக்குத் தவஞ்செய்திருந்த முருகவேள் போன்றவனுமாகிய நளமன்னன், மன்றல் அம்தார்

1. சிலப், க௪ : க௩ - ௪.

மன்னர் நடுவு அணைய வந்து இருந்தான் - மணம் பொருந்திய அழகிய மலர்மாலையணிந்த அரசர்கள் சூழ்ந்த நடுவிடத்தில் சார்ந்து வீற்றிருந்தான்.

(க - ரு.) சுயம்வர மண்டபத்தில் நளமன்னன் வந்து, பல மன்னர்கட்கிடையில் சார்ந்து தங்கியிருந்தான் என்பதாம்.

(வி - ரை.) கன்று - ஆன் கன்று முதலியன. அவை இளம் பருவத்தினவாகலான் நீலமலர்களைக் கறித்து ஆங்காங்கே குதட்டிக் கக்கிவிடுகின்றன. கருங்குவளை கருநிறமாக இருத்தலால், அம்மலர்களின் சிதைந்த இதழ்களும், மலர்களும், வீட்டு வாசல்களில் கிடப்பன, மகளிர்தம் அறுதறைச சிறுபார்வை போற் காட்சியளிக்கின்றன. எனவே, நீல மலர்கள் மிக்கு வளர்ந்து செழித்துள்ள தன்மையை உணர்த்தி நாட்டின் நீர் நில வளத்தைக் குறித்தவாறும். இக்கருத்தோடொப்ப ஆசிரியர் இளங்கோவடிகளார் சிலப்பதிகாரக் கானல்வரிப்பாட்டினும், '[1]........மெல்விரலாற் கொண்டோச்சும் குவளைமாலைப், போது சிறங்கணிப்பப் போவார்கண் போகா' என்றார். அந்நாட்டுக்குரியவனாதலின் 'நீலம் ... ... நேர்நாடன்' என்றார். இவ்வாறன பல்வகை மலர்கள் தங்கியுள்ள நாட்டையுடைய வேந்தன், தமயந்தியின் பெருவிழிக்குத் தவஞ்செய்தான் என்றார். அஃதாவது அவள் காதற்பார்வையையே விரும்பி ஏக்கற்று இருந்தான் என்னும் தன்மையைச், 'சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்' என்னுஞ் சொற்றொடரால் குறித்தார். சிறுவிழி: நாணத்தை உள்ளடக்கிக் காதலாற் பார்க்கும் அன்பு கனிந்த பார்வை.

நீலம் : அந்நிறத்தையுடைய மலரைக் குறித்தலால் பண்பாகுபெயர். சேய் - செந்நிறமுடையான். அஃது ஈண்டு நள மன்னனைச் சுட்டிற்று. (கஉஅ)

### தமயந்தி, சுயம்வர மண்டபம் அடைதல்

கஉகூ. நித்திலத்தின் பொற்றோடு நீலமணித் தோடாக
மைத்தடங்கண் செல்ல வயவேந்தர்—சித்தம்
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்
அருங்கேழ் மணிப்பூண் அணங்கு.

(இ - ள்.) அருங்கேழ் மணிப்பூண் அணங்கு - சிறந்த நிறத்தையுடைய மணியாணியன்ற அணிகளை அணிந்த தெய்வப்பெண்

1. சிலப். எ : எ.

போன்ற தமயந்தியானவள், நித்திலத்தின் பொன்தோடு - (தன் காதுகளில் அணிந்துள்ள) முத்துப்பதித்து ஆக்கிய பொன் குண்டலமானது, நீலமணி தோடு ஆக - நீலக்கல் இழைத்த குண்டலமென்னும்படியாக, மை தடம்கண் செல்ல - (அவளுடைய) மைதீட்டிய நெடிய கண்களின் பார்வை சுழன்று சுழன்று போக, வயவேந்தர் சித்தம் வண்டின் மருங்கே வர - வெற்றிமிக்க அரசர்களுடைய மனமானவை வண்டுகளைப்போல் அவள் பக்கத்தே வர, பந்தர்கீழ் வந்தாள் - (சுயம்வர மண்டபத்தில் போடப்பட்டிருக்கும்) பந்தலிடத்தே வந்தாள்.

(க - ரை.) தமயந்தியானவள், தன் கண்களின் நீலவொளியால் காதிலணிந்த முத்துக் குண்டலத்தின் வெள்ளிய நிறம் கருநிறமாகும்படி கட்பார்வையைச் செலுத்திக் கொண்டு சுயமவர மண்டபத்தை அடைந்தாள் என்பதாம்

(வி - ரை.) தமயந்தி கருவிழியின் நிறம், அவள் அணிந்துள்ள முத்தாலாக்கிய தோட்டின்மீது பாயும்போது அதன் வெண்ணிறம் மாறிக் கருநிறம் காட்டிநின்றது. எனவே, அவள் தன் கட்கடையின் சிறப்பை விளக்கியவாறும். அவள் தன் கட்பார்வையை நசிவந்த வேந்தரின் மனம், அவள்பால் சார்க்க நீலமலரை விரும்பிய வண்டினம் போல் சுற்றிச் சுற்றித் திரிதலால், 'வண்டின் மருங்கே வர' என்றார். வண்டின என்பதில் ஐந்தனுருபாகிய 'இன்' ஈண்டு ஒப்புப் பொருளில் வந்தது.

[1]"நல்லணி மெய்யிற் பூண்டு நாசிகா பரணமீதில், சொல்லதில் குன்றி தேடிச சூடிய தென்னே என்றான், மெல்லியல் கண்ணும் வாயும் புதைத்தனள் வெண்முத் தென்றாள்' என, விவேக சிந்தாமணியினும் இக்கருத்துக் காண்க. அணங்கு - தெய்வப்பெண்.

[2]' அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ.'

என்பதில் அணங்கு இப்பொருள் தருதலை அறிக. (க௬௬)

**தமயந்தி வந்தவுடன் மன்னர்கள் அவளைப் பார்த்தாரெனல்**

க௬எ. பேதை மடமயிலைச் சூழும் பிணைமான்போல்
கோதை மடமானைக் கோண்டணைந்த—மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேல்மேல் நிறைந்து.

---

1. விவேக சிந் : கழகப் பதிப்பு : கஉஅ.
2. திருக்குறள், க0அக.

(இ - ள்.) பேதை மடமயிலை - வஞ்சமற்ற இளமை பொருந்திய மயிலினை, சூழும் பிணைமான்போல் - சுற்றியிருக்கின்ற பெண்மான்களைப்போல, கோதை மடமானை கொண்டு அணைந்த - மாலையணிந்த அழகிய மான்பிணை போன்ற தமயந்தியை அழைத்துக்கொண்டு வந்த, மாதர் மருங்கின் வெளி வழியே - தோழிப்பெண்களின் இடுப்பினது வெளியின் வழியாக, மன்னவர் கண் புக்கு - அரசர்களின் கண்பார்வை நுழைந்து, மேல்மேல் நிறைந்து நெருங்கின - ஒருவர் பார்வைக்குமுன் மற்றொருவரின் பார்வையாக எங்கும் நிரம்பிக் கூடிநின்றன.

(க - து.) தமயந்தியைச் சுயம்வர மண்டபத்துக்கு அழைத்துக்கொண்டு வந்த தோழிப்பெண்களின் இடுப்பினது வெளி வழியாக மன்னர்கள் எல்லாம் தமயந்தியைப் பார்த்த வண்ணமாகவே இருந்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) பேதை - கள்ளங் கவடற்ற தன்மை தமயந்தியைச் சுயம்வர மண்டபத்துக்கு அழைத்துக் கொண்டுவந்த தோழிகளின் காட்சி, இளமைமிக்க மயிலைச் சூழ்ந்துநின்ற பெண் மான்கள்போல் இருந்தது என்று தமயந்தியின் வனப்பும், தோழிப் பெண்களின் சிறப்புந் தோன்றக் கூறினார். தமயந்தியை எக்கால் காண்போம் காண்போம் என்று ஏக்கற்றிருந்த அரசர் குழாங்கள், அவள் வந்தவுடன் நீரிற்கு அவாவுற்று வாடி நிற்கும் நெற்பயிர்கட்கு நீரை மேகங்கள் பொழிந்தபோது எவ்வாறு அப்பயிர் இன்புற்று எற்குமோ அவ்வாறே வந்தவுடன் அவாக்கொண்டு அவள் அழகைப் பார்த்தனரென்பாராய் 'மன்னவர் கண்புக்கு நெருங்கின' என்றார். எனவே அரசர் கூட்டமும் அவர்தம் அளவற்ற காதலும் காட்டியவாறும். தமயந்தியை மணக்க விரும்பி வந்த அரசர் கூட்டம், தமயந்தியின் அழகு முழுதையும் காண அவாவி ஏக்கற்றிருந்தது. ஆதலால், பக்கத்தில தமயந்தியைச் சூழ்ந்து நிற்கும் சேடியர் கூட்டத்தினால் பார்க்க இயலவில்லை வெளியாக இருப்பது அவர்தம் இடையின் ஊடு வெளியே. ஆதலால், அதன் வழியே கண்ணைச் செலுத்திப் பார்த்தனர் என்க. முன்னரும் அன்னத்தைப் பிடிக்கப் போந்த மங்கையரை, 'நாடி மடவன்னத்தை நல்ல மயிற்குழாம், ஓடி வளைகின்ற தொப்ப' என்னும் நயத்தைப் போல நயந்தோன்றப் 'பேதை மடமயிலைச் சூழும் பிணைமான் போல்' என்றார். மருங்கு-இடை. கண்புக்கு நெருங்கின என்பது, முதல்வினை, சினைவினையாகக் கூறப்பட்டதாகும். 'கால்லொடிந்து விழுந்தது' என்பதுபோற் கொள்க. [1]"சினைவினை சினையொடு முதலொடும் செறியும்' என்னும் நன்னூல் விதியையும் உணர்க. (கஙஎ)

1. நன்னூல் : நூ௩௫௰.

### தமயந்தி, அன்னம் போல் சுயம்வரமண்டபம் அடைந்தாள் எனல்

கருஅ. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின்மடப்பாவை போய்ப்புக்காள் மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னம் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று.

(இ - ள்.) *மின்னிறத்து - மின்னல் நிறம் போன்று ஒளி விடும்,* **செய்யதாள் வெள்ளை சிறை அன்னம்** *- சிவந்த கால்களையும் வெள்ளிய சிறகுகளையுமுடைய அன்னப்பறவை,* **செம் கமல பொய்கைவாய் போவதே போன்று** *- செந்தாமரை மலர்கள் மலர்ந்துள்ள தடாகத்தினிடத்தே செல்வதுபோல்,* **பொன்னின் மடபாவை** *- திருமகள் போன்ற அழகுபடைத்த தமயந்தியானவள்,* **மன்னர் விழி தாமரைபூத்த மண்டபத்தே போய்ப்புக்காள்** *- அரசர்கள் கண்களென்னும் தாமரைமலர்கள் பூத்த விளங்குகின்ற (சுயம்வர) மண்டபத்தினிடத்தே சென்று புகுந்தாள்.*

(க - று.) *தமயந்தியானவள் செந்தாமரை மலர்கள் மலர்ந்துள்ள தடாகத்திற்குச் செல்லும் அன்னம்போல் சுயம்வர மண்டபத்துக்குள் போய்ச்சேர்ந்தாள் என்பதாம்.*

(வி - ரை.) *அன்னம் தமயந்திக்கும், மன்னர்கள் விழி, தாமரை மலருக்கும், சுயம்வர மண்டபம் பொய்கைக்கும்* **ஏகதேச உருவக** *மாக வந்தன. பொன்: திருமகள். பாவை: பழுதின்றியன்ற அழகிய ஓவியம்; இங்கே உவம ஆகுபெயராய்த் தமயந்திக்கு வந்தது. புக்காள்: வினையாலணையும் பெயர். "நாணின் பாவாய் நீணில விளக்கே'[1] என்பதில் பாவாய் என வருவதும் காண்க. 'மின்னிறத்துச் செய்யதாள் வெள்ளைச் சிறை' என்னுந் தொடரில்,* **சொல்முரணோடு பொருள்முரண்** *அழகுகள் பொலிவுற்றிருத்தல் காண்க.* (கருக)

### மன்மதன், 'தமயந்தியின் பார்வை யார்மேற் செல்லுமோ?' என்று எதிர்பார்த்திருந்தான் எனல்

கருகூ. வடங்கொள் வனமுலையாள் வார்குழைமேல் ஓடும்
நெடுங்கண் கடைபார்த்து நின்றான்—இடங்கண்டு
பூவாளி வேந்தன்தன் பொன்னாவம் பின்னேயிட்
டேவாளி நாணின்மேல் இட்டு.

---

1. சிலப்பதி. கக: கூ0.

(இ - ள்.) பூவாளி வேந்தன் தன் பொன் ஆவம் பின்னே இட்டு - மலரம்புகளையுடைய மன்மத வேந்தன் தன்னுடைய அழகுள்ள அம்பறாத்தூணியை முதுகின்புறத்துக் கட்டித் தொங்கவிட்டு, ஏ வாளி நாணின்மேல் இட்டு - அம்புகளை வில் நாணின் மேல் முன்வைத்துத் தொடுத்து, இடம் கண்டு ஏற்ற இடத்தைத் தெரிந்துகொண்டு (அங்கு நின்றபடியே குறிபார்த்து), வடம் கொள் வனமுலையாள் - முத்துமாலையைக் கொண்டுள்ள அழகிய கொங்கைகளையுடைய தமயந்தியின், வார்குழைமேல் ஓடும் - நீண்டுள்ள காதுகளின்மேல் செல்லுகின்ற, நெடும் கடைகண் பார்த்து நின்றான் - நீண்ட கடைக்கண் பார்வையின் தன்மையை எதிர்நோக்கி நின்றான்.

(க - து.) மன்மதன், தன் வில்லை ஆயத்தஞ்செய்து கொண்டு தமயந்தியின் கடைக்கண்பார்வையை எதிர் பார்த்து நின்றான் என்பதாம்.

(வி - ரை.) வடம் - மாலை. சிறப்புப்பற்றி முத்துமாலை என்று பொருள் கூறப்பட்டது.

"[1]பிறைவடம் கிடந்து சுணங்குபூத் தொளிரும்
பேரிள வனமுலை திளைப்ப.'

என்றார், நைடதத்தினும். கண்கள் நீட்சியால் காதளவு வரை இருப்பது, நல்லிலக்கண நங்கையர்க்கழகு ஆதலின், 'நெடுங்கண கடை' என்றார். கண்கடை என்பது, அதன் செயலாகிய பார்வையைச சுட்டுதலால் கருவியாகுபெயர் கடைக்கண், கண்கடை எனச் சொன்னிலை மாறிநின்ற இலக்கணப் போலி.

மன்மதன் காதலர்க்குக் காதல்வெறியை ஊட்டுதற்குத் தமயந்தியின் கட்பார்வை எவரிடம் செல்கின்றதோ அவரிடத்தே தன் அம்புகளைச செலுத்த அம்பறாத்தூணியை முதுகிற் கட்டிக்கொண்டு, அம்பை வில்லின் நாணில் தொடுத்துக் கொண்டு, தன்தொழிலை மேற்கொண்டு துவங்கி நடத்துவதற்கு ஆயத்தமாக நின்றான் என்பதாம். அஃதாவது தமயந்தியின் குறிப் பின்படி தன் பணியை ஆற்றுதற்கு முன்னின்றான் என்றபடியாம். பூவாளி - பூவாகிய அம்பு. மன்மதனுக்கு மலர்களே அம்புகள். இதனை, "[2]ஆலைக் கரும்புசிலை ஐங்கணைபூ நாண்சுரும்பு, மாலைக் கிளிபுரவி மாருதம் தேர்' எனவரும் ஆசிரியர் செய்த இரதநிைனச் சுருக்கச செய்யுளானும் அறிக. பூவாளி வேந்தனையினும் இவன் தன் ஏவல்வழியே நின்று பணியாற்றுகின்றான் என்னும் குறிப்பு நயந்தோன்ற நின்றது. (கஅஉ)

1. நைடதம், அன்னத்தைத்தூது: க. 2. இரத்தினச் சுருக்கம்:

### தோழி ஒருத்தி, தமயந்திக்கு அரசர்களைக் குறிப்பிட்டுக் காட்டுதல்

கசுப. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

(இ - ள்.) இயல் அணங்கு - இயற்கையழகு நிறைந்த பெண்ணொருத்தி, தார்வேந்தன் பெற்ற தனிக் கொடிக்கு முன்நின்று - வெற்றிமாலை சூடிய வீமமன்னன் ஈன்றெடுத்த ஒப்பற்ற பூங்கொடி போல்வாளாகிய தமயந்தியின் முன்பாக நின்றுகொண்டு, தேர்வேந்தர் தம்மை தெரிந்து - (சுயம்வரத்துக்காக அங்குக் கூடியிருக்கின்ற) தேரினையுடைய அரசர்களையெல்லாம் இன்னவர் இத்தன்மையர் எனத் தெரிந்துகொண்டு, மன்னர் பெயரும் குலமும் வளநாடும் - அவ்வவ் வரசர்களின் பெயர்களும் மரபுகளும் வளப்பம் மிக்க நாடுகளும், இன்ன பரிசு என்று காட்டினாள் - இத்தன்மையுடையன என்று தமயந்தி உணருமாறு சுட்டிக் காட்டிக் கூறுவாளாயினாள்.

(க - ரு.) இயற்கையழகுள்ள பெண்ணொருத்தி தமயந்திக்கு அரசர்களின் பெயர், குலம், நாடு முதலியவற்றைச் சுட்டிக் காட்டிக் கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) இயல் அணங்கு என்பதற்குக் கலைமகள் என்று பொருள் கூறுவாருமுளர். இயல் : இயற்கை. அணி ஆடை முதலியவற்றால் செயற்கைப் புனைவு புனைந்தவளல்லள், இயல்பாகவே பேரழகுள்ளவள் என்பதை உணர்த்தி நிற்பதற்கு 'இயல் அணங்கு' என்றார். 'தனிக்கொடி'-ஒப்பற்ற குலக்கொடி போல்வாள் என்றலுமாம். கண்ணகியாரை, 'மாநாய்கன் குலக் கொம்பர்' என்றார் இளங்கோவடிகளும்.[1] சேடி ஒருத்தி சுயம்வர மண்டபத்தில் வந்து குழுமியிருக்கும் அரசர்களையெலலாம் நன்கு தெரிந்துகொண்டு, தமயந்திக்கு இன்னார் இத்தன்மையர் என்று கூறி, அவளும் அறிந்துகொண்டால அவர்களுள் உருவும் திருவும் குலனும் குணனும் தனக்கு ஒத்த தன்மையுடைய ஒரு வேந்தனை மணமாலை சூட்ட ஒருப்படுவாள் என எண்ணி வீமவேந்தன் ஆணையால் பெண்ணொருத்தியை விடுத்துத் தமயந்திக்கு விளக்கிக் கூறுமாறு எற்படுத்தி, அவள் ஒவ்வொருவர் நிலைகளையும் கூறினாள் என்க காட்டுதல் - சுட்டிக் காட்டிக் கூறுதல். இனிமேற் காட்டமுற்படுவதைக் 'காட்டினாள்' என்றது, இயல்பாக வந்த கால வழுவமைதி. (கஙஙு)

1. சிலப்பதி. க : உரு.

சேடி, தமயந்திக்குச் சோழநாட்டு அரசனைக் காட்டுதல்

கசுக. பொன்னி அமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவும் திருநாடன்—பொன்னிற்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரில் துன்னார்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண்.

(இ - ள்.) பொன்னின் சுணங்கு அவிழ்ந்த பூண்முலையாய் - பொன்னிறம் போன்ற தேமல் படர்ந்த அணிகளணிந்துள்ள கொங்கையாய், சூழ் அமரில் - நெருங்கிச் செய்கின்ற போரில், துன்னார் கணம் கவிழ்ந்த வேலன் இவன் - பகைவர் கூட்டங்கள் (தலை) வணங்குதற்குக் காரணமாகக் கொண்ட வேலேந்தியவனாகிய இவ்வேந்தன், பொன்னி அமுதப் புதுக்கொழுந்து-காவிரியாற்றின் புதுப்பெருக்கு நீரோட்டமானது, பூங்கமுகின் சென்னி தடவும் திருநாடன் - பூங்கொத்தையுடைய கமுகினுடைய மேலிடம்வரை சென்றேறும் அழகிய சோழ நாட்டுக்குரிய வேந்தனாகிய சோழ மன்னன், காண் - (நீ) அறிந்துகொள்வாயாக.

(க - து.) சுணங்கவிழ்ந்த கொங்கையுடைய தமயந்தியே! இங்கின்ற வேந்தன் காவிரியாறு பெருக்கெடுத்துக் கமுகின் தலைவரை உயர்ந்தோடும் நீர்வள மிக்க சோழ நாட்டுக்குரிய சோழமன்னன் காண் என்றாள் என்பதாம்.

(வி - ரை.) காவிரிநதி, நீர்ப் பெருக்கெடுத்தோடி, அடுத்த வயல் குளம் ஏரி முதலியவற்றை நிரப்பி, வேலியாயிரம் விளையுட்டாக்கி நாடெல்லாம் பாதுகாக்கும் பண்புடையதாக மிளிர்தலின், அதன் நீரின் செழுமைவளம் - வற்றாது பெருகி நிற்கும் நிலை - இனிமை குளிர்மை செம்மை வண்மை முதலியன தோன்ற - அந் நாட்டுக்குரியவன் என்பதை அறியப் 'பொன்னி அமுத...நீர்நாடன் என்றார். கரிகாற் சோழன் பெருமையும் அவன்றன் வெற்றிப் பெருமையும் விளக்கி நூலாக அணி செய்த புலவர் பெருமகனார் கடியலூர் உருத்திரங்கண்ணனார், அவன்வேல், பகைவர்கட்குக் கொடுந்துன்பம விளைக்கும் கொடுமை மிக்கதெனவும், அவன் செங்கோல் முறைமை, நாட்டு மக்கட்கு நலஞ்செய்து தண்ணளி சுரக்கும் ஈரமுடையதெனவும் அமைத்து, தலைவன் சென்ற பாலைநிலப் பெருவழி வெம்மைத்துன்பத்தையும் தலைவியின் காதற்கனிவின் தண்மை இன்பத்தையும் உவமமாக ஆக்கி,

"[1]வேலினும் வெய்ய கானம் அவன்
கோலினும் தண்ணிய தடமென் தோளே.'

1. பட்டினப்பாலை: ௩00-க.

என்று பட்டினப் பாலையிற் கூறிய தொப்ப இவர், சோழ வேந்தனைச் சேடி சுட்டிக் காட்டியதாக அமைத்த இத்தொடரில் 'துன்னார், கணங்கவிழ்ந்த வேலன்' என்றார்.

"[1] காலனும் காலம் பார்க்கும் பாராது
வேலீண்டு தானை விழுமியோர்'

என்று பிறரும் வேலையே சிறப்பித்துக் கூறுதலும் அறிக. (கசஎ)

சேடி, தமயந்திக்குப் பாண்டி நாட்டு மன்னனைக் காட்டுதல்

கசஉ. போர்வாய் வடிவேலால் போழப் படாதோரும்
சூர்வாய் மதரரிக்கண் தோகாய்கேள்-பார்வாய்ப்
பருத்ததோர் மால்வரையைப் பண்டோருகால்
திரித்ததகோ இங்கிருந்த சேய். [சென்டால்

(இ - ள்.) போர்வாய் வடிவேலால் - போர்க்களத்தில் கூர்மை பொருந்திய வேற்படையினால், போழப் படாதோரும் - பிளக்கவொண்ணாத வீரர்களும், சூர்வாய் மதர் அரிக்கண் தோகாய் - அச்சங்கொள்ளுமாறு செய்கின்ற மதர்த்த செவ்வரியோடிய கண்களையுடைய மயில்போன்றாய்!, கேள் - நான் கூறுவதைக் கேட்பாயாக, பார்வாய்-இம் மண்ணுலகில், பருத்தது ஓர் மால் வரையை - பருத்து ஒப்புயர்வற்றதாய் இருக்கின்ற நீண்ட பொன்மலையை, பண்டு ஒருகால் - முன் ஒரு காலத்தில், செண்டால் திரித்த கோ - செண்டாலடித்து நிலைபெயரச் செய்த (பாண்டி) மன்னனுவான், இங்கு இருந்த சேய் - இதோ இங்கு வீற்றிருக்கும் இவ்விளங்குமரன்.

(க - ரு) வீரர்களையும் அஞ்சச் செய்கின்ற இரேகை படர்ந்த கண்களையுடையாய்! இங்கு வீற்றிருப்போன், பொன்மலையைச் செண்டால் அடித்து நிலைகலங்கச் செய்த பாண்டி மன்னனுவான் என்பதாம்.

(வி - ரை.) வீரர்கள், யாருக்கும் அஞ்சாத நெஞ்சத் திண்மை படைத்தவர். அவர்களும் தமயந்தியின் கட்பார்வைக்கு அஞ்சுவர் என்றது, காதலாற் கலக்கமுறும் நிலையை. எனவே, தமயந்தியின் கண்பார்வை ஏற்றத்தைக் கூறியவாறும். சூர் - அச்சம். உலகத்திலேயே சிறந்த பெரிய மலை, இமயம். அதனையும் செண்டால் அடித்து நிலைகுலையச் செய்த பெருமை பாண்டி மன்

1. புறம்: சக.

னுக்குரியது. ஒருவன் செய்த செயற்கருஞ் செயலை, அவன் வழிவந்தார் பிறர்க்கும் ஏற்றிக் கூறுதல் உலகியன் முறை. அம் முறைபற்றிப் பாண்டியர் வழித்தோன்றிய பாண்டிய மன்னனை 'மால்வரையை.....செண்டால் திரித்தகோ' என்றார். செண்டால் என்பதில் மூன்றும் வேற்றுமை ஆல் உருபு கருவிப் பொருளில் வந்தது மேய் : முருகவேளை யொத்தவன் என்றலுமாம் செண்டு - செண்டு போன்ற ஒருவகைப் போர்க்கருவி. (கஙரு)

சேடி, தமயந்திக்குச் சேரநாட்டு மன்னனைக் காட்டல்

கசா௬. வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போல்
குன்றருவி பாயும் குடநாடன்—நின்றபுகழ்
மாதே இவன்கண்டாய் மானத் தனிக்கோடியின்
மீதே சிலைஉயர்த்த வேந்து.

(இ - ள்.) நின்றபுகழ் மாதே - நிலைபெற்ற புகழையுடைய பெண்ணே !, இவன் - இவ்வேந்தன், வென்றி நிலமடந்தை மென் முலைமேல் - வெற்றி பொருந்திய நிலமகளின் மெல்லிய கொங்கைகளின் மேலுள்ள, வெண்துகில்போல் - வெண்மையாகிய ஆடையைப் போல, குன்று அருவி பாயும் குடநாடன் - மலையினின்றும் அருவிநீர் பாய்ந்தோடுகின்ற மேற்குநாட்டரசனாகிய, மானத் தனி கொடியின்மீது - பெருமை பொருந்திய ஒப்பற்ற தன் கொடியாடையின்மேல், சிலை உயர்த்த வேந்து - விற்குறி (எழுதி) யேற்றிய சேர மன்னனாவான், கண்டாய் - அறிந்துகொள்க.

(ந - து.) நிலையான புகழுடைய மாதே! இந்நின்றவன், தன் கொடியில் விற்குறி எழுதி உயர்த்திய மேற்கு நாட்டுக்குரியனான சேர மன்னனாவான் என்பதாம்.

(வி - ரை.) வென்றி - வெற்றி : மெலித்தல் விகாரம். நிலமகளுக்கு வென்றியாவது, எல்லாவுயிர்களையும் தன்னகத்தே தாங்கிப் பகையும் நோதுமலுமின்றி நடுநின்று பல்வகை வளங்களும் தந்து நல்லோர்க்கு இடனாக இருந்து பாதுகாத்தல். இதன் பெருமையை விளக்கவே ஔவையாரும்,

[1]'நாடா கொன்றோ காடா கொன்றோ
அவலா கொன்றோ மிசையா கொன்றோ
எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே.'

என நிலத்தை வாழ்த்தியதூஉம் காண்க.

---

1. புறம் : கஅ௭.

சேரநாட்டுக்கு மலைநாடென்றே ஒரு பெயரும் உண்டு. ஆகலான், மலையினின்றும் அருவி பாய்ந்தோடி வளம் பெருக்கும் பெருமையுடையது. அருவிநீர் பெருகி வழிந்தோடுவது நிலமகள் கொங்கைமேற் போர்த்துள்ள வெண்ணிற ஆடைபோன்று தோற்றமளிக்கின்றது. அதனைக் கண்ணுறுவார்க்கு அஃது மாறா இன்பூட்டி மகிழ்வித்தலின், அதனைக் கற்பார மனக்கண் கண்டு களிதுளும்புமாறு 'வெண்துகில்போல் குன்றருவி பாயும் குடநாடன்' என்றார். இவ்வாறே இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனாரும்,

> [1]"மணிமலைப் பணைத்தோள் மாநில மடந்தை
> அணிமுலைத் துயல்வரூஉம் ஆரம் போலச்
> செல்புனல்.'

என்றதும் இக் கருத்தோடொத்த தாதலை ஓர்க.

அருவியின் வெண்ணிறத்தையும் அது பல்வகைநிறச் செடி கொடி முதலியவற்றையும் அரித்துக்கொண்டு ஓடுகின்ற காட்சியைக் கண்ட நக்கீரரும், [2]"வேறுபல் துகிலின் நுடங்கி' என்றார்.

சிலை - வில்: அதன் உருவுக்கு ஆகுபெயராக வந்தது. உயர்த்தல் - மேலேயெடுத்து நிறுத்துதல். சேரமன்னன் கொடியின் சிறப்பைக் கூறியவாறும். இதனை, [3]"வானவரும், வில்லெழுதி வாழ்வார் விசும்பு' என்றார், முத்தொள்ளாயிரத்தும் (கநுசு)

### சேடி, தமயந்திக்கு யதுகுல மன்னனைக் காட்டல்

கசுச. ஆழிவடி யம்பலம்ப நின்றானும் அன்றொருகால்
ஏழிசைநூற் சங்கத் திருந்தானும்—நீள்விசும்பின்
நற்றேவர் தூத நடந்தானும் பாரதப்போர்
செற்றானும் கண்டாயிச் சேய்.

(இ - ள்.) ஆழி வடி அம்பு அலம்ப நின்றானும் - கடலிற் கூரிய அம்பினைக் கழுவும்படி நின்றவனும், அன்று ஒருகால் - முன்னொருகாலத்தில், எழ்இசை நூல் சங்கத்து இருந்தானும் - ஏழுவகை இசைகளையுடைய பேரவையில் தலைவனாக வீற்றிருந்தவனும், நீள்விசும்பின் நல்தேவர் தூது நடந்தானும் - நீண்ட வானவர் அவதாரமான பாண்டவர்கட்குத் தூதாக நடந்து

1. சிறுபாண். க - ங. 2. திருமுருகு : உகசு.
3. முத்தொள் : ககஉ.

சென்றவனும், பாரதப்போர் செற்றானும் - பாரதப் போரை நடக்கச்செய்து முடித்தவனும் ஆனவன், இச்சேய் கண்டாய் - இவ்வரசிளங்குமரனே ஆவான்.

(க - து.) 'ஏ! பெண்ணரசி! இங்கு வீற்றிருப்போன், தன் கூரிய அம்பைக் கடலில் அலம்பியோனும், இசைச் சங்கத்திற்குத் தலைமையோனும், பாண்டவர்க்குத் தூது சென்றோனும், பாரதப்போரை வென்றவனுமாகிய யதுகுல வேந்தனவான்; இவனைக் காண்' என்றாள் என்பதாம்.

(வி - ரை) இங்குக் கூறப்பெற்றவன் வடமதுரையை ஆண்டு வந்த யதுகுலத் தரசனாவான். ஆழிவடியம்பலம்ப நின்றவனும் எழிசைநூற் சங்கத்திருந்தவனும் யதுகுலத்தானாகிய ஹைஹயன் மரபில் தோன்றிய கார்த்தவீரியார்ச்சுனன் ஆவன்; இவன இராவணனைச் சிறைப்படுத்தி இருந்தபோது அவனை மீட்கவந்த அரக்கர்களைக் கொன்று கடலிலே அம்புகளைக் கழுவினனென்றும், மற்றொரு காலத்தில் நாரதமுனிக்கும் விசுவாவசு எனனும் கந்தருவனுக்கும் இசையில் வாது நேர்ந்தபோது, அவ்விசைச்சங்கத்தில் தலைவனாக இருந்தானென்றும் கூறுப. நீள்விசும்பின் நற்றேவர் தூது நடந்தவனும் பாரதபபோர் செற்றவனும் கண்ணபிரானவன். இதனைப் [1]'பஞ்சவர்க்குத் தூது நடந்தானை' எனச் சிலப்பதிகாரத்தில் கூறுவதும் காண்க. அக் கார்த்தவீரியார்ச்சுனன் கண்ணபிரான் வழித்தோன்றலாக இருக்கின்றானதலான் இவ் யது வேந்தனுக்கு அவாகள் செய்த அரும்பெறற் செயல்களையெல்லாம் இவன்மேல் ஏற்றிக் கூறப்பெற்றது.

இதற்குப் பிறரெல்லாம் இச்செயல்கள் யாவும் பாண்டி மன்னனுக்கு ஏற்றிக்கூறிப் பொருள் விரிப்பர். பாண்டியனைக் குறித்துப், 'போர்வாய் வடிவேலால்' (கடு) என்று தொடங்கும் பாட்டில் கூறியிருத்தலானும் அதற்கு அடுத்தபாட்டில் சேர நாட்டு மன்னனைக் குறித்துக் கூறியிருத்தலானும் அதன்பின் மீண்டும் பாண்டியனைக் கூறினனென்றல் 'கூறியது கூறல்' என்னும் குற்றத்தின்பாற்படுதலானும் அவ்வாறு பொருள் கூறல் பொருந்தாமை யறிக.

நின்றான் இருந்தான் நடந்தான் சென்றான் என்னும் இறந்த கால வினையாலணையும் பெயர்கள் சேய என்னும் பெயர்ப் பயனிலை கொண்டு முடிந்தன. (கஙஎ)

1. சிலப்பதி. கஎ, படர்க்கை : ங.

சேடி, தமயந்திக்குக் குருநில மன்னனைக் காட்டல்

கசஂ௫. தெரியில் இவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலையென் றஞ்சி—இரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புள் தாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன்.

(இ - ள்.) தெரியில் இவன் - நீ தெரிந்துகொள்ள விரும்பினால் இவ்வரசன், செம் கழுநீர் மொட்டை - செங்குவளை அரும்பை, அரவின் பசும் தலை என்று அஞ்சி - பாம்பின் பசிய தலையென்றெண்ணி அச்சங்கொண்டு, பிள்ளைக் குருகு இரங்க - நாரையின் குஞ்சுகள் வாய்விட்டுக் கதற, பேதை புள் இரவு எல்லாம் தாலாட்டும் - (தாயாகிய) பெண்ணாரையானவை இரவுப் பொழுது எல்லாம் தாலாட்டிக்கொண்டிருக்கின்ற, வள்ளை குரு நாடர் மன் - வள்ளைக் கொடிகள் படர்ந்திருக்கின்ற (மருதவேலி சூழ்ந்த வளப்பமிக்க) குருநாட்டில் வாழ்வோர்க்கு அரசனாவான், கண்டாய் - நீ அறிவாயாக.

(க - ரை.) 'தமயந்தி! இவனை நீ அறிய விரும்பினால், இவன், செங்கழுநீர் அரும்பைப் பாம்பின் தலையென்றஞ்சிக் கதறுகின்ற குஞ்சுகளுக்குத் தாய் நாரை அதை நீக்க இரவெல்லாம் தாலாட்டுகின்ற வளமுள்ள மருத நிலம் சூழ்ந்த குருநாட்டு மக்களுக்கு அரசனாவான்; நீ அறிவாயாக' என்பதாம்.

(வி - ரை.) செங்கழுநீர் மொட்டு - செங்குவளையின் மலரும் பருவத்திலுள்ள பேரரும்பு. அது நீர்க்குமேல் தோன்றுவதைத் தம் பிள்ளைமைத் தன்மையால் அரவென மருண்டு அஞ்சி நாரைக் குஞ்சுகள் கத்த, அதை அடக்கி அக்குஞ்சுகளைத் தூங்க வைத்தற்குத் தாய்நாரைகள் இரவுமுழுதும் தாலாட்டுந் தன்மையுடையது குருநாடு எனவே, மருதநிலஞ்சூழ்ந்த நீர்வளமிக்க நாடு என அவன் நாட்டின் பெருமையைச் சிறப்பித்தவாறும். அதனான் நாடு விளைவுமிக்க தென்பதையும் சுட்டிக் காட்டியதுமாம். என்னை?

[1]"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு."

என்பராகலானென்க.

1. திருக்குறள். எஙஉக.

'பேதைப்புள்' என்பதற்கு அறியும் இயற்கையில்லாத தாய்ப் பறவை யென்றும் பொருள் கொள்ளலாம். தாலாட்டுதல்: குழந்தைகட்குத் தாய்மார் தம் இனிய குரலால் பாடி மகிழ்விக்கும் பாட்டு. இங்கும் தாய்மைப் பேறெய்தி நின்ற நாரைகள், தம் குழந்தைகளாகிய குஞ்சுகள் அச்சம் நீங்கி உவப்புறத் தாலாட்டிய தென்க. 'தாலாட்டும் வள்ளைக் குருநாடர் மன்' என்றதை உள்ளுறை உவமமாகக் கொண்டு குடிகட்குத் தாய் போன்று பிறரால் அச்சமின்றிக் காக்கும் சிறந்த தண்ணளியுடைய மன்னன் என உரைத்தலுமாம். [1]'தாயொக்கும் அன்பில்' என்றார் கம்பநாடரும், அரசன் சிறப்பைக் குறித்தற்கு. (கூ௮)

### சேடி, தமயந்திக்கு மத்திர நாட்டு மன்னனைக் காட்டல்

கசகூ. தேமருதார்க் காளை இவன்கண்டாய் செம்மலர்மேல்
காமருசங் கீன்ற கதிர்முத்தைத்—தாமரைதன்
பத்திரத்தால் ஏற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன்.

(இ - ள்.) தேமரு தார்க் காளை இவன் - தேன் தங்கிய மலர் மாலை யணிந்த இளைஞனாகிய இம்மன்னன், செம் மலர்மேல் - செந்தாமரை மலர்களின்மீது, காமரு சங்கு ஈன்ற கதிர்முத்தை - அழகிய சங்கினங்கள் பெற்ற ஒளிபொருந்திய முத்துக்களை, தாமரை தன் பத்திரத்தால் ஏற்கும் - தாமரைகள் (அவை காற்றால் அலைப்புண்டு நீரில் வீழும்போது வீழாதவாறு தன்னைகளாகிய) இலைகளால் தாங்கிக்கொள்ளுகின்ற, படுகர் பழனம் சூழ் - பள்ளத்தாக்கான வயல்கள் சூழ்ந்துள்ள, மத்திரத்தார் கோமான் மகன் - மத்திரநாட்டு அரசன் மகனாகிய வேந்தன், கண்டாய் - அறிந்துகொள்வாயாக.

(க - து.) '(ஏ! நாணின் பாவாய்!) இவ்வேந்தன், செந்தாமரை மலரில் சங்குகள் ஈன்ற வெண்முத்துக்களைத் தாங்கிக்கொள்ளுகின்ற இலைகளையுடைய தாமரை படர்ந்த மத்திரநாட்டார்க்கு அரசன் மகனாவான்' என்பதாம்.

(வி - ரை) தேன் மருவுதார், என்பது தேமருதார் என இடையிலுள்ள எழுத்துக்கள் குறைந்து நின்றன. காளை: உவம ஆகுபெயர். சங்குகள் தாமரை மலரில் ஈன்றுள்ள முத்துக்கள் காற்றால் அலைப்புண்டபோது அவைகள் கீழே வீழாவாறு இலைகள்

1. கம்பராமா. அரசியல்:௪.

தாங்கிக்கொள்வ தென்பது, தாமரை, நீர்வளத்தானும் நிலவளத் தானும் செழிப்புறப் படர்ந்து நீரே தெரியாவாறு இலைகள் மூடிக் கிடத்தலால் என்க. நீரே தெரியாமல் இலைகளும் பூக்களும் செறிந்த தன்மையைப் [1]"புனல்யா றன்றிது பூம்புனல் யாறெனா" என்றார் பிறரும். இதிலும் உள்ளுறை பொருளாக அவன் நாட்டு மக்கட்கு இடுக்கண் நேர்ந்த காலை இடுக்கணை நீக்கித் தாங்கிக் காக்கும் அறக்கருணையுள்ளான் என்பதை உணர்த்தி நின்றது.

காமரு: காமர் என்பது உகரச் சாரியை பெற்றது. முத்துக்கள் இருபது இடங்களில் பிறப்பதாகத் தொல்லோர் கண்டறிந்துணர்த்திய உண்மை அவ்விருபது பொருள்களுள் சங்கும் ஒன்றாதலான், 'சங்கீன்ற கதிர்முத்' தென்றார். பத்திரம் - இலை. படுகர் - நீர் தேங்கிக்கிடக்கும் பள்ளங்கள். மத்திர நாட்டுக்குரிய மக்களை மத்திரத்தார் என்றார், ஊரிலுள்ள மக்களை ஊரார் என்பதுபோல. [2]'ஊரவர் கௌவை எருவாக' என்ற இடத்தும் காண்க. கோமான் மகன் - தொன்றுதொட்டு வருகின்ற அவன் றன் குலப்பெருமையைச் சுட்டி நின்றது. மகன் - புதல்வன்; அல்லது சிறந்தவன் என்று கோடலுமாம். மகன் என்பது சிறந்தவன் என்னும் பொருள் தருதலை [3]'சோலின், அருமை யழித்த மகன்' என்னும் நான்மணிக் கடிகையாலும் உணர்க.

(கரு௬)

சேடி, தமயந்திக்கு மச்ச நாட்டு மன்னனைக் காட்டல்

கசஎ அஞ்சாயல் மானே இவன்கண்டாய் ஆலைவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த —செஞ்சாலிப்
பச்சைத்தாள் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சத்தார் கோமான் மகன்.

(இ - ள்.) அம் சாயல் மானே - அழகிய சாயலையுடைய மான் போல்வாளே, இவன் - இவ் வேந்தன், ஆலைவாய் வெம் சாறு பாய - ஆலைப் பொறியிடத்துப் பிழிந்தெடுத்த யாவராலும் விரும்பப்படும் கருப்பஞ்சாறு பாய்வதனால் விளைந்து எழுந்த செஞ்சாலி பச்சைத்தாள் - வளர்ந்து ஓங்கிய செந்நெற்பயிர் களின் பசிய நிறத் தண்டுகளினின்றும், மேதி கடைவாயின் பால் ஒழுகும் - எருமைகளின் கடைவாயில் நின்றும் பாலானது ஒழுகு கின்ற சிறப்புடைத்தான, மச்சத்தார் கோமான் மகன் - மச்ச

1. சிலப். கரு : கஎச. 2. திருக்குறள். ககசஎ.
2. நான்மணிக்கடிகை, க.

நாட்டாருடைய வேந்தர் மகனவன், கண்டாய் - அறிந்து கொள்வாயாக.

(க - து.) 'ஏ அம்சாயல் மானே! எருமைகள் வாயினின்றும் பாலொழுகுமாறு வளர்ந்துள்ள செஞ்சாலியின் தாள்களைக் கடித்துக் குதட்டுகின்ற வளமிக்க மச்சநாட்டுக்கு மன்னன் ஆவான்' என்பதாம்.

(வி - ரை.) அம்சாயல் - தோற்றத்தின் அழகு; அல்லது அழகிய மென்மை எனலுமாம். மான் : மான்போன்ற மருட்சியையுடைய தமயந்தியைக் குறித்தலால் உவமை ஆகுபெயர். வெம்மை - விருப்பம். கருப்பஞ்சாறே நீராகப் பாய்ந்தோடி நெற்பயிர்களை வளர்க்கும் என்பதனால் அந்நாடு நிலவளனும் நீர்வளனும் மிக்கதென்பது போதரும். கருப்பஞ்சாற்றின் வளங்கொண்டு வளர்ந்த நெற்பயிர்களை எருமை மாடுகள் கடிக்குங்கால் அதிலிருந்து பால் ஒழுகி ஓடுகின்றதெனவே நெல்லின் செழுமையை உணர்த்தியவாறும்.

மச்சத்தார் - மச்ச நாட்டில் வாழும் மக்கள். கோமான் - வேந்தன். வாய்க்கடை : கடைவாயெனச் சொன்னிலைமாறிய இலக்கணப் போலி. (கசO)

சேடி, தமயந்திக்கு அவந்தி நாட்டு மன்னனைக் காட்டல்

கசஉ. வண்ணக் குவளை மலர்வெளவி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்தப் பைங்குவளை—உண்ணா
தருங்கடா நிற்கும் அவந்திநா டாளும்
இருங்கடா யானை இவன்.

(இ - ள்.) இவன் - இவ்வேந்தன், அரும் கடா வண்ணக் குவளை மலர் வெளவி - அருமையாகிய எருமைக் கடாக்கள் அழகிய குவளைமலர்களைப் பற்றிக் கெளவி, வண்டு எடுத்த பண்ணில் செவி வைத்து - அதிலுள்ள வண்டுகள் அப்போது பாடுகின்ற இசைப் பாடலைக் காதுகொடுத்துக் கேட்டு, அப்பைங்குவளை உண்ணாது நிற்கும் - அந்தப் பசிய குவளையை உண்ணாமல் (அப்பண்ணிசைக்கு மயங்கி) நிற்கின்ற, அவந்தி நாடு ஆளும் - அவந்தி நாட்டை ஆட்சி புரிகின்ற, இரும்கடா யானை - பெரிய ஆண் யானையை ஒத்தவனாவான்; (காண்பாயாக).

(க - து.) 'பெண்ணருங்கலமே! இவ்வேந்தன் குவளை மலரைக் கெளவி யெடுத்த ஆண் எருமைகள் அதிலுள்ள

வண்டுகளின் பண்ணிசை கேட்டு அம்மலர்களை உண்ணாது நிற்கும் வளமுடைய அவந்திநாட்டு மன்னனாவான்' என்பதாம்.

(வி - ரை.) வண்ணக்குவளை : வண்ணத்தையுடைய குவளையென விரிதலால் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. ஆண் எருமைகள் உண்ணுதற்குப் பறித்தெடுத்த குவளைமலர்களில் தேனுண்ணத் தங்கியிருந்த வண்டுகளின் பாட்டொலி கேட்டு மயங்கி உண்ணாது நிற்கும் அவந்திநாடு என்பதனால் அவந்திநாட்டின் நீர்வளம் நிலவளம் செல்வவளம் முதலியவற்றை விளக்கிக் கூறியவாறும். எடுத்த : பண் பாடுங்கால் உயர்த்துப் பாடுதலும் தாழ்த்திப் பாடுதலும் சமனிலையிற் பாடுதலும் இசை பாடுவாரின் இயல்பு. இதனை ஆரோகணம் அவரோகணம் சமம் என, வடமொழியாளர் கூறுவர். எருமையின் வாய்க்குள் அகப்பட்ட குவளைமலரை நெருக்குங்கால் அதிலிருந்த வண்டுகள் மேல் இசை எடுத்துப் பாடத் தொடங்கிற்றென்பதாம். ஐயறிவு கொண்ட எருமைகளே அந்நாட்டில் இசைக்கு மயங்குமென்றதனால் அந்நாட்டு மக்கள், கல்வி கேள்வி மிக்கார் என்பதைக் குறிப்பால் குறித்தவாறும். (கசக)

சேடி, தமயந்திக்குப் பாஞ்சால மன்னனைக் காட்டல்

கசஉ. விடக்கதிர்வேல் காளை இவன்கண்டாய் மீனின்
தொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டில் மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன்.

(இ - ள்.) விடக் கதிர்வேல் காளை இவன் - நஞ்சு பொருந்திய ஒளியுடைய வேலேந்திய காளைபோன்றவனாகிய இம்மன்னன், மீனின் தொடக்கு போய் ஒழிய நிமிர்ந்த தூண்டில் - மீன் பிடித்தற்கு மீன்பிடிப்போர் கோத்திருந்த ஈங்கூழ் முதலிய இரைகள் போய்விட்டதனால் மேலோங்கிச் சென்ற தூண்டில் முட்கோல், மடல்கமுகின் செம்தோடு பீறி - மடலையுடைய கமுக மரத்தின் வளமுள்ள மலரிதழ்களைக் கிழிக்க, தேன் - (அதிலிருந்து வழிந்த) தேனானது, செந்நெல் பசும் தோட்டில் வந்து ஓடு - செந்நெற்பயிர்களின் பசுந்தாளின் வழியாக வந்து விழுந்து கீழிறங்குகின்ற நீர்வளமிக்க, பாஞ்சாலர் மன் - பாஞ்சால நாட்டு மக்கட்கு வேந்தனாவான், கண்டாய் - அறிந்துகொள்வாயாக.

(க - து.) 'வீமன்குல விளக்கே! இவ்வேந்தன், தூண்டில் முள்ளில் மாட்டியிருந்த இரை போதலால்

விரைந்து மேலெழுந்த அக்கோலின் முள், கமுகின் பாளை யைக் கீற அதிலுள்ள தேன், செந்நெற்பயிரின் தாள் களின்மேல் வழிந்தோடுகின்ற பாஞ்சால நாட்டு வேந்தனு வான்' என்பதாம்.

(வி - ரை.) விடம் : நஞ்சு. நஞ்சின் தன்மை அதனை உண் டாரை உயிர் மாய்ப்பது. அதுபோல் வேலும் தன்னை எதிர்த்தா ரைக் கொன்றொழிக்கும் தன்மையுடையதாதலால், 'விடக்கதிர் வேல்' என்றார். காளை போல்வானைக் காளையென்றது ஆகுபெயர். தாண்டிற்கோலின் முட்பட்டுக் கமுக மடலினின்றும் தேன் வழிந்து நெற்பயிர்களின் தாளில் பாய்ந்தோடுமென்றதனால் நாட் டின் நீர்வளனும் நிலவளனும் வானம் வறக்காது மழை வளந் தரும் அவன்றன் செங்கோற் சிறப்பும் கொற்றமும் கூறிய வாறும். மழை பெய்தற்கும் நாடு வளத்திற்கும் காரணம் செங் கோலே என்பதனை,

[1] "கோனிலை திரிந்திடிற் கோள்நிலை திரியும்
கோள்நிலை திரிந்திடின் மாரிவறங் கூரும்
மாரி வறங்கூரின் மன்னுயி ரில்லை
மன்னுயிர் எல்லாம் மண்ணாள் வேந்தன்
தன்னுயிர் என்னும் தகுதியின் றாகும்.'

என்னும் மணிமேகலை அடிகளானும்,

[2] "இயல்புளிக் கோலோச்சும் மன்னவன் நாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.'

என்னும் தேவர் திருமறையானும் உணர்க. (கசஉ)

சேடி, தமயந்திக்குக் கோசல நாட்டு மன்னனைக் காட்டல்

கருo. அன்னம் துயிலெழுப்ப அந்தா மரைவயலில்
சேந்நெல் அரிவார் சினையாமை—வன்முதுகில்
கூனிரும்பு தீட்டும் குலக்கோ சலநாடன்
தேனிருந்த சொல்லாயிச் சேய்.

(இ - ள்.) தேன் இருந்த சொல்லாய் - தேனின் இனிமை தங்கிய சொற்களையுடைய தமயந்தியே !, இச் சேய் - இவ்வரசிளங்

1. மணிமேகலை, எ : அ-கஉ. 2. திருக்குறள், ருசரு.

குமரன், அன்னம் துயில் எழுப்ப - அன்னப் பறவையானது (காலையில்) தம்மைத் தூக்கத்தினின்று எழும்படி ஒலிசெய்ய, (அதனால் எழுந்துசென்று) அம் தாமரை வயலில் - அழகிய தாமரைகள் படர்ந்துள்ள வயலில், செம்நெல் அரிவார் - செந்நெற் கதிர்களை அறுக்கின்றவர்கள், சினை ஆமை வன்முதுகில் - கருக்கொண்டிருக்கும் ஆமையின் வலிய முதுகு ஓட்டில், கூன் இரும்பு தீட்டும் - வளைவான அரிவாட்களைத் தீட்டுகின்ற, குலக் கோசல நாடன் - சிறப்புமிக்க கோசலநாட்டு வேந்தனுவன்.

(த - நு.) தேனினும் இனிக்கும் இன்சொல்லாய்! அன்னப்பறவைகள் விடியற்காலையில் தம்மைத் துயி லெழுப்ப எழுந்துசென்று நெல்லரிவோர் தம் அரிவாள் களைக் கருக்கொண்ட ஆமைகளின் முதுகோட்டின்மீது தீட்டுகின்ற வளம்பொருந்திய கோசலநாட்டு வேந்தன் இவன் என்பதாம்.

(வி - ரை.) விளைந்து மடிந்துகிடக்கும் செந்நெற்கதிர்களை வைகறைப்போதில் பனிப்பதத்தில் அறுப்பதற்கு வயற்பக்கங் களில் படுத்துறங்குகின்றவர்களை, அன்னப்பறவைகள் ஒலி செய்து எழச் செய்து ஆயத்தப்படுத்துகின்றன. எனவே, நீர்வளத் தால் என்றும் மாறாது வாழ்கின்ற நீர்வாழ் பறவை முதலிய இனங் களைக் கொண்டது கோசலநாடு என நாட்டின் சிறப்பைக் கூறி, மன்னன் பெருமையைச் சேடி தமயந்திக்கு உணர்த்தியவாறும். சினையாமை: சூல் கொண்டுள்ள ஆமை. கூன் இரும்பு - வளை வுள்ள இரும்பு எனக் கருக்கு அரிவாளை உணர்த்தலால் கருவி ஆகுபெயர். ஆமை முதுகில் அரிவாள் தீட்டுதலை,

> [1]"நெல்லரி தொழுவர் கூர்வாள் மழுங்கின்
> பின்னை மறத்தோடு அரியக்கல் செத்து
> அள்ளல் யாமைக் கூன்புறத் துரிஞ்சும்
> நெல்லமல் புரவின் இலங்கை."

எனப் புறத்தும் வருதல் கண்டின்புறுக. வன் முதுகு: பண்புத் தொகை. தேன் அதன் சுவையைக் குறித்தலால் ஆகுபெயர். தேன் இருத்தல்: என்றும் மாறாது சுவையாகத் தேன்போல் இனி மையாகத் தோன்றல். (சுசு)

---

1. புறம்: ருஎக.

சேடி, தமயந்திக்கு மகதநாட்டு மன்னனைக் காட்டல்

கருக. புண்டரிகம் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியும் தெண்ணீர் மகதர்கோன்—எண்திசையில்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னூவம் பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய்

(இ - ள்.) இச் சேய் - இவ்வரசிளங் குமரன், எண் திசையில் போர் வேந்தர் கண்டு அறியா - எட்டுத் திசைகளிலுமுள்ள போரில் வல்லுநரான மன்னர்களும் பார்த்தறியாத, பொன் ஆவம் பின் உடைய தேர்வேந்தன் - பொன்னால் இயன்ற அம்பறாத் தூணியைத் தன் முதுகிற்பூண்ட தேர் ஊர்ந்து செல்கின்ற மன்னனானவன், புண்டரிகம் தீஎரிவபோல் விரிய - செந்தாமரை மலர்கள் நெருப்பு எரிவனபோல் மலர்ந்திருக்க, பூம்புகைபோல் வண்டு இரியும் - அந்நெருப்பிலிருந்து மேலெழுந்து கிளம்பும் புகையைப் போன்று கரியநிற வண்டுக்கூட்டங்கள் பறந்தாடிக்கொண்டிருக்கும், தெள்நீர் மகதர்கோன் - தெளிந்த நீர்வளமுள்ள மகத நாட்டாருடைய வேந்தனாவன், கண்டாய் - காண்பாயாக.

(க - ரை.) 'ஏ கயற்கண்ணி! இங்கின்ற இவர், செந்தாமரை மலர்கள் நெருப்புப் போல் மலர, அதிலிருந்து மேலெழும்பும் புகைபோல் கருநிற வண்டுகள் மேலெழுந்து பறந்து திரிகின்ற நீர்வளமுள்ள மகதநாட்டுக்கு வேந்தனாவான்' என்பதாம்.

(வி - ரை.) புண்டரிகம் - தாமரை: வடசொல். இது பொதுப் பெயராகத் தாமரையைக் குறிக்குமாயினும் 'தீ எரிவ' என்னும் அடையினால் செந்தாமரை யென்று பொருள் கூறப் பட்டது. நீர்ப்பெருக்குள்ள இடங்கள் தோறும் செந்தாமரை படர்ந்து மலர்ந்து கிடப்பதால் அவைகள் காண்பார்க்கு நெருப்பு எரிவனபோல் தோன்றுகின்றன. அவைகளின் தேனை உண்டுகளித்த கரியநிற வண்டுகள் மேலெழுந்து பறந்து திரிவன, அந்நெருப்பில் தோன்றும் புகைக் கூட்டம்போல் காட்சிதந்து இன்பக்கடலில் ஆழ்த்துகின்றன. இவ்வளவுக்குங் காரணமாக நின்றது, நீரின் தண்ணிய வளனன்றோ? அதனை ஆசிரியர் 'தெண்ணீர்' என்ற சொல்லாற் கூறிச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தார். 'தெண்ணீர் வயற்றொண்டை நன்னா' டென்றார் பிறரும்.

"[1]அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ
வெள்ளம் தீப்பட்ட தெனவெரீஇப்—புள்ளினம்தாம்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும் கவ்வை உடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு.'

என்னும் முத்தொள்ளாயிரச் செய்யுளும் செவ்வல்லி மலர்கள் விரிந்த காட்சியை 'வெள்ளம் தீப்பட்டது' என்று கூறியது, இதனோடு ஒப்பவைத்து மகிழற்பாலதா யுள்ளமை காண்க. இவ்வாறே கலிங்கத்துப் பரணியில் காடு பாடியது என்னும் பகுதிக்கண்,

'[2]செந்நெருப்பினைத் தகடு செய்துபார்
செய்த தொகுதும் அச் செய் தரைப் பரப்பு
அந்நெருப்பினில் புகைதிரண்ட தொப்பு
அல்ல தொப்புறு அதனிடைப்புறு.'

என்றதும் இக்கருத்தொடு முழுதும் ஒத்திருத்தல் அறிக.

'போரொளிற் புகலும் புனைகழல் மறவர்' வழித்தோன்றலென விளக்குவாராய் 'போர் வேந்தர் கண்டறியாப் பொன்னாவம் பின்னுடைய...வேந்தன்' என்றார். அவன்றன் புறமுதுகு காட்டிச் செல்லாத வீரத்தை விளக்கிய சிறப்பு மாண்பாக அமைந்துள்ளமை காண்க. பொன் ஆவம் - பொன்னால் தன் வெற்றிப் பெருமிதம் தோன்ற அமைத்தணிந்த அம்புப்புட்டில்.

(கசச)

சேடி, தமயந்திக்கு அங்கநாட்டு அரசனைக் காட்டல்

கருஉ. கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்-வான்கடல்வந்
தந்தோ எனவெடுக்கும் அங்கநா டாளுடையான்
செந்தேன் மொழியாயிச் சேய்.

(இ - ள்.) செம்தேன் மொழியாய் - நல்ல தேன் போன்ற இனிதத சொல்லாளே!, இசேய - இவ்வரசிளங்குமரன், கூன் சங்கின் பிள்ளை - வளையுள்ள சங்குகளின் குஞ்சுகள், பவளக் கொடி கோடு இடறி - பவளக்கொடிக கொம்பினால் தடுக்கப் பெற்று மேலேறிச செல்லவொண்ணாமல், தேன் கழியில் வீழ - தேன் பாய்கின்ற கழிக்கரையிடத்தே தவறி விழுங்கால், வான்

1. முத்தொள் : க. 2. கலிங்கத்துப்பரணி, அஉ.

கடல்வந்து - பெரிய கடல் நெருங்கி வந்து, திரைக்கரத்தால் அந்தோ என எடுக்கும் - அலைகளாகிய தன் கைகளினால் ஐயோ வென்று கதறி இரக்கங்கொண்டு தழுவிக் (கரையில்) எடுத்து விடுகின்ற. அங்கநாடு ஆளுடையான் - அங்கநாட்டை ஆட்சி செலுத்துகின்ற மன்னனாவான்.

(க - ரை) 'தேனென இனிக்குஞ் செஞ்சொல்லாய்! இவ்வரசிளங்குமரன், கூன் சங்கின் இளங்குஞ்சுகள் நடந்து போங்கால் பவளக்கொடி தடுக்கித் தேன்கழியில் விழும் போது கடல் அந்தோ வென்று அலறித் தன் அலைக் கைகளினால் தழுவியெடுத்து விடுகின்ற நெய்தல் நிலஞ் சார்ந்த அங்கநாட்டை ஆளும் மன்னனாவான்' என்பதாம்.

(வி - ரை.) கூன் சங்கு - வளைவான சங்கு. பிள்ளை - இளங் குஞ்சு. அவை குழந்தைப் பருவத்தினவாகலான், தவழ்ந்து செல்லுங்கால் சிறிது மேடான பகுதிகளில் ஏறமுடியாது வீழ்வது இயல்பு. அவைகட்குப் பவளக்கொடி மேடாக இருக்கின்றது. அதை ஏறிக் கடக்கமாட்டாமல் மலர்களிலிருந்து தேன் வடிந்து பாய்கின்ற உப்பங்கழிகளில் விழுந்துவிடுகின்றன. அதைக் கண்ட கடல், குழந்தைமேல் இரக்கங்கொண்டு, 'ஐயோவென்று' பதறி அலறிக்கொண்டு வந்து தன் அலைகளெனும் கைகளினால் தாங்கியெடுத்துக் கரையேற்றிவிட்டுச் செல்கின்றது. அவ்வளவு சிறப்புமிக்க கடல் பக்கத்தே கொண்ட அங்கநாடென நாட்டின் சிறப்பைக் கூறினார். கடற்கரைகளில் சங்கு, நண்டு அவைகளின் குஞ்சுகள் எங்கும் தவழ்ந்துகொண்டு செல்வது இயற்கை; அவை பள்ளங்களில் விழுவதும் இயற்கை; பவளக்கொடிகள் அடம்பங் கொடிகள் முதலியனவும் படர்ந்திருப்பதும் இயற்கை: கடலின் அலைகள் 'ஓ' வென்னும் ஒலியுடன் போவதும் வருவதும் தன்னுள் உள்ளே உள்ள பொருள்களை வெளியே கொணர்தலும் கரையிலுள்ள பொருள்களை உள்ளே கொண்டு செல்வதும் இயற்கை இவ் இயற்கைக் காட்சிகளையெல்லாம் ஒன்றுபடுத்தித் தம் மனத்தகத் தமைத்து உருவக அணியும் தற்குறிப்பேற்ற அணியும் தந்து பிள்ளையைக் காத்தற்குவரும் தாய்மையுள்ளம்படைத்த ஒருவர்போல் அலறிக்கொண்டு வந்து தன் கைகளால் எடுத்து வெளியேற்றி விடுவதுபோல் கரையேற்றியதாகக் குறித்தார்.

கடல் அலைகள் இரைந்துகொண்டு வருதலைக் குழந்தைக்காக இரக்கங்கொண்டு அந்தோவென்று கூறுவதாகவும் அலைகளினால் அக்குஞ்சுகளை ஒதுக்கிக்கொண்டு செல்வது தன் கைகளால் அணைத்தெடுத்துக் காப்பாற்றி வெளிக்கொணர்ந்து விட்டதாகவும் அமைத்த தற்குறிப்பேற்ற அணி மகிழ்வும் இறும்

பூதும் ஊட்டுவதாய்ச் சிறந்து அமைந்திருத்தலை ஓர்க. இதனால் அந்நாடு தாய்மையன்பு சான்றது என இறைச்சி, உள்ளுறை யாகவும் கொள்க. (கசரு)

**சேடி, தமயந்திக்குக் கலிங்கநாட்டு மன்னனைக் காட்டல்**

கருரு. வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப்—புள்ளோடு
வண்டிரியச் செல்லும் மணிநீர்க் கலிங்கர்கோன்
தண்டெரியல் தேர்வேந்தன் தான்.

(இ - ள்.) தண் தெரியல் தேர்வேந்தன் தான் - குளிர்ச்சியுள்ள மலர்மாலையணிந்த தேரூரும் வேந்தனாகிய இவன், மேதிக் குலம் - எருமைக் கூட்டங்கள், வெள்வாளைக் காளைமீன் எழுப்ப - வெண்ணிறம் பொருந்திய வாளை இளமீன்களை (விழுந்து) கிளப்புவதனால் (அவைகள்), கள்வார்ந்த தாமரையின் காடு உழக்கி - தேன் ஒழுகிய தாமரை மலர்களையெல்லாம் கிண்டி, புள்ளோடு வண்டு இரிய செல்லும் - பறவைகளுடன் வண்டுகளும் அஞ்சியோடும்படி பாய்ந்தோடுகின்ற, மணிநீர்க் கலிங்கர்கோன் - மணிபோலும் நிறத்தினையுடைய நீர்வளமுள்ள கலிங்கநாட்டில் வாழ்வார்க்கு வேந்தனாவான்.

(க - து.) '(ஏ கொடியிடையாய்!) இவ்வேந்தன், எருமை இனங்கள் நீரில் விழுந்து வாளைமீன்களைக் கிளப்ப, அவைகள் தாமரைக்காட்டை உழக்கி, வண்டுகளும் பறவைகளும் அஞ்சியோடும்படி பாய்ந்து செல்கின்ற கலிங்க நாட்டுக்கு அரசனாவான்' என்பதாம்.

(வி - ரை.) வெள்வாளை - வெள்ளைநிறம் பொருந்திய வாளைமீன். காளைமீன் - காளைபோன்ற துடிப்புள்ள மீன் என உவமத் தொகையாகக் கொள்ளலுமாம். எழுப்ப: காரணப் பொருட்டாய் வந்த செயவெனெச்சம். தாமரையின் காடு: தாமரை மிகுதி, அஃது இங்கே தாமரை மலரை உணர்த்திற்று; முதலாகுபெயர். புள் - பறவை. வண்டு - வண்டினங்கள். தாமரை மலரில் வாழ்வன பறவைகளும் வண்டினமும் ஆகலான், வாளை மீன் உழக்க அவைகள் அஞ்சிப் பறந்து செல்வவாயின. எனவே, கலிங்க நாட்டு நீர்வளங் குறித்தவாறும். இக்கருத்தோடொப்ப,

[1] 'சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்
ஊர்மடி கங்குலின் நோன்தளை பரிந்து

1. அகம். சசு.

கூர்முள் வேலிக் கோட்டின் நீக்கி
நீர்முதிர் பழனத்து மீனுடன் இரிய
அந்தூம்பு வள்ளை மயக்கித் தாமரை
வண்டூது பனிமலர் ஆரும் ஊர.'

என அகத்தினும் வருதல் காண்க. மணிநீர் - வற்றாதநீர். '[1]மணி நீரும் மண்ணும் மலையும்' என்னும் குறட்குப் பரிமேலழகியார் 'வற்றாதநீ' ரெனப் பொருள் விளக்கினர். [2]'மாசறத் தெளிந்த மணிநீர் இலஞ்சி' என்றார், மணிமேகலையாசிரியரும். (கசரு)

சேடி, தமயந்திக்குக் கேகயநாட்டு மன்னனைக் காட்டல்

கருச. அங்கை வரிவளையாய் ஆழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்க்--கங்கையிடைச்
சேல்துளிக்கும் கேகயர்கோன் தெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து.

(இ - ள்.) வரிவளை அம் கையாய் - கீற்றினையுடைய வளைய லணிந்த அழகிய கையினையுடையாய், தெவ் ஆடல் கைவரை மேல் - பகைவருடைய வலிமை பொருந்திய யானைகளின்மேல், வேல் குளிக்க நின்றான் இவ் வேந்து - வேற்படை பாய (அதனை விட்டுப் போர்க்களத்தில் வென்று) நின்றவனை இம் மன்னன், ஆழி திரை கொணர்ந்த - கடலின் அலையானது கொண்டுவந்து ஒதுக்கிய, செம்கண் மகரத்தை - சிவந்த கண்களை யுடைய சுறாமீனினை, தீண்டிபோய் கங்கை இடை - தொட்டுச் சென்று கங்கையாற்றின் நீரில், சேல்குளிக்கும் கேகயர்கோன் - கெண்டை மீன்கள் நீந்திச் செல்கின்ற கேகய நாட்டினர்க்கு வேந்தனாவன்.

(க - ரை.) 'ஏ அங்கை வரிவளையாய்! இவ் வேந்தன், கடலலைகள் ஒதுக்கிக் கொண்டுவந்த சுறாமீனின்மேல் கெண்டை மீன்கள் உராய்ந்து சென்று கங்கைநீரில் குளிக்கின்ற நீர்வளமிக்க கேகயநாட்டுக்கு மன்னனாவான் காண் பாயாக' என்பதாம்.

(வி - ரை.) கங்கையாறு கடலிற் பாய்வதால், அக்கடலின் அலை கங்கை நீரோடு எதிர்த்துப் பாயுங்கால் கடலிலுள்ள சுறா

1. திருக்குறள், எசஉ. 2. மணிமேகலை, ச : எ.

மீன்கள் வந்து கங்கைநீரில் மிதந்து செல்கின்றன. அதுகாலைக் கங்கையில் வாழும் கெண்டைமீன்கள் புதிதாக வந்த சுறா மீன்கள் மீது உராய்கின்றன; அவ்வுராய்தலினால் உவர்நீர்த் தன்மை படிந்த சுறாமீனின் உடலைத் தீண்டியபோது அதற்கு ஒருவகை அருவருப் புணர்வு தோன்றுகிறது. அதனால் அது கங்கைநீரில் குளித்துச் செல்கின்றதெனை இயற்கையாக நிகழும் நிகழ்ச்சியைத் தற்குறிப் பேற்றமாக்கி ஆசிரியர் கூறினார். எனவே, கேகயநாடு கடலொடு கலக்கும் கங்கைநீர் வளனுடையதென அந்நாட்டின் இயற்கை வளத்தைக் கூறியதாயிற்று.

ஆழி - கடல். சுறாமீன்களுக்குக் கண்கள் செந்நிறமாக இருத்தலால், செங்கண் மகரமென அடைகொடுத்துக் கூறினார். தெவ் - பகைமை: அதன் தன்மையுடைய பகைவரை உணர்த்தலால் குணவாகுபெயர். கைவரை - தோள்களாகிய மலையென்று கொள்ளலுமாம். வேல் குளிக்க நிற்றல் - வேலைப் பாய்த்திக் கொன்று போர்க்களத்தில் பெருமிதத்தோடு நிற்றல். வேந்து - மன்னன். அஃறிணைபோல் நின்று உயர்திணை உணர்த்திய சொல். அரசு, அமைச்சு, தூது, ஒற்று என்பனபோல. குளித்தல் - நீரில் மூழ்கி நீந்திச் செல்லுதல். (கசஎ)

சேடி, தமயந்திக்குக் காந்தார நாட்டு மன்னனைக் காட்டல்

கருரு. மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேகும் அன்னம் தனிக்கயிற்றில்—போம்நீள்
கழைக்கோ தையரேய்க்கும் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன்.

(இ - ள்.) மழை கோதை மானே - மேகம் போன்ற கருங் கூந்தலையுடைய மான்போல்வாய், இம்மன் - இவ்வேந்தன், மாநீர் நெடுங்கயத்து - நீர்ப்பெருக்கமுள்ள நீண்ட தடாகத்திற் படர்ந்துள்ள, வள்ளை கொடிமீது தான் ஏகும் அன்னம் - வள்ளைக் கொடியின்மேல் ஏறித் தானாகத் (தனியே) செல்கின்ற அன்னப் பறவையானது, தனிக் கயிற்றில் போம் - (இருபக்கங்களினும் நாட்டிய மூங்கில்களிற் கட்டியுள்ள) ஒற்றைக்கயிற்றில் (தள்ளாடிச்) செல்கின்ற, கழைக் கோதையர் எய்க்கும் காந்தார நாடன் - (மூங்கிலின்மேல் ஏறிவிளையாடுகின்ற) கழைக் கூத்தியராகிய பெண்கள்போல் தோன்றுகின்ற காந்தார நாட்டுக்கு மன்னனாவான்.

(க - ரு.) 'ஏ மேகம் போன்ற கூந்தலாய்! தடாகத்தில் படர்ந்துள்ள வள்ளைக்கொடியின்மேல் நடந்து செல்

கின்ற அன்னப்பறவையானது, கழைக் கூத்தாடும் பெண்கள்போல் தோற்றமளிக்கின்ற காந்தார நாட்டுக்கு வேந்தனுவான் இம்மன்னன்' என்பதாம்.

(வி - ரை.) குளத்தின் நீரின்மேல் வள்ளைக் கொடிகள் ஒன்றோடு ஒன்று பின்னிக் கொண்டு கயிறுபோல் இருக்கின்றன. அதன்மீது அன்னப்பறவைகள் நடந்து செல்கின்றன அக்காட்சி இருமருங்கும் மூங்கிலை நாட்டி அவைகளில் கயிற்றைக் கட்டி அதன்மீது நடந்து கூத்தாடுகின்ற கழைக்கூத்தாடிப் பெண் போல் தோன்றுகின்றது. அன்னத்தைப் பெண்களுக்கு உவமமாகச்சொல்வது மரபாகலான், அவை நடந்துசெல்வது இவ்வாறு தோன்றுவதாகக் குறித்துக் காந்தார நாட்டின் நீர்வளத்தைச் சுட்டிக் காட்டினார்.

இவ்வாறே சிந்தாமணி ஆசிரியரும் வள்ளைக் கொடிகளின் மேல் வாளைமீன்கள் எறிப்பாய்ந்து செல்வன, கழைக் கூத்தாடும் பெண்கள் ஆடுவது போன்றும், நாரைகள் இருப்பன, அக் கூத்தினைப் பார்ப்போராகவும் குறித்துள்ளமையும் இதனோடு ஒத்த கருத்தாகலான், அதனைத் தருகின்றோம்:

[1] 'கூடினார்க ணம்மலர்க் குவளையங் குழியிடை
வாடுவள்ளை மேலெலாம் வாளையேறப் பாய்வன
பாடுசால் கயிற்றிற்பாய்ந்து பல்கலன் ஒலிப்பப்போந்
தாடுகூத்தி ஆடல்போன்ற நாரைகாண்ப ஒத்தவே'

என்பதாம். பலாக்கனியைப் பறித்துத் தலையிற் சுமந்துகொண்டு சென்று இருமருங்கினும் உள்ள கமுக மரங்கள்மீது பற்றிப் படர்ந்திருக்கின்ற முல்லைக்கொடிகளின்மேல் குரங்குகள் செல்கின்ற காட்சியைக் கழைக்கூத்தாடுவோன் குடத்தைத் தலையிற் சுமந்துகொண்டு ஆடிச்செல்லுங் காட்சியாகக் குமரகுருபர அடிகள் குறித்திருப்பதும் இக்கருத்தை ஒத்திருப்பது கண்டு மகிழ்க. அதனையும் இதன்கீழ் வரைகின்றோம்:

[2] "வானரம் ஒன்று.......................
பைந்துணர்க் கொடியில் படர்தரு தோற்றம்
.......................... ..... ...................
குடந்தலைக் கொண்டொரு கூன்கழைக் கூத்தன்
வடந்தனில் நடக்கும் வண்ணம தேய்க்கும்.'

என்பதும் காண்க.

---

1. சீவகசிந். கூகூ. 2. திருவாரூர் நான்மணிமாலை, சக.

சேடி, தமயந்திக்குச் சிந்து நாட்டு மன்னனைக் காட்டல்

கடுசு. அங்கை நெடுவேற்கண் ஆயிழையாய் வாவியின்வாய்ச்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச்—செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளைக்கும் தண்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன்.

(இ - ள்.) *அம்கை* - உள்ளங்கையையும், *நெடுவேல்கண் ஆய் இழையாய்* - நீண்ட வேற்படையையும் ஒத்த கண்களை யுடைய ஆய்ந்தெடுத்த அணிகளையுடையாய், *இம்மன்* - இந்த வேந்தன், *வாவியின்வாய் சங்கம் புடைபெயர* - தடாகங்களிற் சங்குகள் தாமிருந்த இடத்தைவிட்டு நகர்ந்து செல்வதால், *செந் தாமரைபூ கலங்கி சிந்தும் நாள் தேறல்* - செந்தாமரை மலர்கள் அசைந்து சொட்டி வழிகின்ற புதுத் தேனானது, *பொன்விளைக் கும் தண்பணைசூழ்* - பொன்னிறமுள்ள நெற்பயிரை வளரச் செய் கின்ற குளிர்ச்சி பொருந்திய வயல்கள் சூழ்ந்த, *மா சிந்து நாட் டான்* - பெருமை பொருந்திய சிந்து நாட்டுக்கு வேந்தனாவன்.

(க - நு.) 'நீண்ட கண்ணினாய்! இவ்வேந்தன், சங்கு கள் நகர்ந்து செல்வதனால் தடாகங்களிலுள்ள செந் தாமரைமலர்த் தேன் சொட்டிவழிந்து பொன்போன்ற நெற்பயிர்களை வளர்க்கின்ற பெருமைமிக்க சிந்து நாட்டுக்கு மன்னனாவன்' என்பதாம்.

(வி - ரை.) அம்+கை : அகங்கை என்பதன் திரிபு.

[1]"அகமுனா் செவிகை வரினிடை யனகெடும்."

என்னும் நன்னூல் விதிப்படி புணர்ந்தது. உள்ளங்கையைப் போன்ற குவிந்த தன்மையும் வேலைப் போன்ற நீட்சி அகற்சி கூர்மை கொடுமை முதலியனவும் பொருந்திய கண். இவை கண்களுக்குக் கொடுத்த அடைமொழிகள்.

சங்கம் : சங்கு ; அம்முச்சாரியை பெற்றது. சங்குகளின் புடை பெயர்ச்சியினால் தடாகத்திலுள்ள செந்தாமரை மலர்கள் தேனைச் சொரிந்து அது நீருடன் கலந்து செந்நெற்பயிர்களை வளர்க்குமென்றமையான், நாடு நாடாவளத்ததாய் நீரும் தேனும் கலந்துசெல்லும் இடையறா நீர்வளனும் நிலவளனும் மிக்க நாடென நாட்டின் பெருமை கூறியவாறு. இவ்வாறே,

1. நன்னூல், உஉஉ.

"[1]விழுந்த அஞ்சிறை வண்டினம் மிதிப்ப மெல்லரும்பு
கிழிந்து வார்தரு தேறலும் கிளர்சினைப் பலவின்
பழங்க ளிர்ந்துவீழ் தேறலும் பழனங்கள் தோறும்
வழிந்து பாய்தலின் வானுற வளர்வன செந்நெல்.'

என்றார் நைடதத்தினும்.

பொன் போன்ற நிறமுடைய நெல்லைப் பொன்னென்று கூறினார். அது நெற்கு ஆய், அதனாலுண்டாகிய பயிருக்கு ஆதலால், இருமடியாகுபெயர். 'சடைச் செந்நெல் பொன்விளைக்கும் தன்னாடு' (சுஅ) என்றார் முன்னரும். நாள் + தேறல்-நாட்டேறல் எனப் புணர்ந்தது.

"[2]னலமுன் றனவும் ணளமுன் டணவும்
ஆகும் தநக்கள் ஆயுங் காலே.'

என்னும் நன்னூல் விதி காண்க. அன்றன்றுள்ள தேன்: புதுத் தேன் என்றமையால் தாமரை யென்றும் தேன் சொரிகின்ற வளமுள்ளதென அதன் செழிப்பையும் நீர்வளத்தையும் நிலவளத்தையும் சுட்டிற்று. **பூச்சீந்து மாச்சீந்து** என்பனவற்றின் எதுகைத் தொடைத் திரிபுநயம் காண்க. (கசகூ)

## நளனுருவிற் போந்திருந்த தேவர்களை இன்னாரென அறியாது தமயந்தி கலங்குதல்

கருஎ. காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளன்உருவாச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணாநின்
றாசலா டுற்றாள் உளம்.

(இ - ள்.) பூவரைந்த மாசு இல்லா பூங்குழலாள் - மலர்களை முடித்து அழகுடன் விளங்கும் பொலிவு பொருந்திய கூந்தலையுடைய தமயந்தியானவள், தன் சேடி காவலரைக் காட்டக் கண்டு - தன் தோழியானவள் (அங்கு வந்திருந்த) அரசர்கள் எல்லோரையும் (இவ்வாறு இன்னார் இன்னாரெனக் குறித்துக்) காட்டத் தெரிந்து, மற்று நளன் உருவா சென்று இருந்தார் - பின்னர் நளமன்னன் வடிவம்போல் அங்குப் போயிருந்தவராகிய, ஈர் இருவர் தேவர் அவரை காணாநின்று - இந்திரன் முதலிய தேவர்கள் நால்வரையும் இன்னின்னாரென அறியாமல், உளம்

---
1. நைடதம், கூ 2. நன்னூல், உ௩எ.

ஊசலாடுஉற்றாள் - தன்மனம் ஊசலாடுவதைப்போல் தடுமாற்ற மடைந்து நின்றாள்.

(க - து.) தமயந்தியானவள், தன் தோழி அங்கு வந்திருந்த அரசர்களை யெல்லாம் இன்னார் இன்னாரென்று காட்டத் தெரிந்துகொண்டு, பின்னர் அங்கு நளன் வடிவு கொண்டு வந்திருந்த இந்திரன் முதலிய தேவர்கள் நால்வரையும் இன்னின்னாரெனத் தெரியாமல் மனம் தடுமாறி நின்றாள் என்பதாம்.

(வி - ரை.) 'ஈரிருவர் தேவர் நளனுருவாக சென்றிருந்தார்; மற்றவரைக் காணுகின்று உளம் ஊசலாடலுற்றாள்' எனக் கொண்டு கூட்டிச் சொற்றொடராக்கிப் பொருள் கொள்க. ஊசலாடுதல் - ஊசல் ஆடும்போது போவதும் வருவதுமான இயற்கைத் தன்மை. அதுபோல் தமயந்தியின் மனம் அவர்களை நாடிப் பார்ப்பதும், பின்னர் இவர் யாரோ என மயங்கி வாளா நிற்பதும் பின்னர்ப் பார்த்தலுமாக இருந்தாள். ஊசலாடுவதை [1]"மாசுறு பிறவிபோல வருவது போவதாகி" என்றார் கம்பநாடரும். மாசிலாப்பூங்குழலாள், குற்றமற்ற பொலிவினையுடைய கூந்தலையுடையாள். கூந்தலுக்கு மாசின்மையாவது, காதலர் ஆசைபோல் இருளெனக் கறுத்து, அறலென நெளிந்து மின்னி இயற்கை மணங்கமழ விளங்குவது.

[2]"............பசுங்கொடி கரியமென் கூந்தல்
நானமும் புழுகும் கமழ்தர நீவி நள்ளிருள் குடியிருந் ததுவே.

என்றார், இத்தமயந்தி கூந்தலின் சிறப்பைக் கூறிய நைடத நூலாரும். (கஉ0)

**தமயந்தி சுயம்வரத்துக்குத் தேவர்களும் வந்திருந்தார் எனல்**

கஉ௫. பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றோர் நளனுருவாய்ப் போந்து.

(இ - ள்.) பூணுக்கு அழகு அளிக்கும் பொன் தொடியைக் கண்டக்கால் - (அழகுக்காகத் தானணிந்துள்ள) அணிகட்கும்

1. கம்ப ராமா. மிதிலைக்: க0.
2. நைடதம், அன்னத்தைத் தூது : கக.

அழகு தருகின்ற அழகுடைய பொன் வளையலணிந்த தமயந்தியைப் பார்த்ததால், நாண்உக்கு நெஞ்சு உடைய-வெட்கம் கெட்டு மனம் வாட்டமுறும்படி நின்ற, நீள்நிலத்து நல்வேந்தர்-நீண்ட இம் மண்ணுலகில் சிறந்த மன்னர்களில், மற்று எவர் வாராதார் - வேறு எவர்தாம் வாராதிருந்தவர்கள் (எல்லோரும் வந்துள்ளனர்), பொன்தேர் நளன் உருவாய்ப்போந்து - அழகிய தேரினையுடைய நளமன்னன் உருவங்கொண்டு, வானவரும் வந்து இருந்தார் - தேவர்களும்கூட அச்சுயம்வர மண்டபத்துக்கு வந்திருந்தார்கள். (எனின், பிறர் வந்திருந்தது கூறவேண்டா என்றபடி.)

(க - ரு.) தமயந்தியின் சுயம்வரத்துக்காகத் தேவர்கள்கூட நளனுருவங் கொண்டு வந்திருந்தார்களெனின், பூவுலக மன்னர்களில் யார்தான் வாராமலிருப்பார்கள்? (எல்லோரும் வந்திருந்தனர்) என்பதாம்.

(வி - ரை.) உலகில் சிலருக்கு இயற்கையாகவே அழகு உண்டு; பலர்க்குச் செயற்கையால் அழகு சிறப்பப் புனைவர்; அவ்வழகு ஊட்டுதற்கு அணி ஆடை மணப்பொருள் முதலியன இன்றியமையாது வேண்டப்பெறும். ஆனால் இங்கே தமயந்தி இயற்கையாகப் புறவழகும் அக அழகும் நிரம்பிய ஆரணங்கு. இவட்குத் திருமணம் நிகழ்த்த எண்ணிய தாய் தந்தையர் செயற்கை முறையில் பற்பல அணிகளைத் திருத்தமுறப் பூட்டி அணிசெய்தனர். அவ்வணிகள் இவள்தன் அழகுமிக்க உறுப்பைச் சேர்ந்தவுடன் அவைகளே தனியழகு பெற்று மிளிர்ந்தன. இதனை ஆசிரியர், 'பூணுக்கழகளிக்கும் பொற்றொடி' என நயம்படக் கூறினர்.

இவ்வாறே காவற்சனகன் கன்னியாகிய சீதைக்கு அழகு படுத்தியதைக் கம்பநாடர்,

[1]"அமிழ்தினைச் சுவைசெய் தென்ன அழகினுக் கழகு செய்தார்."

என்று வியப்பும் சுவையுந்தோன்றக் கூறினர். இவள்தன் அழகைக்கண்ட அரசிளங்குமரர்கள், தம் அழகுகள் யாவும் ஞாயிற்றின்முன் மின்மினி போன்று சிறப்படையாமை குறித்துத் தாமே வெட்கங்கொண்டு நிற்பார் என்பாராய்க் 'கண்டக்கால் நாண்உக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்' என்றார். 'நாண் கொள்ளும் வேந்தர்' என்னாது, 'நெஞ்சுடைய வேந்தர்' என்றது, நெஞ்சுக்கு நடுநிலையுண்டு; அது, ஒவ்வாதசெயல் செய்ய ஒருவன்

1. கம்பராமா. கோலங்காண் : ௩.

முற்படும்போது, அச் செயல் தகுதியற்றதெனை அவனுக்குத் தான் நடுநின்று உணர்த்துகின்றது. ஆயினும், தம் ஆசை தாம் எடுத்துக் கொண்ட செயல்களில் முந்த, நன்றோ தீதோ அதைச் செய்யவே முற்படுகின்றனர். இஃது உலகியல். கொலைஞன் மற்றொருவனைக் கொலை செய்ய முற்படுகின்றபோது, அவன் மனச்சான்று நின்று தடுத்துப் போராடியபின்தான் செய்கின்றான். இதனுனே, திருவள்ளுவர் தாம் ஆக்கியருளிய திருக்குறட் பெருநூலில் அறமுறைகளைக் கூறுங்கால் மனச்சான்றுக்கு ஒவ்வச் செய்யவேண்டுமென்றே பல்லிடங்களில் சுட்டிக்காட்டிக் கூறுவர். காட்டாக,

> [1] ‘ தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
> தன்னெஞ்சே தன்னைச் சுடும்.’

என்றும்,

> [2] ‘ வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
> ஐந்தும் அகத்தே நகும்.’

என்றும்,

> [3] ‘ அவர்நெஞ் சவர்க்காதல் கண்டும் எவனெஞ்சே
> நீஎமக் காகா தது.’

என்றும், பிறண்டும் நெஞ்சையே வற்புறுத்திக் காட்டிச் செல்வாராயினர். அதுபோன்றே அரசர்கள் மனநிலையே ‘நமக்குத் தமயந்தி மணமாலை சூடாள்; ஆயினும் போய்ப் பார்ப்போம்’ என ஆசை முந்துறுத்தலால் வந்தாராகலான், இவரும் ‘நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்’ என்று குறித்தார் என்க. (கருக)

தமயந்தி தெய்வத்தை வேண்டுதல்

**கருக. மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்**
**கன்னியான் ஆகிற் கடிமாலை—அன்னந்தான்**
**சொன்னவனைச் சூட்ட அருளென்றாள் சூழ்விதியின்**
**மன்னவனைத் தன்மனத்தே கொண்டு.**

(இ - ள்.) சூழ்விதியின் மன்னவனை தன் மனத்தே கொண்டு- (தமயந்தியானவள்) தன்னைத் தொடர்ந்துள்ள ஊழின் வலியினால் நளவேந்தனைத் தன்னினைவில் இருத்திக்கொண்டு, மின்னும்தார் வீமன்தன் மெய்ம்மரபில் - ஒளியெறிக்கின்ற மாலையணிந்த வீம

---

1, 2, 3. திருக்குறள், உகங; உஎக; கஉகக.

னுடைய அழிவில்லாத குலத்தில் பிறந்த, கன்னி யான் ஆகில்-நான் கற்பு முதலியவற்றில் சிறந்த கன்னிப் பெண்ணாக இருப்பின், அன்னம் சொன்னவனை - என்பால் அன்னத்தாற் சொல்லப் பெற்ற வேந்தனை நளனுக்கே, கடிமாலை சூட்ட அருள் என்றாள்-மணமலர்மாலையை நான் சூட்டும்படி (தெய்வமே) அருள்புரி வாயாக என்று கூறினாள்.

(க - து.) தமயந்தியானவள், 'நான் வீமன் குலத்தில் பிறந்த சிறந்த கன்னியாக இருப்பேனானால், அன்னத்தாற் சொல்லப்பெற்ற மன்னவனுக்கே மணமாலை சூட்டும்படியாகத் தெய்வமே, எனக்கு அருள்புரிவாயாக' என்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) மின்னுதல் - விளங்கித் தோன்றுதல். மெய்ம் மரபு - பிறர் பழிதூற்றாத நற்புகழோடு விளங்கும் குலம்; அஃதாவது, பழிபாவங்களால் குலம் இடையறவு பட்டு அழியாது வாழை யடி வாழைபோல் வளர்ந்து வருங்குலம். சூழ்விதி - சூழ்ந்த ஊழ்: முக்கால வினைத்தொகை, 'சூட்ட அருள்' என்னும் வினையால் வினைமுதலாகிய 'தெய்வம்' என்ற சொல் வருவித்துரை கூறப் பட்டது. தமக்குத் தோன்றாத ஒன்றை-செய்தற்கியலாத செயலை - ஒருவர் தெரிந்துகொள்ளவோ செய்யவோ முற்படுங்கால், தம் அறிவெல்லைக்கு மேற்பட்ட ஒன்றாகிய கடவுளரை வேண்டிக் கோடல் உலகியல்; ஆகலான், அம்முறையை முற்கொண்ட தமயந்தியும் தன் முன்னர்த் தான் அன்னத்தாற் கூறப்பட்டுக் காதலித்த நளமன்னன் வடிவில் பலர் அச்சுயம்வர மண்டபத்தில் இருத்தலால், யாரெனத் தெரிந்து மணமாலை சூட்ட இயலாத நிலையில் திருவருளே துணையெனக் கொண்டு 'அன்னந்தான் சொன்னவனைச் சூட்ட அருள்' என இறைவனை வேண்டிக் கொண்டாள் என்க. (கஙஉ)

தமயந்தி, கண் இமைத்தல் முதலிய செயல்களால் தேவரின் வேறுபிரித்து நளனை அறிந்தாள் எனல்

கசுO. கண்ணிமைத்த லாலடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு.

(இ - ள்.) நறும் தாமரை விரும்பு நல்நுதலே அன்னாள் - மணமுள்ள செந்தாமரை மலரை விரும்பி அதிலிருக்கின்ற திரு

மகளை யொத்தாளாகிய தமயந்தி, ஆங்கு - அவ்விடத்தில், கண் இமைத்தலால் அடிகள் காசினியில் தோய்தலால் - கண்கள் இமைகொட்டுவதாலும் கால்கள் மண்ணிற் படுவதாலும், வண்ண மலர்மாலை வாடுதலால் - அழகிய மலர்மாலைகள் வதங்குவதாலும், எண்ணி நளன் தன்னை அறிந்தாள் - எண்ணிப்பார்த்து நளமன்னனைத் தெரிந்துகொண்டாள்.

(க - ரை.) தமயந்தியானவள், கண்கள் இமைத்தலாலும் கால்கள் நிலத்தில் படிதலாலும் அணிந்த மலர்மாலை வாடுதலாலும் ஆராய்ந்தறிந்து நளன் இன்னனென அறிந்துகொண்டாள் என்பதாம்.

(வி - ரை.) தேவர்கட்குக் கண் இமை பொருந்துவதில்லை; இதனாலே தேவர்க்கு 'இமையவர்' என்னும் பெயருமுண்டு. கால்கள் நிலத்திற் படுவதில்லை; மலர்மாலை வாட்டமுறுவதில்லை யென்பார். கண்கள் இமைகொட்டுவதில்லை யென்பதனை,

[1] 'எல்லை மூவைந்து நாள்கள் உளவென
இமைக்குங் கண்ணும்.'

என்றார் சிந்தாமணியினும். திருக்கோவையாரில் வரும் தலைவன், தலைவியைக் கண்டான்; அவன், திருமகளோ கலைமகளோ வான் மகளோ என ஐயுற்று நின்றகாலை, ஐயம் நீங்கற்குக் கண் இமைத்தலானும் கால் நிலத்திற் றோய்தலானும் மாலை கருகலானும் நிலமகளே - மானிட மங்கையே யென உணர்ந்தான் என்று கூற வந்தகாலை,

[2] '......படைக் கண்இமைக்கும்,
தோயும் நிலத்தடி தாமலர் வாடும் துயரமெய்தி
ஆயும் மனனே அணங்கல்லள்.'

என உணர்ந்தானென்று கூறுதலானறிக.

தாமரை விரும்பு - தாமரை மலரும் திருமகளாக ஏற்றுக் கொள்ள அவாவி நிற்கும், எனப் பொருள் கூறலும் பொருந்தும். இவள் தன் அழகைச் சிறப்பித்தவாறும். [3] 'காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கும்' என்னுங் கருத்துப்போற் கொள்க. விருப்பமில்லாத அஃறிணைப் பொருளை விரும்புமென்று கூறுவது ஓர் இலக்கணை வழக்கு. [4] 'உறுப்புடையது போல்' என்னும் தொல்காப்பிய விதியால் விரும்பாத தாமரையை விரும்புவது போற் கூறப்பட்டது எனக் கொள்க. (கஙக)

1. சீவகசிந். உஅகO. 2. திருக்கோவையார் : ௬.
3. திருக்குறள், ககஉ௪. 4. தொல். பொருளியல் : உ.

### தமயந்தி, நளமன்னனுக்கு மணமாலை சூட்டுதல்

கககூ. விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

(இ - ள்.) *விண் அரசர் எல்லாரும் - வானுலக நாட்டு மன்னர்கள் யாவரும், வெள்கி மனம் சுளிக்க - நாணமுற்று மனம் வருத்தமுறவும், கண் அகல் ஞாலம் களிகூர - இடம் விரிந்த இம் மண்ணுலகமக்கள் யாவரும் மகிழ்ச்சி மிகவும், மண் அரசர் தம் மனத்தே வன்மாலை சூட - பூவுலக மன்னர்கள் தம் நெஞ்சத்தில் மிக்க மயக்கமடையவும், பொன் வயவேந்தை பொன்மாலை சூட்டினாள் - திருமகளை யொத்த தமயந்தியானவள் வெற்றிமிக்க நள மன்னனுக்கு அழகிய சுயம்வர மலர்மாலையை அவன் கழுத்தில் அணிந்தாள்.*

(க - து.) *தமயந்தியானவள், விண்ணரசர் வெட்கமுற, உலக மாந்தர் மிக்க மகிழ்ச்சிகொள்ள, மண்ணக அரசர் தம் மனத்தே மிக்க மயக்கங்கொள்ள, நளமன்னனுக்குச் சுயம்வர மலர்மண மாலையைச் சூட்டினாள் என்பதாம்.*

(வி - ரை.) விண்ணரசர் - தேவருலகிலுள்ள இந்திரன் முதலிய தேவர்கள். வெள்குதல் - நாணமுறுதல். ஞாலம் - மண்ணுலகம். வன்மாலை - வலிமையான மாலை; மிக்க மயக்கம். மால்- மயக்கம். இங்கே எதுகை நயம் நோக்கி ஐகாரச் சாரியை பெற்றது. பொன்மாலை - பொன் போன்று மதிக்கத் தகுந்த மாலையென்று கொள்ளலுமாம். பொன் - இலக்குமி அவள் போன்றாளைப் பொன்னென்றது ஆகுபெயர். பொன்: மகளிர்களுக்கெல்லாம் பொன்போன்று மேலாக மதிக்கத் தகுந்த கற்பும் பொற்பும் உருவுந் திருவும் ஒத்த பண்புடையாள் என்று கோடலுமாம். பொன் உலகில் உயர்வாக மதிக்கத்தக்க பொருள்; அதை நெருப்பிலிட்டுப் புடம் போடப்போட, ஒளிமிகுவது; அதுபோல, தமயந்தியும் தான் துன்பமுற்றாலும், தன் கற்புத் திறம் மேன் மேல் உயர்வுற மனத்திண்மைபெற்ற கனங்குழையாகலான் 'பொன்' என்றார் என்றலுமாம். சுளிக்க களிகூர சூட முதலிய செயவெனெச்சங்கள் நிகழ்காலங் காட்டி நின்றன. (கஉச)

**நளமன்னனுக்குத் தமயந்தி மாலை சூட்டக் கண்ட மன்னர்கள் முகம் வெளுத்தல்**

கசுஉ. திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.

(இ - ள்.) ஒண்தாரை கோமாலை வேலான் - ஒளியுங் கூர்மையுங் கொண்ட சிறந்த மலர்மாலையணிந்த வேற்படை தாங்கிய நளமன்னன், குலம் மால் ஐ வேல் கண்ணாள் - சிறந்த வேல் போன்ற அழகிய கண்களையுடைய தமயந்தியின், பூமாலை பெற்று இருந்தபோது - சுயம்வர மலர்மாலையைப் பூண்டு வீற்றிருந்த போது, திண்தோள் வயவேந்தர் - வலிமை பொருந்திய தோள்களையுடைய வெற்றி வேந்தர்களின், செந்தாமரை முகம் போய் - சிவந்த தாமரை மலர்போன்ற முகங்களின் அழகு மாறி, வெண் தாமரையாய் வெளுத்த - வெண்ணிறமுள்ள தாமரை மலர்களைப் போன்று முகஅழகு குன்றி வெளுத்து இருந்தன.

(க - து.) தமயந்தியினுடைய சுயம்வர மலர்மாலை சூட்டப்பெற்று நளமன்னன் வீற்றிருந்தபோது, வலிமை மிக்க தோள்களையுடைய அரசர் முகங்களெல்லாம் அழகு குன்றி வெளுத்துப் போயிருந்தன என்பதாம்.

(வி - ரை.) தம் தோள்வலியானும் வான்வலியானும் எண்ணிய எண்ணியாங்கு முடிக்கும் ஆற்றலுடையார் வேந்தர்கள் என்பதைக் குறிக்கத், 'திண்டோள் வயவேந்தர்' என்றார். இவ்வாற்றல் பெற்றாரும் தம் வலியால் ஒன்றும் ஆற்றவொண்ணாத நிலையில் நள மன்னனுக்குத் தமயந்தி மாலை சூட்டியதைக் கண்டு முகக்களை இழந்து வருந்தி இருந்தனர் என்பதைக் குறித்தற்குச், 'செந்...வெளுத்தவே' என்றார். மகிழ்ச்சியும் கிளர்ச்சியும் கொண்ட முகத்திற்குச் செந்தாமரையின் செவ்விய மலரையும், அஃதன்றி வருத்தமும் மனக் கிளர்ச்சியுமற்றிருக்கும் முகத்திற்கு வெண்தாமரை மலரையும் உவமித்துக் கூறுவது மரபாகலான், இங்கே, அவ்வுவமையையே உவமேயங் கொள்ள அவ்வுவமானப் பொருளையே 'செந்தாமரை வெண்டாமரை' என வியப்புத் தோன்றக் கூறினார். அவை அவ்வவைகளின் பண்பைக் குறித்தலால் ஆகுபெயர். போது : பொழுது என்பதன் மரூஉ மொழி. கைகேசி சூழ்ச்சியால் முடிசூடுவதை

இழந்த காகுத்தன் கைகேசியால் நாட்டை இழந்து காடு செல்லும்படி ஏவப்பெற்ற காலையில் அவன் முகப்பொலிவு குன்றாதிருந்த இயல்பைக் கம்பரும், [1]'அப்பொழுது அலர்ந்த செந்தாமரையினை வென்ற தம்மா' என்று கூறுவது நோக்கத் தக்கது. (கஙூ)

## நளமன்னன், தமயந்தியுடன் சுயம்வர மண்டபத்தினின்றும் புறப்படல்

கசூரு. மல்லல் மறுகின் மடநா குடனாகச்
செல்லும் மழவிடைபோல் செம்மாந்து-மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டான்
நன்மாலை வேலான் நளன்.

(இ - ள்.) நல் மாலை வேலான் நளன் - நல்ல மலர்மாலை யணிந்த வேற்படையைக் கொண்டவனாகிய நளமன்னன், மல்லல் மறுகில் - வளப்பம் பொருந்திய வீதியில், மட நாகு உடன் ஆக செல்லும் மழவிடைபோல் - இளமையுள்ள பசுவானது தன்னுடன் கூடவர நடந்து செல்கின்ற இளமை பொருந்திய காளையைப் போன்று, செம்மாந்து - களிப்பால் விம்மிதமடைந்து, மெல் இயலாள் பொன்மாலை பெற்ற தோளோடும் புறப்பட்டான் - மென்மைத்தன்மையுள்ள தமயந்தியின் அழகிய சுயம்வர மாலையை யணிந்த தோளின் தோற்றப் பொலிவுடன் புறப்பட்டுச் சென்றான்.

(க - து.) நளமன்னன், இளம் பசுவுடன் செல்லும் ஆனேறுபோன்று மகிழ்ச்சி வீறுகொண்டு சுயம்வர மண்டபத்தினின்றும் புறப்பட்டுச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) மல்லல் - வளப்பச்சிறப்பு. பல்வகைப் பொருள்கள் விற்கும வீதிக்கு அடைமொழி. நாகு - இளமை யுள்ள எருமை ஆன் இவைகளின் பெண்ணினத்தைக் குறிக்கும் சொல்.

[2]'எருமையும் மரையும் பெற்றமும் நாகே.'

என்னும் தொல்காப்பியம் மரபியல் நூற்பாவினால் 'நாகு' என்பது ஆனின் பெண்ணினத்துக்காயிற்று. இதனை,

---

1. கம்பராமா. கைகேசி சூழ்: க0அ.
2. தொல். மரபியல்: கஉ.

[1]'மண்ணுடைக் கோட்ட அண்ணல் ஏஎறு
உடனிலை வேட்கையின் மடநாகு தழீஇ.'

என்றார் அகத்திலும். நளவேந்தன் தமயந்தி பின்தொடர அரசர் பெருந்தெரு வழியாகப் புறப்பட்டுச் சென்ற காட்சி, நல்ல இளமை மிக்க அழகுள்ள பசு பின்தொடரக் கட்டழகும் இளமையும் உள்ள ஆனேறு பெருமித நடையோடு செல்வதுபோல் சிறப்பு மிக்கதாக இருந்தது. அதனை 'மடநாகுடனாகச் செல்லும் மழவிடை போல்' என்ற தொடரினாற் குறித்தார். இதனை, [2]'ஏறுபோற் பீடுநடை' என்பர் திருவள்ளுவர். குழலும் யாழும் அமிழ்தும் குழைத்த மழலைக் கிளிபோல்வாளாகிய தமயந்தியின் மணமலர் மாலை தனக்குச் சூட்டப்பெற்றதால் கொண்ட மகிழ்வும்' கற்புக் கடன் வழுவாது தனக்கே மணமாலை சூட்டியதால் உண்டாய தருக்கும், தன்னுடன் அவள் தொடர்ந்து பின்வரலால் கொண்ட மனக் கிளர்வும் நளனுக்கு இன்பைப் பெருக்க அதனால் 'செம் மாந்து...........புறப்பட்டான்' என்றார். 'தான் பொன் மாலை பெற்றான், தன்வேல் நன் மாலை பெற்றது' என்னும் நயந் தோன்ற, 'பொன் மாலை பெற்ற தோளோடும்.........நன்மாலை வேலான்' என அமைத்த சொற்றிறம் அறிந்து அறிந்து இன்புறற் பாலன. (கருக)

தேவர்கள், தமயந்தி மணமாலை பெறாது திரும்பிச் சென்று கலியைக் காண்டல்

கஅச. வேலை பெறாவமுதம் வீமன் திருமடந்தை
மாலை பெறாதகலும் வானாடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியில் ஆக்கும்
இருங்கலியைக் கண்டார் எதிர்.

(இ - ள்.) வேலை பெறா அமுதம் வீமன் திருமடந்தை கடலிற் பிறவாத அமிழ்தத்தை ஒத்த வீமன் செல்வ மகளாகிய தமயந்தியினது, மாலை பெறாது அகலும் வான் நாடர் - சுயம்வர மணமாலையைப் பெறாமல் திரும்பிச் செல்கின்ற தேவேந்திரன் முதலிய வானாட்டு வாழ்வோர், வேலை பொரும் கலிநீர் ஞாலத்தை - அலைகள் மோதுகின்ற ஒலியையுடைய கடல் சூழ்ந்த உலக மக்களை, புல் நெறியில் ஆக்கும் இருங்கலியை - (சூது முதலிய) வழியல்லா வழியிற் செலுத்தித் துன்புறுத்து கின்ற பெருமையுடைய கலியென்பானை, எதிர் கண்டார் - நேரிற் கண்டார்கள்.

1. அகம் : கஅச. 2. திருக்குறள், ௬௯௧.

(க - ரு.) தமயந்தியின் சுயம்வர மணமாலை பெறாது திரும்பிச் செல்கின்ற இந்திரன் முதலிய தேவர்கள், உலக மக்களைத் தீயவழிகளிற் செல்லவிட்டு அலைக்கின்ற கலியென் பானை எதிரில் கண்டார்கள் என்பதாம்.

(வி - ரை.) வேலை - கடல்: போவதும் வருவதுமாகிய வேலையையுடையதாதலால், அதற்கு வேலையென்பது காரணப் பெயர். வேலை பெறு அமுதம் - கடலில் தேவர்களால் கடையப் பட்டு எடுத்த அமிழ்தம். அதை உண்டார்க்கு நரை திரை மூப்புப் பிணி சாவு நீக்கி என்றும் இன்பந்தருவது; அதைப் போன்று இவளை அடையும் பேறுபெற்றார்க்கு அவை யெல்லாம் நீங்கப் பெற்று அவள் தன் ஒவ்வோர் உறுப்பும் பேரின்பம் தந்து நிற்ற லின், 'அமுதம்' என்றார். அவ்வமிழ்தம் கடலில் தோன்றியது; இவ்வமிழ்தம் அதில் தோன்றாதது; அது, பேருழைப்பின் பயனாகக் கிட்டியது; இஃது அவ்வாறின்றி எளிதிற் கிட்டியது; அது தேவர்கள் எல்லார்க்கும் உரியது; இது, மண்ணுலக மன்னன் ஒருவற்கே உரியது; அஃது, அஃறிணை; இஃது உயர் திணை; அஃது, அறிவில்லது; இஃது அஃதுளது என்பன போன்ற வேறுபாடுகள் உளதாகலான், அவ் வேறுபாடு குறித் தற்கு, 'வேலைபெறா' என்ற அடை கொடுத்தார். இவ்வாறே,

[1] 'மலையிடைப் பிறவா மணியே என்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ
யாழிடைப் பிறவா இசையே என்கோ
தாழிருங் கூந்தல் தையால்.'

எனக், கோவலன் கண்ணகியாரைப் பாராட்டிக் கூறியதாக இளங்கோ சிலம்பிற் கூறுவனவும் இக் கருத்தோ டொப்பவைத்து மகிழற்பாலன. இதனால் தமயந்தியின் அழகுநலத்தைக் கூறிய வாறும். அமிழ்தம் உயிர்க்கு இன்பூட்டு மென்பதனை,

[2] 'உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலால் பேதைக்
கமிழ்தின் இயன்றன தோள்.'

எனத் திருவள்ளுவர் தந்த காதலன் கூறுவதும் தெளிக.

[3] 'தாயிற் சிறந்தாரைச் சாரும் புயங்கேசன்
வாயிற் பெறாதஇள மாணிக்கம்—நாயனார்

1. சிலப்பதி. உ: எஎ-அ0. 2. திருக்குறள், கக0கூ.
3. திருக்காளத்தி நாதருலா.

வேட்டிருக்கத் திண்ணனூர் வேட்டம்போய்க் கொண்டுவரும்
சூட்டிறைச்சி தோயாச் சுவைச்சிறுதேன்—நாட்டியத்தர்
தண்டா மரையடிசேர் சங்கத்தோன் அந்தாதி
அண்டா முழுச்சிற் றலங்காரம்—தொண்டாகித்
தண்கை யிலையாரைச் சாரும் சிவகோசன்
வண்கைப் புகுதா மருக்கொழுந்து.'

எனப், பேதைப் பெண்ணின் பெருஞ்சிறப்பைக் குறிக்கத் திருக்காளத்தி நாதருலா ஆசிரியர், அத்தலத்து நிகழ்ந்த வரலாற்றுச் சிறப்பானன்றி வேறொரு சிறப்பான் தோன்றியதாக அமைத்த அழகு ஓவியத்தோடொப்ப இங்கேயும் 'வேலை பெறு அமுதம்' என்றாரென்க. திரு-செல்வம். செல்வமாக அருமையாகத் தோன்றிய வீமனுக்கு மகள் எனக் கொள்க.

[1]'நல்கூர்ந்தார் செல்வ மகள்.'

என்றார், கலித்தொகையினும். அதற்குப் 'பிள்ளையான் மிடிப்பட்டாருடைய செல்வத்தையுடைய மகள்' என உரைகண்டனர், நச்சினார்க்கினியர். வானாடராக இருந்தும், செயற்கரிய செயலெல்லாம் ஆற்றும் பணபுடையராக இருந்தும், தமயந்தி மணமாலைக்கு எக்கற்றிருந்து சென்றாராகலான், அவ்விழிவு தோன்ற 'மாலை பெறுதகலும் வானாடர்' என்றார். கற்றோராயினும் மற்றோராயினும செல்வராயினும் அல்லராயினும் அவர்களைப் பற்றித் துன்புறுத்தி அவர்தம் பீடழியச செய்யும் திறலுடையனாகலின், கலிக்குப் 'புன்னெறியிலாக்கும் இருங்கலி' என்ற அடைகொடுத்து மொழிந்தார். எதிர்கண்டார் - நேரில் கண்டார். வானாடர் என்றது, சுயம்வரத்துக்கு வந்திருந்த இந்திரன் அக்கினி வருணன் எமன் இவர்களையே குறித்தலால் ஒன்றொழி பொதுசசொல். புல்நெறி புல்லிய வழி: கீழ்மையான செயல்களில் தலைப்படச செய்தல் எனக் கலிக்கு ஆற்றல் மிகுதி தோன்றப் புலப்படுத்தியதாகக் கொள்க. (கரு௭)

**கலி, இந்திரன் கேட்டதற்கு, 'நான் தமயந்தியை மணந்துகொள்ள வருகிறேன்' என்றான் எனல்**

**கசூ௯.** ஈங்குவர வென்னென் றிமையவர்தம்கோன்வினவத்
தீங்கு தருகலியும் செப்பினான்—நீங்கள்
விருப்பான வீமன் திருமடந்தை யோடும்
இருப்பான் வருகின்றேன் யான்.

---

1. கலித்தொகை, ௯௦.

(இ - ள்.) இமையவர்தம் கோன் - தேவர்கட்கு வேந்தனான இந்திரன், எங்கு வரவு என் என்று வினவ-(நீ) இங்கே வருவதற்குக் (காரணம்) யாது என்று (கலிமகனைக்) கேட்க, தீங்கு தரு கலியும் - (மக்கட்குத் துன்பங் கொடுக்கின்ற அக் கலிமகனும், நீங்கள் விருப்புஆன - நீங்கள் விரும்புதற்குரியளான, வீமன் திரு மடந்தையோடும் - வீம மன்னனுடைய செல்வ மகளுடன். யான் இருப்பான் வருகின்றேன் - நான் (மணந்து அவளைக்) கூடியிருக்க வருவதானேன் என்றான்.

(க - து.) கலிமகனை இந்திரன் நீ வருங்காரணம் யாதென்று கேட்க அதற்கு அவன், 'நீங்கள் விரும்பியுள்ள தமயந்தியை மணந்து வாழ்வதற்காகவே வருகின்றேன்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) கலிமகன் தீமைக் குணத்தையே குணமாகக் கொண்டவனென்பதை நிலைக்குக் கொண்டு, முன்பாட்டில் 'புன்னெறியில் ஆக்கும் இருங்கலி' என்று கூறியதோடமையாது, இப்பாடலினும், 'தீங்கு தரு கலியும்' என்று மீண்டும் கூறினார். நீங்கள் என்பது உருபேற்றவழியும் உங்கள் என ஆகாமல் இயல்பாகநின்றது. 'இயல்பின் விகாரமும்' என்ற நன்னூல் நூற்பாவில் 'விகாரத்தியல்பும்' என்ற விதியாற்கொள்க 'மடந்தை' என்பது பருவப் பெயரைக் குறிக்காமல் பெண்ணென்னும் பொதுப் பெயராக நின்றது திருமடந்தை யென்பதற்குத் திருமகள் போன்ற தமயந்தியென்றும், செல்வம் போன்று போற்றத் தகுந்தவள் என்றும் வடிவு, தொழில் உவமமாகக்கொண்டு பொருள் கூறலுமாம். இருப்பான் : பானீற்று வினையெச்சம், வருகின்றேன் என்னும் வினைகொண்டு முடிந்தது. (கஔஅ)

இந்திரன், தமயந்தி 'நளனுக்கே மாலைசூட்டினாள் ;
நீ திரும்பிப்போ' என்றான் எனல்

கசுசு. மன்னவரில் வைவேல் நளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்—உன்னுடைய
உள்ளக் கருத்தை ஒழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து.

(இ - ள்.) வெள்ளைத் தனியானை வேந்து - வெண்ணிறம் பொருந்திய ஒப்பற்ற (ஐராவதமென்னும்) யானைக்கு அரசனாகிய இந்திரன், மன்னவரில் வைவேல் நளனே - மண்ணுலக வேந்தர்களில் கூர்மைபொருந்திய வேலையுடைய நளமன்னனே, மதி

வதனக் கன்னி மணமாலை கைக்கொண்டான் - நிறைநிலவை யொத்த அழகு பொருந்திய முகத்தாளாகிய தமயந்தியின் சுயம்வர மணம் பொருந்திய மலாமாலையைப் பெற்றான், உன்னுடைய உள்ளக்கருத்தை ஒழித்து ஏகுதி என்றான் - (ஆதலால்) உனது மனத்திற்கொண்டுள்ள ஆசையை இனி மாற்றிக்கொண்டு திரும்பிச் செல்வாயாக என்று (கலிமகனைப் பார்த்து) மொழிந்தான்.

(க - ரு.) இந்திரன், கலிமகனைப் பார்த்து, 'அரசர்களில் நளமன்னனுக்கே தமயந்தி சுயம்வர மணமாலை கிட்டிற்று; ஆதலால், நீ தமயந்திமேற்கொண்டுள்ள ஆசையை விட்டுவிட்டுத் திரும்பிச் செல்வாயாக' என்று கூறினான் என்பதாம்.

(வி - ரை.) வைவேல் நளன் - கூர்மைபொருந்திய வேற்படையையுடைய நளமன்னன். என்றது, படைவீரத்தாற் சிறந்தவனென்று குறித்தற்கு. மதிவதனம்: உவமைத் தொகை. கன்னி-கட்டழகுடையவள். கைக்கொள்ளுதல்-உரிமையாகப் பெறுதல். உள்ளக்கருத்து, கலிமகன் தமயந்தியை மணந்துகொள்ள விரும்பியிருக்கும் கோட்பாடு. வெள்ளைத் தனியானை - வெண்ணிறம் பொருந்திய ஒப்பற்ற யானை. தேவேந்திரன்பாலுள்ள யானை, மற்ற யானைகளினும் உருவத்தானும் நிறத்தானும் வெற்றி முதலியவற்றானும் சிறந்ததாகலான் 'தனியானை' எனறார். இவ் யானை சிறந்ததென்பதை [1] 'யானைக் கமரர் உம்பல்' என்றார் பிறரும். அதைத் தனக்குப் பெற்றிருக்கும் பேறுடையனாகலானும் மற்றச் செல்வ வளத்திலும் இச் செல்வம் கிட்டாத பெருஞ் செல்வமாக இருத்தலானும் இதனைப் பெற்றவன் என்பாராய்த் 'தனியானை வேந்து' எனச் சிறப்பித்துக் கூறினார். வேந்து, அரசு, அமைச்சு என்பனபோல் உயர்திணையைக் குறித்து நின்ற பண்புச் சொல். (கருகூ)

கலிமன்னன், சினங்கொண்டு சூளுரைத்தல்

கசுஎ. விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசர்க் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன் மற்றவள்தன் கேள்வனுக்குந் தீழ்மை
கொடுக்கின்றேன் என்றான் கோதித்து.

1. திருவள்ளுவமாலை, நடசு.

(இ - ள்.) கொதித்து - (அச் சொல்லைக்கேட்ட கலிமகன்) சினங்கொண்டு, விண் அரசர் நிற்க - வானுலக வேந்தர்களாகிய (நீவிர்) இருக்க, வெறி தேன் மணமாலை - மணம் வீசுகின்ற தேன் பொருந்திய சுயம்வர மணமாலையை, மண் அரசற்கு ஈந்த மட மாதின் எண்ணம் கெடுக்கின்றேன் - பூவுலக மன்னனாகிய நளனுக்குச் சூட்டிய அறியாமையையுடைய தமயந்தியின் ஆசையை அழிக்கின்றேன், மற்று அவள்தன் கேள்வனுக்கும் கீழ்மை கொடுக்கின்றேன் - அஃதல்லாமலும் அவள் கணவனாகிய நளனுக்கும் தாழ்வையுண்டாக்குகின்றேன், என்றான் - என்று கூறினான்.

(க - ரை.) இவ்வாறு கூறிய சொல்லைக் கேட்ட கலி 'உம்மைப்போன்ற வானுலக வேந்தரெல்லாம் இருக்க, மண்ணுலக அரசனான நளனுக்கு மணமாலை சூட்டிய அறியாமைக்குணமுள்ள தமயந்தியைக் கெடுக்கின்றேன்; அவள் கணவனாகிய நளனுக்கும் தீமையை உண்டாக்குகின்றேன்' என்று சினந்து கூறினான் என்பதாம்

(வி - ரை.) விண்ணரசர்: முன்னிலைப் படர்க்கையாக வந்த இடவழுவமைதி. 'எம்பியை ஈங்குப் பெற்றேன் என்னெனக் கரியது' எனத் தம்பியாகிய உன்னை எனற்பாலது 'எம்பியை' எனப் படர்க்கையாகக் கூறியதுபோற் கொள்க. மடம்: இளமை, அறியாமை முதலிய பொருள் குறித்த உரிச்சொல். ஈண்டு, மண்ணகத்தாரினும் விண்ணகத்தார் அழகு இளமை மிக்காராய், பிணி மூப்பு நரை திரை யற்றாராய்ச் சிறந்தவரா யிருப்ப அவரை நீத்து, கனியிருப்பக் காய் கவர்வார் போல, மண்ணுலக மன்னனை விரும்பி மணமாலை சூட்டினாளாதலின், 'மடமாது' என, அறியாமையுடையாளெனச் சினங்கொண்டு கூறினான் என்க. தாம் விரும்பிய பொருள் கிட்டப்பெறாதார் சினங்கொண்டு தம் விருப்பத்துக்கு மாறுபட்டாருக்குத் தீமை செய்ய முயல்வது உலகியல் ஆதலான், கலியும் தன் விருப்பங் கிட்டாதது கேட்டறிந்தவுடன் 'மடமாதின் எண்ணம் கெடுக்கின்றேன்.........தீமை கொடுக்கின்றேன்' என்றான். மற்று: வினை மாற்றுப் பொருளில் வந்த இடைச்சொல். கேள்வன், கேண்மை யென்னும் பண்படியாகப்பிறந்த பெயர்ச்சொல்; கேள்: கிளை - உறவு. [1]"கேள் கேடூன்றவும்" என்பதுங் காண்க. கீழ்மை தாழ்வு கொடுக்கும் செயல்: பண்பாகு பெயர். கொதித்தல் - சினந்து பொங்குதல். நெருப்புப் போன்று கெடுக்கும் நீர்மைத் தாகலின் கொதித்தலென்ற சொல் சினத்தைக் குறித்தது. [2]"சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி" என்றார், திருவள்ளுவரும். (கசுப)

1. அகம். சஉ. 2. திருக்குறள், ௩0௬.

இந்திரன், கலிமகனுக்கு நளன் பெருமையும் தமயந்தியின் கற்பின் பொற்பும் உரைத்துச் செல்லுதல்

கசுஅ வாய்மையும் செங்கோல் வளனும் மனத்தின்கண்
தூய்மையும் மற்றவன் தோள்வலியும்—பூமான்
நெடுங்கற்பும் மற்றவர்க்கு நின்றுரைத்துப் போனான்
அருங்கொற்ற வச்சிரத்தான் ஆங்கு.

(இ - ள்.) அடும் கொற்ற வச்சிரத்தான் ஆங்கு நின்று - எதிரிகளைக் கொல்லுகின்ற வச்சிராயுதப் படையையுடைய இந்திரன் அவ்விடத்தே சிறிது தாழ்த்துநின்று, அவன் வாய்மையும் - அந் நளமன்னனுடைய உண்மை நெறியையும், செங்கோல் வளனும் - நெறிமுறை வழுவாத ஆட்சியின் மாண்பும், மனத்தின் கண் தூய்மையும் - நடுநின்ற மனத்தின் நேர்மையும், மற்று தோள்வலியும் - இன்னும் தோளாற்றலும், பூமான் நெடும் கற்பும் - செந்தாமரை செல்வியாகிய திருமகளை யொத்த தமயந்தியின் நீங்காத கற்பு முறையும், அவர்க்கு உரைத்துப் போனான் - அக் கலிக்கு விளக்கிச் சொல்லிச் சென்றான்.

(ந - று.) இந்திரன் சிறிதுநேரம் ஆங்கே தாழ்த்து நின்று நளனுடைய உண்மை நெறி முதலியவற்றையும் தமயந்தியின் கற்புச் சிறப்பையும் கலிக்கு எடுத்துக்கூறிச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) ஆடவர்க்குரிய உயர்குணங்களிற் சிறந்தது உண்மை கடைப்பிடித்தல்; வேந்தர்கட்குரிய சிறப்பு கோல்முறை கோடாச் செங்கோலாட்சி; வீரர்கட்குரிய சிறப்பு தோளாற்றல்; இங்கே நளமன்னனுக்கு வாய்மை, நெறிமுறை, தோள்வலிமை முதலிய இவ்வெல்லாம் ஒருங்கே குடிகொண்டிருத்தலால், அவைகளையெல்லாம் கலியின் மனங்கொள்ளுமாறு கூறினான் தமயந்தியின் சிறப்பை விளக்கும்போது, பெண்கட்கு உயிரினும் சிறந்தது நாணம்; அதிலும் சிறந்தது, செயிர்தீர்காட்சிக் கற்பு என்ப ஆகலான், கற்பு என்னும் கலங்காநிலை பெற்ற விழுமிய பெண்தன்மையையுடையாள் என்பதையும் அவனுக்குக் கூறி, அவர்கள்பால் அணுகுதல் சிறந்ததன்று; 'அணுகாதே' எனக் குறிப்பால் உணாத்தினான் என்க. சொன்னவன், மெலியவனல்லன், வலியோன், தன்னினும் தோளாற்றலினும் வாளாற்றலினும் சிறந்தோனென்பதைக் குறித்தற்கு 'அடுங்கொற்ற வச்சிரத்தான்' என்ற பெயராற் கூறினானென்க. பூமான் கற்பு என்பதற்கு, நிலவேந்தனுடைய கல்வி முறையென்று பொருள்கூறலுமாம். என்னே!

[1] 'தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்
நீங்கா நிலனாள் பவற்கு.'

என்பது வள்ளுவர் மறையாகலான், அரசர்கட்குக் கல்வி சிறந்த தென்பது பெறப்படும். ஆதலால் என்க. (கசுக)

கலிமகன், நளன் 'தமயந்தியுடன் கூடி இருக்கப் பொறுக்கேன்' என்று கூறல்

கசுகூ. செருக்கதிர்வேல் கண்ணியுடன் தேர்வேந்தன் கூட
இருக்கத் தரியேன் இவரைப்—பிரிக்க
உடனாக என்றான் உடனே பிறந்த
விடநாகம் அன்னான் வெகுண்டு.

(இ - ள்.) உடனே - (இவ்வாறு இந்திரன் கூறியதைக் கேட்ட) அப்போதே, பிறந்த விடநாகம் அன்னான் - தான் பிறந்த போதே நஞ்சோடு தோன்றிய நாகப்பாம்பை ஒத்தவனாகிய கலி மகன், வெகுண்டு - சினந்து, செரு கதிர்வேல் கண்ணியுடன் - போரிற் சிறந்த ஒளியெறிக்கின்ற வேல்போன்ற கண்களையுடைய தமயந்தியோடு, தேர்வேந்தன் கூடஇருக்க தரியேன் - தேரினை யுடைய நளமன்னன்கூட ஒன்றுபட்டு வாழ்வதற்கு மனம் பொறுக்கேன், இவரைப் பிரிக்க உடன் ஆக என்றான் - இவ்விரு வர்களையும் தனித்தனியாக (நான்) பிரித்துவிடுதற்கு நீவிரும் உடன்படுவீராக என்று கூறினான்.

(ந - து.) நஞ்சுடன் பிறந்த நாகப்பாம்பை யொத்த கலிமகன், இந்திரன் முதலியோரைப் பார்த்து, 'நளன், தம யந்தி இருவரும் ஒன்றுபட்டு வாழ்தற்கு நான் மனம் பொறேன் ; ஆதலால், இவர்களைப் பிரித்தற்கு நீவிர் உடன் படுவீராக' என்று சொன்னான் என்பதாம்.

(வி - ரை.) செரு கதிர் - செருச் செய்கின்ற ஒளியுடைய என வேலினுக்குச் சிறப்புக் கூறியவாறு. வேல் : வெல்லும் தன் மையுடைய தென்பது பொருள். அதுபோன்ற வெம்மையுடைய தெனக் கண்கட்கு அடைமொழி. உடன் : மூன்றும் வேற்றுமை யுருபு, உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. கொடுமையுடை யாரைக் குறித்தற்கு நச்சுப் பாம்பை உவமை கூறுவது மரபு. அந்த முறையில், நல்லாரென்றான்; தீயோரென்றான்; கற்றோர்

1. திருக்குறள், ருஅரு.

என்ஞன்; மற்ரூேர் என்ஞன்; செல்வர் என்ஞன்; வறியோர் என்ஞன்; யாராக இருப்பினும் தன் கொடிய ஆற்றலால் அலைப்பவன் ஆதலால், 'விடநாகம் அன்ஞன்' என்ருர். உடன்ஆக - உடன்படுக; உதவியாக இருப்பீர்களாக. இவரை: சுட்டடியாகப் பிறந்த பெயர். ஈண்டு நளன், தமயந்தி. (கசுஉ)

ஞாயிறு, திருமணங்காண வருவான்போல் தோன்றுதல்

கஎ0. வெங்கதிரோன் தானும் விதர்ப்பன் திருமடந்தை
மங்கலநாள காண வருவான்போல்—செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கும் நன்னெஞ்சில்
தீயடங்க ஏறிஞன் தேர்.

(இ - ள்.) வெம் கதிரோன் தானும் - வெப்பமாகிய கதிர்களையுடைய ஞாயிறும், விதர்ப்பன் திருமடந்தை - விதர்ப்ப நாட்டுக்குரிய வீமனுடைய செல்வ மகளாகிய தமயந்தியின், மங்கல நாள் காண வருவான்போல் - திருமணச்சிறப்பைக் காண்பதற்கு வருபவன்போல, செம் குமுதம் வாய் அடங்க - செவ்வல்லி மலர்கள் இதழ்களை மூடிககொண்டு குவியவும், மன்னற்கும் வஞ்சிக்கும் நளமன்னனுக்கும் வஞ்சிக் கொடிபோன்ற தமயந்திககும், நல்நெஞ்சில் தீ அடங்க - உள்ளன்புடைய மனத்தில் காதல தீத்தணிய, தேர் ஏறிஞன் - தேரேறிப் புறப்பட்டான்.

(ந - து.) தமயந்தியின் திருமணங் கண்டு களிப்பதற்கு வருபவனைப்போல, செவ்வல்லி மலர்கள் குவிய, நளன் தமயந்தி நெஞ்சிற் காதல் தீத் தணிய, ஞாயிறு தேரேறிப் புறப்பட்டான் என்பதாம்.

(வி - ரை) வெம்கதிரோன் - வெப்பமுள்ள ஒளிக்கதிர்களையுடையோன் என்பது பொருள். மங்கலநாள் - திருமணக் காட்சி. நாள் என்பது ஆகுபெயராகக் காட்சியைக் குறித்தது. ஞாயிறு தோன்றுங்கால் அல்லிமலர் குவிதலும் தாமரை மலர் விரிதலும் இயல்பு. காதலால் நளனும் தமயந்தியும் ஒருவரையொருவர் 'என்று கூடிக்களிப்போம்' என்று கொண்டிருந்த காதலென்னும் நெருப்புத் தன் ஆற்றல் குன்றியமைய எனக, காலை ஞாயிறு தோற்றத்தோடு டைவுபடுத்தி அன்று காலைப்பொழுதில் திருமணம் நிகழ்வதற்கு ஞாயிற்றின் தோற்றத்தை எதிர்பாரத்திருந்தபடி தோன்றிற்றெனபதைக் குறிக்க அவர் திருமணங் காண வருவான் போலென்று தற்குறிப் பேற்றங் கொடுத்துக் கூறிஞர்.

இவ்வாறே சூரியன் தோற்றத்தை இளங்கோவடிகள் சிலப்பதிகாரப் பெருங்காப்பியத்தில்,

[1] 'வேலை மடற்றாழை உட்பொதிந்த வெண்தோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைத்
துளிநறவந் தாதூதத் தோன்றிற்றே காமர்த்
தெளிநிற வெங்கதிரோன் தேர்.'

என்று கூறியதும் இதனோடு ஒத்த கருத்தாதலை உணர்க. வெண்குமுதம் செங்குமுதம் என அல்லி இருவகைய. ஆயினும் செவ்வல்லி தோற்றத்தால் சிறந்திருத்தலின், அதனைமட்டும் கூறினும் இரண்டுக்கும் கொள்க. என்னை?

[2] 'ஒருமொழி யொழிதன் இனங்கொளற் குரித்தே.'

என்பது விதியாகலான். சோற்றையுண்டான் என்னும்போது அதனுடன் சார்ந்த கறி குழம்பையும் உண்டானென்று கொள்ளப்படுதல் போல. (கசா௬)

**தோழியர், தமயந்திக்கு அணிகள் அணிந்து அழகுறுத்தல்**

**கஎக.** இன்னுயிர்க்கு நேரே இளமுறுவல் என்கின்ற
பொன்னழகைத் தாமே புதைப்பார்போல்-மென்மலரும்
சூட்டினார் சூட்டித் துடிசேர் இடையாளைப்
பூட்டினார் மின்னிமைக்கும் பூண்.

**(இ - ள்.)** இன் உயிர்க்கு இளமுறுவலே நேர் என்கின்ற - (ஆடவர்தம்) இனிய உயிர்க்கு ஒத்தது இவளின் புன்னகை ஒன்றே என்று கூறுகின்ற, பொன் அழகை தாமே புதைப்பார் போல் - (வண்ணமகளிர்) திருமகளனைய தமயந்தியின் அழகை (அழகுபடுத்தற்குரியரான) தாங்களே மறைப்பார்போல, துடி சேர் இடையாளை உடுக்கையின் நடுஇடம் போல் வடிவம் பொருந்தி மிளிர்கின்ற இடையையுடைய தமயந்திக்கு, மென் மலரும் சூட்டினார் - மெல்லிய மலர்மாலையும் (பிற பொன்மாலை முதலியனவும்) அணிவித்தனர், சூட்டி (அவ்வாறு) அணிவித்தபின், மின் இமைக்கும் பூண் பூட்டினார் - ஒளிவிடுகின்ற (பல்வகை) அணிகளையும் அணிந்தார்கள்.

**(க - து.)** ஆடவர், 'தம் உயிரை யொத்தது இவள் தன் புன்னகை யொன்றே' என்று போற்றுகின்ற தமயந்

---

1. சிலப்பதி. சு : இறுதி வெண்பா. 2. நன்னூல், ௩௫௮.

திக்கு வண்ணமகளிர் அழகை மறைப்பார் போன்று பல் வகை அணிகள் அணிந்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) ஆடவா தமயந்தியின் புன்சிரிப்பொன்றே தம் உயிரை யொத்ததென்று பாராட்டுவோர்களாயின், அவள்தன் ஏனைய உறுப்புக்களின் அழகு சொல்லவேண்டாதாயிற்று. அதனால் அவர்க்கு ஏனைய உறுப்புக்களின் மேற்கொண்டுள்ள ஆராக் காதல் அறையவேண்டுவதின்றெனக் குறித்தவாறும். [1] "ஆடவர் அவாவின தளவே' என்றார் பிறரும். [2] 'பாகு பொதி பவளம் திறந்து நிலாவுதவிய, நாகிள முகத்தின் நகைநலம்' என்றார், இள முறுவற் சிறப்பை இளங்கோவடிகளாரும்.

பொன் - திருமகள் : அவள் போன்றாளைக் குறித்தலால் உவம ஆகு பெயர். முன்பும், 'பூந்தார மெல்லோதிப் பொன்' என்றதூஉம் காண்க. அவள்தன் இயற்கை அழகே கண்டார் நெஞ்சைக் கனிவிக்கும் தன்மையது. பெண்களும் ஆண்மையை விரும்பும் பேறுகின்றார்; அவட்குச் செயற்கை முறையில் அணிகள் அணிதல் அவள்தன் இயற்கையழகை வெளிக்காட்டாது மறைப்பது போன்றிருத்தலின், 'தாமே புதைப்பார் போல்' என்றார். இவ்வாறே கம்பநாடரும் சீதையின் திருமணத்துக்கு வண்ணமகளிர் அவட்கு மேலும் வனப்புறுத்த அணிகள் பல அணிவித்தபோது, 'அவள் தன் மேனியழகு மறைவதை அறியாராய், அமிழ்தைச் சுவைப்படுத்துவார்போல் அழகினுக்கு அழகு செய்வதானார். அதனால் இப்பேருலகம அறியாமை நிரம்பியது! என்னே உலகியல்! இஃதோ' வென்று வியப்பும் நயப்பும் தோன்றக் கூறினார். அது :

[3] "அமிழிமைத் துணைகள் கண்ணுக்
கணியென அமைக்கு மாபோல்
உமிழ்சுடாக் கலன்கள் நங்கை
உருவினை மறைப்ப தோரார்
அமிழ்தினைச சுவைசெய் தென்ன
அழகினுக் கழகு செய்தார்
இமிழ்திரைப் பரவை ஞாலம்
ஏழைமை உடைத்து மாதோ.'

என்பதாம். மங்கல வினைகட்கு முதன்மையானது மலர்மாலை ஆதலால், அதனை முதலில் வைத்து 'மென்மலரும் சூட்டினார்'

1. நைடதம், அன்...தூது : உஉ.    2. சிலப். அ : அ௦ - க.
3. கம்பராமா. கோலங் : ௩.

என்றார். மலர் அதனாலாகிய மாலைக்கு ஆதலால் காரியவாகு பெயர். பூ முதன்மையான தென்பதை நல்லாசிரியரின் சிறப்புக்குப் பவணந்தி முனிவர்,

[1]"மங்கலம் ஆகி இன்றி யமையாது
யாவரும் மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் வுடையது பூவே.'

என்றதறிக. 'மின் இமைக்கும் பூண்' என்ற பொதுமையால் சிலம்பு முதல் தலையணியாம் சூளாமணி ஈறாக என்பது பெற்றாம். பொன்மலரும் என்பதில் உம்மை இறந்தது தழீஇய எச்ச வும்மை. (கசுசு)

கணியர், குறித்த நாளில் திருமணம் நிகழ்த்தினரெனல்

களஉ. கணிமொழிந்த நாளில் கடிமணமும் செய்தார்
அணிமொழிக்கும் அண்ண லவற்கும்-பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் அறைபுக்கார்
மற்றெவரும் ஒவ்வார் மகிழ்ந்து.

(இ - ள்.) கணிமொழிந்த நாளில் - கணிதநூல் வல்லுநர் குறித்த நன்னாளில், அணிமொழிக்கும் அண்ணல் அவற்கும் - அழகிய பேச்சினளாகிய தமயந்திக்கும் பெருமை பொருந்திய நளமன்னனுக்கும், கடிமணமும் செய்தார் - சிறப்புமிக்க திருமணஞ் செய்வித்தார்கள், மற்ற எவரும் ஒவ்வார் - தந்நிகரில்லாது தாமே நிகரான நளனும் தமயந்தியும், பணிமொழியார் - வணங்கிய வாய்ச்சொற்களையுடைய ஏவற்பெண்கள், குறு ஏவல் செய்ய - அடித்தொழிலாட்டியராய் இவ்விருவர்க்கும் சிறுசிறு ஏவல் தொழில்களைக் குறிப்பறிந்து செய்துவர, மகிழ்ந்து - மகிழ்ச்சியிற் சிறந்து, கொழும் பொன் அறைபுக்கார் - (தாம் தங்கி இருந்து வருதற்கமைத்துள்ள) செம்பொன்னான் இயன்ற உள்ளறையில் போய்ச் சேர்ந்தார்கள்.

(க - ரை.) தமயந்திக்கும் நளனுக்கும் சோதிடர்கள் குறித்த நன்னாளில் திருமணஞ் செய்தார்கள்; தந்நிகரில்லா அவர்கட்கு ஏவற்பெண்கள் குற்றேவல் செய்ய அவர்கள் செம்பொன்னாலாகிய அறையில் புகுந்திருந்தார்கள் என்பதாம்.

---

1. நன்னூல். ௩௦.

(வி - ரை.) கணி : கணிப்பவன்; கணக்கிடுவோன். கோள்களின் நிலையைக் கணித்தலையுடையோன் என்பது பொருள். கணித்தல் என்பதிலுள்ள, தல்விகுதி கெடக் கணியென நின்ற முதனிலைத் தொழிற்பெயர்: ஈண்டுத் தொழிலாகு பெயராக அஃதுடையானைச் சுட்டிற்று. கடி - சிறப்பு. பிற மணங்கள் போலன்றிக் காதலாற் பிணிப்புண்டு இயற்கைவழி நிகழ்ந்த சுயம்வரமாகலான், 'கடிமணம்' என்றார் மணமும் என்பதில் உள்ள உம்மை முன் சுயம்வரமன்றித் திருமணமும் நிகழ்ந்ததென்றதைக் குறித்தலால் இறந்தது தழீஇய எச்சவும்மை. அணிமொழி- அழகிய சொல். அஃதாவது, மெலலிய இனிய மழலைச் சொல். அஃதுடையாளைக் குறித்தலால், பண்புத் தொகைநிலைக் களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. அண்ணல் - பொருந்துதல், சேர்தல் என்னும் பொருட்டு அஃது பெருமை பொருந்துதல் என்னும் பொருளாய் அஃதுடைய நளவேந்தனுக்கானதால் தொழிலாகு பெயர். 'அணி மொழி' எனத் தமயந்தியை முன்வைத்து, 'அண்ணல்' என நளனைப் பின்வைத்தது, கற்புக் கடம்பூண்ட பொற்புடையளாகலின் என்க. என்னை? இளங்கோ வடிகள் ஆக்கியருளிய செஞ்சொற் காப்பியத்தில் 'ஈகைவான் கொடியன்னாள்' எனக் கண்ணகியாரை முன்வைத்தும், 'இருநிதிக் கிழவன் மகன்' எனக் கோவலனுரைப் பின்வைத்தும் கூறியது போல் கொள்க. பணிமொழியார் - தாழ்மையான சொற்களையுடையார் : ஈண்டு ஏவற்பெண்களைக் குறித்தது, ஒன்றொழி பொதுச் சொல். ஏவல் செய்வோர்க்குப் பணிந்த மொழியும் தாழ்ந்த பண்பும் இருக்கவேண்டிய முதன்மையாகலான், 'பணிமொழியார்' என்றார். அறை - அறுககப்படுவது : வரையறுத்த இடத்தைக் குறிப்பதால் இதுவும் தொழிலாகு பெயர். (கசுஞ)

சேர்க்கை வகை கூறுதல்

கஎ௩. செந்திருவின் கொங்கையினும் தேர்வேந்தன் ஆகத்தும்
வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து--வெந்தீயும்
நஞ்சும் தொடுத்தனைய நாம மலர்வாளி
அஞ்சும் தொடுத்தான் அவன்.

(இ - ள்.) செந்திருவின் கொங்கையினும் - செம்மையிற் சிறந்த திருமகள் போன்ற தமயந்தியின் கொங்கைகள் மீதும், தேர்வேந்தன் ஆகத்தும் வந்து உருவ - தேரையுடைய நள மன்னன் மார்பின் மீதும் பாய்ந்து ஊடுருவிச் செல்லும்படி, வார்சிலையை கால்வளைத்து - நீண்ட கரும்பு வில்லின் நுனியைப் பற்றி வளைத்து, வெம்தீயும் நஞ்சும் தொடுத்த அனைய - வெப்ப

மான தீயையும் நஞ்சையும் ஒன்றுபடுத்திச் சேர்த்தது போன்றிருக்கின்ற. நாம மலர்வாளி அஞ்சும் - அச்சந் தருகின்ற மலரம்புகள் ஐந்தையும், அவன் தொடுத்தான் - அம்மலரம்புக் குரியனாகிய மன்மதன் கோத்து எய்தான்.

(ந - ரை.) நளன், தமயந்தி இருவர்களின் மார்பு களிற் பாய்ந்து ஊடுருவிச் செல்லும்படி மன்மதன் ஐவகை மலரம்புகளையும் வில்லிற் கோத்து எய்தான் என்பதாம்.

(வி ரை.) தமயந்தியும் நளனும் தனியறை புகுந்து மலரணை மீது இருந்தபோது அவ்விருவர்க்கும் காதலை உண்டாக்குதற் பொருட்டு மன்மதன் மலரம்புகள் ஐந்தையும் தேர்ந்தெடுத்து மார்பில் ஊடுருவிச் செல்ல எய்தான் என, அவர்தம் காதல்மிக்க நிலையை உணர்த்தினர். செந்திரு : செம்மையாகிய திருமகள் போன்றவள் என விரிதலால் பண்புத்தொகை நிலைக் களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. ஆகம் - மார்பு. பாணங்கள் மலரா யினும் காதலர்தம் மார்பிற் புகுந்ததும் நெருப்பும் நஞ்சும் போல் கொடுந்துன்பம் விளைத்தலான், 'வெந்தீயும் நஞ்சும்.........மலர் வாளி' என்றார். நாம்-அச்சம். அது நாமம் என அம் சாரியை யேற்று நின்றது.

[1]"பேம்நாம் உருமென வரூஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள."

என்றார் தொல்காப்பியர். நாம மலர்வாளி என்பதற்குத் தனித்தனி வெவ்வேறு பெயருடைய வாளி என்றலுமாம். அவன் என்பது பண்டறி சுட்டாய் 'மலர்வாளி அஞ்சும்' என்னும் குறிப்பால் மன் மதற்கு ஆயிற்று. அஞ்சு : ஐந்து என்பதன் போலி. ஞ, ந வுக்கும் ச வுக்கும் போலி. (கசுசு)

### நளனும் தமயந்தியும் நீரும் நீரும் கலந்தாற்போல் ஒன்று கலந்தாரெனல்

களசு. ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்கி
இருவர்எனும் தோற்றம் இன்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானும் காரிகையும் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று.

---

1. தொல். அசுஅ.

(இ - ள்.) பொருவெம் கனற்கு எயும் வேலானும் - போர் செய்கின்ற கொடுமையான நெருப்பினை யொத்த வேற்படை யேந்திய நள மன்னனும், காரிகையும் - தமயந்தியும், ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்கி - (அவன் ஐந்துந் தொடுத்தபின்) ஒருவர் உடம்பின் மீது மற்றொருவர் (உடம்பு உராய்ந்து) ஒன்று பட்டுத் தழுவி, இருவர் எனும் தோற்றம் இன்றி - இருவரொன்று கூறற்கியலாப் பாகுபாடற்று, புனற்கே புனல் கலந்தால் போன்று சேர்ந்தார - நீருடன் நீர் ஒன்று கலந்து வேறற நிற்பது போன்று இரண்டறக் கலந்து கூடினார்கள்.

(க - ரு.) நளனும் தமயந்தியும் ஒருவரோடு ஒருவர் ஒன்றுபட்டு நீரும் நீரும் கலந்தாற்போன்று வேறுபாடற்று இரண்டறக் கூடினார்கள் என்பதாம்.

(வி - ரை.) ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்குதல், காதலாற் றழுவுதல். அஃதாவது, முயக்கிடைக் கண்வளியும் ஊடு செல்லா வாறு ஒன்றுபட்டு இறுகிப் பிணைதல். இதனை இளங்கோவடிகளார், கண்ணகியாரும் கோவலனும் காதலாற் பிணைந்து பிரிவின்றியைந்த அன்பு நிலையைக் காட்டப் போந்தகாலை,

[1]"தூமப் பணிகள்ஒன்றித் தோய்ந்தால் என ஒருவார்
காமர் மனைவியெனக் கைகலந்து—நாமம்
தொலையாத இன்பமெலாம் துன்னினார்.'

எனவுரைத்ததூஉம் இக் கருத்தோ டொத்ததாதலை அறிக.

புனற்கே புனல் கலந்தாற் போல்வது என்பது, அன்பாற் பிணைப்புண்ட நெஞ்சினராக 'எக்காற் காண்பேம்; எக்கால் உரையாடுவேம்; எக்கால் தழுவுவேம்' என்று ஒரு நாளை ஏழுநாள் போன்று ஊழிபோன்று கழியக்கழியாத நிலையில் எண்ணி யெண்ணி ஏக்கற்றிருந்து கலந்த நிலையை. இருவரும் ஒருவராய்க் கலந்த நிலை, ஒரு குவளையிலுள்ள நீரையும் மற்றொரு குவளையிலுள்ள நீரையும் வேறொன்றில் ஒன்றாக ஊற்றியபோது அந்நீர் தனித்தனி நீராகப் பிரிக்க இயலாததாய் வேறுபாடற்று ஒன்றாகக் கலந்து நிற்பதுபோல நின்றாரென்பதைக் குறித்ததாம்.

[2]"யாயும் ஞாயும் யாரா கியரோ
எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்
யானும் நீயும் எவ்வழி அறிதும்
செம்புலப் பெயல்நீர் போல
அன்புடை நெஞ்சம் தாங்கலந் தனவே.'

---

1. சிலப். உ : இறுதி வெண்பா. 2. குறுந்தொகை : ௪0.

என்று காதலர் வியந்துகூறுதல் இயல்பாகலான், இருவரும் ஒன்று கலந்தன ரென்க. (கசுஎ)

தமயந்தி, நளனுடன் கலவிப்போர் புரிந்தாள் எனல்

கஎரு. குழைமேலும் கோமான் உயிர்மேலும் கூந்தல்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
அல்லோடும வேலான் அகலத் தோடும்பொருதாள்
வல்லோடும் கொங்கை மடுத்து.

(இ - ள்.) குழைமேலும் கோமான் உயிர்மேலும் - (தமயந்தியானவள்) தன் காதுகளின்மீதும் நளமன்னன் உயிரின்மீதும், கூந்தல் மழைமேலும் - தன் கூந்தலாகிய மேகத்தின் மீதும், வாள் ஓடி மீள - தன் கண்ணாகிய வாளானவை விரைந்து சென்று திரும்ப அல்லோடும் வேலான் அகலத்தொடும் - ஒளி வீசி இருளை ஓட்டுகின்ற வேலேந்திய நளமன்னனுடைய மார்போடு வல் ஓடும் கொங்கை மடுத்து - சூதாடும் காய்கள் தோற்றோடுகின்ற அழகுபொருந்திய கொங்கைகளைக் கொண்டு தாக்கி, விழைமேலே பொருதாள் - விருப்பம் மிகுதிப்படக் காதலாற் கலவிப் போர் செய்தாள்.

(க - து.) தமயந்தியின் கண்கள் தன் காது, நளன் உயிர், தன் கூந்தல் இவைகளுள் சென்று மீளத் தன் காதல் விருப்ப மிகுதியால் நளன் மார்போடு தன் கொங்கைகள் அழுந்தப் போர்தொடுத்தாள் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தி தன் காதற்கணவனாகிய நளன்மேற் கொண்ட ஆரா அயராக் காதலினால் தன் கண்களால் அவனுடைய மார்பு தோள் முகம் முதலிய அழகைத் திருப்பித் திருப்பிப் பார்த்தவண்ணமாக இருந்தாள் என்பதைக் குறிக்க 'வாளோடி மீள' என்றார். வாள் போன்ற கண்களை வாள் என்றது ஆகுபெயர். கடைக்கண்ணால் நளனழகுருவைப் பார்க்குங்கால், கண்கள் காதளவுவரை செல்லுமாதலின், 'குழைமேலும்' என்றார். அவள் பார்க்குங்கால் நளன் உயிர் மகிழ்வுகொண்டு மேலும் மேலும் அறிதோறறியாமை கண்டாற்போன்று தமயந்தி மேல் காதல் பொங்கிப் பொங்கித் ததும்பலின், 'கோமான் உயிர் மேலும்' என்றார். கண்ணை மேலோட விழித்துப் பார்த்தபோது கண் நெற்றிவரை உயர்ந்துபோதலின் 'கூந்தல் மழை மேலும்' என்றார். கண்ணை மட்டும் ஈண்டுக் கூறினாராயினும் காதலாற் பிணிப்புண்டு காதலின்பந்துய்ப்பார்க்கு கண்டும் கேட்டும் உண்டும்

உயிர்த்தும் தொட்டும் இன்புறுதல் இயற்கையாதலால் அவைகளை யுங் கொள்க. அகலம் - மார்பு. பொருதல் தாக்குதல்: மோது தல், ஈண்டு விட்டுவிட்டுத் தழுவுதல். வல் - சூதாடு கருவி. இதனைத் தற்காலத்தில் நாயென்பார். சொற்கேட்டான் என்னும் சூது விளையாட்டிற்குக் கட்டங்களில் வைத்தாடுவது பம்பரம் போன்று மேல்பாகம் சிறுத்தும் அடிப்பாகம் பெருத்துமிருத்தல் தன்மையினால் அஃது கொங்கைகட்கு உவமையாயிற்று. அஃது ஓடுதல், அதன் அழகு இதற்கு ஒவ்வாதிருத்தல். அதனை இதைக்கண்டு அஞ்சி ஓடுதலாகக் குறித்து இதன் ஏற்றத்தை உணர்த்தினார். இதில் தமயந்தி செய்த கலவியின்பத்தைக் கூறிய வாறு. அல்லோடும் - இரவை ஓட்டும்: பிறவினை. (கசுஅ)

### தமயந்தியின் காதலாகிய ஆறு பாய்தலால் நளன் மார்பில் குங்குமம் படிந்ததெனல்

கஎசு. வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தின்
ஈர இளவண்டல் இட்டதே—நேரபோருத
காராரும் மெல்லோதிக் கன்னியவள் காதல்எனும்
ஓராறு பாய உடைந்து.

(இ - ள்.) நேர் பொருத - நேரில் புணர்ந்து கலவிப் போர் செய்த, கார் ஆரும் மெல் ஓதி - கரியநிறம் பொருந்திய மெல்லிய கூந்தலையுடைய, கன்னி அவள் காதல் எனும் - கட்டழகுடையவ ளாகிய தமயந்தியின் காதலென்கின்ற, ஓர் ஆறு பாய - பெரிய ஆறு பாய்ந்தோடுதலால், உடைந்து வீரன் அகலச் செறுவின்மீது ஓடி - மடைதிறந்து போர்வீரனாகிய நளமன்னனது மார்பாகிய வயலின்மேல் (வெள்ளம்) பெருகியோடி, குங்குமத்தின் ஈர இள வண்டல் இட்டது - குங்குமச் சாந்தின் குளிர்ச்சி பொருந்திய மெல்லிய வண்டலை உண்டாக்கிற்று.

(க - ரை.) தமயந்தியின் காதலென்னும் பேராறு பாய்ந்து நளமன்னன் மார்பென்னும் வயலிற் பெருக் கெடுத்துச் செல்வதால் அங்கே குங்குமக் குழம்பின் மெல்லிய வண்டல் படிந்து நின்றது.

(வி - ரை.) வீரன்: [1]"காலனும் காலம் பார்க்கும் பாராது வேலீண்டு தானை விழுமியோர்"

---

1. புறம்: சக.

என்பாராகலின், நளனை வீரனென அவன் வெற்றிச் சிறப்பைக் கூறிக் காதலாற் கட்டுண்ட நிலையைக் கூறினர். கம்பர் இராவணன் வணங்காமுடி வேந்தன் என்பதைச் சுட்டுங்கால்,

[1]"வலியநெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க."

என்றார். அகலச் செறு இருபெயரொட்டுப் பண்புத் தொகை. காதலால் துவக்குற தலைப் போர் செய்வதாக உருவகப்படுத்தி 'அகலச் செறுவின் மீதோடி' என்றார். செறு - வயல் : சேற்றால் நிறைந்தது என்னும் பொருள். சேறு என்பது செறு எனக் குறுகிற்று. நீர்பெருகி ஓடுங்கால் ஓடுகின்ற வழியில் நீர் சென்ற பின், இளமணல் கொழித்துச் செல்வது இயற்கை. அதுபோல் தமயந்தி காதலென்னும் நீர், நளமன்னன் மார்பென்னும் வயலிற் பாய்ந்தோடியதால் தமயந்தி கொங்கைகளிற் படிந்திருந்த குங்குமத்தோடு சேர்ந்த கலவைச் சாந்து என்னும் வண்டல் படிந்தது என உருவக அணியாக்கிக் கூறினர். வண்டல் - கல்மண் சேர்ந்து கலவாத மெல்லிய சேற்றுக் குழம்பு. கார் - கருமை; அல்லது மேகம் போன்ற என்று பொருள் கொள்ளலுமாம். உடைந்து - நாணனது உடைவுபட்டு என்று கொள்க. (கசுசு)

நளன், தமயந்தியின் கொங்கை முதலியன பொருந்தக் கூடினனெனல்

கஎஎ. கோங்கை முகங்குழையக் கூந்தல் மழைகுலையச்
செங்கயற்கண் ஓடிச் செவிதடவ—அங்கை
வளைபூசல் ஆட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கோல்யானை வேந்து.

(இ - ள்.) விளைபூசல் கொல்யானை வேந்து - (பகைவரோடு) உண்டாகும் போரில் (அவர்களைத் தவறாமல்) கொல்கின்ற வலிமை பொருந்திய யானைப் படையையுடைய நளமன்னன், மடந்தையுடன் - தமயந்தியோடு, கொங்கைமுகம் குழைய - (அவளுடைய) கொங்கை முற்றங்கள் அழுந்த, கூந்தல் மழைகுலைய - கூந்தலாகிய மேகம் அவிழ்ந்து தொங்க, செம் கயற்கண் ஓடி செவிதடவ - செவ்வரிபடர்ந்த கெண்டைமீன் போன்ற கண்கள் விரைந்துசென்று காதுகளைத் தடவ, அம்கை வளை பூசல்ஆட - அழகிய கைவளையல்கள் (ஒன்றோடொன்று தாக்கி) ஒலிக்க, சேர்ந்தான் - கூடினன்.

1. கம்பராமா, மாரீசன் வதை : ௬.

(க - து.) நளன், தமயந்தியுடன் சேருங்கால், அவள் கொங்கைமுகங்கள் நளன் மார்பில் அழுந்தின; அவள் கண்கள் செவிவரை ஓடின; கைவளையல்கள் அசைந் தொலித்தன; கூந்தல் சோர்ந்தது என்பதாம்.

(வி - ரை.) கொங்கை முகம் - கொங்கையினது முகம் என விரித்து ஆறன்தொகையாகக் கொள்க. கலவி நிகழுங்கால் கொங்கைகள் பொருந்தல், கண்பார்வை காதலர்பால் செல்லல் கைவளையல்கள் உராய்ந்தொலித்தல், கூந்தல் சோர்தல் முதலியன நிகழ்தல் இயற்கைத்தாதலின், அவ்வியற்கை முறை பிழையாது படிப்படியாகக் கூறினரென்க. குழைய தடவ ஆட முதலிய செயவெனெச்சங்கள் காரணப்பொருட்டாக நிகழ் காலங் காட்டின. (௧௭௦)

நளன், தமயந்தியோடு குண்டினபுரத்தில் நெடுங்காலம் கூடியிருந்தான் எனல்

௧௭௮. தையல் தளிர்க்கரங்கள் தன்தடக்கை யாற்பற்றி
வையம் முழுதும் மகிழ்தூங்கத்—துய்ய
மணந்தான் முடித்ததற்பின் வாள்நுதலும் தானும்
புணர்ந்தான் நெடுங்காலம் புக்கு.

(இ - ள்.) தையல் தளிர்க்கரங்கள் - தமயந்தியினுடைய மாந் தளிர் போன்ற கைகளை, தன் தடக் கையால் பற்றி - தன் பெரிய கைகளினாற் பிடித்து, வையம் முழுதும் மகிழ்தூங்க - உலகமக்கள் யாவரும் மகிழ்ச்சியில் திளைக்க, துய்ய மணம் முடித்ததன்பின் - சிறந்த திருமணம் செய்தபின்னர், வாள்நுதலும் தானும் - ஒளி பொருந்திய நெற்றியையுடையவளாகிய தமயந்தியும் நளமன்னனு மாக, புக்கு நெடுங்காலம் புணர்ந்தான் - அங்கேயே தங்கி நீண்ட காலம் சேர்ந்திருந்தான்.

(க - து.) நளன் தமயந்தியை உலகமக்கள் மகிழும் படி திருமணஞ் செய்து நெடுங்காலம் அங்கேயே இன்புற்று வாழ்ந்திருந்தான் என்பதாம்.

(வி - ரை.) தையல் - தமயந்தி: அழகுடையாள் என்பது பொருள். தளிர் - இள இலை யென்னும் பொதுப் பெயராயினும் ஈண்டு மாந்தளிர் என்று மென்மையும் நிறனும்பற்றிப் பொருள் கூறப்பட்டது. தளிர்க்கரம்: உவமத் தொகை. வையம்: இட வாகு பெயராய் மக்களைக் குறித்தது. தடக்கையால் பற்றல் -

கையாற் பிடித்தல். திருமணஞ் செய்தபின் கைப்பிடித்துச் செல்லுதல் மரபாகலான், 'தடக்கையால் பற்றி' என்றார். இவ்வாறே கம்பநாடரும் சீதை வாயிலாக,

"[1] வந்தெனைக் கரம் பற்றிய வைகல்.'

என்றதும் காண்க. 'காதல் இருவர் கருத்து ஒருமித்து' என்பதாலும் முன்னரே நளனும் தமயந்தியும் உள்ளக் கருத்தொன்றுபட்டு இருந்தவராகலானும், திருமணம் நிகழ்ந்தபின் பன்னெடுங் காலம் இன்பந்துய்த்திருந்ததை 'புணர்ந்தான் நெடுங்காலம் புக்கு' என்றார். புக்கு - தங்கி யென்னும் பொருட்டாய்ப் பகுதி இறந்தகாலம் காட்டிநின்றது, நக்கான் என்பதுபோல. தமயந்தியும் நளனும் ஒன்றுபட்டு இன்பந்திளைத்திருந்தார் என்பதைக் குறித்தவாறும். 'வாள் நுதலும் தானும் புணர்ந்தான்' என ஒருமையாகக் குறித்தார். திணைபால் முதலியன விரவி வந்தபோது சிறப்புப்பற்றி ஒரு முடிபாகுமென்பது இலக்கண நூலார் கொள்ளும் மரபு. இவ்வாறு,

"[2] பார்ப்பார் அறவோர் பசுப்பத்தினிப் பெண்டிர்
மூத்தோர் குழவிஎனும் இவரை.'

எனத் திணை விரவி 'இவர்' எனப் பன்மை முடிபேற்றதும்,

"[3] நானும் என்சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்
தானுந்தன் தையலும் தாழ்சடையோன் ஆண்டிலனேல்.

என்பதில், பால் விரவி 'ஆண்டிலனேல்' என ஒருமை முடிபேற்றதும் பின்னும் பலபடவரும் சான்றோர் நூல்களானும் அறிக. 'புணர்ந்தார்' எனப் பாடங்கொள்ளின் பொருட்சிறப்பின்மை அறிக. (கஎக)

## சுயம்வர காண்டம் முற்றும்.

---

1. கம்பராமா. சூடாமணி: நஃ. 2. சிலப். உக: நிஙு - ச.
3. திருவாசகம், திருக்கோத்தும்பி: கஙு.

# உ. கலிதொடர் காண்டம்

## திருமால் காப்பு

களகூ. முந்தை மறைநூல் முடியெனலாம் தண்குருகூர்ச்
செந்தமிழ் வேத சிரமெனலாம்—நந்தும்
புழைக்கைக்கும் நேயப் பொதுவர்மக ளிர்க்கும்
அழைக்கைக்கு முன்செல் அடி.

(இ - ள்.) நந்தும் புழைக்கைக்கும் நேயப் பொதுவா மகளிர்க்கும் - (முதலையிடத் தகப்பட்டுக்கொண்டு) வருந்திய யானைக்கும் தம்மிடம் அன்புபூண்ட இடையர்குலப் பெண்களுக் கும், அழைக்கைக்கு முன்செல் அடி - (காப்பதற்கும், தழுவு வதற்கும் அவர்கள் அழைத்தபோது) முன்னே சென்ற (திரு மாலின்) திருவடிகளானவை, முந்தை மறைநூல் முடி எனல் ஆம் - பழமையான வேதநூலின் தலைமையிடம் என்று கூற லாம், தண் குருகூர் செந்தமிழ் வேத சிரம் எனல்ஆம் - குளிர்ச்சி மிக்க குருகூரராகிய நம்மாழ்வார் அருளிய செந்தமிழ்மொழியா னியன்ற திருவாய்மொழி வேதத்தினது முடி என்று கூறலாம். (அவ்வடிகளை வணங்குவோம்; அவை நமக்கு அருள்புரிதல் வேண்டி.)

(க - ரு.) யானை முன்னும் அன்புடைய இடைக் குலப் பெண்களின் முன்னும் அழைத்தற்கு முன்பு சென்று நின்ற திருமாலின் திருவடிகளைப் பழமறையின் முதன்மையெனலாம்; அன்றிச் செந்தமிழ் மறையின் முடியென்று கூறலாம், (அவைகளை வணங்குவோம்) என்பதாம்.

(வி - ரை.) முந்தை - பழைமை. மறை - வேதம். முதன் முதல் தோன்றிய நான்மறை. நுண்ணிய பொருள்களை உள்ளடக் கிக்கொண்ட காரணத்தால் மறையெனப் பெயர் பெறலாயிற்று மறை என்பது ஆகுபெயர். திருமாலின் திருவடிகள் பழைமையான தமிழ் நான்மறைகட்கு முதன்மையானது; பின் தோன்றிய நம் மாழ்வார் அருளிய செந்தமிழ்ப் பாவானியன்ற மறைக்கும் அவ் வடிகள் முதன்மையாக அமைந்தன. முதலைவாய்ப்பட்டுத் தப்பிப் பிழைக்க வழிகாணுது தத்தளித்து வருந்தி 'முதற்பொருளே!'

என்று வாய்விட்டுக் கதறி அழைத்த களிற்றைக் காக்க ஓடி வந்தன வென்பாராய்ப் 'புழைகைக்கு.........முன் செல் அடி' என்றும், இடைக்குலப் பெண்கள் பேரன்பினராய்க் 'கண்ணே' வென்று கூவி அழைத்த காலமெல்லாம் முன்னே நடந்துவந்து காட்சியளித்தலால், 'நேயப் பொதுவர் மகளிர்க்கு......முன் செல் அடி' என்றும் கூறித், திருமால் பேரிரக்கப்பண்புடையான் என்றும், வேண்டுவார் வேண்டுவதே ஈயும் அவன்றன் மேதகவை யும் சுட்டியுணர்த்தி, இத்தகைய பேரருட் பெருங்கடலாகிய திருமாலின் திருவடிகளை வணங்கினால், நாம் இருள்சேர் இரு வினையும் அற்று இறவாத இன்புற்றிருக்கலாம் எனவும் குறிப்பால் உணர்த்தியவாறும். இதில் திருமாலின் பத்துப்பிறப்புள் ஒன்றாகிய கண்ணன் பிறப்பில் செய்த திருவிளையாடலில் ஒன்றான இடைக்குலப் பெண்கள் அழைத்தபோது வந்ததை, 'அழைக் கைக்கு முன் செல் அடி'யெனக் குறித்தார். அதனால் இது குறிப்பெச்சம். புழை - துளை; துவாரமுள்ள கையையுடையது என்னும் பொருளது. அஃதாவது, யானை. பொதுவர் உலகமக்கள் யாவர்க்கும் பொது நலஞ் செய்பவர் என்னும் பொருளுடையது. பொதுநலமாவது, ஆனிரை எருமைநிரை ஆட்டுநிரைகளைப் பாதுகாத்து அவைகளின் பால், நெய், தயிர் முதலிய பாற்பயனால் எல்லோருக்கும் நலஞ்செய்கின்ற பொதுநோக்குடையவர் என்க. அழைக்கை - அழைத்தல்: தொழிற்பெயர். (க)

## சிவபெருமான் வணக்கம்

கஉ௦. செக்கர் நெடுவானில் திங்கள் நிலாத்துளும்பி
உக்க தெனச்சடைமேல் உம்பர்நீர்—மிக்கொழுகும்
வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்பர்
உள்ளத்தான் எங்கட் குளன்.

(இ - ள்.) செக்கர் நெடுவானில் - நீண்ட செவ்வானத்தின் மேல், திங்கள் நிலா துளும்பி உக்கது என - நிலவின் கதிரொளி யானது ததும்பிச் சிதறியது என்னும்படி, சடைமேல் உம்பர்நீர் மிக்கு ஒழுகும் வெள்ளத்தான் - தன் (செஞ்) சடை முடிமீது வானநீர் பெருகி ஓடுகின்ற நீர்ப்பெருக்கையுடையவனும், வெள்ளி நெடும் கிரியான் - நீண்ட வெள்ளிமலையையுடையவனும், மெய் அன்பர் உள்ளத்தான் - உண்மையடியார்களின் செம்மனத்தை விட்டு நீங்காதவனும் ஆகிய சிவபெருமான், எங்கட்கு உளன் - எமக்குப் (பாதுகாப்பாக என்றும்) இருக்கின்றான். (அவனை வணங்குவோம்.)

(க - து.) செஞ்சடைமேற் கங்கையைக் கொண்டோனும், வெள்ளிமலையை யுடையவனும், அடியார் நெஞ்சை விட்டு அகலாதவனுமாகிய சிவபெருமான் நமக்கு என்றும் பாதுகாப்பாக இருக்கின்றான்; (அவனை வணங்குவோம்) என்பதாம்.

(வி - ரை.) செக்கர் வான் - செந்நிறம் பொருந்திய மாலைக் காலவானம். சிவபெருமான் சடை செந்நிறம் பொருந்தியது. அதில் கங்கையை வைத்துள்ளான் என்பது அவன் அடையாளங் குறிக்கும் புராண மரபு. செந்நிறச் சடையிலிருந்து வெண்ணிற நீர்பாய்ந்தோடுவது செவ்வானத்தில் தோன்றி யெறிக்கின்ற நிலவின் ஒளி போன்றுள்ளதாகக் குறித்தார்: பண்புவமை. வெள்ளி நெடுங்கிரி - திருக்கைலாயமலை. இறைவன் திருக்கைலாயத்தில் வீற்றிருக்கின்றானென்பது. இதன் உட்கருத்து, இறைவன் அடியும்முடியும் மெய்யறிவு வடிவமே என்பதற்குப் புனைவாகக் கூறியதென்க. என்னை? நீரின் வெண்மை, வெள்ளிமலையின் வெண்மை இவைகள் குறிப்பனவாம். உலகத்தில் வாழும் உயிர்கட்கு நீரே முதன்மை. நீரின்றி ஓரறிவுயிர்களான புற்பூண்டு செடி கொடி மரம் முதலியனவும் உயிர் வாழ முடியா. உலகைக் காத்தும் படைத்தும் கரந்தும் அலகிலா விளையாடல் புரிபவனாகிய ஆண்டவன் அருள்நோக்கத்தால் உயிர்கட்கு நீரையருளி, அதனால் உணவையும் பிற எல்லாப் பொருள்களையும் வளர்த்துக் கொடுக்கின்றானென்பதற்காகவே, 'வெள்ளத்தான்' என்ற பெயராற் கூறினாரென்க. வெள்ளிமலை-பனிமலை. அது வெண்ணிறமுடையதாகலான் அப்பெயராற் கூறினார். அது உருகி நீராக ஓடி உலகைப் புரத்தலால் அதையும் உடையானென அவன்றன் அருளிரக்கத்தைச் சுட்டியவாறாயிற்று. ஆகவே, அத்தகைய பெருமான் நம்மைக் காப்பான் என்னும் கருத்தை உட்கொண்டு 'எங்கட்கு உளன்' அவனை வணங்குவோமெனக் குறிப்பால் குறித்தாரென்க. (உ)

நளன், தமயந்தியுடன் தன் நகர்க்குச் செல்லுதல்

கழக. தவளத் தனிக்குடையின் வெண்ணிழலும் தையல்
குவளைக் கருநிழலும் கொள்ளப்—பவளக்
கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கும் நாடன்
செழுந்தேரில் ஏறினான் சென்று.

(இ - ள்.) பவளக் கொழுந்து ஏறி - பவளக்கொடிகள் படர்ந்து மேலே சென்று, செம்நெல் குலைசாய்க்கும் நாடன் -

செந்நெற் கதிர்க்கொத்துக்களை வளைத்து அமிழ்த்துகின்ற நிடத நாட்டு மன்னனாகிய நளன், தவள தனிக்குடையின் வெண் நிழலும் - வெண்கொற்றக்குடையின் ஒப்பற்ற வெள்ளொளி பரந்த நிழலும், தையல் குவளை கருநிழலும் கொள்ள - தமயந்தியின் கண்களாகிய குவளைமலர்களின் கரிய நிழலொளியும் தன்னைச்சூழ, சென்று செழுந் தேரில் ஏறினான் - போய் அழகான தேர்மேலேறினான்.

(க - ரை.) நளமன்னனானவன், வெண்கொற்றக்குடையின் வெண்ணிலவும் தமயந்தி கண்களின் கரிய ஒளி நிழலும் தன்னைச் சூழப்போய் அழகிய தேரில் ஏறினான் என்பதாம்.

(வி - ரை.) தவளம் - வெண்ணிறம். நளமன்னன் தன் செங்கோல்முறையினால் எட்டுத்திக்கிலும் புகழொளி பரப்பத் தன் ஆட்சிமுறையை மக்கள் யாவரும் விரும்பியேற்கத் தன் குடைநிழற்கீழ் மக்களை வைத்துக் காத்து ஆண்டான் ஆகலான், அக்குடைக்குத் 'தனிக்குடை' என்று அடைமொழி கொடுத்துக் கூறினார். அதன் வெள்ளியநிழல் ஒருபால் வெண்ணில வெறிப்ப, தமயந்தியின் கட்பார்வை நளன்மீதே செல்லுதலால், ஒருபால் அக்கண்ணின் கருநிறவொளி கரியநிறங்காட்ட இவ்விரு ஒளிக் கதிர்களும் இருவேறு நிறங்காட்டித் தன்னைக் கவிந்துசூழச் சென்றான் என, நளமன்னனுக்குச் சிறப்புக் கூறியவாறு. குவளை : கண்கட்கு உவமை ஆகுபெயர்.

பவளக்கொடி நெய்தல் நிலமாகிய கடலில் படர்வது, செந்நெல் மருதநிலத்தில் விளைவது. அப்பவளக்கொடி மருதநிலத்துக்குப் படர்ந்து வந்து செந்நெற் கதிர்க்குலைகளைச் சாய்க்கும் நாடு என்றதனால், நெய்தல் நிலத்துக்கும் மருதநிலத்துக்கும் திணை மயக்கங் கூறி நாட்டு வளத்தைச் சிறப்பித்தார். இத்திணை மயக்கக் கருத்தை அமைத்து,

> [1]'கானக்கோழி கதிர்குத்த
> மனைக்கோழி தினைக்கவர
> வரைமந்தி கழிமூழ்க
> கழிநாரை வரையிறுப்ப.'

என்றார் பிறரும். (௯)

1. பொருநராற்றுப்படை, ௨௨௨-௫.

### நளன், சோலைவண்டுகள் ஒலிப்பதைத் தமயந்திக்குக் காட்டிக் கூறல்

கஅ௨. மங்கையர்கள் வாச மலர்கோய்வான் வந்தடையப்
போங்கி யெழுந்த போறிவண்டு—கோங்கோ
டேதிர்கோண் டணைவனபோல் ஏங்குவன முத்தின்
கதிர்கோண்ட பூண்முலையாய் காண்.

(இ - ள்.) *முத்தின் கதிர்கொண்ட பூண்முலையாய் - முத்து மாலைகள் ஒளியெறிக்கப் பிறஅணிகளும் அணிந்த கொங்கைகளை யுடையாய்!, மங்கையர்கள் வாசமலர் கொய்வான் வந்து அடைய - பெண்கள் மணமுள்ள மலர்களைப் பறித்தற்பொருட்டு வந்து சேர்தலினால், பொங்கி எழுந்த பொறி வண்டு - (அதிலிருந்து) மேலோங்கிப் பறந்த புள்ளிகளையுடைய வண்டுகள், கொங்கோடு எதிர்கொண்டு அணைவனபோல் ஏங்குவன காண் - தேனினைக் கொண்டு (அவர்களை) எதிர்கொண்டு அழைக்கச் சேர்வன போன்று ஒலித்தலை நீபார்.*

(க - து.) *'முத்தின் கதிர்பரப்பும் அணிகளணிந்த பெண்ணே! பெண்கள் மலர் கொய்வதற்கு வந்து சேர்தலி னால், அதிலிருந்து மேலே பறந்த வண்டுகள் ஒலிப்பன, அவர்களை எதிர்கொண்டழைத்துச் சேர்வனபோல் தோன்றுதலைப்பார்' என்றான் என்பதாம்.*

(வி - ரை.) *மங்கையர்கள் - நளனுடன் செல்கின்ற பரிவார மகளிர்கள். கொய்வான் - கொய்வதற்கு : வானீற்று எதிர்கால வினையெச்சம். கொங்கு - தேன். [1]'கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி' என்றவிடத்துக், கொங்கு இப்பொருள் தருதலை ஓர்க. அன்றி, மணமென்றலுமாம். பொறிவண்டு-வண்டுகளில் ஒருவகையான புள்ளிகளையுடைய வண்டுக்கூட்டங்கள். அவை பறப்பன, புதிதாக வந்தவரை வரவேற்பது போன்றும், ஒலிப்பன 'வாருங்கள்' என அழைப்பன போன்றும், அவைகளின் கால் முதலிய உறுப்புக்களில் தேன் ஒட்டிக்கொண்டிருப்பதை, அவர்கட்கு விருந்தூட்டக் கொணர்ந்த உணவு போன்றும் குறிப்பான் உணரவைத்துப் 'பொறிவண்டு..............................ஏங்குவன' என்றார்.*

*இவ்வாறே நம்பியாரூரராகிய சுந்தரர், தில்லைக்கு ஆண்டவனது, எல்லையில் தனிப்பெருங் கூத்தின் இன்பத்தைத்*

1. குறுந்தொகை, ௨.

திளைக்கச் செல்லுங்கால், வழிநெடுக இருமருங்கினும் சோலைகள்; அவைகளுட் பறவைகள்; தடாகங்கள்; அதிலுள்ள மலர்கள் முதலிய காட்சிகளையெல்லாம் கண்டுகொண்டே செல்கின்றார். அங்கே மற்றோர்பால், வண்டுகள் தாமைமடலின் தண்பூக்களிற் படிந்து அதிலுள்ள வெண்ணிறப் பூந்தாதுகள் உடலெல்லாம் படியத் தேனுண்டு களித்துப் பறந்து இனிய குரலெழுப்பிப் பாடிக்கொண்டு செல்கின்றன. அக்காட்சி, சுந்தரர்க்கு ஆண்டவன் அடியவர்கள் நீராடித் திருவெண்ணீறணிந்து இறைவன் புகழைப் பாடிக்கொண்டு செல்வதுபோல் தோற்றமளிப்பதாகக் கண்டு களித்துச்கொண்டே சென்றாரென்று சேக்கிழார் பெருமான் தொண்டர் புராணத்துட் குறிப்பிடுகின்றார். அக்கருத்து இதனோடு ஒத்ததாக இருத்தலின், அப்பாவை ஈங்கே குறிக்கின்றோம். கண்டு ஒப்புநோக்கி மகிழ்க.

[1]‘ ................................................

குண்டகழ்க் கமல வண்டலர் கைதைத்
துன்று நீறுபுனை மேனிய வாகித்
தூய நீறுபுனை தொண்டர்கள் என்னச்
சென்று சென்றுமுரல் கின்றன கண்டு
சிந்தை யன்பொடு திளைத்தெதிர் சென்றார்.’

என்பது அது. (௪)

**நளன், தமயந்திக்குப் பெண்கள் அடியில் பூங்கொம்புகள் தாழ்வன காட்டுதல்**

௧௨௩. பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டலுமப் பூங்கொம்பு--மேவியவர்
பொன்னடியில் தாழ்ந்தனவே பூங்குழலாய் காணென்றன்
மின்னெடுவேற் கையான் விரைந்து.

(இ - ள்.) மின் நெடுவேல் கையான்-ஒளிபொருந்திய வேல் தாங்கிய கையையுடைய நளமன்னன், பூகுழலாய் - பூ முடித்த கூந்தலையுடையாய், பாவையர் கைதீண்டப் பணியாதார் யாவரே - பதுமை போன்ற அழகினரான பெண்களின் கையால் தொடின் தாழாதவர் (உலகில்) யாவருளர்?, அப்பூகொம்பு - அந்தப் பூவினை யுடைய கிளைகள், பூவையர் கைதீண்டலும் விரைந்து மேவி அவர் பொன் அடியில் தாழ்ந்தன - பெண்களின் கைகளினால்

1. பெரியபுரா. தடுத்தாட் : ௬௬.

தொட்டவுடனேயே விரைவில் வளைந்துசென்று அவர்களின் அழகிய பாதங்களில் பணிவன ஆயின.

**(க - து.)** 'பூங்குழலாய்! பெண்கள் கையால் தொடின் வணங்காதவர் யார்? அப் பெண்கள் கையால் தொட்டவுடனேயே பூங்கொம்புகள் வணங்கிவந்து அவர்கள் காலடிகளில் விழுகின்றன பார்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) பாவை போன்றாரைப் பாவையரென்றது, ஆகுபெயர் பணிதல் - வணங்குதல். [1]"எல்லார்க்கும் நன்றாம் பணிதல்" என்றவிடத்தும் இப்பொருள் தருதலை ஓர்க. பொன் அடி - அழகிய கால். அல்லது பொன்போன்ற நிறமும் பெருமையும் பொருந்திய அடிகள் என்றுரைத்தலுமாம். வேல், 'மின்னெடு வேல்' என அடைகொடுத்துக் கூறப்பட்டது; நளன்றன் வெற்றிப் பெருமிதம் தோன்றற்கு. [2]"திருந்துவேற் குமணன்" எனப் புறநானூற்றினும் கூறினார். (௬)

**நளன், தமயந்திக்குப் பூக்கொய்வாள் ஒருத்தியின் முகத்தில் வண்டுகள் படிதலைக் காட்டல்**

கஅச. மங்கை ஒருத்தி மலர்கோய்வாள் வாள்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்-செங்கையால்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப்பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேந்து.

(இ - ள்.) மலர்கொய்வாள் மங்கை ஒருத்தி - பூக்கொய்பவளாகிய பெண் ஒருத்தியின், வாள்முகத்தை - ஒளிவிடுகின்ற முகத்தினை, பங்கயம் என்று எண்ணி - செந்தாமரை மலரெனக் கருதி, படிவண்டை - மொய்க்கின்ற வண்டுகளை, செம்கையால் காத்தாள் - தன் சிவந்த கைகளினால் தடுத்து நின்றாள், அக் கை மலரை காந்தள் எனப் பாய்தலும் - அந்தத் தாமரைமலர் போன்ற கைகளையும் (அவை) காந்தள் மலரெனக் கருதி மொய்த்தவுடனே, வேர்த்தாளை - (அச்சங்கொண்டு,) வியர்வை நீர் துளிக்க நின்றவளை, வேந்து காண் என்றான் - நளமன்னன் நீ பாரென்று தமயந்திக்குக் காட்டினான்.

**(க - து.)** 'பெண்ணொருத்தி மலர் கொய்கின்றாள்; அவள் முகத்தை வண்டுகள் தாமரை மலரென்று கருதி

1. திருக்குறள், கஉரு. 2. புறம். கசுரு.

மொய்க்க, அவைகளைத் தன் கையால் தடுக்கிறாள்; அக் கைகளையும் அவை காந்தட் பூக்கள் என்று எண்ணி மொய்ப்பதைப் பார்' என்று, நளன் தமயந்திக்குக் காட்டினான் என்பதாம்.

(வி - ரை.) மலர் கொய்கின்ற பெண்ணொருத்தியின் முகத்தையும் கைகளையும் வண்டுகள் தாமரை மலரெனவும் காந்தள மலரெனவும் கருதி மயங்குதலால் **மயக்கவணி**. படிவண்டு : வினைத் தொகை. அக் கைமலரையும் எனற்பாலது, ஈண்டுச் செய்யுள் இசைநோக்கி எச்ச உம்மை மறைந்து நின்றது மலர்க்கை: கைமலர் என வந்தது சொன்னிலை மாறிய இலக்கணப் போலி. அச்சமுற்றார்க்கு உடல் நடுக்குறுதலும் அதனால் வேர்வரும்பலும் இயற்கையாதலின் 'வேர்த்தாளை' என்றார். (கூ)

**நளன், தமயந்திக்கு மலர்கொய்யாது தளிரைக் கொய்பவளைக் காட்டல்**

கஅரு. புல்லும் வரிவண்டைக் கண்டு புனமயில்போல்
செல்லும் மடந்தை சிலம்பவித்து—மெல்லப்போய்
அம்மலரைக் கோய்யா தருந்தளிரைக் கோய்வாளைச்
செம்மலரில் தேனே தெளி.

(இ - ள்.) செம்மலரில் தேனே - செழித்த தாமரைமலரில் வீற்றிருக்கின்ற திருமகள் போன்றவளே!, புல்லும் வரிவண்டைக் கண்டு (ஒரு மலரில்) தம் துணையாகச் சேர்ந்திருக்கின்ற வரிகளையுடைய (ஆண், பெண்) வண்டுகளைப் பார்த்து, புனமயில்போல் - வனத்தில் வாழ்கின்ற மயிலைப்போன்று, செல்லும் மடந்தை - போகின்ற பெண்ணொருத்தி, சிலம்பு அவித்து மெல்லப்போய் - தன் காற்சிலம்பொலி கேட்காதவாறு அடக்கிக்கொண்டு பைய நடந்து சென்று, அம் மலரைக் கொய்யாது - அந்த மலரைக் கொய்யாமல், அரும் தளிரைக் கொய்வாளைத் தெளி - அரிய தளிர்களைக் கொய்கின்றவளை அறிவாயாக.

(க - து.) 'பூவினிற் கலவியில் திளைத்துக் களித்திருக்கும் வண்டைக் கண்டு மெல்லச் சென்று அப் பூவைக் கொய்யாமல் தளிர்களைக் கொய்கின்ற தையலாள் ஒருத்தியைப் பார்' என்று நளன் தமயந்திக்குக் காட்டினான் என்பதாம்.

(வி - ரை.) காலிலணிந்துள்ள சிலம்பு 'கல்'லென்றொலித்தால் கூடிக் களித்திருக்கும் வண்டுகட்கு இடையூறுமெனக் கருதி மெல்ல நடந்தாள் என்பாராய்ச் 'சிலம்பவித்து' என்ற சொல்லால் விளக்கினர். வண்டு காதறிவில்லாதது என்பது ஆன்றோர் கண்டறிந்த உண்மை. அஃது இதற்கு மாறாகாதோவெனின்? ஒரு சில ஆசிரியர்கள் வண்டிற்குக் காதறிவுண்டென்றே கருதுகின்றனர்! இவர்க்கும் அஃது, உடன்பாடுபோலும்! தொல்காப்பியரும் நன்னூலாரும்,

[1]'நண்டும் தும்பியும் நான்கறி வினவே.'

எனவும்,

[2]'தும்பி வண்டாதிகண் அறிவின்நா லறிவுயிர்.'

எனவும் கூறி, வண்டுகளெல்லாம் செவியறிவில்லாத நாலறிவுயிரெனக் கொண்டனர். அகநானூற்றாசிரியர் ஒருவர், தலைவன் ஒருவன் போர்முடித்து விரைபரித் தேரூர்ந்து வருகின்றான்; வரும்வழிகள் எங்கும் செடியும் கொடியும் மரங்களும் மலர்ப் பூங்கொம்பரும் செறிந்த பெருநிலப் பரப்பு. அதன்வழியிற் செல்லுங்கால், குதிரைகள் கழுத்திலணிந்த மணிகளின் பேரொலி கேட்டு வண்டுகள் அஞ்சுமெனக் கருதி மணிகளைக் கட்டச் செய்து ஊர்ந்துவந்தான் என்று கூறுகின்றார். அத்தொடர்,

[3]'பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்.'

என்பதாகும்.

[4]'மங்கை நல்லவர் கண்ணும் மனமும் போன்று.'

என்னும் சிந்தாமணிப் பாட்டிற்கு நச்சினார்க்கினியர் வண்டிற்குச செவியறிவுண்டென்பதற்கு இவ்வகநானூற்று அடிகளையே காட்டியதூஉம் காண்க. நங்கையின் அழகும் சாயலும் இயற்கை நற்பண்பும் தோன்றப் 'புனமயில்போல்' என்றார். நற்பண்பு, ஓரறிவுயிர்க்கும் இரக்கங்கொள்ளும் உள்ளஉயர்வு. மலர்கொய்யப் போந்தாள் எது எப்படியானால் என்ன? வண்டுகள் கூடிக் களித்திருந்தாலென்ன? களிக்காதிருந்தாலென்ன? ஆனால் அவள் தன் பெண்மைக்குரிய பண்பு, அவைகட்கும் அருள்சுரக்கச் செய்ததால் சிலம்பவித்து மெல்லப் போகச் செய்தது. செம்மலரின்

1. தொல். மரபியல்: ௩௪. 2. நன்னூல், ௩௨0.
3. அகம். ௪. 4. சீவகசிந்தாமணி, அ௪௨.

தேன் : செழித்த மலரிலுண்டாகிய தேன்போன்ற இனியமொழியாளென்று அன்மொழித் தொகையாக்கிப் பொருள் கொள்ளலுமாம். காதலாற் கனிந்து தம் காதலியைக் காதலன் உயர்ந்த பொருள்களையெல்லாம் கொண்டு உவமித்துப் பேசிப் பேசிப் பாராட்டுதல் இயற்கை. அன்புள்ளவிடத்து எப்பண்பு தோன்ருது? எல்லாம் தோன்றுமன்ருே? இம்முறையில் 'காசறு விரையே கரும்பே தேனே' எனக் கண்ணகியாரைக் கோவலன் பாராட்டியதாக இளங்கோ அடிகளார் இயற்கையாக அமைத்துரைத்தலும் அறிக. ஈண்டும் தமயந்தியைத் 'தேனே' என நளன் பாராட்டினன். தெளிதல் - ஐயமற அறிதல். தமயந்திக்கு, இவள்போன்ற நற்பண்புகள் மேலும் அமையவேண்டுமெனக் கருதினன் நளமன்னன். அதற்காகவே, பார், காண் முதலிய சொற்கள் எளிமையாக இருக்கவும் இக்கருத்தானே 'தேனே!' என விளித்துத் 'தெளி' என்ற சொல்லாற் கூறினனென்க. (எ)

**நளன், தமயந்திக்கு, நாயகன் ஒருவன் தன் நாயகிக்கு மலர்சூட்டுதலைக் காட்டல்**

கஅ௬. கோய்த மலரைக் கோடுங்கையி னலணைத்து
மோய்குழலிற் சூட்டுவான் முன்வந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினன் பாவையிடைக்
காதாரம் இன்மை அறிந்து.

(இ - ள்.) கொய்த மலரை கொடும் கையினல் அணைத்து - (நாயகன் ஒருவன்) தான் பறித்த பூக்களைத் தன் உள்ளங்கைகளில் வைத்துக்கொண்டுபோய், மொய்குழலில் சூட்டுவான் முன்வந்து - தன் நாயகியின் அடர்ந்த கூந்தலிலணிவதற்கு அவள் நேரேவந்து நின்று (உற்று நோக்கி), பாவை இடைக்கு ஆதாரம் இன்மை அறிந்து - பாவைபோல்வாளாகிய தன் காதலியின் நுசுப்பிற்கு யாதொரு பற்றுக்கோடுமில்லாதிருத்தலைத் தெரிந்துகொண்டு, பாத அரவிந்தத்தே சூட்டினன் - அவளின் தாமரை மலரனைய அடிகளில் வைத்தான். (ஏ! நங்காய் பார்.)

(க - நு:) நாயகன் ஒருவன் மலர்களைப் பறித்தெடுத்துத் தன் உள்ளங்கையில் அணைத்துக்கொண்டு போய்த் தன் நாயகி கூந்தலுக்கு அணிய எண்ணி, அவளின் முன்புபோய் நின்று உற்றுப் பார்த்து அவள் இடைதாங்காதெனக் கருதி, அவள் கால்களுக்குச் சூட்டினன் (நங்காய் பார்) என்ருன் என்பதாம்.

(வி - ரை.) கொடும்+கை-கொடு: கோடு - வளைதல். அஃதாவது உள்ளங்கை குவித்தல். அணைத்தல் - ஒன்று சேர்த்தல். ஒரு தலைவன், தன் காதலிக்கு மலர்பறித்துக்கொணர்ந்து அவள் கூந்தலிற் சூட்டி மகிழ எண்ணிக்கொண்டு போந்தான். போந்தவன் அவள் அழகையெல்லாம் உற்றுப்பார்த்தான்; அவைகளுள் அவள் இடை, கூந்தற் பொறையும் கொங்கைப் பாரமும் தாங்கலாற்றாது மிக மெலிந்து நுடங்குதலைக் கண்டான்; கண்டு, [1]"தாமே தளர்பவரைப் பாரம் ஏற்றுதல் தக்கதன்றே' என்னும் எண்ணம் மேலிட, இடை முறியுமென்று கண்டு அஞ்சி அவள் காலிலணிந்து மகிழ்ந்தான் என்னும் கருத்தை உட்கொண்டுள்ளது இப்பாட்டு.

திருவள்ளுவர் தந்த காதலன், தன் காதலி பூக்களின் காம்புகளைக் களையாமல் சூடியதற்கு, 'அவள் இடை தாங்காமல் முறியுமே! என்னுங்கொல்! இனி இறந்துபடுவளே! அதற்காகச் சாப்பறையன்றோ முழங்கும்! என் செய்வேன்! இவள் தன்னிலைக் கொவ்வாததைச் செய்தனளே!' என, வருந்துவதாகக் காட்டுகின்றார். அக் கருத்தோடொத்ததே இப் பாடலும். எனவே, அவ் வள்ளுவர் காட்டும் பாவையையும் இங்கே காண்க:

[2]'அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை.'

என்பது அது. பாத+அரவிந்தம்=பாதாரவிந்தம் எனப் புணர்ந்தது. வடசொல் முடிவு: தீர்க்கசந்தி. ஆதாரம் - பற்றுக்கோடு: இடையின் நுட்பத்தை உணர்த்திற்று. (அ)

## நளன், தமயந்திக்கு மணல்மேடு கலவிப் படுக்கைபோல் தோன்றுகின்றது எனக்கூறல்

கரு௭. ஏற்ற முலையார்க் கிளைஞர் இடும்புலவித்
தோற்ற அமளியெனத் தோற்றுமால்—காற்றசைப்ப
உக்க மலரோ டுகுத்தவளை முத்தமே
எக்கர் மணல்மேல் இசைந்து.

(இ - ள்.) காற்று அசைப்ப - காற்றடித்து அசைத்தலினால், உக்க மலரோடு வளை உகுத்த முத்தம் - உதிர்ந்த பூக்களுடன் சங்குகள் ஈன்ற முத்துக்கள், எக்கர் மணல்மேல் இசைந்து - வெள்ளநீர் ஒதுக்கிய மணல் மேட்டின்மேல் சேர்ந்து, ஏற்றம்

1. திருவிடை...மும். கரு. 2. திருக்குறள், ககக௫.

முலையார்க்கு - உயர்ச்சி பொருந்திய கொங்கையையுடைய பெண்களுக்கு, இளைஞர் இடும்புலவி தோற்றம் அமளி என தோற்றும் - அவர்களின் இளங்காதலர் இட்டுவைத்த ஊடற் குறிப்புள்ள படுக்கைபோன்று தோன்றும்.

(க - ரு.) காற்றடித்தலால் உதிர்ந்த மலர்களுடன் சங்குகள் ஈன்ற முத்துக்கள் மணல்மேட்டின்மேல் கிடப்பன, ஊடல் தீர்த்தற்குக் காதலர், காதலிகட்கு விரித்தமைத்த படுக்கைபோலத் தோன்றுகின்றது என்பதாம்.

(வி - ரை.) எக்கர்-மணல்மேடு. அங்கே காற்றடிக்கின்றது; பக்கலில் உள்ள மரங்களிலிருந்து மலர்கள் உதிர்கின்றன; சங்கினங்கள் அம் மணல் மேட்டின்மேல் வந்து முத்துக்களை ஈன்று விடுகின்றன. இவ்விரண்டும் ஒன்றுகலந்து கிடப்பன, காதலர்களின் மலர்ப்படுக்கைபோல் தோன்றுகின்றன. பெண்களுக்குத் தம் கணவர்மீது கொள்கின்ற சினத்தினால் படுக்கையில தாம் அணிந்துள்ள அணிகளையும், மலர்மாலை முதலியவைகளையும் களைந்தெறிவாராகலின், மணல்மேட்டில் கிடக்கும் மலர்களும் முத்துக்களும் ஊடற்படுக்கை போன்றிருந்ததென்றார். இவ்வாறே அவர்கள் கழற்றித் தம அணிகளை ஊடலால் எறிவரென்பதை நைடத நூலாசிரியர்,

[1] 'கொல்லுலை வேற்கண் நல்லார் கொழுநரோ டூடி நீத்த
வில்லுமிழ் கலன்கள் யாவும் மிளிர்சுடர் எறிக்கும்.'

என்றதூஉம், பாயலில் (படுக்கையில்) முத்துக்களும் பூக்களும், சிதறிக்கிடக்குமென்பதை இராமபிரான் கடலைக் கண்டபோது கடலில் அலைகளால் முத்துக்களும் மலர்களும் ஒதுக்கப்பட்டுக் கரையிற் சேர்ப்பதைத் திருமால் அவதாரமாக இராமனைக் கொள்ளப்படுதலால், பாற்கடலிற் பள்ளிகொண்ட பெருமான் நெடுநாட்பிரிந்து வாராமல் இருந்து வந்தபோது, அவன் துயில்வோனாதலால் அவனுக்குப் பாயலுதறி விரிப்பது போன்றிருப்பதாகக் கம்பர் குறித்தார். அது :

[2] 'சேய காலம் பிரிந்தகலத் திரிந்தான்
மீண்டும் சேக்கையின்பால
மாயன் வந்தான் இனிவளர்வான் என்று
கருதி வருந்தென்றல்

1. நைடதம், நாட்டு: உஎ. 2. கம்பராமா. கடல்காண்: ச.

தூய மலர்போல் நுரைத்தொகையும் முத்துஞ்
சிந்திப் புடைசுருட்டிப்
பாய லுதறிப் படுப்பதே யொத்த
திரையின் பரப்பம்மா.'

என வருதல் காண்க. ஏற்றம் - உயர்ச்சி : பெருமை. ஏற்ற எனப் பிரித்து, பொருந்திய என்று பொருள் கொள்ளலுமாம். புலவித் தோற்றம் - புலவிக்குரியதுபோல் காணப்பெறுந் தன்மை. வளை - சங்கு. சங்கிலிருந்தும் முத்துக்கள் பிறக்குமென்பது அறிந்த உண்மையாகலான், 'வளை முத்தம்' என்றார். (கூ)

**நளன், தமயந்திக்குச் சோலையின் அழகைக்காட்டிக் கூறல்**

கஅஅ. அலர்ந்த மலர்சிந்தி அம்மலர்மேற் கோம்பு
புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்-கலந்தோசிந்த
புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
அல்லென்ற சோலை அழகு

(இ - ள்.) அல் என்ற சோலை அழகு - (ஞாயிற்றின் ஒளி உள்ளே செல்ல இயலாத அடர்த்தியினால்) இருளென்றே பார்த்தோர் கூறத்தக்க சோலையின் அழகானது, அம் மலர்மேல் கொம்பு - அழகிய மலரையுடைய உயர்ந்த கிளைகள், அலர்ந்த மலர் சிந்தி - தம்மிடத்தே மலர்ந்துள்ள பூக்களைக் கீழே உதிர்த்துச் சிதறி, புலர்ந்து அசைந்து - வாடியசைதலால் (அக் காட்சி), பூஅணைமேல் - மலர்ப் படுக்கையின்மேல், புல்லிக் கலந்து ஓசிந்த - (தம் நாயகரைத்) தழுவிப் புணர்ந்து வாட்டமுற்றிருக்கின்ற, புல் என்ற கோலத்துப் பூவையரைப் போன்றது - அழகொளி குறைந்திருக்கின்ற மங்கையர்கள் போலக் காட்சியளிக்கின்றது. (பார்)

(க - து.) 'சோலைகளிலுள்ள மரக்கிளைகள் மலர்களைச் சிந்தி அவைகளின்மேல் ஆடுதல், பூவணைமேல் தங்கள் நாயகரைப் புணர்ந்து வாடியிருக்கும் பெண்கள் போன்றிருக்கின்றது பார் என்றான்' என்பதாம்.

(வி - ரை.) பூக்கள் பரப்பிய மெத்தையின்மேல் பெண்கள் தம் காதலருடன் கலந்து எழுந்தபோது, கூந்தல் மேலும் கழுத்திலும் அணிந்திருந்த மலர்மாலைகள் சிதைந்து கீழேவிழ, கூந்தல் சோர, இடை நுடங்கச் சோர்வுற்று நிற்பது இயற்கை. அது

போன்று சோலை, தன்னிடத்துள்ள மரக்கிளைகள் மலர்களை உதிர்த்து வாட்டமுற்றசைந்து அம் மலர்ப் பரப்பின் மேற்படுவது, அம் மகளிர்தம் தன்மைக்கு ஒப்பாக இருந்ததென உவமைகூறி, நளன் தமயந்திக்குக் காட்டினனென்க.

சோலையானது இலையும் பூவும் பிஞ்சும் காயும் கனியுமாக மிக அடர்ந்து அதனுள் ஞாயிற்றொளி நுழைதற்கியலாது இருண்டிருத்தலால் 'அல்லென்ற சோலை' என்றார். முன்னரும்,

'தூங்கிருள் வெய்யோற்கொ துங்கிப்
புக்கிருந்தால் அன்ன பொழில்.'

என்றதூஉம் காண்க.

[1]'வெயில்நுழை பறியாக் குயினுழை பொதும்பர்.'

என்றார் மணிமேகலையினும்.

அசைய என்னும் செயவெனெச்சம் அசைந்து எனத் திரிந்தது. புல்லென்ற கோலம் - தன் இயற்கையழகு சிறிது குறைவுற்றிருக்கும் தன்மை. பூவை - நாகணவாய்ப்புள். அதுபோன்று பேசுவோரைப் பூவையர் என்றது உவமையாகு பெயர். (௧0)

### நளன், தமயந்திக்கு அல்லிப்பூவின் மலர்ச்சியைக் காட்டிக் கூறுதல்

௧௮௧. கோங்கை முகத்தணையக் கூட்டிக் கோடுங்கையால்
அங்கணைக்க வாய்நெகிழ்ந்த ஆம்பற்பூக்-கோங்கவிழ்தேன்
வார்க்கின்ற கூந்தல் முகத்தை மதியென்று
பார்க்கின்ற தென்னலாம் பார்.

(இ - ள்.) கொங்கு அவிழ்தேன் வார்க்கின்ற கூந்தல் - மணங்கமழுகின்ற தேனைக் கொட்டுகின்ற (மலரணிந்த) கூந்தலையுடைய ஒரு பெண்ணானவள், (தான் தடாகத்தில் நீராடுகின்ற இப்போது) கொங்கை முகத்து அணையக் கூட்டி - தன் கொங்கைக்கண்களிற் சேரும்படி அணைத்துப் பிடித்து, கொடும் கையால் அங்கு அணைக்க - தன் வளைந்த கைகளினால் அவ்விடத்தே நன்றாய் அணைத்துக் கொண்டிருத்தலால், வாய் நெகிழ்ந்த ஆம்பல்பூ - தன் உள்ளிடம் மிக விரிந்த அல்லிமலரினது தோற்றம், முகத்தை மதி என்று பார்க்கின்றது என்னல்

1. மணிமேகலை, ௪ : ௫.

ஆம் பார் - அவளது முகத்தை நிறைந்த நிலவென்று கருதிப் பார்ப்பதுபோல் இருக்கின்றதென்று சொல்லும்படி காட்சி தருவதை நீ பார்ப்பாயாக.

(க - து) நளன் தமயந்திக்குச் சுட்டிக்காட்டிப் 'பெண்ணொருத்தி, தன் கொங்கை முகட்டில் ஆம்பல் மலரை அணைப்பதனால் அது மிக வாய் விரிந்து இருக்கும் தோற்றம், அவள் முகத்தை நிறைமதி யென்று கருதிப் பார்ப்பது போன்றிருக்கின்ற தென்னும்படி இருப்பதைப் பார்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) கொங்கை முகம் - தனங்களின் மேலிடம். நீராடும் பெண்ணொருத்தி ஆம்பல் மலரைப் பறித்துத் தன் மார்பில் அணைத்துக்கொண்டாள். அம் மலர் மிகுதியாக விரிந்து விட்டது சந்திரனைக் கண்டால் ஆம்பல் மொட்டுகளும், மலர்களும் மலர்வது இயற்கை. இவள் முகம் திங்களை ஒப்ப இருத்தலால், அம் முகத்தைத் திங்களெனக் கருதி மலர்வது போன்று இருப்பதாகத் தோன்றுகின்றது. மலர் விரிதலைப் பார்த்தலாகக் குறித்தார். கூந்தல் : இங்கு ஆகு பெயராய்ப் பெண்ணைக் குறித்தது. (கக)

**நளன், தமயந்திக்கு ஒரு பெண்ணைச் சிவனோடு ஒப்புரைத்தல்**

கக0. கோய்த குவளை கிழித்துக் குறுநுதலமேல்
எய்தத் தனிவைத்த ஏந்திழையாள்—வையத்தார்
உண்ணாக் கடுவிடத்தை உண்ட ஒருமூன்று
கண்ணானைப் போன்றனளே காண்.

(இ - ள்.) கொய்த குவளை கிழித்து - தன்னால் கொய்யப் பட்ட கருங்குவளை மலர்களைப் புய்த்தெடுத்து, குறுநுதல்மேல் எய்த தனிவைத்த ஏந்திழையாள் - தன் சிறிய நெற்றியிடத்துப் பொருந்தும்படி வைத்த தன்னிகரில்லாத ஒரு மங்கையானவள், வையத்தார் உண்ணா கடுவிடத்தை - உலகமாந்தர் எவரும் உட்கொள்ளலாகாத கொடிய ஆலகால நஞ்சை, உண்ட ஒரு மூன்று கண்ணானை - (மக்களும் பிறரும் உய்தற்காக உண்டு கருமிடறு பெற்ற) ஒப்பற்ற முக்கண்களையுடைய சிவபெருமானை, போன்றனளே காண் - ஒத்திருக்கின்றவளாகிய இவளைப் பார்.

(க - து) நளன் நீராடும் பெண்ணொருத்தியைக் காட்டிக் 'கருநெய்தல் மலரைப் பறித்தெடுத்துக் கிள்ளித்

தன் நெற்றியில் வைத்துள்ளவள், உலகில் யாரும் உண்ண வொண்ணாத ஆலகாலமுண்ட சிவபெருமான்போன்று தோன்றுகின்றாள் இவளைப்பார்,' என்றான் என்பதாம்.

(வி - ரை.) குறு நுதல் - சிறிய நெற்றி : பெண்கள் உறுப்புக்களுள் நெற்றியும் இடையும் அடியும் சிறுத்திருத்தல் நல்லிலக்கணம் வாய்ந்த பெண்களுக்காதலின், இவள் அச் சிறப்புடையாள் என்பதைக் குறிக்கக் 'குறுநுதல்' என்றார். அப்பெண் கருங்குவளை மலரைக் கிழித்து நெற்றியில் ஒட்டவைத்துள்ள காட்சி, அம் மலர் நீல நிறமாதலானும் கண்களுக்கு அப் பூவினை உவமங் கூறுதலானும், அது நெற்றிக்கண்போல் தோன்றுகின்றது. சிவபெருமானுக்கு நெற்றிக்கண் உள்ளதாகலான், அவன் தோற்றம்போன்று இருப்பதாகத் தமயந்திக்கு வியப்புடன் நளமன்னன் கூறினனென்க.

திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகால நஞ்சைச் சிவபெருமான் உண்டு யாவரையும் காத்தார் என்பது புராணங்கள் கூறும் வரலாறு. இதனை இளங்கோவடிகளார் தாம் ஆக்கியருளிய சிலப்பதிகாரச் செஞ்சொற் காவிய வேட்டுவவரியில், காளியை வழிபடும் வேட்டுவர் வாயிலாக அமைத்து,

[1]'விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்.'

என்றும்,

பட்டினத்தடிகளார் தாம் யாத்தருளிய கோயினான்மணி மாலையில்,

[2]'......கடல்நஞ்சை உண்டிலை யாகிலன்றே
மாள்வார் சிலரையன் றோதெய்வ மாக வணங்குவதே.'

என்றும், இன்னும் பிற பிற ஆன்றோர் எல்லாம் எடுத்துரைத்துள்ள நிலையைப் பரந்துபட்ட தமிழ் நூல்களில் காண்க.

இக் கருத்துக்களை உட்கொண்டே இவரும் 'வையத்தார் உண்ணா......கண்ணுனை' என, அமைத்துக் கூறினரென்க.

ஏந்திழையாள் : குறிப்பு வினையாலணையும் பெயர். உண்ணா : ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கடுவிடம் : இருபெயரொட்டுப் பண்புத்தொகை ; அல்லது உருபும் பயனும் உடன்

1. சிலப். கஉ: 2. கோயில்நான்மணிமாலை, ௩௪.

தொக்க தொகையாகக் கோடலுமாம். ஒரு மூன்று, மூன்று என்னும் தொகைக்கு ஒரு அடையாக வந்ததெனலுமாம். கண்ணுன்: குறிப்பு வினையாலணைந்த சினைப் பெயர்; போன்றனள்: இறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயர். (கஉ)

நளன், தமயந்திக்கு நீர்விளையாட்டில் நாயகி நாயகன் செயல்களைக் காட்டல்

கககக. கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்-கெழுமியவக்
கோமகற்குத் தானினைந்த குற்றங்கள் அத்தனையும்
பூமகட்குச் சொல்லுவாள் போல்.

(இ - ள்.) கொழுநன் கொழுந்தாரை நீர்வீச (நீர் விளையாட்டில் ஒருத்திக்குத் தன் காதலன் செழுமையாகிய ஒழுக்காகப் பாய்கின்ற துருத்தி நீரினை (மேலே) சிதற, கூசி-(அதனால்) வெட்கமடைந்து, கெழுமிய அக் கோமகற்கு - அன்பு பொருந்திய அந்த மேன்மைமிக்க கணவனிடத்துள்ள, தான் நினைந்த குற்றங்கள் அத்தனையும் - தான் கருதிய குறைகளெல்லாவற்றையும், பூமகட்கு சொல்லுவாள் போல் - செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளுக்குச் சொல்பவள்போன்று, செழுமுகத்தை தாமரைக்கே சேர்த்தாள் - தன்னுடைய அழகிய முகத்தை (அத் திருமகள் வாழும்) தாமரை மலரில் அணைத்தாள்.

(க - ரு.) 'ஒருத்தி நீர் விளையாட்டில் தன்மீது தன் காதலன் பாய்ச்சிய துருத்தி நீருக்கு வெட்கமுற்றுச் செந்தாமரை மலர்மீது தன் முகத்தை அணைத்த காட்சி, தன் கணவன்மேல் தான் கருதிய குற்றத்தை அம்மலரில் வாழும் திருமகளுக்குச் சொல்வாள்போன்றிருந்தது' என்றான் என்பதாம்.

(வி - ரை.) ஆடவரும் மகளிரும் நீரில் விளையாடுகின்றனர்; அதில் ஒரு காதலன், தன் காதலியின்மீது நீர்த்துருத்தியினால் நீரைப் பீலிற்றுகின்றான்; அதைப் பொறாது நாணங்கொண்டு தலை கவிழ்ந்த காதலி, செந்தாமரை மலர்மீது தன் முகத்தை வைத்து மறைக்கின்றாள். அக் காட்சி, தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளிடம் தன் காதற்கணவன் குறைகளை எடுத்துச் சொல்வது போன்றிருந்தது. பெண்கள் தமக்கு ஏற்காத செயல் நிகழ்ந்தால் நாணமுறுவது இயல்பு. அதனானே அவர்கட்கு,

"உயிரினும் சிறந்தன்று நாண்"[1]

என்றார் தொல்காப்பியனாரும்.

"...என்னொடும் வளர்ந்த பொற்பார் திருநாண்."[2]

எனவும்,

"என் கண்மணிபோன்று
ஒருநாள் பிரியாது உயிரிற் பழகி உடன்வளர்ந்த
அருநாண்."[3]

எனவும், போற்றியுரைப்பர் மணிமொழிப் பெருமானும் தலைவி வாயிலாக. இங்கே தன் காதலன் நீர் பிலிற்றியதைப் பொறாது நாணித் தலைகவிழ, பக்கலில் தாமரை மலர்கள் பூத்திருத்தலால் அதில் அவள் முகம் படிந்தது. அக் காட்சியை எழுது சித்திரம் போற் படமாகப் பிடித்த ஆசிரியர் சொல்லோவியமாகப் 'பூமகட்குச் சொல்லுவாள்போல் தாமரைக்கே செழுமுகத்தைச் சேர்த்தாள்' என்றார்.

தாமரைக்கே, கோமகற்கு என்பன, ஏழனுருபு நான்கனுருபாக மயங்கிய வேற்றுமை மயக்கம்.

"யாதன் உருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கில் வேற்றுமை சாரும்"[4]

என்பது தொல்காப்பிய விதி ஆகலான், ஏழனுருபுவிரித்துப் பொருள் கூறப்பட்டது. பூமகள் - திருமகள். பூ எனப் பொதுப் படக் கூறினாரேனும், சிறப்புப்பற்றிச் செந்தாமரை மலரையே குறித்தது.

பெண்கள் தம் உள்ளத்திலுள்ள கருத்தைத் தம் போன்ற பெண்களிடமே கூறுவது மரபாகலான், இவள் முகத்தைத் தாமரை மலரில் சாய்த்து நின்றது, அதில் இருக்கும் திருமக ளிடம் தன் கணவனுடைய குறைகளைக் கூறி ஆற்றுதல் போன்றிருந்ததென்க. (கரு)

**நளன், மற்றொருத்தியின் செயலைத் தமயந்திக்குக் கூறல்**

கசஉ. போய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டில்
பெய்து முகமூன்று பெற்றாள்போல்—எய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்துவக்கும் சேய்.

1. தொல். களஙக. 2, 3. திருக்கோவையார், உ0அ; சச.
4. தொல். ருகூ0.

(இ - ள்.) மாற்றாரை வென்று - பகைவரைக்கொன்று வெற்றிகொண்டு, செருவாளைப் பார்த்து உவக்கும் சேய் - போர் வாட் படையைப் பார்த்து அதனால் மகிழ்ச்சி கொள்கின்ற முருகனையைய நளமன்னன், பொய்தல் - விளையாட்டாக, கமலத்தின்போது இரண்டை - இரண்டு செந்தாமரை மலர்களை, காது இரண்டில் பெய்து - தன் காதுகள் இரண்டிலும் செருகிக் கொண்டு, முகம் மூன்று பெற்றாள் போல் - மூன்று முகங்கள் கொண்டவள் போன்று எய்த வருவாளை பார் என்றான் - நம்மை நெருங்கி வருகின்றவளைப் பார் என்று கூறினான்.

(க - ரை.) 'ஒருத்தி விளையாட்டாகத் தன் காதுகள் இரண்டிலும் தாமரை மலர்களைச் செருகிக்கொண்டு, முகம் மூன்றுடையாளென்னும்படி நம்மை நோக்கி வருகின்றவளைப் பார்' என்றான் என்பதாம்

(வி - ரை.) பொய்தல் - விளையாட்டு. கமலம்: ஈண்டு ஒன்றொழி பொதுச் சொல்லாய்ச் செந்தாமரையையே குறித்தது. ஒருத்தி தன் காதுகளில் செந்தாமரைமலரைச் செருகிக்கொண்டு செல்வது, தாமரை மலரை முகத்துக்கு உவமை கூறுதல் ஆன்றோர் மரபாகலான், தன் இயற்கை முகத்தோடு செயற்கை முகமாக இரண்டு மலர்களும் தோன்றுகின்றன. அதனை வியப்புடன் நளன், தன் காதலியாகிய தமயந்திக்கு 'முக மூன்று பெற்றாள் போல்' என்று சுட்டிக் காட்டினான்.

கொலையிற் கொடியாரையும் பகைவர்களையும் வென்று தன் கொற்றத்தை நிலைநாட்டி எத்திசையும் புகழ் மணக்க இருக்கும் கோல் முறை கோடாக் கொற்றவனாகிய நளமன்னன் இருத்தலால் 'மாற்றாரை வென்று' என அடைகொடுத்து, தன் கருவிகள் தனக்கு உதவி செய்யின் அதனை வியந்து பாராட்டுவது அதற்குரியார் செயலாதலான், இங்கே நளமன்னனும் தன் வெற்றிக்கு நிலைக்களனாகிய அமைந்த வாளைப்பார்த்து மகிழ்ந்தான் என்பாராய்ச், 'செருவாளைப் பார்த்துவக்கும் சேய்' என அழகுற அமைத்துக் கூறினார், புகழேந்தியார். (கஅ)

நளன், தமயந்திக்கு நீர்விளையாட்டின்போது தன் மனையாளைக் காணாது மயங்குவோனைக் காட்டல்

கககூ. பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த-மின்னுடைய
பூணாள் திருமுகத்தைப் புண்டரிகம் என்றயிர்த்துக்
காணா தயர்வானைக் காண்.

(இ - ள்.) பொன் உடைய வாசப் பொகுட்டு மலர் அலைய - பொன்னிறமுள்ள பூந்தாதின் மணத்துடன் கொட்டையையுமுடைய தாமரை மலர்கள் அலையும்படி, தன் உடனே மூழ்கி தனித்து எழுந்த-தன்னோடு நீரில் குளித்துத் (தான் எழும்முன்பு) தனியாக மேலெழுந்த, மின் உடைய பூணாள் திருமுகத்தை - ஒளி பொருந்திய அணிகளணிந்த தன் நாயகியின் அழகிய முகத்தினை, புண்டரிகம் என்று அயிர்த்து - (அப் பொய்கையிலுள்ள தாமரைமலர்களில்) இதுவும் ஒரு தாமரைப்பூ வென்று கருதி ஐயங்கொண்டு, காணாது அயர்வானை காண் - அவளைக் காணாமல் வருந்துகின்ற இவனை நீ காண்பாயாக.

(க - ரை) 'தன்னுடனே கூடக் குளித்துத் தனக்கு முன் எழுந்த தன் நாயகியின் முகத்தை, அவள் நாயகன் தாமரை மலரெனக் கருதித் தன் நாயகியைக் காணாமல் வருந்துகின்றவனை நீ பார் என்றான்,' நளமன்னன் என்பதாம்.

(வி - ரை.) நீராடுங்கால் நீர்க்குள் மூழ்கி நெடுநேரம் வரை இருக்க விரும்புவது நீரில் மூழ்கி விளையாடுவாரது இயல்பு அவ்வாறே தன் நாயகியோடு நீர் விளையாடிய ஒருவன், நீரில் குளித்து நெடுநேரம் இருப்ப, அவனுடன் மூழ்கிய நாயகி மூச்சுத் தாங்க இயலாளாய் அவனுக்குமுன் எழுந்து தலைமட்டும் தோன்றத் தாமரை மலர்கள் பூத்துள்ள பக்கலில் நின்றாளாகப், பின் எழுந்த அவள் நாயகன், அவள் முகத்துக்கும் தாமரை மலருக்கும் வேற்றுமை யறிய வொண்ணாதவனாய் அவளைக் காணாமல் வருந்தினான் என அவ்வியப்புச் செயலைத் தமயந்திக்குக் காட்டினான். பொன் - திருமகள் வாழ்கின்ற என்று பொருள் கொள்ளலுமாம். பொகுட்டு - தாமரைக் கொட்டை. முகத்துக்கும் தாமரை மலருக்கும் வேற்றுமை யுணராமல் மயங்குதலால் **மயக்கவணி**. அயிர்த்தல் - ஐயங்கொள்ளுதல். நீரிற் குளித்து விளையாடலைக் [1]"குளித்து மணற்கொண்ட கல்லா இளமை" என்றார் பிறரும். ()

**நளன், தமயந்திக்கு மற்றொருத்தியைக் காட்டிக் கூறல்**

கசஅ. சிறக்கின்ற வாள்முகமும் செங்காந்தட் கையால்
முறுக்குநெடு மூரிக் குழலும்—குறிக்கின்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
அரும்பாம் பணைமுலையாய் ஆம்.

1. புறம் : உசங.

(இ - ள்.) அரும்புஆம் பணைமுலையாய் - தாமரை யரும்பை யொத்த பெருத்த கொங்கைகளையுடையவளே! 'சிறுக்கின்ற வாள் முகமும் - இப்பெண்ணினுடைய சிறிதாகச் சுருங்கியுள்ள ஒளியுள்ள முகமும், செம் காந்தள் கையால் - சிவந்த காந்தள் மலர் போன்ற தன் கைகளினால், முறுக்கு நெடுமூரிக் குழலும் - (இது காலை) முறுக்கி நீரைப் பிழியப்படுகின்ற சிறப்புமிக்க கூந்தலும், குறிக்கின் - ஒப்புநோக்கிப் பார்த்தால், கரும்பாம்பு வெண் மதியைக் கைக்கொண்ட காட்சிஆம் - இராகுவென்னும் கரு நிறப் பாம்பானது, வெண்மை ஒளியுள்ள சந்திரனைப் பற்றிப் பிடிக்கும் தோற்றம்போல் இருக்கின்றதாகும்.

(க - ரு) 'நீராடிக் கரையேறிய பெண்ணொருத்தி, தன் கூந்தலிலுள்ள நீரைப் பிழிந்து நிற்கின்ற காட்சி, சந்திரனை இராகு விழுங்கும் தோற்றம்போல் இருப்பதைப் பார்' என்று நளமன்னன் தமயந்திக்குக் காட்டினான் என்பதாம்.

(வி - ரை.) அரும்பு - தாமரை அரும்பு. இது தமயந்தியின் கொங்கைட்கு ஒப்பாகக் கூறப்பட்டது. பெண்கள் நீராடிக் கரையேறியபோது கூந்தல் முகம் மறைய விரிந்துகிடக்கும். அக்கூந்தலைக் கையாற்கோதி அணைத்து அதிலுள்ள நீரைப் பிழியுந் தோற்றம், கிரகண காலத்தில் சந்திரனை இராகு விழுங்குவதுபோல் தோன்றுவதாகக் குறித்துத் தமயந்திக்கு நளமன்னன் காட்டினான். கூந்தல் சிதர்ந்து கிடக்கின்ற முகத்தைச் 'சிறுக்கின்ற வாள்முகம்' என்றார். இராகுவின் நிறம் கருநிறமாதலால் 'கரும்பாம்பு' என்றார்.

[1]'கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்
திங்களைப் பாம்புகொண் டற்று.'

என்றதூஉங் காண்க. திங்கள் முகத்துக்கும் கூந்தல் கரும்பாம்புக்கும் உவமமாக வந்தது. (கசு)

நளன், தமயந்திக்கு நீரில் மூழ்கிவரும் வேறொருத்தியைக் காட்டல்

கசுரு. சோர்புனலின் மூழ்கி எழுவாள் சுடர்நுதல்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம்—பாராய்
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு.

1. திருக்குறள், ககசசு.

(இ - ள்.) சோர்புனலின் மூழ்கி எழுவாள் - ஓடுகின்ற நீரில் குளித்து எழுந்திருப்பவளுடைய, சுடர் நுதல்மேல் - ஒளிமிக்க தன் நெற்றியின்மீது, வாரகுழலை நீக்கி வரும் தோற்றம் - படிந்துள்ள கூந்தலை ஒதுக்கிக்கொண்டு வருகின்ற காட்சி, மேகத்து இடையே விரைகொண்டு எழுந்த பிறை பொற்பு - மேகத்திற்கு ஊடே விரைவில் தோன்றிய நிலாப்பிறையினது அழகை, புரைகின்றது என்னல்ஆம் பாராய் - ஒத்திருக்கின்றதென்று சொல்லலாம்; நீ காண்பாயாக.

(க - து.) 'நீரில் குளித்துவரும் இம்மங்கை தன் நெற்றியிற் படிந்துள்ள கூந்தலைத் தன் கைகளினால் ஒதுக்கிக்கொண்டு வருகின்ற காட்சி, மேகத்தின் நடுவே விரைந்துதோன்றும் நிலாப் பிறையைப்போல் காண்பதை நீ பார்' என்று நளமன்னன் தமயந்திக்குக் காட்டினான் என்பதாம்,

(வி - ரை.) நீரில் மூழ்கி வருபவள், தன் நெற்றியிற் படிந்து கிடந்த கூந்தலை ஒதுக்கிக் கொண்டுவருவது, மூன்றாம் பிறை மேகத்திடையே தோன்றுவதுபோற் காட்சியளிப்பதாகக் குறித்தார். சோர்தல் - பாய்தல்: ஓடுதல். எழுவாள்: எதிர்கால வினையாலணையும் பெயர். புரைதல் - ஒத்திருத்தல். பொற்பு - அழகு. (கஎ)

**நளன், தமயந்திக்கு கழுநீர்மலர் கொய்வாளைக் காட்டல்**

கஅஅ. செழுநீலம் நோக்கேறிப்பச் செங்குவளை கொய்வாள்
முழுநீலம் என்றயிர்த்து முன்னர்க—கழுநீரைக்
கோய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
வையாரும் வேல்தடக்கை மன்.

(இ - ள்.) வை ஆரும் வேல்தடக்கை மன் - கூர்மை பொருந்திய வேலை யேந்திய பெரிய கைகளையுடைய நளமன்னனானவன், செம்குவளை கொய்வாள் - சிவந்த கழுநீர்மலரைக் கொய்கின்ற ஒருத்தி, செழுநீலம் நோக்கு எறிப்ப குளிர்ச்சி மிக்க கருங்குவளை மலர் போன்ற தன் கண்பார்வையொளி அதன்மேற்படிய, முழு நீலம் என்று அயிர்த்து - நிறைந்த கருங்குவளை மலரென அதனை ஐயங்கொண்டு, முன்னர் கழுநீரை கொய்யாது போவாளை - தன் முன்னுள்ள செங்கழுநீர் மலரினைப் பறிக்காமல் செல்கின்றவளை, கோல்வளைக்குக் காட்டினான் - அழகிய வளையலையணிந்த தமயந்திக்குக் காண்பித்தான்.

(க - ரை.) நளமன்னனானவன், 'செங்குவளை மலர் பறித்துக்கொண்டிருந்த ஒருத்தி தன் கண்ணொளி பாய்ந்து கருநிறங்காட்ட, அதனைக் கருங்குவளை மலரென ஐயங் கொண்டு தன் முன்னருள்ள அதனைப் பறிக்காமல் செல்வ தைப் பார்' என்று தமயந்திக்குக் காட்டினான் என்பதாம்.

(வி - ரை) செழுநீலம் - குளிர்ச்சி மிக்க நீலம்: அந்நிற முடைய கண்கட்கு ஆதலால் ஆகுபெயர். ஓர் பெண்ணின் கண்ணின் கருநிறம், மலரையும் தன்னிறமாக்கிற்றென கண்ணின் மேன்மையைச் சிறப்பித்தவாறும். கோல்வளை : பண்புத்தொகை நிலைக் களத்துப்பிறந்த அன்மொழித் தொகை. வை - கூர்மை. வேல் தடக்கை - வேலேந்திய கை வீரர்கட்குப் படைகளே அணியாகலின், இங்கே நளமன்னன் வீரச்சிறப்புக்காகக் குறித் தார்.

"[1] கழலிலாக் காலும் கால அயிலிலாக் கையும் காந்தும்
அழலிலாக் கண்ணும் இல்லா ஆடவர் இல்லை.'

என, இலங்கைவேந்தன் படைஞர் சிறப்பை அனுமான் வாயி லாகக் கம்பர் அமைத்துக் காட்டியதும் அறியற்பாலது. (கஅ)

நளனும் தமயந்தியும் கங்கையில் நீராடுதல்

கக௯. காவி பொருநெடுங்கண் காதலியும் காதலனும்
வாவியும் ஆறும் குடைந்தாடித்—தேவின்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி ஆடி
ஒழியா துறைந்தார் உவந்து.

(இ - ள்.) காவி பொருநெடுங்கண் காதலியும் காதலனும் - கருங்குவளை மலரையொத்த நீண்ட கண்களையுடைய நாயகியாகிய தமயந்தியும் நாயகனாகிய நளமன்னனும், வாவியும் ஆறும் குடைந்து ஆடி - (மேற்கூறியவாறுள்ள காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டே சென்று) குளங்களிலும் ஆறுகளிலும் நீரினை அசைத்து அசைத்து மூழ்கி, தேவின் கழியாத சிந்தையுடன் - இறைவனை மறவாத எண்ணத்தோடு, கங்கைநதி ஆடி - கங்கை நீரில் முழுகி, உவந்து ஒழியாது உறைந்தார் - (அங்கோர் பொழி லில்) மகிழ்ந்து (அன்பு) குறையாமல் தங்கினார்கள்.

---

1. கம்பராமா. ஊர்தேடு : ௩௬.

(ந - து.) தமயந்தியும் நளனும் குளங்கள் ஆறுகள் முதலியவற்றிலெல்லாம் நீர்விளையாட்டுச் செய்து, இறைவனை நினைந்த மனத்தினராய்க் கங்கையாற்றில் படிந்து மூழ்கி அன்புமாறாமல் அங்குள்ள ஒரு பொழிலில் தங்கினார்கள் என்பதாம்.

(வி - ரை.) காவி - கருங்குவளைமலர் : முதலாகு பெயராக அதன் மலரைக் குறித்தது. பொருதல் - மாறுபடல் என்றலுமாம். தன் குளிர்ச்சியாலும் கரியநிறத்தாலும் கண்டாருயிருண்ணும் தோற்றத்தாலும் கண்கள் குவளைமலருக்கு மாறுபட்டதென்க. திருவள்ளுவர் தந்த காதலன் தன் காதலியைப் பாராட்டுங்கால் அவள் கண்களின் சிறப்பை நோக்கிக் கூறுகின்றவன், 'கருங்குவளைமலர்கட்குப் பார்க்குந்தன்மை இல்லாது போயிற்று; அஃது தோன்றுமட்டும் இருக்குமேயாயின், என் காதலியின் கண்களையொவ்வேமென்று கருதி நாணங்கொண்டு நிலத்தை நோக்கிக் கவிழ்ந்துகொள்ளும்' என்று வியந்து பாராட்டுகின்றான். ஈண்டும் அக்கருத்தை உட்கொண்டே 'காவி பொருநெடுங்கண்' என்றார்.

[1] 'காணிற் குவளை கவிழ்ந்து நிலன்நோக்கும்
மாணிழை கண்ணொவ்வேம் என்று.'

என்பதது. காதலர்க்குக் காவும் யாறும் சோலைகளும் இன்பம் பயக்கும் தன்மையனவாகலான் புதுமணம் புணர்ந்த காதலன் காதலிகளாகிய நளனும் தமயந்தியும், அவைகளுட் படிந்தாடினாரென்று கூறினார். ஆடி : இறந்தகால வினையெச்சம். உறைந்தார்: இறந்தகால வினையாலணையும் பெயர். உறைந்தார் என்பதற்கு எற்ற தன்மையாகப் பொழில் வருவித்துரைககப்பட்டது, பின் சோலையைக் குறித்து வருதலான். (கக)

நளன், தமயந்திக்குச் சோலையைக் காட்டல்

கக௨. நறையொழுக வண்டுறையும் நன்னகர்வாய் நாங்கள்
உறையும் இளமரக்கா ஒக்கும்—இறைவளைக்கைச்
சிற்றிடையாய் பேரல்குல் தேமொழியாய் மென்முறுவல்
பொற்றொடியாய் மற்றப் பொழில்.

(இ - ள்.) இறைவளைக்கை சிறுஇடையாய் - சிறந்த வளையலணிந்த கைகளையும் சிறிய இடையையும் உடையாளே!, பேர்

1. திருக்குறள், ககக௪.

அல்குல் தேம் மொழியாய் - பெரிய அல்குலையுடைய இனிய மொழியாளே!, மென்முறுவல் பொன் தொடியாய் - புன்சிரிப்புப் பொருந்திய பொன்னணியன்ற தோள்வளையுடையாளே!, இப் பொழில் - இந்தச் சோலையானது, நறை ஒழுக வண்டு உறையும் நல்நகர்வாய் - (சோலைகளில்) தேன் ஒழுகுவதால் வண்டுகள் தங்கியிருக்கின்ற வளநலனிறைந்த மாவிந்தமாநகரத்தில், நாங்கள் உறையும் இள மர கா ஒக்கும் - நானும் எனக்குரிய நண்பர் முதலியோர்களும் கூடி இருக்கின்றதான இளமரங்கள் நிறைந்த சோலையைப் போன்றிருக்கின்றது.

(க - து.) 'இச்சோலை, நானும் என் நண்பர்களும் தங்கி இருக்கின்ற மாவிந்தமாநகர்க்கண் உள்ள தேனொழுகுவதால் வண்டுகள் உறைகின்ற சோலைபோன்றிருக்கின்றது' என்று தமயந்திக்கு நளமன்னன் கூறினான் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தியை மும்முறை விளித்தான், அவள்பாற்கொண்ட ஆராக் காதலினால். கோவலனும் கண்ணகியாரைப் பாராட்டுமிடத்து,

[1]"மாசறு பொன்னே! வலம்புரி முத்தே
காசறு விரையே! கரும்பே! தேனே!
அரும்பெறல் பாவாய்! ஆருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!'

என்று தன் அன்புதோன்றப் பன்முறை விளித்துப் பாராட்டியதும், அயோத்தியேந்தல் மிதிலைச்செல்வியுடன் காட்டிலுறைந்தகாலை, வனக்காட்சியைக் காட்டி,

[2]"ஒருவில் பெண்மையென் றுரைக்கின்ற உடலினுக்குயிரே!

எனவும்,

[3]"குழுவு நுண்டொளை வேயினும் குறுநரம் பெறிவுற்
றெழுவு தண்டமிழ் யாழினும் இனியசொற் கிளியே!'

எனவும், பல்வகையாக விளித்துரைப்பதும் இக்கருத்துக் கொப்ப இருத்தல் போலவென உணர்க.

மென்முறுவல் - புன்சிரிப்பு. மென்மை: ஈண்டுச் சிறுமை யென்னும் பொருட்டு. பொன் தொடி - தோளிலணியும் வளையல்.

1. சிலப். உ : எரு - சு. 2, 3. கம்பராமா. சித்திரகூட : கசு; உஅ.

மேல் 'இறைவளைக்கை' என்றதால், பின், தொடி என்ற சொல்லுக்குத் தோள்வளையென்று பொருள் கூறப்பட்டது. மற்று: அசைச் சொல். (உ0)

நளனைத் தமயந்தி வினவுதல்

கசுகூ. கன்னியர்தம் வேட்கையே போலும் கனிமழலை
தன்மணிவாய் உள்ளே தடுமாற—மன்னவனே!
இக்கடிகா நீங்கள் உறையும் இளமரக்கா
ஒக்குமதோ என்றாள் உயிர்த்து.

(இ - ள்.) கன்னியர்தம் வேட்கையே போலும் - (மணப் பருவம் வாய்ந்த) இளநங்கையர் உள்ளடக்கிக் கொண்டிருக்கின்ற காதலைப்போல, தன் மணிவாய் உள்ளே கனிமழலை தடுமாற - (தமயந்தி) தன் அழகிய வாயிடத்திருந்து இளஞ்சொற்கள் நன்கு வெளிப்படாமல் தோன்றும்படி (மென்குரலில்), உயிர்த்து - (காதல் மிக்க வருத்தத்தால்) பெருமூச்சு விட்டுக்கொண்டு, மன்னவனே - அரசே!, இக்கடிகா நீங்கள் உறையும் இளமரக்கா ஒக்குமதோ - இம்மணமிக்க பூஞ்சோலை நீயும் நின் நண்பர்களும் இருக்கின்ற இளமரச்சோலையை ஒத்துள்ளதோ, என்றாள் - என்று நளமன்னனை வினவினாள்.

(க - து.) நளமன்னன் இவ்வாறு கூறக்கேட்ட தமயந்தியானவள் காதல் வருத்தத்தால் சொற்கள் தடுமாற, பெருமூச்சுவிட்டுக்கொண்டு, 'அரசே! நீங்கள் இருக்கின்ற இளமரச்சோலையை இச்சோலை ஒத்துள்ளதோ' என்று கேட்டாள் என்பதாம்.

(வி - ரை) 'நாங்கள் இருக்கின்ற மாவிந்த நகரச் சோலை போன்றது இச்சோலை' யென்று நளமன்னன் கூறக் கேட்டவுடன், தமயந்திக்கு நளன்பாற்கொண்ட காதலால், வேறு மகளிரும் இவர்பால் தொடர்புடையார் போலும் என்னும் கருத்தினால் சினம் பொங்க, அதனால் பெருமூச்செறிந்து நாக் குழறச் சொற்கள் தடுமாற, 'இச சோலை, நீங்கள் இருக்கின்ற இளமரச் சோலையை ஒத்ததோ' என்று வருத்தத்தோடு நளமன்னனை வினவித் தன் குறிப்புணரக் கூறினாள். இதில், அவள் சொற்கள் தடுமாறித்தடுமாறி விளக்கமாகச் சொல்லவொண்ணாத வாறு அவள் வாயிலிருந்து தோன்றியதால், அச் சொற்கள் வந்த நிலைக்கு,

'கன்னியர்தம் வேட்கையே போலும்......தடுமாற.'

என்றார்.

[1]"மருங்குல் தோய்ந் தொளிப்பச் செம்பொன் வனமுலை இறுமாப்பெய்த, கருங்குழற் கற்றைபாரட் கங்குலை வெளிறு' செய்யும் மங்கைப்பருவம் வாய்ந்து, மணமின்றிச் சில்லாண்டு கழிக்கும் நங்கையர்களுக் காதல் வேட்கை கைம்மிகுந்து அக் காதலை வெளிக்குச் சொல்லவொண்ணுது மனத்தால் நினைந்து நினைந்து வாடுதலும், அதனால் அவள் வாடுகின்றாள் என்ற குறிப்புத் தோன்றுதலும் இயல்பு. அதுபோன்றே தமயந்தியும் தன் கருத்து வெளிப்படையாகத் தோன்றாமலும் குறிப்பாகத் தோன்றுமாறும் வினவினளென இவ்வுவமை வாயிலாகக் குறித்தார். களிமழலை - கேட்டாருக்கு இன்பந்தரும் மென்சொற்கள். மணிவாய் - முத்துக்கள் கோத்தது போன்றிலகும் பல் வரிசை யுடைய வாய். [2]"பாகு பொதி பவளம் திறந்து நிலாஉதவிய, நாகிள முத்தின் நகை நலம்' என்றார் பிறரும். உள்ளே தடுமாறுதல் நன்கு வெளிப்படாது சொல்லியும் சொல்லாதது மாகப் பிணங்கிப் பேசுதற்குரிய செயல். நீங்கள் என்பது முன்னிலைப் பன்மை: அது நளனோடுறைகின்ற மகளிரையும் நளமன்னனையும் சேர்த்துத் தமயந்தி தான் கொண்ட கருத்தைக் குறித்தது.

> [3]"யாரினும் காதலம் என்றேனா வூடினாள்
> யாரினும் யாரினும் என்று.'

இத்திருவள்ளுவர் காட்டும காதலர்களில், தலைவன் தன் காதலியை நோக்கி 'நாம் இருவரும் உலகில் வாழ்கின்ற மற்றைய காதலர்களினும் மிக்க காதலுடையேம்' என்று கூறினனாக, அது கேட்ட காதலி, அதனை மற்ற மங்கையர்பால் தான் கொண்டிருக்கும் காதலைவிடத் தன்பால் மிக்க காதலுடைய னாக இருப்பதாகக் கருதி, 'என்னைவிட வேறு யாரிடத்தில் காதல் கொண்டுளை' என்று கூறிக்கொண்டு சினந்து பிணங் கினாள். இதுபோன்றே நளன், 'நாங்கள் உறைகின்ற சோலையை இச்சோலை ஒக்கு'மென்று தன்மைப் பன்மையால் தன் நண்பர் களுடன் இருந்ததைக் குறிப்பிட்டுரைக்க இங்குத் தமயந்தியும் அவன்றன் காமக்கிழத்தியருடன் என்று கருதிப் பிணங்கி 'நீங்கள் உறையும் இளமரக்கா ஒக்குமதோ' என்று கூறினா ளென்க. இவள் தன் ஆரா அயரா அன்புப் பெருக்கை

1. திருவிளையாடல், திருமணப்: ௯. 2. சிலப். அ : அ0 - க.
3. திருக்குறள், ௧௩௧௪.

உணர்த்தியவாறும். உயிர்த்தல் - பெருமூச்செறிதல். காதலாலும் சினத்தாலும் பிற தாங்கவொண்ணாத வருத்த மேலீட்டாலும் மக்கட்குப் பெருமூசசெறிதல் இயல்பு. இந்தத் தமயந்தியும் பிறமங்கையரோடு நம்மன்னன் உறைகின்றானே என்னும் கருத்துத் தோன்றி அதனாற் சினமேலிடப் பெருமூச் செறிந்தாள். அதனை 'உயிர்த்து' என்னும் சொல்லால் உணர்த்தினார். (உக)

### தமயந்தி நளனுடன் ஊடல்கொள்ளல்

உ௦௦. தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதல்மேல்
வெண்தரளம் என்ன வியர்வரும்பக்—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழல்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி.

(இ - ள்.) கழல் மன்னர் - வீரக்கழலணிந்த பகை வேந்தர்களின், வெள்ளைக் குடை சிவப்ப நின்றான் கொடி - வெண்கொற்றக்குடைகள் போர்க்களத்தில் இரத்தக்கறை படிய வெற்றிகொண்டு நின்றவனாகிய வீமமன்னன் கொம்புபோன்றவளாகிய தமயந்தி, தொண்டை கனிவாய் துடிப்ப - (மேற்கூறியவாறு பிணங்கிச் சினமொழி கூறியபின்) கொவ்வைக்கனி போன்ற வாயிதழ்கள் துடிக்கவும், சுடர்நுதல்மேல் - ஒளி பொருந்திய நெற்றியின்மீது, வெண்தரளம் என்ன வியர்வு அரும்ப - வெண்ணிற முத்துப்போன்று வியர்வைநீர் தோன்ற, கெண்டை கடைசிவப்ப நின்றாள் - சேல்மீன்போன்ற தன் கண்கள் சினத்தால் செந்நிறமடைய (அசைவற்று) நின்றாள்.

(க - து.) தமயந்தியானவள் உதடுதுடிப்ப, நெற்றியில் வேர்வையரும்ப, கடைக்கண் சிவப்பேறச் சினந்து நின்றபடியே நின்றாள் என்பதாம்.

(வி ரை.) தமயந்தி, 'இது நீவிர் இருக்கும் சோலை போன்றதோ?' என்று கேட்டதற்கு நளன் விடை கூறுமுன், அவட்கு ஐயம் மிகுந்து சினம்பொங்கி, அச் சினத்தால் இதழ்கள் துடித்தன; நெற்றியில் வேர்வை நீர்த்துளிகள் அரும்பின; கண்கள் சிவந்தன; எழுது பாவைபோல் ஏங்கி அசைவற்று நிற்பாளானாள் என்க. தொண்டை - கோவைப்பழம்: நிறமும் வடிவும் உவமை. வியர்வையின் வெண்ணிறத்திற்கு முத்தை உவமை கூறினார். கெண்டைபோன்ற கண்ணைக் கெண்டையென்றது உவம ஆகுபெயர். கொடிபோல்வாளைக் கொடி

யென்றதும் அது. கழல் - வீரத்துக்கும் வெற்றிக்கும் அடையாளமாக வீரர்கள் காலிலணியும் பொற்றண்டை. இதனை,

> "[1] சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார
> கழல்யாப்புக் காரிகை நீர்த்து.'

எனத் திருவள்ளுவரும்,

> "[2] சூழ்கழல் மன்னா நின்னகர்ப் புகுந்து.'

என இளங்கோவடிகளும் அருள்வது காண்க.

கழலணியும் மன்னர்களையும் புறமுதுகிட்டோடித் தோற்கச் செய்யும் பெருமையுடையானென்ன வீமனைக் குறித்தார்; அவ்வீரப்பண்பினால் மகனறிவு தந்தையறிவென்பாராகலான், தன் காதற் கணவன்பால் ஈயும் பறந்திருக்க இடங்கொடாக் கற்புக் குலமணியாகத் தமயந்தி திகழ்பவளென, அப் பண்புநிலை தோன்றக் 'குடைசிவப்ப நின்றான் கொடி' என்றார். 'கொடி' என்பது, தான் பற்றிய பொருளை விடாதுபற்றிப் பிணைந்து தழுவி நிற்றலையுடையது. அதுபோன்று இக் கற்பின் கொழுந்தாகிய தமயந்தியும் தன் காதலனைப் பிரியாது அவன் செல்சாரெல்லாம் தான் செல்லும் பண்பு பெற்றுள்ள காதல் நெஞ்சுடையளாக இருக்கின்றாள் என்பது தோன்றவே, இச் சொல்லால் அமைத்துரைத்தாரென்க. (உஉ)

**தமயந்திக்கு ஊடலால் முகம் முதலிய உறுப்புக்கள் மாறுபடல்**

உ0௩. தங்கள் புலவி தலையில் தனித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்—அங்கண்
வடிவாள்மேற் கால்வளைத்து வார்புருவம் என்னும்
கொடியாடக் கண்டானோர் கூத்து.

(இ-ள்.) தங்கள் புலவி தலையில் - (பின்வரும்) நளன் தமயந்தி இருவர்க்கும் நிகழ்ந்த பிணக்கில், தனித்து இருந்த - (நளனைவிட்டு விலகித்) தனியாகப் பக்கலில் இருந்த, மங்கை வதன மணி அரங்கில் - தமயந்தியுடைய முகங்களெனும் அழகிய நடனசாலையில், அம் கண் வடிவாள் மேல் - அழகிய கண்கள் என்னும் கூர்மை பொருந்திய வாளின்மீது, வார்புருவம் என்னும் கொடி - நீண்ட புருவமென்னும் நடனப் பெண்கள், கால்வளைத்து - (தன் நுனியாகிய) கால்களைச் சுழற்றி, ஓர்

---

1. திருக்குறள் : எஎஎ. 2. சிலப். உ0 : ௬0.

கூத்து ஆட கண்டான் - சிறந்த நடனமாடுவதை நளவேந்தன் பார்த்தான்.

(க - நு.) புலவியாக இருந்தபோது தனக்கெதிரில் பக்கத்தில் விலகியிருந்த தமயந்தியின் முகமாகிய நடன சாலையில், புருவமாகிய நடனப்பெண்கள், கண்களெனும் வாள்மீது தன் நுனியாகிய கால்களை வளைத்துக் கூத்தாடு வதை நளன் பார்த்தான் என்பதாம்.

(வி - ரை.) தங்கள் என்றது, நளன் தமயந்தி இருவரையும்; புலவி - சிறிதுநேரம் தோன்றும் வெறுப்பு: இது காதலர்களுக் குள் நிகழ்வது. நளனுக்கும் தமயந்திக்கும் பிணக்கு நிகழ்ந்த போது, தமயந்தியின் முகம் தன் இயற்கைமாறிச் சினத்தால் வேறுபட்டது, அதனை நடனசாலையாகவும், தமயந்தி தன் கண் களால் நளனைப் பார்ப்பதும் பின் தலைகுனிந்திருத்தலும் பின் ஏறெடுத்துப் பார்த்தலுமாக இருந்தாள்; அக்காட்சித் தன்மை யுடைய கண்களைக கூரிய வாளாகவும், கண்கள் பார்க்குங்கால் கண் புருவம் மேலேறுவதும் இறங்குவதுமாக இருப்பதை, நடன மங்கையராகவும், அதன் நுனிப்பகுதியை அவர்தம் காலாகவும், உருவகஞ்செய்து அந்நடனப் பெண்கள் நடனமாடுவதாகக் குறித்து, அதைப் பார்த்த நளனை அந்நடங்கண்டு களிப்போ னாகச் சித்திரித்தார். இப்பிணக்கை ஒரு நாடக அரங்காக்கிக் கற்பார்க்கு இன்பூட்டும் புகழேந்தியார் கல்விததிறம் போற்றும் தன்மையது. தமயந்தி சினந்தபோது முகம் வேறுபட்டது; கண்கள் நளனைப் பார்த்தலும் சிமிழ்த்தலுமாக இருந்தன; புரு வங்கள் ஏறலும் இறங்கலுமாக இருந்தனவென்று இதன் கருத் தாகக் கொள்க. கட்பார்வையின் கொடுமை தோன்ற 'வடிவாள்' என்றார். கழைக்கூத்தாடும் மகளிர் கால்வளைத்துக் கூரிய வாளின்மேல் நின்றாடுவராகலான், அதனைப் பன்முறை கண்டு களித்த ஆசிரியர், தமயந்தியின் முகத்திடத்தேயே அக்கழைக் கூத்து நிகழ்ச்சியைக் காட்டினர். (உரு)

### நளமன்னன், தமயந்தியின் ஊடல்தணிய அவள் தாளில் விழுந்து வணங்கல்

உ0௬. சில்லரிக் கிண்கிணிமென் தெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேல் சூட்டினான்—வல்லை
முழுநீலக் கோதை முகத்தே மலர்ந்த
செழுநீலம் மாறாச் சிவப்பு.

(இ - ள்.) சில் அரி கிண்கிணி - (தமயந்தியுடைய) சில் வகைப் பரற்கற்கள் கொண்டு ஒலிக்கின்ற சதங்கைகளையணிந்த, மென் தெய்வமலர்ச் சீறடியை - மென்மையான பெருமை பொருந்திய செந்தாமரை மலர்போன்ற சிறிய காலடிகளை, தொல்லை மணிமுடிமேல் - ஒளிமிக்க மணிகள் பதித்த தன் முடியின்மீது, சூட்டினான் - (அவள் பிணக்கம்தீர) அணிந்தான், முழு நீலக் கோதை - காம்பொடிக்காது கட்டிய நீலமலர்க் கண்ணியை அணிந்த கூந்தலாளாகிய தமயந்தியினுடைய, முகத்தே செழு நீலம் - முகத்தின்கண் பூத்திருக்கின்ற செழுமைமிக்க நீலமலர் போன்ற கண்கள், வல்லை சிவப்பு மாற மலர்ந்த - விரைந்து (சினத்தால் தோன்றிய) செந்நிறம் நீங்கித் திகழ்ந்து நின்றன.

(க - று.) இவ்வாறு தமயந்தி ஊடலால் சினந்திருந்த போது, நளமன்னன் அவள் காலடிகளில் விழுந்து வணங்கினான்; உடனே அவள் சினந்தணிந்து கண்கள் சிவப்பு மாறி நின்றாள் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தி பிணக்கத்தால் சினந்தது கண்ட நளன், அவள் ஊடல் தணித்தற் பொருட்டாக அவள் காலடிகளில் வீழ்ந்து வணங்கினன்; அதைக்கண்ட தமயந்தி சினம் மாறி அகம்மிக மகிழ்ந்தாள்; அவள் மகிழ்ச்சிக்கு அறிகுறியாகக் கோபத்தால் செந்நிறங்கொண்ட கண்கள், பண்டேபோல் இயற்கைநிறங்கொண்டன. இதனை ஆசிரியர், தமயந்தியின், 'மலர்ச் சீறடியைத் தொல்லைமணி முடிமேற் சூட்டினான்' என்று இலக்கணை வாய்பாட்டாற் கூறினார். தெய்வமலர் - செந்தாமரை மலர். அதனை மற்றெல்லாவகை மலர்களினும் உயர்ந்ததாகக் கொண்டாடப்பெறுதலால், 'தெய்வம்' என்று அடைகொடுத்தார். தெய்வமென்ற சொற்குப் பெருமையென்று பொருளுரைத்தது, அதனை எல்லோரும் மேன்மையாகக் கொள்ளுதல் கருதி. இதனைத் "[1]தெய்வத் தாமரைப் போதுறை செல்வியும்' என்று, இவ்வாறே 'தெய்வத்தாமரை' எனப் பிறரும் கூறுவது காண்க. சிறுமை + அடி = சிறு அடி = சீறடி என முதனீண்டு வந்தது. தொல்லை - பழமையென்னும் பொருளது. ஆயினும் மணிகட்குப் பழமை, நன்கு முதிர்ந்து அம்முதிர்வால் அதன் ஒளி மிகுதியாதல். ஆதலால், அதற்கு ஒளிமிக்க எனப் பொருளுரைத்தாம். சூட்டுதல் : தன் மணிமுடியணிந்த தலைமீது அவள் அடிகள் படும்படி வணங்குதல்.

ஊடற்காலத்து இல்லக்கிழத்தி உயர்வுகொள்ளலும், இல்லக் கிழவன் பணிவுறலும இயல்பாக நிகழும் இயற்கை நிகழ்ச்சி

1. நைடதம், அன்னத்தைத்தூது : சுு.

"[1] மனைவி உயர்வும் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய.'

என்பது தொல்காப்பிய விதி.

கற்பனைக் களஞ்சியமாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகளார், தாம் ஆக்கியருளிய பிரபுலிங்க லீலை யென்னும் சமயக் கற்பனைக் காப்பியத்தில், இறைவணக்கங் கூறுகின்றார். அவற்றுள் உமையம்மையார்க்கும் வணக்கங் கூறுகின்றார். அதில் இந் நிகழ்ச்சியைக் - காதலன் காதலிகளுக்குள் நிகழும் இப்பிணக்கை- அம்மையப்பருக்குள் நிகழ்ந்ததாகக் குறிக்கின்றார். அது : 'அம் மைக்கும் இறைவனுக்கும் பிணக்கு நிகழ்ந்தது. அப்பிணக்கைத் தீர்க்கும் பொருட்டு ஆண்டவன் அம்மையின் அடிகளில் தன் சடைமுடி தாழ வணங்குகின்றான். அதுகாலை, அவன் முடியி லுள்ள கங்கையும் மதியும் பாம்பும் பிறவும் பணிவுறுகின்றன. அப்போது அம்மை, உலகை ஆக்கலும் காக்கலும் போக்கலும் வல்ல முழுமுதல் இறைவனே நம் காலடிகளில் வணங்குகின் றானே என்று, அவள் ஊடல் நீங்கினளில்லை; தன் நெற்றிப்பகை யாகிய பிறை, அல்குற்பகையாகிய பாம்பு இவைகளும் பணி கின்றன; பகைவர் பணியின் எவரும் மகிழ்வதியற்கை; சினம் மாறுவதும் இயற்கை; அதற்கும் ஊடல் தணியவில்லை. பின் எதற்கு அவள் சினந்தணிந்த தெனின்? தன்னோடு பங்காளியாக- சக்களத்தியாக - தான் பக்கத்தில் சரிநிகர் சமானமாக இருப்பத் தன்னினும் விஞ்சி அவன் தலையில் வீற்றிருக்கின்றாளே கங்கை; அவள்கூடப் பணிகின்றாளே என்று, சினந்தணிந்து தன் ஊடல் நீங்கினாள்; அத்தகையாளின் திருவடிகளை வணங்குவாம்' என்று சுவைபட அம்மை வணக்கங் கூறுகின்றார். அத்தன்மை போன்று மன்னர் மன்னனாகிய நளன், வேற்றுநாட்டு வேந்தரெல்லாம் திருமுடிபட வணங்குகின்ற செம்மைத்தாளினான், தன் அடிகளில் வணங்கினானே என்று கருதித் தன் பிணக்கு நீங்கினாள் என்பா ராய்த், 'தொல்லை மணிமுடிமேல் சூட்டினான்......செழுநீலம் மாறாச் சிவப்பு' என்றார். சிவப்பிரகாசர் தந்த அப்பாடலையும் கண்டுக் காட்டுவாம்:

"[2] ஆதி பகவன் றனதூடல் தணிப்பான்
பணிய அவ்விறைவன்
பாதம் இறைஞ்சும் அதற்கும் நெற்றிப்
பகையும் அல்குற் பகையுமாம்

1. தொல். பொருளியல் : ௩௩. 2. பிரபுலிங்க லீலை, உ.

சீத மதியும் அரவும்விழும் செயற்கு
முவகைசெ யாமலலே
மாது பணியும் அதற்குமனம் மகிழும்
உமையை வணங்குவாம்.'

என்பதாகும். கம்பர் தாம் அமைத்த இராமாயணப் பெருங்காப்பியத்தில் இலங்கை வேந்தனை, ஆடவருட் சிறந்த ஆடவனாக, வீரருட் சிறந்த வீரனாகப் படைத்துக் காட்டுகின்றார். ஊடற் காலத்து எத்தகையோரும் தம் காதலியர் காலடிகளில் பணிவ ரென்பது, இந் நூற்பாட்டினானும் மேற் குறித்த பாட்டினானும் வேறு பிற வரலாறுகளினானும் அறியக்கிடக்கின்றது ஆனால், கம்பர் காட்டும் வீரன் எவ்வாறுள்ளான் எனின்? அவன், காதலியர் மாட்டும் வணங்காத மணிமுடியான் என்கின்றார்.

[1]"............வென்றி மாதர்
வலியநெடும் புலவியினும் வணங்காத மகுடநிரை வயங்க.'

என, அவன் முடிமேல் வைத்துக் காட்டுகின்றார்.

குண்டுநீர்க் குவளையிற் குளிர்ந்து நிறம் பயின்றனவாய் இருத்தலால், தமயந்தியின் கண்களைச் 'செழுநீலம்' என்றார். ஆகுபெயர். சிவப்பு - சினத்தால் தோன்றிய சிவந்த நிறம். மாறா - மாறி: செய்யாவென்னும் வாய்பாட்டு இறந்தகாலத் தெரிநிலை வினையெச்சம். மலர்ந்த என்னும் வினைப்பெயர்கொண்டு முடிந்தது.

[2]"செய்து செய்பு செய்யாச் செய்யூ
செய்தெனச் செயச் செயின் செய்யிய செய்யியர்
வான்பான் பாக்கின வினையெச் சம்பிற
ஐந்தொன் றாறுமுக் காலமும் முறைதரும்.'

என்னும் நன்னூலார் காட்டும் வினையெச்ச வாய்பாடுகள் பன்னிரண்டனுள், மூன்றாவதாக அமைந்த 'செய்யா' வென்னும் வாய்பாட்டு வினையெச்சமாக அமைத்து 'மாறா' என்றார். அது தன் உள்மனத்தால் மாறாததாக இருப்பினும், மன்னன்றன் செயலுக்கு மாறியது என்னும் குறிப்புமுணர நின்றது. சினத்தால் கண்கள் சிவப்புறுமென்பதற்குப் பகைவரோடு பொருத அதிகமானஞ்சியின் கண்கள், தன் புதல்வனைப் பார்த்தபோது கூடக் கோபத்தால் சிவந்த அவன் கண்களின் செந்நிறம், மாறாதிருந்த வீரத்திறத்தை ஔவையார் பாராட்டிக் கூறுகின்றார்.

---

1. கம்பராமா. மாரீசன் : ௬.   2. நன்னூல், ௩௪௩.

[1]'சிறுவினை நோக்கியும் சிவப்பா னவே.'

என்பது காண்க.

ஆசிரியர் இளங்கோவடிகள், கணவன்மார் விருந்தோடு வந்த காலத்தும், மனைவியர் ஊடலால் கண் சிவந்து மாறாமல் இருந்ததை,

[2]'வடமீன் கற்பின் மனையுறை மகளிர்
மாதர் வாள்முகத்து மணித்தோட்டுக் குவளைப்
போது புறங்கொடுத்துப் போகிய செங்கடை
விருந்தில் தீர்ந்தில தாயின் யாவது
மருந்தும் தருங்கொல்இம் மாநில வரைப்பு.'

என்றருள்வதூஉம் காண்க. (உ௪)

தமயந்தி ஊடல்நீங்கி நளனுடன் கூடுதல்

உ0௫. அங்கைவேல் மன்னன் அகலம் எனும்செறுவில்
கோங்கையேர் பூட்டிக் குறுவியர்நீர்—அங்கடைத்துக்
காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
கோதையரின் மேலான கொம்பு.

(இ - ள்.) கோதையரின் மேலான கொம்பு - மங்கையருட் சிறந்த பூங்கொம்புபோல்வாளாகிய தமயந்தியானவள், அம் கை வேல் மன்னன் - அழகிய கையினிடத்து வேலைத் தாங்கிய நள மன்னனுடைய, அகலம் எனும் செறுவில் - மார்பாகிய வயலிடத்து, கொங்கை ஏர் பூட்டி - தன் கொங்கைகள் என்னும் ஏரினைப் பூட்டி உழுது, குறுவியர் நீர் அங்கு அடைத்து - சிறு வியர்வையாகிய தண்ணீரை அவ் வயலில் பாய்ச்சி நிரப்பி, காதல் வரம்பு ஒழுக்கி - காதல் என்னும் வரப்பினை ஒழுங்குபடுத்தி அமைத்து, காமம் பயிர் விளைத்தாள் - காமமாகிய நெற்பயிரை விளையச் செய்தாள்.

(க - ரை.) தமயந்தி, ஊடல் தணிந்தபின் நளன் மார்பில் தன் கொங்கைகள் அழுந்தத் தழுவிச் சிறு வியர்வை நீர் அரும்பக் காதலை உண்டாக்கிக் காமத்தை மிகுதிப்படுத்திக் கூடினாள் என்பதாம்.

---

1. புறம் : க00. 2. சிலப். ரு : உஉ௯-௩௩.

(வி - ரை.) அம் கை - அங்கை : அழகியகை. வெற்றிவீர ஞகலின் நளனை 'அங்கை வேல்மன்னன்' என்றார். அகங்கை : உள்ளங்கை எனக் கொள்ளலுமாம்,

[1]"அகமுனர்ச் செவிகை வரின்இடை யனகெடும்.'

என்பது விதியாகலான். அவ்வாறு இடையினின்ற ககரவுயிர் மெய் கெட்டதெனக் கொள்க.

நளமன்னன் மார்பை வயலாகவும், தமயந்தியின் கொங்கை களை ஏராகவும், கலவியால் தோன்றும் சிறு வியர்வை வயலில் நிரப்பிய நீராகவும், காதலை அவ் வயலுக்கு உரிய வரப்பாகவும், அதனால் உண்டான இன்பத்தை (நெற்) பயிராகவும் உருவகம் செய்தார்.

பட்டினத்தடிகள் இறைவன் பத்தியால் விளையும் பேரின்பத் துக்கு இவ்வாறே உருவகம் செய்ததூஉம், அப்பரடிகள் உரு வகஞ் செய்ததூஉம் அறிந்து அறிந்து இதனோடு ஒப்பவைத்து இன்புறற்பாலன. அவை :

[2]"பாதவம் மிருகம் பறவை மானிடர்
ஆதிப் பைங்கூழ் அமைத்தனர் நிற்ப
மாவுறை மருமக் காவ லாளர்
வளமையின் ஓம்ப விளைவுமுற் றியபின்
......... ........................
ஒருசில வற்றைநின் திருவடி வீட்டில்
சேர்த்தனை.'

என்பதும்,

[3]"மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலி யிட்டுச
செம்மையுள் நிற்ப ராகில் சிவகதி விளையு மன்றே.'

என்பதும் காண்க. கோதையர் - மகளிர். அவர்களுள் மேலான கொம்பென்றது, கற்புக்கடன்பூண்டு கொண்டானிற் சிறந்த தெய்வமின்றெனத் தமயந்திகொண்ட சிறந்த மேம்பாட்டினால் என்க. என்னை ?

---

1. நன்னூல், உஉஉ. 2. திருக்கழுமல மும்மணி. உ௫.
3. திருநாவுக். தேவாரம், பதி, எசு : உ.

"[1] இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாங்கண் டிலம்.'

என்று பிறருங் கூறுதலான் என்க. எனவே தமயந்தி கற்பினும் பொற்பினும் தன்னிகரில்லாத் தகையளாக இருத்தலால் பெண்களுட் சிறந்தாளாக உரைத்தார். (உகூ)

**தமயந்தியும், நளனும் கங்கையாற்றங்கரையைக் காண்டல்**

உ0௪. வேரி மழைதுளிக்கும் மேகக் கருங்கூந்தற்
காரிகையும் தானும்போய்க் கண்ணுற்றான்—மூரித்
திரையேற மென்கிடங்கில் சேலேற வாளை
கரையேறும் கங்கைக் கரை.

(**இ - ள்.**) *மூரி திரை ஏற* - வலிமைமிக்க நீரலைகள் மேலேறி வர, *மென்கிடங்கில் சேல் ஏற* - அதனால் மெல்லிய அகழிகளில் (கழிக்குழிகளில்) கெண்டைமீன்கள் மேலேறியோட, *வாளை கரை ஏறும் கங்கைக்கரை* - வாளை மீன்கள் தாவிக் கரையிற் குதிக்கின்றதான (வளமிக்க) கங்கையாற்றின் கரையை, *வேரி மழை துளிக்கும்*-(பூவிலுள்ள) தேனாகிய மழையை ஒழுக்குகின்ற, *மேகம் கருங்கூந்தல் காரிகையும்* - மேகத்தையொத்த கருநிறம் பொருந்திய கூந்தலையுடைய தமயந்தியும், *தானும்போய் கண் உற்றான்* - நளமன்னனும் இக்கரை கடந்துபோய் அக்கரையைக் கண்டார்கள்.

(**க - து.**) நளனும் தமயந்தியும், திரையேற, சேற்கெண்டைகள் கழிக்குழிகளில் ஏற, வாளைமீன்கள் துள்ளிக் குதித்துக் கரையேறுகின்ற தன்மையதான கங்கையாற்றின் இக்கரையைக் கடந்து அக்கரையைக் கண்டார்கள் என்பதாம்.

(**வி - ரை.**) வேரி - தேன். தமயந்தி பல்வகை மணமலர்களைக் கூந்தலிற் சூடியிருத்தலால் அதிலிருந்த தேன் வழிந்தோடுகின்றது; அதனை, 'மழை துளிக்கும்' என்றார். கூந்தலை மேகம் என்றதற்கேற்பத் தேனொழுகுதலை மழையென்றது, இன்ப நயனாக இருத்தலை அறிக. 'மேகக்கருங் கூந்தல்' என்பதனை உவமத் தொகையாகக் கொள்ளாது, இருபெயரொட்டுப் பண்

1. சிலப். கடு : கசஉ - ௪.

பாகக் கொள்ளுதல் சிறந்தது. மூரி - வலிமை: அலைகள் எதையும் தகர்த்துக்கொண்டு செல்லும் வலிமைமிக்கதாதலால் 'மூரித் திரை' என்றார். மென்கிடங்கு - சிறிய சிறிய கழிக்குண்டுகள்: சேறுள்ள பள்ளங்கள். திரையேற சேலேற என்னும் செயவெனெச்சங்கள், காரணப்பொருட்டாக நிகழ்காலங்காட்டி நின்றன. கங்கையாற்றின் வளத்தைஇவ்வாறு சுட்டிக்காட்டினார். 'கண்ணுற்றான்' என, ஒருமை முடிபு ஏற்றது, சிறப்புப்பற்றி. (உசு)

**நளமன்னனும், தமயந்தியும் அங்கோர் சோலையை அடைதல்**

உ௦ரு. சூதக் கனியூறல் ஏற்ற சுருள்வாழை
கோதில் நறவேற்கும் குப்பியென—மாதரார்
ஐயுற்று நோக்கும் அகன்பொழில்சென் றெய்தினான்
வையுற்ற வேல்தானை மன்.

(இ - ள்.) வை உற்ற வேல்தானை மன் - கூர்மை பொருந்திய வேற்படை தாங்கிய சேனையையுடைய நளமன்னன், சூத கனி ஊறல் - மாங்கனிகள் ஒழுக்கிய அதன் சாற்றினை, ஏற்ற வாழை சுருள் - தன்னிடத்திற் கொண்டுள்ள இளவாழைக் குருத்துக்கள், கோதுஇல் நறவு ஏற்கும் குப்பி என - தெளிவுள்ள தேனைக்கொண்டுள்ள புட்டில்கள் என்று கருதி, மாதரார் - பெண்கள், ஐ உற்று நோக்கும் - ஐயங்கொண்டு ஐயந்தெளிவுறப் பார்க்கின்றதான, அகன்பொழில் சென்று எய்தினான் - விரிந்த ஒரு சோலைக்குப் போய்ச் சேர்ந்தான்.

(க - து.) நளமன்னனானவன், மாங்கனிச் சாற்றைத் தாங்கிய இளவாழைக் குருத்துக்களைப் பெண்கள் தேன் நிறைந்துள்ள புட்டிலென்று கருதி ஐயங்கொண்டு ஐயந் தெளிவுறப் பார்க்கின்றதான வளனுடைய ஒரு விரிந்த சோலைக்குப் போய்ச் சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) சூதக்கனி - மாங்கனி. சோலையில் மாவும் பலவும் வாழையும் தெங்கும் பிறவும் சூழடுத்து நெருங்கியிருப்பது இயற்கை. இவ்வாறு இருக்குமென்பதை ஏமாங்கத நாட்டு இயற்கை வளத்தை எடுத்தியம்பப் போந்த திருத்தக்கதேவர் தாம் ஆக்கியருளிய சிந்தாமணிப் பெருங்காப்பியத்தில்,

[1]"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் எற்றிப்
பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து

1. சீவகசிந். நாமகள் : உ.

தேமாங் கனிசி தறிவாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங் கதம்என் றிசையால்திசை போய துண்டே.'

என்றார். இந்நிடத நாட்டில் மாமரம் தழைத்துச் செழித்து வளர்ந்திருக்கின்றன; அதன்கீழ் வாழைமரங்கள் விரிந்த இலைகளைப் பரப்பிக்கொண்டு கன்றுகளுடன் இருக்கின்றன; மாம பழம் மிகக் கனிந்து அக்கனிச் சாற்றைச் சொட்டுச் சொட்டாக வடிக்கின்றன; அது வடிந்து வாழைக்கன்றின் குருத்துக்களில் நிறைந்துவிடுகின்றன; சோலைக்குச் சென்ற மயிலன மங்கையர், அது நிறையத் தேன் இருப்பதால், 'தேன்நிறைந்த புட்டில் தானோ?' என ஐயங்கொண்டு நோக்குகின்றனர்; பெண்கள் ஐயங்கொள்ளுமாறு அவ்வளவு வளமுள்ள சோலையெனச் சோலையின் ஏற்றங் கூறினார்.

சுருள் - சுருண்டிருப்பதால் இங்கே இளங்குருத்தை உணர்த்திற்று. குப்பி - புட்டில்; இக்காலத்துப் 'புட்டி' எனவும், 'பாட்டல்' எனவும் வழங்குவர். திருமுருகாற்றுப் படையில் நக்கீரனாரும் [1]'அம் பொதிப்புட்டில்' என்றதூஉம் காண்க. புட்டில், தக்கோலம் என்னும் முதலின் காய் என்றும், அது, புட்டில் போறலிற் புட்டில் என்றும் நச்சினார்க்கினியர் உரை வகுத்ததும் கொண்டு தெளிக. வை - கூர்மை. வேற்படைக்குச சிறப்பு. அதனை யேந்திய படையையுடைய நளமன்னனுக்குச் சிறப்புக் கூறியவாறும். (உ௭)

நளன், தமயந்திக்குத் 'தன் மாவிந்தமாநகர் இதுதான்' என்று காட்டல்

உ௦௮. வான்தோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்தோன்றும் மற்றித் தடம்பதிதான்—வான்தோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநா டாளுடையான்
நல்விளக்கே எங்கள் நகர்.

(இ - ள்.) வான் தோன்றி - சிறந்த செங்காந்தட் செடிகள், வில் விளக்கே பூக்கும் - ஒளி பொருந்திய விளக்குப்போல் மலர்கள் தருகின்ற, விதர்ப்பநாடு ஆள் உடையான் - (வளம் பொருந்திய) விதர்ப்ப நாட்டினை ஆள்கின்ற உரிமைபெற்ற வீமமன்னனின், நல் விளக்கே - நல்ல விளக்கென்னும்படி விளங்குகின்றவளே!' வான்தோய நீண்டு உயர்ந்த-வானத்தைத் தொடுமளவுக்கு நீட்சியாகி உயர்ந்திருக்கின்ற, மாடக் கொடி நுடங்க - மாளிகை

1. திருமுருகு : ௧௯௧.

தோறும் கட்டியிருக்கின்ற கொடிகள் அசைந்தாட, தான் தோன்றும் இத் தடம்பதிதான் - (மற்றவற்றிற்கு மேலாகத்) தனித்துத் தெரிகின்ற இந்தப் பெரு நகரந்தான், எங்கள் நகர் - எங்களது மாவிந்தமென்னும் மா நகரமாகும்.

(க - ரை.) 'வீமன்குல விளக்கே! வானளாவிய உயர்ந்திருக்கின்ற மாளிகைகள்தோறும் கொடிகள் அசைந்தாடத், தானே தனித்துத் தோன்றுகின்ற இப் பெரிய நகரமே, எங்களது மாவிந்த மாநகரமாகும்' என்பதாம்.

(வி - ரை.) வான்தோன்றி என்பதற்கு, வானளவும் விளங்கி என்று வினையெச்சமாக்கிப் பொருள் கூறுவாருமுளர். தோன்றி- செங்காந்தள். விளக்குப்போல் செந்நிறமாக மலர்கின்ற பூக்களை விளக்கென்றது, ஆகுபெயர். அதனால் விதர்ப்ப நாட்டு வளங்கூறியவாறு. அத்தகைய சிறப்புமிக்க நகருக்கு வேந்தனை 'வீமன் நல்விளக்கு' என்றான், மகளிர்க்குரிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நால்வகைக் குணங்களும் அமைந்து அந்தக் குணங்களால் சிறந்தாளெனப் புகழொளியும், அவள் உடலின் நல்லழகொளியும் மிக்குள்ளமைதோன்ற. முன்னரும், 'வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம்' என்றதை, ஈண்டும் வலியுறுத்தினாரென்க.

தன்னுரிமை பெற்றிலங்கும் ஒரு நாட்டில் மேன்மாடங்கள் தோறும் அவர் குறிக்கோள் உருவம் எழுதிய கொடிச்சீலைகள் மேலாக உயர்த்தப் பெற்று அசைவதை எங்கும் காண்டுமன்றே. அது போன்றே மாவிந்த நகர்க்கண் கொடிகள் நின்றிலகுவதைத் தமயந்திக்கு நளன் கூறினான் என்க.

"செருப்புகன் றெடுத்த சேணுயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போரரு வாயில்
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து
மாடமலி மறுகிற் கூடல்.'

என்றார் நக்கீரனாரும். தடம்பதி - பெரிய நகரம்: வானளாவ உயர்ந்த மாட வரிசைகளும் கடைகளும் நிறைந்த நீண்ட ஆறு கிடந்தன்ன அகல் நெடுந் தெருக்களையுடைய நகரம் என, மாவிந்தத்தின் சிறப்புக் கூறியவாறு. (உஅ)

1. திருமுருகு : கூ௭-௭௧.

**நளன், தமயந்தியுடன் பன்னிரண்டாண்டுவரை வாழ்தல்**

உ0௭. பொய்கையும் வாசப் பொழிலும் எழிலருவிச்
செய்குன்றும் ஆறும் திரிந்தாடித்—தையலுடன்
ஆறிரண்டாண் டெல்லை கழித்தான் அடையலரைக்
கூறிரண்டாக் கோல்யானைக் கோ.

(இ - ள்) அடையலரை கூறு இரண்டு ஆ கொல் யானை கோ - தன் பகைவர்களை உயிர்வேறு உடல்வேறாகப் பிரித்து இரண்டு பகுதிகளாகும்படி கொல்கின்ற யானைப் படையையுடைய நளமன்னன், தையலுடன் - தன் காதற் கிழத்தியாகிய தமயந்தியோடு, பொய்கையும் வாசப் பொழிலும் - குளங்களிலும் (மலர்) மணம் பொருந்திய சோலைகளிலும், எழில் அருவிச் செய் குன்றும் - அழகிய அருவி நீரைப் பெருகச்செய்கின்ற மலைகளிலும், ஆறும் திரிந்து ஆடி - ஆறுகளினும் சென்று சென்று இன்பத்துடன் மூழ்கி விளையாடல் கொண்டு, ஆறு இரண்டு ஆண்டு எல்லை கழித்தான் - பன்னிரண்டாண்டுக்காலம்வரை (மகிழ்ச்சியாகப்) பொழுது போக்கினான்.

(க - து.) நளமன்னன், தமயந்தியோடு தடாகங்களினும் சோலைகளினும் மலையருவிகளினும் ஆறுகளினும் சென்றுசென்று மூழ்கி, விளையாடல்கொண்டு, இன்பமாகப் பன்னிரண்டாண்டுக் காலம்வரை வாழ்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) செய்குன்று - விளையாடுதற்குக் கட்டப்பட்ட செயற்கைமலை என்றும் பொருள் கொள்ளலுமாம். அருவி என வருதலால், அருவிகள் வருதற்குரியது மலைகளென்று ஈண்டுப் பொருள் உரைத்தாம். அடையார் - பகைவர். யானை குதிரை தேர் காலாள் என்னும் படைகள் நான்கனுள், யானைப் படை சிறந்ததாகலானும், விரைந்து தன் வலிமையினால் சிறிதும் வருத்தமின்றி அழிக்கும் தன்மையுடையதாகலானும், யானைப் படையையே முதன்மையாகக்கொண்டு 'கொல் யானைக்கோ' என்றார். கொல்யானை: முக்கால வினைத்தொகை. யானை என்பது அதனையாகிய படையை உணர்த்தலால் காரியவாகுபெயர். கூறு இரண்டு - இரண்டு கூறு: சொன்னிலை மாறிய இலக்கணப் போலி. இரண்டு கூறாக்கலாவது, பகைவர்தம் உடலையும் உயிரையும் பிரித்துத் தனித் தனியாக்கிக் கொல்லுதல். அன்றித் தலை வேறு, உடல் வேறாகத் துண்டாக்குதல் என்று கூறலுமாம். (உகூ)

### தமயந்தி குழந்தைகளைப் பெறுதல்

உ০அ. கோல நிறம்விளர்ப்பக் கோங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கால் நின்றேறிப்ப—நூலென்னத்
தோன்றாத நுண்மருங்குல் தோன்றச் சுரிகுழலாள்
ஈன்றாள் குழவி இரண்டு.

(இ - ள்.) கோலம் நிறம் விளர்ப்ப - அழகிய உடலின் வண்ணம் வெளுத்த நிறங் காட்டவும், கொங்கை முகம் கருக - கொங்கைக் காம்புகள் கருமை நிறம் பெறவும், மயிர்க்கால் நீல நிறம் நின்று எறிப்ப - மயிர்களின் அடியிடத்தில் நீல நிறமானது நிலைபெற்று ஒளி வீசவும், நூல் என்ன - நூலென்னும்படியான, தோன்றாத நுண்மருங்குல் தோன்ற - (மிக மென்மையானதாகக் கண்களுக்குப்) புலப்படாத நுட்பம் பொருந்திய இடையானது (சிறிது பெருத்துப் பார்ப்பவர் கண்களுக்கு) வெளித்தெரியவும் (கருப்பமுற்று), சுரிகுழலாள் குழவி இரண்டு ஈன்றாள் - சுருண்ட கூந்தலையுடைய தமயந்தியானவள் இரண்டு குழந்தைகளைப் பெற்றாள்.

(க - து.) நளனுக்கும் தமயந்திக்கும் திருமணம் ஆகிப் பன்னிரண்டாண்டுகளுக்குப்பின், தமயந்தி கருவுற்று இரண்டு குழந்தைகளைப் பெற்றாள் என்பதாம்.

(வி - ரை.) கருவுற்ற பெண்களுக்கு உடல் நிறம் வெளுத்தலும், கொங்கைக் கண்கள் மிகக் கருநிறங்கொள்ளலும், இடை பருத்துத் தோன்றலும் இயல்பாகக் கருவுற்றதைக் காட்டும் அறிகுறிகள் அவைகளை முறையே 'கோல நிறம்...தோன்ற' என்ற சொற்களினால் விளக்கினார்.

இவ்வாறே மாயையைக் கருவுற்றகாலத்து, மோகினி யென்பாள்,

[1]'முத்தணி கொங்கை முகங்கள் கறுத்தாள்
மெய்த்திரு மேனி விளர்த்து நரம்பு
பைத்தன மீது பரப்ப இருந்தாள்
பொய்த்துயில் கொண்டு புளிக்கும் உவந்தாள்.'

எனப், பிரபுலிங்க லீலையினும் வருதல் காண்க.

---

1. பிரபு. மாயை யுற்: உஎ.

கோல நிறம் - அழகாகப் பொன்போல் தோன்றும் உடலழகு. நீலம் - கருமை. [1]'நீனிற முகிலோ பசிய சைவலமோ' என்னும் நைடதச் செய்யுளில், நீலம் கருமை என்னும் பொருள் தருதலை உணர்க. சுரிகுழல் : வினைத் தொகை. குழவி - குழந்தை. 'குழ' என்னும் இளமைப்பொருள் குறிக்கும் பண்படியாகப் பிறந்த பெயர்.

[2]'மழவும் குழவும் இளமைப் பொருள.'

என்பது தொல்காப்பியம். (௩௦)

**கலிமகன், பன்னிரண்டாண்டுவரை நளனைத் தொடரக் காலம் பார்த்திருத்தல்**

௨௦௧. **ஆண்டிரண்டா றெல்லை அளவும் திரிந்தேயும்**
**காண்டகைய வெங்கலியும் காணகிலான்-நீண்டபுகழ்ச்**
**செந்நெறியாற் பார்காத்த செங்கோல் நிலவேந்தன்**
**தன்னெறியால் வேறோர் தவறு.**

(இ - ள்.) வெங்கலியும் - கொடுமையுள்ள கலிமகனும், காண் தகைய - காணுதற்கேற்ற, ஆண்டு இரண்டு ஆறு எல்லை அளவும் திரிந்தேயும் - (மிக்க காலமாகிய) ஆண்டுகள் பன்னிரண்டுவரை பின்பற்றித் திரிந்தும், நீண்டபுகழ் செம்நெறியால் பார்காத்த - பெரும்புகழோடு அறமுறையால் உலகைப் பாதுகாத்த, செங் கோல் நிலவேந்தன் - செங்கோற் சிறப்பினையுடைய நிடதநாட்டு மன்னனாகிய நளமன்னனின், தன் நெறியால் வேறு ஓர் தவறு காணகிலான் - அவன் நெறிமுறை திறம்பாத் தன்மையினால் எந்த வேறுபட்ட ஒரு குற்றத்தையும் காணமாட்டாதவனானான்.

(க - ரு.) கலியானவன், பன்னிரண்டாண்டு வரையும் காத்திருந்தும் நளமன்னன் நெறிமுறை கோடாத நீர்மையினால் அவனைச் சாரவொண்ணாது இருந்தான் என்பதாம்.

(வி - ரை.) கலி, முன்புகூறுரைத்தவாறு நளனையும் தமயந்தியையும் தனித்தனியே பிரித்துத் துன்புறுத்தக் காலம் பார்த்திருந்தான். அவன் யாரையும் சார்ந்து துன்புறுத்த எண்ணினால், அவரிடம் சீர்முறைகேடான செய்கை வேண்டும். நளமன்னனிடம் எக்குறையும் காண்பதற்கில்லை. செங்கோல் முறையில்

1. நைடதம், அன்னத்தைத்தூது: கக. 2. தொல். உரியியல்: கரு.

நாட்டை ஆள்கின்றான்; குடிகட்கு நலஞ்செய்கின்றான்; ஒழுக்க முறை வழுவாது ஒழுகுகின்றான்; எனவே அவன், என்றாவது தவறான வழியில் நடக்கின்றானா? என்று காலம் நோக்கி நோக்கிப் பன்னிரண்டாண்டுக் காலம்வரை பார்த்திருந்தான். குற்றங் காண்பதற்கில்லை. இதனை ஆசிரியர் 'ஆண்டிரண்டா றெல்லை...... காண்கிலான்' என்றார்.

செம் நெறி - நேர்மையான வழி: கோல்முறை கோடாச சிறப்பு. செங்கோல்: செவ்விய கோல்போறலின் செங்கோலாட்சிக் காயிற்று; இஃது உவம வாகுபெயர். நிலவேந்தன் - பாருக்கெல்லாம் அரசனென்றலுமாம். (உக)

கலிமகன், நள மன்னனைச் சேர்தல்

உ௪௦. சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்துகலி—சிந்தையெலாம்
தன்வயமே ஆக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து.

(இ - ள்.) சந்திசெய தாள்விளக்க - (நளன் ஒருநாள்) கடவுள் வழிபாடு செய்தற்குத் தன் கால்களை நீரால் கழுவ, தாளில் மறு தான் கண்டு - கால்களில் நீர் நன்கு படியாது சிறு அளவு நனையாமல் அழுக்கிருப்பதைக் கலியானவன் அறிந்து, புந்தி மகிழ புகுந்து - தன் மனம் மகிழ நளன்பால் சார்ந்து, சிந்தை எலாம் தன்வயமே ஆக்கி - நளனுடைய எண்ணங்களை யெல்லாம் தனக்குரிமையாம்படி செய்து, பொன் அசல மார்பன் புகைந்து - இமயமலையையொத்த மார்பையுடைய நளமன்னனைச் சினந்து (பகைத்து), தமையனுடன் இருந்தான் - (நளனுக்கு) அண்ணன் முறைகொண்டுள்ளவனாகிய புட்கரனுடன் அவனுக்கு உதவியாக இருந்தான்.

(க - து.) நளமன்னன், கடவுள் வழிபாடு செய்தற்காக ஒருநாள் தன் கால்களைக் கழுவுகையில் நீர் படாதிருக்கும் மறுவைக்கண்டு கலி மகிழ்ந்து, உடனே அவன்பாற் புகுந்து அவன் எண்ணமெல்லாம் தன் எண்ணமாக்கிப் புட்கரனுடன் சார்ந்திருந்தான் என்பதாம்.

(வி - ரை.) சந்தி - சந்தியாவந்தனம் என்னும் வடசொல்லின் கடைக்குறைபெற்ற சொல். அது கடவுளைத் தொழுதல் என்னும் பொருளது. சந்தியாவது பகலும் இரவும் ஒன்று கலந்த

காலம். இது காலைப்பொழுது மாலைப்பொழுது இரண்டுக்கும் பொருந்துவதாகும். இக்காலத்திற் செய்யப்படும் வழிபாட்டுக்குச் சந்தி யென்றது, காலவாகு பெயர்; 'காரறுத்தது' என்பதுபோல. தாள் விளக்குதல் - கால்களை விளக்கமுற அழுக்கின்றிக் கழுவல். மறு - குற்றம் : ஈண்டு நீர்படியாமல் வெளியாக இருந்த அழுக்குப் படிந்த காலின் இடத்தைக் குறித்தது. 'மார்பற் புகைந்து' என்பதில் இரண்டனுருபு தொக்கு நின்ற வேற்றுமைத் தொகை. பொன் அசலம்-பொன்மலை; இமயமலை. [1]"பொன்னசலம் உள்ளுருகப் புல்லாதொழிவேனோ?' என்றார் பிறரும். தம்+ஐயன் = தமையன் : தனக்கு மூத்தோன் என்பதைக் குறிக்கும். ஐயன் - தலைவன், தந்தை முதலியவர்களைக் குறிக்கும். [2]'என்னை முன் னில்லன்மின்' [3]'என்னையர் சாலவுமூர்க்கர்' முதலியன, ஆன்றோர் இலக்கியங்களில் காணப்படுதலை ஓர்க. நளன் தனக்குத் தமையன் முறை கொண்டு தன்கீழ்ச் சிற்றரசனாக இருந்து ஆளச்செய்த புட்கரனைக் குறித்தற்கு ஈண்டுத் 'தமையனுடன் இருந்தான்' என்றார். (கஉ)

கலி, நளனிடத்திற் சேர்ந்த தன்மை

உகக. நாராய ணாய நமவென் றவனடியில்
சேராரை வெந்துயரம் சேர்ந்தாற்போல்—பாராளும்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி.

(இ - ள்.) நாராயணாய நமஎன்று - நாராயணனுக்கு வணக்கமென்று கூறி, அவன் அடியில் சேராரை வெம்துயரம் சேர்ந்தாற்போல் - அவன் திருவடிகளைச் சார்ந்து வழிபடாதவரைக் கொடுந்துன்பங்கள் யாவும் வந்து சேர்ந்தாற் போலாக, பாராளும் கொற்றவனை - உலகையெல்லாம் ஆளுகின்ற வெற்றிவேந்தனை, பார் மடந்தை கோமானை - நிலமகட்குத் தலைவனை, வாய்மை நெறி கற்றவனை - உண்மை வழியைக் கடைப்பிடித் தொழுகுவோனை, (இத்தகைய நளமன்னனைக் கால்கள் நன்கு கழுவாத குற்றத்தைக் கொண்டு) கலி சேர்ந்தான் - கலியானவன் அடைந்தான்.

(க - து.) நாராயணாய நமவென்று கூறி அவ்விறைவன் திருவடியைச் சேராதவர்களைக் கொடுந்துன்பம் சேர்ந்தாற்போன்று, கலி, நளமன்னனைத் துன்புறுத்த அடைந்தான் என்பதாம்.

1. நைடதம், பிரிவுறு, கஎ. 2. திருக்குறள், எஎக.
3. திருக்கோவையார், கக௮.

(வி - ரை.) 'நாராயணாய நம' என்னும் திருப்பெயரை ஓதாதார்க்குத் துன்பஞ் சேர்வது தவறாது; அதுபோன்று, நளமன்னனைக் கலி சேர்ந்தான் என்று உவமங் காட்டினார். பிற பொருள்கள் பல இருப்பினும் அவைகளை யெல்லாம் உவமங் கூறாது இதனை ஈங்கு உவமங்கூறியது, அவர்தம் திருமால் பற்றினை விளக்குதற்கென அறிக. இவர் இந்நூல் தொடக்கத்தில் கடவுள் வாழ்த்துக் கூறுகின்றவழிச் சிவபெருமான் முருகன் முதலியவர் கட்கு வணக்கங் கூறியிருப்பது, இவர்தம் பரந்துபட்ட பொதுக் கொள்கையை விளக்குகின்றது. ஆனாலும் இவர் தம் அழுந்திய பற்றுத் திருமாலிடமே யென்று கருதக் கிடக்கின்றது. பின்னரும், 'மூலப் பழமறைக்கு முன்னேயும் காணலாம்', என்றும் நளமன்னனுக்கு வேற்றுருவம் மாறியபோது 'மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்வாகப், புக்கோர் அருவினைபோல் போயிற்றே' (கலி, நீங்கு : எக) என்றும் கூறுதலால் தெளியலாம்.

இக் கருத்தையே சேரமான் பெருமாளனார் தாம் ஆக்கியருளிய திருவாரூர் மும்மணிக்கோவையில் தலைவி வாய்மொழியாகத் தலைவி துன்புறு நிலைக்குச் சிவபெருமான் திருவடியை நினையாதவர் கிளைகள் வருந்துமாறுபோல், வருந்துவதாக அமைத்த பாடலும் இதனோடு ஒப்ப நோக்கி மகிழற்பாலதாம். எனவே, அதனையும் காட்டுவாம் :

> [1]'தாழ்ந்து கிடந்த சடைமுடிச சங்கரன் தாள்பணியாது
> ஆழ்ந்து கிடந்து நைவார் கிளைபோல் அயர்வேற்கு.'

என்றதூஉம் காண்க.

எத்தகைய தீய செயல்களும் இல்லாதவன்; முறைசெய்து உலகமக்களைக் காப்பாற்றும் கொற்றவன்; பெருநிலம் முழுதும் தனக்கே உரிமையாகப் பெற்ற கோமகன்; உண்மை நெறி தவறா உயர்ந்தவன்; இத்தகைய மன்னனைக் காலில் சிறிது நீர் படாமல் இருந்ததை ஒரு குற்றமாகக் கொண்டானே யெனப் பரிவுடையராய் நளன் சிறப்பைப் 'பாராளும் கொற்றவனைக் கோமானை, வாய்மைநெறி கற்றவனை' என்று கூறினார். கலி - கலிமகன். (௩௩)

கலி, புட்கரனை நளனோடு சூதாட அழைத்தல்

௨௧௨. நன்னெறியில் சூதால் நளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்—மன்னவனே!
போதுவாய் என்னுடனே என்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றான் எடுத்து.

1. திருவாரூர் மும்மணிக்கோவை, ௩௦.

(இ - ள்.) புலைநரகுக்கு ஏதுவாய் நின்றான் - இழிவான நரகமடைதற்குக் காரணமாக இருந்தவனான கலியானவன், மன்னவனே - ஏ புட்கரவேந்தே!, நல்நெறி இல் சூதால் - நல்ல வழியில்லாத சூதாட்டத்தினால், நளனை களவு இயற்றி - நள மன்னனை வஞ்சித்து, தன் அரசு வாங்கி தருகின்றேன் - அவனுக் குரிமையான அரசாட்சியை உனக்கே பறித்துக் கொடுப்பேன், என்னுடனே போதுவாய் என்றான் எடுத்து - என்னோடு வருக வென்று எடுத்துக் கூறினான்.

(க - ரு.) 'வஞ்சனைமுறையில் சூதாட்டத்தால் நளனை வென்று உனக்கு அவனுடைய நாடு நகர்களைக் கவர்ந்து தருகின்றேன்; என்னுடன் வருக'வென்று புட்கரனைக் கலி மகன் அழைத்தான் என்பதாம்.

(வி - ரை.) நல்நெறி இல் - நல்லவழி இல்லாத எனவும், சூதாடற்கு ஏற்ற வழியில் எனவும் கவர்படு பொருள்தர நின்ற தறிக. சூது - கவறாடல். ஒன்றெய்தி நூறிழக்கும் தன்மை யானும், சூதின் வாய்ப்பட்டோர், சூதாடுதலொன்றிலேயே கருத் தூன்றிப் பிறகடமைகளையெல்லாம் மறந்து கைவிடுவாராதலானும் 'நன்னெறியில் சூது' என்று அடைகொடுத்துக் கூறினார். தன் அரசு - நளனுக்கே உரிமையான அரசாட்சி. 'தருவேன' என, எதிர்காலத்தே கூறப்பெறுவது, 'தருகின்றேன்' என்றது, உறுதி யாக வாங்கித் தருவேனென்னும் தெளிவினால் என்க. என்னை?

[1]"விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும்
பிறழவும் பெறூஉம் காலமும் ஏற்புழி."

என்றாராகலின், அவ்விதிபற்றி இங்கே எதிர்காலம் நிகழ்கால மாக வந்த காலவழுவமைதி. புலை நரகு - கீழ்மையான நிரயத் துன்பம். தன்வயப்பட்டோர் எத்தகையராயினும் அவரைக் கொடுந்துன்பத்துக் குள்ளாக்கிக் கெடுத்தற்குரிய னாதலான், அவனைப் 'புலைநரகுக் கேதுவாய் நின்றான்' என்றார். நளனுக்கு என்று கூறி நளனை யென்பதை உருபுமயக்கமாகக் கொள்வாரு முளர். (௩௪)

**கலி சொல்லியபடி புட்கரன் நளனோடு சூதாடப் புறப்படல்**

உ௩௫. **புன்னை நறுமலரின் பூந்தா திடையுறங்கும்
கன்னி இளமேதிக் காற்குழம்பு—பொன்னுரைத்த
கல்ஏய்க்கும் நாடன் கவறாடப் போயினான்
கோல்ஏற்றின் மேலேறிக் கொண்டு.**

1. நன்னூல், ௩௮௪.

(இ - ள்.) புன்னை நறுமலரின் பூந்தாது இடை உறங்கும் - புன்னையின் மணமுள்ள பூக்களினின்று திர்ந்த மகரந்தப் பொடிகளின்மீது படுத்துறங்குகின்ற, கன்னி இளமேதி கால்குளம்பு - மிக்க இளமையையுடைய எருமைகளின் காலிலுள்ள குளம்படிகள், பொன் உரைத்த கல் ஏய்க்கும் நாடன் - பொன்னினை உரைத்த கட்டளைக் கற்போல் இருக்கின்ற தன்மையைத் தருகின்ற நெய்தல் நிலநாட்டுக்கு வேந்தனாகிய புட்கரன், கவறு ஆட - நளனுடன் சூதாடுதற்கு, கொல் ஏற்றின்மேல் ஏறிக்கொண்டு போயினான் - கொல்லுந்திறம் பெற்ற எருதின்மேல் ஏறிக்கொண்டு (நிடத நாட்டை நோக்கிச்) சென்றான்.

(க - து.) புட்கரமன்னன், கலி வேண்டியவாறு நளனுடன் சூதாடுவதற்கு ஒரு கொல்லெருதின்மேல் ஏறிக்கொண்டு நிடதநாட்டை நோக்கிச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) புன்னை நறுமலர் : புன்னையினது மணமுள்ளபூ : புன்னை நெய்தல்நிலக் கருப்பொருள். அதன் மகரந்தப் பொடிகள் எங்கும் உதிர்ந்து நிலனே தோன்றாதவாறு கிடக்கின்றன. அதன் மீது படுத்துறங்கும் இளஎருமைகள் மீதும் கால்களின் குளம்புகளினும் அவை ஒட்டிக்கொள்கின்றன. அதனால் எருமையின் கருநிற உடலும் குளம்புகளும் பொன்படிந்தனபோற் காணப்படுகின்றன. புன்னையின் மகரந்தப் பொடியின் நிறம், பொன் போன்று மஞ்சள் நிறமாக இருத்தலானும், அதன் காற்குளம்பு கருநிற மாதலானும், அவைகளில் பதிந்துகொண்டிருத்தலானும் பொன்னுரைத்த உரைகல்போல் தோற்றமளித்ததையே இங்கு 'பொன் உரைத்தகல் ஏய்க்கும்' என்றார். பிறரும்,

[1] 'பொன்னுரைகற் போன்ற குளம்பு.'

என்றதும்,

[2] '......பொன்னுருள் உரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையும் தன்னிற மாக்கிய இரதம்.'

என்றதும் காண்க இத்தன்மையினால் கடற்கரைசார்ந்த நெய்தல் நிலப்பாங்குள்ள நாட்டுக்குரியோன் என்பதும் தெளிவுபடுகின்றது. இதனால் அப்புட்கரன் நாட்டுவளங் கூறினார். புன்னை மகரந்தப் பொனபோல் தோன்றும் நாடன் என்றதனால், நல்லோன் போன்று வெளிக்குக் காட்டித் தீமை செய்தற்குரியோன் என்னும் உள்ளுறை உவமமும் தோன்ற நின்றது. கொல் ஏறு : முக்கால வினைத்தொகை (௩௫)

1. முத்தொள்ளாயிரம், ௧௩. 2. கம்பராமா. வரைக்: அ.

புட்கரன், தன் நாடு நீங்கி நிடதநாட்டிற் புகுந்தான் எனல்

உகச. வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறக்
கங்கைத் திரைநீர் கரையேறிச்—செங்கதிர்ப்பைம்
பொன்ஞெழியப் போதும் புறம்பணைசூழ் நன்ஞடு
பின்ஞெழியப் போந்தான் பெயர்ந்து.

(இ - ள்.) வெம்கண் சினவிடையின் மேல்ஏறி - (முன் கூறியபடி புட்கரனுனவன்) கொடிய கண்களையுடைய சினம் பொருந்திய எருதினமேல் ஏறிக்கொண்டு, கங்கை திரைநீர் கால் ஏறி - கங்கையாற்றின் அலைகளோடு கூடிய நீரானது கால்வாய் வழியாகச்சென்று, கரைஏறி-கரைகளிலும் ஏறிப்புரண்டு சென்று, செங்கதிர்ப் பைம்பொன் ஒழிய போதும் - சிவந்த கதிர்களாகிய பசிய நெற்குலைகள் மறையும்படி ஓடுகின்ற, பணைபுறம்சூழ் நல்நாடு - மருதநிலம் பக்கத்திற் சூழ்ந்துள்ள தன்னுடைய நல்ல நாடானது, பெயர்ந்து பின் ஒழியப் போந்தான் - பின்புறமாக இருப்ப அதைக் கடந்து (நிடதநாட்டுக்கு) வந்தான்.

(க - து.) புட்கரமன்னன், ஓர் எருதின்மேல் ஏறிக் கொண்டு, கங்கைநீர் வாய்க்கால் வழியாகச் சென்று நெற் கதிர்க்குலைகளைச் சாய்த்தோடிச் செல்கின்ற மருதநிலஞ் சூழ்ந்த தன்ஞடு பின் இருப்ப, அதைக்கடந்து நிடதநாட் டுக்கு வந்து சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) கால் - நீர் செல்லும் வழி. செங்கதிர்ப் பைம் பொன் என்றது, நெற்கதிர்க் குலைகளை. பொன்போன்று மஞ்சள் நிறமாக நெற்கதிர்கள் இருப்பதால் பொன் என்ருர்: உவம ஆகு பெயர். [1]"பொன்னிறச் செந்நெல் பொதியொடு" என்றதும் அறிக. புறம்பணை-பணைப்புறம்: சொன்னிலை மாறிய இலக்கணப் போலி. புட்கரன் நாடு, நீர்வளத்தானும் சிறந்த நாடு என, அவன் நாட்டின் சிறப்பைக் கூறியவாரும். இத்தகைய பொன்கொழிக் கும் தன் நாட்டைவிட்டு அவாமேலிடப் பிறநாட்டையும் தனக் குரிமையாக்கச் செல்கின்ருனென்பதைக் குறிப்பால் விளக்கவே 'நன்ஞடு பின்ஞெழிய' என்ற சொற்ருடரை அமைத்துரைத் தார். முன்பும் நளன், குண்டினபுரத்துக்குத் தமயந்தியின் சுயம் வரத்துக்குப் புறப்பட்டு வந்தகாலை 'சடைச்செந்நெல பொன் விளைக்கும் தன்ஞடு பின்ஞ' என்ருர். அக் கருத்தையே ஈங்கும் அமைத்துரைத்தார் என்க. (நடசு)

1. நாலடியார், உசுக.

**நளன், புட்கரனிடம் சென்று அவன் கொடியை வினவுதல்**

உகரு. அடற்கதிர்வேல் மன்னன் அவனேற்றின் முன்போய்
எடுத்தகோடி என்னகோடி என்ன—மிடற்சூது
வெல்லும் கொடியென்றான் வெங்கலியால் அங்கவன்
செல்லும் கொடியோன் தெரிந்து. [மேல்

(இ - ள்.) அடல் கதிர்வேல் மன்னன் - (பகைவரைக்) கொல்லுகின்ற ஒளிபொருந்திய வேலையுடைய நளமன்னன், அவன் ஏற்றின் முன்போய் - அப்புட்கர மன்னன் ஏறிவந்த எருதிற்கு முன்சென்று நின்று, எடுத்த கொடி என்ன கொடி என்ன - அவன் ஏற்றின்மேற் பிடித்துக்கொண்டு வந்திருந்த கொடியை நோக்கி இக்கொடி என்ன கொடியென்று கேட்க, வெங்கலியால் அங்கு அவன்மேல் - கொடிய கலியின் கோட்பாட்டினால் அவ் விடத்து அந் நளமன்னனிடம், செல்லும் கொடியோன் தெரிந்து - சென்றவனான புட்கரன் (நன்கு அவன் கருத்தை) அறிந்து, மிடல்சூது வெல்லும் கொடி என்றான் - மிக்க சூதாட்டத்தில் எதிர்த்த எவரையும் வெற்றிகொள்கின்ற கொடி இதுவாகுமென்று கூறினான்.

(க - து.) இவ்வாறு, எருதின்மேல் ஏறிச்சென்ற புட்கரன்முன் நளன் சென்று, அவன் பிடித்திருந்த கொடியை நோக்கி, 'இக்கொடி என்ன கொடி?' என்று வினவ, 'இது, சூதாட்டத்தில் எதிர்ப்போரை வெல்லும் கொடி' என்று புட்கரன் மறுமொழி கூறினான் என்பதாம்.

(வி - ரை.) அடல் கதிர்வேல்: பகைவரை வெல்லும் ஆற்றல் படைத்த ஒளிமிக்க வேற்படை என, அவன்றன் வெற்றி மேம் பாட்டை அவன் வேலின்மேல் ஏற்றிக் கூறினார்,

[1] 'பல்பொறி மஞ்ஞை வெல்கொடி.'

எனப் பிறரும் கூறுவதுபோல. இதில் 'வெல் கொடி' எனக் கொடியின்மேல் ஏற்றிக் கூறியதை உணர்க. வெற்றிவேல் மன்னனாகலானும், தனக்குமுன் அஞ்சாது கொடியைப் பிடித்துக் கொண்டு நிற்றலானும் அதுபொறாமல் அவனை நோக்கி, 'இக் கொடி என்ன கொடி?' யென வினவினான். அதற்குப் புட்கரன், இவன் கலியால் உணர்வு திரிந்திருப்பதை அறிந்தான்; அதற்கு ஏற்பச் 'சூதுவெல்லும் கொடி' என்றான். இவ்விருவர் உரையாடல்

1. திருமுருகு. கஉஉ.

களிலிருந்து பேசுவோர் திறன் புலப்படுமாறு 'எடுத்த கொடி என்ன கொடி' என்பதில், அவன் பெருமிதத்தோடு கேட்கும் வினவுரையும், அக் கருத்தை உணர்ந்த புட்கரன், அரசர் பெருமை தோன்றப் பிடித்த கொடியன்று இது, சூதாடுவோரை வெல்லற் குப் பிடித்த கொடி யென்பதை அவன் பணிமொழி புலனாகுமாறு, 'மிடற்சூது வெல்லும் கொடி' என, உரைத்த விடையுரையும் அமைத்த செப்பம் உணர்க. தானாகச் செல்லாது பிறன் வேண்டலால் ஆங்கே போந்துள்ளதைக் குறிக்க 'வெங்கலியால்......... செல்லும் கொடியோன்' என்றார் கொடியோன் கொடுமையுடையோன் எனவும், கொடிக்குரியோன் எனவும் இருபொருள் நயந் தோன்ற நின்றமை காண்க. கொடியோன் : குறிப்பு வினையாலணையும் பெயர். (௩௭)

நளன், புட்கரனைத் தன்னோடு சூதாட அழைத்தல்

உ௩௬. என்றேம் இதுவாயின் மெய்ம்மையே எம்மோடு
வான்றேய் மடல்தெங்கின் வான்தேறல்--தான்தேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கும் நன்னாடன்
சூதாட என்றான் துணிந்து.

(இ - ள்.) வாளை - வாளை மீன்களானவை, வான்தோய் தெங்கின் - வானளாவ வளர்ந்துள்ள தென்னையின், மடல் வான் தேறல் - மடலிலுள்ள சிறந்த கள்ளினை, தேக்கி மீது ஆடி - (வயிறார) உண்டு மேலே குதித்து ஆடி, வயல் வீழ்ந்து உழக்கும் நல் நாடன் - வயல்களில் விழுந்து தண்ணீரைக் கலக்குகின்ற நல்ல நிடதநாட்டுக்கு மன்னனாகிய நளனானவன், மெய்ம்மையே இது ஆயின் என்றேம் - நீ இவ்வாறு சொல்லியது உண்மையே யாயின் நாம் இதை ஏற்றுக்கொள்கின்றேம், எம்மோடு சூதாட என்றான் துணிந்து - எம்மோடு நீ சூதாடுக என்று துணிந்து கூறினான்.

(க - து.) நளமன்னன் புட்கரனிடம் 'ஏ மன்னவனே! நீ கூறுவது உண்மையேயாயின், அதை நாம் ஒப்புக் கொள்கின்றேம்; நீ என்னுடனே சூதாட வருக' என்று கூறினான் என்பதாம்.

(வி - ரை.) இச் செய்யுள் கொண்டுகூட்டுப் பொருளாக அமைத்திருத்தலான், 'வாளை வான்தோய் மடல் தெங்கின்......... உழக்கும் நல்நாடன், மெய்ம்மையே இதுவாயின் என்றேம்: எம்மோடு சூது ஆட துணிந்து என்றான்' எனக் கூட்டிப் பொருள்

கொள்க. வாளை மீன்கள் தெங்கம் பாளையைக் கீறி, அதிலுள்ள கள்ளைக் கண்டமட்டும் குடித்து, மேலே குதித்து விளையாடி, வயலிற் குதித்து நீரினைக் கலக்குமென்றது, அந் நாட்டின் நீர் வளத்தின் ஏற்றத்தைக் குறித்தவாறும். வாளை தெங்கங் கள்ளை புண்டு மயங்கித் திரிவதையொப்ப என்பதை ஆயின், நளனும் கலியின் கோட்பாட்டால் அறிவு திரிந்தான் என்பதை உள்ளுறை யாக அமைத்துள்ளமை அறிக. ஆயின் : செயின் என்னும் வாய் பாட்டு வினையெச்சம் ஆட : ஆடுக என்னும் வியங்கோள் வினை முற்று; வருக, செல்க என்பனபோல. (ந-அ)

நளனுக்கு அமைச்சர் முதலியோர், சூதினால் வரும் தீமையைக்கூறித் தடுத்தல்

உகஎ. காதல் கவறுடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல் மறுத்தல் இவைகண்டாய்—போதில்
சினையாமை வைகும் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி.

(இ - ள்.) (அதுகாலை அமைச்சர் முதலியோர் எழுந்து) போதில் சினை ஆமை வைகும் திருநாடா - தாமரை முதலிய பெரிய மலர்களில் சூல்கொண்ட ஆமைகள் தங்கியிருக்கின்ற வளமுள்ள நிடத நாட்டுக்கு வேந்தே!, செம்மை நினையாமை பூண்டார் நெறி - அறத்தையே கருதாதவர்கொண்ட (கீழ்மை யான) வழிகள், காதல் கவறுஆடல் கள்உண்டல் - (வேறுமாத ரைக்) காதல்கொள்ளுதல் சூதாடுதல் கட்குடித்தல், பொய் மொழிதல் ஈதல் மறுத்தல் இவைகண்டாய் - பொய்ச்சொற் கூறல் (ஒருவனுக்குப் பிறன் ஒன்றைக் கொடுக்குங்கால் கொடுக்க விடாது) தடுத்து நிறுத்துதல் ஆகிய இவ் வைந்துமே என்பதை அறிந்து கொள்வாயாக. (ஆகவே, இவ் வைந்தனுள் ஒன்றாகிய சூதாட விரும்புதலை விட்டொழிப்பாயாக, என்று கூறினர்.)

(க - நு.) 'நளமன்னனே! வேறு மங்கையரைக் காத லித்தல், சூது, கட்குடித்தல், பொய், பொறாமை ஆகிய இவ் வைந்தும், அறநெறிச் செல்லாதவருடைய தீயொழுக் கங்களாம்.' (எனவே, இச் சூதாடலை விரும்பவேண்டா என்று அமைச்சர் முதலியோர் கூறினர்) என்பதாம்.

(வி - ரை.) காதல் எனப் பொதுப்படக் கூறினாரேனும், ஒன்றொழி பொதுச்சொல்லாகப் பிறமாதரை விரும்புதலைக்

குறித்தது. காதல் சூது கள்ளுண்டல் பொய்ம்மொழிதல் பொருமை ஆகிய இவைகள், நன்னெறியிற் செல்லாதவர் குறிக்கோளாகக்கொண்ட தீநெறிகள். இவைகளுள் ஒன்ருன 'சுவருடலை' விரும்புவது தகாதென, நளமன்னனுக்கு ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்ருேர்களும் அமைச்சர்களும் எடுத் துரைத்துத் தடுத்தனர். அறநூல்கள் வேறு மாதரை விரும்புதல் முதலியவைகளால் வரும் தீமைகளைப் பலவாருகக் கண்டித் தொதுக்குகின்றன, அவை :

[1]'பிறன்மனை நோக்காத பேராண்மை சான்ருேர்க்
கறனென்ருே ஆன்ற ஒழுக்கு.' எனவும்,

[2]'பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ அற்று.' எனவும்,

[3]'அகடாரார் அல்லல் உழப்பர்சூ தென்னும்
முகடியால் மூடப்பட் டார்.' எனவும்,

[4]'துஞ்சினர் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.' எனவும்,

[5]'பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.' எனவும்,

[6]'கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உண்பதூஉம் இன்றிக் கெடும்.' எனவும்,

திருவள்ளுவர் அறநூல் முழங்குவதானும், பிற அறநூல்களெல் லாம் இவற்றையே விதந்தெடுத்தோதுதலானும் அமைச்சர் தடுத்தன ரென்க.

'போதில் சிலையாமை வைகும் திரு நாடா' என்பது நள மன்னனுக்குரிய நிடத நாட்டின் நீர்வள நிலவளச் சிறப்பைக் குறித்ததாம். இது, சூல்கொண்ட ஆமைகள் தாம் வாழுதற்குரிய நிலத்தினும் நீரினும் தங்காமல் வேறிடமாகிய பூக்களில் தங்கு தல் போல, அந் நாட்டுக்குரிய வேந்தனுகிய நளனும் அறிவு மிக்கோனுக இருந்தும், தன் அறிவுத் திறனுக்கொவ்வாத நெறியில் செல்கின்ருன் என்னும் குறிப்பிற்ருய்ப் பொருள் கொள்ள **உள்ளுறை உவமை** பொருந்தியிருத்தலை ஓர்க. இவ் வாறே சங்கநூற் பெருங் கடல்களுள் உள்ளுறைகள் பரந்து

1-2-3-4-5-6. திருக்குறள், கசஅ, கூகரு, கூருசு, கூஉசு, உகள, கசுசு.

கிடப்பது காணலாம். காதல் கவறாடல் முதலியவற்றில் எண்ணும்மைகள் மறைந்து நின்றன: உம்மைத்தொகை. நினையாமை: மை விகுதிபெற்ற எதிர்மறைத் தொழிற்பெயர். நெறி - ஒழுக்கம். செம்மை - செவ்விது, நேரிய தன்மை. சிறந்த பொருள்களைச் செம்மையென்பது ஆன்றோர் வழக்கு. 'செங்கோல்' 'செந்தண்மை பூண்டொழுகலான்', 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி', 'செந்தமிழே தீர்க்க' என்ற ஆன்றோர் வழக்குக்களை நோக்கி ஓர்க. இங்கே இவர் அற நெறியைச் 'செம்மை' என்று சுட்டிக் கூறினாரென்க. (௩௪)

இதுவும் அது

௨௧௫. அறத்தைவேர் கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்-மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ என்றார் தெரிந்து.

(இ - ள்.) (வேந்தே! இன்னும் அச்சூதானது), அறத்தை வேர் கல்லும் - அறங்களையெல்லாம் வேருடன் பறிக்கும், அரு நரகில் சேர்க்கும் - சென்றடைவதற்கு ஒவ்வாததான நரகத்தில் கொண்டு செலுத்தும், திறத்தையே கொண்டு அருளை தேய்க்கும் - வலிமை மிகுந்து (தன்னை விரும்புவோரிடம்) இரக்க உணர்வே இல்லாததாக்கும், மறத்தையே பூண்டு விரோதம் செய்யும் - தீய செயல்களையே பெற்று (தன்னை யேற்றோரிடத்துப்) பகையை உண்டாக்கிவிடும் (இத்தன்மைத்தாம்), பொய் சூதை - உண்மையல்லாத சூதாட்டத்தை, மிக்கோர்கள் தெரிந்தும் தீண்டுவரோ என்றார் - உயர்ந்தவர்கள் அறிந்திருந்தும் அதனைக் கையால் தொடுவார்களோ? (தொடமாட்டார்கள்) என்றார்.

(க - து.) 'வேந்தே! அச்சூதானது அறத்தை அழிக்கும்; கொடிய நரகத்தில் சேர்க்கும்; மிக வலிமை கொண்டு ஒருவன் இரக்கவுணர்வைக் குறைக்கும்; தீய செயல்களைப் பெற்றுப் பகையை உண்டாக்கும்; இத்தன்மைத்தாகிய சூதைத் தெரிந்தும் சிறந்தவர்கள் அதனைக் கையாலும் தொடுவார்களோ? (தொடார்கள்)' என்று கூறினர். அமைச்சர் முதலியோர் என்பதாம்.

(வி - ரை.) அறம்: அறுத்தலையுடையதென்னும் பொருட்டாய்த் தீமைகளைந்து நலஞ்செய்வதைக் குறித்தது. மக்களுயிர்க்கு

அறமே சிறந்ததாகலான், அதனை முன்னெடுத்துக் கூறினார். அறத்தைக் கைவிடுவார்க்கும் அவர்பால் சூழ்வது, துன்பமே யாதலால், அதற்கடுத்து 'நரகில் சேர்க்கும்' என்றார். துன்பம் வந்த காலத்து நல்லன மறந்து தீயனவே செய்ய முற்படுவராதலான், அதனையடுத்து, 'அருளைத் தேய்க்கும்' என்றார். இரக்கவுணர்வு அற்றபோது ஒருவன்பால் தீய செயல்களே மிகுந்து, அம்மிகுதல் காரணமாகப் பகைவிளையும் என்று அதனையடுத்து வைப்பு முறையாக வைத்துக்கூறினார். இதன் தீமையை,

[1]"கள்ளும் பொய்யும் காமமும் சூதும்
உள்ளக் கரவுமென்று உரவோர் துறந்தவை.'

என்றார், பிறரும். தெரிந்தும் என்பதிலுள்ள இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. ஏகாரங்கள் இரண்டும் பிரிநிலை. ஓகாரம், எதிர்மறை. (௪0)

இதுவும் அது

௨௧௧. உருவழிக்கும் உண்மை உயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கும் மானம் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து.

(இ - ள்.) (மன்னர் மன்ன!) (சூது) - சூதாடலானது, உருவு அழிக்கும் உண்மை உயர்வு அழிக்கும் - (ஆடுவோனுடைய) அழகைக் குறைக்கும் மெய்ம்மை பேசும் உயர்வைக் கெடுக்கும், வண்மை திரு அழிக்கும் - பிறர்க்கு ஈயும் பொருள்வளத்தைக கெடுக்கும், மானம் சிதைக்கும் - பெருமையைக் குறைக்கும், மருவும் ஒருவரோடு அன்பு அழிக்கும் - சேர்ந்திருக்கும் ஒருவரோடு கொண்ட அன்பை நீங்கச் செய்யும், ஒன்று அல்ல - (இப்படி அதனால் வரும் கேடு) ஒன்று மட்டுமல்ல (பலப்பல), தக்கோர் புரிந்து சூது பொருவரோ - (ஆதலால்) நல்லோர் விரும்பிச் சூதாடுவார்களோ? (ஆடார்.)

(க - து.) 'சூதாடலானது, ஒருவனுக்கு அழகைக் குறைக்கும்; உண்மை பேசுதலை ஒழிக்கும்; செல்வத்தை அழிக்கும்; ஒருவர்க்கொருவர் கொண்ட அன்பை அழிக்கும்; ஒன்றல்ல; இன்னும் பலப்பல கேடுகளைத் தரும்.

---

1. மணிமேகலை,

ஆதலால், நல்லோர் சூதாடலை விரும்புவரோ, விரும்பார்' என்பதாம்.

(வி - ரை.) உருவு - உடலில் தோன்றும் அழகொளி. சூதாடலைச் செய்வோர்க்குத் தோற்பதும், வெற்றி கொள்வதும் பின்பு தோல்வியடைதலுமாக மாறிமாறி ஒன்றெய்தி நூறிழக்கும் தன்மைபெருக, அதனால் மனக்கவலைவர அவர் உடல் மெலிவடைவது காண்டுமாதலால், 'உருவழிக்கும்' என்றார். இதனை,

"ஒன்றெய்தி நூறிழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோர் ஆறு.'

எனவும்,

"உடைசெல்வம் ஊணொளி கல்வியென் றைந்தும்
அடையாவாம் ஆயம் கொளின்.'

எனவும் வரும் தமிழ்மறையானும் உணர்க. அதனால் வரும் மற்றத் தீமைகளையும் ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கிக்கூறிச் சூதாடல் கூடாதெனை நயம்படக் குறிப்பால் அமைச்சர் முதலியோர் கூறினரென்க. புரிதல் - விரும்பல். [3]'புகுமுகம் புரிதல்' என்னும் சொற்றொடர்க்குப் பேராசிரியர், 'விரும்பும் உள்ள நிகழ்ச்சி' யென்றதூஉம் அறிக. அதுபோன்று இதற்கும் பொருள் கோடலுமாம். பொருதல் - போரிடல்: சூதாடுவோர் இருவருள் பகைவர்போல் மாறுபட்டு ஆடுவராகலின், 'பொருவரோ?' என்றார். ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. (௬௪)

இதுவும் அது

௨௨௦. ஆயம் பிடித்தாரும் அல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரும் நெஞ்சிடையே—மாயம்
பிடித்தாரின் வேறல்லர் என்றுரைத்த தன்றே
வடித்தாரின் நூலோர் வழக்கு.

(இ - ள்.) (வேல் வேந்தே!) ஆயம் பிடித்தாரும் - (சூதாடு கருவியாகிய) பாய்ச்சிகையைக் கையில் கொண்டவரும், அல்லல் பொதுமகளிர் நேயம் பிடித்தாரும் - துன்பத்தையே தரும் பொதுப்பெண்களாகிய வேசியர்களின் உறவை விடாது கொண்டவரும், நெஞ்சு இடையே மாயம் பிடித்தாரின் வேறு

1, 2. திருக்குறள், ௯௩௨ ; ௯௩௯. 3 தொல். மெய்ப் : ௧௩.

அல்லர் என்று - தம் மனத்தின்கண் வஞ்சங்கொண்டவரேயல்லாமல் (அதற்கு) வேருகமாட்டா ரென்றே விளக்கி, வடித்தாரின் நூலோர் வழக்கு உரைப்பது அன்றே - (நலந்தீங்குகளை ஆய்ந்தெடுத்து நன்மையையே) தெளிந்தெடுத்துக் கூறுகின்ற நல்ல அறநூலின் முறைகள் எடுத்துக் கூறுவதன்றோ? (உனக்குத் தெரியாததோ?) என்று அமைச்சர் முதலியோர் விளக்கிக் கூறினர்.

(க - து.) 'வேல் வேந்தே! ஆயம் பிடித்தோர், விலைமகளிர் நேயங்கொண்டோர் இவரெல்லாம் வஞ்சத்தையே நெஞ்சிற்கொண்டவரென்று அறநூல்கள் தெளிந்தெடுத்து உரைப்பனவன்றோ? நீ உணராததா?' என்று அமைச்சர் முதலியோர் கூறினர் என்பதாம்.

(வி - ரை.) மனத்தில் வஞ்சங்கொண்டவர்கட்கே பிறர் பொருளைக் கவர்வதும், அயன்மனையாள் புன்னலம் விரும்புதலும், பொதுமகளிர் சேர்க்கையை நச்சுதலும் இயல்பாகும். சூதென்னும் கருவியைக் கைக்கொண்டவர், பிறர் பொருளைக் கவர்வதற்கே மடிதற்று நிற்பவராதலான், 'மாயம் பிடித்தாரின் வேறல்லர்' என்ருர். திருவள்ளுவரும்,

[1]"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.'

என்றருள்வதூஉம் அறிக. செல்வம் வேண்டா வென்று ஒதுக்கி வறுமையைத் தேடிக்கொள்வாருடைய நட்பு, விலைமகளிர், கட்குடி, சூதாடல் இவைகளே ஆகும் என்ருர். இக்கருத்தை உட்கொண்டே ஆசிரியர் இவ்வாறு கூறினுரென்க.

ஆயம் - சூதாடு கருவி: இக்காலத்தில், 'சொற்கேட்டான் சாரி' என, வழங்குவர். பொதுமகளிர் தொடர்பு கொண்டவர், இம்மை மறுமைப் பயன்களை இழப்பதோடு தம் உடல் நலம் குன்றி, நீரிழிவு குட்டம் ஈளை முதலிய பல்வகை நோய்கட்கும் இரையாவராதலால், 'அல்லல்' என்னும் அடையொடு 'பொது மகளிர்' என்று குறித்தார். இதனை ஒளவை மூதாட்டியாரும்,

[2]"அம்மி துணையாக ஆறிழிந்த ஆறொக்கும்
கொம்மை முலைபகர்வார் கொண்டாட்டம் - இம்மை
மறுமைக்கும் நன்றன்று மாநிதியம் போக்கி
வெறுமைக்கு வித்தாய் விடும்.

1. திருக்குறள், கூஉ0. 2. நல்வழி, உ0.

என்று பொதுமகளிரின் தொடர்பு, நெறியல்லா நெறியென்று விளக்கியருள்வதூஉம் காண்க. மாதவியார் தாம், பொதுமகளிர் குலத்தில் தோன்றிய தீயூழை நினைந்து வருந்திப் 'போகியின்கீழ் மாதவர்முன் புண்ணியதானம் புரிந்து, கணிகையர் வாழ்க்கை கடையென' வெறுத்துத் துறவு பூண்டதுவும் இப்பொதுமகளிர் தம் புன்னெறியை உணர்த்தாநிற்கும். மணிமேகலையாரை இப் புன்னெறி வாழ்க்கையில் ஈடுபடுத்த மாதவியாரின் தாய் சித்திராபதி, மாதவியாரை வேண்டிநின்றகாலை,

[1]'காவலன் பேரூர் கனையெரி ஊட்டிய
மாபெரும் பத்தினி மகள்மணி மேகலை
அருந்தவப் படுத்தல் அல்லது யாவதும்
திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாஅள்'

என்று, வெறுத்துரைத்ததும், கணிகையர்கோலத்தைத் 'திருந்தாச செய்கைத் தீத்தொழில்' என்று கழறிமறுத்ததும், அல்லற் பொதுமகளிர் கீழ்மையை விளக்குதல் காண்க. இவர்தம் கொடிய செயல்களையும் கரவுவாழ்க்கை நிரல்களையும் பிற்காலப் புலவர்கள் யாத்தமைத்த 'விறலிவிடுதூது' என்னும் நூல்களிற் பரக்கக் காண்க.

சூது ஒன்றை, ஒருவன் விரும்புவானாஅல், அது, கணிகையர் கூட்டுறவு, கட்குடி, கொலை முதலிய எல்லாவற்றையும் கொடுக்கும் கருவியாகும். ஆதலால், இதனோடு தொடர்புபடுத்தி மக்களுணரும் பொருட்டு அறிவுறுத்தாரென்க. வடித்தல் - சாரமாகப் பிழிந்தெடுத்தல். நூல் செய்வோர், கற்பனையாகக் கூறினும் அக்கற்பனைக்கிடையேயும் அறம் ஒன்று நிலவவே உரைப்பர். அந்நூலே பயன்தருதற்கு ஏற்ற தன்மைத்தாதலான், 'வடித்தாரின் நூலோர்' என்றும், அஃது என்றும் நன்னூற் புலவர்கட்கு வாழையடி வாழையெனக் கொள்கையாக வருவது என்பாராய் 'வழக்கு' என்றும் கூறினர்.

[2]'அலகில்நூல் கற்பின் அறிவுநூல் கல்லாது
உலகநூல் ஓதுவ தெல்லாம் - கலகல
கூஉந் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒந் துணையறிவார் இல்.'

என, அறிவுநூற் சிறப்பையும் அஃதல்லாத நூலின் சிறப்பின்மையையும் சமணமுனிவர்கள் தெளித்துரைத்தமையும் ஓர்க. (சஉ)

1. மணிமேகலை, உ : டுச - எ. 2. நாலடியார், கசO

**நளன், அமைச்சர் முதலியோரை நோக்கி மறுத்துரைத்தல்**

உஉக. தீது வருக நலம்வருக சிந்தையால்
சூது பொரஇசைந்து சொல்லினோம்—யாதும்
விலக்கலிர்நீர் என்றான் வராலேற மேதி
கலக்கலைநீர் நாடன் கனன்று.

(இ - ள்.) *வரால் ஏற மேதி கலக்கு அலைநீர் நாடன் - வரால் மீன்கள் மேல் எறிப்பாய எருமைகள் கலக்குகின்ற நீர்வளமிக்க நிடதநாட்டுக்கு வேந்தனான நளமன்னன், கனன்று - (இவ்வாறு தனக்கு அறவுரை கூறியவர் யாவரையும்) வெகுண்டு, தீதுவருக நலம்வருக - (சூதாட்டத்தினால்) நலம் வந்தாலும் வருக (அன்றித்) தீமையே வரினும் வருக, சிந்தையால் இசைந்து - (நாம்) மனத்தால் பொருந்தி, சூது பொர சொல்லினோம் - சூதாட வருவதாக உரைத்துவிட்டோம், (இனிச் சொன்னதை மாற்றுதற்கில்லை), நீர் யாதும் விலக்கலிர் என்றான் - (என் சொற்களில்) எதையும் நீர் மறுக்காதிருமின் என்று கூறினான்.*

(க - து.) *நளமன்னன், அமைச்சர் முதலியோர் கூறிய உரைகளை மறுத்துத் 'தீதுவரினும் வருக; நலம் வரினும் வருக; நாம் சூதாடுவதாகக் கூறிவிட்டோம்; நீவிர் இனி விலக்காதீர்' என்று கூறினான் என்பதாம்.*

(வி - ரை.) *'தீது வருக; அன்றி நலம் வருக' என்பன, நளமன்னன் தனக்கு எதுவரினும் அதனைப் பொருட்படுத்தாது சூதாடுதற்கு உறுதிகொண்டதை உணர்த்திற்று. விலக்கலிர்: முன்னிலை ஏவல் எதிர்மறைப் பன்மைவினைமுற்று. வரால் - வரால்மீன்கள். ஏறல் - மேற்செல்லல். மேதி - எருமை. (உ௩)*

**புட்கரன், நளனைப் பந்தயம் யாதென்று வினவுதல்**

உஉஉ. நிறையில் கவறாடல் நீநினைந்தை ஆகின்
திறையிற் கதிர்முத்தம் சிந்தும்—துறையில்
கரும்பொடியா மள்ளர் கடாவடிக்கும் நாடா
பொரும்படியா தென்றானிப் போது.

(இ - ள்.) *திறையில் கதிர் முத்தம் சிந்தும் - விலை மதிக்க வொண்ணாத ஒளிபொருந்திய முத்துக்கள் சிந்தும்படியாக, துறையில் - நீர்த்துறைகளில், மள்ளர் கரும்பு ஒடியா கடா*

அடிக்கும் நாடா - உழவர்கள் கரும்புகளை ஒடித்து உழு கடாக் களை அடிக்கின்ற நிடத நாட்டுக்கு மன்னனே, நிறையில் கவறு ஆடல் - வரையறையற்ற சூதாட்டத்தை ஆடுதற்கு, நீ நினைந்தை ஆகில் - நீ எண்ணினையானால், இப்போது பொரும்படி யாது என்றான் - இவ்வேளை சூதாட்டத்துக்கு எதிர்க்கும்படியான பணையம் என்னவென்று வினவினான்.

(க - து.) 'நிடத நாட்டுக்கு வேந்தே! வரையறை யற்ற சூதாட்டத்தை ஆட நீ விரும்பினால், சூதாடுதற்குரிய பணையம் யா'தென்று புட்கரன் நளனை வினவினான் என்ப தாம்.

(வி - ரை.) நிறை - ஒருதலைப்பட்ட மனவுணர்வு: நெஞ்சை ஒரு வழி நிறுத்தல் என்ப. சூது ஆடுமொருவனுக்கு ஒரு நிலைப் பட்ட தன்மையிராது; அவனுக்குச் சூதாடுதல் ஒன்றிலேயே மனஞ் சென்று நல்லனவெல்லாம் கைவிட்டுச சூதாட்டத்தில் கிடைக்கும் ஊதியத்தையே நாடி உழல்வனுதலால. 'நிறையில் கவறாடல்' என்று புட்கரன் வாயிலாக வைத்து ஓதினார் 'ஒடியா' ஒடித்து: செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நினைந்தை ஐகார ஈற்று முன்னிலை யொருமை. கதிர் முத்தம்: உருபும்பயனும் தொக்கதொகை கடாவடிக்கும்: இரண்டாம் வேற்றுமைத் தொகை. நளமன்னனுடைய நிடதநாட்டு வளங் கூறியவாறு. திறை - விலை மதிப்பு. (சச)

நளனும் புட்கரனும் பந்தயம் வைத்துச் சூதாடல்

உஉரு. விட்டோளிர்வில் வீசு விளங்குமணிப் பூணாரம்
ஒட்டினேன் உன்பணையம் ஓதென்ன—மட்டவிழ்தார்
மல்லேற்ற தோளானும் வான்பணையம் ஆகத்தன்
கோல்லேற்றை வைத்தான் குறித்து.

(இ - ள்.) (இவ்வாறு புட்கரன் கேட்டவுடன் நளன்), விட்டு ஒளிர் வில் வீசு - இடை விட்டு விட்டு விளங்குகின்ற ஒளியைப் பரப்புகின்ற, விளங்குமணி பூண் ஆரம் ஒட்டினேன் - யாவரும் அறிகின்ற கல் அணியாகிய மாலையைப் பந்தயமாக வைத் துளேன், உன் பணையம் ஓது என்ன - உன்னுடைய பந்தயத்தை (இச் சூதாட்டத்துக்கு நீ) சொல்லென்று கேட்க, மட்டு அவிழ் தார் மல் ஏற்ற தோளானும் - தேன் சொரிகின்ற மலர் மாலையை அணிந்த மற்போர் புரிகின்ற தோள்களையுடைய புட்கர மன்ன னும், வான் பணையம் ஆக - சிறந்த பந்தயப் பொருளாக, தன் கொல் ஏற்றை குறித்து வைத்தான் - தன்னுடைய கொல்கின்ற எருதைக் குறித்துக் காட்டி முன்னே சேர்த்தான்.

(க - து.) நளமன்னன், புட்கரனை நோக்கி, 'ஒளிவீசு கின்ற கல்லணியாகிய மாலையை நான் பந்தயமாக வைத் துளேன்; உன்னுடைய பந்தயப்பொருள் நீ கூறுக'வென்று கேட்க, அதற்குப் புட்கர மன்னன், தன்னுடைய எருதைப் பணையமாகக் குறிப்பிட்டு வைத்தான் என்பதாம்.

(வி - ரை.) விட்டு ஒளிர் வில்வீசுதல்: இடையிடையே பளிச்சுப் பளிச்சென்ன மின்னுதல். பூண் ஆரம்: முக்கால வினைத்தொகையாகக்கொண்டு பூணுகின்ற ஆரம் எனப் பொரு ளுரைத்தலுமாம். ஒட்டுதல் - பந்தயமாக வைத்தல். நளமன்னன், கலியின் வலிக்கு இலக்காக இருப்பவன் ஆதலால், தன்னை எவ்வாற்றானும் சூதில் வெல்லுதல் முடியாதென்னும் ஊக்கத் தால் வந்தவனாகலான், புட்கரன் தோள்களுக்கு 'மட்டவிழ்தார் மல்லேற்ற தோள்' என, ஏற்றங்கொடுத்துக் கூறினார். கொல் ஏறு - கொல்கின்ற எருது: வினைத்தொகை. குறித்து வைத்தல் - காட்டிக் கூறுதல். (சஙு)

### நளன், மற்றைய பொருள்களையும் பந்தயம் வைத்தாடித் தோல்வியடைதல்

உஉச. காரேயும் கூந்தலார் காரிகைமேல் காதலித்த
தாரேயும் தோளான் தனிமனம்போல்—நேரே
தவறாய்ப் புரண்ட தமையனொடும் கூடிக்
கவறாய்ப் புரண்டான் கலி.

(இ - ள்.) கார் ஏயும் கூந்தல் ஆர் - மேகத்தை ஒத்திருக் கின்ற கூந்தலையுடைய, காரிகைமேல் காதலித்த - தமயந்தி மீது காதல்கொண்டு மணந்த, தார் ஏயும் தோளான் - மலர்மாலை பொருந்திய தோள்களையுடைய நளமன்னன், தனி மனம்போல்- தனியான தன் மனப்போக்கின்படியே (சூதாட), நேரே தவறு ஆய் புரண்ட - நளனுக்கு முன்னிலையிலேயே ஒழுங்கீனமாக ஆடிய, தமையனொடும்கூடி - (நளனுக்குத்) தமையன் முறைக்கார னை புட்கரனோடு சேர்ந்துகொண்டு, கலி கவறு ஆய் புரண் டான் - கலிமகன் (புட்கரன் புரட்டுக்குத் தக்கவாறு) பாய்ச்சிகை இடத்துச் சார்ந்தவனாகி உருட்டி வெற்றியை உண்டாக்கினான்.

(க - து.) நளன் தன் தனித்த மனப்போக்கின்படி சூதாடக் கலிமகன் புட்கரமன்னனோடு ஒன்றுபட்டுப் பாய்ச்சிகையைச் சார்ந்து நின்று புட்கரனுக்கு வெற்றி

யுண்டாகும்படி உருட்டி வெற்றியை உண்டாக்கினன் என்பதாம்.

(வி - ரை.) காரேயும் கூந்தலார் காரிகை, ஈண்டுத் தமயந்தி அவனைக் காதலித்ததால் பெற்ற மணமாலையையணிந்த தோள் என, அவன்றன் தோளின் சிறப்புக் கூறுவதுபோல் ஈண்டுக்கூறி, அவன் இனி அவளையும் பிரிந்து தனித்து உறையும் காலம் அண்மியதே! யெனை இரங்குவார்போல் இங்கே 'தாரேயும் தோளான்'என்று,கருத்துடையடை கோளியணியாகக் குறித்தார். தனிமனம், பிறர் சொற்கேளாது சாராமல் தன் எண்ணப்படி செல்லும் தனிப்பட்ட மனம்: தன் மனப்போக்குப்போல, போல் - இங்கே உவமையுருபாகாது இயல்பு என்னும் பொருளதாக வந்தது. புரண்ட : புரட்டிய என்னும் பொருளது; பிறவினை தன்வினையாக வந்தது. கவறு: அதனிடத்தைக் குறித்தலால் ஆகுபெயர். புரண்டான் என்பதும், பிறவினையாக வந்தது. பாய்ச்சிகையிடத்தே கலிபோய்ச்சார்ந்துநின்று அப் பாய்சிகைகளை நளனுக்குத் தோல்விக்கேற்ற விருத்தமாகவும், புட்கரனுக்கு வெற்றிக்கேற்ற விருத்தமாகவும் புரட்டிப் புரட்டித் தான் கூறிய சூளுரையை நிறைவேற்றினனாகலான், பிறவினையாயிற்று. பாய்சிகைவேறு, தான்வேறு என்னும் வேற்றுமை தோன்றுவண்ணம் அதனுள் நின்று புரட்டினன் ஆகலான், 'கவறாய்ப் புரண்டான்' என ஒற்றுமை தோன்றக் கூறினர். தமையன் - தனக்கு முன் பிறந்தோன். இங்கே, புட்கரனை நளனுக்குத் தமையனென்று கூறுவதும் முன்பு 'தமையனொடும் போந்து' என்று கூறுவதும் இகழ்ச்சிக் குறிப்பு தமையனாவான், தன் இளவலுக்கு நலஞ் செய்வானன்றே, இவன் தன் இளவலாகிய நளனுக்குத் தீமை செய்யவே சூதாடலை மேற்கொண்டு நிற்பவனைத் தமையனெனக் கூறுவது யாங்ஙனம்! எனவே, எள்ளல் பொருள் தோன்றத் 'தமையனொடும் கூடி' என்றார், என்று கொள்க- கலி - கலிமகன். பண்பு, பண்பியைக் குறித்தது. (௪௬)

இதுவும் அது

௨௨௫. வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கோத்த பணையம் உரையென்ன—வைத்தநிதி
நூறா யிரத்திரட்டி நூறநூ றாயிரமும்
வேறாகத் தோற்றானவ் வேந்து.

(இ - ள்.) (நளனை நோக்கிப் புட்கரனனவன்) வைத்த மணி ஆரம் வென்றேன் - (நீ, பந்தயமாக) வைத்துள்ள மாணிக்க மாலையைக் கெலித்தேன், மறு பலகைக்கு ஒத்த பணையம் உரை

என்ன - அடுத்த ஆட்டத்துக்கு ஏற்ற பந்தயப் பொருளைக் கூறு என்று கேட்க, அவ்வேந்து - அந் நளமன்னன், வைத்த நூறுயிரத்து இரட்டி நூறு நூறு ஆயிரம் நிதியும் - (அப்போது பந்தயமாக) வைத்த இரண்டு இலட்சம் பொன்னையும், (அப்பால்) ஒரு கோடி பொன்னையும், வேறு ஆக தோற்றான் - தனித்தனியாகத் தோற்று இழந்தான்.

(க - ரை.) புட்கரன் நளனை நோக்கி, 'நீ பணயமாக வைத்த மாணிக்கமாலையை வென்றேன்; அடுத்த ஆட்டத்துக்குப் பந்தயம் கூறுக' என்று கேட்க, அந் நளன், இரண்டு இலட்சம் பொன்னும், ஒரு கோடிப்பொன்னுமாகத் தனித் தனியாக வைத்தாடித் தோற்றான் என்பதாம்.

(வி - ரை.) முன் மணிப்பூணாரம்என்று கூறியதையே சுட்டி, இங்கே புட்கரன், 'மணியாரம் வென்றேன்' என்றான். நூறுயிரத்து இரட்டி - நூறுயிரத்தை இருபங்காகக் கொள்வது, அஃதாவது இரண்டு இலட்சம். நூறு நூறுயிரம் - நூறு இலட்சம். ஆவது, ஒரு கோடியளவு பொன். ஒருதரமின்றி இருதரத்தில் வைத்துத் தோற்றான் என்பது தோன்ற 'வேறாகத் தோற்றான்' என்றார். (சஎ)

நளன், நான்குவகைப் படைகளையும் வைத்தாடித் தோல்வியுறல்

௨௨௬. பல்லா யிரம்பரியும் பத்துநூ றுயிரத்துச்
சொல்லார் மணித்தேரும் தோற்றதற்பின்-வில்லாட்கள்
முன்தோற்று வானின் முகில்தோற்கும் மால்யானை
பின்தோற்றுத் தோற்றான் பிடி.

(இ - ள்.) (அதன் பின்னரும் நளன்) பல் ஆயிரம் பரியும் - எத்தனையோ ஆயிரக் கணக்கான குதிரைகளையும், பத்து நூறுயிரத்து சொல்ஆர் மணி தேரும் - பத்து இலட்சம் புகழ்மிக்க தேர்களையும், தோற்றதன் பின் (பந்தயமாக வைத்தாடித்) தோற்றுப் போனபின், வில் ஆட்கள் முன்தோற்று - வில் வீரர்களாகிய காலாட்களை முதலில் வைத்தாடித் தோற்று, வானின் முகில் தோற்கும் மால்யானை பின் தோற்று - மேலிடத்தில் செல்கின்ற மேகங்களும் (நிறத்தால்) தோற்றோடத் தக்க சிறப்பு வாய்ந்த பெரிய ஆண்யானைகளையும் அதன்பின வைத்தாடித் தோற்று, பிடி தோற்றான் - அப்பால் பெண்யானைகளையும் வைத்தாடித் தோற்றான்.

(க - து) நளன், பல்லாயிரம் குதிரைகள், பத்து இலட்சம் தேர்கள், வில்வீரர்களான காலாட்கள், பெரிய ஆண் யானைகள், பெண் யானைகள் ஆகிய நால்வகைப் படைகளையும் பந்தயமாக வைத்தாடித் தோல்வியடைந்தான் என்பதாம்

(வி - ரை.) பல்லாயிரம் என்பது, எண்ணலாகா தென்னும் அளவைக் குறித்தது. அரசர்கட்கு முதலில் சிறப்புக் குரியன படைகளாதலின், படைகளையும், சிறப்பிழக்க வைத்தாடினன் என்பாராய்ப் 'பல்லாயிரம் பரியும்' என்று குறித்தார். பல்லாயிரம் : பண்புத்தொகை. மணித்தேர் - ஒன்பது வகை மணிகளும் இழைத்து ஒளி யெறிக்கும் தேர் : உருபும் பயனும் உடன் தொக்கதொகை; மணிகளையுடைய தேரென விரியும். வில் ஆட்கள் : விற்படைகொண்ட படை மறவர். வில் என்று கூறினாரெனினும்,

'ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே.'

என்னும் இலக்கணத்தால், ஏனைய வாள், வேல், ஈட்டி முதலியனவும் கொள்க. முகில் தோற்றல் : யானையின் கருநிறத்தை முகில் ஒவவாதிருத்தல். எனவே, யானைகட்கு ஏற்றங்கூறியவாறு. யானை என்னும் பொதுப்பெயர் ஈண்டு ஆண்யானைகளை உணர்த்திற்று. பிடி - பெண்யானை. நால்வகைப் படைகளையும் வைத்தாடுதலே முறை. முறை பிறழ்ந்து கலியால் திரித்த மதிதிரிந்தாடினன் என்பது தோன்ற, இறுதியாக வைத்துத் 'தோற்றான் பிடி' என்றார். (சஅ)

நளன், பணிப்பெண்களை வைத்தாடித் தோற்றல்

உஉஎ. சாதுரங்கம் வென்றேன் தரும்பணையம் ஏதென்ன
மாதுரங்கம் பூணும் மணித்தேரான்—தூதரங்கில்
பாவையரைச் செவ்வழியாழ்ப் பண்ணின்மொழிப்
பூவையரைத் தோற்றான் பொருது. [பின்னுதழல்

(இ - ள்.) (மேற்கூறியவாறு நளன் தோற்ற பின்னர், புட்கரன் நளனை நோக்கி) சாதுரங்கம் வென்றேன் - நான்கு வகைப் படைகளையும் நான் வெற்றிகொண்டேன், தரும்பணையம் ஏது என்ன - (இனி அடுத்த ஆட்டம் ஆடுதற்கு) உன்னால் வைக்கத் தக்க பந்தயப் பொருள் யாதென்று வினவ, மாதுரங்கம் பூணும் மணித் தேரான் - சிறந்த குதிரைகள் பூட்டப்

பெறும் மணிகள் பதித்த தேரினையுடைய நளமன்னன், சூது அரங்கில் - சூதாடுகின்ற களத்தில், பொருது - புட்கரனோடு எதிர்த்து ஆடி (பந்தயமாக வைத்து), பாவையரை - சித்திரப் பதுமைபோன்ற பெண்களையும், செவ்வழியாழ் பண்ணின் மொழி - நெய்தனிலப்பண்ணாகிய யாழில் தோன்றும் பாடலை யொத்த இனிய சொற்களையும், பின்னுகுழல் - பின்னிச் சடையாகத் திகழும் கூந்தலையுமுடைய, பூவையரை தோற்றான் - நாகணவாய்ப் புள்ளினை யொத்த மங்கையர்களையும் தோற்றான்.

(க - து.) நளமன்னனைப் புட்கரன் பார்த்து, 'நால்வகைப் படைகளையும் நான் வெற்றிகொண்டேன்; இனிப் பந்தயப் பொருள் யாது?' என்று கேட்க, நளன் சித்திரப் பாவையை யொத்த நங்கையர்களையும், நாகணவாய்ப் புள்ளை நிகர்த்த நங்கையர்களையும் வைத்தாடித் தோற்றான் என்பதாம்.

(வி - ரை.) சதுர் + அங்கம்—சாதுரங்கம் என, முதல் நீண்டது. அதற்கு நால்வகை உறுப்பு என்பதே பொருள். ஆயினும், இத் தொகைக்குறிப்பு ஒன்றொழி பொதுச்சொலலாய் ஈண்டு தேர் யானை பரி காலாள் ஆகிய நால்வகைப் படைகளையே உணர்த்திற்று. [1]'ஐந்தவித்தான் ஆற்றல்' என்னும் திருக்குறளினும், [2]'ஐவரை அகத்திடை அடைத்தமுனி' எனக் கம்பஇராமாயணத்தும், [3]'அலங்குளைப் புரவி ஐவரொடு சினைஇ' எனப் புறநானூற்றினும், [4]'ஓரைவர் ஈரைம் பதின்மர் உடன்றெழுந்த' எனச் சிலப்பதிகாரத்தும் ஐந்து, ஐவரை என்னும் தொகைக் குறிப்புக்கள்: மெய் வாய் கண் மூக்குச செவி என்னும் ஐவகையினிடத்தனவாகிய அறிவுகளையும் பாண்டவர்களையும் உணர்த்தினமை போலக் கொள்க.

புட்கரன், 'தரும்பணையம் எவை?' என்றது, 'ஏது' என்றது, பெரும்பகுதிகளை யெல்லாம் வென்றுவிட்டோம்; இனி மிகுதி இவன்பால் இரா என்னும் செருக்குக் கருத்தை உட்கொண்ட குறிப்புமொழி. சூது அரங்கு-சூதாடுகின்ற அவை. பாவையர்: சுண்ணத்தால் அழகுற அமைதத உருவினையொத்த அழகுள்ள மங்கையர்; பின்னரும், பூவையர் என்றார், பல்வகைச் சிறப்பும் அழகும் இளமையும் மிக்க மங்கையர்கள் பலர் என்பது தோன்ற. பொருதல் - போரிடுதல்: சூதாடுதலில் எதிர்த்தாடுதற்கு வந்த இலக்கணை வழக்கு. (சக)

1. திருக்குறள், ௩௫. 2. கம்பராமா. தாடகை: சஎ.
3, 4. சிலப். உக: உச.

### புட்கரன்பால் ஆட்சிமுறை மாறிய தெனல்

உஉ௫. கற்பின் மகளிர்பால் நின்றும் தமைக்கவட்டின்
விற்கும் மகளிர்பால் மீண்டாற்போல்—நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தாள் திரு.

(இ - ள்.) கற்பின் மகளிர்பால் நின்றும் - (ஒரு கீழ்மகன் தனக்கேயுரிய மனையாளாகிய) கற்புக் கடம்பூண்ட தன் மனைவியிடத்தைவிட்டு, கவட்டின் தமை விற்கும் மகளிர்பால் மீண்டால் போல் - வஞ்சக எண்ணத்தினால தம்மையே பொருளுக்காக விலைப்படுத்தும் வேசியரிடத்துச் சென்ற தன்மைபோல, திரு - செல்வமென்னும் பெண்ணானவள், நிற்கும் நெறியானை - நல்ல வழிகளில் பிறழாமல் நடப்பவனும், மெய்ம்மைவாய் நின்றானை - உண்மையிடத்தையே கடைப்பிடியாகக் கொண்டு நிலைபெற்று நின்றவனுமாகிய நளமன்னனை, நீங்கி-விட்டுத் துறந்து, சிறியானை சேர்ந்தாள் - கீழ்மகனாகிய புட்கரனைச் சேர்ந்தாள்.

(க - ரை.) தன் மனையாள் கூட்டுறவைவிட்டு விலைமகளை விரும்பிச் சென்ற கீழ்மகனைப்போல், நல்வழியில் நடக்கும் நளனைவிட்டுச் செல்வமகள், கீழ்மகனை புட்கரனைச் சேர்ந்தாள் என்பதாம்.

(வி - ரை.) கற்பின் மகளிர் - கற்புடைய பெண்கள். கற்பாவது கொண்டானிற் சிறந்த தெய்வமில்லையெனப் போற்றியொழுகும் கடப்பாடு. இம்மகளிர் சிறப்பைப்,

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும்
திண்மை உண்டாகப் பெறின்.'

"தெய்வந் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை.'

எனத் தெய்வத் திருவள்ளுவரும்,

கண்ணகியாரின் கற்புத் திறத்தை ஆசிரியர் இளங்கோவடிகளார், கவுந்தியடிகள் வாயிலாக இடைமகள் மாதரிக்கு அறிமுகப் படுத்தியபோது,

---

1, 2. திருக்குறள், ௫௪ ; ௫௫.

"[1]இன்றுணை மகளிர்க் கின்றி யமையாக்
கற்புக் கடம்பூண்ட இத்தெய்வம் அல்லது
பொற்புடைத் தெய்வம் யாம்கண் டிலமால்
வானம் பொய்யாது வளம்பிழைப் பறியாது
நீணில வேந்தன் கொற்றஞ் சிதையாது
பத்தினிப் பெண்டிர் இருந்த நாடு.'

என, உரைத்தருள்வதும் புலனும். இத்தகைக் கற்பிற் சிறந்த பொற்புடை நங்கையரைத் துறந்து கீழ்மக்கள், பொருட் பெண்டிர் பொய்ம்மை முயக்கத்தை நச்சிச் சென்று இன்பமல்லா இன்பம் அடைதல் போல, எல்லாச் செல்வங்களையும் தோற்ற நளமன்னன் சிறப்பை, 'நிற்கும் நெறியான்' என்றும், 'மெய்ம்மை வாய் நின்றான்' என்றும் அவன்றன் பெருமையைக்கூறி, அந் நெறிக்குப் புறம்பானவனை புட்கரனைச் சேர்ந்த செல்வத்தைக் கற்புடையாளாகிய தன் மனையாளைவிட்டு விலைமகள்பாற் சேர்ந்த கயவருக்கு உவமங்காட்டிச் 'சிறியானைச் சேர்ந்தாள் திரு' என்று கூறினார்.

நளமன்னன் அரசியல் முறைமாறிப் புட்கரன்பால் ஆனமையைத் தீநெறிமகளிரைச் சேரும் கயவர்போல் குறித்து நாகரிக முறையாகக் கீழ்நெறிச் செல்வாரை நல்வழிப்படுத்தும் கவிஞரின் அறவுரையும், நிகழ்ச்சிமுறைநிலையும் விளக்கிக் காட்டும் சதுரப் பாடு அறிந்து மகிழற்பாலது.

செல்வம், கல்வி, வீரம் முதலியவற்றைப் பெண்ணுருவாகக் கொள்வது நம் தமிழ்நாட்டுப் பண்டைக்காலந்தொட்டுவரும் பண்பாடு அப்பண்பாட்டுமுறையை மேற்கொண்டு புகழேந்தியார், செல்வத்தைப் பெண்ணாக உருவகஞ் செய்து, 'சிறியானைச் சேர்ந்தாள் திரு' என்றார். இவ்வாறே வள்ளுவரும், [2]'மடியிலான் தாளுளாள் தாமரையினாள்' என்பது காண்க. நெறியானை நின்றானை சிறியானை என்பன, வினையால் அணையும் பெயர்கள். (௰)

**புட்கரன், தமயந்தியைப் பந்தயமாக வைத்தாடக் கூறுதல்**

௨௨௧. மனைக்குரியார் அன்றே வரும்துயரம் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்தலையைத் தேனால் நனைக்கும்
குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
இவளைப் பணையம்தா இன்று.

1. சிலப். கடு : கசஉ-எ. 2. திருக்குறள், ௬௧௭.

(இ - ள்.) (இவ்வாறு நளனுடைய செல்வ முழுதையும் புட்கரன் சூதாட்டத்தில் வென்று தனக்கு உரியதாக்கிக் கொண்டபின் நளனைப் பார்த்து) சினை சங்கின் வெண் தலையை - கருக்கொண்ட சங்கினது வெண்ணிறம் பொருந்திய தலையினை, தேனால் நனைக்கும் - தன் மதுவினால் நனைக்கின்ற, பைந்தாள் குவளை பணை - பசுமையாகிய தண்டுகளையுடைய நெய்தல் மலர்கள் மலர்ந்த கழனிகளும், குண்டு - குளங்களும் சூழ்ந்த, நீர் நாடா - நீர்வளமிக்க நிடதநாட்டுக்கு மன்னனாகிய நளவேந்தே, இன்று இவளை பணையம்தா - இன்று நிகழும் ஆட்டத்துக்கு இத் தமயந்தியைப் பந்தயமாகத் தருவாயாக; (எனெனின்), மனைக்கு உரியார் அன்றே வரும்துயரம் தீர்ப்பார் - தம் இல்லத்துக்கு உரிமையுடைய மனைவியா அல்லவா? (தம்) கணவர்க்கு நேருகின்ற துன்பங்களைத் தீர்ப்பவராவர்; (ஆகவே, வைத்தாடுக என்றான்.)

(க - ரை.) நளமன்னன், செல்வ மெல்லாவற்றையும் தோற்றபின் புட்கரன் நளனைப் பார்த்து, 'இனி இன்று நடக்கும் சூதாட்டத்துக்கு இத்தமயந்தியைப் பந்தயமாக வைத்தாடுக' என்றான் என்பதாம்.

(வி - ரை.) மனைக்கு உரியார் - மனைவிகள் மனைவிமார் தம் கணவர்கட்கு நலனோ தீங்கோ நேருங்கால் மகிழ்ந்தும் வருந்தியும் இருப்போராகலின், இதுகாலை நளன்தன் செல்வங்களையெல்லாம் தோற்று வருந்தியதைக் கண்ட புட்கரன், மேலும் தன் நோக்கத்துக்குத் திருப்ப எண்ணி இவ்வாறாகச் சொன்னயமாக நளனை விளித்து 'இவளைப் பணையம்தா' என்றான் என்க. சூற்கொண்ட சங்குகள் மெல்ல மெல்லத் தவழ்ந்து வந்து குவளைகளுக்குப் பக்கத்தில் ஒதுங்கி நிற்க, அக்குவளை மலர்களிலிருந் தொழுகிய தேன், அதன் தலைமேல் வடிந்தோடுகின்ற செழிப்புமிக்க வயல்களும் குளங்களும் சூழ்ந்த நிடதநாட்டுக்குரியோனென விளிப்பது, குவளை தனக்குள் நிறைந்த தேனை வேறொன்றுக்குக் கொட்டிக் கவிழ்ப்பதுபோல, தனக்கே உரிமையான செல்வத்தைத் தோற்று வறியனாயிருப்பவனே யென்னும் குறிப்பிற்றாய், உள்ளுறை உவமை தோன்ற நின்றது. இவளையென்று தமயந்தியைச் சுட்டிக் கூறுவதால் சூதாடுங்கால் அவள் பக்கலில் இருந்ததாகக் கொள்ளக் கிடக்கின்றது.

சினைச்சங்கு : உருபும் பயனும் தொக்க தொகை. வெண்தலை-வெண்மையான அதன் முன்பாகம். பணை - வயல். குண்டு-குளம். இவைகளை உம்மைத் தொகையாகக் கொள்க. இன்று : அதுகாலை நிகழும் ஆட்டத்தைக் குறித்தலால், ஆகுபெயர். (இக)

**நளன், தமயந்தியை நோக்கி இனிச் சூதாட்டம் முடிந்தது; நாம் வெளியேறுவோமெனல்**

உ௬௦. இனிச்சூ தொழிந்தோம் இனவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே—பனிச்சூதப்
பூம்போ தவிழ்க்கும் புனல்நாடன் பொன்மகளே
நாம்போதும் என்றான் நளன்.

(இ - ள்.) நளன் - (தன்னிடம் புட்கரன் கூறிய மொழிக்கு ஒன்றுங் கூறாமல்) நளமன்னனானவன், கனிசூத வார்பொழிலின் கண்ணே - பழங்களையுடைய மாமரங்கள் நிறைந்த நீண்ட சோலையினிடத்தே, வண்டு இனம் கிண்டி - வண்டுக் கூட்டங்கள் (தேன் உண்பதற்குத் தம் கால்களால்) குடைந்து, பனிசூத பூபோது அவிழ்க்கும் - குளிர்ச்சி பொருந்திய மாம்பூக்களை விரியச் செய்கின்ற, புனல்நாடன் பொன்மகளே - நீர்வளமுள்ள விதர்ப்பநாட்டு வேந்தனுடைய அழகிய புதல்வியாகிய தமயந்தியே, சூது ஒழிந்தோம் - சூதாட்டத்தை விட்டு நீங்கினோம், இனி நாம் போதும் என்றான் - இனிமேல் நாம் (இந்நகரை விட்டு எங்கேனும்) செல்வோம் என்று கூறினான்.

(க - து.) நளன் தமயந்தியைப் பார்த்து, 'சூதாட்டத்தைவிட்டு நீங்கினோம்; இனி, இங்கே இருத்தலாகாது; எங்கேனும் செல்வோ' மென்று கூறினான் என்பதாம்

(வி - ரை.) சூதம் - மாமரம். மாமரங்கள் சூழ்ந்துள்ள சோலையில் வண்டுகள் தேனுண்பதற்குத் தம் கால்களால் கிண்ட, அதனால் மாம்பூ விரியுமெனப் பொருளுரைக்கப்பட்டது. பனிச்சு - உதறி; ஊத - வாயினால் காற்றெழுப்ப. அதனால் அங்குள்ள பல்வகை மரங்களின் பூக்கள் மலர என்று பொருள் கோடலுமாம். மாமரச் சோலையென்றுரைத்தலால் மாம்பூக்களைக் கிண்டுமென்று பொருள்கொள்ளுதலே சாலும். மாம்பூ சிற்றளவின; மலரென்றே தோன்றாத இயல்பினையுடைய இதழ்களே இல்லாதன. ஆயினும் அதினும் தேனுளவாகலின், தேன் உண்பதற்கு வண்டினம் கால்களால் கிண்டி அதன் இயற்கை சிதைய விரித்ததென்க.

பொன்மகள்: திருமகள் போன்றவள் என்று பொருள் கோடலுமாம்; 'நல்கூர்ந்தார் செல்வமகள்' என்பதுபோல. வீமமன்னனின் அரும்பெறற் புதல்வி என, அவள் தன்மையைக் கூறி நளன் அழைத்தான். போதும் - போவோம்: தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. (௬௨)

**நளன், நகரைவிட்டுப் புறப்பட்டுச் செல்லல்**

உ௬க. மென்கால் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகம் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால்
பொடியாடத் தேவியொடும் போயினான் அன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து.

(இ - ள்.) (இவ்வாறு கூறியபின் நளமன்னன்) மென்கால் சிறை அன்னம் - மெல்லிய கால்களையும் சிறகுகளையுமுடைய அன்னப்பறவையானது, வீற்றிருந்த மென்மலரை - தான் தங்கியிருந்த மென்மையான தாமரைப் பூவினை, புன் காகம் கொள்ள போனாற்போல் - சிறப்பற்ற காக்கையானது (தனக்கிருப்பிடமாக்கிப்) பற்றிக்கொள்ள அதை விட்டுச் சென்ற தன்மைபோல, கொடியானுக்கு அப்பார் கொடுத்து - தீயவனாகிய புட்கரனுக்குத் தனக்குரியதாயிருந்த உலக ஆட்சியை அளித்துவிட்டு, தன் கால் பொடி ஆட தேவியொடும் போயினான் - தன் கால்களில் புழுதியேறும்படி நடந்து தன் மனையாளோடு நகரைவிட்டு வெளியேறிச சென்றான்.

(க - ரு.) நளமன்னனானவன் தனக்குரியதாயிருந்த உலக ஆட்சியைப் புட்கரனுக்குக் கொடுத்துவிட்டுத் தன் கால்களில் புழுதியேற நடந்து தன் மனையாளாகிய தமயந்தியோடு நகரைவிட்டு வெளியேறிச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) மென்கால் சிறையன்னம் என்பது, அதன் சிறப்பும் இயற்கையழகும் தோன்ற நின்றது. இவ்வுவமையால் நளமன்னன் செங்கோல் முறையும் அறமுறை திறம்பா ஒழுக்கமும் பெறப்பட்டன. காகம் சிறப்பின்மையும் இயற்கையழகும் இன்றியிருப்பதை யொப்பப் புட்கரன் தீயொழுக்கமும் சிறப்பின்மையும் தோன்ற, 'புன்காகம் கொள்ள' என உவமத்தால் உணர்த்தினார். புன்மை - கீழ்மைத்தன்மை. புன்மையாவது,

[1]'கப்பி கடவதாக் காலைத்தன் வாய்ப்பெயினும்
குப்பை கிளைப்போவாக் கோழி.'

போன்ற கீழ்த்தன்மை. நளமன்னன், வேற்றுநாட்டு வேந்தரும், பகைமன்னர்களும், குறைவேண்டினாரும், முறைவேண்டினாரும், இரவலரும், ஏத்துவோரும், பிறருமாக வணங்கி நிற்கும் கால்களையுடையான்; எங்குச் செல்லினும் தேரினும் கரியினும் பரியினும்

1. நாலடியார், ௩௪௧.

செல்வோன் ; நடந்தேயறியாதோன் ; அத்தகையோனுடைய கால்கள் - எல்லோருக்கும் வணங்கச் சிறந்த கால்கள் இன்று மண்ணில் தோய, புழுதிகள் படிய நடந்தனவே என்னும் இரக்கக் குறிப்பு நயந்தோன்றத் தான்மட்டுமா? தன் இளமயிலனைய தேவியும் வழிக்கொண்டு தொடரச் சென்றானே என்னும் தன்மையும் தெரிய 'தன்கால் பொடியாடத் தேவியொடும் போயினான்' என்றார். 'அப்பார்' என்றார், பல்வகை வளங்களானும் [1]"நற்றவஞ் செய்வார்க்கிடம் தவஞ்செய்வார்க்கும் அஃதிட'மாக இருக்கும் நளமன்னனுடைய ஆளுகை நிலவிய நாடென்பதும் தோன்ற. அன்று, ஏ: அசைச் சொற்கள். போயினான் : இறந்தகால வினையாலணையும் பெயர். கொடியான் : குறிப்பு வினையாலணையும் பெயர் : கொடுமையென்னும் பண்படியாகப் பிறந்தது. (ருக)

ஊழின் வலிமையை யாரும் கடக்க இயலாதெனல்

உருஉ. கடப்பார் எவரே கடுவினையை வீமன்
மடப்பாவை தன்னுடனே மன்னன்—நடப்பான்
வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த
தனைத்தே விதியின் வலி.

(இ - ள்.) வீமன் மடப்பாவை உடனே மன்னன் - வீமராசனுடைய இளமைநலம் பொருந்திய புதல்வியாகிய தமயந்தியுடனே நள மன்னனானவன், வனத்தே நடப்பான் செலப் பணித்து - (நாடு நகர் செல்வம் எல்லாவற்றையும் இழந்து) காட்டிற்கு நடந்து செல்லும்படி ஏவி, மாயத்தால் சூழ்ந்தது - வஞ்சத்தால் வந்து வளைத்துக்கொண்டது, அனைத்தே - அவ்வளவுதானா?, விதியின் வலிகடு வினையை கடப்பார் எவர் - (ஆகையால்) ஊழ்வினையின் வலிமைமிக்க கொடுமையை உலகில் தப்பிச் செல்ல வல்லோர் யார்? (ஒருவருமே இல்லை என்றபடி.)

(க - து.) நளமன்னனைவன், தன் நாடு நகர் முதலிய எல்லாவற்றையும் இழந்து காட்டிற்குத் தமயந்தியுடன் நடந்துபோகும்படி ஊழ் வளைந்துகொண்டது. ஊழின் வலி அவ்வளவுதானா? (அளவற்றது) விதியின் வலிமைமிக்க கொடுமையை உலகில் தடுத்துச் செல்வோர் யார்? ஒருவருமில்லை என்பதாம்.

1. சீவகசிந். நாமகள்: எஎ.

(வி - ரை.) 'கடப்பார் எவரே கடுவினையை' என்று ஊழின் வலிமையை விளக்கினார். ஒருவருக்கு ஊழ்வினை உருத்துவந்து தன் செயலை ஊட்டுமென்பதை ஒருதலையாகக் கொண்டு கூறினார். என்னை?

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.'

எனவும்,

"'கண்ணும் இருவினையும் கண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகிதன் கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை.'

எனவும் வரும் ஆன்றோர் திருமொழிகளானும் அறிக.

இச் செய்யுள் ஆசிரியர் கூற்றாக அமைந்துள்ளது. நள மன்னன் செல்வ மேம்பாடும், அவன்றன் பொன்றாப் புகழும், அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் ஆகிய மன்னர்க்குரிய மாண்புகளும் அமைந்தும், ஊழால் எல்லாவற்றையும் இழந்து காலால் நடந்து செல்கின்றானே என்னும் கழிவிரக்கங்கொண்டு, 'கடப்பார் எவரே கடுவினையை' என்றும், 'அனைத்தே விதியின் வலி' என்றும் கூறி வருந்துகின்றார். பாவைபோல்வாளாகிய தமயந்தியைப் பாவையென்றது, உவமையாகுபெயர். உடன்: மூன்றாம் வேற்றுமை யுருபு, உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. நடப்பான்: நடந்து என்னும் பொருள்: முற்றெச்சம். மாயம் - வஞ்சம். சூழ்தல் - வளைதல், சுற்றுதல் (௩௪)

**நளன், காட்டுக்குச் செல்வதுகண்டு நகரமாந்தர் இரங்குதல்**

௨௩௩. ஆருயிரின் தாயே! அறத்தின் பெருந்தவமே!
பேரருளின் கண்ணே! பெருமானே!—பாரிடத்தை
யார்காக்கப் போவதுநீ யாங்கென்றார் தங்கண்ணின்
நீர்வார்த்துக் கால்கழுவா நின்று

(இ - ள்.) (நள மன்னன், நகரைவிட்டு வெளியேறுங்கால் நகரமக்கள் எல்லோரும் திரண்டு முன்கூடி நின்று வருந்தி) தம் கண்ணின் நீர் வார்த்து - தம் கண்களிலிருந்து அழுது நீரைக் கொட்டி, கால் கழுவாநின்று-கால்களில் அந்நீர் வழிந்தொழுகும்

1. திருக்குறள், ௩௮0, 2. சிலப். ௧௧: இறுதி வெண்பா.

படி தலைகுனிந்து நின்று (நளனை நோக்கி), ஆர்உயிரின் தாயே - (எங்களுடைய) அரிய உயிருக்குத் தாய் போன்றவனே, அறத்தின் பெருந்தவமே - தருமத்தினது சிறந்த தவப்பயனாக உள்ளானே, பேர் அருளின் கண்ணே-பெரிய அருளினது கண்போன்றவனே, பெருமானே - எங்கள் தலைவனே, பார்இடத்தை யார் காக்க போவது - இவ்வுலகமாகிய இடத்தை இனி எவர் பாதுகாப்பது, நீ யாங்கு என்றார் - நீ எங்கே செல்வது என்று அழுது கூறினார்கள்.

(க - து.) நளன் நகரைவிட்டு வெளிச்செல்லுங்கால் நகரமக்கள் திரண்டுவந்து அழுது கண்ணீர் கால்களில் வடியநின்று, 'ஆருயிரின் தாயே!' என்பது முதலியவாகச் சொல்லி அழுதரற்றி, 'இனி, இப் பரந்த இவ்வுலகை யார் பாதுகாப்பது? நீஎங்கே செல்கின்றாய்?' என்றுகூறி அழுது நின்றனர் என்பதாம்.

(வி - ரை.) ஆருயிர் - நிறைந்த உயிர்; பொதுப்பட உயிரென்றாலும் ஈண்டு மக்களுயிர்மேல் நின்றது: [1]'கண்ணென்ப வாழும் உயிர்க்கு' என்பதுபோல. தாயே உலகில் எல்லோரினும் சிறந்த அன்புடையாள்; அவள் தன் குழந்தைக்குப் பால்நினைந்து ஊட்டும் பண்புடையாள்; தாய்மையன்பு உயரியது; சிறந்தது; அது, கட்டற்ற பேரன்பு; அதற்கு ஒத்தது உலகில் ஒன்றில்லை. [2]'பால்நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து நீ பாவியேனுடைய, ஊனினை உருக்கி' என்றார், வாதவூர்ப் பெருமானும். அத்தாய் போன்று, இந் நளமன்னன், குடிகளுக்கு நல்லன செய்து அல்லன கடிந்து அறமுறை திறம்பாது செங்கோலாட்சி நடத்துவோனாகலான், குடிகள் அவன் பிரிவுக்கிரங்கித் 'தாயே' என்றனர்; அறம் - நல்லன. நளமன்னன் தன் வாழ்நாளில் அறம் ஒன்றையே கடைப்பிடியாகக் கொண்டொழுகினான்; அவ்வொழுக்கம் குடிமக்கள் மனக்கண்முன் அலையலையாகப் போதருகின்றன; அவர்கள் அதனை யெண்ணியெண்ணி விம்முதலுறுகின்றனர்; உளங்கலங்கி நிற்கின்றனர்; அறமே இவனைத் தவஞ் செய்து பெற்றது என, வியப்பு ஒருபாலும், துன்பம் ஒருபாலுமாக ஈர்க்க, 'அறத்தின் பெருந்தவமே' எனக் கூறினர். கம்பரும், தசரத மன்னன் அறமுறைக்கு ஒப்புரைக்குங்கால்,

[3]'தாயொக்கும் அன்பில் தவம் ஒக்கும் நலம்பயப்பில்.'

எனவும்,

---

1. திருக்குறள், ௩௯௨. 2. திருவாசகம், பிடித்த, ௯
3. கம்பரா. அரசியல்: ௪.

இலங்கைமாநகரின் செல்வப் பெருமிதத்தை அனுமான் கண்டு வியப்புறுவதாக அமைத்து,

[1]"ஒருவர், தரமடங்குவதன்றிது தவஞ்செய்த தவமால்.'

எனவும் விளக்கமாக உரைப்பதறிக. பேர்+அருள்—பேரருள் : பெரிய அருள், அஃதாவது மிக்க இரக்கம். அன்பு என்பதும் அருளென்பதும் ஒன்றே ஆயினும் அதன் தன்மைகளால் வேறுபடுகின்றது. அன்பு என்பது : தாய் தந்தை உடன்பிறப்பு சுற்றத்தார் நண்பர் முதலியோரிடத்துப் பற்று வைத்து ஒழுகும் மனநெகிழ்ச்சி. அருள் என்பது : தன்னோடு தொடர்புடையாரிடத்தன்றித் தொடர்பற்ற ஓரறிவுயிர்களான மரஞ் செடி கொடி முதல், மக்களினம்வரை யாதொருபயனும் கருதாது அன்புகொண்டு அவர்கட்குத் துன்பம் வந்த காலத்துப் பகைவரிடத்தும்கூட உளங்கசிந்து வருந்தும் உயரிய பண்பு. இச் செயலுக்கு இலக்காக முற்காலத்துத் திகழ்ந்த பெரியார் கிறித்துபெருமகனாராவர்; இவர் தம்மைச் சிலுவையிலறைந்து துன்புறுத்திய மிகக் கொடியருக்கும் ஆண்டவன்பால் பாவ மன்னிப்பு வேண்டினார். இக்காலத்து நம் கண்முன் தோன்றிமறைந்த பெரியார், மகாத்மா காந்தியடிகளாவர் இவர் தாம் வாழ்ந்த சபர்மதி ஆச்சிரமத்தில், பாம்பு முதலிய நச்சுயிர்களையும் கொல்லாது தம் தொண்டர்களைத் தடுத்த வரலாறும், மரங்களில் பல் துலக்குதற்குப் பற்கொம்பு ஒடிக்க வேண்டாவென்று கூறிய வரலாறும் உலகறிந்தன. இதனை வள்ளுவர் பெருமான், 'அருள் என்னும் அன்பீன் குழவி' எனப் பாராட்டெடுப்பர். இவர் அன்பைத் தாயென்றதும், அதில் முதிர்ந்த இரக்கப்பண்பாம் அருளை அதன் சேய் என்றதும் மிக மிக வியத்தற்குரிய காட்டாதலை அறிந்தின்புறற்பாலது. இவ் அன்பு படிப்படியாக வளர்ந்து முடிவில் அருளாக மலர்கின்றது. ஆகவே, இவ்வாறான அருட்குணம் படைத்தோன் எமமன்னன், குடிகள் நலத்தையே தன்னலமாகக் கருதினான்; உயிரெலாம் உறைவதோர் உடம்பாக இருந்து உலகைப் புரந்து வந்தானாதலின், அதைக் கருதிப் பேரருள் என்று மட்டும் கூறாது, அதன் கண்ணாகவும் உருவகஞ் செய்துரைத்தனர். கண்ணிற் சிறந்த உறுப்பு உடற்கண் வேறில்லை. [3],[4]"கண்ணிற் சிறந்த உறுப்பில்லை' என்று ஆன்றோர் கூறுவதறிக. தொடர்புடையாரிடத்தோ, அஃதில்லாரிடத்தோ அன்போ அருளோ பிறததற்குக் கண்ணாற் காண்பதே முதன்மை யாதலாலும், அக்கண்ணைப் படைத்தோனாக

1. கம்பராமா. ஊர்தேடு : கூ    2. திருக்குறள், எகூ.
3. நான்மணிக்கடிகை, ருகூ.    4. தஞ்சை...கோவை : அ.

நளன் இருத்தலான், அஃதுடையானைக் கண்ணென்று ஆகு பெயராகக் கொள்ளினும் இழுக்காது. என்னை? இவ்வாறருட்கண் இல்லா அரசரை [1]"மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்"ணெனவும், [2]"கண்ணிற் கணிகலகம் கண்ணோட்டம்' எனவும், இரக்கமற்றோனைக் 'கண்ணறையன்' எனவும் ஆன்றோர் பரக்கக் கூறுவன வும் கொண்டு நன்கு தெளிக.

சேக்கிழார் தாம் ஆக்கியருளிய தொண்டர் புராணத்துள், திருஞானசம்பந்தப் பெருமானும், திருநாவுக்கரசரும் ஒன்று கூடித் திருத்தோணிப்பெருமானை வணங்கச் சென்றபோது அவர் இருவர் தன்மையையும் அறிந்து ஒப்புரைக்குங்கால், பிள்ளை யாரை இறைவியின் பேரருளுக்கும், அரசரை இறைவனின் பேரருளுக்கும் ஒப்புரைத்து, அவ்விருவரையும் சைவப்'புண்ணியக் கண்' என்றருளியதும் இங்கே ஒத்த கருத்தினவாதல் வியத்தற் குரியதாகலான், அதனையும் இங்கே காண்பாம் :

[3]"அருட்பெருகு தனிக்கடலும் உலகுக்கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவுமோங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
புண்ணியக்கண் இரண்டெனவும் புவனமுய்ய
இருட்கடுவுண் டவரருளும் உலகமெல்லாம்
ஈன்றாள்தன் திருவருளும் எனவும்கூடித்
தெருட்கலைஞானக்கன்றும் அரசுஞ்சென்று
செஞ்சடைவானவர்கோயில் சேர்ந்தாரன்றே.'

என்பதாம். உலகத்தையெல்லாம் தன் ஒரு குடைக்கீழ் அடக்கி 'மாதர் அருகூட்டும் பைங்கிளியும் ஆடற்பருந்தும் ஒரு கூட்டில் வாழ'ப் (உ௬) புரந்தவனாகலாலும், மன்னர்க்கெல்லாம் மன்னனாக விளங்குபவனாதலாலும் பெருமான் - சிறந்தவன் என்பராய்ப் 'பெருமானே' என்றனர்.

[4]"பெருநிலம் முழுதாளும் பெருமகன் தலைவைத்த
ஒருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்.'

என, இளங்கோவடிகள் கோவலன் தந்தை மாசாத்துவானைப் பெருமகனென்றருளியதும் காண்க.

இவ்வாறு நளன் தன்மையைப் பாராட்டிப் பரிவுரைபகர்ந்து இரங்கிய நகர மாந்தர்க்கு அவன் பிரிவு ஒருபால் மனத்தை

---

1. முத்தொள். ௮0. 2. திருக்குறள், ௫௭௫.
3. பெரியபுராணம், திருநாவுக் : ௧௮௫.
4. சிலப். ௧ : ௩௧-௨.

வருத்த, 'இவன் இந்நகரை நீங்கிக் காட்டிற்குச் சென்றுவிட்டால் இனி, நாட்டை ஆள்வோர் எவர்? அவர் எத்தன்மையரா இருப்பரோ? அவரின் கீழ் எவ்வாறு வாழ்வது?' என்ற எண்ணங்கள் ஒருபால் தோன்றி வருத்தப், 'பாரிடத்தை யார் காக்கப்போவது; நீ யாங்கு?' என்றனர்.

> [1]'கொடுங்கோல் மன்னர் வாழும் நாட்டிற்
> கடும்புலி வாழும் காடு நன்று.'

ஆகலான், இவ்வாறு கூறினரென்க.

கண்ணீர் வார்த்துக் கால்கழுவுதல் என்பது, நளமன்னன்பாற் கொண்ட அன்புமிகுதியால் கண்களிலிருந்து தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய நின்ற அன்புப்பெருக்கினை என்க. (௫௫)

## இதுவும் அது

உ௩௪. வேலை கரைஇழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞாலம் முழுதும் நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை உரைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர்.

(இ - ள்.) (பின்னரும் நகரமக்கள் நளனை நோக்கி), வேலை கரை இழந்தால் - கடலானது தன் கரையைக் கடந்தாலும், வேத நெறி பிறழ்ந்தால் - மறைநூலிற் கூறிய வொழுக்கம் உலகில் மாறுபட்டாலும், ஞாலம் முழுதும் நடுஇழந்தால் - உலக மக்கள் யாவரும் தம் நடுநிலையான ஒழுக்கத்தைக் கைவிட்டு விட்டாலும், செங்கோலவர் சீலம்ஒழிவரோ - நீதிமன்னர்கள் தம் ஒழுக்கத்தினின்றும் வேறுபடுவரோ?, செம்மை உரை திறம்பாச் செய்கை அழிவரோ - உண்மைக்குப் புறம்பான செயல்களைச் செய்து கெடுவரோ? (கெடமாட்டார்கள் என்றபடி.)

(க - நு.) 'செங்கோல்முறை தவறாத மன்னர்கள் கடல் கரைபுரண்டு சென்றாலும், மறைநூல் ஒழுக்கம் மாறுபட்டாலும், உலகமக்கள் நடுநிலை மாறினாலும், தம் ஒழுக்கம், உண்மை முதலியவற்றைக் கைவிடமாட்டார்கள்' என்றார் என்பதாம்.

(வி - ரை.) கடல், கரையை உடைத்துக்கொண்டு உலகை அழித்தாலும், நெறிகளெல்லாம் மாறி, மக்கள் நடுநிலை பிறழ்ந்

1. வெற்றி வேற்கை, ௬௩.

தாலும் என்பது, மிக நெருக்கடி ஏற்பட்டு உலகநிலை மாறினும், நல்லவழியிலேயே ஆட்சிமுறை செலுத்துகின்ற அரசர்கள் தம் உயர்ந்த பண்புகளை விட்டுவிடமாட்டார்கள் என்பதைக் குறித்தது. அதுபோன்று, 'வேந்தே! நீ வில் வேல் ஆண்மையிற் சிறந்தவனாக இருந்தும், தான் முறைகெடலாகாதென்ற கருத்தினால், தான் சூதாடித் தோற்ற நாடு நகரத்தைப் புட்கரன்பால் விட்டுவிட்டுத் தன் மனைவி மக்களுடன் காடு நோக்கிப் புறப்படுவது தகா'தெனக் கூறி, அவன் செயலைப் பாராட்டி நகரமக்கள் கூறினரென்க. இழந்தால் பிறழ்ந்தால் இழந்தால் என்பவைகளின் ஈற்று உம்மைகள் தொக்கு நின்றன: செவ்வெண். ஓகாரங்கள் இரண்டும் ஒழியார் என்னும் பொருள் தருதலால் எதிர்மறைப்பொருள். செம்மை உரை - உண்மைப்பேச்சு. (நசு)

**நகரமாந்தர், நளனை மறுநாளாவது போகும்படி வேண்டல்**

உ௬௫. வடியேறு கூரிலைவேல் மன்னவோ உன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கோடிநகரில்
இன்றிருந்து நாளை எழுந்தருள்க என்றுரைத்தார்
வென்றிருந்த தோளான்தாள் வீழ்ந்து

(இ - ள்.) (அப்பாலும் நகரமக்கள்) வென்று இருந்த தோளான் தாள் வீழ்ந்து - (பகைவரை யெல்லாம்) வெற்றி கொண்டு (வீறுபெற்) றிருந்த தோள்களையுடைய நளமன்னனுடைய கால்களில் வீழ்ந்து (வணங்கி), வடி ஏறு கூர் இலைவேல் மன்னவோ - கூர்மைமிக்க இலைபோன்ற வடிவமைந்த வேற்படை தாங்கிய வேந்தனே!, உன் அடியேங்கட்கு - உன்னுடைய தொழும்படியவர்களாகிய எங்கட்கு, ஆதரவு தீர-ஆசை நீங்கும்படி, கொடிநகரில் - கொடி நுடங்குகின்ற இந் நகரத்தில், இன்று இருந்து நாளை எழுந்தருள்க என்று உரைத்தார் - இன்றைக்கு இங்கே யிருந்துவிட்டு நாளைக்குச் செல்வாயாக என்று கூறி நளனை வேண்டினார்கள்.

(க - து.) 'வேந்தே! எங்கட்கு உன்பாலுள்ள ஆசை நீங்கும்படி இக்கொடி பரக்கின்ற நகரத்தில் இன்றைக்கு இருந்துவிட்டு நாளைக்குச் செல்க' என்று நகரமக்கள் பணிந்து வேண்டினார்கள் என்பதாம்.

(வி - ரை.) வடி - கூர்மை. இலை வேல் - இலை போன்ற அகன்ற வடிவமைந்த வேல். ஆதரவு - ஆசை: விருப்பம். எழுந்து அருள்க - புறப்படுக என்னும் பொருள். வென்று இருந்த தோள் -

பகைவரை வென்று வீறு கொண்டிருக்கின்ற தோள். போர் வீரர்க்கு, [1]"நானிலம் அதனின் உண்டு போரென நவிலின் அச் சொல், தேனினும் இனிக்கும்' ஆதலின், இவ்வாறு கூறினர். [2]"போரென்ன வீங்கும் பொருப்பன்ன பொலன்கொள் திண் டோள்' என்றார் கம்பநாடரும். அடியேங்கள் : அடிமை என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்பு வினையாலணையும் தன்மைப் பன்மைப் பெயர். (ருஎ)

## நளன், 'இங்கு இருப்போமா?' என்று தமயந்தியை வினவல்

உருஅ. மன்றல்இளங் கோதை முகநோக்கி மாநகர்வாய
நின்றுருகு வார்கண்ணின் நீர்நோக்கி—இன்றிங்
கிருத்துமோ என்றான் இளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனத்தின் வைத்து.

(இ - ள்.) இளங்குதலை வாயாள் வருத்தமோ தன மனத்தின் வைத்து - (நளமன்னனானவன்) மெல்லிய சொற்களைப் பேசும் வாயையுடைய தமயந்தி கொண்ட துன்ப நிலையை (வெளிக்குக் காட்டாமல்) தன் மனத்துட்கொண்டு, மன்றல் இளங் கோதை முகமநோக்கி - மணம் தங்கிய மெல்லிய கூந்தலையுடைய தமயந்தியின் முகவாட்டத்தைப் பார்த்து, மா நகர்வாய் - பெரிய மாவிந்த நகரில், நின்று உருகுவார் கண்ணின் நீர் நோக்கி - நின்றுகொண்டு (தனக்காக) நைந்து உருகுகின்ற நகர மக்களின் கண்களிலிருந்து பெருக்கெடுத் தோடுகின்ற கண்ணீரையும் பார்த்து, இங்கு இன்று இருத்துமோ என்றான் - இவ்விடத்தில் இன்றைக்கு இருப்போமா ? என்று தமயந்தியை வினவினன்.

(க - து.) நளமன்னன் தமயந்தியின் வருத்தமுற்ற முகவாட்டத்தையும், நகரமக்கள் தனக்காக நெடுங் கண்ணீர் உகுத்து வருந்திநிற்கின்ற நிலையையும் கண்டு தமயந்தியை நோக்கி,'நாம் இன்றைக்கு இங்குஇருப்போமா?' என்று கேட்டான் என்பதாம்.

(வி - ரை) மன்றல் - மணம். இளமை - ஈண்டு மென்மையைக் குறித்தது, கூந்தலுக்கு மென்மையே சிறந்ததாகலின்.

1. கம்பராமா. கிங்கரர் வதை, ௬.
2. கம்பராமா. பூக்கொய், கஅ.

நளமன்னனுக்கு இருநிலை நோக்கிக் கவலை மிகுகின்றது. ஒன்று, தமயந்தி தன்னுடன் கொடிய கானத்தில் பஞ்சினும் மெல்லிய அடிகள் கன்ற நடந்து வரவேண்டுமே என; மற்றொன்று கன்றை விட்டு நீங்காப் பசுவைப்போலக் கதறிக்கொண்டு தொடர்ந்து வந்து நிற்கின்ற நகர மாந்தரின் துன்பநிலை. இவ்விருவகையினும் அவன், 'என்ன செய்வது?' என்ற கவலை மிக்கானாய், இவ்விரு வரையும், பார்த்து, 'நாம் இன்று இருப்போமா?' என்று தமயந்தியை வினவினான் என்க. இளங்குதலை வாயாள் வருத்த மென்பது, ஆறும் வேற்றுமைத் தொகை.

இருத்தும் - இருப்போம்: தன்மைப் பன்மை வினைமுற்று. தும்விகுதி, ஈண்டு எதிர்காலங் காட்டி நின்றது.

> [1]"றவ்வொ டுகர வும்மை நிகழ்பல்லவும்
> தவ்வொ டிறப்பும் எதிர்வும் டவ்வொடு
> கழிவும் கவ்வோ டெதிர்வும் மின்னேவல்
> வியங்கோள் இம்மார் எதிர்வும் பாந்தம்
> செலவொடு வரவும் செய்யுநிகழ் பெதிர்வும்
> எதிர்மறை மும்மையும் ஏற்கும் ஈங்கே.'

என்பது நன்னூல் விதியாகலான். (௬அ)

புட்கரமன்னன், 'நளனைக் கொண்டாடுவார்
கொலைக்குற்றப்படுவர்' எனப் பறையறைவித்தல்

௨௬௯. வண்டாடும் தார்நளனை மாநகரில் யாரேனும்
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று-தண்டா
முரசறைவாய் ஆங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசறியா வேந்தன் அழன்று.

(இ - ள்.) அரசு அறியா வேந்தன் - ஆட்சிமுறை தெரியாத புட்கர மன்னன், ஆங்கு முன்னே முனிந்து அழன்று - அந்நகரின் மக்கள்பால் மிக்க சினங்கொண்டு (பறையறைவோனை அழைத்து வரச் செய்து), மாநகரில் - (எனக்கே உரிமையான) இந்தப் பெரிய நகரத்தில், யாரேனும் - எத்தன்மையோர்களும், வண்டு ஆடும் தார் நளனை கொண்டாடினாரை - (தேன் உண்பதற்கு) வண்டுகள் பறந்து திரிகின்ற மலர்மாலையணிந்த நளனைப் பாராட்டுகின்றவர் களை, ஆங்கு - (கொண்டாடிய) அவ்விடத்திலேயே, கொல்

1. நன்னூல், ௧௪௫.

என்று - கொலைபுரிகவென மக்கட்கு அறிவித்து, தண்டா முரசு அறைவாய் என்றான் - இடைவிடாமல் பறை முழக்கிக் கூறுவாயாக என்று கட்டளையிட்டான்.

(க-து.) புட்கரமன்னன், முரசறைவோனை அழைத்து வரச் செய்து, "நகரமக்களில் எவராயிருப்பினும், 'நளனைக் கொண்டாடுபவர்களைக் கொல்க' என்று கூறிப் பறைமுழக்கி அறிவிப்பாயாக" என்று கட்டளையிட்டான் என்பதாம்.

(வி - ரை.) வண்டு ஆடுதல் - தேனுண்பதற்குப் பறந்து வண்டு திரிதல். அதையுடைய நளனென்பதனால், மக்களை அன்பால் இழுக்கப்பெற்ற நளனென்பது குறிப்பு. கொண்டாடுதல் - அன்பாகப் பாராட்டுதல். கொல் என்று - கொல்க என : கொல்க என்று கட்டளையிடுவது, நகரப் பொது மக்கட்கன்றி, அதை நிறைவேற்றும் கொலைக் காவலர்கட்கு என்றும் கொள்க. ஆங்கு - கொண்டாடப்படுகின்ற அந்த இடம். முன் : இடப்பொருள் குறித்த ஏழாம் வேற்றுமை உருபு. முனிந்து அழன்று என்பன, சினந்து என்னும் பொருளன : ஒருபொருட் பன்மொழி; மீமிசை ஞாயிறு, புனிற்றிளங்கன்று என்பனபோல. ஆங்கு என்பதை ஈரிடங்களிலும் கொண்டு பொருள் கூறப்பட்டது. (நக)

பறையொலிகேட்ட நளன் வருத்தமடைதல்

உ௬௮. அறையும் பறையரவம் கேட்டழிந்து நையும்
பிறைநுதலாள் பேதைமையை நோக்கி—முறுவலியா
இந்நகர்க்கீ தென்பொருட்டா வந்த தெனஉரைத்தான்
மன்னகற்றும் கூரிலைவேல் மன்.

(இ - ள்.) மன் அகற்றும் கூர் இலைவேல் மன் - பகைவேந்தர்களைப் போரில் ஓட்டுகின்ற கூர்மையான இலைவடிவமைந்த வேற்படையையுடைய நளமன்னன், அறையும் பறை அரவம் கேட்டு - (இவ்வாறு) அடிக்கப்படுகின்ற பறை அறிவிப்பின் ஒலி கேட்டு, அழிந்து நையும் - மனமுடைந்து வருந்துகின்ற, பிறை நுதலாள் பேதைமையை நோக்கி - மூன்றாம் பிறையை யொத்த சிறிய நெற்றியையுடைய தமயந்தியின் அறியாத் தன்மையை அறிந்து, முறுவலியா - புன்னகைகொண்டு, இந்நகர்க்கு - இந்த நகர மக்களுக்கு, ஈது என் பொருட்டா வந்தது என உரைத்தான் - இக் கொலைத் தண்டனை அறிவிப்புத் துன்பம் என் காரணமாக வந்ததென்று கூறினான்.

(க-து.) நளமன்னனானவன், 'நளன் தன்னைக் கொண்டாடினார் தம்மைக் கொல்' என்று கூறி அடிக்கப்பெற்ற முரசொலிகேட்டு, 'இந் நகர மாந்தர்க்கு என்னால் இக்கொடியநிலை நேர்ந்த'தென வருந்திக் கூறினான் என்பதாம்.

(வி · ரை.) பறையரவங் கேட்டதும் தமயந்தி மிக வருத்த முற்றாள். அதன் காரணத்தை உற்றுணராது வருந்தியதைப் 'பேதைமை' என்றார். பேதைமையாவது காரணந் தெரியாமல் வருந்துந் தன்மை. அதற்காக நளன் புன்சிரிப்புற்று, 'பெண்ணே இஃது ஏனைய எவராலும் நேர்ந்த பிழையன்று; என்னால் நிகழ்ந்ததே', என்று இரங்கிக் கூறினான் என்க. முறுவலித்தல்: ஒரு சொல், அழுக்காறு என்பது போல. முறுவலியா: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் மன் - மன்னர். அகற்றல்: வெளிப்போக்குதல். கூர் இலை: இருபெயரொட்டு. வேல்மன் - உருபும் பயனும் உடன்தொக்க தொகை மன்: அரசு, அமைச்சு, வேந்து என்பனபோல, உயர்திணைக்கண் வந்த பண்புப்பெயர்ச் சொல். (கூ0)

### நளன், மனைவி மக்களுடன் நகரைவிட்டு நீங்குதல்

உருகூ. தன்வாயின் மென்மொழியே தாங்கினான் ஓங்குநகர்ப்
பொன்வாயில் பின்னாகப் போயினான் — முன்னாளில்
பூமகளைப் பாரினொடும் புல்லினான் தன்மகனைக்
கோமகளைத் தேவியோடும் கொண்டு.

(இ - ள்.) முன் நாளில் பூமகளை பாரினொடும் புல்லினான் - இதற்கு முந்தின நாளில் மலர் மகளாகிய இலக்குமியை நிலமகளொடு தழுவிக் கொண்டிருந்தவனான நளமன்னன், தன் மகனை கோமகளை தேவியொடும் கொண்டு - தன் புதல்வனையும் அரசியாகிய தன் புதல்வியையும் தன் மனையாளாகிய தமயந்தியுடன் அழைத்துக்கொண்டு, தன் வாயில் மென் மொழியே தாங்கினான் - (அவ்வாறு கூடி அழுதுகொண்டு நின்ற நகர மக்கட்குத்) தன் வாயினால் இனிய சொற்கூறித் தேற்றுபவனாய், ஓங்கு நகர் பொன வாயில் - சிறப்பால் உயர்ந்த மாவிந்த மாநகரின் பொன்னாலான கோபுர வாசலானது, பின் ஆக போயினான் - பின்னே இருக்கும்படி கடந்து நடந்து சென்றான்.

(க - து.) நளமன்னனானவன், தன் மக்களையும் மனையாளையும் அழைத்துக்கொண்டு, தன் பொருட்டு வருந்திய நகரமக்கட்கு இனிய சொற்கள் பல கூறி, நகரின் பொன் வாசலை விட்டுக் கடந்து நடந்து சென்றான் என்பதாம்.

(வி - ரை.) 'தன் வாயில் மென் மொழியே தாங்கினான்' என்பது, நகர மாந்தர் அழுது தொடர்ந்துவரப் புட்கரன் சினங் கொண்டு, 'நளனைக் கொண்டாடினவர்களைக் கொல்' என்று கட்டளையிட்டுப் பறையறைவித்தவுடன், மிக மனக் கலக்கமுற்ற நகரமக்கட்குத் தானும் வருத்தமுறாமல் முகமலர்ச்சி காட்டி அவர்களிடம் மெல்லிய இனிய சொற்களைக் கூறித் தேறுதல் கூறிச் சென்றான் என்பதை 'மென் மொழியே தாங்கினான்' என்பதில், தாங்கினான்: முற்றெச்சம். பொன் வாயில்: பொன்னால் அமைக்கப்பட்ட நகரக் கதவு. பின்னாக - தனக்குப் பின்புறமாயிருக்கச் சென்றானென்று - விரைந்து சென்றதைக் குறித்ததாயிற்று. முன்னரும் 'சடைச் செந்நெல் பொன் விளைக்கும் தன்னாடு பின்னா' என்று கூறியதை நோக்குக. முன் நாள் - சூதாடுவதற்கு முந்தின காலம் என்னும் பொருளது. பொன்மணி முதலிய இயங்கியற் செல்வங்களும், பல்வகை நாடு களில் தன் ஆட்சி முறை நிலவ நின்றதாகலின், அந்நாடுகளின் உரிமையான நிலையியற் செல்வங்களும் பெற்றிருந்ததையும் குறிப்பிட்டுப் 'புல்லினான்' என்றார். கோமகள் - அரச குமாரி. பின் பிறந்த பெண்மகவு ஆகலானும், இச் செல்வமெல்லாம் இழக்கக் கொடுங்கானில் செல்லும் தன்மை இம் மகவுக்கும் வந்ததே என்னும் இரக்கக் குறிப்புத் தோன்றவும் 'கோமகள்' என்ற சொற்பெய்துரைத்தார். தேவி - மனையாள்: தெய்வத் தன்மையுடையாள். கொண்டான் குறிப்பறிவாளாய்த் தற்காத் துத் தற்கொண்டானைப் பேணித் தகை சான்ற சொற்காத்துக் கொடுங் கானஞ் செல்வதற்கு முன்னின்றாளாகலான், தமயந்தி யைத் 'தேவி' யென்ற சொல்லாற் குறித்துரைத்தனர். (௯௧)

நளன் பிரிந்த நகரம், பொலிவழிந்து இருந்ததெனல்

௨௬௦. கொற்றவன்பால் செல்வாரைக் கொல்வான் முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப—முற்றும்
இழவு படுமாபோல் இல்லங்கள் தோறும்
குழவிபால் உண்டிலவே கொண்டு.

(இ - ள்.) கொற்றவன்பால் செல்வாரை - நளமன்னனிடத் திற் போகும் மக்களை, கொல்வான் முரசு அறைந்து - கொல்லும் படி முரசறைந்து அறிவித்து, வெற்றியொடு புட்கரனும் வீற் றிருப்ப - வெற்றிமிக்கானாய்ப் புட்கர வேந்தன் (அரியணையில்) செருக்குடன் இருக்க, முற்றும் இழவுபடுமா போல் - அந்நகரம் முழுவதும் இழவுஉண்டான துன்பத்தைப்போல, இல்லங்கள் தோறும் - வீடுகளிலெல்லாம், குழவிகொண்டு பால் உண்டில -

இளங்குழந்தைகளும் ஏற்றுத் தம் தாய்மாரிடத்துப் பால் உண்ணமல் வருந்தின.

(க - ரை.) நளமன்னன்பால் செல்கின்றவர்களைக் கொல்லும்படி முரசறைந்து அறிவித்துப், புட்கரமன்னன் அரியணையில் செருக்குடன் இருக்க, நகரில் ஒவ்வொரு இல்லங்களிலும் இழவுபோல் துன்பம் மிகுந்து இருந்தன, குழந்தைகளும் பாலுண்ணாது வருந்தின என்பதாம்.

(வி - ரை.) கொல்வான் : செய்யின் என்னும் வாய்பாட்டு வினையெச்சம். புட்கரனும் என்பதில் உம்மை, அவன் சார்பாக உள்ளார்களும் எனக் குறித்தலால், இறந்தது தழீஇய எச்ச வும்மை. இழவுபடுதல் - இறந்தவர் குறித்து வருந்துதல். நளமன்னன் நகரைவிட்டு நீங்கியபோது நகரமக்களின் வீடுகள் தோறும் மகிழ்விழந்து தமக்குரிய உறவினர் இறந்தால் எவ்வளவு கவன்று துன்புறுவரோ? அவ்வளவு கவன்று உணவுண்ணாது கூட வருந்தினாராதலால், 'இழவுபடுமாபோல் இல்லங்கள் தோறும்' என்றார். குழந்தைகளின் தாய்மார், நளன் பிரிந்து நகரைவிட்டுச் செல்வதை எண்ணி யெண்ணி உணவு கொள்ளாமலும் நீர்கூட அருந்தாமலும் அழுதவண்ணமாய் இருந்தனராதலின், அவர்களிடம் பால் எவ்வாறு சுரக்கும்? எனவே, குழந்தைகட்குப் பால் இல்லாததால் பிள்ளை தாய் முகம் நோக்கி அழுதவண்ணமாக இருந்தன. அதனை ஆசிரியர் **தற்குறிப்பேற்ற அணி**யாகக் 'குழவி பால் உண்டில' என்றார்.

அயோத்தியேந்தல் நகரைவிட்டு நீங்கிக் காட்டுக்குச் செல்லுங்கால், அந்நகரமக்கள் வருந்தி நின்ற நிலையை அவர்கள் கூற்றாகக் கம்பர் காட்டும் ஓவியம் இன்புறற்பாலது; இதனோடு ஒத்த கருத்துடையது; அதனைப் படித்து இதனோடு ஒப்புணர்தற்கு ஈண்டுக் குறிக்கின்றாம் :

[1]"மண்செய்த பாவம் உளதென்பார் மாமலர்மேல்
பெண்செய்த பாவம் அதனிற் பெரிதென்பார்
புண்செய்த நெஞ்சை விதியென்பார் பூதலத்தோர்
கண்செய்த பாவம் கடலிற் பெரிதென்பார்."

என்பதாம். இப்பாடல் நகரமக்கள் அளவிறந்த அன்புகாட்டி,

[2]"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு."

1. கம்பரா மா. நகர் நீங்கு : கOரு. 2. திருக்குறள், ருசச.

என்னும் பொய்யாமொழியின் மெய்ம்மையை மெய்ப்பித்தவா றறிக. (கூஉ)

### மக்கள் இருவரும், தம்தந்தை தாயரை நோக்கிக் கூறுதல்

உசக. சந்தக் கழல்தா மரையும் சதங்கையணி
பைந்தளிரும் நோவப் பதைத்துருகி—எந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான தெல்லாம்
கடந்தோமா என்றார் கலுழ்ந்து.

(இ - ள்.) (இவ்வாறு நகரமக்கள் வருந்த நளன் தன் மனைவிமக்களுடன் வழிநடந்து சென்றான்; அப்போது மக்கள் இருவரும் நளனை நோக்கி) சந்தகழல் தாமரையும் - அழகு பொருந்திய வீரகண்டையை அணிந்த தாமரை மலர்போன்ற அடிகளும், சதங்கை அணி பைந்தளிரும் - பாதகிண்கிணியை அணிந்துள்ள கால்களும், நோவ பதைத்து உருகி - (வழிநடக்க லாற்றாது) வருந்தியதனால் உடல்துடித்து நைந்து, எம்தாய் - என் (அருமை) அன்னையே!, வடம்தோய் களிற்றாய் - கசசைக் கயிறு கழுத்தில் கொண்டிருக்கின்ற ஆண்யானையை உடைய தந்தையே! (என்று தாய் தந்தையரை அழைத்து), கலுழ்ந்து - அழுதுகொண்டு, வழி ஆனது எல்லாம் கடந்தோமோ என்றார் - நாம் கடந்துசெல்லவேண்டிய வழிகளையெல்லாம் தாண்டிவந்து விட்டோமா? என்று கேட்டார்கள்.

(க - ரை.) நளன் தன் மனைவிமக்களோடு காடு நோக்கி வழிநடந்து செல்லுங்கால் மக்கள் இருவரும், நடக்கலாற்றாமல் 'என் தாயே, தந்தையே' என்று அழைத்து, 'நாம் செல்லவேண்டிய வழிகளையெல்லாம் கடந்துவந்து விட்டோமா?' என வினவினார்கள் என்பதாம்.

(வி - ரை.) 'சந்தகழல் தாமரை' என்ற தொடரினால் வீரக்கழலணிவது ஆடவராதலால், இங்கே ஆண்மகவையும், 'சதங்கையணி பைந்தளிர்' என்ற தொடரினால், பாதகிண்கிணி அணிவது பெண்களாதலால், பெண் மகவையும் உணர்த்திற்று. தாமரைபோன்ற அடியைத் தாமரை என்றதும், தளிர்போன்ற அடியைத் தளிர் என்றதும் உவம ஆகுபெயர்கள். செம்மையும் மென்மையும் நோக்கி 'தாமரையும், பைந்தளிரும்' என்றார்.

மக்கள் இருவரும் முன்பின் நடந்தறியாதவர்; வெயிலின் கொடுமை கண்டறியாத செல்வக் குழந்தைகள். இவர்கள், சிறிது

தொலை நடந்துசென்றவுடன், 'வழிகளையெல்லாம் கடந்து நாம் வரவேண்டிய இடத்துக்கு வந்துவிட்டோமோ?' என வினவினார். அவர்தம் மெல்லிய இயற்கைத் தன்மை இதனால் விளக்கப் பெற்றது.

தாய் சொற்றாங்கிக் கானநோக்கித் தன் மனையாளும் தன் இளவல் இலக்குவனும் உடன்போத அயோத்தி ஏந்தல் சென்ற போது சனகன் மகள் சீதை, தன் காதற்கணவனை நோக்கித் தம் நகரவாயிலைவிட்டு வெளிவந்தவுடன் 'எது காடு? வந்துவிட்டோமா?' என வினவினளாகக் கம்பர் தரும் காவிய ஓவியமும் இதனோடு ஒத்த கருத்தாயிருத்தலால் கண்டு மகிழற்கு ஈங்கே தருகின்றோம்:

[1]"ஆண்டநகர் ஆரையொடு வாயிலக லாமுன்
யாண்டையது கான்?'

என்பது காண்க.

காவிரிப்பூம்பட்டினத்து வணிகர்குலத் தோன்றல் கோவலன், ஊழால் தன் மனைதுறந்து, கணிகையர் வழியொழுகித் தன் குலமுதல்வர்கள் ஈட்டித்தந்த குன்றனைய கொழுநிதியெல்லாம் தொலைத்துத் தன் மனைவி கண்ணகியாரொடு மதுரை நோக்கிச் சென்று ஆங்கே சிலம்பு விற்றுச் சென்றபொருளெல்லாம் மீட்டும் பெற எண்ணிக் கால்நடையாக வழிக்கொண்டு சென்ற போது, கண்ணகியார் தம் காதற்கணவன் கோவலனை நோக்கி, 'மதுரைக்கு வந்துவிட்டேமோ?' என்று வினவியதாக இளங் கோவடிகளார் காட்டும் செஞ்சொற் சித்திரக் கருத்தும் இவைகளை ஒத்த தன்மைத்தாகலின் அதனையும் காண்க:

[2]"இறங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
.................................................
மதுரை மூதூர் யாதென வினவ
ஆறைங் காதம்நம் அகல்நாட் டும்பர்
நாறைங் கூந்தல் நணித்து.'

எம் தாய் - எம்முடைய தாயே என்பதன்றி எம் தந்தையே என்று நளனையே விளித்தனராகக் கொள்ளலுமாம். வடம் - யானைக்கழுத்திடுகயிறு. களிற்றான்-களிற்றையுடையவன். இங்கே விளி வேற்றுமையால் ஆன், ஆயாயிற்று. வழியானது எல்லாம், என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அல்லது ஒருமை பன்மை மயக்கமாகக் கொள்க. (சுரு)

1. கம்பராமா. உருக்காட்டு: சுக. 2. சிலப். கO: நஅ-சாநு.

### நளன் வருந்துதல்

உசஉ. தூயதன் மக்கள் துயர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி—யாதும்
தெரியாது சித்திரமபோல் நின்றிட்டான் செம்மை
புரிவான் துயரால் புலர்ந்து.

(இ - ள்.) *செம்மை புரிவான் - நல்லறஞ் செய்பவனான நள வேந்தனானவன் (இவ்வாறு வினவின தன் மக்களுற்ற அளவு கடந்த வருத்தத்தினால் திகைத்து), தூய தன் மக்கள் துயர் நோக்கி - களங்கமற்றவரான தன் மக்களின் இத்துன்பத்தைக் கண்டு, சூழ்கின்ற மாயவிதியின் வலிநோக்கி - தொடர்ந்து வருகின்ற வஞ்ச வினையின் வலிமையையும் பார்த்து, புலர்ந்து யாதும் தெரியாது சித்திரம்போல் நின்றிட்டான் - (சொல்வது) ஒன்றுந் தோன்றாமல் வாட்டமுற்று எழுதுசித்திர உருவம் போல் அசைவற்று நின்றான்.*

(க - ரை.) *செம்மைபுரிபவனான நளமன்னன், இவ்வாறு வருந்துகின்ற தன் மக்களின் துன்பத்தையும் மாய விதியின் வன்கொடுமையையும் எண்ணி, ஒன்றுஞ் சொல்லலாற்றாமல் வருந்திச் சித்திரம்போல் அசைவற்று நின்றான் என்பதாம்.*

(வி - ரை.) *தூயமக்கள் - கள்ளங் கவடற்ற உள்ளத்தை யுடைய மக்கள். பிள்ளைமைத் தன்மையின் இயற்கையை உரைத்தவாறாம். துயர் - தாங்கலாற்றாத வருத்தம். துயரம் என்னும் பண்புப்பெயர், ஈறுகுறைந்து நின்றது. மாயவிதி - வஞ்சமுடைய ஊழ். வஞ்சமாவது, நுகர்வோனுக்குத் தெரியாதவாறு அதன் பயனைத் தந்து துன்புறுத்துதல். இதனை,*

[1]"*ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.*"

*என்னும் தேவர் திருமறையானும் அறிக. சித்திரம்போல் நிற்றல்: சுவரில் எழுதிய சித்திரம் ஆடாது அசையாது நிற்றல்போல் உணர்வழிந்திருத்தல். தன் மக்கள் அடைந்த துன்பம் - குழலினும் யாழினும் இனிய இக்குரல் - நடந்தறியா நற்புதல்வர்தம் கால்கள்-இவைகளைக் கேட்டும் கண்டும் வருந்தியதைச 'சித்திரம் போல் நின்றிட்டான்' என்றார். நின்றிட்டான்: தெரிநிலைவினை*

---

1. *திருக்குறள், ௩அ0.*

யாலணையும் பெயர், இதில் 'இடு' பகுதிப் பொருள்விகுதி. செம்மை - அறம். செம்மை : நேர்மை, சிறப்பு என்னும் பொரு ளுடையது. அஃது ஈண்டு நேர்மையுடைய அறத்தை உணர்த்த லால் குணவாகு பெயர். முன்னரும், 'சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை அறம்கிடப்ப' என்றார். புரிதல் - செய்தல். புரிதல் என்பதற்குத் திருக்குறளுரையில், 'எப்பொழுதுஞ் சொல்லுதல்' என்றார் பரிமேலழகர் (திருக் : ரு). அவ்வாறு கொண்டு அறத்தை இடைவிடாது நினைத்தும சொல்லியும் செய்பவன் என்று பொருள் கூறலும் பொருந்தும். (௲௪)

**நளன், தமயந்தியைக்குழந்தைகளுடன் குண்டினபுரத்துக்குப் போகும்படி கூறல்**

உ௪ரு. காதல் இருவரையும் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேதம் உடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்
வீமன் திருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன்
தாமம் புனைந்தாளைத் தான்.

(**இ - ள்.**) (நளவேந்தன்) விண்ணவர்முன் தாமம் புனைந் தாளை - தேவர்களுக் கெதிராகத் தனக்கு மணமாலை சூட்டிய தமயந்தியை (நோக்கி), மாதராய் - பெண்மணே, காதல் இருவரை யும் கொண்டு - இவ்வன்புமக்கள் இருவரையும் நாம் அழைத்துக் கொண்டு, கடும்சுரம் போக்கு ஏதம் உடைத்து - கொடிய பாலை நிலப் பெருவழியில் செல்லுதல் வருத்தத்தைத் தருவதாம் (ஆதலால்), நீ இவரைக் கொண்டு வீமன் திருநகர்க்கு மீள் என் றான் - நீ இம்மக்களை அழைத்துக்கொண்டு உன் தந்தையாகிய வீமனுடைய சிறந்த நகரத்துக்குச் செல்வாயாக என்று கூறினான்.

(**க - ரு.**) நளன் தமயந்தியை நோக்கி, 'பெண்மணே! மக்கள் இருவரையும் நாம் அழைத்துக்கொண்டு பாலை வனப் பெருவழியில் செல்வது, துன்பந்தருவதாகும்; எனவே, நீ இவர்களை அழைத்துக்கொண்டு உன் தந்தை ஊருக்குச் செல்வாயாக' என்று கூறினான் என்பதாம்.

(**வி - ரை.**) காதல் இருவர் என்னும் தொகைக் குறிப்பு ஒன்றொழி பொதுச்சொல், ஈண்டு நளன் புதல்வர்களைக்குறித்தது.

கடுஞ்சுரம் - கொடுமையாகிய பாலைநில வழி. பாலை நிலம் நீரும் நிழலும் அற்ற வெப்பமே குடிகொண்டிருக்கும் வன்னிலம்.

இதனை வள்ளுவர், 'வன்பால்' என்றார். இளங்கோவடிகள், சிலப்பதிகாரக் காவியத்தில், முல்லை நிலமும் குறிஞ்சி நிலமும் மழையின்மையால் அவைகளில் வளமை குன்றிச் செடியும் கொடியும் செழிப்பின்றித் தீய்ந்து மென்மைகெட்டு வன்மையாவதையே பாலை என்பர்.

> [1]'முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து
> நல்லியல் பிழந்து நடுங்குதுயர் உறுத்துப்
> பாலை என்பதோர் படிவங் கொள்ளும்.'

இதனைச் சேரமான் பெருமாளுயனார் தாம் அருளிய திருவாரூர் மும்மணிக் கோவைக்கண்,

> [2]'மழை, வரல்முறை யறியா வல்வெயிற் கானம்.'

எனவும்,

> [3]'நானிலம் வாய்க்கொண்டு நன்னீர் அறமென்று கோதுகொண்ட
> வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ் பாலை.'

என, நம்மாழ்வாரும் பிறசான்றோர்களும் இதன் கொடுமையைப் பலபட நவின்று, படிப்பாரக்குப் பாலையினும் இன்பங் காணுமாறு புனைந்துரைப்பர். அகப்பொருள் துறையில் 'உடன் போக்'கென ஒன்றமைத்து, அதுகாலைப் பாலை நிலக் கொடிய கானிற் செல்வதைப் பல கிளவிகளினால் அமைத்துக்கூறுவர்; அவைகளையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும் அவ்வந் நூல்களுட் காண்க. இவ்வளவு கொடுமையுடையதை உணர்ந்தே, 'போக்கு ஏதம்' என்றார். திருநகர்க்கு - அழகிய நகர்க்கு, அல்லது செல்வமிக்க நகர்கெனப் பொருள் கொள்க. இது வேற்றுமை மயக்கம். மீளுதல் - செல்லுதல் என்னும் பொருள்: இலக்கணை வழக்கு. தாமம் - மணமாலை. புனைந்தாள்: இறந்தகால வினையாலணையும் பெயர். தான்: அசைச் சொல். (௬௫)

### தமயந்தி, அதற்கு மறுமொழி கூறல்

௨௪௪. குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே
கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கால் மழைபொழியா நொந்து.

---

1. சிலப். ௧௧: ௬௪-௬௬. 2. திருவாரூர் மும். ௧௬.
3. திருவாய்மொழி, திருவிருத்தம், ௨௬.

(இ - ள்.) (இவ்வாறு மக்களை அழைத்துக்கொண்டு போகுமாறு கூறிய நளனைத் தமயந்தி நோக்கி,) கொற்றவனே - வெற்றியுடைய அரசே!, குற்றம் இல் காட்சி - குறைகாணலாகாத் தோற்றமும், குதலைவாய் - திருந்தாத இளஞ் சொற்கள் பேசும் வாயையும் உடைய, மைந்தரையும் பெற்றுக் கொளல் ஆம் - குழந்தைகளையும் (ஒருத்தி இழந்தால் மீண்டும் கணவன் இருந்தால்) பெறலாகும், குலமகளுக்கு கோ காதலனைப் பெறல் ஆமோ - கற்புடைய மனையாளுக்குச் சிறந்த கணவனை இழந்துவிட்டால் பின்னே எந்தக் காலத்தும் அவனைக்கூடி வாழ முடியுமோ?, என்று - என, நோக்கான் மழை பொழியா நொந்து உரைத்தாள் - கண்களினின்றும் மழைத்தாரைபோல் கண்ணீர் வடித்து அழுது கொண்டு நின்று வருந்திக் கூறினாள்.

(க - து.) இவ்வாறு கூறிய நளனுக்குத் தமயந்தியானவள், 'கொற்றவ! ஒருத்தி தன் மக்களை இழந்துவிட நேரின், மீண்டும் கணவனிருந்தால் பெறமுடியும்; ஒரு கற்புடையவளுக்குத் தன் கணவனை இழந்தால் மீண்டும் அவனை அடைந்து வாழுதல் கூடுமோ?' என்று அழுது கொண்டு கூறினாள் என்பதாம்.

(வி - ரை) குற்றம் இல் காட்சி - தோற்றத்தால் பார்த்தார்க்கு மகிழ்வூட்டும் இயற்கை. குழந்தைகளைக் காண்பவர் எவர்க்கும் கண்டவுடன் இன்ப அன்பு உண்டாமாதலின், அதனைக், 'குற்றமில் காட்சி' என்றார்.

[1]'செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச் சிறுவர்.'

என்றார் பிறரும். குதலை வாய் - மெல்லிய இனிய மழலை மொழி பேசுகின்ற வாய். குழந்தைகளின் திருந்தாத இளங் குதலைச் சொற்கள், பொதுவாகக் கேட்பவர் யாவர்க்கும் அதினும் சிறப்பாகத் தாய் தந்தையர்க்குப் பேரின்பம் பயப்பதாகலின், அதனைத் தாயின் வாய் வழியாகக் 'குதலைவாய் மைந்தரையும்' என்றார். மைந்தர் - வலிமையுடையார் என்னும் பொருளாய், ஆண் பெண் இருபகுப்புக் குழந்தைகளையும் குறித்தது: இதிலுள்ள உயர்வு சிறப்பும்மை பெறுதற் கருமையை விளக்கி நின்றது. இக் குதலை மொழிச் சிறப்பை,

[2]'குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.'

எனத் திருவள்ளுவரும்,

---

1 அகம். கூகூ. 2. திருக்குறள், கூகூ.

[1]"யாரொடும் கொள்ளா பொழுதொடும் புணரா
பொருளறி வாரா வாயினும் தந்தையர்க்கு
அருள்வந் தனவாற் புதல்வர்தம் மழலை.'

என, ஒளவையாரும்,

[2]'எழுத்தின் உறழாது வழுத்துபொருள் இன்றிக்
குறிப்பொடு படாஅது வெறித்தபுன் சொல்லே
ஆயினும் பயந்ததம் சேயவா சொலுமொழி
குழலினும் யாழினும் அழகிதாம்.'

எனப் பட்டினத்தடிகளும், பிறரும் கூறுவனகொண்டு தெளியப் பெறும்.

கோகாதலன் - சிறந்த கணவன். கற்புக்கடம் பூண்ட பொற்புடை மகளிரைக் 'குலமகளிர்' என்றார், கொண்டானிற் சிறந்த தெய்வம் பிறிதின்றெனவும், உயிரினும் சிறந்தானெனப் போற்றியொழுகும் தன்மையையுங் கொணடொழுகும் கடப்பாடுடைய பெண்மை நலங்கனிந்த தன்மையால். இவ்வாறே [3]'குலமகட்குத் தெய்வம் கொழுநனே' என்றும், [4]"குலமகட் கழகுதன் கொழுநனைப் பேணுதல்' என்றும் பிறர் கூறுவதறிக. பெறலாமோ என்பதிலுள்ள ஓகாரம் பெறமுடியாதெனப் பொருள் தருவதால் எதிர்மறை.

கணவனை இழந்த நங்கையர்க்கு உலகில் எந்தவகையான பற்றுக்கோடுமில்லை; அவர்கள் உலகில் வாழினும், வாழ்க்கை சுவையுடையதாகாது இதனைக் [5]'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்' என்று இளங்கோவடிகள் கண்ணகியார் கணவனை இழந்து தனித்து நின்ற நிலைகண்டு கோப்பெருந்தேவி கூறித் தன்னுயிர் கொண்டு தன் காதற் கணவன் உயிரைத் தேடிச் செல்வதுபோல் உடனுயிர் நீத்தவரலாறும் இதற்கு ஏற்ற கருத்தாதல் அறிக.

நோக்கால் மழை பொழிதல் - இடையறாது மழைநீர் சொரிவதுபோன்று, நீர்வார் கண்ணையுடையளாய் அழுது நிற்றல். நொந்து - மனம் கலங்கி : வினையெச்சம். பொழியா : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் : உரைத்தாள் என்னும் பெயர் வினைகொண்டு முடிந்தது.　(கசு)

1. புறம். கஉ.　2. திருக்கழுமல மும். உள.
3. நீதிநெறி விளக்கம், உகூ.　வெற்றிவேற்கை, கஉ.
5. சிலப். உ0 : அ0

நளன், தமயந்திக்கு விளக்கமாக மறுமொழி கூறல்

உசரு. கைதவந்தான் நீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தான் எத்தனையும் செய்தாலும்—மைதீர்
மகப்பெறா மானிடர்கள் வானவர்தம் ஊர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து.

(இ - ள்.) மாதராய் - அழகுடைய பெண்ணே!, கைதவந் தான் நீக்கி - (தமயந்தி இவ்வாறு சொல்லக்கேட்ட நளன் அவளை நோக்கி) வஞ்சத்தை ஒழித்து, கருத்தில் கறை அகற்றி - மனத்தில் குற்றஞ் சாராமல் நீக்கி, செய்தவம் எத்தனையும் செய்தாலும் - (மக்களாய்ப் பிறந்தோர்) செய்யக்கூடிய தவங்களை எவ்வளவோ செய்தாலுங்கூட, மைதீர் மகப்பெறா மானிடர்கள் - குற்றமற்ற புதல்வர்களைப் பெறாத மாந்தர்கள், போந்து வானவர்தம் ஊர்க்குப் புகப்பெறார் - சென்று தேவருலக இன்பத்தைப் பெற உட்செல்ல ஒண்ணாதவராவார்.

(க - து.) தமயந்தி இவ்வாறு கூறக்கேட்ட நளன், தமயந்தியை நோக்கி, 'பெண்ணே! குற்றங்களை யெல்லாம் நீக்கி எவ்வளவோ தவத்தைச் செய்தாலும் குற்றமற்ற புதல்வர்களைப் பெறாத மாந்தர்கள், வானுலக இன்பத்தைப் பெறமாட்டார்கள்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) கைதவம் - வஞ்சம். தவஞ்செய்வார், மன, மொழி, மெய்களால் தூய்மையுடையராய், மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஐம்புலன்களை அவித்து, மாரி நாளினும் வார்பனி நாளினும், நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும், கோடைக் காலத்தில் நெருப்பின் நடுவினின்று உடலைவருத்தி இருந்து, தாம் பெற நினைப்பதை முடித்தல் வேண்டும். அவ்வாறு தவஞ்செய் தாலும் பிள்ளைப் பேறற்றார்க்கு வானுலக இன்பம் கிட்டாது என்பது ஆன்றோர் முடிபு. அதை உட்கொண்டு, எவ்வளவோ முயன்று தவஞ்செய்யினும் மக்கட்பேறற்று மகிழ்வடைவதினும் சிறந்ததில்லை யென்ற குறிப்பால் 'வானவர்தம் ஊர்க்குப் புகப் பெறார்' என்றார்.

மைதீர் மகவு - குற்றமற்ற குழந்தைகள். அஃதாவது, அச்ச மூள்ளடக்கி அறிவுமிக்க மக்கள். இதனைத் திருவள்ளுவரும் 'அறிவறிந்த மக்கட் பேறு' என்பர்.

[1]"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகும் மறுவின் றெய்துப

1. அகம். சுசு.

செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்.'

என்று, பிறரும் இப்பிள்ளைமைப் பேறுற்ற பெருமக்களைப் பாராட்டிக் கூறினார். (சுஎ)

நளன், எல்லாவற்றினும் மக்கட்பேறே
சிறந்ததெனக் கூறல்

உசஅ. பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

(இ - ள்.) (பின்னும் நளமன்னவன் தமயந்தியை நோக்கி,) பொன்னுடையரேனும் புகழுடையரேனும் - பொருள்படைத்த செல்வர்களாக இருப்பினும் புகழின் மேம்பட்டவராக இருப்பினும், மற்று என் உடையரேனும - இன்னும் உலகில் அடைய வேண்டிய எந்தப் பெருஞ் செல்வத்தைப் பெற்றவர்களாக இருப்பினும், இன் அடிசில் புக்கு அளையும் தாமரைக்கை - சுவையுடையசோற்றுத் திரளுள் நுழைத்துக் கிண்டுகின்ற செந்தாமரை மலர்போன்ற கைகளையும், பூநாறும் செய்யவாய் - மலர்மணங் கமழுகின்ற சிவந்த வாயையும் உடைய, மக்களை இங்கு இல்லாதவர் - குழந்தைகளை இவ்வுலகில் பெற்றெடுக்காதவர்கள், உடையரோ - மேற்கூறிய எல்லாச் செல்வமும் இருந்தாலும் அதனாற் பெற்றபயன் பெற்றவர்களாக மாட்டார்கள்.

(க - ரை.) உலகில் பொருட்செல்வம் புகழ்ச் செல்வம் மற்ற எவ்வகைச் செல்வமும் பெற்றவரானாலும் பிள்ளைமைச் செல்வம் பெறாதார், அவைகளை யெல்லாம் பெற்ற பயனடைய மாட்டார்கள் என்பதாம்.

(வி - ரை.) பொன் - வாழ்க்கைக்கு வேண்டும் பொன், மணி, நெல் முதலிய செல்வங்கள். புகழ் - அப்பொருளால் கிட்டிய புகழ்ச்சியுரை. அது நல்லோன், அருளாளன், அன்பன், கொடையாளன் என, எல்லோராலும் உயர்த்துப்பேசும் நற்பெயருடைமை. இதனைத் திருவள்ளுவர்,

[1]" இரப்பார்க்கொன் றீவார்மேல் நிற்கும்புகழ்.'

1. திருக்குறள், உங உ.

என்றார். மக்கட் பேறுற்றார்க்கே செல்வமிருந்து சிறப்புறும். அஃதற்றார்க்கு எச்செல்வத்தாலும் பயனில்லை யெனப் பாண்டியன் அறிவுடை நம்பி யென்பார் கூறுகிறார்:

"[1] படைப்புப் பலபடைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும், இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத்தாம் வாழும் நாளே.'

இப் பாடலைப் படம்பிடித்ததுபோல் இச்செய்யுள் காட்டுகின்றது. (கூஅ)

இதுவும் அது

உசஎ. சொன்ன கலையின் துறையனைத்தும் தோய்ந்தாலும்
என்ன பயனுடைத்தாம் இன்முகத்து—முன்னம்
குறுகுதலைக் கிண்கிணிக்கால் கோமக்கள் பால்வாய்ச்
சிறுகுதலை கேளாச் செவி.

(இ - ள்.) இன்முகத்து முன்னம் குறுகுதலை - இனிய முகத்தையும் முன்பு நெருங்கி வருகின்றதான, கிண்கிணிகால் - சதங்கையணிந்த அடிகளையும் உடைய, கோமக்கள் - உயர்ந்த குழந்தைகளின், பால் வாய் சிறுகுதலை கேளா செவி - பால்மணங் கமழும் வாயில் தோன்றுகின்ற மெல்லிய மழலை மொழிகளையும் கேட்கும் பேறற்ற காதுகள், சொன்ன கலையின் துறை அனைத்தும் தோய்ந்தாலும் - (அறிஞர்களால் ஆய்ந்து உயர்வாகக்) கூறப்பெற்ற அறிவுநூற்கலைகளின் பகுதிகளை யெல்லாம் கற்றாலும், என்ன பயன் உடைத்து ஆம் - (அவைகளால் இச்சொற்களுக்கு மேலான இன்பப்பயன்) என்ன உள்ளதாக இருக்கும்? (இராது என்றபடி.)

(க - து.) நளமன்னன், மீண்டும் தமயந்தியை நோக்கி, 'சிறந்ததெனக் கூறப்பெற்ற கலை இன்பத்தில் ஒருவர் தோய்ந்தாலும், அவர்கள் குழந்தைகளின் குதலைமொழிகளின் இன்பத்துக்கு ஈடாகா' என்று கூறினான் என்பதாம்.

---

1. புறம். ககஅ.

(வி - ரை.) சொன்ன - அறிஞர்களால் ஆக்கப்பெற்ற எனப் பொருள் கொள்ளலுமாம். கலைத்துறை - கலைகளின் பல்வகைப் பகுதிகள். அவை, இயற்கைக் காட்சிகள்; வருணனைப் பகுதிகள்; அன்பு வீரம் மானம் கற்பு முதலியவற்றை எடுத்துரைப்பன. இவைகளுட் புகுந்து கற்க முயன்றால், கடற்காட்சி மலைக்காட்சி வானக்குமுறல் மாடகூடமாண்புகள் யாவுங் கண்டுகளிக்கலாம். அவ் வின்பமெல்லாம் இச்சிறு மதலையர் இளஞ்சொல் இன்பத்துக் கீடாகா என்பாராய் 'என்ன பயனுடைத்தாம்......சிறு குதலை கேளாச்செவி' என்றார். நம் நாட்டுக்கவி பாரதியாரும் 'கண்ணம்மா என்குழந்தை' என்னும் பாடற் பகுதியில்,

[1]" இன்பக் கதைகள் எல்லாம் உன்னைப்போல்
 ஏடுகள் சொல்வ துண்டோ
அன்பு தருவதிலே உனைநேர்
 ஆகுமோர் தெய்வ முண்டோ ?'

என்றதும் அறிக. கிண்கிணிக்கால் - சதங்கை யணிந்த அடிகள். [2]'கிண்கிணியார்ப்போவா......வருமென்னுயிர்' என்றார் பிறரும். நல்லனவற்றைக் கேளாத காது, பார்க்காத கண்கள், முகராத மூக்கு முதலியனவற்றால் பயனில்லை என்றார்.

இளங்கோவடிகளார் சிலப்பதிகார ஆய்ச்சியர்குரவையில் கண்ணபிரான் திருப்புகழைக் கேட்காத செவிகள் செவிகளல்ல என்ற கருத்து, மக்கள் இளஞ் சொற்கேளாத செவிகள் செவி யாகா வென்பதோடு ஒத்ததாக இருத்தலான் அதனையும் ஈண்டுக் குறிப்பாம்:

[3]" சோவரணும் போய்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே ?'

பால்வாய்—பாலையுடையவாய், கழி இளமை மிக்க புதல்வர் என்பதைக் குறித்தது. மங்கையர்க்கரசியார் 'திருஞான சம்பந்தர் இளங்குழந்தையாகவன்றோ இருக்கின்றார்; இவரால் சமணரை வெல்லுதல் இயலுமா' என்று அவர் இளம்பருவங் குறித்து வருந்தி நின்றபோது அவர் குறிப்பறிந்த ஞானசம்பந்த அடிகளார்,

---

1. பாரதியார் பாடல். 2. கலித்தொகை, அக.
3. சிலப். கஎ : படர்க்கைப்பரவல் : க.

[1]"பால்நல்வாயொரு பாலனீங்கிவன் என்று நீபரி
வெய்திடேல்.'

என்றருளியதூஉங் காண்க. (சுக)

தமயந்தி, நளனிடம் மறுமொழி கூறுதல்

உச௯. போற்றரிய செல்வம் புனல்நாட் டோடும் போகத்
தோற்றமையும் யாவர்க்கும் தோற்றதே—ஆற்றலாய்
எம்பதிக்கே போந்தருளு கென்றாள் எழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன்.

(இ - ள்.) எழில் செம்கமல பதிக்கு வீற்றிருந்த தேன் - அழகிய செந்தாமரை மலராகிய வீட்டில் எழுந்தருளியிருந்த திருமகளையொத்த தமயந்தியானவள் (நளமன்னனை நோக்கி), ஆற்றலாய் - பகைவரை வென்ற வீரமுடைய வேந்தே!, போற்ற அரிய செல்வம் புனல் நாட்டோடும் போக - காப்பதற் கருமையாகிய செல்வங்கள் நீர்வளமிக்க நிடத நாட்டோடு (புட்கரனுக்குப்) போகும்படியாக, தோற்றமையும் யாவர்க்கும் தோற்றதே - தோற்றுப் போய்விட்டமை மற்ற யாவருக்கும் தெரியாமல் இருப்பதற்காக, எம்பதிக்கே போந்து அருளுக என்றாள் - என் தந்தை நகர்க்கு வந்தருளுக என்று கூறினாள்.

(க - ரு.) 'வேந்தே! நம் செல்வங்களையெல்லாம் நிடத நாட்டோடு புட்கரனுக்குப் போகுமாறு சூதாடித் தோற்றதை, இனி மற்ற அரசர்கள் யாவரும் அறியாதவாறு என் தந்தை நகருக்குப் போவோம்' என்று தமயந்தி கூறினாள் என்பதாம.

(வி - ரை.) போற்ற அரிய செல்வம் - காத்தற்கு ஒண்ணாத அளவுமிக்க பெருஞ் செல்வம். காத்தற்கருமை யென்பதை,

[2]"ஈட்டலும் துன்பம் மற்றீட்டிய ஒண்பொருளைக்
காத்தலும் ஆங்கே கடுந்துன்பம்.'

என்றார் பிறரும்.

தமயந்தி கற்புநெறி கடவாத பெருமகளாதலான், இச் சூதாடுதலை மற்ற அரசர்கள் அறியின் தன் கணவன் பெருமைக்கு இழுக்கு வருமேயெனக் கருதினாள்; கருதியவள்

1. திருஞான...தேவாரம். உகஎ : க. 2. நாலடியார், உ௰.

தன் காதற்கொழுநன் ஏற்கும் முறையாக மென்மையாய் இனிமையாய்க் கூறக் கருதினளாய்த் 'தோற்றமையும் யாவர்க்கும் தோற்றாதே' எனத் தன் குடிப்பெருமை காக்க நின்ற தன்மை தோன்றக் கூறினாள் என்க. அவ்வாறு கூறியாள், ஒன்றைப் பிறர் ஏற்கச் சொல்லுங்கால் அவர் உளங்கொள்ளுமாறு ஆய்ந்தெடுத்துச் சொல்லுதல் வேண்டும்; அம்முறையில் இங்கே, தமயந்தி இச் செயல் பிறர் அறியக்கூடாது பிறர் அறியின் அதனால் தன் காதலற்குரிய பெருமை குறையுமெனக் கருதினாள்; பின்னர், அக்குறை கூறினும் நாம் அறியலாகாதிருத்தற்கு; மறைந்துறைதல் வேண்டும் என எண்ணினாளாய்ச் சொல்லை முறைப்படுத்து 'எம்பதிக்கே போந்தருளுக' எனக், கூறினாளென்க.

கோவலன், கண்ணகியாரோடு மதுரைக்குப் போந்திருந்த காலை, தான், 'சலம்புணர் கொள்கைச் சலதியோடாடிக், குலந்தரும் வான்பொருளை' யெல்லாம் தொலைத்ததற்கு வருந்தமுற்றுக் கண்ணகியாரிடம் கழறியபோது, அதற்குக் கண்ணகியார் கூறிய திறம் போற்றற்குரியது. அது :

> "அறவோர்க் களித்தலும் அந்தணர் ஓம்பலும்
> துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்
> விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை
> ........................
> போற்றா ஒழுக்கம் புரிந்தீர்.'[1]

என்றார். இக்கருத்தோடொப்ப அமைய ஈண்டுத் தமயந்தி மறுமொழி இறுத்தாளென்க. தமயந்தியின் உருவும் திருவும் உள்ளொளிப் பண்பும் உணர்த்த 'எழிற்கமலச் செம்பதிக்கே வீற்றிருந்த தேன்' என்றார். தேன்போன்ற மொழியுடையாளைத் தேனென்றது, ஆகுபெயர். (௭௦)

மீண்டும் தமயந்திக்கு நளன் கூறுதல்

௨௪௧ சினக்கதிர்வேல் கண்மடவாய் செல்வர்பாற்சென்றீ
எனக்கென்னும் இம்மாற்றங் கண்டாய்-தனக்குரிய
தானம் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானம் துடைப்பதோர் வாள்.

(இ - ள்.) சின கதிர்வேல் கண் மடவாய் - சினம்மிக்க ஒளி பொருந்திய வேலினை யொத்த கண்களையுடைய இளமைமிக்க

1. சிலப். கசு : ௭௧-௭௩.

தமயந்தியே!, செல்வர்பால் சென்று - பெரும் பொருள் மிக்காரிடம் ஒருவன்போய், எனக்கு ஈ என்னும் இம்மாற்றம் - (நான் எளியேன்) எனக்குப் (பொருள்) தருக என்று இரந்து கேட்கின்ற இ(த்தாழ்ந்த) சொல்லானது, தனக்கு உரிய தானம் துடைத்து - அவனுக்கு உரிமையான கொடைக்குணத்தை அழித்து, தருமத்தை வேர்பறித்து - அறத்தையும் அடியோடு களைந்து, மானம் துடைப்பது ஓர் வாள் - தன் பெருமையையும் கெடுக்க வல்லதாகிய வாட்படை போன்றதாகும்: (என்று நளன் கூறினான்.)

(க - து.) இவ்வாறு வேண்டிய தமயந்திக்கு, நள மன்னன் 'பெண்ணே! ஒருவன் செல்வரிடம்போய் நான் எளியவன்; எனக்குப் பொருள் தருக' என்று ஒன்றை வேண்டி நிற்கும் இச்சொல், அவன் பெருமைகளையெல்லாம் அழிக்கும் என்பதாம்.

(வி - ரை.) ஈ - தா என்னும் இரப்புரை. செல்வரிடம் போய் ஒருவன், 'எனக்கு ஒன்றைக் கொடு' என, இரந்துகேட்டல், அவன் பெருமையெல்லாம் அழிக்கும் பெற்றிமையுடையது; அச் சொல்லை, அவன் ஈகை, அறம், மானம் இவைகளையெல்லாம் அழிக்கின்ற வாளாக உருவகஞ்செய்து கூறினார். வாளென்பதற் கேற்ப மரமென்று கூறாததால் ஏக தேச உருவகம்.

தமயந்தி 'எம்நகர்க்கே போந்தருளுக' என வேண்டியதற்கு நளன், தன் உரிமையின்றிப் பிறர்வீட்டில் போய்த் தங்கி வாழ்வது, அறத்தோடும் மானத்தோடும் வாழ்வதாகக் கருதினானில்லை; அவ்வாறு வாழ்தல் இரந்து உயிர்வாழ்வாரோடு ஒத்ததாகக் கருதினான்; அதனை ஒருவன் பெருமையையெல்லாம் அழிக்கின்ற வாட்படையாகவும் எண்ணினான்; ஆகவே, கொண்ட இடத்தில் போய் ஒண்டி இருத்தல் கூடாதெனத் தமயந்திக்கு அறமுறையாக எடுத்துரைத்தான்.

இக் கருத்தோடொப்ப,

"[1]மிக்கவெஞ் சமத்திடை வெருவி ஓடினர்
ஒக்கல்துன் புறத்தனி உலகில் வாழுநர்
புக்குவேட் டகத்தினில் உண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென் றுரைக்கும் வையமே."

என, நளமன்னன் கூற்றாக நைடதத்தும் வருவதறிக.

1. நைடதம், நகர்நீங்: கஎ.

இரந்து உயிர்வாழ்தலை அறவே வெறுக்கின்றார் திருவள்ளுவர். அவர் 'ஒருவனை இரந்தே பொருள்பெற்று வாழவேண்டுமென்று படைப்புக் கடவுள் படைத்திருப்பானானால், அவனும் இவர்களைப்போல் சுற்றிச்சுற்றி அலைந்து திரிந்து இறுதியில் கெட்டொழிக' என்று வசைமொழியால் கடிந்து கூறுகின்றார்.

[1]"இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் பரந்து
கெடுக உலகியற்றி யான்.'

என்பதது.

பின்னரும், ஒரு நல்லபசு; அது தண்ணீரில்லாமல், அதைப் பெறுதற் கேலாநிலையில் நாவறண்டு சாகுந்தறுவாயில் கீழே விழுந்துகிடக்கின்றது; அதனை ஓர் இளகிய நெஞ்சத்தான் காண்கின்றான்; அவன் அயலான் ஒருவனைப் பார்த்து, 'ஐய! இவ் ஆ நீரில்லாமல் இறந்துபடும்போல் இருக்கின்றது; இதற்கு நீர் கொணர்ந்து ஊட்டுக; அஃது அறம்; ஒரு நல்லுயிரைக் காத்த பெருமை உமக்கு உண்டு' எனக் கெஞ்சி இரந்து வேண்டுகின்றான். அவன் வேண்டல் அறமாயினும் உயரியதாயினும் அவன் செய்யாது, பிறனை வேண்டுதல், 'இரப்புரை, அவ்வுரை அவன் நாவினுக்கும் இழுக்குத் தருவதாகு' மென்று, பசுக்காத்தல் ஆகிய அறத்துக்குககூட ஏற்றல் கூடாதென எடுத்தியம்புகின்றார், நம் செந்நாப்போதார்.

[2]"ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில்.'

என்பது அவ்வறவுரை.

இவ்வாறான இரந்து வாழ்தல் போன்றதே, தன்னுரிமையில்லாது பிறரிடம் போய் அவர் உதவியால் வாழ்வது என்று நளன் கூறினான் என்க. (எக)

இதுவும் அது

உருo. மன்னராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
இன்னமுதம் தேக்கி இருப்பாரேல்—சொன்ன
பெரும்பே டிகள்அலரேல் பித்தரே அன்றே
அரும்பேடை மானே அவர்.

(இ - ள்.) அரும் பேடை மானே - சிறந்த பெண்மானையொத்த பெண்ணே, மன்னர்ஆய் மன்னர் தமை அடைந்து

---

1, 2. திருக்குறள், கoசுஉ; கoசுசு.

வாழ்வு எய்தி - வேந்தர்களாய் இருந்தும் (தம்மை யொத்த வேறொரு) வேந்தரைச் சார்ந்து வாழ்ந்து, இன் அமுதம் தேக்கி இருப்பரேல் - நாவுக்கேற்ற சுவையுடைய உணவுகளை நன்கு உண்டுகொண்டு இருப்பாரேயானால், அவர் - அத்தன்மை யோர், சொன்ன பெரும்பேடிகள் - பெரியோர் கூறிய முழுப் பேடிகளே ஆவர், அலரேல் பித்தரே அன்றோ - அப்படியல்லர் என்றால் பித்தங்கொண்டவர்களே யாவர் அல்லவா ? (கூறு.)

(ந - து.) பின்னும் தமயந்தியை நோக்கி, 'பெண்ணே ! அரசர்களாயிருந்தும் தம்மையொத்த அரசர் களைச் சார்ந்து வயிறு வளர்த்து வாழ்வாரானால், அவர்களை அலி யென்னலாம்; அல்லது பித்தம் பிடித்தவர் என்று கூறலாம்' என்று நளன் கூறினான் என்பதாம்.

(வி - ரை.) இன் அமுதம் - இனிய அறுசுவையோடு கூடிய உணவு. அமுதம், அமிழ்தம் என்ற தமிழ்ச்சொல்லின் திரிபு. இது அமிர்தம், அமிழ்தம், அமுதம் எனப் பல்வகையாகத் திரிந்து வழங்கும். தேக்குதல் - நிரம்ப உண்ணல். பேடி - ஆண், பெண் தன்மையற்ற அலி. ஆண்மகனாக இருந்தால் வீரத்தோடு வாழ்தல் வேண்டும். வீரமின்றிப் பிறரைச் சார்ந்து உயிர் வாழ்வது, வாழ்க்கையாக மாட்டாதெென விலக்கினான். பேடிக ளானோர் ஆண் பெண் தன்மையற்ற நிலையினர். இதனைத் திரு வள்ளுவரும் 'பேடிகை வாளாண்மை' என்பர். பேடைமான் - பெட்டைமான். பேடை: பெண்பால் விலங்குகளின் பெயரைக் குறிக்கும் மரபுப் பெயர். மான் போன்றாளை மானென்றது ஆகு பெயர். (எஉ)

### தமயந்தி, குழந்தைகளை மட்டும் தன் தந்தை நகர்க்கு அனுப்புமாறு நளனை வேண்டுதல்

உருக. செங்கோலாய் உன்றன் திருவுள்ளம் ஈதாயின்
எங்கோன் விதர்ப்பன் எழில்நகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி அருளென்றாள் காதலருக்
கேதிலரைப்போல எடுத்து.

(இ - ள்.) (இவ்வாறு கூறக்கேட்ட தமயந்தியானவள்) காத லர்க்கு ஏதிலரைப்போல - தன் மக்களுக்கு அயலாரைப்போல (நின்று), செங்கோலாய் உன்தன் திருவுள்ளம் ஈது ஆயின் - நேர் மையான ஆட்சிமுறைகொண்ட வேந்தே !, உனது மனப்பாங்கு

இதுவானால், நம் கோல காதலரை - நம்முடைய அழகிய புதல்வர்கள் இருவரையும், எம் கோன் விதரப்பன் எழில் நகர்க்கே - என் தந்தையாகிய விதர்ப்பநாட்டு வேந்தனது அழகிய குண்டின புரத்துக்கு, எடுத்து போக்கி அருள் என்றாள் - அனுப்பியருளுக என்று விளக்கமாகக் கூறினாள்.

(க - ரு.) தமயந்தியானவள், 'மன்னவ! தங்கள் கருத்து இதுவானால், நம் மக்களையாவது விதர்ப்ப நகருக்கு அனுப்புவாயாக' என்றாள் என்பதாம்.

(வி - ரை.) செங்கோலாய்: விளி. தனக்கு ஒப்பாரு மிக்காரும் இன்றி நாட்டை ஆட்சி புரிந்தவனாதலால், இவ்வாறு முறைதிறம்பாதிருந்தும் ஊழால் இவவாறானதே; நாடு நகர் இழந்து வறியர்கள் நிலையெய்திய கருத்தை உட்கருத்தாகக் கொண்டு இவ்வாறு விளித்தார். ஒருவுள்ளம் - சிறந்த மனப்பாங்கு, இது: அண்மைச்சுட்டு. அது, ஈதென நீண்டது. காதலர் - அன்புடையார், உலகின்பங்களிலெல்லாம் சிறந்த இன்பத்துக்கு முதன்மையானவர் புதல்வர்களே ஆதலால், காதலர் என்னுஞ் சொல், ஈண்டுப் புதல்வர்களைக் குறித்தது. ஏதிலர், தனக்கும் அவர்கட்கும் பற்றுக்கோடற்ற தன்மையர். அன்புகளிலெல்லாம் சிறந்தது, தாய்மையன்பு, தாய்மைப்பண்பு, உயரியது; சிறந்தது; இதனையே ஆன்றோரும்,

"[1] ஈன்றாளோ டெண்ண கடவுளும் இல்.'

என்றார். இவ் அன்புநிலை நோக்கி மணிமொழிப் பெருமான் ஆண்டவனை [2]'அம்மையே அப்பா!' எனவும், பெண்ணியலார்க்கு நாணம் சிறந்த தென்பதைக் குறிக்க, [3]'தாயிற் சிறந்தன்று நாண் தையலார்க்கு' எனவும் அருளுவதும், தலைவி யொருத்தி தன் காதலன் அன்புநிலைக்கு 'அன்னைபோல இனிய கூறி' என்று கூறுவதாகச் சங்கப்புலவர் ஒருவர் சுட்டுவதும், தாய்மையின் உள்ளன்பைப் புலப்படுத்தும். இவ்வாறு அன்புடைத் தாயே அம்மக்களை காதலர்க் கெடுத்த தீதுகண்டுதன் தந்தை நகர்க்குத் தம்பினின்றும் பிரித்தனுப்பச சொல்கின்றாள் என்றால், ஊழ்வலியை என்னென்று கழறுவ தென்பாராய் 'ஏதிலரைப் போல' என்றார். ஏதிலரென்பது இப் பொருட்டாதலை,

"[4] ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை.'

---

1. நான்மணிக் கடிகை, ருசு. 2. திருவாசகம், பிடித்த : ங.
3. திருக்கோவையார் : உ0ச. 4. திருக்குறள், அ௩எ.

என்பதில் காண்க. எடுத்து-விளக்கி; உள்ள ஒருமையோடு என்னும் பொருள்பட நின்றது. (எரு)

நளன், தன்னோடு தொடர்ந்துவந்த அந்தணனிடம் விதர்ப்ப நகரில் மக்களைச் சேர்க்குமாறு கூறுதல்

உருஉ. பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்-தாதைக்குக்
காட்டுநீ என்றான் கலங்காத உள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து.

(இ-ள்.) கலங்காத உள்ளத்தை வாட்டும்நீர் கண்ணில் வைத்து-(நளன்) எதற்கும் கலக்கமடையாத தன் மனத்தை (மக்கட்பிரிவினால்) வருத்துவதனால் உண்டாகிய நீரைக் கண்ணிலே கொண்டு, பேதை பிரிய பிரியாத பேரன்பின்-(என்மனையாளாகிய) தமயந்தியானவள், (தம்மைப்) பிரிந்திருக்க மனமொவ்வியும் இவளைத் தாம் பிரிந்திருக்க மனமொவ்வாத பேரன்பினராகிய, காதலரை கொண்டுபோய்-இம் மைந்தர்களை அழைத்துக் கொண்டு சென்று, காதலி தன் தாதைக்கு காட்டு நீ என்றான்-இவளுடைய தந்தையாகிய வீம மன்னனுக்குத் தெரிவிப்பாயாக என்று (தம்முடன் தொடர்ந்து வந்த ஓரந்தணனிடம்) கூறினான்.

(க-ரு.) நளமன்னன், அடக்கமுடியாத வருத்தத்தைக் கொண்டு கண்ணில் நீர் ததும்ப, 'இம்மக்களை அழைத்துக்கொண்டு வீமன் நகர்க்குச் சென்று, இவள் தந்தைக்குத் தெரிவிப்பாயாக' என்று ஓர் அந்தணனிடம் கூறினான் என்பதாம்.

(வி-ரை.) பேதை-பெண்களுக்குரிய நால்வகைக் குணங்களுளொன்று இதனைக் 'கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை' என்பர் நச்சினார்க்கினியர். திருவள்ளுவர் காட்டும் 'ஏதங்கொண்டு ஊதியம் போகவிடல்' அல்ல. அதனையுடைய தமயந்தியைட், பேதை யென்றது ஆகுபெயர். பிரியப் பிரியாத-தன் காதலனாகிய நளனைவிட்டுப்பிரிய மனம் ஒவ்வாத என்பதாம். நளனோடு கானம் நண்ணவே தமயந்தி விரும்பினாள். அவள் தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி ஆதலால், தன் மக்களையுங் கூடப் பிரிந்து அவர்களைத் தன் தந்தை நகர்க்கு அனுப்ப முற்பட்டு நின்றாள். அவர்கள் இளஞ் சிறுவர் ஆதலால், தாயைத் தந்தையைப் பிரியவிட்டு விலக மனமற்று மாழ்கி அழுதனராக

லின், 'பிரியாத பேரன்பின் காதலர்' என்றார். காட்டுதல் - தெளித்துரைத்தல் என்னும் பொருளது. [1]"கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதுஇல்' என்பதில், இப்பொருள் தருதலை உணர்க. நள மன்னன் கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும் ஆற்றல் மிக்க போர்மறவன், அவன் தன் மக்கள் பிரிவுக்கு மனங்கலங்கிக் கண்ணீர் வார நின்றானாகலான், அவன் உள்ளத்தைக் 'கலங்காத' என்னும் அடைபுணர்த்துக் கூறினார். மக்கட்பேரன்பு வீரன் உள்ளத்தையும் வருத்திய தென்பாராய் 'வாட்டும் நீர் கண்ணிலே வைத்து' எனக் கண்ணின் நீரின்மேல் ஏற்றிக் கூறினார்.

அதிகமான் நெடுமானஞ்சியின் அஞ்சா ஆண்மைத்திறத்தைக் கூறுங்கால் ஒளவை மூதாட்டியார், அவன் போர்க்களத்துக்குச் சென்றான்; பகைவரோடு போர் செய்தான்; சினங்கொண்டு படைகளையெல்லாம் முறியடித்தான்; பகைவர் நாலுபக்கங் களிலும் சிதறியோடினர்; இவனுக்கு அதுகாலை ஓர் ஆண் மகவு பிறந்தது; அங்கு நின்றே தன் குழந்தையைக் காணச் சென்றான்; குழந்தை; அதினும் தன் குழந்தையென்றால் அக்குழந்தையன்பு கட்டற்றதாக அமையும். அந்த முறையில் தன் மகவைப் பார்த் தான்; மகிழ்ந்தான்; அவ்வாறு மகிழ்ந்து நின்றவன், தான் பகைவ ரோடு எதிர்த்து நின்ற சினம் தணிந்தானில்லை: அது, அவன் உள்ளத்தில் ஊடுருவி நின்றது; அதனை அடுத்தது காட்டும் பளிங்குபோல், அவன் முகங் காட்டிற்று; சினக்குறிப்பைச் செந் நிறம் மாறாதிருந்த அவன் கண்கள் அறிவித்தன; அதை, ஒளவை யார் கண்டார்; அவன் அமிழ்தினுமினிய தன் குழந்தையைக் கண்டும் சினம் மாறாதிருந்த அவன் வீரத்தைப் புகழ்ந்து,

'புதல்வனை நோக்கியும் சிவப்பா னவே.'

என்று பாராட்டினார். இதுபோன்றே நளமன்னன் வீரமுடையனாக இருந்தாலும் குழந்தையன்பு, மனத்திண்மையை ஊடறுத்து நின்றது, வாட்டுநீர்: முக்கால வினைத்தொகை. (எச)

**மக்கள், தம் பெற்றோர் முகத்தைப் நோக்கிக் கூறல்**

உ௭௫. தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை எதிர்நோக்கி—எந்தம்மை
வேறாகப் போக்குதிரோ என்றார் விழிவழியே
ஆறாகக் கண்ணீர் அழுது.

---

1. சிலப். உ0 : அ0.

(இ - ள்.) (நளமன்னன் மக்கள் இருவரும்) தந்தை திரு முகத்தை நோக்கி - தம் தந்தையாகிய நளனின் அழகிய முகத்தைப் பார்த்து, தமை பயந்தாள் இந்து முகத்தை எதிர்நோக்கி - தம்மைப் பெற்ற தாயாகிய தமயந்தியின் நிறைநிலவை யொத்த முகத்தை நேரிற் பார்த்து, விழிவழியே கண்ணீர் ஆறுஆக அழுது - கண்களின் வழியாகக் கண்ணீரானது ஆறுபோல் பெருக்கெடுத்தோட அழுதுகொண்டு, எம் தம்மை-எங்களை (நீங்கள் இருவரும்), வேறுஆக போக்குதிரோ என்றார் - உம்மிடம் விட்டு வேற்றிடம் செல்ல அனுப்பிவிடுகின்றீர்களோ என்று கேட்டார்கள்.

(க - ரு.) மக்கள் இருவரும் தம் தந்தை நளனையும் தம் தாய் தமயந்தியையும் பார்த்துக் கண்ணீர் ஆறுபோல் பெருக்கெடுத்தோட அழுதுகொண்டு, 'எங்களை உங்களை விட்டு வேறு இடம் செல்லுமாறு அனுப்புகின்றீர்களோ?' என்று கேட்டார்கள் என்பதாம்.

(வி - ரை.) நளமன்னன் திருமுகத்தையும், தமயந்தியின் இந்து முகத்தையும் பார்த்தல், பின்னல் இவர்களை எக்கால் காண்போம் என்ற ஏக்கத்தால் என்க. பயந்தாள் - பெற்றவள் ஈன்றவள் : வினையாலணையும் பெயர். குழந்தைகள் எக்காலும் தம் தாய் தந்தையரிடமே வாழ விரும்புவர்; அது, குழந்தை மனப்பான்மையுமாம். அக் குழந்தை மனமாண்பின் திறத்தை - அவர்கள் ஏக்க நிலையை - 'எம் தம்மை வேருகப் போக்குதிரோ?' என்னும் அவர் வினவுரையால் விளக்கினர். பிரிவால் தோன்றிய ஏக்கத்தால் கண்ணீர் ஆறுபோல் பெருகியோடிற்று. இதனை ஆசிரியர், 'ஆருகக் கண்ணீர் அழுது' என்ருர். அழுது: இறந்த கால வினையெச்சம்; என்ரு ரென்னும் பெயர்வினைகொண்டு முடிந்தது. (எ௬)

தமயந்தி, தன் மக்களை யெடுத்துத் தழுவிக்கொள்ளுதல்

உருச. அஞ்சனந்தோய் கண்ணில் அருவிநீர் ஆங்கவர்க்கு
மஞ்சனநீர் ஆக வழிந்தோட—நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்ருள் புலர்ந்து.

(இ - ள்.) வல்லிவிடா மெல் இடையாள் - பூங்கொடி போன்ற மெல்லிய கொடிபோன்ற இடையையுடையவளாகிய தமயந்தியானவள், அஞ்சனம் தோய் கண்ணில் அருவி நீர் - மை தீட்டிய கண்களிலிருந்து பெருகியோடுகின்ற அருவிபோன்ற

கண்ணீரானது, ஆங்கு அவர்க்கு மஞ்சனம் நீர் ஆக வழிந்து ஓட - அவ்விடத்தே தன் மக்களுக்குக் குளிப்பாட்டுகின்ற நீர்போலப் பெருக்கெடுத்தோட, நெஞ்சு உருகி - உள்ளங்கசிந்து, மக்களைத் தன் மார்போடும் புலர்ந்து புல்லிவிடா நின்றாள் - தன் பிள்ளைகளை மார்போடணைத்துத் தழுவிக்கொண்டு வாட்டத்துடன் நிற்பாளாயினள்.

(க - து.) தமயந்தியானவள் தன் கண்களில் அருவி நீர்போல் கண்ணீர் பெருகியோட, உள்ளங்கசிந்த வாட்டமுற்று மார்போடணைத்துத் தழுவிக்கொண்டு நின்றாள் என்பதாம்.

(வி - ரை.) அஞ்சனம் - மை. அது படிந்த மையெழுதிய கண்களை 'அஞ்சனம் தோய் கண்' என்றார். அருவி நீர் என்றது, அருவிபோன்ற நீர் என விரிதலால் உவமைத்தொகை. மஞ்சனம்- நீராட்டுதல் தன் தாய்மையன்பு தோன்றப் பிரிவென்னும் துயர் தாங்கலாற்றாது நெஞ்சு நெக்குருகத், தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய அழுது, மக்களை யெடுத்துத் தழுவி நின்ற துயரின் கண்கொள்ளாக் காட்சியைப் 'புல்லிவிடாப் புலர்ந்து நின்றாள்' என்றார். புல்லிவிடா நிற்றல் தழுவிக்கொண்டு நிற்றல். (எசு)

மக்களை, வீமன் நகர்க்கு அந்தணன் கொண்டுசெல்லுதல்

உருரு. இருவர் உயிரும் இருகையான் வாங்கி
ஒருவன்கொண் டேகுவான் ஒத்து—அருமறையோன்
கோமைந்த னோடிளைய கோதையைக்கொண் டேகினான்
வீமன் நகர்க்கே விரைந்து.

(இ - ள்.) அருமறையோன் - அரிய மறைப்பொருளுணர்ந்த அந்தணன், இருவர் உயிரும் இருகையால் வாங்கி - (நளன் தமயந்தியாகிய) இரண்டு பெயர்களின் உயிர்களையும் தன் இரண்டு கைகளினாலும் பிடித்துக்கொண்டு, ஏகுவான் ஒருவன் ஒத்து - செல்கின்ற ஒருவனைப்போல, கோ மைந்தனோடு இளைய கோதையை கொண்டு - அரசிளம் புதல்வனோடு அவனுக்கிளையளாகிய அவன் தங்கையையும் கூட்டிக்கொண்டு, வீமன் நகர்க்கே விரைந்து ஏகினான் - வீமராசனின் நகராகிய குண்டினபுரத்துக்கு விரைவில் போய்ச் சேர்ந்தான்.

(க - து.) அந்தணனானவன், நளன் தமயந்தி இருவர்களின் உயிரையே வாங்கிக்கொண்டு செல்வான்போல,

இரு மக்களையும் அழைத்துக்கொண்டு விரைவில் குண்டின புரம் போய்ச் சேர்ந்தான் என்பதாம்.

(வி ரை.) இருவர் உயிரும் என்பதிலுள்ள உம்மை, இனைத்தென்றறிய நின்ற பொருளில் வருதலால், முற்றும்மை. குழந்தைகளை மறையோன் கூட்டிச் செல்லுங்கால் அவ் விருவர் தம் அன்பால் மக்கள்மேல் மனஞ் செல்ல உருகி உருகி மன முடைந்து நின்றது, அவர்தம் உயிரேபோவதுபோல் செயலற்று இருந்தது. அதனை ஆசிரியர், 'இருவர் ..........ஒத்' தென்ற தொடரால் விளக்கினார். குழந்தைகளை இருகையால் தூக்கி வைத்ததை 'நளன் தமயந்தி இருவர் தம் உயிர்களையே அவன் இரு கைகளாலும் எடுத்துக்கொண்டு செல்வதுபோன்ற' தெனக் குறித்தார். கோமைந்தன் - அரசிளங்குமரன். இளையகோதை - அவனுக்கு இளையாள். மறையோன் : குறிப்பு வினைப்பெயர் ஏகினான் - சென்றான் : இறந்தகால வினையாலணையும் பெயா. வீமன்நகர் - வீமனுடைய நகரம் : குண்டினபுரம் : ஆறாம் வேற்று மைத் தொகை. நகர்க்கு என்பதில் நான்காம் வேற்றுமைக் குவ வுருபு, நேர்ச்சிப்பொருளில் வந்தது. என்னை?

"[1] நான்கா வதற்குரு பாகுங் குவ்வே
கொடைபகை நேர்ச்சி தகவது வாதல்
பொருட்டு முறை யாதியின் இதற்கிதெனல் பொருளே."

எனபது நன்னூல் விதியாகலான், அவ்விதிமுறைப்படி இங்கே நேர்ச்சிப் பொருள் தருதல் காண்க.

'இருவா உயிரை இரு கையால் வாங்கி ஒருவன் கொண் டேகுவான் ஒத்து' என்றமையால், நளன் தமயந்தி இருவர்தம் உயிர்களாகிய முறையே புதல்வன், புதல்வியை எடுத்துச செல் கின்ற இயமன்போலென்ற நயமும் தோன்ற அமைத்தார், நம் புலவர் புகழேந்தியார். (எஎ)

**நளன், தன் மக்கட் பிரிவுக்கு வருந்தி நிற்றல்**

உருக. **காத லவர்மேலே கண்ணோட விண்ணோடும்**
**ஊதை எனநின் றுயிர்ப்போட—யாதும்**
**உரையாடா துள்ளம் ஒடுங்கினான் வண்டு**
**விரையாடும் தாரான் மெலிந்து.**

1. நன்னூல், ௨அகூ.

(இ - ள்.) வண்டு விரை ஆடும் தாரான் - வண்டுகள் மணமுள்ள தேனிற் குளித்துக் களிக்கின்ற மலர்மாலை யணிந்த நளமன்னனானவன், மெலிந்து - (தன் மக்கட் பிரிவினால்) மெலிவடைந்து, காதலவர் மேலே கண் ஓட - தன் அன்பு மக்கள் மீது தன் கண்களின் பார்வை செல்ல, விண் ஓடும் ஊதை என - வானில் செல்கின்ற காற்றென்னும்படி, நின்று உயிர்ப்பு ஓட - மூச்சுத்திணறிப் பெருமூச்செறிய, யாதும் உரை ஆடாது உள்ளம் ஒடுங்கினான் - யாதும் கூறாமல் நெஞ்சம் ஒடுக்கமுற்றுச் சோர்ந்து நின்றான்.

(க - ரை.) நளமன்னனானவன், குழந்தைகளின் பிரிவுக்கு வாட்டமடைந்து, தன் மக்கள்மீது தன் கட்பார்வை செல்ல, காற்றுப்போல் பெருமூச்செறிந்து ஒன்றும் பேசாமல் மனம் ஒடுங்கி நின்றான் என்பதாம்,

(வி - ரை.) நளமன்னன் மக்களைக் குறிப்பிடுகின்ற இடங்களிலெல்லாம் 'காதலவர்' என்றே குறிக்கின்றார். உண்ணு நீரினும் உயிரினும் அவர்களையே உவந்து போற்றிக் காத்த பேரன்புடைமையால் என்க. தன் மக்கள் தன்னைவிட்டுச் செல்லுங்கால் அவரையே பார்த்தவண்ணமாக இருந்தான்; மற்றக் காது முதலிய புலன்களும் அவ்வவைகளின் செயற்பாடு ஒடுங்கின; எனவே, எழுது சித்திரம்போல் பெருமூசசுவிட்டுக் கொண்டு நின்றான். ஒன்றில் பற்றி மற்றவற்றில் பற்றின்றி இருப்பார்க்குப் பிற வெளிநிகழ்ச்சிகள் தோன்றா. அஃது உலகியல்பு. அதினும் மக்களன்பு, மற்ற எல்லா அன்பினும் தலை சிறந்தது; முற்றத்துறந்து உலகப்பற்றெல்லாம் நீத்த உரவோராகிய முனிவர்கட்கும் பிள்ளைமைப்பற்று நீக்க வொண்ணாதது. எனவே, நளமன்னன் பிள்ளைமை அன்பு பெரிதும் உடையான் என்பதில் வியப்பென்ன உளது? என்பாராய், 'உரையாடாது உள்ளம் ஒடுங்கினான்' என்றார். இவ்வாறே நைடத நூலாரும்,

"[1]தொடர்ந்த மும்மலம் முருக்கிவெம் பவக்கடல் தொலையக்
கடந்து ளோர்களும் கடப்பரோ மக்கள்மேற் காதல்.'

என்பதும் அறிக.

இறைவன் திருநடங்காணப் போந்த நம்பியாரூரர், தில்லையில் ஆண்டவன் திருநடக் காட்சியைக் கண்டு தலையன்பு தலைக்கொள்ள, அன்பே உருவாய் நின்ற நிகழ்ச்சியைச் சேக்கிழார் பெருமான்,

1. நைடதம், நகர் நீங்கு : கஎ.

"[1] ஐந்துபே ரறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.'

இதில், நம்பியாரூரர் ஆண்டவன் திருநடங்கண்டு வணங்கி நின்ற காலை, அன்பு பெருக்கெடுக்க இறைவன் திருநடக்காட்சியைக் கண்டவண்ணமே கண்டு அசைவற்று நின்றார்; புறக் கருவிகளாகிய கை கால்கள் முதலிய உறுப்புக்கள், அசைவற்றுநிற்கவே கண் காது மூக்கு முதலிய பொறிகள் வாயிலாக நுகர்வுகொள்ளுகின்ற அகக் கருவிகளாகிய புலன்களும் ஒடுங்கின. இவை ஒடுங்கவே, நுண்ணுடம்புகளான மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்னும் நான்கும் ஒடுங்கி இன்பவடிவினனான ஆண்டவன் திருநடக் காட்சியிலேயே ஈடுபட்டு நின்றன. ஆண்டவன் திருவுருவைப் பார்த்த வண்ணமாகவே நின்றபோது, மற்றப் புலன்கள் செயற்பாடொழிந்து நிற்கக் கட்புலன்மட்டும் பார்வை குன்றாது இருந்தமையால், 'கண்களே கொள்ள' என்றுரைத்தார், ஆண்டவன் நினைவன்றிப் பிறிது நினைவு இன்றி அந்நினைவு வாயிலாகப் பிறநிகழ்ச்சிகள் எவையும் தோன்றாவாறு இறைநினைவொன்றையே பற்றி நின்றனராதலால், 'சிந்தையே ஆக' என்று வைப்பு முறையாக வைத்துரைத்தார்.

இங்கே, இத்தன்மைபோல் மக்கள் மேல்கொண்ட பேரன்பு எல்லாப் புலன்களையும் ஒடுக்க உள்ளங்கலங்கி யாதும் அறியாது நளன் நின்றானென்க. (எஅ)

**நளன், தமயந்தியுடன் சென்று பாலைநிலத்தைக் காண்டல்**

உருஎ. **சேலுற்ற வாவித் திருநாடு பின்னொழியக்
காலிற்போய்த் தேவியோடும் கண்ணுற்றான்-ஞாலஞ்சேர்
கள்ளிவே கத்தரவின் கண்மணிகள் தாம்பொடியாத்
துள்ளிவே கின்ற சுரம்.**

(இ - ள்.) சேல் உற்ற வாவி திருநாடு பின் ஒழிய-கெண்டைமீன்கள் இருக்கின்ற தடாகங்களுள் அழகிய நீர்வளமிக்க

1. பெரியபுரா. தடுத்தாட் : கo௬.

தன் நிடதநாடு தன் பின்னே நிற்க, தேவியொடும் காலின் போய் - தன் மனையாளாகிய தமயந்தியுடன் கால்நடையாக நடந்து சென்று போய், ஞாலம் சேர் கள்ளி வேகத்து - மண்ணில் சார்ந்து இருக்கின்ற கள்ளி மரங்களின் (வெப்பக்) கடுமையினால், அரவின்கண் மணிகள் - நாகப் பாம்பினிடத்துள்ள ஒளிவிடு மணிகள், துள்ளி - வெடித்துக் குதித்து வீழ்ந்து, பொடி ஆ வேகின்ற சுரம் கண்டுற்றான் - சாம்பலாக எரிந்து போகின்ற (அவ்வளவு வெப்பமிக்க) பாலை நிலத்தைக் கண்டான்.

(க - து.) நளன் தன் நாடு நீங்கித் தமயந்தியுடன் கால் நடையாக நடந்து சென்று, கள்ளி மரங்களின் வெப்பக் கடுமையால் நாகப்பாம்புகளின் மணிகளும் குதித்து வெடித்து வெந்து சாம்பலாகும் தன்மையுடைய வெப்ப மிக்க பாலை நிலத்தைக் கண்டான் என்பதாம்.

(வி - ரை.) 'காமர் கயல்புரளக் காவி முகை நெகிழ' என்று துவக்கத்தில் கூறிய நிடதநாட்டுத் தண்மை மிக்க நீர்வளத்தைக் குறிக்க ஈண்டும் 'வாவித்திருநாடு' என்றார். நளன் தமயந்தி இருவரும் பிறந்த நாள்தொட்டு எங்குச் செல்லினும் நிலத்திற் கால் பாவ நடந்தறியார்; அவர்கள் தேரும் கரியும் பரியும் சிவிகையும் பிறவும் ஊர்தியாகக் கொண்டே செல்லும் வான்றோய் செல்வ வளமிக்க வேந்தர் குடியில் தோன்றியவர்; இவர்களும் ஊழின் வலியால் கல்லிலும் முள்ளிலும் கால்கள் நோவ நடந்து சென்றார் என்பதைக் குறிக்கக், 'காலிற்போய்த் தேவியொடும்' என்றார். மூன்றாம் வேற்றுமை உருபான 'ஒடு' உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது. இலக்கண நூல் இம் மூன்றனுருபை உயர்ந்த ஒருவரோடாவது அன்றி உயர்ந்த பொருள்களோடாவது அப் பெயர்களுக்குப் பின் வருகின்ற பெயர்களோடோ வினைகளோடோ இணைத்து அமைப்பர்.

[1]'மூன்றா குவதே
ஒடுஎனப் பெயரிய வேற்றுமைக் கிளவி
வினைமுதல் கருவி அனைமுதற் றதுவே.'

என்பர் தொல்காப்பியர். இந்த முறையில் பசுவோடு கன்று வந்தது; அரசனோடு அமைச்சன் வந்தான் என, வழக்கினும் [2]'பாலொடு தேன்கலந் தற்றே', [3]'பாலொடளாய நீர்;' [4]'பொய்யொடு இடைமிடைந்த சொல்;' [5]'கோமுனி உடன்வரு கோன்

1. தொல். சொல்: எச.   2. திருக்குறள், ககஉக.
3, 4. நாலடியார், உ0. களள.
5. கம்பராமா. பால, கார்முக: சுஉ.

டல்;' [1]'கன்றொடுங்களி வண்டுவாய் நக்க' எனச் செய்யுளினும் உயர்ந்த பொருள்களுடன் அவைகளினும் தாழ்ந்த பொருள்கள் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தமை காண்க.

ஆனால், இங்கே அகவையானும், மனையாளென்ற முறையானும் நளனுக்குத் தன்னினும் நிலையில் உயர்ச்சியின்றிய தமயந்தியுடன் போய்ப் பாலைநிலத்தைக் கண்டான் என்றார். ஏன்? இங்கே, 'தேவியொடும் கண்ணுற்றான்' என்று கூறினார் எனின்? பெண்கள் ஆண்களினும் மெல்லிய இயல்பினர்: குழைந்த மனமும் கொண்டவர்; அவர்களின் எல்லா உறுப்புக்களும் மென்மையுடையன; அவைகளினும் கால்களின் உள்ளடி மிக மிக மென்மை வாய்ந்தன. இதனைத் திருவள்ளுவரும்,

> [2]'அனிச்சமும் அன்னத்தின் தூவியும் மாதர்
> அடிக்கு நெருஞ்சிப் பழம்.'

என்றார். இத்தகைய தன்மையானும் தமயந்தி அரசியாகலானும், அவள் மிக மெல்லியளாவள்; அவள், மென்மை வாய்ந்த தன் கால்கள் கொண்டு நடந்து வருந்தி,

> 'இறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்த
> நறும்பல் கூநதல் குறும்பல உயிர்த்து.'

என்பதற்கேற்ப நின்ற தன்மையால், நளனினும் மென்மையில் தமயந்தியின் சிறந்த தன்மையை விளக்க 'ஒடு' உருபைத் தமயந்தியோடு இணைத்து உயர்ச்சிப் பொருள் தோன்ற இங்கே கூறினார் என்க. அன்றித் தன்னோடு வந்தாளை விடாது கூட்டியேகினான் என்றலுமாம்.

கள்ளி-கள்ளி என்னும் ஒருவகை மரம். அது பாலைநிலக் கருப்பொருள் அதனடியில் வாழ்கின்ற நாகப் பாம்புகளின் தலையில் ஒருவகை மணி உண்டாவதாகக் கூறுவர் ஆதலின், இப் பாலைநில வெப்பந் தாங்கலாற்றாது அம் மணிகள் வெடித்து எழுந்து வெந்து சாம்பலாகும் என்றார். அப் பாலை வெப்ப மிகுதியைக் குறித்தவாறும். பாலைக்கு ஒரு நிலமில்லை; முல்லை குறிஞ்சிகளே தம் நிலைமாறியபோது பாலையாம் என்பர். இதனைப் புலவர் பெருமக்கள் அகப்பொருட்குப் பிரிவுத் துறைக்குரியதாக அமைத்து விரிவுபடக் கூறுவர். அவைகளை அகப்பொருள் பற்றிய பாடல்களுட் காண்க.

---

1. திருவிளையாடல். திருநாட்டு: ௩௬.
2. திருக்குறள், ௧௧௨0. 3. சிலப். ௧0: ௩அ - ௯.

ஞாலல் - தொங்குதல். நாலல்: ஞாலல் என்றதன் ந, ஞ, ஒத்த முதல் எழுத்துப்போலி. உலகம் தனக்கென ஒரு பிடிப்பின்றி அந்தரத்தில் தொங்கிக்கொண்டிருப்பதால் இதற்கு அது காரணமாக இப் பெயர் அமைந்தது. ஞாலல்: அல் விகுதி பெற்றதொழிற் பெயர். ஞாலம்: அம் விகுதி பெற்ற தொழிற் பெயராகக் கொள்க; ஓட்டம், தேட்டம் என்பனபோல. [1]"செய்ஞ்ஞின்ற நீலம் மலர்கின்ற தில்லை' என்னும் பாடலில் நின்ற என்பது 'ஞின்ற' என, ந, ஞ ஆனது ஓர்க. சுரம் - பாலை நிலம். சுரம்போக்கென்னும் நூல் வழக்குகளால் அறிக. (எக)

கலிமகன், புள் உருக்கொண்டு தோன்றுதல்

உருஅ. கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்னெறிக்கே
அஞ்சிப்பார் ஈந்த அரசனையும் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து.

(இ - ள்.) நல்நெறிக்கே அஞ்சி - உயர்ந்த நெறிமுறைமை ஒன்றுக்கே அச்சங்கொண்டு, பார் ஈந்த அரசனையும் தேவியையும் - நாடு நகரங்களையெல்லாம் (புட்கரனுக்கு) கொடுத்த நளமன்னனையும் அவன் இல்லக்கிழத்தியாகிய தமயந்தியையும், வனத்து வஞ்சிப்பான் வேண்டி - (அவர்கள் சென்ற) அந்தக் காட்டினிடத்திலே வஞ்சிக்க விருப்பங்கொண்டு, கல்நிறத்த சிந்தை கலியும் - கல்போன்ற வல்லென்ற தன்மையுள்ள மனத்தையுடைய கலிமகனும், அவன் முன்பு ஆக-அந் நளனுக்கு எதிர்ப் பக்கத்தில், பொன்நிறத்த புள்வடிவு ஆய் போந்து இருந்தான் - பொன்னிறமுள்ள பறவைபோல் உருவமெடுத்து வந்திருந்தான்.

(க - து.) கல்போன்ற வன்னெஞ்சமுடைய கலியானவன், நளமன்னனையும் அவன் மனையாளையும் வஞ்சஞ்செய்யக் கருதி, அவ்வனத்திலே நளனுக்கெதிரில் பொன்னிறமான பறவை வடிவெடுத்து வந்திருந்தான் என்பதாம்.

(வி - ரை.) கல் + நிறத்த = கன்னிறத்த எனப் புணர்ந்தது. [2]"லள வேற்றுமையிற் றடவும்' என்னும் நன்னூல் நூற்பாவில், 'மெலிமேவின் னணவும்' என்ற விதிப்படி லகரம் னகரமாகத் திரிந்தது. நிறம் - தன்மையென்னும பொருளில் வந்தது. நிறத்தது - தன்மையையுடையது. பொன் நிறத்த-பொன் நிறத்தை

1. திருநாவுக்கரசு தேவாரம், அ0 : ௫. 2. நன்னூல், உஉஎ.

யுடையது. சிறத்தது என ஒன்றன்பாற் படர்க்கையைக் குறிக்கும் துவவிகுதி, செய்யுள் இசை நோக்கிக் குறைந்தது : குறைத்தல் விகாரம்.

நளமன்னன், 'ஈதல் இசைபட வாழ்தல்' என்ற பெருநெறி பிடித்தொழுகியவன்; இத்திருத்துறந்தாலும் நம் ஒழுக்க நெறி தவறுதல் தகாதென்னும் கொள்கையுடையவன்; புகழெனின் உயிருங் கொடுக்கும் நேர்மையாளன் என்பதை விளக்க 'நன்னெறிக்கே அஞ்சிப் பாரீந்த அரசன்' என்றார். சூதாடியபோது வைத்த பொருள்களை இல்லையென்று மறுக்காது கொடுத்து இழந்ததையே 'அஞ்சிப் பார் ஈந்த அரசன்' என்றார். அஞ்சுதலென்பதனை தீமைக்கு அஞ்சுவதையே திருவள்ளுவர் குறித்துணர்த்துவர்.

> [1] 'அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவது
> அஞ்சல் அறிவார் தொழில்.'

வஞ்சிப்பான் - நளன் தமயந்தி இருவர்களையும் தனித்தனியே பிரித்துவைக்கும் சூழ்ச்சியின் பொருட்டாக. பான் என்பது வினையெச்சவாய்பாடு, எதிர்காலம் காட்டிற்று. [2]'வான் பாக்கு இனைவினையெச்சம்' என்னும் நன்னூல் நூற்பாவால் அறிக. (அ0)

## தமயந்தி, அப்பறவையைப் பிடித்துத் தருமாறு நளனை வேண்டுதல்

உ௫௯. தேன்பிடிக்கும் தண்துழாய்ச் செங்கண் கருமுகிலை
மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்-தான்பிடிக்கப்
பொற்புள்ளைப் பற்றித்தா என்றாள் புதுமழலைச்
சொற்கிள்ளை வாயாள் தொழுது.

(இ - ள்.) தேன்பிடிக்கும் தண்துழாய் - தேன் தங்கியிருக்கின்ற குளிர்ச்சி பொருந்திய துளபமாலையணிந்த, செம்கண் கருமுகிலை - சிவந்த கண்களையுடைய கார்மேக வண்ணத்தனை இராமபிரானை, மான்பிடிக்க சொன்ன மயிலேபோல் - மானைப் பிடித்துத் தரும்படி சொல்லிய மயில்போலுஞ் சாயலையுடைய சீதையைப்போல, புதுமழலை சொல் கிள்ளை வாயாள் தொழுது - கேட்போர்க்குப் புதுமையை ஊட்டும் இளஞ்சொற்களைப் பேசுகின்ற வாயையுடைய கிளிபோன்றவளாகிய தமயந்தியானவள் (கைகுவித்துத் தன் கணவனைத்) தொழுது, தான் பிடிக்க பொன்

---

1. திருக்குறள், ௪௨அ. 2. நன்னூல், ௩௪௩.

புள்ளை பற்றி தா என்றாள் - தான் கையிற் பிடித்து வைத்துக் கொண்டிருக்க அப் பொன்னிறமுள்ள பறவையைப் பிடித்துத் தருக என்று வேண்டினாள்.

(க - நு.) தமயந்தியானவள், இராமபிரானை மானைப் பிடித்துத் தரவேண்டிய சீதையைப்போல் நளனிடம் அப் பொன்னிறப் பறவையைப் பிடித்துத் தரும்படி தொழுது வேண்டினாள் என்பதாம்.

(வி - ரை.) தண் துழாய் - தண்மை (குளிர்ச்சி) யுடைய துளசிமாலை : உருபும் பயனும் உடன் தொக்க தொகை. செங் கண் கருமுகில் சொல்லும் பொருளும் முரண்தொடையாக வந் தன. மயில்போன்ற சாயலாளை மயிலென்றது, ஆகுபெயர். புள் : பறவை. திருக்குறளில்வரும் 'புட்பறந்தற்றே' என்பதில் உள்ள புள்ளென்னும் சொற்குச் சிலர் அது பிறந்தவுடன் பறந்துபோதல் தன்மையுடையதென வுரைப்பர். இங்கே பறவையென்னும் பொதுப்பொருளில் வந்தது. 'புதுமழலைச் சொல்' கேட்குந் தோறும் கேட்குந்தோறும் புதுமை புதுமையாக இன்பமுறத் தோன்றும் மென்சொல். கிள்ளைவாயாள் என்பதில், கிள்ளை வாயைக் குறிக்காமல் அதன் சொற்களைக் குறித்தலால் இடவாகு பெயர். கிள்ளை வாயாள் - கிள்ளைக்கும் சொல்லால் கிட்டாத சொல்லாள் என்றலுமாம். (அக)

நளன், அப்பொன்னிறப் பறவையைப் பிடிக்க முற்படல்

உகூ௦. பொற்புள் அதனைப் பிடிப்பான் நளன்புகுதக்
கைக்குள்வரு மாபோல் கழன்றோடி—எய்க்கும்
இளைக்குமா போல இருந்ததுகண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன்.

(இ - ள்.) நளன் பொன்புள் அதனை பிடிப்பான் புகுத - நளமன்னனானவன் பொன்னிறமுள்ள அந்தப் பறவையைப் பிடிக்கும் பொருட்டாகச் செல்கையில், கைக்குள் வருமாபோல் கழன்று ஓடி - (அது) அவன் கைக்குள் பிடிபடுவதுபோல் காட்டித் தப்பியோடி, எய்க்கும் (ஆபோல) இளைக்கும் ஆபோல - களைப்படைந்தாற் போலவும் அதனால் இளைப்பது போலவும், இருந்தது கண்டு - (அது) இருப்பதை உணர்ந்து, மன் வளைக்கும் ஆறு எண்ணினான் - வேந்தன் (அதை) வளைத்துப் பிடிக்கின்ற வகையைக் கருதினான்.

(க - நு.) நளன், அந்தப் பொன்னிறமுள்ள பறவையைப் பிடிக்கச் சென்றபோது அது களைப்படைவது போலவும், அதனால் இளைப்பதுபோலவும் தோன்ற, இனி இதைப் பிடித்துவிடலாமென்று நளன் கருதினான் என்பதாம்.

(வி - ரை.) புள் அதனை என்பதில் அது, பகுதிப் பொருள் விகுதி. கைக்கு உள்வருமாபோல் - தன் கைக்குள் அகப்படுவது போல். கழன்று ஓடுதல் - ஈண்டுக் கழலுதல், தப்புதல் என்னும் பொருளில் வந்தது. அப் பறவை உண்மைப் பறவை அல்லாததால், சூழ்ச்சியை உட்கொண்டு எய்த்தல் போலவும் இளைத்தல் போலவும் பொய்ம்மை யாகப் பாசாங்குசெய்தது; அதனை நளன் உண்மையென்று கருதினான் எனக் கொள்க. ஆறுபோல் என்பது, ஆ போல் என வந்தது கடைக்குறை. ஓடும் வலிமை, பறக்கும் வலிமை இனி, இப் பறவைக்குக் குறைந்தது என எண்ணி, அதை வளைத்துப் பிடிக்க எண்ணினான் என்க.

முன், நளன் என்று பெயர் குறித்துப் பின்னும் 'மன்' என்று வேண்டாது கூறியது கூறினார்; அவ்வாறு கூறுதல் 'கூறியது கூறல்' என்னும் பத்துவகைக் குற்றங்களுள் ஒன்றாகுமே? என வினவின், நல்லிசைப் புலவராகிய புகழேந்தியார் சிறுத்த சொற்கள் ஒன்றேனும் காரணமின்றிப் பெய்யவில்லையென்க. [1]'பாம்பறியும் பாம்பின கால்' என்பதும், [2]'புலமிக் கவரைப் புலமை தெரிதல், புலமிக் கவர்க்கே புலனாம்' என்பதும் நூல் வழக்கு. அம் முறையில் பறவைகளின் உள்ள நிலையையும் அவைகள் எவ்வளவு தொலை எவ்வாறு சென்றால் களைக்குமென்பதும் பறவைகளோடு பயின்று அவ் வேட்டமாடுவோர்க்கன்றோ புலனாம்; வேந்தனுக்கு அதிற் பயிற்சி உண்டோ எனின்? இல்லை. ஆகலான், இவ்வரசனும் பறவைகளைப் படுப்பது எவ்வாறெனப் பயின்றவனில்லை; ஆயினும் தன் இல்லாள் விரும்புவது கருதி அதனைப் பிடிக்க முற்பட்டான் என்பது தோன்றவே, 'மன்' என்ற சொல்லை ஈற்றில் பெய்துரைத்தனரென்க. 'மேற்பாட்டில்' இதனானே, 'மான் பிடிக்கச் சொன்ன மயிலே போல்' என்று உவமங் கூறி விளக்கியதும் என்க.

[3]'சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.'

என்பது, தெய்வப் புலவர் திருமொழி. (அஉ)

---

1, 2. பழமொழி நானூறு, எ. 3. திருக்குறள், உ00.

### நளன், அப்பறவையை ஆடையால் அணைத்துப் பிடிக்கலாமெனத் தமயந்தியிடம் கூறுதல்

உகூக. கோற்றக் கயற்கண் கொடியே இருவேமும்
ஒற்றைத் துகிலால் உடைபுனைந்து—மற்றிந்தப்
பொற்றுகிலால் புள்வளைக்கப் போதுவோம்
பற்றகலா உள்ளம் பரிந்து. [என்றுரைத்தான்

(இ - ள்.) பற்று அகலா உள்ளம் பரிந்து - நளன் தமயந்தி பால் அன்பு குறையாத மனத்தனாய் அவள்பால் விருப்புற்று, கொற்ற கயல் கண் கொடியே - வெற்றி பொருந்திய கெண்டை மீன்போன்ற கண்களையுடைய பூங்கொடிபோல்வாளே!, இருவேமும் - நாம் இருவரும், ஒற்றை துகிலால் உடைபுனைந்து - ஒரே ஆடையைக் கொண்டு உடுத்து (நான் உடுத்துள்ள), இந்த பொன் துகிலால் - இந்த அழகிய ஆடையினால், புள் வளைக்க போதுவோம் என்று உரைத்தான் - இந்தப் பறவையைப் பிடிப்பதற்குச் செல்வோமென்று கூறினான்.

(க - ரு.) நளமன்னன் தமயந்தியை நோக்கி, 'கொடி போன்றவளே! நாம் இருவரும் ஒரே ஆடையை உடுத்துக் கொண்டு, நான் உடுத்துள்ள இவ்வாடையினால் இந்தப் பறவையைப் பற்றிப் பிடிப்போம்' என்று கூறினான் என்பதாம்.

(வி - ரை.) கொற்றம் - வெற்றி. கொடிபோன்றவளைக் கொடியென்றது ஆகுபெயர். இருவேமும் - நாம் இருவரும் என்னும் பொருளது. மற்று : வினைமாற்றுப் பொருளில் வந்த இடைச்சொல் ; ஈண்டு வேறொரு ஆடையைக் குறிக்க வந்தது.

[1]'மற்றைய தென்பது சுட்டி யதற்கினம்.'

என்பது நன்னூலார் காட்டும் விதி.

[2]'மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் என்னாது.'

என்பதில் 'மற்று' இப் பொருள் தருதலை அறிக. பொன் - அழகு ; அல்லது பொற்கயிறு பின்னிய ஆடையெனக் கோடலுமாம். இந்த என்னும் அண்மைச் சுட்டினால் நளன் உடுத்த ஆடையென்பது குறிப்பாயிற்று. போதுவோம் - போவோம்: உளப்பாட்டுத் தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று. 'போது

1. நன்னூல், சகூச. 2. நாலடியார், கக.

வோம்' என்றதனால் அதற்குத் தமயந்தி இசைந்தாளென்பதும், நளன் கூறியவாறே செய்ய முற்பட்டாள் என்பதும் போதரும். (அரு)

நளன், ஆடையை யெறிந்து பறவையைப் பிடித்தல்

உசுஉ. எற்றித் திரைபொரநொந் தேறி இளமணலில்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ்—முத்தீன்று
வெள்வளைத்தாய் ஓடுநீர் வேலைத் திருநாடன்
புள்வளைத்தான் ஆடையாற் போந்து

(இ - ள்.) திரை எற்றி பொர - அலைகள் வீசிக் (கரையை) மோதுதலால், நொந்து இளமணலில் ஏறி பற்றி - வருந்தி நுண்ணிய மணல்மீது ஊர்ந்துபோய் அதைப்பற்றிப் பிடித்துக் கொண்டு, பவளம் படர் நிழல் கீழ் - பவளக் கொடிகள் படர்தலால் உண்டான நிழலின் அடியில், முத்து ஈன்று - முத்துக்களாகிய குழந்தைகளைப் பெற்றுவிட்டு, வெள்வளை தாய் ஓடும் - வெண்ணிறம் பொருந்திய சங்காகிய தாய் திரும்பிச் செல்கின்ற, நீர் வேலை திருநாடன் - நீர்வளம் பொருந்திய கடற்கரையைச் சார்ந்த நிடதமாகிய அழகிய நாட்டுக்கு மன்னனான நளன், போந்து ஆடையால் புள் வளைத்தான் - பக்கத்தில் சென்று தன் ஆடையினால் அப் பறவையை வளைத்துக்கொண்டான்.

(க - து.) கடல் சார்ந்த நிடதநாட்டு வேந்தனான நளன், பக்கத்திற் சென்று தன் ஆடையினால் அந்தப் பொற் பறவையை வளைத்துக்கொண்டான் என்பதாம்.

(வி - ரை.) எற்றுதல் - மோதியடித்தல். இஃது இப் பொருட்டாதலை,

[1]'எற்று தெண்டிரை எறிவளை எயிற்றியர் இழைத்த.'

என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளான் அறிக. சங்குகள் அலைகளால் மோதியடிக்கப் பெற்றுச் செல்வதை,

[2]'மோது முதுதிரையான் மொத்துண்டு
போந்தசைந்த முரல்வாய்ச் சங்கம்.'

எனச், சிலப்பதிகாரத்தும் வருதல் காண்க. சூற்கொண்ட சங்குகள் திரையால் இழுத்துக் கொணர்ந்து கடற்கரையில் அலைகள் மோதியடிக்க அவைகள் தவழ்ந்தேறிப் பவளக்கொடிகள் படர்ந்

1. திருவிளையாடல். திருநாட்டு, ௲எ. 2. சிலப். எ : எ.

துள்ள இடத்தின் கீழேயுள்ள நிழலில் முத்துக்களை ஈன்று செல்லுமென்றமையால், நிடத நாட்டு மருதநில வளனும் நெய்தல் நில வளனும் குறித்தவாறும். சங்குகள் முத்துக்களை ஈன்று போதல்போல, நளமன்னன் வற்றா வளமிக்க தன் நாட்டைப் பிறனுக்குக் கொடுத்துவிட்டுச் செல்கின்றான் என்பதைக் குறிப்பால் குறித்ததாம் என்க. சங்குகளைத் தாய் என்றதற்கேற்ப முத்துக்களைப் பிள்ளைகளென்று கூறுதலால் ஏகதேச உருவகம். ஆடையால் என்பதில் ஆல் என்னும் மூன்றனுருபு கருவிப் பொருளில் வந்தது. (அச)

பறவை, அகப்படாது வானிற் பறந்துசென்று நின்று மொழிதல்

உசரு. கூந்தல் இளங்குயிலும் கோமானும் கொண்டணைத்த
பூந்துகில் கொண்டந்தரத்தே போய்நின்று—வேந்தனே!
நன்னாடு தோற்பித்தோன் நானேகாண் என்றதே
பொன்னாடு மாணிறத்த புள்.

(இ - ள்.) பொன் ஆடும் மால்நிறத்த புள் - பொன்னொளி வீசுகின்ற சிறப்புமிக்க நிறத்தையுடைய அப் பறவையானது, கூந்தல் இளம் குயிலும் - கூந்தலையுடைய இளங் குயில்போன்ற குரலினளான தமயந்தியும், கோமானும் கொண்டு அணைத்த - நளமன்னனும் கொண்டு சென்று வளைத்த, பூந்துகில் கொண்டு - அழகிய ஆடையைப் பற்றிக்கொண்டு, அந்தரத்தே போய் நின்று - வானவெளியிலே பறந்து சென்றுபோய் நின்று, வேந்தனே - அரசனே!, நல் நாடு தோற்பித்தோன் நானேகாண் என்றது - நீ இழந்த உனது நிடத நாடு முதலியவற்றைச் சூதாட்டத்தினால் புட்கரனிடம் தோற்கும்படி செய்தவன் நானேதானென்பதை (இனியேனும்) அறிந்துகொள்வாயாக என்று கூறிற்று.

(க - து.) பொன்புள்ளானது, நளனும் தமயந்தியும் தன்னைப் பிடிக்க வீசிய பூந்துகில் ஆடையைக்கொண்டு வானவெளியிற் பறந்துசென்று நின்று, 'வேந்தே! நான்தான் உன் நாட்டைத் தோற்கும்படி செய்தவன்' என்று கூறிற்று என்பதாம்.

(வி - ரை.) குயிற்குரல் போன்ற குரலுள்ள தமயந்தியைக் குயிலென்றது ஆகுபெயர். உம்மைகள் இரண்டும் எண்ணுப் பொருளில் வந்தன. அணைத்தல் - சேர்த்துப் பிடித்தல். பூந்துகில்-

பூவேலை செய்த கரைகளையுடைய ஆடையென்று பொருள் கொள்ளலுமாம். அந்தரம் - வானவெளியிடம். தோற்பித்தல் - தோற்கச்செய்தல்; பிறவினை. தோற்றல்: தன்வினை. புள்வடிவா யிருந்த கலி, 'நான் சூளுரைத்தவாறு செய்து விட்டேன்' எனத் தன் பெருமை கூறியவாறும். வெளித் தோற்றந்தான் பொன் னிறம்; உட்பகுதியாகிய அகத்தில் வஞ்சச் சூழ்ச்சியே மிக்குளது என்பதை விளக்கவே அதன் மறுதலைப் பொருள்தொனிக்க 'பொன்னொடு மானிறத்த புள்' என்றார். என்னை ?

> [1] "புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி
> மூக்கிற் கரியார் உடைத்து.'

என்றார் திருவள்ளுவராகலான். அகத்தில் கருநிறம் என்பதைச் சுட்டிற்று. பொன் ஆடல் - பொன்னொளி பளபளவென்று மின்னு தல். நானே என்பதில் ஏகாரம் பிரிநிலைப் பொருளில் வந்தது. அல்லது தேற்றமாகக் கொள்ளினும் பொருந்தும். (அ௫)

**நளனுக்கும் தமயந்திக்கும் ஒற்றைஆடையே ஆனதௌல்**

உசூச. காவிபோல் கண்ணிக்கும் கண்ணியந்தோட் காளைக்கும்
ஆவிபோல் ஆடையுமொன் றானதே—பூவிரியக்
கள்வேட்டு வண்டுழலும் கானத் திடைக்கனகப்
புள்வேட்டை ஆதரித்த போது.

(இ - ள்.) (நளனும் தமயந்தியும்) பூவிரிய கள் வேட்டு வண்டுழலும் - மலர்கள் தம் உள்ளிடம் விரிய அதிலுள்ள தேனை விரும்பி வண்டுகள் சுற்றித் திரிகின்ற, கானத்து இடை - வனத் திடத்தே, கனக புள் வேட்டை ஆதரித்தபோது - பொன்னிறப் பறவையைப் பிடிக்கின்றதான வேட்டையை விரும்பிச் செய்த போது, காவி போல் கண்ணிக்கும் - கருங்குவளை மலர்போன்ற கண்களையுடைய தமயந்திக்கும், கண்ணிஅம் தோள் காளைக்கும் - கண்ணியாகத் தொடுத்த மலர் மாலையணிந்த அழகிய தோள்களை யுடைய நளமன்னனுக்கும், ஆவிபோல் ஆடையும் ஒன்றானது - (தமக்குள் ஒன்றுபட்ட அன்பின் பிணைப்பினால் இருவா தம்) உயிரும் ஒன்றாக இணைந்ததுபோல உடுத்த ஆடையும் இருவர்க் கும் ஒன்றேயாயிற்று. (ஒரே ஆடையை இருவரும் உடுத்தனர் என்றபடி.)

---

1. திருக்குறள், உஎஎ.

(க - து.) நளன் தமயந்தி இருவரும் பொன்னிறப் பறவையை வேட்டையாடிப் பிடிக்க முற்பட்டபோது, அவர்கள் உயிர்கள் ஒன்றாக இணைந்ததுபோல, ஆடையும் ஒன்றாயிற்று என்பதாம்.

(வி - ரை.) காவி - கருங்குவளை. அதன் மலர் கண்ணுக்கு உவமமாயிற்று: முதலாகுபெயர். கண்ணி - கண்ணையுடையாள் : இகர விகுதி ஈண்டுப் பெண்பால் விகுதியாக வந்தது. கண்ணி - கட்டித் தொடுத்த மாலை. இஃது இப் பொருள் தருதலை,

[1]"கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பில் தாருங் கொன்றை.'

எனவரும் புறப்பாட்டில் காண்க. காளைபோன்ற வலியும் தெறலும் ஆற்றலும் உடைய நளனைக் குறித்தலால், காளை: உவம ஆகுபெயர். காளை - ஆனேறு; எருது.

அன்பாற் பிணைப்புண்டு இல்லறமென்னும் நல்லறத்தை மேற்கொண்டு, விருந்து புறந்தந்து அருந்தவர்ப்பேணி, அறவோர்க்களித்து அந்தணர் ஓம்பித், துறவோர்க் கெதிர்ந்து நிற்கும் கடப்பாடுடைய கணவன் மனைவியர்கட்கு இன்பத் துன்பங்களில் ஒன்றுபட்டு அதனை உழத்தல் இயல்பாக அமைந்தது. இதனை மணிமொழிப் பெருமானும்,

[2]"காகத் திருகண்ணிற் கொன்றே மணிகலந் தாங்கிருவர்
ஆகத்துள் ஓருயிர் கண்டனம்...........'

எனவும்,

[3]"தோகைக்கும் தோன்றற்கும் ஒன்றாய் வரும்இன்ப
துன்பங்களே.'

எனவும்,

[4]"உயிரொன்று உளமுமொன்று ஒன்றே சிறப்பிவட்
கென்றெ டென்னப்,
பயில்கின்ற.'

எனவும், திருச்சிற்றம்பலக் கோவையில் அருளியதும் உணர்க.

[5]"காணா மரபிற் றுயிரென மொழிவோர்
நாணிலர் மன்ற பொய்ம்மொழிந் தனரே

---

1. புறம்: கடவுள் வாழ்த்து.
2, 3, 4. திருக்கோவையார்: எக ; கஅ.
5. தொல். களவியல் க0க: நச். மேற்கோள்.

யாஅம் காண்டுமெம் அரும்பெறல் உயிரே
சொல்லும் ஆடும் மென்மெல இயலும்
கணைக்கால் நுணுகிய நுசுப்பின்
மழைக்கண் மாதர் பணைப்பெருந் தோட்டே.'

எனத் தன் காதலியை, அகப்பொருட் காதல் தலைவன், தன் 'அரும்பெறல் உயி'ரெனப் பாராட்டு முகத்தானும் அறியப் பெறும்.

திருக்கோவையார் உரையில், 'ஓராவிற்கு இருகோடு போல,' 'இருதலை ஒருடற் புட்போல' எனப் பாராட்டிக் கூறுவர் பேராசியரும்.

இக் காதல் கைம்மிக்க முறையில் இணைந்த அன்பினர், நளன் தமயந்தி இருவரும். நளன் சூதாடி நாடு நகர்களையெல்லாம் தோற்றுக் காடு நோக்கிப் புறப்பட்ட காலைத் தமயந்தியானவள், தன் மக்களோடு தன் தந்தை நகர்க்குப் போக ஒவ்வாத மனத்தினளாகி, நளன் போகுமாறு கூறியபோதும் 'பெறலாமோ கோக்கா தலனைக் குலமகளுக்கு' என மறுத்து, நிழல்போல் தொடர்ந்து வந்து மக்களையும் பிரிந்திருந்து நளனோடு காட்டில் உறையவே எண்ணினாள்; இருந்தாள்; இக் கற்புத்திறனும் இவ்விருவர் தம் திண்மைமிக்க காரோடன் பயிலொடு சேர்த்த கற்போல் ஒன்றுபட்ட நிலையை, இவர்கள் பறவை பிடிக்க முற்பட்டபோது அப்பறவை ஆடையைத் தூக்கிக்கொண்டு அந்தரத்தே செல்ல, ஓராடையையே இருவரும் உடுத்திருந்தாராகலான, அதனை ஆசிரியர், இவர்தம் ஒற்றுமையை விளக்கி 'ஆவிபோல் ஆடையுமொன் றானதே' என்றார்.

'வெள்ளத் தனைய மலர் நீட்டம்' என்பதுபோல, வளமிக்க இடத்தில் வளரும் மரஞ் செடி கொடிகள் செழிப்பாக வளர்ந்து அதிற் பூக்கும் பூக்களும் பிஞ்சும் காயும் கனியும் விதையும் செழிப்பாகவும் அழகும் மணமும் மிக்குப் பொலிவுறும் இங்குப் பாலைநிலத்தில் வறியவன் இளமைபோல் வாடிய கிளைகளையுடையவாக மரங்களும் பிறவும் இருத்தலால், அவைகளுள் மலரும் மலர்களில் செழிப்பு யாங்கே போதரும்? தேன் யாண்டுப் பில்கும்; எனவே, அவைகளும் தேன்பசையின்றியே யிருக்கும் போது அங்கே ஊற்று ஏது? எனவே வண்டுகள், தாம் உண்ணும் தேனுக்குத் தேடி ஓடித் திரிகின்றன என்பாராய்க், 'கள்வேட்டு வண்டு உழலும்' என்றார். கள் - தேன். வேட்டல் - விரும்புதல். வேட்டு என்னும் வினையெச்சம், உழலும் என்னும் வினைப்பெயர் கொண்டு முடிந்தது. புள் வேட்டை - பறவை பிடிக்கும் வேட்டை. (அகூ)

## தமயந்தி வருந்துதல்

உகூரு. அறம்பிழைத்தார் பொய்த்தார் அருள் சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வம் இகழ்ந்தார்—புறங்கடையில்
சென்றார் புகுநரகம் சேர்வாய்கோல் என்றழியா
நின்றாள் விதியை நினைந்து.

(இ - ள்.) (தமயந்தியானவள் கலியை நோக்கிச் சினங்கொண்டு) அறம்பிழைத்தார் - அறநெறி தவறினவரும், பொய்த்தார் - பொய்யுரை கூறுவோரும், அருள் சிதைத்தார் - இரக்கமற்ற கொடியரும், மானத்திறம் பிழைத்தார் - மானத்தின் மேன்மையைக் கெடுத்தவரும், தெய்வம் இகழ்ந்தார்-கடவுட் கொள்கையை இகழ்ந்து பேசியவரும் (ஆகிய இவர்களுடைய), புறங்கடையில் சென்றார் - தலைவாசலில் (அவர் நட்புக்காகச்) சென்றவர்கள், புகுநரகம் சேர்வாய் என்று - போகின்ற நிரயத் துன்பத்தில் நீயும் போவாய் என்றுகூறி, விதியை நினைந்து அழியா நின்றாள் - பின்பு மனம் வருந்தித் தம் விதியை எண்ணிக்கொண்டு நின்றாள்.

(க - ரை.) தமயந்தி கலியை நோக்கிக் 'கலியே! நீ அறம்பிழைத்தவர் முதலியவர் சேரும் நிரகில் சேர்ந்து துன்புறுவாய்' என்று கூறி, மனம் வருந்தித் தம் ஊழ்வலியை எண்ணிக்கொண்டு நின்றாள் என்பதாம்

(வி - ரை.) அறம் - நற்செயல். பிழைத்தல் - தவறுசெய்தல். அறம்பிழைத்தார் முதலியன ஆறும் வினையாலணையும் பெயர்கள்.

தானும் தன் கணவன் நளமன்னனும் ஓராடை உடுக்குமாறு ஆடையைக் கொண்டு சென்று வானில்நிற்கும் புள்வடிவான கலியை நோக்கித் தமயந்தி சினங்கொண்டு, 'கொடு வெங்கலியே நீ நரகில் சேர்க' எனக் கடுமொழி கூறினாள். மக்களை மாக்களினின்றும் பிரிப்பது மனனுணர்வொன்றே; இதனை ஆசிரியர் தொல்காப்பியனார்,

[1]'மாவும் மாக்களும் ஐயறி வினவே.'

[2]'மக்கள் தாமே ஆறறி வுயிரே.'

எனவும், திருவள்ளுவர்,

[3]'விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.'

எனவும், கம்பநாடர்,

1, 2. தொல். பொருள்: ருஅஎ-அ.  3. திருக்குறள், சுகO.

"தக்க இன்ன தகாதன இன்னஎன்
றொக்க உன்னலர் ஆயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே.'[1]

எனவும் பிறபிற ஆன்றோர்களும் கூறுவனகொண்டு அறியக் கிடப்பனவாகும்.

கலி, இவ்வாறான நன்மை தீமை கண்டுணரும் அறிவு தெரிந்திருந்தும் திரிபுணர்ச்சியால் இவ்வாறு அறமல்லாத செயலை - மக்கட்பண்புக்கு எற்காத கொடுமையை - மேற்கொண்டு சூதாடச் செய்வித்து நாடுநகரை இழப்பித்துக் கடுங்கானில் வாழச்செய்த கொடுமைக்கு வருந்திச் சினந்து இவ்வாறு 'புகுநரகம் சேர்வாய்' என்றாள். கொல்: அசைநிலை, அல்லது ஐயப்பொருளுமாம். இதனால் உணர்வுபெறுகின்ற வாழ்க்கையே உயர்ந்ததென்பதைக் குறித்தவாறாம்.

இறுதியாக,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்.'[2]

என்பதை உட்கொண்டு, விதியை நினைந்து நின்றாள் என்க. (அள)

## தமயந்தி, நளனை அந்த இடத்தைவிட்டு வேறிடஞ் செல்ல அழைத்தல்

உகூகூ. வையம் துயர் உழப்ப மாயம் பலசூழ்ந்து
தெய்வம் கெடுத்தால் செயல்உண்டோ?-மெய்வகையே
சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலாய் இங்கொழியப்
போந்தருளு கென்றாள் புலர்ந்து.

(இ - ள்.) (இவ்வாறு கலியை வைத தமயந்தியானவள் நளனைப் பார்த்து), மெய்வகையே சேர்ந்து அருளிநின்ற - உண்மைநிலைகளின் பகுதிகளிலேயே இணைந்து நின்ற, தனி செம் கோலாய் - ஒப்பற்ற ஆட்சிமுறை கொண்ட வேந்தே!, வையம் துயர் உழப்ப - நம் நாட்டு மக்கள் யாவரும் துன்பங்கொள்ள, மாயம் பல சூழ்ந்து - வஞ்சனைகள் பலவற்றை எண்ணிச் செய்து, தெய்வம் கெடுத்தால் செயல் உண்டோ - தெய்வமே முன்னின்று

1. கம்பரா. கிட்கிந், வாலிவதை : ககஉ.
2. திருக்குறள், ௩அ0.

(இவ்வாறு நம்மைக்) கெடுத்தால் நம்மால் அதை எதிர்த்து நிற்க வலிமையுண்டோ?, புலர்ந்து - (தமயந்தி) உடலும் உள்ளமும் வாட்டங்கொண்டு, இங்கு ஒழிய போந்து அருளுக என்றாள் - இவ்விடம்விட்டு நாம் செல்லுதற்கு வருகவென்று கூறினாள்.

(க - ரை.) கலியைக் கடுமொழி கூறி வைத தமயந்தியானவள் நளனை நோக்கி, 'தெய்வமே முன்னின்று நம்மைக் கெடுத்தால் நம்மால் அதைத் தடைசெய்ய முடியுமோ? முடியாது. எனவே, இவ்விடத்தைவிட்டு நீங்குதற்கு வருக' வென்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) வையம்: இடவாகு பெயராய் மக்களைக் குறித்தது. துயருழத்தலாவது, நளன் தன் நகரைவிட்டு வெளியேறிச் செல்லுங்கால் குடிமக்கள் யாவரும் 'ஆருயிரின் தாயே அறத்தின் பெருந்தவமே' என வாய்விட்டு அழுது புலம்பிக் கொண்டு தொடர்ந்து வந்தனராகலினென்க. மாயம் - வஞ்சம். தெய்வம் கெடுத்தலாவது, நல்வழியிற் செல்லவிடாது இடைமறித்துத் தீயவழிகளிற் கொண்டு செலுத்துதல். தெய்வம்-ஊழ். [1]'தெய்வத்தான் ஆகாதெனினும்' என்புழி, இப்பொருள் தருதலை அறிக. உண்டோ? என்பதிலுள்ள ஓகாரம் எதிர்மறைப் பொருளில் வந்தது. 'மெய்வகையே நின்ற தனிசசெங்கோலாய்' என்பது, தன் ஆட்சிமுறை செலுத்துகின்ற நாட்டில் குடிபுறங்காத்தோம்பிக் குற்றங்கடிந்து வெற்றியுடன் அரசாண்ட சிறப்பினை. இவ்வாறு நெறிமுறை தவறாது ஆளும் அரசனுக்கே புகழும் நலனும் பெருகுமென்பர். இதனை இளங்கோவடிகள் செங்குட்டுவன் வாய்மொழியாக, அறமுறைக்கு அஞ்சி நல்லன செய்யவேண்டுமென,

[2]'மழைவளங் கரப்பின் வான்பே ரச்சம்
பிழையுயிர் எய்தின் பெரும்பே ரச்சம்
குடிபுர வுண்டும் கொடுங்கோல் அஞ்சி
மன்பதை காக்கும் நன்குடிப் பிறத்தல்
துன்பம் அல்லது தொழுதக வில்லென
துன்னிய துன்பம் துணிந்துவந் துரைத்த
நன்னூற் புலவற்கு நன்கனம் உரைத்து.'

என அருளிய தறிக. இத்தகைய கோல்முறை கோடாக்கொற்றவனென்பதைக் குறிக்கச 'செங்கோலாய்' என்றாள்.　(அஅ)

1. திருக்குறள், சுகக.
2. சிலப். உரு : கOO - சு.

ஞாயிறு மறைதல்

உகூஎ. அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக ஆங்கழலும்
வெந்தழலை ஆற்றுவான் மேல்கடற்கே—எந்தை
குளிப்பான்போல் சென்றடைந்தான் கூரிருளால்பாரை
ஒளிப்பான்போல் பொற்றே ருடன்.

(இ - ள்.) *எந்தை அந்த நெடும் சுரத்தின் மீதுஏக* - எம்முடைய தந்தைபோன்ற ஞாயிறானவன் அந்த நீண்ட பாலைவனத்துக்குமேலே செல்கையில், *ஆங்கு அழலும் வெம்தழலை ஆற்றுவான்* - அவ்விடத்திற் (கொதித்தெழுந்து தன் உடலைச்) சுடுகின்ற கொடிய சூட்டை ஆற்றிக்கொள்ளும்படி, *மேல் கடற்கே குளிப்பான்போல்* - மேற்குக் கடலிற்போய்க் குளிப்பவனைப் போலவும், *கூர்இருளால் பாரை ஒளிப்பான் போல்* - மிக்க இருளினால் உலகையெல்லாம் மறைத்து வைப்பவன்போலவும், *பொன் தேருடன் சென்று அடைந்தான்* - தன் பொன்னிறமுள்ள தேருடன் போய்ச் சேர்ந்தான்.

(க - ரை.) அப் பாலைவனத்துக்கு மேலே ஞாயிறானவன் செல்லுகையில், அவ்விடத்தே சுடுகின்ற வெப்பத்தை ஆற்றிக்கொள்வதற்கு மேலைக்கடலில் மூழ்குவோன் போன்றும், மிக்க இருளினால் உலகையெல்லாம் மூடுவான் போன்றும் தன் பொன்னிறத் தேருடன் போய் மறைந்தான் என்பதாம்

(வி - ரை) நெடுஞ்சுரம் - பாலைநிலப் பெருவழி. ஆங்கு அழலும் வெம்தழல் - அவ்விடத்தே இடைவிடாது கொதித்துக் கொண்டிருக்கின்ற கொடிய வெப்பம். இதனை,

[1]'அடிதாங்கும் அளவின்றி அழலன்ன வெம்மையால்
கடியவே கனங்குழாஅய் காடு.'

என்றார் பிறரும். இத்தகைய காட்டில் மழைபெய்தே அறியாமையால் அங்கே வெப்பமே குடிகொண்டு நிற்கின்றது. அவ்வழியாக வந்த சூரியன் வெப்பந் தாங்கலாற்றாது, வெப்பத்தை மாற்றுதற்கு எவரும் குளிப்பது இயற்கையாகலான் அந்த முறையில் குளிப்பவனைப்போல் மேல்கடலில் சென்றடைந்தான் என்றார், பகற்பொழுது சென்று மறைதலை ; சூரியன் மறைந்தவுடன் இருள் சூழ்ந்துகொள்ளுமாதலால் 'பாரை கூரிருளால் ஒளிப்பான்

1. கலித்தொகை : கக.

போல்' என்று தற்குறிப்பேற்ற அணியாக்கிக் கூறினார். பொன் தேர் - பொன்தேர் போன்ற தோற்றமுடைய ஒளி. இவ்வொளியைத், தேருருள் போன்றிருப்பதால் ஒற்றை உருளையென்றும் எழுவகை நிறத்தை எழு குதிரைகளென்றும் கற்பனை செய்து உரைப்பது புராண மரபு. அம்மரபுப்படி 'பொற்றேர்' என்றார்.

மேல் கடற்கு - நான்கனுருபு ஏழனுருபுக்கு வந்தது வேற்றுமை மயக்கம். எந்தை : ஏந்து + ஐ = ஏந்தை என நீட்டி, உலகத்தைத் தன் ஒளிக்கைகளால் ஏந்துகின்ற தலைவனாகிய சூரியன் என்றுகொண்டு பொருள் கூறலும் பொருந்தும். ஏனெனின்? எந்தையென்று கொண்டால் அதற்கோர் பொருட் சிறப்பின்று. அதனால் குறுகி ஏகாரம் எகரமாக நின்றதாகக் கொள்க. எந்தை - எம் தந்தை என்பதே நேரிய பொருளாம். ஆசிரியரே ஞாயிற்றின் சிறப்பு நோக்கித் தம் தந்தையாகப் போற்றிக் கூறினாரென்றலுமாம். இவ்வாறு கூறின் எம் தந்தை எனவே பொருள்படும். [1]'எந்தையும் நிலனுறப் பொருஅன்' என அகத்தினும், [2]'எங்குற்றாயோ எந்தாயே' எனத் திருவிளையாடற் புராணத்தும் பிறநூல் வழக்குகளிலும் காண்க. ஆகவே, ஏந்து + ஐ = ஏந்தை எனப் பிரித்துப் பொருள் கோடல் சிறந்தது. ஞாயிற்றொளியால் எல்லா வுயிர்களும் செழித்து வளர்தலால், அவ்வொளி, அவைகளை ஏந்துதல் - தாங்குதல் ஆயிற்று. அதனையுடையானை 'ஏந்துஐ' என்றலே பொருத்தமெனக் கொள்க. (அக)

### நளனும் தமயந்தியும் இருளில் செல்லுதல்

உகூஅ. பானு நெடுந்தேர் படுகடலில் பாய்ந்ததற்பின்
கான அடம்பின் கவட்டிலைகள்—மானின்
குளம்பேய்க்கும் நன்னாடன் கோதையொடும் சென்றான்
இளம்பேய்க்கும் தோன்றா இருள்.

(இ - ள்.) மானின் குளம்பு ஏய்க்கும் - மானினுடைய குளம்பு அடிகளை ஒத்திருக்கின்ற, கவடு இலைகள் அடம்பின் - பிளவுபட்ட இலைகளையுடைய அடம்பங்கொடிகளின், கானம் - காடுகள் சூழ்ந்துள்ள. நல்நாடன் - நீர்வளமிக்க நிடதநாட்டுக்கு மன்னனான நளன், பானு நெடும்தேர் - ஞாயிற்றினது நெடிய தேரானது, படுகடலில் பாய்ந்ததற்பின் - (நாள்தோறும் தான்) மறைகின்ற மேலைக்கடலில் போய் மறைந்தபின்பு, இளம் பேய்க்கும் தோன்றா இருள் - இளம்பருவம் வாய்ந்த பேய்களும் வழி தெரியாமல் மயங்கிநிற்கின்ற பேரிருட்போதில், கோதை

1. அகம் : கஉ.　　2. திருவிளையாடல், வாதவூர் : ருஅ.

யொடும் சென்றான் - மலர்க்கூந்தலாளாகிய தமயந்தியுடன் (அக் காட்டினுள்) சென்றான்.

(க - ரை.) சூரியன் மேலைக்கடலில் போய் மறைந்த பின், இளம்பேய்களும் வழிதெரியாது மயங்குகின்ற பேரிருட் போதில், நளன் தமயந்தியுடன் அக்காட்டினுள் நுழைந்து சென்றான் என்பதாம்.

(வி - ரை.) உலக முழுதும் தன் ஒளியைப் பரப்புகின்ற ஒளியுடைய வெங்கதிர் மண்டிலத்தைப் 'பானு நெடுந்தேர்' என்றார். படுதல் - மறைதல் படுகடல்: முக்காலவினைத்தொகை. ஞாயிறு தோன்றுவதும் மறைவதும் கடற்கரை ஓரங்களில் நின்று பார்க்குங்கால் கடலில் தோன்றுவதும் மறைவதும் போன்று தோன்றலால், 'படுகடலில் பாய்ந்ததற்பின்' என்றார்.

[1]"நின்கடற் பிறந்த ஞாயிறு பெயர்த்துநின்
வெண்தலைப் புணரி குடகடற் குளிக்கும்
யாணர் வைப்பின் நன்னாடு.'

என்றார் புறநானூற்றினும்.

அடம்பு: அடம்பங் கொடிகள் என்னும் ஒருவகைப் படர் கொடிகள். அவை, மருத நிலத்திலும் நெய்தல் நிலக்கடற்கரை ஓரங்களிலும் இருபகுப்பாக மானின் குளம்படி போன்று படர்ந்து கிடப்பன. அவைகள் யாண்டும் படர்தலால் நாடு, நில வண்மையுடைமையும் நீர்வளன் உண்மையும் புலப்படுத்திய வாறும். [2]"அடம்பம்பூ, அன்னங்கிழிக்கும்' என்றார் பிறரும். கவடு - இருபிளவு. இதனைக் கவட்டை யென உலக வழக்கிலும்,

[3]'இரண்டுலகும் வேள்வாய்க் கவட்டை நெறி.'

எனப் பழமொழி நானூற்றினும் வருவதறிக. கோதை - கோதையை உடையாள்: ஆகுபெயர். இளம் பேய் - இளம் பருவ மிக்க பேய். இளம்பருவமாக இருப்பதால் கண்பார்வை, உடல் வன்மை முதலியவற்றால் வன்மை மிக்கதாக இருக்குமன்றோ அதற்கும் தோன்றாத இருளெனவே, இருளின் மிகுதியைச் சுட்டிக் கூறியவாறும். 'கழுது வழங்கியாமம்' எனவும், 'கழுதுகண் படுக்கும் பாறை' எனவும் ஆன்றோர், இருள் மிக்குள்ளமைக்கு எடுத்துக்காட்டாகப் பேய் செல்லுதலையும்

1. புறம்: ௨.    2. நாலடியார்: ௧௦௭.
3. பழமொழி நானூறு: ௩௬௦.

உறக்கம் கொள்ளுதலேயும் குறிப்பிட்டவாறறிக. இத்தகைய கொடுமை மிக்க நள்ளிராப்போதில், நளன் தனிமையாகச் செல்லும் தன்மையனல்லன்: அவன் தகைமைக்கும், அரச நிலேக்கும் அது பொருந்தாத ஒன்றே ஆயினும், ஊழின் வலியால் இவ்வாறு தான்மட்டும் செல்லாது தன் கற்புக்கடம் பூண்ட பொற்புடைய மனேயாளேயும் அழைத்துச்சென்ருன் எனக், 'கோதை யொடும்' என உடன் புணர்த்துக் கூறினர். 'ஒடு' என்னுது உம்மையும் புணர்த்துக் கூறியது, இருளில் செல்லற்கு ஏற்ற தன்மையற்ருள்; மெல்லியாள்; நடந்தறியாதாள்; வண்ணச் சீறடி மண்மகளறியா மெல்லிய அடியினுள் என்னும் தன்மையைக் குறித்து நின்ற உயர்வு சிறப்பும்மை. அன்றி, நளன் செல்வதேயல்லாமல் தமயந்தியும் சென்ருளென்பதையும் குறித்தலால் இனேத்தென் றறிந்த முற்றும்மையுமாம். (கூ0)

நளன், அக்காட்டில் பாழ்மண்டபம் ஒன்றைக் காண்டல்

உசுகூ. எங்காம் புகலிடம்என் றெண்ணி இருள்வழிபோய்
வெங்கா னகந்திரியும் வேலேதனில்—அங்கேயோர்
பாழ்மண் டபங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து.

(இ - ள்.) (நளனும் தமயந்தியும் தங்கி இரவு நேரங் கழிப்பதற்காக) எங்கு ஆம் புகல் இடம் என்று - எவ்விடத்தில் கிடைக்கும் நாம் தங்குதற்கு இடமென, எண்ணி - நினேந்து, இருள்வழி போய் - அவ்விரவுப் பொழுதில் வழிக்கொண்டு நடந்து சென்று, வெம் கானகம் திரியும் வேலேதனில் - கொடிய காட்டில் (இடம்) தேடித் திரிகின்றபோது, பால் வெண் குடை நிழல் கீழ் - பால் போன்ற வெண்ணிறம் பொருந்திய தன் குடையின் கீழாக, வாழ் மண்டபம் கண்டான் வந்து - (அரசு முறை செய்து கொண்டிருந்த) மண்டபத்தை முன் கண்டிருந்தவன் ஈங்கே போய், அங்கே ஓர் பாழ் மண்டபம் கண்டான் - அக்காட்டில் மக்கள் குடியிருக்காது வறிதே இருக்கின்ற ஒரு மண்டபத்தைக் கண்டான்.

(க - ரை.) நளமன்னன் 'நாம் தங்குதற்கு எங்கேஇடங் கிடைக்கு'மென்று தேடித் திரியுங்கால், அங்கோர் பாழ் மண்டபத்தைக் கண்டான் என்பதாம்.

(வி - ரை.) இருள் வழி: இருளின்கண் வழி என விரிதலால் ஏழன்தொகை. வெம் கானகம், பாம்பும் பிற நச்சுயிர்களும்

புலி கரடி முதலிய கொடிய விலங்குகளும் ஓடித் திரிகின்றமை யானும், முள்ளும் கல்லும் முட்புதர்களும் மண்டிக் கிடத்தலானும், நினைப்பினும் நெஞ்சைச் சுடும் வெப்பமும் மிக்குப் பெருகி இருத்தலானும், அதன்கண் நள்ளிருளில் சென்றபோது அக் கொடுமை புலனாக 'வெங் கானகம் திரியும் வேலை' என்றார்.

நளமன்னன் தன் வெண்கொற்றக் குடைக்கீழ் அத்தாணி மண்டபத்தே கொலுவீற்றிருந்து, அரசு முறைதிறம்பாது காட்சிக் கெளியனாய்க் கருதுபேராளியனாய் வையகமுழுவதும் வறிஞன் ஓம்பும் ஒரு செய்யெனக் குடிகளைப் பாதுகாத்து அரசுபுரிந்தவனாதலால், அவனது அவ்வரசுச் சிறப்புத் தோன்ற 'வாழ் மண்டபம் கண்டான்' என்றார். பால் வெண்குடையின் என்பது, அவன் குடையினது வெண்மைச் சிறப்பு. பால்போன்ற வெண்ணிறம் என உவமத்தொகையாகவேனும், அன்றி ஒரு பொருளைச் சிறப்பிக்க வந்த ஒருபொருட் பன்மொழியாகவேனும் கொள்க. இதனை,

> [1]'வாகை வனமாலை சூடி அரசுறையும்
> ஓகை உயர்மாடம்.'

என்றார், முத்தொள்ளாயிரத்தும்.

நளமன்னனானவன் வேற்றரசர் திறை கொணரும் வேளையும், மாற்றரசர்பால் வெகுளும் வேளையும், அந்தணரும் அமைச்சரும் படையும் குடியும் சூழ்ந்து இன்னுரை பகர்ந்து நிற்ப மண்டபத்தில் இருந்தவன். இன்று காலக்கோட்பாட்டால் ஒரு காட்டில் - ஆள்வழக்கற்ற இருளில் - ஒரு மண்டபத்தைக் கண்டானென் பாராய் 'அங்கேயோர் பாழ்மண்டபம் கண்டான்' என்றார். பாழ் மண்டபம் - வெள்ளெருக்குப் பூத்து அறுகும் நெருஞ்சியும் மண்டிக் கிடக்கும் ஆள்வழக்கற்ற மன்றம். இங்கே நளனும் தமயந்தியுமே தேடிச்செல்ல இருவரையும் உளப்படுத்துரையாது, ஒருமைப்பாலதாய ஆண்பால் விகுதிபுணர்த்து நளன் கண்டானெனக் கூறுதல் என்னையெனின்? இற்கிழமை பூண்ட ஆடவர் மகளிருள் ஆடவனே சிறப்புடையனென்னும் கருத்துப்பற்றியென்க.

இச்சிறப்புமுறைபற்றியே 'பாழ் மண்டபங் கண்டான்' என, நளனோடு அடைவுபடுத்திக் கூறினாரேனும் இருவரும் கண்டாரென்றே கருத்தாகக் கொள்க. ஒருமைப்படுத்தி ஆசிரியர் கூறியிருத்தலால் அதற்கேற்றவாறே ஆங்கே பொருள் விரித்தாம். தமயந்தியுடன் என்னும் சொல் மறைந்துநின்றதெனக் கொள்ளலுமாம், (கக)

---

1. முத்தொள்ளாயிரம்: ௨0.

அம்மண்டபத்தில் நளன், தமயந்தி இருவரும் உறங்குதல்

உ௭0. மூரி இரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரும் இடம்மற்றுத் தான்இல்லை—சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்துயிலப்
போதராய் என்றான் புலர்ந்து.

(இ - ள்.) (நளன் தமயந்தியை நோக்கி) சோர் கூந்தல் மாதராய் - அவிழ்ந்து விழுங் கூந்தலையுடைய பெண்ணே!, மூரி இரவும்போய் முற்று இருளாய் மூண்டது-சிறிய இரவுப் பொழுதும் சென்று முற்றிய இருளாகத் திரும்பியது, நாம் சாரும் இடம் மற்று இல்லை - நாம் தங்கியிருத்தற்குரிய இடம் வேறு இல்லை (ஆகையால்), இந்த மண்டபத்தே - இந்த மண்டபத்தினிடத்தே, கண் துயில போதராய் என்றான் புலர்ந்து - படுத்துக் கண்ணுறங்குதற்கு வருவாயாக என்று மனம் வருந்திக் கூறினான்.

(க - ரை.) நளன் தமயந்தியை நோக்கிப், 'பெண்ணே! மிக்க இருளெல்லாம் சேர்ந்து நள்ளிருள் ஆயிற்று, நாம் இந்த மண்டபத்தே தூங்குதற்கு வருவாயாக'வென்று வருந்திக் கூறினான் என்பதாம்.

(வி - ரை.) மூரி - வலிமை. வேறொன்றி இருளைக் கொணர்வதால் துவக்ககால இருளாக இருப்பதால் அதற்குச் சிறிய என்று பொருள் கூறப்பெற்றது. இரவும் என்பதில் உம்மை இறந்தது தழீஇய எச்சம். முற்று இருள் - நள்ளிருள். 'நாம் கண்ட பாழ் மண்டபத்தே தூங்குதற்கு வருக' என்று தமயந்தியை நளன் அழைத்தான். சோர் கூந்தல்: முக்கால வினைத்தொகை. கண் துயிலல் - தூங்குதல். (கூஉ)

தமயந்தி வருத்தங் கொள்ளுதல்

உ௭க. வையம் உடையான் மகரயாழ் கேட்டருளும்
தெய்வச் செவிகோதுகின் சில்பாடல்—இவ்விரவில்
கேட்டவா என்றழுதாள் கெண்டையங்கண் நீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து.

(இ - ள்.) தோட்டவார் கோதையாள்-மலர் முடித்த நீண்ட கூந்தலையுடைய தமயந்தியானவள், வையம் உடையான் - மண்ணுலக வேந்தனுடைய, மகரயாழ் கேட்டு அருளும் தெய்வ செவி - மகர வீணையின் (அரிய இசையைக் கேட்டு இன்புறு

கின்ற சிறந்த காதுகள், இவ் இரவில் கொதுகின் சில்பாடல் - இந்த நள்ளிருளில் கொசுகுகளின் இன்பமற்ற ஓசைகளை, கேட்ட ஆ என்று சோர்ந்து - கேட்கும்படியன்றோ நேர்ந்தது என்று கூறித் தளர்வுற்று, கெண்டை அம் கண் நீர் சோர அழுதாள் - சேற்கெண்டைபோன்ற அழகிய தன் கண்களிலிருந்து நீர் பெருக அழுதாள்.

(க - து.) தமயந்தியானவள், 'உலகுக்கு வேந்தனானவன், தன் காதுகளில் மகரயாழின் ஒலியே கேட்பவன், இன்று கொசுகுகளின் இன்பமற்ற ஓசைகளைக் கேட்கும்படி நேர்ந்ததே' என்று கூறி வருந்தினாள் என்பதாம்.

(வி - ரை.) நாடு முழுதும் தன் செங்கோலாட்சி பெருக, 'உடையிலை நடுவணது இடைபிறர்க்கின்றி உலகை ஆண்ட' காவலன் என்பது தோன்ற, 'வையமுடையான்' என்றார். மகரயாழ் - மகரமீனின் வடிவாக அமைக்கப்பட்ட இசைக்கருவி. மகரயாழ் என்பது, பேரியாழ் சகோட யாழ் செங்கோட்டியாழ் மகரயாழ் என்னும் நால்வகை யாழினுள் ஒன்று இவ் யாழில் பிறக்கும் இசை, மிக்க இன்பம் தருவதாலும் இசையின் நுண்மை அளக்கலாகா அளவிற்றாய் நுணுக்கமிக்கதாக இருத்தலானும் அதைக் கேட்கும் காதுகளைத் 'தெய்வத் திருச செவிகள்' என்றார். சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம் இறைவனையே 'ஆரூர் சுவை ஏழோசையோ டெட்டுத்திசை தானாய்' எனத் திருஞானசம்பந்தரும், 'பண்ணவன் காண்' என நாவுக்கரசரும். 'ஏழிசையாய் இசைப்பயனாய் என்னரிய தோழனுமாய்' என, நம்பியாரூரரும், 'ஏழிசைச சூழல்' என மணிமொழிப் பெருமானும் இதன் நுண்மையும் அருமையும் அறிந்தே அருள்வாராயினர். கொதுகு - கொசுகு: த, ச, போலியாக வந்தது. சில்பாடல் - சிறு ஒலி; சிறப்பில்லாத ஒலியென்பதைக் குறிக்க வந்தது. கெண்டை அம் கண் - கெண்டை மீன் போன்ற அழகு பொருந்திய பிறழ்ச்சியுள்ள கண். தோடு + அ = தோட்ட. தோடு, இதழ். அது சார்ந்த மலரைக் குறித்தது. அகரம், பன்மை விகுதி. (கூஅ)

நளன், தமயந்திக்கு ஆறுதல்மொழி கூறல்

உஎஉ. பண்டை வினைப்பயனைப் பாரிடத்தில் ஆர்கடப்பார்
கொண்டல் நிழலிற் குழைதடவும்—கெண்டை
வழியல்நீர் என்றான் மனநடுங்கி வெய்துற்
றழியல்நீ என்றான் அரசு.

(இ - ள்.) அரசு - (இவ்வாறு தமயந்தி அழுதலைக் கண்ட) நளமன்னன், பண்டை வினைபயனை பார் இடத்தில் ஆர்கடப்பார் - முன்னைத் தீவினையின் விளைவை இவ்வுலகில் கடப்பவர் யார்? (ஒருவருமில்லை), கொண்டல் நிழலில்-மேகம் போன்ற கூந்தலின் சாயையிலே (இருந்து), குழை தடவும் கெண்டை வழியல் நீர் என்றான் - காதளவும் சென்று தடவுகின்ற கெண்டை மீன் போன்ற கண்களிலிருந்து அழுது நீரை வடிக்காதே என்றான், நீ மனம் நடுங்கி வெய்து உற்று அழியல் என்றான் - நீ மன நடுக்கங் கொண்டு பெருமூச்சுவிட்டு வருந்தி அழாதே என்று ஆறுதல் மொழி கூறினான்.

(க - நு) இவ்வாறழுத தமயந்தியை நளமன்னன் நோக்கிப் 'பழவினைப்பயனை யாரும் கடக்கவொண்ணாது; ஆதலால் கண்ணீர்விடாதே, மனம்நடுங்கிப் பெருமூச்சு விட்டு வருந்தி அழாதே' என்று தேறுதல் கூறினான் என்பதாம்.

(வி - ரை.) பண்டை - பழமை. முன்செய்த தீவினைகள். [1]'இம்மைச் செய்தது மறுமைக் காம்' என்பது நூல்வழக்கு.

[2]'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று.'

என்னும் அறநூல் வழக்கும் காண்க அறிஞராயினும் அரசராயினும் ஆற்றல்மிக்க வீரராயினும் தமக்கென முன்னரே ஊழ் வகுத்த முறைப்படி நிகழ்த்த, நீர்வழிப்புணைபோல அதன் வழியே தத்தம் நிலைமாறிச் செல்வாராகலின் 'பாரிடத்தில் ஆர் கடப்பார்' என்றார் ஆர், யார் என்பதன் மரூஉ: ஆனை, யானை, ஆடு யாடு, ஆறு யாறு என்பனபோல. கொண்டல் - நீர்கொண்ட மேகம். மேகம்போல் கருநிறமும் குளிர்மையுமுள்ள கூந்தலைக் கொண்ட லென நயம்பெறக் கூறினார்: உவம ஆகுபெயர். நிழல் - சாயல்; கூந்தலை அடுத்துள்ளது காதாகலான, 'குழைதடவும்' என்றார். குழை - காது. குழை (குண்டலத்தை) அணிந்திருப்பதால் ஆகுபெயராகச செவியைக் குறித்தது. கெண்டை போன்ற பிறழ்ச்சியும் குளிர்ச்சியும் வடிவமும் உடைய கண்களைக் கெண்டை என்றது, ஆகுபெயர். தமயந்திக்கு அரசச் செல்வத்தைத் துறந்து கற்களும் முட்களும் கண்ணடைத்துக் கிடக்கும் கொடுங்கானில் வந்து வாழவது நெஞ்சை ஆற்றொணாத் துன்பமாக அலைக்க உருக்கத்தோடு மணற்கேணிபோல் கண்களில் நீர்சுரந்துபாய அழுதவண்ணமாக இருந்ததை அறிந்த நளன், 'கெண்டைவழியல்

1. புறம் : கஅ௪. 2. திருக்குறள், உ0அ.

நீர்' என்று தேற்றினன் என்க. வழியல் - வடிக்காதே என்னும் பொருள்: தன்வினை பிறவினையாக வந்தது; 'கடியுமிடந் தேற்றாள்' என்றவிடத்துப் பிறவினை தன்வினையாக வந்ததுபோல. அழியல்: அல்லீற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்று; [1]"மகனெனல் மக்கட்பதடியெனல்' என்னும் குறளில் 'மகனெனல்' என, எதிர் மறைப் பொருள்தருதல் போல. அழியல் என்பதும் அப் பொருட்டேயாதல் தெளிக. (௩௬௪)

தமயந்தி, பின்னும் வருந்திக் கூறல்

௨௭௩. விரைமலர்ப்பூ மெல்லணையும் மெய்காவல் பூண்ட
பரிசனமும் பள்ளி அறையும்—அரைசேநான்
காணேன்இங் கென்னுக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணேர் முலையாள புலர்ந்து.

(இ - ள்.) பூண் நேர் முலையாள் - (பொன், முத்துமாலை முதலிய) அணிகள் பொருந்திய கொங்கைகளையுடைய தமயந்தியானவள், புலர்ந்து - வருத்தங்கொண்டு, அரைசே - வேந்தே!, விரைமலர்பூ மெல் அணையும் - மணம் பொருந்திய மலர் பரப்பிய பொலிவுள்ள மெல்லிய படுக்கைகளையும், மெய்காவல் பூண்ட பரிசனமும் - (நம்) உடற் பாதுகாப்பினராகிய ஏவலர்களையும், பள்ளி அறையும் - படுக்கைக்குரிய தனி வீட்டையும், இங்கு நான் காணேன் என்னு கண்பனிப்ப கலங்கினாள் - இவ்விடத்தே காண் கின்றேனில்லையே என்று கூறிக் கண்களில் நீர்தோன்ற வாட்ட முற்றழுதாள்.

(க - து.) தமயந்தியானவள் 'மணம்பொருந்திய மலர் பரப்பிய படுக்கையும் ஏவலாட்களும் தனிப்படுக்கை யறையும் இங்கே காணே' னென்று கூறிக் கலக்கமுற் றழுதாள் என்பதாம்.

(வி - ரை) அரசராயிருப்போர்க்குப் பல்வகைப் படுக்கை களும், பக்கத்தில் குறிப்பறிந்து பணியாற்றும் ஏவலாளரும், தனிப் படுக்கையறையும், பிறபிற எல்லாவகை இன்பப் பொருள்களும் உள்ளனவாகலின், இப்பாழ் மண்டபத்தில் இவைகள் ஏதுமின்றிக் கல்லினும் முள்ளினும் படுத்துக், கண்துயில் கொள்ளும் தன் காதற் கணவனாகிய நளமன்னன் தூங்குதலை மேற்கொண்ட தறிந்த தமயந்தி 'விரை மலர்ப்பூ......காணேன் இங்கென்னுக் கலக்கமுற்றாள்' என்க.

---

1. திருக்குறள், ௧௯௬.

மெல் அணை - மெல்லிய மெத்தை, தலையணை முதலியவைகள். பரிசனர் - வேலையாட்கள். இவரை 'அடியோர் பாங்கு' என்பர் இளங்கோவடிகளார். 'தன் துயர் காணாத் தகைசால் பூங்கொடி' யாகலான், தான் அக்கானில் துன்புறுவதை எண்ணாது தன் காதலற்கடுத்த துன்பத்துக்கே வருந்தினளென்க.

அரைசு - அரசு. அரசன், நளமன்னன்; அரைசு என வந்தது அகரம் ஐகாரமாகிய இடைப்போலி.

[1]"அ, ஐ முதலிடை ஒக்கும் ச ஞ ய முன்."

என்பது நன்னூல் விதி. இங்கே சகரத்தை அடுத்து வருதலான் அகரம் ஐகாரமாகத் திரிந்ததென்க. கண்பனித்தல் - கண்களில் நீரரும்பல். (௩௫)

நளன், மீண்டும் தமயந்திக்கு ஆறுதலுரைத்தல்

௨௭௪. தீய வனமும் துயின்று திசைதுயின்று
பேயும் துயின்றதால் பேர்யாமம்—நீயும்இனிக்
கண்மேல் துயில்கை கடன்என்றான் கைகோடுத்து
மண்மேல் திருமேனி வைத்து.

(இ - ள்.) (இவ்வாறு வாடி வருந்துகின்ற தமயந்தியை நளன் பார்த்து) மண்மேல் திருமேனி வைத்து - (நளன்) புழுதியில் தன் அழகிய உடலைப் படுக்கவைத்து, கைகொடுத்து - (தமயந்திக்குத் தலையணையாகத்) தன் கையை மடக்கிக் கொடுத்து, தீயவனமும் துயின்று - இக்கொடிய காட்டில் வாழும் மக்களும் விலங்கு பறவை முதலிய உயிர்களும் தூங்கி, திசை துயின்று - மற்றெல்லா இடங்களிலுமுள்ள எல்லா உயிர்களும் தூங்கி, பேயும் துயின்றது - (தூங்காமல் திரிகின்ற) பேய்களும் கூடத் தூங்கிவிட்டன; (ஆகையால்), இப் பேர்யாமம் - இந்த நடு இரவில், நீயும் இனிமேல் கண் துயில்கை கடன் என்றான் - நீயும் (இன்னும் விழித்திராமல்) தூங்குதல் கடமையாகும் (முறைமையாம்) என்று கூறினான்.

(க - ரு.) இவ்வாறு வருந்துகின்ற தமயந்தியை நளன் பார்த்து, தான் மண்ணில் படுத்துக்கொண்டு தன் கையை மடக்கித் தலையணையாகக் கொடுத்து, 'உலகிலுள்ள எல்லா வுயிர்களும் உறங்கிவிட்டன; இனி நீ உறங்குவதே முறைமையாகு'மென்று நளன் கூறினான் என்பதாம்.

1. நன்னூல், ௧௨௨.

(வி - ரை.) தீயவனம் - கொடுமைமிக்க வனம். வனத்தில் வாழும் மக்கள் விலங்குகள் ஊர்வன பறப்பன நிற்பனவாகிய எல்லாவகை உயிர்களையும் குறித்தலால் இடவாகுபெயர். எதற்கும் அஞ்சாது திரிகின்ற மக்களும் விலங்குகளுங்கூட அயர்ந்தன; தூங்க முற்பட்டன என்பதைக் குறிக்க, 'தீயவனமும் துயின்று' என்றார். திசை - இவ்வனமல்லாத மற்ற எல்லா இடங்களிலுமுள்ள உயிர்கள். துயிலல் - உறக்கங்கொள்ளுதல். பேய் - ஆவிவடிவம். அஃது ஊன் உண்ணும் வேட்கையால் அலைந்து கூத்தியர் முதலிய கீழோர் தங்குமிடம், கள் விற்குமிடம் முதலிய இடங்களிலெல்லாம், அவைகளை நுகர ஓடிஓடி அவாவித்திரியும். அவைகளும் தூங்கின என்பாராய், 'பேயும் துயின்றது' என்றார். துயின்றன என்னாது, துயின்றதென்று கூறியது சாதியொருமை; இரண்டு கண்ணும் சிவந்தது, [1]"இருநோக் கிவளுண்கண் உள்ளது" என்பனபோல. பேயும் என்பதில் உம்மை உயர்வு சிறப்புக் குறித்தது; [2]"மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கம்" என்பது போல. பேர்யாமம் - மிக்க இரவு. எனவே நடு இரவு. இவ் விரவை, [3]"புள்ளுந் துயின்று பொழுதிறு மாந்து கழுதுறங்கி, நள்ளென்ற கங்குல் இருள்வாய்ப் பெருகிய வார்பனிநாள்" என்றார், சேரமான் பெருமாள் நாயனாரும். துன்பத்தால் தமயந்தி வாடியிருப்பதறிந்த நளமன்னன், கடுஞ்சொல்லால் தூங்குக என்று கூறாமல் 'துயில்கை கடன்' என்று கூறினானென்க. [4]"நயம்பட வுரை" என்பது பெரியோர் திருமொழியாகலான். நளன் உடல், பல்வகையாகப் பாதுகாக்கப்பட்டுப் போற்றிவந்த உடலாகும். இன்று காலக் கோட்பாட்டினால், புழுதியே பாயலாகப் புரள வேண்டிய புன்கண் வந்துவிட்டமை தோன்றத் 'திருமேனி' என்றார். (கூசு)

**தமயந்தி, மண்மேற் படுத்திருத்தல் கண்டு நளன் வருந்தல்**

உஎரு. புன்கண்கூர் யாமத்துப் பூமிமேல் தான்படுத்துத்
தன்கண் துயில்வாளைத் தான்கண்டு—மென்கண்
பொடியாதால் உள்ளாவி போகாதால் நெஞ்சம்
வெடியாதால் என்றான் விழுந்து.

(இ - ள்.) விழுந்து - (நளன் எழுந்து மறுபடியும்) கீழே விழுந்து, புன்கண்கூர் யாமத்து - துன்பமிக்க இவ்விரவுப் பொழுதில், பூமிமேல் தான் படுத்து - மண்மீது கிடந்து, தன்கண்

1. திருக்குறள், ௧0௯௧. 2. திருமுருகு, ௪௨.
3. திருவாரூர் மும். உஎ. 4. ஆத்திசூடி, ௧எ.

துயில்வாளை தான் கண்டு - கண்ணுறங்குகின்ற தமயந்தியை நளன் பார்த்து, மென்கண் பொடியாது - என் மெல்லிய கண்கள் வெந்து சாம்பலாகாதிருக்கின்றதே, உள் ஆவி போகாது - உடலுள் நிற்கின்ற என் உயிர் இன்னும் போகாதிருக்கின்றதே, நெஞ்சம் வெடியாது என்றான் - என்மனம் இன்னும் வெடித்துப்போகாமல் இருக்கின்றதே என்றுகூறி வருந்தினான்.

(க - ரை.) தமயந்தி மண்மேற் படுத்துறங்குவதைக் கண்ட நளன், 'இதைப் பார்த்துக்கொண்டு என் கண்கள் வெந்து சாம்பலாகாமல் இருக்கின்றதே; என் உயிர் போகாமல் இருக்கின்றதே; மனம் உடைந்து போகாமல் இருக்கின்றதே' என்று கூறி வருந்தினான் என்பதாம்.

(வி - ரை.) மென்கண் - மெல்லியகண்; பிறர் துன்பங் கண்ட காலத்து இரக்கங்கொண்டு நீர் சொரிகின்ற தன்மையுடையது. வன்கண் - வலிமையாகிய கண். அது, [1]'விழித்தகண் வேல்கொண் டெறியினும் அழித்திமைக்காத கண்' என்பார் திருவள்ளுவனார். கண் பார்த்தவழி உண்டாகும் இரக்கத்தையே 'கண்ணோட்டம்' என்ற பெயர் அமைத்து அழைத்தனர், தமிழ்ச் சான்றோர். இதனை வள்ளுவர், [2]'கண்ணோட்டம என்னும் கழி பெருங் காரிகை' என்பர். இங்கே 'புன்கண்' புல்லியகண், அஃதாவது சிறுமையுடைய கண் என்னும் பொருளது. சிறுமையுடைய கண்ணாவது மனத்திற்கொண்ட துன்பத்தை-அன்பை-வெளிக்கொணர்ந்து காட்டுவது கண்ணே துன்பத்தாலும் இன்பத்தாலும் நீரை உகுப்பனவாகும். இதனை வள்ளுவர் [3]'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர், புன்கணீர் பூசல் தரும்' என்றதும், [4]'மண்டு பிணியால் வருந்து பிறவுறுப் பைக், கண்டு கலுழுமே கண்' எனச், சிவப்பிரகாசர் அருள்வதும் காண்க. துன்பத்தையே ஈண்டுப் 'புன்கண்' என்றார். தன் கண்ணால் தமயந்தி துன்புறுவதைப் பார்த்தும் தான் உயிர்வைத்திருத்தல் தகாதென்ற எண்ணத்தால் உந்தப்பட்டுத் துன்பம் அலையலையாக உருவெடுத்துவர அத்துன்ப அளவு தாங்கலாற்றாது, 'மென்கண் பொடியாதால்... ........வெடியாதால்...........' எனக் கூறி நொந்தனனென்க. மூன்றிடத்தும் வரும் ஆல் : அசை நிலைகள். கற்பார்க்கு அவலசுவை தோன்றுமாறு இருத்தற்கும் ஓசையின்பமூட்டற்கும் பொருத்தமாக ஒவ்வொரு சொற்றொடர் தோறும் அசை புணர்த்தார். (கஎ)

---

1. திருக்குறள், எஎரு-இன் கருத்து.

2, 3. திருக்குறள், ருஎக; எக. 4. நன்னெறி, உ0.

தமயந்தி, மீண்டும் நளனைப் பார்த்து வருந்துதல்

உஎகூ. முன்றில்தனில் மேற்படுக்க முன்தா னையுமின்றி
இன்று துயில இறைவனுக்கே—என்றனது
கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழுதாள்
மைபுகுந்த கண்ணீர் வர.

(இ - ள்.) (தமயந்தி மீண்டும் விழித்துக்கொண்டு) இறைவனுக்கு இன்று துயில - அரசனுக்கு இன்றைக்குத் தூங்குதற்கு, முன்றில்தனின்மேல் படுக்க - இப்பாழ் மண்டபத்தின் முற்றத்தின் மேல் படுத்துறக்கங் கொள்வதற்கு, முன்தானையும் இன்றி - ஆடையின் முன்பக்கமுமில்லாமல், என் தனது கைபுகுந்தது - என் கைகளே படுக்கையாக உதவிசெய்தன, என்உடைய கால் புகுந்தது - என்னுடைய கால்கள் உதவிசெய்தன, என்று - என்று சொல்லிச் சொல்லி, மைபுகுந்த கண்ணீர்வர அழுதாள் - மை தீட்டிய கண்களிலிருந்து நீர் பெருக்கெடுத்தோடத் தமயந்தி அழுதாள்.

(க - ரு.) தமயந்தி மீண்டும் உறக்கங் கலைந்தவளாகி, 'அரசனுக்கு விரித்துப் படுப்பதற்கு முன்தானைகூட இல்லாமல், என் கைகளும் கால்களுமே படுத்துக்கொள்ளும் படுக்கைகளாக இருந்தன' என்று சொல்லிச் சொல்லிக் கண்ணீர் சோர அழுவாளாயினள் என்பதாம்.

(வி - ரை.) முன்றில் : இல்முன் : சொன்னிலை மாறிய இலக்கணப் போலி; கடைக்கண், வாயில் என்பனபோல. முன்தானை: இதுவும் அப்போலியே. தமயந்திக்குத் தான்கொண்ட கவலை மிகுதியால் உறக்கம் வந்திலது. அன்றிரா ஓர் ஊழிபோல் தோன்றுகின்றது; எண்ண அலைகள் பலப்பல ஒன்றன்பின் ஒன்றாக எழுகின்றன. தான் வாழ்ந்த நிலை; தன் காதற்கணவன் நளமன்னன் உயரிய நிலை; அரசச் செல்வம்; இவைகளெல்லாம் மனக்கண்முன் காட்சியளிக்கின்றன. 'ஆ! இற்றை நாள் நிலையா இது! என்னே காலக்கோட்பாடு; பல்வகை அணைகள் எங்கே! மலர் விரித்த படுக்கைகள் யாண்டொளித்தன; ஏவலாளர் யாண்டுற்றனர்; மெய்காப்பாளர் எங்குச சென்றனர்; ஒருவரையுங் காண்கிலேன்; இஃதோர் பாழ் மண்டபம்; கல்லும் முள்ளும் செறிந்த மண் தரை; இதிற் படுக்கப் பாய்கூட இல்லை; முன்றானையை விரித்துப் படுப்பதற்கு வாய்ப்பில்லை; ஒற்றை ஆடை; இரு தலைப்புக்களையும் இருவரும் உடுத்துள்ளோம் என்று பொருமுகின்றாள்; அழுகின்றாள்; கண்கள் ஊற்றிருந்து

ஒழுகி நீரைப் பெருக்குகின்றன. இவ் அவல உருவத்தை ஆசிரியர் 'மை புகுந்த கண்ணீர்வர' என்றமைத்தார். 'கை புகுந்தது' கால் புகுந்தது' என்று கூறப் பெறுவன, நளன் தூங்குதற்குத் தன் கைகளே தலையணையாகவும் கால்களே படுக்கையாகவும் கொண்டு அமைந்துத் தூங்க உதவிய நிலையை. கைபுகுந்தது, கால் புகுந்தது என்பன, சாதியொருமையாக வந்தன. (கூஅ)

### தமயந்தி தூங்கியபின், நளன் விழித்துக்கொண்டிருந்து வருந்துதல்

உஎஎ. வீமன் திருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்
தாமம் எனக்களித்த தையலாள்—யாமத்துப்
பாரே அணையாய்ப் படைக்கண் துயின்றாள்மற்
றாரே துயரடையார் ஆங்கு.

(இ - ள்.) (தமயந்தி தூங்கிய பின் நளன் விழித்துக் கொண்டிருந்து) வீமன் திருமடந்தை - வீமராசனுடைய செல்வ மகள், விண்ணவரும் பெற்றிலா - வானுலக இந்திரன் முதலியோரும் விரும்பிக் கிடைக்காத, தாமம் எனக்கு அளித்த தையலாள் - திருமண மாலையை எனக்கே சூட்டிய காதற் கனிவுடையாள், யாமத்து - இந்த நள்ளிரவில், பாரே அணையா படைக்கண் துயின்றாள் - இம் மண்தரையே படுக்கையாகக்கொண்டு வேல் போன்ற கண்கொண்டு தூங்கினாள், ஆங்கு மற்று ஆரே துயர் அடையார் - (ஆகையால்) ஊழ் வலியினால் உலகில் யார்தாம் இதைப்போன்ற துன்பத்திற்கு உள்ளாகாதவர்கள் (ஒருவரும் இல்லை.)

(க - ரை.) நளமன்னன் விழித்துக்கொண்டு, 'விண்ணோர் விரும்பியும் அவர்கட்கு மாலை சூட்டாமல் எனக்கே திருமணமாலை சூட்டிய அன்புடையளான தமயந்தி, இன்று மண் தரையையே படுக்கையாகக்கொண்டு தூங்குகின்றாள்; ஊழ்வலியால் உலகத்தில் இதைப்போன்ற துன்பத்துக்கு உட்படாதவர் யாவர்?' என்றான் என்பதாம்.

(வி - ரை.) திரு மடந்தை: செல்வ மகள். வீமராசன் தவஞ் செய்து பெறலரும் செல்வமாகப் பெற்றவள் என்பது குறிப்பு. இதனால் செல்வக் குடியில் தோன்றிச் செல்வத்தில் வளர்ந்து உயர்ந்த நிலையில் இருந்த தமயந்தியின் மேன்மையை நளன் கருதினான். பின்னர் விண்ணுலக மன்னனான தேவேந்தி

ரன் முதலியோர் நரைதிரை மூப்பணுகா நலனுடையர்; கற்பக தரு, சிந்தாமணி, காமதேனு போன்றன அருளிய ஏவல் வரன் முறை கேட்ப இருக்கும் உயரிய வாழ்க்கையர்; அவர்கள் விரும்பித் தமயந்தியை மணக்க முன்வந்தனர்; அத்தகைய உயர்ந்த வாழ்க்கையையும் வேண்டாவென ஒதுக்கிச் செம்புலப் பெயல் நீர்போல, அன்புடை நெஞ்சம் நெஞ்சம் ஒன்று கலக்கத் தனக்கே மாலை சூட்டிய உயர் பண்புமிக்க அவள் தன் காத லன்பின் கட்டுவிடா நிலையையும் கருதினான்; இத்தகையாட்கா, இன்றுணை மகளிர்க்கு இன்றியமையாக் கற்புக்கடம் பூண்டாட்கா, இத்தகைத் துன்பநிலை; மண்மகளறியா வண்ணச் சீறடிகள் கல்லில் நடந்து கன்றின; முள்ளில் நடந்து புண்கள் முகிழ்த்தன; மலரினும் மெல்லிய வண்ணவுடல் எவ்விடத்தே கிடத்தப்பட் டுள்ளது? ஒரு பாழ் மண்டபத்தில்; முட்கள் செறிந்த இடத்தில்; மண் தரையில்; இதைத் தன் நெஞ்சகத்தில் எண்ணினான்; அவ் வெண்ணம் நெஞ்சிடத்தே மோதிற்று; மாயமோ என நினைந்தான்; வஞ்சமோ என மாழ்கினான்; பின் தெளிந்தான்; ஊழ்வினையால் யார்தாம் துயரடையார் எனத் தன் நெஞ்சோடு பேசினான். இவ் வலைகளை, நளன் எண்ணக் குமுறல்களை, உளத்தோற்ற ஒடுக் கத்தைப் புகழேந்தியார் நளன் வாயிலாக 'ஆரே துயரடையார் ஆங்கு' என்ற சொற்சித்திரத்தால் விளக்கினார்

படைக்கண் : உவமத்தொகை. படை இங்கே வேலைக் குறித் தது. ஆங்கு: இங்கே உவமை உருபாக வந்தது. (௬௬)

### கலிமகன், தமயந்தியைப் பிரிக்க நளன் மனத்தை வேறுபடுத்தல்

௨எ௩. பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தான் செங்கோலான்—பொய்ம்மை
விலக்கினான் நெஞ்சத்தை வேறாக்கி நின்று
கலக்கினான் வஞ்சக் கலி.

**(இ - ள்.)** வஞ்ச கலி - வஞ்சச் சூழ்ச்சிமிக்க கலிமகன், பெய் மலர் பூங்கோதை பிரிய - சூட்டப்பெற்ற மலர்களையுடைய அழகிய கூந்தலையுடைய தமயந்தியை நளனைவிட்டுத் தனியாகப் பிரிப்ப தற்கு எண்ணி, பிரியாத செம்மை உடை மனத்தான் - எக் காலமும் நீங்காத சிறந்த பண்புவாய்ந்த மனமுள்ளவனும், செங் கோலான் - நேரிய அரசாட்சியுடையவனும், பொய்மை விலக் கினான் - பொய்யான நெறிகளை ஒதுக்கி யொழுகுவோனுமான

நளமன்னனுடைய, நெஞ்சத்தை வேறு ஆக்கி நின்று கலக்கினான் - மனத்தை (முன் இருந்த திண்மை நிலையினின்றும்) வேறுபடுத்திக் கலக்கமடையுமாறு செய்தான்.

(க - து.) தமயந்தியின் பொருட்டாக வருந்திக் கொண்டிருந்த நளமன்னனுடைய கலங்காவுள்ளத்தைத் தமயந்தியினின்றும் நளனைப் பிரிப்பதற்கு எண்ணிக் கலக்கமுறச் செய்தான் கலி என்பதாம்.

(வி - ரை.) பெய்ம்மலர்: முக்கால வினைத்தொகை. பூ - பொலிவு. பிரிய: பிரிப்பதற்கென வருதலால் காரணப் பொருட்டாக எதிர்காலங் காட்டி வந்த செயவெனெச்சம். செம்மை - நடுவுநிலைமை: அஃதாவது, 'தக்காங்கு நாடித் தலைச் செல்லா வண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுத்து' நிறுத்தும் மனப் பண்பு. செங்கோல் - செவ்விய கோல்போன்றிருப்பதால் ஆகுபெயராக அறநெறிமாறா ஆட்சிமுறையைக் குறித்தது. பொய்ம்மை - உண்மைக்கு மாறுபட்ட செயல். இவைகள் நளன்கொண்ட ஒழுங்கு முறைகள். நடுவுநிலைமாறா மனம், செங்கோல்முறை, பொய்ம்மை நீக்கம் இவை, நளன் தான் வகுத்தொழுகிவரும் உயரிய பண்புகள். இவற்றை விடாப்பிடியாகக் கொண்டது அவன்றன் மனம்; அந்த மனமும் திரியுமாறு தன் சூழ்ச்சித் திறத்தால் கலக்கினான் எனக் காட்டுவாராய் 'நெஞ்சத்தை...... வஞ்சக் கலி' என்றார். இது உருபும் பயனும் உடன்தொக்க தொகை. மனத்தான், செங்கோலான் என்பன குறிப்புவினையாலணையும் பெயர்கள். கலக்கினான்: இறந்தகாலத் தெரிநிலை வினையாலணையும் பெயர். (௧00)

நளனுக்குக் கலியின் சூழ்ச்சியால் தமயந்தியைப்
பிரியும் எண்ணம் தோன்றல்

௨எ௧. வஞ்சக் கலிவலியான் மாகத் தராவளைக்கும்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல்—விஞ்ச
மதித்ததேர்த் தானை வயவேந்தன் நெஞ்சத்
துதித்ததே வேறோர் உணர்வு.

(இ - ள்.) மாகத்து அராவளைக்கும் - வானுலகத்தில் இராகு வென்னும் பாம்பு சூழ்ந்து பற்றுகின்றகாலை, செம்சுடரின் வந்த கரும் சுடர்போல் - செவ்வொளி காட்டும் சூரியனில் தோன்றும் கருநிற ஒளிபோல, விஞ்ச மதித்ததேர் தானை - (பகை வீரர்கள்)

மேன்மையாக எண்ணிய தேர்ப்படையையுடைய, வயவேந்தன் நெஞ்சத்து - வெற்றிமிக்க நளமன்னனது நெஞ்சத்திடத்தே, வேறு ஓர் உணர்வு உதித்தது - தன் இயற்கைக் குணத்தினின்றும் வேறுபட்ட புதிய ஓர் எண்ணம் தோன்றியது.

(க - ரு.) கலிமகன் வஞ்சத்தால் வானத்திலுள்ள செந்நிறச் சூரியனிடத்து இராகுக்கோள் சூழ்ந்து பிடிக்குங்கால் தோன்றும்கருநிற ஒளிபோல, நளமன்னனது நெஞ்சில் இயற்கைக்கு மாறுன ஓர் எண்ணம் தோன்றலாயிற்று என்பதாம்.

(வி - ரை.) மாகம் - வானம். அரா - பாம்பு பாம்பு வடிவமைந்த இராகுவென்னும் கோள். அது சூரியனைச் சார்ந்து விழுங்குங்காலே சூரியனது இயற்கையான ஒளி மழுங்கி, கருநிற ஒளி தோன்றுவதைக் காண்கின்றோம். அதுபோன்று, நளன் மனம் நடுவுநிலே, செங்கோல்முறை, பொய்ம்மை நீக்கம், இவற்றைக்கொண்ட நேரியமனம். அது, கலியின் சூழ்ச்சியால் வேறுபட்டது; அதனுல் வேறோர் எண்ணம் தோன்றிற்று; அது இயற்கை முரணனது; சிறந்ததன்று என்று ஆசிரியர் தமயந்தியைப் பிரிய எண்ணிய நளன் எண்ணத்தைச் சொல்வதற்கு அஞ்சினவராய், சொற் சித்திரத்தில் உடனே கூறுதற்கு உள்ளம் ஒவ்வாராய் 'வேறோர் உணர்வு' என்னும் சொற்றொடரால் குறித்தார். இத்தன்மை நல்லிசைப்புலமை வல்லுநரான புலவர்களிடத்தே காணப்படும் உயரிய பண்பு. 'சொல்லின் தொகையறிந்த தூய்மையவர்' இவ்வாறே சுட்டுவர். அறுபான் மும்மைத் தொண்டருள் ஒருவரான மெய்ப்பொருள் நாயனுரை அவர் பகைவனுகப் போந்த முத்திநாதன், பொய் தவ வேடங்கொண்டு புகுந்து, வாளால் எறிந்து அவரை மாளச் செய்த கொடுஞ் செயலே, இவ்வாறே சொல்ல நாணினராய்ச் சேக்கிழாரடிகள் [1]'நினைந்தஅப் பரிசே செய்ய' என்றருளினுர். (௧0௧)

**நளன், ஒன்றுக உடுத்துள்ள ஆடையை அரிய எண்ணுதல்**

உ௨0. காரிகைதன் வெந்துயரம் காணுமல் நீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கும் ஒருயிர்போல் எய்தியதோர் ஆடை
அரிதற் கவன்நினைந்தான் ஆங்கு.

1. பெரியபுராணம், மெய்ப்பொருள் : ௧௫.

(இ - ள்.) அவன் - அந்த நளமன்னன், காரிகைதன் வெம் துயரம் காணாமல் - தமயந்தி தன்னுடன் வருகின்ற கொடிய துன்பத்தைத் தான் காணாதிருக்கும் பொருட்டு, நீத்து - அக் கானில் விட்டுவிட்டு, அந்த கூர் இருளில் போவான் குறித்து எழுந்து - அந்த மிக்க நள்ளிருட்போதில் போவதற்கு எண்ணி எழுந்து, இருவர்க்கும் ஓர் உயிர்போல் எய்தியது ஓர் ஆடை - தாம் இருவர்கட்கும் ஒரே உயிர்போன்று ஒரே ஆடை உடுத் துள்ளமையால், நேரே ஆங்கு அரிதற்கு நினைந்தான் - அந்த ஆடையைச் சரிபாதியாக அவ்விடத்தே அரிந்து துண்டாக்க எண்ணினான்.

(க - து.) நளமன்னன், தமயந்தி தன்னுடன் வருவ தால் நேரும் துன்பங்களைக் காணாதிருத்தற் பொருட்டு, அக்காட்டில் விட்டுச் செல்ல எண்ணினவனாய், இருவரும் ஒரே ஆடை உடுத்துள்ளமையால் அதை அரிந்து துண்டாக்க எண்ணினான் என்பதாம்.

(வி - ரை.) காரிகை - அழகு: அதை உடையாட்கு ஆனது ஆகுபெயர். கூர் இருள் - மிக்க இருள்: பேயும் உறங்கும் பேரிருள். நேர் - பாதியளவு. முன்பு, நளன் ஆடையைப் பறித்துக் கொண்டு பறவை சென்றகாலை, இருவரும் ஒரே ஆடையை உடுத் தனர்; அப்போது, 'ஆவிபோல் ஆடையுமொன்றானதே' என்றார். அதையே தம் நினைவில் நிறுத்தி அவ் ஆவி தனித்து இரண்டாகப் பிரிவதுபோல் ஆடையை அரியக் கருதினான் என்று கூறுதற்கு, 'இருவர்க்கும் ஒருயிர்போல் எய்தியதோர் ஆடை' என்று தங் கோள் நிறுவிக் கூறினார். சதுரப்பாடமைந்த புலவர் பெரு மக்கள், தாம் குறித்தவற்றை இடைவிடாது புலப்படுத்திக் கூறி அதன் சிறப்பை, உயரிய பண்பை அதன்மூலம் நிலைநாட்டுவர்.

கம்பநாடர் தாம் ஆக்கிய தமிழ்ப் பெருங்காப்பியத்தில், காதைத் தலைவனாகிய அயோத்தி வேந்தல், நாடுநீத்துக் காடு நண்ணினானாக, அதை அறிந்து வந்த அவன் இளவலாகிய பரதன், காட்டிற்கு அவனை அழைத்துச் செல்லப் போந்தான்; அக் காட் டில் இராமன் தோழனாகிய குகனைக் கண்டான்; உரையாடினான்; அவன் வினவியகாலை, அவனுக்குத் தன் தமையன் என்றோ முன் பிறந்தானென்றோ குறிக்காமல், 'மன்னனைக் கொணர்வான் வந்தேன்' என்றும், இன்னும் பல்லிடத்தும் இவ்வாறே குறித்தல் காணலாம். அதுபோன்றே ஈண்டும் ஆசிரியர் குறிக்கின்றா ரென்க. அரிதல் - அறுத்தல். அவன் என்பது, வருந்துவதே இயற்கையாகக் கொண்ட நிலையுடையான் என, நளனைக் குறித்தது. (கO௨)

**கலி, வாளாக உருக்கொண்டு நளன் பக்கலில் கிடத்தல்**

உ௩க. எண்ணிய எண்ணம் முடிப்ப இகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்-பண்ணினுக்குக்
கேளான தேமொழியை நீங்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து.

(இ - ள்.) இகல்வேந்தன் கண்ணியதை அறிந்து - இவ்வாறாக வலிமைமிக்க வேந்தனான நளன் கருதியதைத் தெரிந்துகொண்டு, காய்கலியும் - (நளன் தமயந்தி இருவர்பாலும்) சினங்கொண்டுள்ள கலிமகனும், பண்ணினுக்கு கேளான தேம் மொழியை நீக்க - இசைக்கு உறவென்னும்படியான தேன் போன்ற சொற்களையுடைய தமயந்தியை வேறு பிரிக்கும்படியாக, எண்ணிய எண்ணம் முடிப்ப - தான் முன்னரே நினைந்திருந்த எண்ணத்தை முற்றுவிப்பதற்கு, கிளர் ஒளிசேர் வாளாய் வந்து மருங்கு இருந்தான் - விளங்குகின்ற ஒளிமிக்க ஒரு வாள் வடிவத்துடன் வந்து அவன் பக்கத்தில் கிடந்தான்.

(க - ரு.) நளன் எண்ணத்தை அறிந்த கலியானவன், தன் எண்ணத்தை முடிப்பதற்கு இதுவே ஏற்றகாலமென எண்ணி, நளன் பக்கத்தில் ஓர் கூரிய வாளாக உருக்கொண்டு வந்து கிடந்தான் என்பதாம்.

(வி - ரை.) எண்ணிய எணணம் - கலிதான் முன்னரே சூளுரை செய்து எண்ணியிருந்த எண்ணம். இகல் - வலிமை. கணணுதல் - எண்ணுதல். காய்தல் - சினம்: வெறுப்பு. தமயந்தியின் சொற்கள் குழலினும் இனிமையுடையவையாகலான், 'பண்ணினுக்குக் கேளான தேமொழி' என, ஏற்றங்கொடுத்துக் கூறினார். கேள் - உறவு: கிளை. பண்ணினுக்கு உறவாவது, இசை போன்ற இனிமை. இனிமையான பொருள்களில் வைத்து எண்ணும்போது இவள் மொழியும் ஒன்றாக வைத்து எண்ணப்பெறும். 'இனம் இனத்தோடு சேரும்' என்பது பழமொழி. [1]"பால் வேண்டும் வாழைப்பழம்' என்றார் சிவப்பிரகாசரும். 'கிளரொளிசேர் வாள்' என்றது, கூர்மையுடைய வாளென்பதைக் குறித்தற்கு. கூர்மையின்றேல் எதையும் அரிதற்கு இயலாதாகலின், அடைபுணர்த்துக் கூறினார். நளன் கைக்கு எட்டுமளவிற்கு வாளாக வந்து கிடந்தான் என்பாராய் 'வாளாய் மருங்கிருந்தான்' என்றார். மருங்கு - பக்கம். முடிப்ப: காரணப்

1. நன்னெறி, ௩௫.

பொருட்டாய்வந்த செயவெனெச்சம். காய்கலி : முக்கால வினைத் தொகை. பண்ணினுக்கு என்பதிலுள்ள நான்கனுருபு நேர்ச்சிப் பொருளில் வந்தது. தேன்போன்ற மொழியுடையாளைத் தேமொழியென்றது ஆகுபெயர். (கЈ௫)

**நளன் ஆடையை அரிந்து மனநிலைகைத்திருத்தல்**

உ௮உ. ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றும்தன் அன்பை முதலோடும்—பற்றி
அரிந்தான் அரிந்திட் டவள்நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து.

(இ - ள்.) *ஒற்றை துகிலும் உயிரும் இரண்டு ஆக* - (நளனைவன்) தாம் உடுத்தியிருந்த ஒரே ஆடையும் ஒன்றாக இணைந்திருந்த நளன் தமயந்தியிருவருயிரும் தனித்தனியே இரண்டாகப் பிரியுமாறு, *முற்றும் தன் அன்பை முதலோடும்* - நாள்தோறும் வளர்ந்து வருகின்ற பேரன்பை அடியோடு, *பற்றி அரிந்தான்* - பிடித்து அரிவான்போல் அரிந்தான், *அரிந்திட்டு* - அவ்வாறு அறுத்தபின், *அவள்நிலைமை நெஞ்சில் தெரிந்தான்* - அத் தமயந்தி (அக்காட்டில் தன்னந்தனியாக) இருக்கும் நிலைமையை ஆராய்ந்தான், *திகைத்து இருந்தான்* - (ஒன்றுந் தோன்றாமல்) மயங்கியிருந்தான்.

(க - து.) நளன், தமயந்தி இருவருக்கும் ஒன்றாக இருந்த ஒற்றையாடையை ஒன்றாக இணைந்திருந்த தம் இருவருயிரையும் தனித்தனியே பிரிந்திருக்குமாறு அறுத்ததுபோல் அறுத்தான்; அறுத்தபின் அவள் நிலையை எண்ணித் திகைததான்; ஒன்றுந்தோன்றாமல் இருந்தான் என்பதாம்.

(வி - ரை.) பிரிவின்றியைந்த துவரா அன்பினால், இருவரும் ஒரே ஆடை உடுத்திருந்தனர். அவ்வாடையை நளன் அறுத்து இரண்டாகத் துண்டித்தது, அவ்வன்பையே, நாள்தோறும் வளர்ந்து வளர்ந்து நிலத்தினும் பெரிதாய், வானினும் உயர்ந்ததாய், நீரினும் அளவின்றாய் இருந்த நட்பையே வேரோடும அறுத்ததாக இருந்ததால் 'அன்பை முதலோடும் பற்றி அரிந்தான்' என்றார். பின் அவள் நிலைமை எண்ணினான் ; ஆள் வழக்கற்ற கொடுங்காடு; பாம்பும் பேயும் புலியும் கரடியும் பிற நச்சுயிர்களும் வாழும் காடு; அக்காட்டில் தன்னந்தனியாக, உதவியற்ற நிலையில் தமயந்தி இருக்கும் நிலையைக் கருதினான் ;

துன்பம் மிகுந்தது; திகைப்புற்றான்; ஒன்றுந் தோன்றாமல் செய்வதொன்றறியாது இருந்தான்; அவன் நிலையை, அவன் மனத்துன்ப அலையை, அருஞ்சொல்லோவியத்தால் 'நெஞ்சில் தெரிந்தான், இருந்தாள், திகைத்து' என்று தாமே தருகித் தருகிக் கூறினார், ஆசிரியர். தெரிந்தான் என்பதைத் தெரிந்து என முற்றெச்சமாகக் கொள்ளலுமாம். (௪0௪)

**நளன், தமயந்தியைப் பிரிந்து செல்லலாற்றாது வருந்துதல்**

உ௮௫. போய்ஒருகால் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த அடுபாலின்—தோயல்
கடைவார்தம் கைபோல ஆயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.

(இ - ள்.) காலன் வடிவுஆய வேலான் மனம் - (இவ்வாறு திகைத்து நின்ற) கூற்றுவன் உருவமே தன் உருவமாக அமைந்த வேற்படை கொண்ட நளமன்னனுடைய நெஞ்சகமானது, ஒருகால் போய் மீளும் - ஒருமுறை (தமயந்தியிடஞ் சென்று) திரும்பும், ஒருகால் புகுந்து மீண்டு ஏகும் - ஒருமுறை நளனிடத்தில் வந்து சேர்ந்து மறுமுறையும் தமயந்திபாற் செல்லும், ஆயர் கொணர்ந்த அடுபாலின் தோயல் - இடையர்கள் கொண்டுவந்த காய்ச்சிய பாலினாலாய தயிரினை, கடைவார்தம் கைபோல ஆயிற்று - கடைகின்றவராகிய ஆய்ச்சியருடைய கைகள்போன்ற தன்மையுடையதாய் இருந்தது.

(ரு - ரை.) தமயந்தியைப் பிரிந்து செல்ல எண்ணிய நளமன்னனது மனமானது, தயிர்கடைகின்ற ஆய்ச்சியர் கைபோல் தமயந்திபால் செல்வதும் மீண்டு வருவதும் பின்னும் அவள்பால் போவதுமாக இருந்தது என்பதாம்.

(வி - ரை.) தமயந்தியை, மேற்கூறியவாறு கொடிய கானில், அதினும் நள்ளிரவில், தன்னந்தனியாக விட்டுவிட்டுப் போவதற்கு நளனுக்கு மனம் ஒவ்வவில்லை; அம்மனம் ஒருகால், போகும்படி தூண்டுகின்றது. மற்றொருகால் 'இங்கே எவ்வாறு தனியே விட்டுச் செல்கின்றது?' என, எண்ணுகின்றது; தயங்குகின்றது; மயங்குகின்றது; தமயந்தியை நினைக்கின்றது; அப்பால் நினைவு மயங்கி நிற்கின்றது; மீண்டும் தமயந்தி நிலையை யெண்ணுகின்றது. இந்நிலை மாறிமாறி வருவதால், அதை உவமமாக உணர்த்த ஆசிரியர் கருதினார். முல்லை நிலவாணராகிய இடையர்கள், நல்லபாலை ஆக்களினின்றும் கறந்துகொணர்கின்றனர்; தம் இல்லக்கிழத்தியரிடம் கொடுக்கின்றனர் அதை அவ் ஆய்ச்சியர்;

நன்றாகக் காய்ச்சிப் பிரைஊற்றி வைக்கின்றனர்; அது தயிராக மாறுகின்றது. அதனைக் கடைகின்றனர்; மத்தினால் தயிர் கடையும்போது அவர்தம் அங்கைகள் போவதும் வருவது மாக இருக்கும். அது போன்று, நளமன்னன் மனம் ஒருநிலை கொள்ளாது தத்தளித்து நின்றது; இதனைத், 'தோயல் கடைவார் தம் கைபோல ஆயிற்றே' என்ற உவமத்தால் விளக்கினார். ஆய்ச்சியர் தயிர்கடை கைகள், நளமன்னன் மனத்துக்கும், அக் கைகளால் இயக்கப்படும் தயிர்கடை மத்து, நளன் பிரிய எண் ணும் எண்ணத்துக்கும், இவ்விரண்டாலும் தமயந்தியைப் பிரிந்து செல்லும்நிலை, தயிர் உடைவுக்குமாகப் பொருத்தி உவமமாகக் கொள்க. தோயல்: தொழிலாகு பெயராகத் தயிரைக் குறித்தது. காலன் வடிவு: காலனது உருவம்: அஃதோடு தொடர்புபட்ட செயலுக்கு வந்தது. காலன் போன்று கொல்கின்ற கொடுமை யைக் குறித்தது. [1]"காலனும் காலம் பார்க்கும் பாராது, வேலீண்டு தானை விழுமியோர்' என்றார் பிறரும். காலன், ஒருவன் வாழ்நாள் எல்லை கழிந்தபின்னரே அவன் உயிரைக் கொள்ளைகொள்வான். அதனாலேயே அவனை, [2]" ஆட்பார்த் துழலும் அருளில் கூற்று' என்று கூறுவாராயினர் ஆனால், இவ்வேல் கொண்டார், அத்தகையரல்லர். நினைத்தால் முடிக்கும் போாற்றல் உடையார். அத்தகைய வேற்படையைக் கொண்டவ னாக இருந்தும், ஊழின் வலியால் தன் ஆற்றல் அடங்க, வேல் வெளிவராது இருப்ப, இருளில் மனையாளை விட்டுவிட்டுப் பிரிய எண்ணிய கொடுமை கொடிது! கொடிது! மிகக் கொடிது! அந்தோ! 'மாயத்தாற் சூழ்ந்தது அனைத்தே விதியின் வலியன்றோ' என, இரக்கக்குறிப்புக் காட்டுவாராய், ஆசிரியரே கவன்று, 'காலன் வடிவாய வேலான் மனம்' என்றார். (௪0௫)

**நளன் மனம், தமயந்தியை விட்டுப்பிரிய உறுதிகொள்ளல்**

௨௪௪. சிந்துரத்தாள் தெய்வ முனிவன் தெரிந்துரைத்த
மந்திரத்தால் தம்பித்த மாநீர்போல்—முந்த
ஒலித்ததேர்த் தானை உயர்வேந்தன் நெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து.

(இ - ள்.) தெய்வ முனி - தெய்வத்தன்மையுடைய நாரத முனிவரானவர், சிந்துரத்தாள் தெரிந்து உரைத்த - யானைமா முகக் கடவுளின் திருவடிகட்கு நன்குணர்ந்து கூறிய, மந்திரத்

1. புறம். ௪௧.
2. நாலடியார், ௨0.

தால் - மந்திர மொழியினால், தம்பித்த மாநதிபோல் - அசைவற்று நின்ற பெரிய கங்கையாற்றைப் போலாக, முந்த ஒலித்த தேர்த் தானை - போர்க்களத்தில் முன்னணியாக நின்று முழங்குகின்ற தேர்ப்படையையுடைய, உயர்வேந்தன் நெஞ்சம் - சிறந்த நள மன்னனது மனமானது, தீ கலியால் வந்து வலித்தது - கொடுங் கலியின் சூழ்ச்சியினால் (தமயந்திபால் நின்றும் மீண்டு) வந்து (பிரிந்துசெல்ல வேண்டுமெனக் கருதிய எண்ணம்) முதிர்ந்தது. (எனவே, பிரிந்துபோக முடிபுசெய்தான்.)

**(க - ரை.)** நளமன்னன் மனமானது, கலியின் சூழ்ச்சியினால், தமயந்திபால் நின்றும் திரும்பிவந்து தமயந்தியை விட்டுப் பிரிந்துசெல்ல வேண்டுமென்னும் எண்ணத்தை வலிமைப்படுத்திற்று. எனவே, பிரிந்துசெல்ல முடிபுசெய் தான் என்பதாம்.

**(வி - ரை.)** சிந்துரம் - யானை. அந்த முகத்தையுடைய விநாயகருக்கு ஆயிற்று: ஆகுபெயர். தாள் - திருவடி. விநாயக ருடைய கால்களில் என்பது போந்த பொருள். தெய்வமுனிவன் - தெய்வத்தன்மை வாய்ந்த முனிவன் என்பது பொதுப்பெய ரேனும், ஈண்டு நாரதமுனிவரைக் குறித்தது. நாரதமுனிவர் ஒரு கால் கங்கைக் கரையிலிருந்து பிள்ளையார் வழிபாடு செய்யுங்கால் அவ்வழிபாட்டுக்கு இடையூறாக் கங்கை பெருகிவந்து கெடுக்க முற்பட்டதாம். அதுகாலை நாரதர் நிட்டைகூடி இருந்தா ரென்றும், அதை விண்ணுலக யானையாகிய ஐராவதம் அறிந்து நாரதருக்கு அறிவிக்கு முகத்தால் அதன் தும்பிக்கையால் நீரை அவர்மீது வாரி இறைத்ததென்றும், அப்பால் கண்விழித்துப் பார்த்து முழுதும் தெரிந்து மந்திரமொழிகூறி, நீரை அசையாமல் திரண்டு நிற்குமாறு செய்தாரென்றும், பின் வழிபாடு முடித்துச் சென்றாரென்றும் கூறும் கதை ஒன்றுண்டு. இக்கதை **சைமினி பாரதத்**திலிருப்பதாய்ப் பௌராணிகர் கூறுவர். பிற்காலத்தி லெழுந்த புராணக் கதையின் வரலாற்றை வைத்து இங்கே உவமை கூறினார். கங்கைநீர் முழுதும் நாரதர் கூறிய மந்திரத் தினால் இறுகிப் பனிக்கட்டியாக நின்றதுபோல, தமயந்திபால் பேரன்பால் இளகி வருந்திநின்ற நளமன்னன் நெஞ்சு, கலியின் சூழ்ச்சியால் திரிந்து தமயந்திபால் நின்று மீண்டு பிரிவதென்ற உறுதிகொண்டது என்பதைக் குறிக்க, இவ்வுவமையை எடுத் தாண்டார். இது, 'மந்திரத்தால் தம்பித்த மாநதிபோல்' என்னும் தொடரால் குறிக்கப்பெற்றது காண்க. புலவர்கள், தாம் அறிந்த ஒன்றைத் - தம் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைத் - தாம் கூறப் போகும் பொருள்களுக்கு உவமையாகவோ வரலாறாகவோ

அமைத்துரைப்பது இயற்கை. அம்முறையில் இங்கே இவர் இக் கதையை எடுத்தாண்டார்.

சங்ககாலப் புலவர்கள் தாம் ஆக்கிய நூல்களிலோ அன்றித் தனிச் செய்யுட்களிலோ இவ்வாறே கையாண்டுள்ளமையைப் பல இடங்களில் காணலாம். அவைகளையெல்லாம் ஈண்டு விரிப்பின் பெருகுமாதலான், எடுத்துக்காட்டுக்காக மட்டும் ஈண்டொன்று காட்டுவாம். சங்ககாலப் புலவராகிய பரணர், அகநானூற்றினும் புறநானூற்றினும் பல பாடல்கள் யாத்துள்ளனர். அவர் உள்ளம் பரந்துபட்ட பண்புடையது; அம்மனம், வரலாற்றுண்மையை அமைத்துக் காட்டுவதினும் விருப்பமுடையது. எனவே, அவர் காலத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளை - உண்மை வரலாறுகளை - ஆங்காங்கே அவர் அமைக்கும் செய்யுட்களில் உவமையாகப் பொருத்திக் காட்டுவர்.

இரவுக்குறிக்கண் வந்து நீங்குந் தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்வோனாய் அமைத்த பாடலொன்றில், மாந்தரம் பொறையன் கடுங்கோ என்னும் வள்ளலின் சிறப்பை உவமமாகக் கூறித் தன் நெஞ்சை உவக்குமாறு தலைவன் சொற்றதாகக் கூறுகின்றார். 'அவ்வள்ளலைப் பாடிச் சென்ற புலவர், பாணர் தம் இரக்குங் கொள்கலம் நிறையுமாறுபோல நீயும் நிறைவு பெற்று மகிழ்க நெஞ்சே' என, நெஞ்சொடு பேசுவதாகத் தம் காலத்திருந்த தம்மால் கேள்விப்பட்டு வரலாற்று வழக்காறாகவுள்ள ஒரு குறிப்பைத் தருகின்றார். அக்குறிப்பு வருமாறு:

[1]"இலமலர் அன்ன அம்செந் நாவில்
புலமீக் கூறும் புரையோர் ஏத்தப்
பலர்மேந் தோன்றிய கவிகை வள்ளல்
நிறையருள் தானை வெல்போர் மாந்தரம்
பொறையன் கடுங்கோப் பாடிச் சென்ற
குறையோர் கொள்கலம் போல நன்றும்
உவவினி வாழிய நெஞ்சே.'

என்பதாம். இவ்வாறே இவரும் பிற சான்றோரும் பழங்கால வரலாற்றுண்மைகளை உவம வாயிலாகக் காட்டியதைப்போலவே, இவரும் ஈண்டு, இப்புராணக்கதையை விரித்து உவமமாகக் காட்டினார். மற்ற இடங்களிலும் அவ்வவ் இடங்கட்கேற்ப வரலாறுகளையும், உயர்ந்த உவமங்களையும் அமைத்து, நமக்கு அறிவுதிருந்தமுதூட்டுவர் ஆசிரியர், புகழேந்தியார். (௧0௬)

1. அகம் ௧௪௨.

## நளன், காடுறை தெய்வங்களை வேண்டுதல்

உ௮ரு தீக்கா னகத்துறையும் தெய்வங்காள்! வீமன்தன்
கோக்கா தலியைக் குறிக்கொண்மின்—நீக்காத
காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்
றேதிலன்போல் போகின்றேன் யான்.

(இ - ள்.) தீ கானகத்து உறையும் தெய்வங்காள் - கொடிய இக் காட்டிடத்தே வாழ்கின்ற தெய்வங்களே!, வீமன்கோ காதலியை - வீம மன்னனுடைய அரசமகளை, நீக்காத காதல் அன்பு மிக்காளை - யாராலும் பிரிக்கவொண்ணாத ஆசையும் அன்பும் மிக்க தமயந்தியை, கார் இருளில் கைவிட்டு - இந்தக் கரிய இருளில் ஒன்றியாயிருக்க இக் காட்டில் விட்டுவிட்டு, யான் இன்று ஏதிலன்போல் போகின்றேன் - நான் முன் பின் தொடர்பற்ற அயலான்போன்று இப்போது செல்கின்றேன், குறி கொள்மின் - நீங்கள் உங்கள் பாதுகாவலுக்கு இலக்காக்கிக்கொண்டு இடையூறு வாராது காப்பாற்றுங்கள் (என்று நளன் கூறி வேண்டினான்).

(க - ரை.) நளனானவன், 'வனத்தில் வாழ்கின்ற தெய்வங்களே! நான் என் காதற்கிழத்தியாகிய தமயந்தியை இக்கொடிய காட்டிடத்தே விட்டுவிட்டு அயலான்போல் செல்கின்றேன்; நீங்கள் உங்கள் பாதுகாப்புக்குரிய இலக்காக வைத்து இடையூறு வாராது அவளைக் காப்பாற்றுங்கள்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) தீ கானகம் - நெருப்புப்போல் சுடுகின்ற காடு. தீ - கொடுமை. கொடுமையாவது, புலி கரடி முதலிய பொல்லா விலங்குகளும் பாம்பு தேள் முதலிய நச்சுயிர்களும் நிறைந்திருக்கும் இயற்கை. நளன் தமயந்தியைத் தன்னந்தனியாக விட்டுவிட்டுச் செல்லும்போது, அவளுக்கு இவைகளால் இடையூறு நேருமோ என, அஞ்சுகின்றான்; வருந்துகின்றான்; பின்னர்த் தெளிவு பிறக்கிறது, இக் காட்டிலுள்ள வனதேவதைகள் காப்பாற்றுமென்று. அதனால் அத்தெய்வங்களை நோக்கி வேண்டுகோள் விடுக்கின்றான். 'வீமன் கோக் காதலியை' என்றான். அரும் பெறல் தவஞ் செய்து பெற்று வளர்த்துப் பேறெனக் கொண்டாடியவனுக்கன்றோ தன் மகளின் அருமை தெரியும்; அஃது அறியாமல் தான் பிரிகின்றோமே என்ற வருத்த மேலீட்டினால் இவ்வாறு கூறி வேண்டி, அன்புமிக்காளை, என் அன்பைப் பிரிக்க முடியாத திண்ணன்புக் காதலியை, விட்டுவிட்டு

அயலான்போல் போகின்றேன். நீவிர் காத்தருளுங்கள் என்பானாய்க் 'குறிக்கொண்மின்' என்றான். குறிக்கொள்ளல் - பார்வையிற் கொள்ளுதல். கார் - கருமை. கரிய மேகம்போன்று கறுத்த இருளென்று கூறினுமாம். (கO௭)

நளன், பின் தமயந்தியைக் காட்டில் உறங்கவிட்டுப் பிரிந்து செல்லல்

உ௮௬. ஏந்தும் இளமுலையாள் இன்னுயிரும் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினான்—தீந்தேன்
தொடைவிரவு நாள்மாலை சூட்டினாள் தன்னை
இடைஇருளில் கானகத்தே இட்டு.

(இ - ள்.) (நளன்) தீம் தேன் தொடை விரவு - தித்திக்கும் தேனுள்ள மலர்களில் பொருந்திய, நாள் மாலை சூட்டினாள் தன்னை புதிய மலர் மாலையைச (சுயம்வரத் திருநாளில்) சூட்டித் (தன்னை) மணந்த தமயந்தியை, இடை இருளில் கானகத்தே இட்டு - நடு இரவுப் பொழுதில் காட்டில் (தனித்து உறங்குமாறு) விட்டுவிட்டு, ஏந்தும் இளமுலையாள் இன் உயிரும் - நிமிர்ந்துள்ள இளங் கொங்கையாளாகிய அத் தமயந்தியினது இனிய உயிரும், தன் அருளும் - தன்னுடைய இரக்கப் பண்பும், பூந்துகிலும் வேறு ஆக போயினான் - அழகான ஆடையும் வெவ்வேறாகப் பிரியும்படி சென்றான்.

(க - து.) நளன், சிறிதும் இரக்கமின்றித் தனக்கே மாலை சூட்டி மணந்த தமயந்தியை அந்த நள்ளிரவுப் பொழுதில் தன்னந் தனியாகத் தூங்கும்படி காட்டில் விட்டு விட்டுச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) ஏந்துதல் - உயர்ந்து மேலோங்குதல். "[1]அண்ணாந் தேந்திய வனமுலை' என்றார் பிறரும். அவள் தன் இளம் பருவத்தைக் குறிக்க இவ்வாறு கூறினார். மூத்து உலகியல் அறிந்தவளாக இருப்பினும் எதற்கும் அஞ்சாதிருப்பள். இவள் அஞ்சுகின்ற அறியாப் பருவத்தினள் என்பதை விளக்க 'ஏந்தும் இள முலையாள்' என்றார்: குறிப்பு வினைப்பெயர். இன் உயிர் - இனிய உயிர். யாருக்கும் அவரவர் உயிர் உயரியது; சிறந்தது; அவ்வுயிரை எவ்வாற்றானும் பேணுதல் வேண்டும். இதனை "[2]இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின்' என்றார் வள்ளுவரும்.

1. நற்றிணை, கO. 2. திருக்குறள், க0௬௨.

இங்கே நளன் உயிர் வேறு, தமயந்தி உயிர் வேறு என இல்லை. இருவருயிரும் ஒருயிராகப் பிணிப்புண்டு ஒன்றுபட்டிலங்கியது; [1]"உயிரொன்று உளமும் ஒன்று ஒன்றே சிறப்பு இவட்கு என்னோடு என்னக்' கொண்ட நளன், தன்னுயிரெனப் போற்றிய தன் காதற்கிழத்தியைப் பிரிய நேர்ந்த கொடுமையை 'இன்னுயிரும்' என்றார். இருவருயிரும் ஒன்றுபட்டிருந்தது போலவே ஆடையும் ஒன்றாக இருந்தது; அதையும் அரிந்தான்; வேறாக்கினான்; அவனுக்கு இவள் இளையளாயிற்றே; இல்லாளாயினளே; நாம் இரக்கக் குணமுள்ளவனெனக் கொள்ளப்படுகின்றோமே; இருவருக்கும் ஓராடையாயிற்றே; இதை அரியலாமா? என்றெல்லாம் கருதாதவனாய் நடந்துகொண்டானாதலால், 'பூந்துகிலும் வேறாகப் போயினான்' என்றார். ஒன்றுபட்டுக்கிடந்த அன்பு, தன்னோடு இடைவிடாதிருந்த இரக்கம் (அருளுணர்வு), பூந்துகில் ஆகிய மூன்றும், இதுகாலை ஒன்றுபடவில்லை, நளனால் வேறாக்கப் பட்டது; பிரிக்கப்பட்டது என்பதை, 'வேறாகப் போயினான்' என்ற சொற்றொடரால் விளக்கினார். (கஙஅ)

இதுவும் அது

உஅஎ. தாருஎனப் பார்மேல் தருசந் திரன்சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூர்இருளில்
சேங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகந்தனிலே வேந்து.

(இ - ள்.) வேந்து - நளமன்னனானவன், தாரு என பார் மேல் தரு சந்திரன் சுவர்க்கி - இம்மண்ணுலகில் விண்ணுலகக் கற்பக தருவென்னும்படி இரவலர்களெல்லாம் வரையாது வழங்குகின்ற 'சந்திரன் சுவர்க்கி' யென்னும் பெயரையுடைய, மேருவரை தோளான் விரவார் போல் - இமயமலைபோன்ற உயர்ந்த படர்ந்த தோள்களையுடையவனை எதிர்த்த பகை மன்னர்களைப்போல, கூர் இருளில் வெம்கானகம் தனிலே தேவியை விட்டு - மிக்க இருட்பொழுதில் கொடியகானில் தமயந்தியைத் தனித்து நீங்கி, செம்கால் நகம் சிதைய ஏகினான் - தன் சிவந்த கால்களின் நகங்கள் தேயும்படி நடந்து சென்றான்.

(க - நு.) சந்திரன்சுவர்க்கி மன்னனின், பகைவேந்தர்கள் அஞ்சிச் செல்வதுபோல, நளமன்னன் தமயந்தியைக் காட்டில் விட்டுப் பிரிந்து விரைந்து சென்றான் என்பதாம்.

1. திருக்கோவையார், கஅ.

(வி - ரை.) தாரு - தரு : முதல் நீண்டது. அது ஒருவகை மரம். விண்ணுலகில் அரிசந்தானம் முதலிய பெயர்களையுடைய ஐந்து தருக்களும், சங்கநிதி பதுமநிதி என்னும் இருவகை நிதியங்களும், சிந்தாமணியென்னும் ஒருவகை மணியும், காமதேனுவென்னும பசுவும் இருப்பனவாகப் புராணங்கள் கூறும். அவை வேண்டிய வேண்டியாங்கு கொடுக்கும் நீர்மையுடையனவென்பதும் புராண மரபு. அம்முறையில் ஐந்துவகை மரங்களையும் கூறித் தம்மைப் புரந்து பெருமைப் படுத்திய வள்ளலான சந்திரன் சுவர்க்கியை இங்கே உவமவாயிலாகச் சுட்டிக்காட்டி, நளன் விரைந்து சென்ற நிலைக்கு, வருந்திய தன்மைக்குத் தொழிலுவமயாக அமைத்து, 'சந்திரன்சுவர்க்கி.........விரவார் போல்' என்றார். இவவாறே முன்னரும் பல இடங்களில் ஆசிரியர் தம்மைப் போற்றிய சந்திரன் சுவர்க்கிக்கு நன்றி தெரிவிக்குமுகத்தால் கூறியுள்ளமை போன்றே ஈண்டும் கூறினார்.

செம்மை + கால் = செங்கால் - சிவந்த அடிகள் ; நளன் தமயந்தியை விட்டுப் பிரிந்து செல்லுங்கால் 'எங்கே விழித்துக் கொள்வாளோ ? விழித்தால் நம்மைத் தொடர்வாளே' என்ற எண்ணம் உந்தக் கல்லோ முள்ளோ செடியோ கொடியோ புதரோ குழியோ என்று பாராது விரைந்து போயினனாதலால், அக் காட்டிலுள்ள கல் முதலியன இடறி, இவன் கால நகங்களைப் பேர்த்து வருத்தியதை, 'செஙகால் நகம் சிதைய' என்றார். வெம்மை + கானம் = வெஙகானம் : இவை பண்புப் பெயராகலான் [1]'ஈறுபோதல்.........' என்னும் நன்னூல் விதிப்படி ஈற்று 'மை' கெட்டுப் புணர்ந்தன. (௧0௧)

தமயந்தி, விழித்துக்கொண்டு நளனைக் காணமல் வருந்தல்

உ௮௮. நீலம் அளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்—வேல்வேந்தே
எங்குற்றாய் என்ன இனவளைக்கை நீட்டினாள்
அங்குத்தான் காணா தயர்ந்து.

(இ - ள்.) மலரின் கொடி இடையாள் - மலர்களையுடைய கொடிபோன்ற இடையையுடையளாகிய தமயந்தியானவள், (விழித்து,) அங்கு தான் காணாது அயர்ந்து - அவ்விடத்தே (நள மன்னனைக்) காணாமல் வருந்தி, நிரைமுத்தின் கோலம் நீலம் அளவே நெகிழ - வரிசை வரிசையாக முத்துப்போன்ற கண்ணீர்த்

1. நன்னூல், ௧௩௬.

துளிகளானவை கருநீலமலர் போன்ற (தன் கண்களின்) அளவாகப் பெருகியோட (அழுதுகொண்டு), வேல்வேந்தே - வேற்படைக்குரிய அரசே!, எங்கு உற்றாய் என்று - (என்னைவிட்டு) எங்கே போயினாய் என்று கூறி, இனவளை கைநீட்டினாள் - பல்வகை நிறமுடைய வளையலணிந்த தன் கைகளை நீட்டிக் கீழே தடவிப் பார்த்தாள்.

(க - ரை.) நளன், தமயந்தியை நீத்துச் சென்றபின்; தமயந்தி விழித்தாள்; மன்னனைக் காணாள்; வருந்தினாள்; அழுதாள்; கண்களிலிருந்து முத்துப்போல் கண்ணீர் பெருக்கெடுத்தோடின; 'வேந்தே எங்குச் சென்றாய்' என்று கூறித் தன் கைகளை நீட்டித் தடவிப் பார்த்தாள் என்பதாம்.

(வி. - ரை.) நீலம் - குவளைமலர், குவளைமலர் போன்ற கண்களுக்கு ஆகுபெயர். நிரைமுத்து - வரிசையாகத் தொடுத்த முத்தினம். இங்கே கண்ணின் நீர்த்துளிகளுக்கு ஆகுபெயர். தமயந்தி விழித்துப் பார்த்தவுடன் தன் கணவனைக் காணாததால் வருந்தினாள்; அழுதாள். அக் காட்சியை 'நீலமளவே............நிரைமுத்தின் கோலம்' என்ற அழகிய சொற்றொடரினால் உணர்த்தினார். மலரின் கொடி - மலருடன் அமைந்த கொடி. கொடி இலையும் பூவுமின்றி வெறுங்கொடியாக இருப்பின் சிறவாது; அழகும் இராது. தமயந்தியின் அழகுருவம் ஒரு கொடியிற் கிளைத்த மலர்கள்போல் கண்ணும் முகமும் மார்பும் கையும் இருத்தலால் உறுப்புகட்கு மலர்களை உவமங் கூறுமுறை பொருந்த 'மலரின் கொடி இடையாள்' என்றார். அம்மை திருவுருவத்தை வருணிக்கப் போந்த பரஞ்சோதியார், [1]'குமிழலர்ந்த செந்தாமரைக் கொடி முகிழ்கோங்கின், உமிழ்தரும் பரஞானம்' என்று குறித்ததும் அறிக. இனவளை - பல்வகை நிறமும் வடிவும் அமைந்த பல்வகை வளையல்கள். நீட்டினாள் - நீட்டித் தடவிப் பார்த்தாள் என்னும் பொருளில் வந்தது. அயர்த்தல் - அலுத்தல் என உலகவழக்கில் மக்கள் வழங்குப. அது, வருத்தம் என்னும் பொருளது. (கக0)

**உடுத்த ஆடை அரிந்திருப்பது கண்டு தமயந்தி ஏங்குதல்**

உ௲கக உடுத்த துகிலரிந்த தோண்டோடியாள் கண்டு
மடுத்த துயிலான் மறுகி—அடுத்தடுத்து
மன்னே எனஅழைப்பாள் மற்றுமவ னைக்காணா
தென்னேயிஃ தென்னென் றெழுந்து.

1. திருவிளையாடல். திருநகரப். கள.

(இ - ள்.) மடுத்த துயிலான் - (தன்னைத் தனக்குள்) அடக்கிய உறக்கத்தின் உதவியால், உடுத்த துகில் அரிந்தது - இருவருக்கும் ஒன்றாக உடுத்திருந்த ஆடையை (நளன்) துண்டாக்கிக்கொண்டு சென்றதை, ஒண்தொடியாள் கண்டு - ஒளி பொருந்திய வளையலணிந்த தமயந்தியானவள் பார்த்து, மறுகி - வருத்தமுற்று, மற்றும் அவனை காணாது - அஃதன்றித் தன் காதற் கணவனாகிய நளமன்னனையும் காணகிலாமல், இஃது என்னே என் என்று எழுந்து - இஃது என்ன காரணமோ என்ன காரணமோ? என்று கூறிக்கொண்டு எழுந்துநின்று, அடுத்து அடுத்து மன்னே என அழைப்பாள் - அடிக்கடி வேந்தே! வேந்தே!' என்று கூவி அழைப்பவளாக இருந்தாள்.

(க - ரை.) தானும் அவனும் உடுத்திருந்த ஓராடை அரியப்பட்டிருப்பதைக் கண்டு வருந்திய தமயந்தி, நளனைக் காணாததால், 'இஃதென்னே! என்னே' என்று கூறிக்கொண்டு எழுந்திருந்து, 'மன்னே! மன்னே!' என்று அழைத்துக்கொண்டே இருந்தாள் என்பதாம்.

(வி - ரை.) மடுத்த - உட்கொண்ட; தன் வயமாக்கிய. 'இஃதென்னே என்' என வரும் அடுக்குகள், அவலம்பற்றி வந்தன. மறுகுதல் - கவலுதல்; வருத்தத்தால் மயங்குதல். அழைப்பாள் என்பது, அழைத்தாள் என்னும் பொருளது. ஈண்டு இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாக வந்த காலவழுவமைதி.

கண்ணகியார் தெய்வக்கோலம் காட்டியபோது கண்டவர்கள் வியந்து,

> [1]"என்னே இஃதென்னே இஃது
> என்னே இஃது என்னேகொல்
> ..............................
> மின்னுக் கொடியொன்று
> மீவிசும்பில் தோன்றும்.'

என, இவ்வாறே அடுக்காக வியப்புப் பொருளில் வந்ததறிக.

உலகிலுள்ள எல்லாவுயிர்களையும் காக்கின்ற பெருமைமிக்க வேந்தன், தமயந்தியைக் காவாமல் காட்டில் விட்டுவிட்டுப் போவது அறமுறைக்குச் சாலாதென்பாராய்த் தமயந்தி வாய் வழியாக உயிர்களை நிலைபெறச் செய்வோன் மன்னனுகலானும்

---

1. சிலப். உக : க.

முறைசெய்து காப்பாற்றும் வேந்தற்கு இது தகாது என்னு
தன்மையானும் கொண்ட கருத்தினை விளக்குதற்கு 'மன்னே
என்ற சொல்லாற் கிளப்பாராயினர். (கக

### தமயந்தி, தரையைத் தடவிப்பார்த்து நளனைக் காணாது அலறி விழுதல்

உகூ0. வெய்ய தரையென்னும் மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டெவ்விடத்தும் காணமல்-ஐயகோ
என்னப்போய் வீழ்ந்தாள் இனமேதி மென்கரும்பை
தின்னப்போ நாடன் திரு.

(இ - ள்.) மேதி இனம் - எருமைமாட்டுத் திரள்க
மென் கரும்பை தின்னப்போ நாடன் திரு - மெல்லிய கரு
களைத் தின்பதற்குச் செல்லுகின்ற வயல்வளம் செறிந்த விதர்ப
நாட்டுமன்னன் செல்வமகளாகிய தமயந்தியானவள், வெய்ய தரை
என்னும்-கொடிய தரையாகிய, மெல் அமளியைத் தடவி-வருத்து
கின்ற கரடுமுரடான படுக்கை இடத்தைத் தன் கைகளா
தடவிப் பார்த்து, கை அரி கொண்டு எவ் இடத்தும் காணாம
பல்லிடங்களிலும் தேடித்திரிந்து எந்த இடத்தினும் நளனை
காணாதவளாய், ஐயகோ என்ன போய் வீழ்ந்தாள் - ஐயோ
என்று அலறி அழுதுகொண்டு அப்பாற்போய்க் கீழே விழுந்தா

(க - து.) தமயந்தியானவள் தரையாகிய படுக்கை
யிடத்தைத் தன் கைகளால் தடவிப்பார்த்து நளனை
காணாதவளாய், 'ஐயோ' என்று அலறிக்கொண்டு அப்பா
போய்க் கீழேவிழுந்தாள் என்பதாம்.

(வி - ரை.) வெய்யதரை - வெப்பமிகுந்த மண்ணிட
மெல் - மெல்லுகின்ற, தின்பதுபோல் வருத்துகின்ற என்னு
பொருளது. மெல்லிய படுக்கை என்பது ஈண்டுப் பொருந்தா
அக்காட்டு இடம் கற்களும் முட்களும் செறிந்த கரடுமுரடா
இடம் ஆகலான் என்க. அன்றிப் படுக்கை இயற்கை முறையா
கூறினர் என்றலுமாம் கை அரித்தல்: கைகளால் ஆரா
தெடுத்தல். நெல்லும் கல்லும் கலந்திருந்தால நெல்லையும் கல்
லும் வேறுபிரித்து நெல்லை யெடுத்தல். அதைப்போல் இங்
தேடுதற் பொருளில் வந்தது. அரிப்பரித்தல் என்னும் செ
லானும் இதனை வழங்குவர். இது விரைந்து தேடுதலைக் குறி
தது. [1]'அரிப்பரித்தாங் கெய்த்துப் பொருள் செய்திடல்' எ

1. நீதிநெறி விளக்கம், அ.

னும் நீதிநெறி விளக்கச் செய்யுளில் வருவதும் காண்க. எனவே, 'கையரிக்கொண்டு' என்றார். ஐயகோ : இரக்கக் குறிப்புச சொல. வீழ்தல் - கீழே சாய்தல். நளனைத் தேடிக் காணாத அயர் வால் தமயந்தி வருந்திக் கீழே வீழ்ந்தாளென்க. விதர்ப்பநாடு விலங்குகட்கும் நீரும் நிழலும் தந்து உணவூட்டிக் காக்குந் தகையது; அத்தகைய நாட்டிற் பிறந்தாள் இன்று இங்கு நீரும் நிழலுமற்ற கொடுங்காட்டில் தன்னந்தனியாகத் துணையின்றி வருந்துகின்றாள் என்னும் குறிப்பை உணர்த்த 'இனமேதி......... நாடன்திரு' என்றார். விதர்ப்பநாட்டுச் செல்வச் செழிப்புக் கூறியவாறுமாம். திரு - திருமகள் போன்றாள் என்றலுமாம். (கக௨)

இதுவும் அது

உகக. அழல்வெஞ் சிலைவேடன் அம்புருவ ஆற்று
துழலும் களிமயில்போல் ஓடிக்—குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தாள் இருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி.

(இ - ள்.) வீமன் கொடி - வீமன் பெற்ற கொடி போன்ற தமயந்தியானவள், வேடன் வெம்சிலை அழல் அம்பு உருவ - வேடனது கொடிய விலலினின்றும் தொடுத்து விடப்பட்ட தீ போன்ற அம்பு தைத்துச செல்ல ஆற்றாது உழலும் களிமயில் போல் ஓடி - அதைப் பொறுக்கலாற்றாமல் வருந்துகின்ற இள மயில்போன்று ஓடி அலைந்து, குழலவண்டு எழுந்து ஓட - கூந்த லில மொய்த்திருந்த வண்டுகள் பறந்துசெல்லவும், இரு குழை மேல கண்ணீர் கொழுந்து ஓட - இரண்டு காதுகளின் பக்கலில் கண்ணீர்த் தாரைகள் பெருகியோடவும், வீழ்ந்தாள் - கீழே விழுந்து அழுவாளாயினாள்.

(க - து.) வேடன்விட்ட அம்பினால் ஆற்றாது வருந் திக் கீழே விழும் மயில் போலக் கூந்தலின் வண்டுகள் பறந் தோட, கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிக் காதுகளின் பக்கலில் வழிந்தோட, அழுதுகொண்டு கீழே வீழ்ந்தாள் என்பதாம்.

(வி - ரை.) 'அழல் வெஞ்சிலை வேடன் அம்புருவ' என்னும் சொற்றொடரை முன்பின்னாக மாற்றிப் பொருளியையுக் கேற்ப அமைத்துப் பொருள் கூறப்பட்டது : கொண்டுகூட்டுப் பொருள் கோள். வேடனுடைய வில்லம்பு தைத்த இளமயிலானது, தன் தோகைகள் குலைய உடல்நடுங்க நாலுபக்கமும் அலைந்து மயங்கிக்

கீழே வீழ்ந்த தன்மைபோல், இங்கே தமயந்தியானவள், நளன் பிரிவென்னும் துன்ப அம்பு தன் நெஞ்சகத்தைக் கிழிப்ப, அது தாங்கலாற்றாது, கூந்தல் குலைந்து அவிழ்ந்து தொங்க, அதில் தேனுண்ணத் தங்கியிருந்த வண்டுகள் பறந்தோட, கண்கள், காது வழியாக ஓடும்படி நீர்பெருக்கப், பலபக்கலினும் நளனைத் தேடிக் காணாது தலமந்து கீழே வீழ்ந்தாள் எனக்கொள்க.

> [1]"வலைப்படு மஞ்ஞையின் நலஞ்செலச் சாஅய்
> நினைத்தொறுங் கலுழுமால் இவளே."

என்றார், குறிஞ்சிப் பாட்டினும்.

கண்ணீர்க் கொழுந்து - கண்ணீரின் இடைவிடா ஒழுக்கு. எழுந்தோட கொழுந்தோட என்னும் செயவெனெச்சங்கள் வீழ்ந் தாள் என்னும் வினைகொண்டு முடிந்தன. 'வீமன் கொடி' என்பது தமயந்தியின் குடிப்பிறப்பு மேன்மையைக் குறிக்கவந்த அருஞ்சொல். முன்னரும் 'வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம்' எனவும் பிறண்டும் கூறுவர் (ககந)

இதுவும் அது

உகூஉ. வான்முகிலும் மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானும் குழலும் தனிவீழ்ந்தாள்—ஏனம்
குளம்பான் மணிகிளைக்கும் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைதலைமேல் இட்டு.

(இ - ள்.) ஏனம் - பன்றிகளானவை, குளம்பான் மணி கிளைக்கும் குண்டுநீர் நாடன் - தம் காற்குளம்பினால் கிண்டி மணி களை மேலெழும்பச் செய்கின்ற ஆழமிக்க நீர்நிலைகள் மிக்க விதர்ப்பநாட்டுக்குரியனான வீமமன்னனுடைய, இளம்பாவை தலைமேல் கை இட்டு - இளமையுள்ள பாவைபோன்ற மகளாகிய தமயந்தியானவள் தன் கைகளைத் தலைமேல் வைத்துக்கொண்டு, வான்முகிலும் மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல் - வானத்தி லுள்ள மேகமும் மின்னலும் வெறுந்தரையில் வீழ்ந்த தன்மை போல, தானும் குழலும் தனிவீழ்ந்தாள் - தமயந்தியும் அவள் கூந்தலும் யாதொரு துணையில்லாத இடத்தில் விழுவாளானாள்.

(க - ரு.) கார்மேகமும் மின்னலும் வெற்றிடத்தே விழுந்த தன்மைபோல, தமயந்தியானவள், தானும் தன்

---

1. குறிஞ்சிப்பாட்டு, உ௰ - க.

கூந்தலும் துணையில்லாத இடத்தில் விழுவாளாயினுள் என்பதாம்.

(வி - ரை.) வான்முகில் - வானத்திலிருக்கின்ற கருக்கொண்ட மேகம். முகில்: முக+இல்=முகில்: முகத்தலையுடையது. அஃதாவது நீரை நிறையக்கொள்ளுதலையுடையது என்பது பொருள் தமயந்தி கையைத் தலைமேல் வைத்தபடியே கீழே விழுந்த காட்சி, சூல்கொண்ட மேகமும் மின்னற்கொடியும் கீழே விழுந்தனபோல் இருந்ததென்றார். கூந்தலுக்கு மேகமும் அவள் உடலுக்கு மின்னலும் உவமமாகக் கொள்க. ஏனம் - பன்றிகள். அவை, தம் இரைக்காக நிலத்தைக் கிண்டுகின்றன; விதர்ப்பநாட்டு மண்ணில் நெல்லும் கரும்பும் செழிப்புடன் வளர்வதால் அவைகளிலிருந்து உண்டான முத்துக்கள் உதிர்ந்து பதிந்துகிடக்கின்றன; அவை பன்றிகள் கிளைக்குங்கால் மேலே வருகின்றன; அன்றி மணிக்கற்கள் விளையும் நிலங்களாக இருப்பதால் மண்ணின் அடியிலிருந்து இரத்தினக் கற்கள் மேலே கிளம்புகின்றன என்று கொள்ளலுமாம். இதனால் அந்நாட்டு வளங்கூறியவாறாயிற்று. இவ்வாறே நக்கீரர் திருவீங்கோய்மலை அந்தாதியில்,

[1] "ஏனம் உழுத புழுதியினை மணியைக்
கானவர்தம் மக்கள் கனலென்னக் கூனல்
இறுக்கங் கதிர்வெதுப்பும் ஈங்கோய்.'

என்றதும், ஞானப்பாலுண்ட நன்ஞானசம்பந்தர், தம் தேவாரத் திருத்தமிழில்,

[2] 'மைம்மா நீலக் கண்ணியர் சாரல் மணிவாரி
கொய்ம்மா ஏனல் உண்கிளி ஓப்புங் குற்றாலம்.'

என்றருளியதும், அவ்வந்நிலப் பண்பினால் இரத்தினங்கள் பெருகியுள்ளமையைக் காட்டியவாறும். இளம்பாவை - நல்லுருவமைந்த பாவை போன்றாள். தானும் குழலும் என்பன, வீழ்ந்தாள் என்னும் ஒருமை முடிபு ஏற்றன; 'இரண்டு கண்ணும் சிவந்தது' என்பதுபோல: சாதியொருமை. அன்றிச சினை வினை, முதல் வினை கொண்டு முடிந்ததென்றலுமாம்.

[3] "சினைவினை சினையொடு முதலொடும் செறியும்.'

என்னும் நன்னூல் நூற்பாவின் விதிப்படி கொள்க. (கககச)

---

1. திருவீங்கோய் மலையெழுபது, கச.
2. திருஞானசம். தேவாரம். கக : க.
3. நன்னூல், கூசரு.

இரவு கழிந்து விடியற்பொழுதில் கோழிகள் கூவல்

உகூ௯. தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்-வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்.

(இ - ள்.) *கோழிக்குலம் - கோழிக் கூட்டங்கள், தையல் துயர்க்கு தரியாது - தமயந்தியின் துன்பங்கண்டு மனந்தாழாது, தம் சிறகுஆம் கையால் வயிறு அலைத்து - தம்முடைய சிறைகள் என்னும் கைகளினால் தம் வயிற்றில் அடித்துக்கொண்டு, வெய்யோனை - சூரியனை, வாவுபரி தேர் ஏறி - தாவிச்செல்கின்ற குதிரை பூட்டிய தேரின்மீது ஏறிக்கொண்டு, வா என்று அழைப்பனபோல் - வருக என்று கூவி அழைப்பவை போன்று, கார் இருள்வாய் கூவின - கரிய இருள் சூழ்ந்துள்ள அப்போது கூப்பிட்டன.*

(க - ரு.) *தமயந்தி படுகின்ற துன்பத்தைப் பொறுத கோழிக் கூட்டங்கள், தம் சிறகுகளென்னும் கைகளினால் தம் வயிற்றை மோதியடித்துக்கொண்டு சூரியனை விரைவில் தேரேறி வருகவென்று அழைப்பன போன்று கூவின என்பதாம்.*

(வி - ரை.) *துன்பம் மிகுந்த காலத்துப் பெண்கள் தம் வயிற்றிலடித்துக்கொண்டு அழுவது இயற்கை. காட்டிலுள்ள கோழிகள், இரவு கழிந்து விடியற்காலப்பொழுது வருவதை அறிந்தன; அறிந்தவுடன் மகிழ்ச்சியால் தம் சிறகுகளை அடித்துக் கொண்டு கூவின. இதனை ஆசிரியர், தமயந்தி வருந்தும் துன்பங் கண்டு இரக்கங்கொண்டு கோழிகள் தம் இறகுக் கைகளினால் தம் வயிற்றில் அடித்துக்கொண்டு சூரியனை விரைவில் வருகவென அழைப்பன போன்றிருந்ததெனத் தற்குறிப்பேற்ற அணிகொடுத்துக் கூறினார். இக் கருத்தோடொப்ப,*

[1]"*கண்டுநெஞ்சு கலங்கிஅஞ்சிறை யானகாமர் துணைக்கரம்
கொண்டுதம்வயி றெற்றிஎற்றி விளிப்பபோன்றன கோழியே.*'

*என்றார், கம்பரும். கார் இருள் - கருநிறமுள்ள வைகறை நேரம். இரவும் பகலும் போதலும் வருதலுமாகிய வேளை. வெய்யோன் - வெப்பமுடையவன் : அன்றி யாவராலும் விரும்பத் தக்கவன்*

1. *கம்பராமா. அயோ, கைகேசி : சஎ.*

என்றலுமாம். வாவென்றல் - வருகவருகவென வரவேற்றல். கூவின: இறந்தகாலப் பலவின்பாற் படர்க்கை வினை. "கூவின கோழி"[1] என்றார் பிறரும். "பொறிமயிர் வாரணம் குறுங்கூ விளிப்ப"[2] என்றார் மணிமேகலையினும். காலைப்பொழுது வருவதை, விடியற்காலையைக், 'கூவினவே கோழிக்குலம்' என்ற சொல்லாற் குறித்தார். இவ்வாறு குறிக்கவே, விடியற்காலமாயிற்றென்ப தாம். (கக௫)

## சூரியன் தோற்றம்

உகூச. வான நெடுவீதி செல்லும் மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று.

(இ - ள்.) வான நெடுவீதி செல்லும் மணித்தேரோன் - வானமாகிய நீண்ட தெருவின் வழியாகப் போகின்ற அழகிய தேரினையுடைய சூரியன், தான் நின்று அம்மடந்தைக்கு - தான் எழுந்த மலையில் நின்றுகொண்டு அத்தமயந்திக்கு, தார்வேந்தன் போன நெறி காட்டுவான்போல் - மாலையணிந்த நளமன்னன் மறைந்து சென்ற வழிகளைத் தெரிவிப்பவன் போலாக, இருள் போய் கை வாங்க - இருட்பொழுது நீங்கிஓட, கான் ஊடே செம்கரத்தை நீட்டுவான் - அக்காட்டின் உள்ளிடமெங்கும் தனது செந்நிற ஒளிக்கதிர்களை நீட்டுவானாயினான்.

(க - ரு.) வானத்தின் வழியாக வருகின்ற சூரியன், தமயந்திக்கு நளன் சென்ற வழியை விளக்கிக் காட்டுவான் போல, காட்டிருள் பின்வாங்கிச் செல்லத் தன் ஒளிக்கதிர்களை நீட்டுவானாயினான் என்பதாம்.

(வி - ரை.) வான நெடுவீதி - வானமாகிய நீண்ட தெரு எனக் குறித்தார், ஞாயிறு தோன்றி மேலே போகின்ற நிலைக்கு ஏற்ப. மணி - மணிபோன்ற என, உவமத் தொகையாகக் கொள்ளலுமாம். அம்மடந்தை - அழகிய இளமை பொருந்திய தமயந்தியெனப் பொருள் கூறலுமாம். கைவாங்கல் - செல்லுதல், ஓடுதல் என்னும் பொருளது. கரம் - ஞாயிற்றின் கதிரொளி: வடசொல். கரம் - கையென்று கொண்டு வழிதெரியாமல் திகைப்பவர்க்கு வழிதெரிந்த ஒருவன் தன் கைகளை நீட்டிக் காட்டி வழி

1. திருவாசகம், திருப்பள்ளி : உ. 2. மணிமேகலை, எ : கககூ.

தெரிவிப்பது உலகியல். அதுபோன்று இருட்போதில் நளன் சென்றவழி அறியாது தத்தளித்து நின்ற தமயந்திக்கு, வழியைக் காட்டுதற்கு இருளை ஒதுக்கி வெளிச்சம் உண்டாக்கிக் காட்டுவான் போலச் சூரியன் தன் கைக் கதிர்களைப் பரப்பினான் என்க. கையை நீட்டிக் காட்டுதல் என்ற இருபொருள் நயந்தோன்றக் கதிரொளி பரப்புதலை, 'காலுரமே நீட்டுவான் செங்கரத்தை' என்றார். நீட்டுவான் என்பதில நீட்டினான் என இறந்தகாலமாக வரற்பாலது, இயல்பினால் எதிர்காலமாக வந்த காலவழுவமைதி 'யாம் விளையாடுவது இந்த இடம்' என, வழக்கினும் எதிர்கால மாக இறந்தகாலம் வருதலை உணர்க. (கக௬)

## தமயந்தி வாய்விட்டுப் புலம்பல்

உகூ௫. செய்தபிழை ஏதென்னும் தேர்வேந்தே என்றழைக்கும்
எய்து துயர்க்கரைகா ணேனென்னும்—பையவே
என்என்று தென்என்னும் இக்கானின் விட்டேகும்
மன்என்று வாடும் அயர்ந்து.

(இ - ள்.) (தமயந்தி துன்ப மேலீட்டினால் நளனை முன்னிலைப்படுத்திக் கேட்பவள்போல) செய்த பிழை ஏது என்னும் - நான் செய்த குற்றம் ஏதேனுமுண்டோ என்பாள், தேர் வேந்தே என்று அழைக்கும் - தேரையுடைய மன்னனே என்று அழைப்பாள், எய்து துயர் கரைகாணேன் என்னும் - எனக்கு வந்துள்ள துன்பத்துக்கு ஓர் அளவில்லையே யென்பாள், பையவே என் என்றது என் என்னும் - (அன்புடன்) மெல்ல (நின் வாய்திறந்து) என்ன ? (என் வருந்துகிறாய்?) என்று கேட்காத காரணம் என்னவென்று கேட்பாள், இக்கானில் விட்டு ஏகும் மன் என்று - இக் கொடிய காட்டில் (என்னைத் தன்னந்தனியளாமாறு) விட்டுச் சென்ற வேந்தே என்று சொல்லி, அயர்ந்து வாடும் - பெரு வருத்தங்கொண்டு மெலிவாள்.

(க - து.) தமயந்தி நளனோடு நேரிற் பேசுவாள் போன்று பற்பலவாறாகப் பேசித் துன்பம் மிகுந்து வாடி மெலிவாளாயினாள் என்பதாம்.

(வி - ரை.) தவறொன்றறியாள் தமயந்தி; திருவெல்லாம் இழந்து கான நோக்கிச் சென்ற நளனோடு நிழலெனப் பின் தொடர்ந்தாள்; காட்டில் தன் துயர் காணாள்; தன் கணவனுக் காகவே • கவன்றாளாதலின், 'ஒன்றுந் தவறிழைத்திலேனை விட்டுப் பிரிய மனம் எவ்வா றெவ்விற்றோ' என்பதை எண்ணி

னவளாய் 'செய்த பிழை ஏது' என்றாள். துன்பத்தின் எல்லை கடந்த காலத்தில் காணாதவரைக் கண்டதுபோலவும், பேசாத பொருள்கள் பேசுவதுபோலவும், அவைகள் தம்மை வினவுவது போலவும் மறுமொழி யுரைப்பதுபோலவும் கூறுவது இயல்பு. [1]'கேட்குந போலவும் கிளக்குந போலவும்' என்னும் நன்னூல் விதியும் காண்க. இவ்வாறே இங்கே பேசுகின்றாள் என்க. 'தேர் வேந்தே' என்பது, அவன் கல்லினும் முள்ளினும் கால் நோவ நடந்த எண்ணத்தின்மேல் தோன்றிய துன்புரையாகும். நளன் எங்குச் செல்லினும் அரசனாக இருந்தகாலத்தில் ஒப்பனைக் கோலம் பூண்டு தேரினும் கரியினும் பரியினும் செல்வான் ; இவ் வாறு கால் நடையாகச் சென்றனனே என்பாளாய் வருத்தம் நெஞ்சை வருத்தத் 'தேர் வேந்தே' என அழைத்தாள். பின் தன் நிலையை உணர்கின்றாள் : துயருக்கோர் அளவில்லை ; செல்வத்தை இழந்து, மக்களைப் பிரிந்து, கானில் நடந்து, இருந்து, உறங்கித் துன்புற்றும் கணவனையும் பிரியநேர்ந்த நிலைக்கு அயர்ந்து, 'துயர் காணேன்' என்றாள். பின்னர் நளன் பேசிய கனிந்த மொழிகள், இனிய சொற்கள், மலர்ந்த முகம், செவ்விய வாய் இவைகள், அவள் மனக்கண்முன் காட்சியளிக்கின்றன. இம் மன்னனை - என் காதற் கணவனை என்று காண்பேன் என்றும், அவர் இன்னுரை என்று கேட்பேன் என்றும் கொண்ட ஏக்கம் மேலிட, 'பையவே என் என்னுதென்' என்றாள். பின் தன்னைத் தன்னந்தனியளாக் கிப் பிரிந்த துன்பம் வெந்த புண்ணில் வேல் நுழைந்ததொப்ப மீண்டும் வருத்த, மன்னர்க்கு இஃதறமாமோ ! இற்கிழமை பூண் டார்க்கு இயற்கையாமோ ! காட்டில்-புலிகள் கரடிகள் நச்சுயிர்கள் வாழும் திரியும் காட்டில் - தனித்துப் புலம்ப விடுவதா ? என்னும் துன்பக் கவலை நெஞ்சந் துளைப்ப 'இக்கானில் விட்டேகும் மன்' என்றாள். இப்பாட்டு தமயந்தியின் மனநிலை துன்பநிலையைச் சொல்லோவியத்தில் காட்டிய சித்திரம்போல அமைந்துள்ளமை காண்மின். என்னும், அழைக்கும், வாடும் என்பன, செய்யுமென் வினைமுற்றுக்கள். (கக௭)

### தமயந்தி, நளன் காலடிச் சுவடுகண்டு வருந்தி விழுதல்

உ௯௬. அல்லியந்தார் மார்பன் அடித்தா மரையவள்தன்
நல்லுயிரும் ஆசையும்போல் நாறுதலும்—மல்லுறுதோள்
வேந்தனே என்னா விழுந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான்.

1. நன்னூல், ௪0௯.

(இ - ள்.) அல்லி அம்தார் மார்பன் - அகவிதழையுடைய மலர் மாலையணிந்த மார்பையுடையவனாகிய நளமன்னனின், அடி தாமரை - தாமரை மலர்போன்ற அடிச்சுவடுகள், அவள் நல் உயிரும் ஆசையும் போல் நாறுதலும் - தமயந்தியின் நல்ல உயிரும் பேரன்பும் போலத் தோன்றியவுடனே, மல் உறுதோள் வேந்தனே என்று - மற்போரிற் சிறந்த தோள்களையுடைய மன்னனே என்று வருத்தத்தோடு கூறிக்கொண்டு, விழிவேலை சாய்ந்த - கண்ணாகிய கடலினின்றும் வழிந்த, நீர் வெள்ளத்தே - நீர்ப் பெருக்கின் மேலே, விழுந்தாள் - விழுவாளாயினாள்.

(க - து.) தமயந்தியானவள் நளனுடைய காலின் அடிச்சுவட்டைக் கண்டவுடன், 'மன்னனே!' என்று கூறிக்கொண்டு தன் கண்ணீர் வெள்ளத்தின் மேற் கீழே விழுந்தாள் என்பதாம்.

(வி - ரை.) அல்லி - உள்ளிதழ். அதனையுடைய மலருக் காதலால் ஆகுபெயர். அடித்தாமரை அடியாகிய தாமரை என உருவகமாக்கிப் பொருள் கூறலுமாம். தமயந்தி நளனைக் காணாமல் மயங்கித் தேடிச் செல்லுங்கால், அவன் அடிச்சுவடு மண்ணில் பதிந்திருத்தல் கண்டு துன்பம் மேலிட்டுக் கண்ணீர் பெருகித் தாரை தாரையாகக் கீழ் வழிந்தோட, அதில் விழுந்தழுதாள். இதனைச் 'சாய்ந்தநீர் வெள்ளம்' என்றார். நாறுதல் - தோன்றல். இதற்கு மணமென்னும் பொருள் கொண்டு ஒவ்வாது. [1]'மலைநாறிய வியன்ஞாலத்து' என்னும் மதுரைக் காஞ்சியடிக்கு நச்சினார்க் கினியர் 'மலைதோன்றிய அகலத்தையுடைய ஞாலத்தின் கண்ணே' எனப் பொருள் விரித்ததும் காண்க. நளன் அடிச்சுவடு கண்ட தும் தன் உயிர், தன்னைவிட்டுப் பிரிந்துபோனது மீண்டு வந்தது போன்றும், தன் விருப்பமெல்லாம் - தன் காதலெல்லாம் ஆங்கே உருக்கொண்டு வந்தது போலவும் தோன்றிற்று; அதனால் அவள் துன்பு மேலிட்டு நின்றதை 'அவள் தன் நலனுயிரும் ஆசையும் போல்' என்றார். (ககஅ)

தமயந்தி, மான் மயில் முதலியவற்றினிடம் வினவி வருந்தல்

உகள. வெறித்த இளமான்காள்! மென்மயில்காள்! இந்த
நெறிக்கண் நெடிதூழி வாழ்வீர்—பிறித்தெம்மைப்
போனாரைக் காட்டுதிரோ என்னாப் புலம்பினாள்
வானாடர் பேற்றிலா மான்.

---

1. மதுரைக்காஞ்சி, ௪.

(இ - ள்.) வான் நாடர் பெற்றிலா மான் - விண்ணுலகத் தேவர்கள் விரும்பியும் கிட்டாத மான்போன்றவளாகிய தமயந்தி யானவள், (அக்கானில் போவதும் வருவதுமாகிய மான் மயில் முதலியவற்றை நோக்கி) வெறித்த இளமான்காள் - என்னைக் கண்டு அஞ்சிச் செல்கின்ற இளமைமிக்க மான்களே!, மென் மயில்காள் - மென்மைத்தன்மை மிக்க மயில்களே!, இந்த நெறி கண் நெடிது வாழ்வீர் - இந்த வழியிடத்தே பன்னெடுங் காலம் வாழ்ந்திருப்பீர் (ஆகையால்), எம்மை பிறித்து போனானை காட்டுதிரோ என்னு புலம்பினாள் - எங்களை வெவ்வேறாகப் பிரித்து நீங்கிப்போன எம் அரசரை நீவிர் காட்டுவீர்களோ என்று சொல்லிப் புலம்பி அழுவாளாயினாள்.

(க - ரை) தமயந்தி அக்காட்டில் செல்லும் மானையும் மயிலையும் அழைத்து, 'நீங்கள் நெடுங்காலம் வாழ்வீர் எம்மைவிட்டுப் பிரிந்துசென்ற வேந்தரைக் காட்டுவீரோ?' என்று சொல்லி அழுதாள் என்பதாம்.

(வி - ரை.) வெறித்த - வெருண்ட : அஞ்சிய என்னும் பொருளது. தமயந்தியைக் கண்ட மானும் மயிலும் அஞ்சி ஓடின. மக்களைக் காணின் விலங்கு பறவை முதலியன விலகி ஓடுதல் இயல்பு. அவைகளின் சாதித்தன்மையும் ஆகும். அதை - அதன் இயற்கையை-'வெறித்த இளமான்காள்' என்றார். பிரித்து, பிறித்தெனை வந்தது, எதுகை நயம் நோக்கி இடையின ரகரம் வல்லினமாகத் திரிந்தது. 'பிரித்தெம்மை' எனப் பன்மையாற் கூறியதால் தமயந்தி தன்னையும் தன் மக்களையும் வெவ்வேறாகத் தன்னைக் காட்டினும் தன் மக்களை நாட்டினும் பிரித்த செய லெனக் கொள்க. பிரிந்து எம்மை என்னாது, 'பிரித்து எம்மை' என்று கூறிய பிறவினைவாய்பாட்டாற் காண்க. என்னு, என்று என்னும் பொருளது: செய்யா என்னும் வாய்ப்பாட்டுவினையெச்சம். இந்திரன் முதலியோர் தமயந்தியை மணஞ்செய்தற்குத் தவங் கிடந்தும் அவர்களை மணக்கக் கனவினும் கருதாத தமயந்தியின் கற்புத் திண்மை தோன்ற, 'வானாடர் பெற்றிலா மான்' என்றார். மான்போன்ற மருட்சிகொண்ட கண்பார்வையுடைய தமயந் தியை மானென்றது ஆகுபெயர். வான் நாடு - உயர்ந்த உலகம், அஃதாவது தேவருலகு. ஈண்டு அதில் வாழ்கின்ற தேவர்களைக் குறித்து, அதுவே ஒன்றொழி பொதுச் சொல்லாகத் தமயந்தி திருமணத்தை வேட்டுவந்த இந்திரன் முதலானவர்களையும் குறித் தமை காண்க.

[1]'ஒன்றொழி பொதுச்சொல் விகாரம் தகுதி,'

எனவரும் நன்னூல் நூற்பா விதிப்படி கொள்க. (கககூ)

1. நன்னூல், உககூ.

தமயந்தி, ஒரு மலைப்பாம்பைக் காணுதல்

உகூஅ. வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியான்
மோட்டு வயிற்றரவு முன்தோன்ற—மீட்டதனை
ஓரா தருகணைந்தாள் உண்தேன் அறற்கூந்தல்
போரார் விழியாள் புலர்ந்து.

(இ - ள்.) உண்தேன் அறல் கூந்தல் - மலர் (மாலையிலுள்ள தேனினை) வண்டுகள் உண்கின்ற கருமணல்போன்ற கூந்தலையும், போர் ஆர் விழியாள் - (காதுவரை யோடிப்) போர்புரிகின்ற கண்களையுமுடைய தமயந்தியானவள், புலர்ந்து - வாட்டங் கொண்டு, பெரும் பசியால் வேட்ட கரியை விழுங்கி - அளவு கடந்த பசியினால் தான் உண்ண விரும்பிய ஒரு யானையைப் பிடித்து விழுங்கி, மோடு வயிறு அரவு முன்தோன்ற - அதனால் உயர்ந்திருக்கின்ற வயிற்றினையுடைய ஓர் மலைப்பாம்பானது தன் கண் முன்னேவர, மீட்டு அதனை ஓராமல் அருகு அணைந்தாள் - திரும்பிப் பார்த்து அதன் தன்மையை அறியாளாய் அதன் பக்கத்தே போனாள்.

(க - ரு.) தமயந்தியானவள் புலம்பிக்கொண்டே போகுங்கால் தன் பசி மிகுதியினால் ஒரு யானையை விழுங்கிப் படுத்திருக்கின்ற ஒரு மலைப்பாம்பைக் கண்டாள்; அதன் தன்மையறியாது அதன் பக்கத்தே சென்றாள் என்பதாம்.

(வி - ரை.) வேட்டல் - விரும்புதல். மோடு - உயரம். அரவு- பாம்பு; ஈண்டு மலைப்பாம்பு. அது தமயந்தி கண்ணுக்கு முன் காணப்படினும் தன் துயரம் மிகுதியால் கடிக்கும் வல்லரவு என்பதை எண்ணாதவளாய் அவன் பக்கலிற் சென்றாளென்க. ஓராது - அறியாமல் என்னும் பொருளது: எதிர்மறை வினையெச்சம். உண்தேன் என்றமையால் மலர் மாலையிலுள்ள தேனை உண்கின்ற வண்டுகள் என்பன இசையெச்சமாகக் கூட்டி உரை கூறப்பெற்றன அறல் - கருமணல். நீரலைகளால் அறுத்தறுத்து ஒதுக்கப்பெறுவதால் இப்பெயர் பெற்றது. அறு + அல் = அறல்: தொழிற்பெயர். கூந்தல் விழியாள் என்பனவற்றில் எண்ணும்மைகள் தொக்கு நின்றன. கண்கள் நல்லிலக்கணமுடைய பெண்களுக்கு நீண்டிருப்பது இயற்கையழகாகும். தமயந்தி சிறந்த கண்களின் அழகுடையாள் என்பதற்குப் 'போரார் விழியாள்' என்றார். காதளவோடிய நெடிய கண்கள் பிறழ்ந்து பிறழ்ந்து சென்று திரும்புவதைப் போர் செய்வதாகத் தற்குறிப் பேற்றம் தந்து குறித்தார். (கஉ0)

தமயந்தியை அந்த மலைப்பாம்பு விழுங்குதல்

உ௯௯. அங்கண் விசும்பின் அவிர்மதிமேல் சென்றடையும்
வெங்கண் அரவுபோல் மெல்லியலைக்-கோங்கைக்கு
மேலெல்லாம் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாம் தீயுமிழும் பாம்பு.

(இ - ள்.) (இவ்வாறு தமயந்தி அப்பாம்பின் அருகிற் சேரவே) அம் கண் விசும்பின் - அழகிய இடத்தையுடைய வானத்திடத்தேயுள்ள, அவிர்மதிமேல் சென்று அடையும் - ஒளி வீசுகின்ற திங்களின் மேல் சென்று அதனை விழுங்குகின்ற, வெம்கண் அரவுபோல் - கொடிய கண்களையுடைய இராகு வென்னும் பாம்புபோல, வெம்கானின்பால் எல்லாம் - வெப்ப மிக்க அக்காட்டின் பக்கம் தான் செல்லுமிடமெங்கும், தீ உமிழும் பாம்பு - நச்சுத் தீயைக் கக்குகின்ற கொடிய அந்த மலைப்பாம்பானது, மெல்இயலை - மென்மையான இயற்கைத் தன்மை வாய்ந்த தமயந்தியை, கொங்கைக்குமேல் எல்லாம் தோன்ற விழுங்கியது - கொங்கைகட்கு மேற்பட்ட உடற்பகுதிகளெல்லாம் வெளியே தெரியும்படி உட்கொண்டது.

(க - று.) காடுமுழுதும் நெருப்பைக் கக்குகின்ற மலைப்பாம்பானது, தமயந்தியைக் கொங்கைக்கு மேற் பகுதி தோன்றும்படி விழுங்கிற்று என்பதாம்.

(வி - ரை.) அம் கண் - அழகிய இடம். பல்வகை விண் மீன்களும் மேகமும் மின்னலும் ஞாயிறும் பல்வகைப் பறவை முதலியனவும் இயங்குதற்கு இடனாகி அழகு தருதலால் அழகிய இடனாக நின்றது, வானம். அவிர்மதி - ஒளிவிடுகின்ற சந்திரன். இத்தொடர்,

[1]'அங்கண் விசும்பின் அகல்நிலாப் பாரிக்கும் திங்கள்.'

என, நாலடியாரினும் வருதல் காண்க இராகு வென்னும் பாம்பு விண்ணில் இயங்கும் நிலவை விழுங்கியதைப் போலத் தமயந்தியை அப்பாம்பு விழுங்கிற்று என, தமயந்தியை நிலவாக வும் பாம்பை இராகுவாகவும் குறித்து ஒப்புரைத்தார். வெம்கான்- நீரும் நிழலுமற்ற கொதிக்கின்ற பாலைவனம். அதனினும் மிக வெப்பந்தருகின்ற கொடிய நஞ்சினைக் கக்குகின்ற கொடுமை யுள்ள பாம்பு என, அதன் இயற்கையைச் சுட்டினார். இதனை

1. நாலடியார், கடுக.

மணிமேகலை ஆசிரியர் 'திட்டிவிடம்' என்பர். திட்டிவிடமாவது தன் கண்பார்வையினால் நஞ்சூட்டிக் கொல்லும் பாம்பு. அங்கே நாகப்பாம்பைக் குறித்தனர். இங்கே கூறுவது மலைப்பாம்பு. (கஉக)

### தமயந்தி, பாம்பின் வாயிலிருந்துகொண்டு தன்னைக் காக்குமாறு நளனை அழைத்தல்

௩௦௦ வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
தாளடைந்து வாழும் தமியேனைத்—தோளால்
விலக்காயோ என்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றாள எடுத்து.

(இ - ள்.) இங்கு வெவ் அரவின் வாய்க்கு இலக்கு ஆகி நின்றாள் - இக்காட்டில் இக்கொடிய பாம்பின் வாய்க்குக் குறியீடாய் முடிந்த தமயந்தியானவள், மன்னவ - அரசனே!, வாள் அரவின் வாய்பட்டு மாயாமுன் - இக்கொடிய மலைப்பாம்பின் வாய்க்குள் அகப்பட்டுக்கொண்டு நான் இறந்து போகுமுன்பு, நின் தாள் அடைந்து வாழும் தமியேனை - நின்ற திருவடிப பற்றினால் உயிர்தாங்கி நிற்கின்ற அடிமையை, தோளால் விலக்காயோ என்று எடுத்து அழுதாள் - நின் தோள் வலிமையினால் இப்பாம்பின் வாயினின்றும் மீட்டு என்னைக் காக்க வரமாட்டாயோ என்று பெருங்குரலெடுத்துச் சொல்லி அழுதாள்.

(க - ரு.) தமயந்தியானவள், நளனை முன்னிலைப் படுத்தி, 'வேந்தே நான் பாம்பின் வாய்ப்பட்டு இறந்து போகுமுன் நீ உன் தோள்வலிமையால் மீட்க வரமாட்டாயோ?' என்று அழுது உரைத்தாள் என்பதாம்.

(வி - ரை.) வாள் - கொடுமை. நஞ்சுள்ள தாகலான், 'கொடுமை' என அடை கொடுக்கப்பட்டது. மாயாமுன் - இறந்துபடுமுன்னால். தாளடைந்து வாழ்தல் - திருவடியை நினைந்துகொண்டே உயிர் வைத்திருத்தல். தாளடைதல் அடி முதல் முடியீறாக அவன் வடிவத்தைத் தன் உள்ளத்தில் தவறாமல் நினைந்துகொண்டிருத்தல். இதனைத்,

[1]'தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்.'

எனக் கற்புடைப் பெண்டிர்க்கு வள்ளுவரும் சிறப்புக் கூறினார். கற்புடைப் பெண்டிரில் தமயந்தி முன் வைத்து எண்ணத்

---

1. திருக்குறள், ருரு.

தக்காளாகலான் தன்னை இவ்வாறு கூறினாள் என்க. தோள் போலென்றால் பூரிப்புக்கொள்ளும் தன்மையுடைய தென்னும் கருத்தை உட்கொண்டது. இலக்கு - குறி. எடுத்தல் - உரத்த குரலால் சொல்லுதல். (கஉஉ)

இதுவும் அது

௩௦௧. வென்றிச் சினஅரவின் வெவ்வாய் இடைப்பட்டு
வன்துயரால் போயாவி மாள்கின்றேன்—இன்றுன்
திருமுகநான் காண்கிலேன் தேர்வேந்தே என்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து.

(இ - ள்.) பொருமுக வேல் கண்ணாள் புலர்ந்து - போர் செய்கின்ற கூரிய நுனியையுடைய வேல்போன்ற கண்களை யுடைய தமயந்தியானவள் வாட்டங்கொண்டு, தேர் வேந்தே - தேர்களையுடைய மன்னவனே, வென்றி சின அரவின் - மடங் காத வெகுளியையுடைய மலைப் பாம்பினது, வெம்வாய் இடை பட்டு - நஞ்சினையுடைய வாயிடத்து அகப்பட்டுக்கொண்டு, வன் துயரால் ஆவிபோய் மாள்கின்றேன் - அக்கொடுந்துன்பத்தினால் உயிர் சோர்ந்து இறக்குந்தறுவாயில் இருக்கின்றேன், நான் இன்று திருமுகம் காண்கிலேன் என்றாள் - அவ்வாறிருந்தும் இன்றைக்கு உனது அழகிய முகத்தைக் காணாதவளாக இருக் கின்றேனென்று கூறிப் புலம்பினாள்

(க - ரு.) தமயந்தியானவள் நளமன்னனைக் கூவி யழைத்து, 'மடங்காத சினத்தையுடைய பாம்பின் வாயில் அகப்பட்டுக்கொண்டு இறக்கும் நிலையிலிருக்கிறேன்; அவ் வாறிருந்தும் உன் திருமுகத்தைக் காணாதவளாக இருக் கின்றே'னென்று சொல்லிப் புலம்பி அழுதாள் என்பதாம்.

(வி - ரை.) வென்றி - வெற்றி. ஈண்டு வெற்றியாவது எதற்கும் அஞ்சாதிருக்கும் தன்மை. பாம்பானது கோல் கொண்டு அடித்தாலும் அதற்கு அஞ்சாது தலை தூக்கிச் சீறிக் கொண்டு எதிர்த்து நிற்கும் தன்மையுடையது. அதியமான் நெடுமானஞ்சியின் படைவீரர் சிறப்பைக் குறிக்க வந்த காலை,

[1]"எறிகோல் அஞ்சா அரவின் அன்ன
சிறுவன் மள்ளர்.'

1. புறம். அக.

எனப் பாம்பினையே சிறிய பருவத்தினராகிய போர் மறவர் தம் அஞ்சாமைக்கு ஒப்புரைத்ததும் காண்க. அதனால் வென்றி என்ற இச்சொற்கு 'மடங்காத' என்னும் பொருள் கொள்ளப் பட்டது. 'ஆவி மாள்கின்றேன்' என்றது, ஆவி இருந்தும் இல்லாததுபோல் துன்பத்தால் உணர்விழந்து இருக்கும் துயர் நிலையை. கணவனை இழந்து தவித்து நின்ற கண்ணகியாரின் அவலக்காட்சியை எழுத்தோவியமாகத் தாம் ஆக்கியருளிய நெஞ்சையள்ளும் செஞ்சொற் சிலம்பில் இளங்கோவடிகளார்,

> "[1] காவி உகுநீரும் கையில் தனிச்சிலம்பும்
> ஆவி குடிபோன அவ்வுருவும்.'

என்றருளிய திருப்பாட்டில் 'ஆவி குடிபோன' எனக் குறித்த தறிக.

திருமுகம் - அழகிய முகம். திருத்துறந்து செல்லுங் காலும் மெய்த்திரு வந்துற்ற காலத்தும் வாட்டமுறாத மலராத ஒரே தன்மைகொண்ட மலர்ந்த முகம். பொருமுகம் - போர் செய்கின்ற முகம். வேலுக்கு முகம், அஃதாவது முன்பகுதி, அதன் கூரிய நுனி. ஆதலால் முகம் என்ற சொற்கு, நுனி என்று பொருள் விரிக்கப்பட்டது. வேல் கண்ணாள்: வேல் போன்ற கண்ணையுடையவள் என விரிதலால் தொழில் உவமத்தொகை. (கஉ௫)

### தமயந்தி, தன்மக்களை நினைந்து வருந்தல்

௩௦௨. மற்றேடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகும்—கொற்றவனை
நீரேனும் காண்குதிரோ என்றழுதாள் நீள்குழற்குக்
காரேனும் ஒவ்வாள் கலுழ்ந்து.

(இ - ள்) நீள் குழற்கு - நீண்ட தன் கூந்தலுக்கு, காரேனும் ஒவ்வாள் - நிறத்தால் மேகமும் ஒவ்வாத தன்மையை யுடைய தமயந்தியானவள், மல் தொடுத்த தோள் பிரிந்து - மல் போரில் தொடர்புகொண்டு வென்ற தோள்களையுடைய நள மன்னனை விட்டுப்பிரிந்தும், மாயாத வல்வினையேன் - இறந்து போகாமல் உயிருடன் இருக்கின்ற கொடிய தீவினையாட்டியாகிய நான், பெற்று எடுத்த மக்காள் - பெற்று வளர்த்த என் குழந்தைகாள், பிரிந்து ஏகும் கொற்றவனை - நம்மைவிட்டுப் பிரிந்து சென்ற வெற்றிக்குரிய மன்னனை, நீரேனும் காண்

---
[1]. சிலப், உ௦ : உ. வெண்பா.

குதிரோ என்று கலுழ்ந்து அழுதாள்—(என்னால் காண இயல வில்லையே) நீவிரேனும் ஒருகால் காண்பீர்களோ என்று மனங் கலங்கிக் கூறி அழுது வருந்தினாள்.

(க - து.) தமயந்தி பின் தன் மக்களை நினைந்து வருந்தி, 'மன்னனைப் பிரிந்திருந்தும் இறவாமல் இன்னும் உயிர் வாழ்கின்ற என்னால் காண்பதற்கில்லை; நீவிரேனும் ஒருகால் மன்னவனைக் காண்பீர்களா?' என்று மனங் கலங்கி அழுதாள் என்பதாம்.

(வி - ரை.) மல் - மற்போர். தொடுத்தல் - அதில் நேர் படல். தோள் - தோளையுடையவன் என்னும் பொருள் தருத லால் ஆகுபெயர்.

தமயந்தி பின்னும் தன் மக்களை நினைக்கின்றாள்; தான் இறந்துபடுவது உறுதி என்று கொண்டாள்; 'நான் இனி வேந்தைக் காண்டற்கில்லை; நீரேனும் ஒருகால் காண்பீர்களா?' என்று கூறி அழுகின்றாள்; இதில் தாய்மையன்பு தோன்ற 'மாயாத வல்வினையேன்' என்றும், 'பெற்றெடுத்த மக்காள்' என்றும் அமைந்துள்ள தொடர், துன்பம் எல்லை மீறிய நிலையைக் காட்டு தல் ஓர்க. நீள்குழல் - நீண்ட கூந்தல்: வினைத்தொகை. கூந்த லுக்கு ஒவ்வாதிருத்தலாவது கூந்தல்போன்ற கருமையும் நீட்சியு மின்றி இருத்தல். அவள் கூந்தலின் அழகு உணர்த்தப்பட்டது. ஒவ்வாள்: எதிர்கால வினையாலணையும் பெயர். (கஉச)

### தமயந்தி, நளனை நினைந்து வணங்கி வேண்டுதல்

நூ௦நூ. அடையும் கடுங்கானில் ஆடரவின் வாய்ப்பட்
டுடையும்உயிர் நாயகனே ஓகோ-விடையெனக்குத்
தந்தருள்வாய் என்றுத்தன் தாமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியாள் தேர்ந்து.

(இ - ள்.) செம் துவர்வாய் மென்மொழியாள் - சிவந்த பவளம் போலும் வாயையும் மென்மையான சொற்களையும் உடைய தமயந்தியானவள், நாயகனே - என் தலைவனே!, அடை யும் கடுங்கானில் - நாம் சென்றிருக்கிற கொடிய இக்காட்டில், ஆடுஅரவின் வாய்பட்டு உயிர் உடையும் - ஆடுகின்ற மலைப் பாம்பின் வாயில் சிக்கிக்கொண்டு என் உயிர் தளர்கின்றது, ஓகோ - ஐயோ; எனக்கு விடை தந்து அருள்வாய் என்று - எளியேனுக்கு (இறந்துபோதற்கு) விடை கொடுப்பாயாக என்று

சொல்லி, தேர்ந்து தாமரை கை கூப்பினாள் - (இறக்கப் போவதை நன்கு) தெளிந்து தாமரைமலர் போன்ற தன் கைகளைக் குவித்து (நளனை நினைந்து) வணங்கினாள்.

(க - து.) தமயந்தியானவள், 'நாம் இருக்கின்ற இக் காட்டில் பாம்பின் வாயில் அகப்பட்டுக்கொண்டு என் உயிர் தளர்கின்றது; நான் இறந்து போவதற்கு விடை தருக', என்று தன் கைகளைக் குவித்து நளனை நினைந்து வணங்கினாள் என்பதாம்.

(வி - ரை.) கடுங்கான் - கொடிய கானம். கடி என்னும் உரிச்சொல் கடும் எனத் திரிந்தது. இதற்கு அச்சந்தரும் காடெனப் பொருள் கொள்க. ஓகோ: இரக்கக் குறிப்புச்சொல். ஆடு அரவு - ஆடுகின்ற அரவம்: வினைத்தொகை. மலைப்பாம்பு ஆடுவதில்லை, பேருடம்புடையதாகலின். ஆயினும் மரபுப் பெயராய் வந்தது. உயிர் உடைதல் - உயிர் சிதைதல். அஃதாவது உயிர் பாம்பின் வாய்ப்பட்டுக் கிடத்தலால் சிறிது சிறிதாகக் கழிவதாயிற்று. உயிர் என்பதை இடைநிலை விளக்கணியாகக் கூட்டி, உயிர் நாயகனே - என் உயிர்த்தலைவனே எனக்கொண்டு, ஒரு பொருளுக்கு உரியவனுக்குத்தான் அப்பொருளை ஆக்கவும் அழிக்கவும் உரிமையுண்டு; அவ்வுரிமையற்றார் அதனை ஒன்றும் செய்தல் இயலாது; அம்முறையில் உயிருக்கு உரியான் தன் காதற் கணவன்; அவனைக் கேட்காது தன் உயிரை விடுதற்கு உரிமையில்லை; எனினும் பாம்பின் வாய்ப்பட்டுத் தத்தளித்துக் கிடக்கையில் உயிர்பிரிதல் திண்ணம்; எனவே, உரிமையுடையானிடத்து உரிமை பெற்றுச் செல்லுகின்ற கருத்தினளாய்த் தன் அன்பால் பிரிய இடந்தாராமையால் 'ஓகோ விடை எனக்குத் தந்தருள்வாய்' எனக் காணாத நாயகனைக் கண்டது போற்கொண்டு பேசித், தன் துன்பநிலையைச் சொல்லி வருந்தினாள் என்க.

இவ்வாறே இலங்கையில் சிறையிருந்த செல்வி, அனுமானிடத்துப் பேசுங்கால் தன்னைக் குறித்துக் 'குறிப்பிட்ட சில நாட்களில் என் காதலராகிய இராமபிரான் வந்து மீட்காவிடின், நான் இறந்துபோவது உறுதி. அந்த நாட்கள் கழிந்தால் சீதை இறந்தாளெனக் கொண்டு எனக்கு ஆற்றவேண்டும் இறுதிக் கடன்களை ஆற்றுமாறு சொல்' என, வேண்டுகின்றாள்.

[1]'கங்கை யாற்றங் கரையடி யேற்குத்தன்
செங்கை யாற்கடன் செய்கென்று செப்புவாய்.'

---

1. கம்பராமா. சுந்தர, சூடா: ௩௨.

என்பதது. இவள்போன்ற கற்பின் வழிவந்த குலமகளாக இலகுவாள் தமயந்தியாகலின், தன் உயிர்போதற்கு நளனிடம் விடை கேட்டாள் என்க. (கஉரு)

வேடன் ஒருவன் வந்து தமயந்தியைக் காண்டல்

நூ௦சு. உண்டோர் அழுகுரல்என் றேற்றி வருகின்ற
வெண்தோடன் செம்பங்கி வில்வேடன்-கண்டான்
கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயில்
முழுகுவாள் தெய்வ முகம்.

(இ - ள்) ஓர் அழுகுரல் உண்டு என்று - (என்றுங் கேட்டிராத) ஓர் அழுகையொலி உண்டாகின்றதென, ஒற்றி வருகின்ற-உற்றுக்கேட்டு (ஓடி) வருகின்ற, வெண்தோடன் - வெண்ணிறம் உள்ள சங்கக்குழையை அணிந்தவனும், செம்பங்கி வில் வேடன்-செம்பட்டை மயிரையும் வில்லையுமுடையவனும் ஆகிய வேடனொருவன், கழுகுவாழ் கானகத்து - கழுகினங்கள் வாழுகின்ற காட்டிடத்தே, கார் அரவின் வாயில் - கருநிறமுடைய மலைப்பாம்பு வாயினில், முழுகுவாள் தெய்வமுகம் கண்டான் - அகப்பட்டு மறைபவளாகிய தமயந்தியின் அழகிய முகத்தைப் பார்த்தான்.

(க - ரை.) அக்காட்டில் வேடனொருவன் அழுகுரல் ஒன்று கேட்கின்றதென ஓடிவந்து, மலைப்பாம்பின் வாயில் அகப்பட்டுக்கொண்டிருக்கின்ற தமயந்தியின் முகத்தைப் பார்த்தான் என்பதாம்.

(வி - ரை.) உண்டு - உள்ளதென்னும் பொருளது. ஈண்டுக் கேட்கின்றதென்னும் பொருளில் வந்தது. ஒற்றுதல் - ஒன்றியிருந்து கேட்டல். இதனடியாக ஒற்றர் என்பதும் பிறந்தது. ஒற்றராவார், பிறர் நாட்டிற்சென்று மறைவாக இருந்து அந்நாட்டில் மறைபொருளாக உள்ளவைகளை அறிந்துவந்து தம் அரசர்க்கு அறிவிப்போர். கூர்த்தறிதலையே ஒற்றென்பது. இக்கருத்தானே வள்ளுவர் தம் வாய்மொழியில் ஒற்றாடல் என, ஓரதிகாரமும் வகுத்தமைத்தனர். அதில் ஒற்றன் இயல்பு கூறுங்கால்,

[1]"கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும்
உகாஅமை வல்லதே ஒற்று.'

1. திருக்குறள், ருஅரு.

என்றதும் காண்க. இம்முறையில் வேடன் நன்கு ஆய்ந்து காது கொடுத்துக் கேட்டான் என்பதைக் குறிக்க 'ஒற்றி வருகின்ற... வில்வேடன்' என்றார். வெண்தோடு - வெண்ணிறமுள்ள காதணி. களாப்பூ நுணாப்பூ குறண்டிப்பூ இவை வெண்ணிற முள்ளன. ஆதலால் அவை எனக்கொள்ளலும் ஆம். வேடன் காட்டில் வாழ்பவனாகலின், இப்பூக்களைக் காதில் அணிவது இயல்பு. இன்றும் காட்டுப்புறமுள்ள சிற்றூர்களில் இளஞ்சிறார் களும் மங்கையர்களும் விட்டிலைப் பிடித்தெடுத்து, அதில் பச்சை நிற, பொன்னிறப் பகுதிகளைப் புய்த்துத் தம் காதுகளில் அணி யாகத் தோடாக அமைத்துக் காதில் ஒட்டவைத்துக் கொள்ளலைக் காணலாம். அதுபோன்றே இவனும் அணிந்துளான் என்க. 'செம்பங்கி வில்வேடன்' என, வேடனுருவை விளக்கிக் கூறி னார். பாலை நிலத்தில் கழுகுகள் வாழ்வது இயல்பு. இதனை,

> [1]'புண்ணுமிழ் குருதி பரிப்பக் கிடந்தோர்
> கண்ணுமிழ் கழுகின் கானம்.'

என்பதனால் அறிக. அஃது அந்நிலக் கருப்பொருளாகவுள்ளது ஆதலான், 'கழுகுவாழ் கானகத்து' என்றார். கார் அரவு - கரு நிறமுள்ள பாம்பு. வாயின் முழுகுதல் - வாய்க்குள் அகப்பட்டு மறைந்துபோதல். தெய்வம் - சிறந்தது; ஒளி பொருந்திய தென்னும் பொருளது. மேல் (உகூ0) ஆம் பாட்டில் 'அவிர் மதி மேல் சென்றடையும்...அரவுபோல்' என்றதன் கருத்தையே குறிப்பிட்டுக் 'காரரவின்...தெய்வமுகம்' என்றார். (கஉசு)

### தமயந்தி, வேடனைக்கண்டு வேண்டிக் கூறுதல்

௩0ரு. வெய்ய அரவின் விடவாயின் உட்பட்டேன்
ஐயன்மீர் உங்கட் கபயம்யான்—உய்ய
அருளீரோ என்று அரற்றினாள் அஞ்சி
இருளீரும் பூணாள் எடுத்து.

(இ - ள்.) (வேடன் பக்கத்தில் வந்தவுடன் அவனைப் பார்த்து) இருள் ஈரும் பூணாள் - இருட்டை ஓட்டுகின்ற அணியணிந்த தமயந்தியானவள், ஐயன்மீர் - ஐயாமீர், யான் வெய்ய அரவின் விடவாயின் உள்பட்டேன் - நான் கொடிய பாம்பினது நஞ்சு பொருந்திய வாயின்கண் அகப்பட்டுக்கொண் டேன், உங்கட்கு அபயம் - உங்களிடம் நான் அடைக்கலம் புகு கின்றேன், உய்ய அருளீரோ என்று - (இதன் வாயினின்றும்)

1. அகம். நக.

தப்பி உயிர்வாழும்படி இரக்கங்காட்டமாட்டீர்களா? என்றுகூறி, அஞ்சி எடுத்து அரற்றினாள் - அச்சங்கொண்டு குரலெடுத்துக் கூவி அழுதாள்.

(க - து.) அருகில் வேட்டன் வந்ததைக் கண்ட தமயந்தியானவள், 'ஐயா! நான் கொடிய பாம்பின் வாய்ப்பட்டு வருந்துகின்றேன்; உங்களிடம் நான் அடைக்கலம்; என்னைக் காப்பாற்ற அருளிரக்கங்கொள்ள மாட்டீர்களா?' என்று கூறி அழுதாள்.

(வி - ரை.) வெய்ய அரவு: கொடுமையுள்ள மலைப்பாம்பு. விடவாய் - நச்சுப் பற்கள் உள்ள வாய். ஐயன்மீர் என வேடனைப் பன்மை முன்னிலையாக விளித்தது, அவன்பால் உயர்ந்த மதிப்புக் கருதி. ஐயன் என்பதைப் பிறர் வட சொல்லென மயங்குவர்; அவர் ஆர்யன் என்னும் வடசொல் திரிபு என்று கூறி, அதற்கு 'மரியாதை செய்யத் தக்கவன்' என்று பொருளும் விரிப்பர். ஐயன் என்னும் சொல், 'ஐ' என்னும் உரிச்சொல் லடியாகப் பிறந்த பெயர். 'ஐ' என்பதை [1]'ஐ வியப்பாகும்' என்றார் தொல்காப்பியர். தனக்கு மேல் தான் காணாத பொருளைக் கண்டபோது அதனிடத்து வியப்பெழுவது இயற்கை. தனக்குமேல் உயர்ந்த தன்மைகண்டு வியந்தே, தந்தை, தன்னின் மூத்தோன், அரசன் முதலியோரை 'ஐயன்' எனப் பழந் தமிழர் அழைப்பாராயினர். அம்முறையில் திருக்குறட் படைத்தலைவனைப் படை வீரன் ஒருவன், [2]'என் ஐமுன் நில்லன்மின் தெவ்விர்' என்பதும், திருச்சிற்றம்பலக்கோவைக்கண் தோன்றும் தலைவனைத் தோழியானவள் [3]'ஆழமன்னோ உடைத் திவ்வையர் வார்த்தை' என்பதும், அகநானூற்றுத் தோழி பெற்றவனை [4]'எந்தையும் நிலனுறப் பொறாஅன்' என்பதும் பிறவும் சான்றுவனவாம். எனவே தமிழ்ச்சொல் இது. இதனை மயங்கக்கோடல், தமிழ்த்தாயின் தண்ணருள் போலும்! தாய்க்கொலை சால்புடைத்தென்பார் எது கூறார்? அவர் சொல் வீண் என விடுக்க. இம் முறையில் தமயந்தி வேடனைத் தன் தாழ்வு தோன்ற, 'ஐயன்மீர் உங்கட்கு அபயம்' என்றாள். உங்கட்கு என்பது, உங்களிடம் என வருதலால் வேற்றுமை மயக்கம். இருள் ஈரும்பூண் - இருளை ஓட்டுகின்ற அணி. அதனைப் பூண்ட தமயந்தியின் செல்வச் சிறப்பையும், இக்கால் தாழ்ந்து துன்புற்ற நிலையையும் உணர்த்துதற்கு, 'பூணாள்' என்ற சொல்லால் விளக்கினார். (கஉஎ)

---

1. தொல். உரியியல்: அஎ. 2. திருக்குறள், எஎக.
3. திருக்கோவையார், ௬க. 4. அகம். கஉ.

**வேடன், தமயந்தியைப் பாம்பின் வாயினின்றும் மீட்டல்**

௩௦௬. சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலகம் மீட்டாற்போல்—
மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்றும் பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு.

(இ - ள்.) பகைகடிந்த (சிங்கம் புலி கரடி முதலியவற்றின்) பகையை அறுத்த, காம்பின் வாய் வில் வேடன் கண்டு - மூங்கிலினின்று செய்த வில்லையுடைய வேடனானவன் (தமயந்தி நிலையைப்) பார்த்து, சங்கநிதிபோல் தரு சந்திரன் சுவர்க்கி - (வானுலகில்) சங்குவடிவாயமைந்த நிதிபோல வறிஞர்களுக்கும் இரவலர் புலவர் முதலிய எல்லோருக்கும் இல்லையென்னாமல் பொருள் வழங்குகின்ற சந்திரன்சுவர்க்கியென்னும் வேந்தனானவன், வெம் கலிவாய் நின்று உலகம் மீட்டால்போல் - கொடிய வறுமையிடத்திலிருந்து உலக மக்களைத் (தன் கொடைத் திறத்தால்) மீட்டிச செல்வராக ஆக்கியதுபோல, மங்கையை வெம் பாம்பின் வாய் நின்றும் பறித்தான் - தமயந்தியைக் கொடிய அப்பாம்பின் வாயினின்றும் மீட்டான்.

(க - ரு.) சிங்கம் முதலியவற்றின் பகைகடிந்த வில் வேடனானவன், உலக மக்களை வறுமையினின்றும் சந்திரன் சுவர்க்கி மன்னன் மீட்டியதுபோலத் தமயந்தியைப் பாம்பின் வாயினின்றும் மீட்டான் என்பதாம்.

(வி - ரை.) சங்கநிதி பதுமநிதியென்பன விண்ணுலகத்தில் சங்கு வடிவாகவும் தாமரை வடிவாகவும் இருக்கின்ற ஒருவகைப் பொருள். அவை வேண்டுவார் வேண்டுவதைக் கொடுக்கும் தகையன; கொளக் கொளக் குறையாது செல்வம் பெருகி நிற்கும் பெற்றியனவென்பது புராணக் கொள்கை. இதனை அப்பரடிகளும,

[1]" சங்கநிதி பதுமநிதி இரண்டும் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனும்
மங்குவார்.'

என்றருளினர், தம் தேவார மறையில். அந்நிதிபோல் இரவலர்கட்கெல்லாம் வாரி வழங்குகின்றான், தம்மைப் புரக்கும் சந்திரன் சுவர்க்கியென அம் மன்னன் பெருமையைக் குறித்தார். இவ்

1. திருநாவுக், தேவாரம் :

வாறே இந்நூலில் இயன்றவிடத்து அவர் கூறுவதறிக. அவ் வேந்தன் தன் கொடை வன்மையால் ஒருவர் உயர்வு தாழ்வு கருதாது மருந்தாகித் தப்பா மரம்போல் பொருள் வழங்கி மக்களையெல்லாம் வறுமையினின்றும் விலக்கிக் காத்த தன்மை போல, வில்வேடன் தமயந்தியைப் பாம்பின் வாயென்னும் துன்ப வறுமையினின்றும் காத்து உயிர் மீட்டான் என 'பாம்பின் வாய் நின்று பறித்தான்' என்றார். பறித்தல் - வலுக்கட்டாயமாகப் பிடுங்குதல். பாம்பு தன் பசித்துன்பம் தீரவே இவளை விழுங்கிற்று. எனவே, இவளைத் திரும்பவிட அதற்குச் சம்மதி யின்மையும், வேடன் தன் வில்வன்மையும் தன் தோள்வன்மை யுங்கொண்டு அதனைக் கொன்றே மீட்டானென்பதும், சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல் என்னும் சொல்லழகுகள் தோன்றப் 'பறித்தான்' என்னும் ஒரே சொல்லிலூற் குறித்தார். இவ் விரிவை அதிவீரராமா, நைடதக் காப்பியத்தில்,

"பொங்கழல்வெங் கானகத்துப் பூவை யழுங்குரல்கேட்
டங்கோர் சிலைக்கை அடல்வேடன் வந்தணுகி
வெங்கண் அரவெறிந்து வெவ்வாய் இடைநின்றும்
கொங்கவிழும் மென்கூந்தல் கோதைதனை நீக்கினனால்.'

என, எடுத்து விளக்கியதால் உணர்க. (கஉஅ)

### தமயந்தி, அவ்வேடனுக்கு நன்றி கூறுதல்

௩௦௭. ஆருயிரும் நானும் அழியாமல் ஐயாஇப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரில்
இதற்குண்டோ கைம்மா றெனஉரைத்தாள் வென்றி
விதர்ப்பன்தான் பெற்ற விளக்கு.

(இ - ள்.) வென்றி விதர்ப்பன் பெற்ற விளக்கு - போரில் வெற்றி கொள்கின்ற விதர்ப்ப நாட்டு வேந்தனை வீமன் பெற்ற குலவிளக்குப்போல்வாளான தமயந்தியானவள் (தன்னைப் பாம்பின் வாயினின்றும் காப்பாற்றிய வன வேடனை நோக்கி), ஐயா - (வேடர்) தலைவனே![1] ஆர் உயிரும் நானும் அழியாமல் - என் அருமையாகிய உயிரும் என் உடலும் இறந்துபோகாமல், இப் பேர் அரவின் வாயில் பிழைப்பித்தாய் - இப்பெரிய பாம்பின் வாயினின்றும் மீட்டிப் பிழைத்து உயிர் வாழும்படி செய்தாய், தேரில் இதற்கு கைமாறு உண்டோ என உரைத்தாள் - இந் நன்றியைச் சீர்தூக்கிப் பார்த்தால், இவ்வுதவிக்குத் திரும்பச்

1. நைடதம், பிரிவுறு : உ௩.

செய்கின்ற உதவி வேறேதேனும் உண்டோ? (இல்லை) யென்று (பணிவுடன்) கூறினாள்.

(க - து.) 'வேடர் தலைவனே! என்னை இப்பெரிய பாம்பின் வாயினின்றும் மீட்டிக் காப்பாற்றினாய்; இதற்கு மாறு உதவி செய்வதற்கு உண்டோ? இல்லை' என்று தமயந்தி, வேடனிடம் பணிவாகக் கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) ஆர் உயிர் - நிறைந்த உயிர். நிறைந்த உயிரென்பது உடம்பகத்து நிலைத்துக் குறைபாடின்றி இருக்கும் ஆவியை. நான், என்பது உடம்பை. மக்கள் என்னும் உருவமோ, வேறு விலங்கு பறவை முதலியவற்றின் உருவமோ புலனாவது உடலிலன்றி உயிரிலில்லை. உயிர்நின்று உடலை இயக்குமாயினும் கண்ணுக்குப் புலப்படுவது உடலே. அவ்வியைபுபற்றி உடம்பைத் தமயந்தி கூற்றாக வைத்து 'நானும்' என்றார். இவ்வாறே மணிமொழிப் பெருமானும்,

[1]'நானும் என் சிந்தையும் நாயகனுக் கெவ்விடத்தோம்.'

என, உடம்பை நானென்றும், திருவள்ளுவர் தலைவி கூற்றாக,

[2]'அலரெழ ஆருயிர் நிற்கும்.'

என, உயிரை ஆருயிர் என்றதும் காண்க. பிழைப்பித்தாய் - தப்பி உயிர்வாழுமாறு செய்தாய் என்னும் பொருளது. தன்னைக் காப்பாற்றியதாகத் தமயந்தி கூறுதலால், பிறவினை. பிழை: தன் வினை; பிழைப்பி: பிறவினையேவல், இங்கே காத்தலால் பிழைப்பித்தாய் என, இறந்தகாலத்தில் வந்தது.

காலத்திற் செய்த உதவி தினையளவாயினும் மலையளவாகக் கொள்வது நன்றியறிவார் செயலாகும். நன்றியறிவு, பிற எவ்வகை அறங்களினும் உயர்ந்தது, சிறந்தது எனக் கட்டுரைப்பர், வள்ளுவப் பெருந்தகையார். அவர்,

[3]'காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.'

[4]'பயன்தூக்கார் செய்த உதவி நயன்தூக்கின்
நன்மை கடலிற் பெரிது.'

என்று, உதவியின் நலனைப் பெரிதும் பாராட்டிக் கூறி, நன்றி அறிதலை,

1. திருவாசகம், திருக்கோத்தும்பி: கடு.
2, 3, 4, திருக்குறள், ககசக, க0உ, க0ௗ.

[1]"தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்."

என்று விளக்கியருள்வாராயினர்.

காலத்தினால் செய்த உதவியென்பது இடுக்கண் ஒருவர்க்கு உற்ற காலத்து அதை நீக்கும் சிறப்பு; பயன்தூக்கார் செய்த உதவியென்பது, இவனுக்கு இது செய்யின் நமக்கு அதனால் இன்னபயன் கிட்டும் எனத் தன் பயனைக் குறிக்கோளாகக்கொள்ளாமல் செய்யும் உதவி. இவ்வொன்றும் கருதாமல் காலத்தில் செய்வனவற்றை, முறையே ஞாலத்தில் (உலகத்தில்) பெரிது என்றும், கடலிற் பெரிதென்றும் கட்டுரைத்தார். பூமி, மழை பெய்த காலத்தே உழுது உரமிட்டு விதைத்துப் பயிராக்கிப் பாடுபட்டால் பயன்தருவது; இல்லையேல் ஒன்றுந்தாராது; நாம் ஒன்று கிடைக்குமென எதிர்பாராதிருக்கவும் அவரே முன்வந்து செய்யும் கடமையுணர்விலெழுந்த உதவி சிறந்தது; உயரியது; மண், அதை விரும்பி வேண்டினால்தான் உதவுகின்றது; வேண்டாமல் இருந்தும் இவர் செய்த உதவியை நோக்க அது, மண்ணினும் உயர்ந்தது என்பதற்கே 'ஞாலத்தின் மாணப் பெரி' தென்றார். கடல், நீரிற் குறையில்லாதது; தன் நீரை ஆவியாக மாற்றி மழையாகப் பெய்து உலகுயிர்களைக் காப்பது; ஆனால் தன்னுள் மூழ்கினரைக் கொல்லும் இயற்கையது. பயன் கருதாது செய்யும் உதவியாளனே மனமாசில்லாமல் தனக்கென ஒன்றும் விரும்பாமல் ஒருதவி செய்கின்றான்; அவ்வுதவிக்கு ஊறுபாடுவரினும் அதனைத் தாங்கிக்கொண்டு தன் உடலை இழக்க நேரினும் ஏற்றுச் செய்கின்றான்; தன்னைக் கண்டு ஒன்று வேண்டுபவனுக்கு இல்லையென்னாது கொடுத்து உதவுகின்றான். இந்நிலையமைந்த கடப்பாடுடையான் செய்யும் உதவியை ஒப்பிட்டால் இக்கடலின் நீர்மை ஒவ்வாதன்றோ? இதைக் கருதியே 'நன்மை கடலிற் பெரி' தென்றார்.

இவ் அறமுறையால் இங்கே வில்வேடன், பயனொன்றும் கருதாது 'உண்டோர் அழுகுரல்' என்று ஓடிவந்தான்; தமயந்தி தெய்வமுகங்கண்டான்; அரவின் வாயினின்றும் அவளை அகற்றிக் காத்து உயிர்கொடுத்தான். இவன் பயன் தூக்காது காலத்தாற் செய்த உதவிக்குக் கைம்மா றென்னே! இதையுணர்ந்த தமயந்தி 'இதற்கு உண்டோ கைம்மாறு' என்றாள். 'வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம்' என முன்சொன்னதையே தமயந்தியின் சிறப்பைக் குறிக்க ஈண்டும் 'விதர்ப்பன் தான் பெற்ற விளக்கு' என்றார். (கஉக)

1. திருக்குறள், க0ச.

வேடன், தமயந்தியைத் தன்னுடன் அழைத்தல்

௩௦௮. இந்து நுதலி எழில்நோக்கி ஏதோதன்
சிந்தை கருதிச் சிலைவேடன்—பைந்தொடிநீ
போதுவாய் என்னுடனே என்றான் புலைநரகுக்
கேதுவாய் நின்றான் எடுத்து.

(இ - ள்.) புலைநரகுக்கு ஏதுஆய் நின்றான் - இழிந்த நரகத்திற் செல்லுதற்குக் காரணமாக நின்றவனான, சிலை வேடன் - வில்லேந்திய வேடனானவன், இந்து நுதலி எழில் நோக்கி - பிறைபோன்ற நெற்றியையுடைய தமயந்தியின் அழகைக் கண்டு, தன் சிந்தை ஏதோ கருதி - தன் மனத்தில் ஏதோ ஒன்றையெண்ணிக்கொண்டு, பைந்தொடி நீ என்னுடனே போதுவாய் என்றான் எடுத்து - பசும்பொன்னாலான வளையலையணிந்த பெண்ணே! நீ என்னுடனே வாவென்று உரத்துக் கூறினான்.

(க - து.) தமயந்தியின் அழகைக்கண்டு வில்வேடன், ஏதோ தன் மனத்தில் வேறொன்றைக் கருதி, 'பெண்ணே, என்னுடன் வா' என்று உரத்த குரலில் கூறினான் என்பதாம்.

(வி- ரை.) இந்து - சந்திரன்; ஈண்டு பிறை. நுதல்+இ =நுதலி : சினைப்பெயர்; மூக்கி, கூனி என்பன போல இகர விகுதி பெண்பாற் பெயர்க்கு வந்தது. பைந்தொடி : பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. முன்பும், 'அளகபந்தியின்கீழ் இந்துமுறி' என்றார். போதுவாய் : முன்னிலை ஏவல் ஒருமை.

இடக்கரடக்கர்ச் சொல்லாகக் கூறித் தமயந்தியைத் தன்னுடன் வேடன் அழைத்ததை இவர், மொழிநாகரிகமாக 'ஏதோ தன் சிந்தை கருதி........போதுவாய்' எனக் கூறியமைத்தார்.

'கற்புடைய மங்கையரைக் கருதவேண்டாம்' என்னும் உலக நீதிக் கருத்தைக் கொண்டும், நீள்நிரயத் துன்பம் பயக்குமென்னும் உரைகொண்டும், பிறன்மனையாளை நச்சுதல் பழிபாவங்கட்கு உட்படுத்தி ஒருவனைக் கெடுக்கும் என்பது கொண்டும் 'புலைநரகுக்கு ஏதுவாய் நின்றான்' என்று குறித்தார்.

[1]'அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.'

என்றும்,

1. திருக்குறள், கசஎ.

[1]'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில்
தீமை புரிந்தொழுகு வார்.'

என்றும் வரும் அறநூற் கருத்துரைகளும் கருதத்தக்கன. எடுத்தல் - பெருத்தகுரலில் கூறுதல். (கஙo)

தமயந்தி, வேடனுக்கு அஞ்சி ஓடுதல்

ஙoக. வேடன் அழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடல் மயில்போல் அலமரா—ஓடினாள்
தூறெல்லாம் ஆகச் சுரிகுழல்வேற் கண்ணினீர்
ஆறெலாம் ஆக அழுது.

(இ - ள்.) வேடன் அழைப்ப - வேடன் தன்னோடு வாவென்றழைத்தலினால், விழிபதைத்து வெய்து உயிரா - (தமயந்தியின்) கண்கள் துடிதுடித்துப் பெருமூச்சுவிட்டு, ஆடல் மயில்போல் அலமரா - ஆடுகின்ற மயிலைப்போன்று சுழன்று, வேல் கண்ணின் நீர் - வேல் போன்ற கண்களிலிருந்து நீரானது, ஆறு எல்லாம் ஆக அழுது - செல்லும் வழிகளிலெல்லாம் நிறையும்படி அழுது கொண்டு, சுரிகுழல் தூறு எல்லாம் ஆக ஓடினாள் - நெளிவு வாய்ந்த தன் கூந்தலானது புதர்களிலெல்லாம் சிக்கி அறுந்து போகும்படியாக (வேடனுக்கு அகப்படாமல்) ஓடலாயினாள்.

(க - ரை.) தமயந்தியானவள் வேடன் தன்னை அழைத்ததற்கு அச்சமுற்று அழுதுகொண்டு ஆடல்மயில்போல் சுற்றி வருந்தித் தன் கூந்தல் புதர்களில் சிக்கி அறுந்து போகும்படியாக ஓடலாயினாள் என்பதாம்.

(வி - ரை.) வெய்துயிரா அலமரா என்பன, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். ஆடல்மயில் - ஆடுந்தன்மையுடைய மயில்; அதன் சாதியடை. மயிலானது தனக்கு ஓர் இடர் வந்தகாலத்துக் கண்கள் கலங்கத் தோகைகள் குலைய அஞ்சி ஓடுமாதலால் 'மயில்போல் அலமரா' என்று தமயந்தி வருந்தி ஓடிய நிலைக்கு உவமங் குறித்தார். இது வினைபற்றிவந்த உவமம். இவ்வாறே தசரதமன்னன்பால் வரம்வேண்டிக் கிடந்த கைகேசியின் துன்பநிலைக்காட்சியை வருணித்துக் காட்டப் போந்த கம்பநாடர்,

---

1. திருக்குறள், கசஙு.

[1]"நவ்வி வீழ்ந்தென நாடக மயில்துயின் றென்னக்
கவ்வை கூர்தர..............கைகயன் தனயை.'

என்றார். ஓடுங்கால் காட்டில் உள்ள முட்புதர்களும் செடி கொடிகளும் அவிழ்ந்து நீண்டு தொங்கும் கூந்தலையும் ஆடைகளையும் இழுக்கும்; சிதைக்கும்; கிழிக்கும் ஆதலால் அதனை விளக்கும் முகத்தால், தமயந்தி கூந்தல் செடிகொடிகளில் சிக்குண்டு அறுந்தது; தன் கூந்தல் சிக்கி அறுப்புண்பதையும் நோக்காது தன் கற்பைக் காப்பதற்காக ஓட்டமெடுத்தாள்; பெண்பாலார்க்கு இன்றியமையாதது கற்புநெறி; அது உயிரினுஞ் சிறந்தது; அதனைக் காத்தல் பெண்களின் தலையாய கடன் என்பர் ஆசிரியர் தொல்காப்பியனார்.

[2]"உயிரினுஞ் சிறந்தன்று நாணே; நாணினும்
செயிர்தீர் காட்சிக் கற்புச் சிறந்தன்று.'

என்பது அவர் திருமொழி. இவர் கால்வழிவந்த சான்றோராகலான், தமயந்தி கற்பின்மிக்க பொற்புடையாள் என்பதை பெண்ணுலகமும், ஆணுலகமும் அறிந்து வியப்புற, 'தூறெல்லாம் ஆகச் சுரிகுழல்' என்ற சொற்றொடர் ஒலியத்தால் உணர்த்தினார். (கூக)

**தமயந்தி, தன் கற்பால் வேடனைப் பார்த்து எரித்தொழித்தல்**

கூ௪0. தீக்கண் புலிதொடரச் செல்லும் சிறுமான்போல்
ஆக்கை தளர அலமந்து—போக்கற்றுச்
சீறு விழித்தாள் சிலைவேடன் அவ்வளவில்
நீறாய் விழுந்தான் நிலத்து.

(இ-ள்.) தீ கண் புலிதொடர - நெருப்பைப்போல் ஒளிவிட்டெறிக்கின்ற கண்களையுடைய புலியானது துரத்திக்கொண்டு பின்செல்ல, செல்லும் சிறுமான்போல் - அதற்கு அஞ்சி ஓடுகின்ற இளமானைப் போலாக, ஆக்கை தளர அலமந்து - தன் உடல் சோர்வடைய இளைப்படைந்து, போக்கு அற்று - (அதற்கு மேல் ஓடமுடியாமையால் மேற்) செல்லுதலைவிட்டு, சீறு விழித்தாள் - சினங்கொண்டு எறிட்டுப் பார்த்தாள், சிலைவேடன் அவ்வளவில் - வில்லினையுடைய வேடனானவன் தமயந்தி பார்த்தவுடனேயே, நிலத்து நீறுஆய் விழுந்தான் - (அப்பார்வையினின்றெழுந்த சினத்தீயினால் வெந்து) சாம்பலாகி இறந்தொழிந்தான்.

---

1. கம்பராமா, அயோத்தி. மந்தரை. அஅ.
2. தொல். பொருள். களவியல்: உஉ.

(க - து.) மானைத் துரத்திச் செல்லும் புலிபோல் தமயந்தியை வேடன் துரத்திக்கொண்டு சென்றான்; அவ்வளவில் சினங்கொண்டு தமயந்தி அவனைச் சீறிப் பார்த்தாள்; அப்போதே அவன் எரிந்து சாம்பலானான் என்பதாம்.

(வி - ரை.) தீ + கண் = தீக்கண், தீபோன்ற நிறமுள்ள கண், எனப் பண்புவமமாகவும், தீயைக் கக்குகின்ற கண்களையுடைய என உருபும் பயனும் தொக்க தொகையாகவும் கொள்க. புலியின் கொடுஞ்செயலுக்கு அடைமொழி. தமயந்தி, வேடன் கொடுஞ் செயலுக்கு மருண்டு ஓடுகின்றாள்; வேடன் அவளைப் பிடித்தற்குப் பின்தொடர்ந்து செல்கின்றான். இவ்விருவர் போக்கையும் காணின், மான் புலிக்கு அஞ்சி ஓடும் காட்சிபோல் இருக்கின்றதென, வேடனைப் புலியாகவும் தமயந்தியை இளமானாகவும் உவமங் காட்டினார். போக்கு அறுதல் - செல்லவொண்ணாமல் நிற்றல். சீறா-சீறி: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

ஒருநெறியில் நெறிப்பட்டு நின்றார்க்கு, அவர் எண்ணிய எண்ணியாங்கே எய்தப் பெறுவர். கற்பென்னும் கலங்கா நிலை பெற்ற பெண்டிர்க்குத் தாம் நினைத்தனவெல்லாம் முடியும் ஆற்றல் பெருகி நிற்கின்றது. வெய்யவன் ஒளி எங்கும் எல்லாப் பொருளினும் பரவி நிறைந்து கிடக்கின்றது. ஆனால் அதன் பேரொளி ஓரிடத்திலும் திண்மை பெறாமல் இருக்கின்றது. நெருப்புக் கண்ணாடியின்வழி அதன் ஒளி நன்கு ஊடுருவிப் பாய்ந்து அதன் கண் நிலைத்து நிற்பதால், அக்கண்ணாடிப் பக்கலின் உள்ள பொருள்களில் தீக் கதுவிப் பிடித்தெரிகின்றது. அதுபோன்று தன் மனத்தை ஒருமுகப்படுத்தித் திட்பமாக்கிய நெஞ்சுரம் பெற்ற நல்லோரா, தாம் எண்ணியதை முடிக்கும் திண்மை நிலையை எய்தப் பெறுவர். இந்த முறையாகத் தமயந்தி நளனாகிய தன் கணவன்பாற் பேரெல்லையும் கடந்த பற்றுக் கொண்டவள்:

'கொடியன் ஆயினும் ஆக,
அவனே தோழிஎன் உயிர்கா வலனே.'

எனக் கொள்ளும் கற்புக் கடம்பூண்ட பொற்புடைப் பெண்மை இயற்கை வாய்ந்தவள் தமயந்தி. அதனால் அவள்தன் உள்ளம் ஒருமுகமாக நிலைபெறலாயிற்று. அவள்தன் உள்ளத்தை ஒருமைப் படுத்தினாள்; உள்ளத் திண்மை கொண்டு தனக்கு ஊறுசெய்யத் தொடர்நதுவரும் வேடனைக் கண்ணாற் பார்த்தாள்; அக்கண்களினின்றும் வெளிப்போந்த திண்மைஒளி, வேடன் உடலை வெதுப்

பிற்று; வாட்டிற்று; கீழேவீழ்ந்தான் : இறந்தான். இது உள நூல் இயல்பும் கட்பார்வையின் திட்பமும் உணர்ந்தோர் நன்கறிவர். கண்ணொளி ஆற்றலை, மறைமலையடிகள் ஆக்கிய 'மனித வசியம்' என்னும் உரைநடை நூலில் 'கண்' என்னும் பகுதியில் விரிவு படக் காண்க. தன் கற்புத் திண்மையால் நெருப்பூட்டி மதுரைமாநகர் எரித்த கண்ணகியார் வரலாற்றாலும் உணர்க. இத்துன்ப நிலையை, இவ்வரிய பெரிய நிகழ்ச்சியை 'விழித்தாள் சிலைவேடன்..............நீறாய் விழுந்தான்' என்னும் சொற்றொடரினால் அமைத்தார் ஆசிரியர். (௩௨)

### தமயந்தி, தன் வாழ்வினை நினைந்து அழுதல்

௩௧௧. வண்டமிழ்வா ணர்ப்பிழைத்த வான்குடி போல் தீத்தழல்மீ
மண்டு கொடுஞ்சுரத்தோர் மாட்டிருந்து—பண்டையுள
வாழ்வெல்லாம் தானினைந்து மற்றழுதாள் மன்னிழைத்த
தாழ்வெல்லாம் தன்தலைமேல் தந்து.

(இ - ள்.) தீதழல் மீமண்டு கொடும் சுரத்து ஓர் மாடு இருந்து - கொடிய வெப்பமானது மேலெழுந்து நெருங்கி எழுகின்ற கொடுமைமிக்க பாலைவனத்தில் ஒருபக்கமாக இருந்து கொண்டு, மன் இழைத்த தாழ்வு எல்லாம் தன் தலைமேல தந்து- (தனக்கு) நளனால் செய்யப்பெற்ற குறைபாடுகள் எல்லாம தன் தலைவிதிப் பயனெனக் கருதி (அவனை நோவாமல்), வண்தமிழ் வாணர் பிழைத்த வான்குடிபோல் - வளப்பமிக்க செந்தமிழ்ப் புலவர்கட்குத் தவறிழைத்த உயர்குடிப் பிறந்தவர்கள் பின் வறுமையால் வருந்துவதுபோல, பண்டைஉள வாழ்வு எல்லாம் தான் நினைந்து அழுதாள் - முன் வாழ்ந்திருந்த தன் வாழ்க்கை நிலையை யெல்லாம் ஒவ்வொன்றாக எண்ணி யெண்ணி அழுவாளாயினள்.

(க - து.) தமயந்தியானவள், அப் பாலைவனத்தில் ஓரிடத்திலிருந்து தான் முன்பு வாழ்ந்திருந்த செல்வ நிலைகளையெல்லாம் ஒவ்வொன்றாக நினைந்து நினைந்து அழுவாளானாள் என்பதாம்.

(வி - ரை.) வண்தமிழ் - என்றும் சீரிளமைத் திறங்குன்றாத **செந்தமிழ் மொழி.** வாணர் - அதைக்கொண்டு வாழ்வோர் என்னும் பொருளாய்ப் புலவர்களைக் குறித்தது. அவருக்குப் பிழை செய்தவர்கள், எவ்வளவு செல்வராயினும் கெடுவர் என்பதைக் கருத்தாகக் கொண்டு ஆசிரியர் கூறினார். என்னை? கற்றுத்துறை போய புலவர்பெருமக்கள், உலக மக்கள் யாவரும் இன்புற்று

வாழவே விரும்புவர்; அவர்வழி உலகமும் நிகழும்; அத்தகையாரை எல்லோரும் போற்றுவர்; போற்றத்தக்க சிறப்புமிககார்க்குத் தவறிழைத்தல் எவ்வளவு கீழ்மையானது; கேடானது என, அதை உட்கொட்டு 'வண்தமிழ் வாணர்ப்பிழைத்த வான்குடி போல்' என்னும் உவமை கொடுத்துக் கூறினார். பெரியாருக்குப் பிழைசெய்தார் கெடுவர் என்பதை வள்ளுவரும்,

[1]"ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்'

என்பதுங்காண்க. அக்குடிமக்கள் நொந்தழுவதுபோல், தமயந்தியும் நொந்து அழுது வருந்தினாள் என்க. மண்டுதல்-நெருங்குதல். அவ்வனத்தில் வெப்பமே குடிகொண்டிருப்பதெனப் பாலையின் கொடிய தன்மைக்கு 'மண்டு கொடும் சுரம்' என, அடிகள் கொடுத்துரைத்தார். தன் கணவனாகிய நளன், தன்னைக் கொடுங் கானில் தன்னந்தனியாக இரவில் விட்டுவிட்டுப் போயும் தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காக்கும் கற்புடையாளாகலான், தன் தலைவிதிதான் தன் கணவன் மனம் வேறுபடுதற்குக் காரணமென எண்ணி வருந்தினளென 'மன் இழைத்த தாழ்வெல்லாம் தன்தலைமேல் தந்து' என்று கூறி உணர்த்தினார். (கரு௫)

வணிகன் ஒருவன், தமயந்தியைக் காண்டல்

௫௧௨. அவ்வளவில் ஆதிப் பெருவழியில் ஆய்வணிகன்
இவ்வளவு தீவினையேன் என்பாள்தன்-மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய எல்லாம் உணர்ந்து.

(இ - ள்.) அவ்வளவில் - அந்த வேளையில், ஆதிபெருவழியில் ஆய்வணிகன் - (சேதிநகர்க்குச் செல்லுகின்ற) பழைய காலத்துப் பெரிய பாதையிடத்தே (வந்த) எதையும் நன்கு ஆராய்கின்ற வணிகனொருவன், இவ்வளவு தீவினையேன் என்பாள்தன் - 'எண்ணிறந்த கேட்டுக்கு ஆளானவளாகிய நான்' என்று சொல்லி வருந்திக்கொண்டிருக்கின்ற தமயந்தியின், மெய்வடிவை கண்டான ஐஉற்றான் - உடலழகைப் பார்த்தான் (இவ்வளவு அழகு வாய்ந்தவள் யார்? தனியேவரக் காரணமென்ன? எனப் பலவாறான) ஐயத்தைக் கொண்டான், உண்டு ஆய எல்லாம் உணர்ந்து - (அவளுக்கு நிகழ்ந்த காரணத்தைத்

1. திருக்குறள், ௮௯௯.

தன்னந்தனியாக இக்காட்டில்) வருவதற்குரிய செயலைக் கேட்டறிய எண்ணி இவள், கமலமயிலே என்றான் - செந்தாமரை மலரில் இருக்கின்ற திருமகளே என்று தனக்குள் நினைந்தான்.

(க - ரை.) இவ்வாறு தமயந்தி, 'கொடுந்தீவினையாட்டியேன்' என்று கூறி வருந்திக்கொண்டிருக்கின்றபோது, சேதிநகர்க்குச் செல்லும் பழைய காலத்துப் பாதையிடத்தே வந்த வணிகன் ஒருவன், இவளைக்கண்டு வியந்து இவள் வரலாற்றை அறிய எண்ணிக்கொண்டு 'இவள் திருமகளாகவே இருக்கலா'மெனக் கருதினான் என்பதாம்.

(வி - ரை.) அ அளவு - அந்த அளவு என்னும் வரையறைப் பண்புப்பெயர் ஈண்டுக் காலத்தைக் குறித்தது, இலக்கணை வழக்கு; வழுவமைதி. ஆதிப்பெருவழி - பண்டைக் காலமுதல் இருந்துவருகின்ற பெரியசாலைப் பாட்டை. அது சேதி நகர்க்குச் செல்வது. கண்டான்: முற்றெச்சமாகக் கொள்க. ஐயுறுதல் - இவள் நீரரமகளோ வானுலக மங்கையோ என, அவள்தன் உடலொளி அழகுகண்டு பல்லாற்றானும் ஐயங்கொள்ளல்.

[1]"போதோ விசும்போ புனலோ பணிகள் அதுபதியோ
யாதோ அறிகுவது ஏதுமரிது.'

எனத், திருக்கோவையார்த் தலைவன், தலைவியைக் கண்டஞான்றை அவளை இன்னளென அறியாது அவள் அழகான் மயங்கி ஐயுற்றமைபோல என்க. உண்டாய எல்லாம் உணர எனற்பாலதான செயவெனெச்ச ஈறு எதிர்காலங்குறிப்பது, உணர்ந்து எனத் திரிந்தது.

[2]"......................ஊர் துயில் எடுப்பி
இரவுத்தலைப் பெயரும் வைகறை.'

என்னும் சிலப்பதிகாரச் செய்யுளடியில் எடுப்ப எனற்பாலது எடுப்பி என வந்ததுபோற் கொள்க. 'பெருவழியில்', 'ஐயுற்றான்', 'உணர்ந்து' முதலிய சொற்கட்கேற்ற தொடர்புடைய சொற்கள் இசையெச்சமாக வருவித்துப் பொருளுரைக்கப் பெற்றன. 'கமலமயிலே என்றான்' என்பது, ஒருகால திருமகளாகவே இருக்கலாம் என்று தானே தனக்குள் சொல்லிக்கொண்டான் என்க. ஏகாரம் ஈண்டு ஐயப்பொருட்டாகவும் தெளிவுப் பொருட்டாகவும் இருபெரு நயமும் பொருட்செறிவும் கொள்ள அமைந்தமை காண்க. (கரு௯)

1. திருக்கோவையார், உ. 2. சிலப். ச : எகூ-அ0.

வணிகன், தமயந்தியை நீ யாரெனா வினவல்

௩௧௩. எக்குலத்தாய் யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்
விட்டுரைக்கும் தார்வணிகர் வேந்து.

(இ - ள்.) *கார்வண்டு - கருநிற வண்டினங்கள், காந்தாரம் விட்டு உரைக்கும் தார்வணிகர் வேந்து - காந்தாரம் என்னும் இனிய பண்ணிசையை வாயாற் பாடி முழங்குகின்ற மலர்மாலை யணிந்த வணிகத் தலைவன், (தமயந்தியை நோக்கி) எக்குலத் தாய் யார்மடந்தை - (நீ) எந்தக்குலத்தில் பிறந்தவள்? யாருடைய புதல்வி?, உன் ஊர்யாது உன் பேர்யாது - உன்னுடைய ஊர் எது? உன் பெயர் என்ன?, நெக்கு உருகி நீ அழுதற்கு நிமித்தம் என் - நீ மனங்கசிந்து அழுதற்குரிய காரணம் என்ன?, மைகுழலாய் கட்டு உரைத்து காண் என்றான் - கருங்கூந்தலையுடையாய்! நீ இவைகளையெல்லாம் நன்கு விளக்கிச் சொல்வாயாக என்று வினவினான்.*

(க - ரை.) *அவ்வணிகன் தமயந்தியை நோக்கி, 'உன் குலமென்ன? ஊர்யாது? பேர்யாது? உன்னைப் பெற்றோர் யாவர்? மனங்கரைந்து அழுதற்குரிய காரணமென்ன? இவைகளை விளக்கிக் கூறுக' என்று கேட்டான் என்பதாம்.*

(வி - ரை.) *வணிகனானவன், முதலிற் குலத்தையும், பின்னர் அவள் பெற்றோரையும், அப்பால் ஊரையும், பின் பெயரையும், பின்பு இவ்வாறான துன்பநிலை யெய்துதற்குரிய காரணத்தையும் படிப்படியாக முறையாக வினவினான் என்பதை வரிசையாக 'எக்குலத்தாய் ......... கட்டுரைத்துக்காண்' என்று அமைத்துக் கூறினார். கட்டு உரைத்தல் தெளிவாக அமையக் கூறுதல். கட்டுரை - பொருள் பொதிந்த சொல். காந்தாரம் - ஒருவகைப் பண். விட்டு உரைத்தல் - விட்டு விட்டுப் பாடுதல்: வண்டுகள் பாடுங்கால் சில பாடுதலும், சில நிறுத்தலும் ஆகிய விட்டு விட்டுப் பாடுதலைக் காண்கின்றோமாதலின், மலர் மாலையிலுள்ள தேனுண்ண மொய்த்துக்கொண்டிருக்கின்ற வண்டுகள், இவ்வாறு பாடுகின்றன என, வணிகன் மாலைச் சிறப்புக் கூறுமுகத்தால், அவன் அஃறிணை உயிர்களுக்கும் ஆதரவளிக்கும் நீர்மையன், வேடன்போன்ற தீய செயலுடையான் அல்லன் என்பதைக் குறிப்பாலுணர்த்தற்கும், தமயந்திக்கு இவனால் யாதொரு*

ஊறும் நிகழாது, நலமே நிகழும் என்பதைத் தெளிவுபடுத்தற் கும் 'தார் வணிகர் வேந்து' என்று அடைமொழி புணர்த்துக் கூறினார். வண்டு - வண்டுக் கூட்டம்: இங்கு ஒருமைச்சொல், சாதியொருமை, (கரு)

வணிகன் வினாவிற்குத் தமயந்தி விடை கூறுதல்

௩கச. முன்னை வினையின் வலியான் முடிமன்னன்
என்னைப் பிரிய இருங்கானில்—அன்னவனைக்
காணா தழுகின்றேன் என்றாள் கதிரிமைக்கும்
பூணாரம் பூண்டாள் புலர்ந்து.

(இ - ள்.) கதிர் இமைக்கும் பூண் ஆரம் பூண்டாள் - ஒளி விட்டெறிக்கின்ற அணிகளும் மணி மாலைகளும் அணிந்த தமயந்தியானவள், புலர்ந்து - வாட்டமடைந்து, முன்னை வினையின் வலியான் - நான் முற்பிறப்பிற் செய்த தீவினையின் வலிமையினால், முடிமன்னன் என்னை இருங்கானில் பிரிய - முடியணிந்த வேந்தனை நளன் என்னை இப்பெருங் காட்டில் (தனியே விட்டு விட்டுப்) பிரிந்து செல்ல, அன்னவனைக் காணாது அழுகின்றேன் என்றாள் - அம் மன்னவனைக் காணமல் (தேடி) அழுது கொண்டிருக்கின்றேன் என்று தமயந்தி கூறினாள்.

(க - து.) வணிகன் கேட்டதற்குத் தமயந்தியானவள், 'நான் செய்த தீவினைப்பயனால் வேந்தன் இப் பெரிய காட்டில் என்னை விட்டுவிட்டுச் செல்ல, அவ்வேந்தனைக் காணமல் தேடி அழுகின்றேனென்று வாட்டங்கொண்டு கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) முன்னைவினை - முற்பிறப்பில் செய்யப்பட்ட தீவினை. ஒருவர் நல்வினையோ தீவினையோ செய்தால் அவருக்கு அவ் வினை பிற்பிறப்பில் வந்து அதன் பயனைச் செய்தே தீரும் என்பது ஆன்றோர் ஆய்ந்து கண்ட முடிபு.

[1]"ஊழ்வினை உருத்துவந் தூட்டும் என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாக.'

என்றார் இளங்கோவடிகளும். வள்ளுவரும் தம் மறைநூலில்,

1. சிலப், பதிகம் : ருள-அ.

"[1] தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை
வீயா தடியுறைந் தற்று.'

என்றருளியதும் அறிக. இம்முறையில், தமயந்தியானவள் தன்னை இக் கொடுங் காட்டில், அதிலும் நள்ளிரவில், ஒரு பாழ் மண்டபத்தில் தன்னந் தனியளாக விட்டுச் செல்வதென்னின், தன் கணவரென்ன தன்பால் அன்பற்றவரா? அல்லது அறிவு திருந்தாதவரா? தன்னைப் பிரிந்தால் அப் பிரிந்த நாளைப் 'பதடி வைகல்' எனக் கருதும் பான்மையரன்றோ? என்னுங் கருத்துக் கொண்டவளாய் அரசன் மீது பழிச்சொற் கூருது 'முன்னை வினையின்... ......மன்னன் பிரிய' என்றாள். அன்னவன் - அத்தகைய சிறப்பு வாய்ந்தவன்; அவனைக் காணுமல் தேடி எய்த்து அழுகின்றேனென்று தமயந்தி அவ வணிகனுக்குச் சுருங்கிய முறையில் கூறினாள். அவன் கேட்டன 'எக்குலத்தாய் யார் மடந்தை யாதுன்பேர்' என்பன முதலாகப் பல் கேள்விகள். தமயந்தி, அவையெல்லாம் எற்றுக்குக் கூற வெனக் கருத்துட்கொண்டு 'என்னைப் பிரியக் காணுதழுகின்றேன்' என, மற்றொன்று விரிக்காது உற்றதை ஒளிக்கா துரைத்தமை அறிக. (கங௬)

**வணிகன், தமயந்திக்குச் சேதி நகர்க்குச் செல்ல வழிகாட்டுதல்**

௩௧௫. சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டப்
போதிற் கோடைவணிகன் போயினான்—நீதி
கிடத்துவான் மன்னவர்தம் கீர்த்தியினைப் பார்மேல்
நடத்துவான் வட்டை நடந்து.

(இ - ள்.) நீதி கிடத்துவான் - ஒழுக்கத்தைத் தன்பாற் கொண்டவனும், மன்னவர்தம் கீர்த்தியினை பார்மேல் நடத்துவான் - அரசர்களின் புகழை இந்நிலவுலகத்தில் பரந்து நிற்குமாறு செய்பவனுமாகிய, கொடை வணிகன் - கொடைத் தொழிலை யுடையவனுமாகிய அவ்வணிகன், சேதி நகர்க்கே திருவை செலவிட்டு - சேதிநாட்டுத் தலைநகருக்குத் திருமகள் போன்ற தமயந்தியைச் செல்லுமாறு போக அனுப்பிவிட்டு, அப்போது வட்டை நடந்து போயினான் - பின்பு தன் வணிகமுறை கருதி வழி கடந்து சென்றான்.

(க - து.) தமயந்தியை அவ்வணிகன் சேதி நகருக்குச் செல்லும்படி அனுப்பிவிட்டு, அப்பால் தன் வணிக முறை கருதி வழி நடந்து சென்றான் என்பதாம்.

---

1. திருக்குறள், உ0அ.

(வி - ரை.) சேதிநகர் - சேதி நாட்டுக்குத் தலைமையான நகரம். செலவிடுதல் - அனுப்புதல். நீதிகிடத்தல் - ஒழுங்கு முறையை நிலைநிறுத்தல். மன்னவர் கீர்த்தியை நடத்துதலாவது, அரசன் நெறிமுறைக்கு மாறுபடாமல் நடக்கும் கடமையுணர்ச்சி நிலை. வட்டை - வழி; பாதை. வாட்டை - பாட்டையென்பது முதல் குறுகிநின்றதெனக் கொள்க. பார்-பூமி. பரந்த இடத்தை யுடையதென்பது பொருள். நடத்துவான் என்பது இறந்தகால வினையாலணையும் பெயர். தமயந்திக்கு வழி காட்டிவிட்டுத் தான் வணிகனுகலான் தன் தொழில் முறை நடத்துதற்கு வழி நடந்து சென்றனென முடிக்க. (கஙஎ)

### தமயந்தி, சேதிநாடு செல்லப் பணிப்பெண்கள் கண்டு அவளை அந்நாட்டரசிக்கு அறிவித்தல்

௩கசு. அற்ற துகிலும் அருதொழுகு கண்ணீரும்
உற்ற துயரும் உடையவளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டேம் நிலவேந்தன் பொற்றேவி
என்றார் மடவார் எடுத்து.

(இ - ள்.) மடவார் - பணிப் பெண்கள், (தமயந்தியைக் கண்டு தம் அரசியிடம் போய்) நிலவேந்தன் பொன்தேவி - சேதி நாட்டு மன்னனுக்குச் சிறந்த மனையாட்டியாரே!, அற்ற துகிலும் அறாது ஒழுகு கண் நீரும் - அறுபட்ட ஆடையும் இடையறா தொழுகுகின்ற கண்ணின் நீரும், உற்ற துயரும் உடையவள் ஆய் - இடைவிடாதிருக்கின்ற வருத்தமும் உள்ளாளாகி, ஒருத்தி நின்றாளை எடுத்து கண்டேம் என்றார் - நின்றவளாகிய ஒரு பெண்ணை (இந்நகரின் ஒரு பக்கலில்) பார்த்தோமென்று விரித்துக் கூறினார்கள்.

(க - து.) சேதி அரசியின் பணிபபெண்கள் தமயந்தியைக் கண்டு அரசியிடம்போய், 'நிலவேந்தன் தேவியாரே! நாங்கள் ஒருத்தியைக் கண்டோம்; அவள் குறைபட்ட ஆடையும், குறையாத அழுகையும் உடையளாய் இருக்கின்றாள்' என்று விரித்துக் கூறினார்கள் என்பதாம்.

(வி - ரை.) அற்ற துகில் - முன்றானையில் கரைகள் இன்றி வெட்டுப் பட்டுள்ள ஆடை. அறாது ஒழுகு கண்ணீர் - தன் நிலையை எண்ணியெண்ணி ஏங்குதலால் கண்களிலிருந்து ஊற்றெடுத் தொழுகும் கண்ணின் அழுகை நீர். அற்ற, அறாத என்பன

முரண்தோடை அழகு பொலிந்திருத்தலை நோக்குக. உற்றதுயர் - நிலைபெற்றிருக்கும் வருத்தம். அன்றித் தன்பால் வந்துள்ள வருத்தம் என்னலுமாம். மற்று : அசைநிலை. நின்றாள்: இறந்த கால வினையாலணையும் பெயர். கண்டேம்: உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று. பல சேடியர் கண்டனராகலின் இவ்வாறு கூறினரென்க. (௧௩௬)

சேதியரசி தன் பணிப் பெண்களை நோக்கி, 'அவளை அழைத்துவருக' எனல்

௩௧௭. போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
ஆய மயிலை அறியவே—நீயேகிக்
கொண்டுவா என்றாள்தன் கோவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தல் மயில்

(இ - ள்.) வண்டு வாழ் கூந்தல் மயில் - வண்டுகள் (மலர்த் தேனை உண்பதற்குத்) தங்கியிருக்கின்ற கூந்தலையுடைய மயில் போன்ற சேதியரசியானவள், தன் கொவவைக் கனிதிறந்து - தன்னுடைய கோவைக்கனி போன்ற செவ்வாய் திறந்து, புனை இழையாய் - அணிந்துள்ள நகைகளையுடைய சேடியே!, பூங்குயிலை ஆய மயிலை - (நீவிர் கூறிய) அழகிய குயில் போன்றாளைச, சிறந்த மயிலனையாளை, அறிய - (இன்னாளெனக் கேட்டுத்) தெரிந்து கொள்ளற்கு, போய் அகலா முன்னம் - அவள் அவ்விடத்தை விட்டுச் செல்வதற்கு முன்பாக, நீ ஏகி - நீ சென்று, கொண்டுவா என்றாள் - அழைத்துக் கொண்டுவருக என்று (அவர்களுள் ஒரு சேடியைப் பார்த்துக்) கூறினாள்.

(க - து.) தமயந்தியின் தன்மையைக் கூறிய சேடியருள் ஒருத்தியைச் சேதியரசி நோக்கி, 'சேடியே! நீவிர் கூறிய அவள் அந்த இடத்தைவிட்டுச் சென்றுவிடுமுன் இங்கே அழைத்துக் கொண்டுவா' என்று கட்டளை இட்டாள் என்பதாம்.

(வி - ரை.) 'போய் அகலா முன்னம்' என்பது, 'அவள் அந்த இடத்தினின்றும் அகன்று செல்வதற்கு முன்பாக விரைவில் அழைத்துக் வருக' என்னும் குறிப்பினை யுடையது. புனை இழையாய் : வினைத்தொகை. பூங்குயில், ஆயமயில் என்பன ஆகு பெயராகத் தமயந்தியைக் குறித்தன. குயிலென்றமையால் குயிற் குரல்போன்ற அவள் மென்சொல்லால் அவள் வரலாறு

கேட்டுத் தெளியலாமென்றும், மயில் என்றமையால் அவள் சாயல் முதலிய அழகினைக் கண்ணுற் காணலாமென்றும் அவள் கருதினு ளெனக் கொள்ளக. வந்து கூறினார் பலராயினும் தன் பக்கலில் எப்போதும் இருக்கும் சேடி, மற்றையோரினும் அறிவும் குறிப் பறியும் தன்மையும் அழகும் மிக்கவளாக இருப்பா ளாகலான், 'புனை இழையாய் நீ ஏகி........கொண்டுவா' எனக் கூறினாள். கொவ்வைக் கனி: உவமை ஆகுபெயராய்ச் சேதியரசியின் சிவந்த வாயைக் குறித்தது. அவள் தன் இளமைப் பண்பும், அழகின் செவ்வியும் தோன்றக் 'கொவ்வைக் கனிதிறந்து' என்றார். (கஙகக)

தமயந்தி, சேதியரசியின் கால்களில் விழுந்தழுதல்

ஙகஉ. ஆங்கவளும் ஏக அரசன் பெருந்தேவி
பூங்கழலின் மீதே புரண்டழுதாள்—தாங்கும்
இனவளையாய் உற்றதுயர் எல்லாம் எனது
வினைவலிகாண் என்றாள் மெலிந்து.

(இ - ள்.) ஆங்கு அவளும் ஏக - (தமயந்தியானவள்) அவ் விடத்தே சேதியரசிபால் சென்று, மெலிந்து - வருத்தத்துடன், தாங்கும் இனவளையாய் - பலவகை வளையல்களை அணிந்துள்ள சேதியரசியே, உற்ற துயர் எல்லாம் - நான் அடைந்த துன்பம் யாவும், எனது வினைவலி என்றாள் - என்னுடைய ஊழின் கோட்பாடே என்று கூறி, அரசன் பெருந்தேவி - சேதியரசன் பட்டத்தரசியின், பூங்கழலின்மீதே புரண்டு அழுதாள் - திருவடி களின்மேல் வீழ்ந்து அழுவாளாயினாள்.

(க - ரு.) தமயந்தி, சேதியரசியின்பாற் சென்று 'நான் அடைந்த துன்பமெல்லாம், எனது ஊழின் வலி மையே' என்று கூறி அவள் காலடிகளில் விழுந்து புரண் டழுதாள் என்பதாம்.

(வி - ரை.) அவள்: சுட்டுப் பெயர்; ஈண்டுத் தமயந்தி. ஏக - ஏகி என்னும் பொருளது ஏக என்னும் செயவெனெச்சம் அழுதாள் என்ற இறந்தகால வினைமுற்றினால், இறந்தகாலமாக வந்தது; காரியப்பொருட் டாதலினால். பெருந்தேவி - முதன் மனைவி. அரசர்கட்கு மனைவியர் பலருளராதலின், பட்டத்தரசி யென்பதை உணர்த்துதற்குப் 'பெருந்தேவி' என்றார்.

இன்துணை மகளிர்க்கு இன்றியமையாக் கற்புக்கடன் பூண்ட வள் தமயந்தியாகலான், அவள் தன் மணாளனாகிய நளமன்னன்,

சூதால் நாடு நகர் யாவுந்தோற்று, இத்தகைய கீழ்நிலைக்கு உள்ளாக்கினன் எனக் குறைகூறாது, தன் தீவினையே இதற்குக் காரணம், தீயூழால் நல்லன தீயனவாகவும், தீயன நல்லனவாகவும் மாறுகின்றன. அதனால் விளைந்ததே இத் துன்பம் எனக் கருதினவளாய் 'எனது வினைவலிகாண்' என்றாள். மெலிதல் - உடல்நிலை தளர்வு கொள்ளல். என்றாள் : முற்றெச்சம். (கசO)

## சேதியரசி, தமயந்தியை வினவுதல்

கசக. அந்தா மரையி லவளேயென் றையுற்றுச்
சிந்தா குலமேனக்குத் தீராதால்—பைந்தொடியே
உள்ளவா றெல்லாம் உரையென்றாள் ஒண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு.

(இ - ள்.) ஒள் மலரின் கள்ளவார் கூந்தலாள் கண்டு - அழகொளி மிக்க மலர்த்தேன் ஒழுகுகின்ற நீண்ட கூந்தலையுடைய சேதியரசி தமயந்தியைப் பார்த்து, (அவள் அழகினை வியந்து), அம் தாமரையில் அவளே என்று ஐஉற்று - அழகிய செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கின்ற அழகிய திருமகளேயோ என ஐயங்கொண்டு, பைந் தொடியே - பசிய வளையலையணிந்த மங்கையே, சிந்தாகுலம் எனக்கு தீராது (உன் வரலாறெல்லாம் நன்கு உரையாயாயின் உன்பால் நான் கொண்டுள்ள) கடலினும் மிக்க வருத்தம் என்னை விட்டு நீங்காது, உள்ள ஆறு எல்லாம் உரை என்றாள் - (ஆதலால்) நீ உள்ளது உள்ளவாறே (உன் வரலாற்றை யெல்லாம்) கூறுவாயாகவென்று சேதியரசி கேட்டாள்.

(க - ரு.) தமயந்தியைப் பார்த்துப் 'பெண்ணே! உன் வரலாற்றைக் கூறுயாயின் உன்பால் கொண்ட வருத்தம் எனக்குத் தீராது, ஆகவே, உன் வரலாற்றையெல்லாம் ஒளியாமல் கூறுவாயாக' என்று சேதியரசி தமயந்தியிடம் கூறினாள் என்பதாம்.

(வி ரை.) 'அம் தாமரையிலவள்' என்பது, அம்+தாமரை+இல்லவள் எனப் பிரிக்க. [1]"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை' என்பதனானும், [2]'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்பதனானும் அதில் சிறந்தவளான திருமகள் வீற்றிருக்கிறாள் என்பது தமிழர்கொண்ட வழக்கு. எனவே, ஈண்டு அந் தாமரை மேலவள் என்பது திருமகளைக் குறித்தது. தமயந்தியின் அழ

1. திருநாவு. தேவாரம் : கக: உ. 2. நால்வர் நான்மணிமாலை, சO

கைக் கண்டு வியந்த சேதியரசி, இவள் திருமகளோவென்று ஐயங் கொண்டு நின்றாள். பின்னர் அவள் துன்பநிலை கண்டு வருந்தினாள். தமயந்தியை நோக்கி உள்ளதை உள்ளவாறே மறைக்காமல் கூறுக என்பாளாய் 'உள்ளவாறெல்லாம் உரை' என்றாள். சிந்து + ஆகுலம் = சிந்தாகுலம். சிந்து - கடல். ஆகுலம் - வருத்தம், கடல் போன்று பெருகிய துன்பம் என்க: உவமைத் தொகை. இவளைக் கண்டதும் சேதியரசியின் பெண்மையுள்ளம் உருகிற்று; அதனால் எனக்கு இத் துன்பம் உன்னைக் கண்டதும் மிகுந்தது; உன் வரலாறு தெரிந்தால் உன் துன்பம் தீர வழி செய்வேன் என்றும், அதனால் நீ நன்னிலை யெய்தி இன்புறச் செய்வேனென்றும் உணர்த்தும் குறிப்பினளாய் 'சிந்தாகுலம் எனக்குத் தீராது......உள்ளவாறெல்லாம் உரை' என்றாளென்க. (கஏக)

சேதியரசிக்குத் தமயந்தி விடையளித்தல்

ஙஉ०. என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
அன்னவனைக் காணா தலமருவேன்—இந்நகர்க்கே
வந்தேன் இதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்ந்து.

(இ - ள்.) (இவ்வாறு கேட்ட சேதியரசியைத் தமயந்தி நோக்கி) வாய்புலரா செம்தேன் மொழி பதற சேர்ந்து - வாய் புலர்ந்து இனிமையான தேன்போன்ற சொற்கள் தடுமாறி ஒன்றுபட்டு, என்னை தனி வனத்து இட்டு எம்கோன் பிரிந்து ஏக - என்னைத் தன்னந் தனியாக வனத்திடத்து விட்டுவிட்டு எம் கணவன் பிரிந்து செல்ல, அன்னவனைக் காணாது அலமருவேன் - அத்தகைய என் கணவரைக் காணாமல் தேடி அலைவேனாயிருக்கின்றேன், இந்நகர்க்கு வந்தேன் - (அவரைத் தேடிவரும்போது தற்செயலாக) இந்த நகருக்கு வந்து சேர்ந்தேன், இது என் வரவு என்றாள் - இதுதான் நான் இங்கே வருவதற்குரிய காரணமாகும் என்று கூறினாள்.

(க - து.) சேதியரசிக்குத் தமயந்தியானவள், 'என் கணவர் என்னைத் தனியே வனத்தில் விட்டுச் செல்ல அவரைத் தேடி அலைவேனாவேன்; தற்செயலாக இந்த நகருக்கு வந்து சேர்ந்தேன்; இதுவே என் வருகை' யென்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) என்னை : தமயந்தி தன்னைக் குறிக்கும் தன்மை யொருமைச் சொல். எம்கோன் - எம் தலைவன், அல்லது அரசன்.

நளமன்னன். இங்கே உண்மையும் சொல்ல வேண்டும்; அது வெளிப்படையாகத் தெரியலாகாது. இது சொல்லின் வன்மை. அம்முறையில் ஆசிரியர் தமயந்தி பேசுவதைக் காட்டுகின்றார். காட்டில் கண்ட வணிகன் தமயந்தியை, 'எக்குலத்தாய், யார் மடந்தை, யாதுன்னூர், யாதுன் பேர்' என்று பல வகையான கேள்விகளைக் கேட்டபோது, அக்கேள்விகளுக் கெல்லாம் முழுதும் விடை கூறாமல் 'முடி மன்னன் என்னைப் பிரிய' என்ற ஒன்றையே கூறி, ஏனையவற்றை யெல்லாம் விரித்துக் கூறிற்றிலள். இங்கும், முன் வணிகனிடம் சொன்னதையே,'என்னைத் தனிவனத் திட்டெடங்கோன் பிரிந்தேக' என்றதனால் அவள் தன் அடக்க முடைமை புலப்படுத்தினார். அலமருவேன், வந்தேன் என்பன, அவள் தன் துன்பச்செயலைக் குறித்துரைத்தவாறும். உண்மையை மறைத்துக் கூறுதலால், மனம் தடுக, அதனால் வாய் புலர்ந்தது; சொல்லும் தடுமாறியது; இஃது இயல்பாக நிகழும் நிகழ்ச்சி; இதனால் குறிப்பாக மறை வெளிப்படுமாறு ஆசிரியர் சித்திரித்த சொல்லோவியம் அறிந்தின்புறற்பாலன. (கசஉ)

### சேதியரசி, தமயந்தியிடம் கூறுதல்

கஉக. உன்தலைவன் தன்னை ஒருவகையால் நாடியே
தந்து விடுமளவும் தாழ்குழலாய்—என்றனுடன்
இங்கே இருக்க இனிதென்றாள் ஏந்திழையைக்
கொங்கேயும் தாராள் குறித்து.

(இ - ள்.) கொங்கு ஏயும் தாராள் - மணந் தங்கும் மலர் மாலையணிந்த சேதியரசியானவள், ஏந்து இழையை குறித்து - மேன்மையான அணியணிந்த தமயந்தியைப் பார்த்து, தாழ் குழலாய் - தொங்குகின்ற கூந்தலையுடையாய், உன் தலைவன் தன்னை ஒருவகையால் நாடியே - உன்கணவனை ஒருவாற்றால் தேடச் செய்து, தந்துவிடும் அளவும் - உன்னிடத்தில் நாங்கள் சேர்க்கும் வரையில், என் தன் உடன் இங்கு இனிது இருக்க என்றாள் - என்னோடு கூடவே இவ்வரண்மனை அந்தப்புரத்தில் இன்பத்துடன் இருந்து வருவாயாகவென்று கூறினாள்.

(க - து.) சேதிநாட்டரசி தமயந்தியைப் பார்த்து, 'தாழ் குழலாய்! உன் கணவனைத் தேடிக்கொண்டு வந்து உன்னிடம் நாங்கள் சேர்க்கும் வரையில் என்னுடன் இந்த அரண்மனை அந்தப்புரத்தில் இன்பமாக இருந்து வருவாயாக' என்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) ஒரு வகையால் - ஒருவாற்றால், எவ்வழியாலும் என்ற குறிப்பு. தந்துவிடுதல் - கொண்டுவந்து சேர்த்தல் விடு: பகுதிப்பொருள் விகுதி. தாழ் குழலாய்: வினைத்தொகை. தமயந்திக்கு ஆய் விளி ஏற்றது. ஏந்திழை அன்மொழித் தொகை. இனிது இருத்தல்-உண்டு உடுத்துத் தன்னைப்போல் கவலையின்றி இருத்தல். கொங்கு - மணம். தார் - மாலை. சேதிநாட்டரசி தமயந்தியை இன்னாளென அறியாளாயினும் அவள் தோற்றம் நல்லியல்பு முதலியனகொண்டு இவள் உயர்குடிப் பிறந்த பெண் மகள் எனக் கருதி 'என்றனுடன் இங்கே இருக்க இனிது' என வேண்டினாள் என்க. (கசாடு)

### வீம மன்னன், நளனையும் தமயந்தியையும் தேடுதற்கு ஆளனுப்புதல்

௩௨௨. ஈங்கிவளிவ் வாறிருப்ப இன்னலுழந் தேயேகிப்
பூங்குயிலும் போர்வேல் புரவலனும்—யாங்குற்றார்
சென்றுணர்தி என்று செலவிட்டான் வேதியனைக்
குன்றுறழ்தோள் வீமன் குறித்து.

(இ - ள்.) ஈங்கு இவள் இவ்வாறு இருப்ப - இந்தச்சேதி நகரில் சேதியரசி வேண்டியவாறு தமயந்தி இப்படி இருந்துவர, குன்று உறழ் தோள் வீமன் - மலையையொத்த உயர்ந்த தோள் களையுடைய வீமமன்னனானவன், பூங்குயிலும் போர்வேல் புரவல னும் - அழகிய குயில்போன்ற இன்சொல்லுடைய தமயந்தியும் போர் புரிகின்ற வேலேந்திய நளமன்னனும், இன்னல் உழந்து ஏகி யாங்கு உற்றார் - துன்பமடைந்து சென்று எங்கு இருக் கின்றனரோ (அறிகிலோம் என்று கருதி), வேதியனை - மறைய வன் ஒருவனை, சென்று உணர்தி என்று குறித்து செ(ல்)லவிட் டான் - நீ போய்த்தேடி (நளன் தமயந்தி இருவரும் இருக்கும் இடத்தை) அறிந்து வருகவென்று எடுத்துக் கூறிப் போவதற்கு அனுப்பினான்.

(க - ரை.) வீம மன்னன், 'நளன் தமயந்தி இருவரும் துன்பமடைந்து சென்று எங்கிருக்கின்றார்களோ அறிகிலே' மென்று கருதி, ஒரு மறையவனை அழைத்து, 'நீ போய் நளன் தமயந்தி இருக்குமிடத்தைத் தேடி அறிந்து வருக' என்று கூறி அனுப்பினான் என்பதாம்.

(வி - ரை.) ஈங்கு : அண்மைச் சுட்டு, இடப் பெயராகச் சேதிநகரைக் குறித்தது. இவள் என்பது: அண்மைச் சுட்டடியாகப்

பிறந்த பெயர்ச் சொல், தமயந்தியைக் குறித்தது. இவ்வாறு: இதுவும் சுட்டுப் பெயரே. இங்கே மேற் பாட்டில் சேதியரசி 'என்னுடனே இங்கு இருக்க' என வேண்டினளாகலின் அதனையே விளக்கி அண்மைச் சுட்டாக அமைத்துக் கூறினர். இன்னல் உழந்து ஏகுதல்: நாடு நகரங்களை யெல்லாம் சூதாடித் தோற்று அதனால் அரசு நிலை மாறி வறியராகிக் கால் நடையாகக் காடு நோக்கிச் சென்றதைக் குறித்தது. இதனைக் கேள்வியுற்ற வீமமன்னன் தன் அரிய மகளின் நினைவு வந்து வந்து உந்தி வருத்த இவ்வாறு கருதினனென்க. உணர்தி: முன்னிலை ஏவல் ஒருமை. உணர்+த்+இ. உணர்: பகுதி, இ, முன்னிலை ஏவல் ஒருமை விகுதி. தகரம் எழுத்துப் பேறு. வேதியன் - வேதத்தை அறிந்தோன், அந்தணன். குன்று - சிறு மலை. தோள் மலை போன்ற கவர்ச்சியும் உயர்சசியும் திண்மையும் வன்மையும் உடையதாகலின், வீமன் தோள்களுக்கு 'குன்று உறழ் தோள்' என்று உவமையாக்கிக் கூறினர். உறழ்: உவமவிடைச் சொல்; [1]'போலப் புரைய ஒப்ப உறழ' எனவரும் நன்னூல் நூற்பாவால் தெளிக. (கசச)

**வீமனால் தேடவிட்ட மறையோன் தமயந்தியைக் கண்டறிதல்**

கஉரு. ஓடும் புரவித்தேர் வெய்யோன் ஒளிசென்று
நாடும் இடமெல்லாம் நாடிப்போய்—கூடினன்
போதில் திருநாடும் பொய்கைத் திருநாடாம்
சேதித் திருநாடு சென்று.

(இ - ள்.) (வீமனால் தேடவிடப்பட்ட வேதியனானவன்) ஓடும் புரவி தேர் வெய்யோன் ஒளி சென்று - விரைந்து செல்கின்ற ஏழு குதிரைகள் பூட்டிய தேரினையுடைய சூரியனது வெளிச்சஞ் சென்று, நாடும் இடம் எல்லாம் நாடி போய் - நுழைகின்ற இடமெல்லாம் தேடிக்கொண்டே சென்று (முடிவில்), போதில் திரு - செந்தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகளானவள், நாடும் பொய்கை திரு நாடு ஆம் - விரும்புகின்ற நீர் நிறைந்த தடாகங்கள் சூழ்ந்த செல்வமிக்க நாடான, சேதி திரு நாடு சென்று கூடினன் - சேதியென்னும் நாட்டுக்குரிய தலை நகரில் போய்ச் சேர்ந்தான்.

(க - து.) நளன் தமயந்தி இருவரையும் தேடிச் சென்ற மறையவன், சூரியன் ஒளி படுகின்ற இடமெங்குந்

1. நன்னூல்: கூகஎ.

தேடிக் காணுமல், இறுதியில் செல்வச் சிறப்பு வாய்ந்த சேதிநகரில் போய்ச் சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) ஓடும் புரவித்தேர் - ஓடுகின்ற குதிரை பூட்டிய தேர். சூரியன் வட்டவடிவாக இருத்தலால், தேரின் ஒருருளை யாகவும், அது இயங்கும் ஆற்றலைச் சூரியன் ஆகவும், அதினின்றும் வருகின்ற எழுநிறவண்ண ஒளிக்கதிர்களைக் குதிரைகளாகவும் உருவகஞ் செய்து கற்பனையாகக் கூறுவது புராண மரபு. அம் முறையில், 'ஓடும் புரவித் தேர் வெய்யோன்' என்றார். வெம்மை + ஆன் = வெய்யோன் எனத் திரிந்து புணர்ந்தது. வெம்மை - வெப்பம். அல்லது விரும்பப்படும் தன்மை. அதனையுடையோன் வெய்யோன் எனப்பட்டான். அன், ஆன், விகுதி ஈண்டு ஆண் பால் குறிப்பதன்று. பழங் காலத்தே காலம் முதலியவற்றைக் குறிக்க ஏற்ற விகுதி. இதனைக் [1]'காலம் உலகம்', [2]'இசைத்த லும் உரிய' என்னும் தொல்காப்பிய நூற்பாவானும் அதற்குச் சேனுவரையர் வரைந்த உரையானும் அறிக. காலம் காலன், கூற்று கூற்றுவன், முருகு முருகன் என்பன காண்க. இவைகள் ஆண்பால் குறிப்பனவல்ல. காலத்தைச் செய்வது காலன்; கூறு படுத்துவது: உடலையும் உயிரையும் வெவ்வேருகப் பிரிப்பது கூற்றுவன். முருகு, இளமை மணம்; அழகு உடைய பொருள் முருகன் எனப்பட்டது. பிறவும் இவ்வாறே பரந்து வருவதை அறிக. இவைகளைப் போன்றே ஈண்டு வெப்பத்தைச் செய்வது வெய்யோன் எனப்பட்டது. இவ்வாறே வழக்கினும் கரிக் குருவி யைக் கரிச்சான் என்பதும், மரப் பொந்தில் வாழ்கின்ற பற வையைக் கோட்டான் என்பதும், கழுதையை நெடுஞ்செவியன் என்பதும் வருவன கண்டு தெளிக. விரிப்பின் பெருகும். இவை களும் ஆண்பால் குறிக்கும் விகுதிகளன்று. போது - பூ: காலத் தின் மலர்ந்தது என்னும் பொருளது. முன்னரும் நளன் ஆளும் நிடத நாட்டைக் குறிக்க 'போதில் சினையாமை வைகும் திரு நாடு' என்ருர். போதில் திரு - திருமகள்: இலக்குமி. ஒரு நாடு தாமரை மலர்கள் மலரக்கூடிய நாடாக இருப்பின், அது நீர்வள முடையதாகக் கொள்ளப்படும்; நீர்வளம் மிகின், அந்நாட்டில் விளைவு பெருகும்; அது பெருகினல் அந்நாட்டில் பசி பிணி உயிர் களை அணுகாது; அவை அணுகாது விடின், ஆங்கே மக்கள் கல்வி கேள்வி அறம் வீரம் மானம் முதலியவற்றில் சிறந்து விளங்குவர்; அவ்வாறு சிறந்து விளங்கின் அந்நாடு எல்லா நாட்டினும் மேன்மையானதாகக் கொள்ளப் பெறும் செல்வச் சிறப்பின தாகத் திகழும். எனவே, தமயந்தி தங்கியிருக்கும் பேறுபெற் றமையால், அந்நாட்டிற்கு இவ்வாறு ஏற்றங் கொடுத்தார். போதில்

1, 2. தொல். சொல். ௫௭ ; ௫௮.

திரு, தாமரை மலரில் வீற்றிருக்கின்ற திருமகள் போன்ற தமயந்தியெனப் பொருள் கோடலும் பொருந்தும். மறையவன் இத்தகைய திருநாடு சென்று கூடினான் எனக்கொள்க. (கசுஙி)

மறையவன் தமயந்தியைக் கண்டு அழுதல்

௩௨௪. தாமஞ்சேர் ஓதித் தமயந்தி நின்றாளை
ஆமென் றறியா அருமறையோன்—வீமன்
கொடிமேல் விழுந்தழுதான் கொம்புமவன் செம்பொன்
அடிமேல் விழுந்தாள் அழுது.

(இ - ள்.) அருமறையோன் - (தமயந்தியைத் தேடிச்சென்ற) அறிதற்கரிய மறையுணர்ந்த அந்தணன், நின்றாளை தாமம் சேர் ஓதி தமயந்தி ஆம் என்று அறியா - அந்தப்புரத்தில் நின்றுகொண்டிருந்த மாலையணிந்த கூந்தலையுடைய தமயந்தியேயாமென்று அறிந்துகொண்டு, வீமன் கொடிமேல் விழுந்து அழுதான் - வீமமன்னன் மகளாகிய பூங்கொடியையொத்த அத் தமயந்தியின்பால் (வருத்தங் கொண்டவனாய்க்) கீழே விழுந்து புலம்பினான், கொம்பும் அவன் செம்பொன் அடிமேல் அழுது விழுந்தாள் - கொம்பையொத்த தமயந்தியும் அம் மறையோனுடைய சிவந்த பொன் போன்ற அடிகளின்மேல் விழுந்து அழுதாள்.

(க - து) தேடிச் சென்ற மறையவன், அரண்மனை அந்தப்புரத்தில் நின்றுகொண்டிருந்த தமயந்தியை அவளேயென்றறிந்து அவள்பால் வருத்தங்கொண்டு அழுதான்; தமயந்தியும் அவன் காலடியில் வீழ்ந்தழுதாள் என்பதாம்.

(வி - ரை.) தாமம்-பூமாலை. சேர் ஓதி-சேர்ந்த கூந்தல்:முக்காலவினைத்தொகை. நின்றாளை: இறந்தகால வினையாலணையும் பெயர் இரண்டனுருபேற்றது. தமயந்தி ஆம் என்று அறியாஎனக் கொண்டு கூட்டுக. வீமன் கொடி - வீமன் பெற்ற கொடி போன்றவள். கொடிபோல்வாளைக் கொடி என்றது ஆகுபெயர். மேல் - ஈண்டு இடப் பொருள் குறிக்கும் ஏழாம் வேற்றுமை உருபு. அதற்குத் தமயந்தி பக்கத்தில் என்றும்பொருள் கொள்க. கொம்பு - பூங்கொம்பு. அஃதாவது பூவோடு பொருந்திய செடி, மரம் இவைகளின் கிளை. தமயந்தி உடல் கொடிபோன்றது. அவ்வுடலிற் பொருந்திய கண்ணும் முகமும் காதும் கையும் காலும் எல்லாம் மலர் போறலின், பூங்கொம்பென்றார். செம்பொன் - மறுவற்ற பொன். பொன்போல ஒளியுடைய கால்கள் என மறையோன் திருந்திய அடிகளை விளக்கினார். (கசுசு)

### தமயந்தியும், மறையோனும் வருந்துதல் கண்டு நகரமாந்தர் வருந்துதல்

௩௨௫. மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
அங்கவன்தன் கண்ணீர் அவளுடல்மேல்—பொங்கக்
கடல்போலும் காதலார் கையற்றார் தங்கள்
உடல்போலும் ஒத்தார் உயிர்.

(இ - ள்.) மங்கை விழிநீர் மறையோன் கழல் கழுவ - தமயந்தியின் கண்ணீர் வேதியன் கால்களை அலம்பவும், அவன் கண்ணீர் அங்கு - அவ்வேதியன் கண்ணீரானது அவ்விடத்தே, அவள் உடல்மேல் பொங்க - அத்தமயந்தியின் உடலின்மீது பெருகி வழியவும், கடல்போலும் காதலார் கை அற்றார் - கடல் போல் பெருகிய அன்புடைய அந்நகர மக்கள் (இதனைக் கண்டு) செயலற்று ஒன்றுந் தோன்றாது நின்றார்கள், தங்கள் உடல் போலும் உயிர் ஒத்தார் - தங்களின் உடல் அசையாமல் நின்றது போலவே அவர் உயிரும் தற்செயலற்று நின்றது.

(க - து) தமயந்தியும் வேதியனும் அழுங்காலையில் அளவற்ற நகர மக்கள் கூடி வருத்தத்தால் செயலற்று நின்றார்கள் என்பதாம்.

(வி - ரை) தமயந்தி அழுத அழுகையினால் கண்ணீர் பெருகி ஓடி வேதியன் காலடியிடமெல்லாம் நீர் நிறைந்தது; அம் மறையவன் அழுததால் உண்டான கண்ணீர் தமயந்தியின் உடலெல்லாம் நனைத்தது. அன்புமிக்க வழி, தம் அன்புடையாரிடத்தே நல்லது காணினும் அல்லது காணினும் இன்பத்தானும் துன்பத்தானும் கண்ணீர் பெருகுவது இயல்பு. இதனை,

> [1]'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
> புன்கணீர் பூசல் தரும்.'

என்றார் வள்ளுவரும். எனவே, தமயந்திக்கு நேர்ந்த துன்பநிலை கண்ட மறையவன், தன் மனந் தாங்கலாற்றாது அழுதான். அவன், அன்பால் உருகி உகுத்த கண்ணீர் கண்ட தமயந்தியும் அழுதாற்றினாள்; இவ்விருவர் அழுகையால் உண்டாய கண்ணினீர் இருவர் உடலையும் நனைத்தது. இதனை 'கழல் கழுவ' 'உடல் மேல் பொங்க' என்ற சொற்களால் விளக்கிக் கூறினார். 'கடல் போலும் காதலார் கையற்றார்' என்பதையும், 'தங்கள் உடல்

1. திருக்குறள், எக.

போலும் ஒத்தார் உயிர்' என்பதையும் இங்கே தமயந்திக்கும் மறையவனுக்குஞ் சொன்னதாகக் கொள்க. அவ்விருவரைப் பற்றியே மேல் 'பொங்க' என்னும் சொல், 'கடல் போலும் காதலார்' என்னுஞ் சொற்றொடரை அவாவித் தழுவு தொடராக அமைந்துள்ளமையானும் வருத்தங்கொண்டவர்க்குச் செயலறவு படலானும் உடல் செயற்பாடு நீங்கியவுடன் உயிரும் தன் தொழி லாற்றாது நிற்பது இயற்கையோடொத்திருத்தலானும் இவ் விருவர் செயலுக்கு ஒத்ததாக உரைப்பதே பொருத்தம். நகர மாந்தர்க்கோ, நெருங்கிய உறவினர்க்கோ ஏற்றிக் கூறுவது அவ் வளவு பொருத்தமின்றென்பதை ஊன்றி உணர்க. 'பிறநூல் முடிந்தது தானுடன் படுதல்' என்னும் உத்தியால், பிற உரை ஆசிரியர் கருத்தைத் தழுவியே மேல் உரையில் நகரமாந்தர்க்கு ஏற்றி உரைத்தாம். காதலார் - அன்புடையார் என்னும் பொருளது. கணவன் மனைவியர் கொள்ளும் காதலன்பன்று. ஈண்டுப் பன்னாள் ஒன்றிப் பழகிய தொடர்பினால் உண்டாய உள்ளக் கசிவையே காதலாகக் கூறியதென்க. குழந்தைகளைக் காதலர் என்னும் வழக்கமும் ஓர்க. மேல், ஆசிரியரே நளன் தன் மக்களிருவரும் காட்டிற்கு வந்தால் வருந்துவரென்று கூறுங்கால் 'காதல் இருவரையும் கொண்டு கடுஞ்சுரம் போக்கு, ஏத முடைத்து' எனவும், 'காத லவர்மேலே கண்ணோடி' எனவும் கூறுதல் அறிக. அன்புடையாரை, அன்புக்குரியாரைக் காதல ரென வழங்கும் மரபுபற்றி ஈண்டுக் காதலாரெனத் தமயந்தியை யும் மறையோனையும் உரைத்தார் எனக் கொண்டு பொருள் கூறுக. (கசஎ)

**வேதியன், சேதியரசியிடம் தமயந்தி நிலையைக் கூறுதல்**

௩உ௯ மாரி பொருகூந்தல் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்டதுயர் கண்டாயோ-சோர்குழலும்
வேணியாய் வெண்துகிலும் பாதியாய் வெந்துயருக்
காணியாய் நின்றாள் அயர்ந்து.

(இ - ள்.) (வேதியன் சேதியரசியை நோக்கி) மாரி பொரு கூந்தல் மாதராய் - மேகம் போலும் கரிய கூந்தலையுடைய சேதி நாட்டரசியே, நீ பயந்த காரிகை பட்டதுயர் கண்டாயோ - நீ பெற்ற பெண்ணாகிய இத்தமயந்தி அடைந்துள்ள துன்பத்தைப் பார்த்தாயோ, சோர்குழலும் வேணிஆய் - அவிழ்ந்து தொங்கு கின்ற கூந்தலும் சிக்குற்றுச் சடையாகி, வெண்துகிலும் பாதி ஆய் - (அரையிலுடுத்த) தூய ஆடையும் ஒரு பாதி ஆகி, வெம் துயருக்கு ஆணிஆய் அயர்ந்து நின்றாள் - கொடிய துன்பத்

துக்கு நிலைக்களமாகி வருந்தி நின்றாள். (என்னே! ஊழின் கொடுமை!)

(க - து.) மறையோன் சேதியரசியைப் பார்த்து, 'சேதி நாட்டு அரசி! உன் மகள் அடைந்துள்ள துன்பத்தைக் கண்டாயோ? கூந்தல் சடையாகத் திரண்டது; உடுத்த ஆடை பாதியாயிற்று; துன்பத்துக்கு ஆணிவேர் போலானாள்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) சேதியரசி, தமயந்திக்குச் சிற்றன்னை; அவள் தமயந்தி அன்னைக்கு உடன்பிறந்த தங்கை; ஆயினும், தமயந்தியைக் கண்டு நாளாயிற்று. அதனாலும், காட்டில் திரிந்து பல இன்னலுக்கு உட்பட்ட தன்மையினாலும், நீராடாமலும் மகிழ்வற்று இருந்தமையாலும் ஓவியம் புகையுண்டதே போல ஒளி மழுங்கியிருந்தாள். அதனால் தமயந்தியின் உறுப்படையாளங்களைச் சேதியரசியால் அறியவொண்ணாததாயிற்று. மறையோன் சிறுபருவமுதல் தமயந்தியின் இயற்கைகளைக் கண்டு இருந்தோனாதலாலும் கூர்ந்து பார்க்கும் திறனாலும் நன்கறிந்தான். ஆதலால், சேதியரசி தமயந்திக்குச் சிற்றன்னை என்பது கொண்டு உரிமை பாராட்டி, 'நீ பயந்த காரிகை' என்று அறிமுகப்படுத்தினான்; அப்பால் அவள் இயற்கைக்குப் பொருந்தாத துன்ப நிலையைப் 'பட்டதுயர்' என்றான். பின்னர் அவள் இயற்கை அழகு குன்றித் தன் கணவனைப் பிரிந்து, காதல் மக்களைப் பிரிந்து, துன்பே வடிவாய் அல்லும் பகலும் அழுதவண்ணமாக இருந்ததனால், கூந்தலை வாரி முடித்தாளில்லை; அதில் மலர் சூட்டினாளில்லை; நெற்றியில் பொட்டிட்டாளில்லை; யாதொரு கோலமும் கொள்ளாத நிலையில் கூந்தலுக்கு நெய்யூட்டாததால் கற்றையாகிச் சடைபோல் திரண்டது. அக்கண்கொண்டுபார்க்கொணாத கவலைக் காட்சியை, 'சோர்குழலும் வேணியாய்' என்று சுட்டிக் கூறி, இத்தமயந்தி அரசியாக நிடதநாட்டில் வாழுங்காலத்தே எத்தனை வகை வகையான ஆடைகள்; அவற்றுள் எத்தனை நிறமுள்ளவை; வேளைக்கு ஓர் ஆடை, வண்ண மகளிர்; தோழிகள் அவ்வாடைகளை அழகுபொதுள உடுத்துவிப்பவர். அவ்வளவு செல்வமும் இழந்து இன்று கிழிந்த ஒரு பாதி ஆடை யென்பானாய் 'வெண்துகிலும் பாதியாய்' என்று எடுத்துக் கூறி, இறுதியில் மகிழ்வுக்கு இருப்பிடனாக இருந்த இவள் - இன்பத்துக்கு உறையுளாக இருந்த இவள் - இற்றைஞான்று எந்நிலையிலுள்ளாள். கொடிய துன்பச்சூழல் தொடரத் துயருக்கே நிலைக்களனாக நிற்கின்றாள் என்பதை உணர்த்துவானாய், 'வெந்துயருக்கு ஆணியாய் நின்றாள்' என்றான். சேதியர

சிக்குத் தமயந்தி உயர்நிலையிலிருந்து இன்று மிகத் தாழ்ந்த அவல நிலையைக் குறித்துக் கூறித் தமயந்தியை அறிமுகப்படுத்தி புரைத்தான். 'சோர்குழலும்' என்பதில் உள்ள உம்மை உயர்வு சிறப்பாதலோடு, பிற உறுப்புக்களும் புனையாமையால் ஒளிகுன்றி யிருப்பதையும் விளக்கிச் 'சுருங்கச் சொல்லல்' என்னும் அழகு தோன்ற நின்றது. அன்றிச் சோர்குழலும், வெண்துகிலும் என எண்ணும்மையாகக் கூறினும் பொருந்தும். ஆணி - நிலைக்களம்; பற்றுக்கோடு. ஆணி, இப்பொருள் தருதலை, [1]"உழுவார் உலகத்தார்க் காணி" என்றும், [2]"உருள்பெருந்தேர்க கச்சாணி" என்றும் வரும் திருவள்ளுவர் திருமொழியால் நன்குணரப்படும். (கசஅ)

**சேதியரசி, தமயந்தியைத் தன் மகளென்றறிந்தபின் வருந்தல்**

நூஉஎ. **தன்மகள் ஆவ தறியாத் தடுமாறுப்**
**பொன்வடிவின் மேலழுது போய்வீழ்ந்தாள்— மென்மலரைக்**
**கோதிப்போய் மேதி குருகெழுப்பும் தண்பணைசூழ்**
**சேதிக்கோன் தேவி திகைத்து.**

(இ - ள்.) மேதி - எருமைகள், மெல்மலரை கோதிபோய் - மெல்லிய தாமரை முதலிய பூக்களைத் தம் கொம்புகளால் விலக்கிக்கொண்டே சென்று, குருகு எழுப்பும் தண்பணைசூழ் - நாரை கொக்கு முதலிய நீர்வாழ் பறவைகளை எழுப்பி ஓடச் செய்கின்ற நீர்நிறைந்த வயல்கள் சூழ்ந்த, சேதிகோன் தேவி - சேதிநாட்டு மன்னனுடைய மனைவியான சேதியரசி, திகைத்து - (மறையவன் தன் மகளென்று தமயந்தியைப்பற்றி விளக்கிக் கூறிய சொற்களையெல்லாம் கேட்டு) மயக்கங்கொண்டு, தன் மகள் ஆவது அறியா - அவள் தன் மகளென்பதை அறிந்து கொண்டு, தடுமாறு - தத்தளிப்படைந்து, பொன்வடிவின் மேல் அழுதுபோய் வீழ்ந்தாள் - தமயந்தியின் பொன்மயமான உடலின் மேல் அழுதுகொண்டே போய் வீழ்ந்தாள்.

(க - து.) சேதியரசி மறையவனால் தமயந்தியைத் தன் மகள் என்று கூறியதைக் கேட்டுத் தத்தளித்து மயங்கி அழுதுகொண்டே போய் அவள்மேல் விழுந்தாள் என்பதாம்.

(வி - ரை.) அறியா தடுமாறு என்பன செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சங்கள். [3]"தாழாத் தளராத் தலைநடுங்காத்

1, 2. திருக்குறள், ௧0௩௨; ௬௬௭. 3. நாலடியார், ௧௪

தண்டுன்று' என்னும் நாலடியும் காண்க. வடிவு : ஆகுபெயர். கோதுதல் - ஒதுக்குதல், அல்லது ஒடித்தல் என்றுரைத்தலுமாம். குருகு - பறவைப் பொதுப்பெயர். அது ஈண்டு நாரை கொக்கு முதலிய நீர்வாழ் பறவைகளைச் சுட்டிற்று. தண் - குளிர்ச்சி. குளிர்ச்சியுள்ள நீரைக் குறித்தது குணவாகு பெயர். சேதி - சேதி நாடு. (கசரு)

## சேதியரசன் தமயந்தியை அவள் தந்தை நகருக்கு அனுப்புதல்

ருஉஅ. கந்தனையும் கன்னியையும் கண்டா யினுஞ்சிறிது
தன்துயரம் தீர்ந்து தனியாறத்—தந்தை
பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு.

(இ - ள்.) சேதியர்கோன் - சேதிநாட்டு வேந்தனானவன், பண்டை விதியிலே போந்தாளை - முன்செய்த ஊழ்வினையினால் (தன்னிடத்து) வந்துசேர்ந்த தமயந்தியை, கந்தனையும் கன்னியையும் கண்டாயினும் - முருகவேளையொத்த தன் மகனையும் இளையளாகிய தன் மகளையும் பார்த்த பின்னராவது, சிறிது தன் தனி துயரம் தீர்ந்து ஆற - அவள் தான் தனித்திருப்பதால் ஆன கவலை நீங்கிச் சிறிது மனம் ஆறுதல் பெற, தந்தை பதியில் மீண்டு போக்கினான் - தமயந்தியானவளைத் தன் தந்தையின் நகரமாகிய குண்டினபுரத்துக்குச் செல்ல அனுப்பினான்.

(க - ரு.) சேதிநாட்டு மன்னன் தமயந்தி தன் மக்களைக் கண்டாலாவது தன்னந்தனியாக இருப்பதால் உண்டாம் துன்பம் சிறிது தணியுமெனக் கருதித் தமயந்தியை அவள் தந்தையர் நகராகிய குண்டினபுரத்துக்கு அனுப்பினான் என்பதாம்.

(வி - ரை.) கந்தன் - முருகக் கடவுள். முருகன் கட்டழகுடையான் ஆதலால் அவன்போன்ற மகனைக் 'கந்தன்' என ஆகுபெயராக்கிக் கூறினார். கன்னி - இளம்பெண். தமயந்தியின் மகள். முற்றத்துறந்த முனிவர்களும், இளங்குதலைச் சிறுவர்களைக் கண்டால் பற்றுக்கொண்டு இன்புறுவர். அவ்வாறிருக்கத் தான் பெற்றெடுத்த மக்களைக் காணின், குழந்தைகளின் அமிழ்தினுமினிய இன்சொற்கேட்பின் துயரம் மாறுவள் என்பதைக் கருதினான் சேதிமன்னன் என்பாராய்க் 'கந்தனையும் கன்னி

யையும்............போக்கினன்' என்றார். 'கண்டாயினும்' என்பதிலுள்ள உம்மை சிறப்புப் பொருளில் வந்தது. ஆற: செயவெனெச்சம். தனி - தனிமை, ஒன்றி: தன்னோடு தொடர்புடையார் யாருமில்லாது இருத்தல். விதியில் என்பதிலுள்ள இல் ஏழனுருபு வேற்றுமை மயக்கம். விதியால் என மூன்றனுருபு இவ்வாறு மயங்கிவந்தது. இங்கே அதனைக் கருவிப் பொருளாகக் கொள்ளுக, அவன் வருதற்குக் கருவி (காரணம்) விதியே ஆகலான் என்க. போந்தாள்-வந்தாள். இறந்தகால வினையாலணையும் பெயர். (கஙெ)

**தமயந்தி, குண்டினபுரத்துக்குப் போனபோது நகரம் முழுதும் மயங்குதல்**

ருஉக. கோயிலும் அந்தப் புரமும் கோடிநுடங்கும்
வாயிலும் நின்று மயங்கியவே—தீயகொடுங்
கானுள மக்களையும் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது.

(இ - ள்.) தீய கொடும் கான் ஆள - தீமைமிக்க கொடிய காட்டில் திரிந்து வருந்த, மக்களையும் கைவிட்டு - (தன் ஆருயிர் போன்ற) மைந்தர்களையும் பற்றற விட்டுவிட்டு, காதலன் பின் போனாள் புகுந்தபொழுது - தன் கணவனுடன் சென்ற தமயந்தியானவள் (தனியே வந்து) சேர்ந்த காலத்தில், கோயிலும் அந்தப்புரமும் - (வீமமன்னன்) அரண்மனையிலுள்ள ஆடவர்களும் அந்தப்புரத்திலுள்ள பெண்களும், கொடிநுடங்கும் வாயிலில் நின்று மயங்கியவே - கொடிகள் பறந்து அசைகின்ற வாயிலில் நின்ற ஊர் மக்களும் செயலற்று நின்று (தமயந்தியின் துன்பத்திற்காகத்) திகைப்படைந்தார்கள்.

(க - து.) மக்களையும் பிரிந்து தன் கணவன் நளனுடன் கொடிய காட்டிற்குச் சென்ற தமயந்தியானவள் தன்னந்தனியாகக் குண்டினபுரத்துக்கு வந்தகாலத்தில் ஊரிலுள்ள மக்கள் எல்லோரும் வருத்தங்கொண்டு செயலற்று நின்றார்கள் என்பதாம்.

(வி - ரை.) கோ+இல்—கோயில் - கோ - அரசன், இல் - வீடு - அரசன் வீடு. அது கோட்டைகளையுடையதாய்ப் பாதுகாப்பு மிக்கதாய் இருக்குமாகலான், அரண்மனை யெனப்பட்டது. பிற்காலத்தில் இவ்வழக்காறொழிந்து, கடவுளர் உருவமைத்து வழிபடும் இல்லத்தைக் குறிப்பதாயிற்று. இன்று கோயில் என்பது

கடவுளர் கோட்டங்களையே குறிப்பதறிக. இவ்வாறே பல சொற்கள் ஒரு காலத்தில் ஒரு பொருளைக் குறித்துப் பின் அதற்குமாறான (முரணான) பொருள் தருதலும் அறியலாம். நாற்றம் என்னும் சொல் முற்காலத்தில் நறுமணத்தையே குறித்தது.

[1]"மாமலர் நாற்றம்போல் மணிமேகலைக்
கேது நிகழ்ச்சி.'

எனவும்,

[2]"நாற்றங் கேட்பினும் தின்ன நயப்பதோர்
கூற்றுண்டோ.'

எனவும்,

[3]"பொன்மலர் நாற்றம் உடைத்து.'

எனவும்,

[4]"முகைமொக்குள் உள்ளது நாற்றம்போல்.'

எனவும் ஆன்றோர் கூறும் வழக்குக்களான் உணர்க. இன்று நாற்றம் என்றால், மூக்கால் முகரலாகாக் கெட்ட கமழ்ச்சியையே குறிப்பதறிக. ஆண்டி என்னும் சொல், ஆள்+இ=ஆளி, எனப் பின் ளகரம டகரமாக மாறி, இரட்டித்து மெல்லினமாகி 'ஆண்டி' என்றாயிற்று. இதற்கு ஆள்பவன் என்று பொருள். பொதினிமலை (பழனிமலை) யில் எழுந்தருளியிருக்கும் முருகக் கடவுளைப் 'பழனியாண்டி' என வழங்குவர். அதற்குப் பழனி நகரை - மலையை ஆள்பவன் என்பது பொருளாக ஆளுகின்ற மன்னன் போன்று முருகனைக் குறித்து வழங்கியது. இன்று, ஆண்டியென்னுஞ் சொல் இரந்து உயிர்வாழும் ஏழைமக்களைக் குறிக்கின்றது. நாகரிகம் என்னுஞ்சொல், பழங்காலத்தில் கண்ணோட்ட (தாட்சண்ணிய)த்தைக் குறித்தது.

[5]"நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்.'

எனவும்,

[6]"நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்.'

எனவும்,

[7]"நாக்கரியும் தயமுகனார் நாகரிகர் அல்லாமை.'

---

1. மணிமேகலை, ங: ௩-௪. 2. கம்பராமா. தாடகைவதை: ௬௪
3. நீதிநெறி விளக்கம், ௪. 4, 5. திருக்குறள், ௯௨௭௪: ௫௮௦.
6. நற்றிணை, ௩௫௫. 7. கம்பராமா. சூர்ப்ப :௧௨௫.

எனவும் ஆன்றோர் உணர்த்துவன கொண்டறிக. இன்று, நாகரிகம் என்னும் சொல், நகரமக்கள் புதுப்புது முறைகளில் புனையும் ஆடை அணிகளையுங் கோலம் புனைந்து அழகுபடுத்திக் கொள்ளலையும் குறிப்பதறிக. இவைபோன்றே கோயில், முற்காலத்தில் அரசர்வாழ் மாளிகையைக் குறித்ததெனக் கொள்க. கோயில், அந்தப்புரம், வாயில் என்பன, இடவாகு பெயராய், ஆங்காங்கு இருந்த, நின்ற மக்களைக் குறிப்பதாயிற்று. அரசன் பேரவையில் இருப்போர் ஆண்மக்களேயாதலால் கோயிலும் என்னும் சொற்கு, ஒன்றொழி பொதுச் சொல்லாகக் கொண்டு 'ஆடவர்' எனப் பொருள்கூறினும். 'அந்தப்புரம்' என்னும் சொல்லும் அவ்வாறே பெண்டிரைக் குறிப்பதாதலால் 'பெண்கள்' எனக் கூறினும். வாயில் என்பதற்கு அரசன் புதல்வி ஓர் இடுக்கணுக்காளாகி வரும்போது மக்கள் வியப்பும் வருத்தமுங்கொண்டு கூடிவந்து நிற்பாராதலால் 'ஊர்மக்கள்' என்றாம். கான் ஆள - காட்டில் இருக்க என்னும் பொருட்டு: செயவெனெச்சம் காரியப் பொருள் தருதலால் இறந்தகாலங் காட்டிற்று. உம்மைகள் நான்கில் முன்னது மூன்றும் எண்ணுப்பொருளிலும் பின்னது ஒன்றும் உயர்வு சிறப்புப் பொருளிலும் வந்தன. (கஙக)

இதுவும் அது

௩௩௦. அழுவார் விழுவார் அயிர்ப்பார் உயிர்ப்பார்
தொழுவார் தமரெங்கும் சூழ்வார்—வழுவாத
காமநீர் ஓதக் கடல்கிளர்ந்தால் ஒத்ததே
நாமவேல் வீமன் நகர்.

(இ - ள்.) நாமவேல் வீமன் நகர் - (பகைவர்க்கு அச்சந்தரும் வேற்படையைத் தாங்கிய வீமமன்னனுடைய குண்டினபுர நகரானது, தமர் - (தமயந்திக்கு) உற்றார் உறவினர், அழுவார் விழுவார் அயிர்ப்பார் உயிர்ப்பார் தொழுவார் எங்கும் சூழ்வார் - (தமயந்தியின் கண்கொள்ளா அவல நிலையைக் கண்டு) அழுபவர்களும் (தமயந்தியின்மேல்) விழுபவர்களும் பல்வகையான ஐயங்கொள்பவர்களும் பெருமூச்சு விடுகின்றவர்களும் தொழுகின்றவர்களுமாகி நாற்பக்கமும் வந்து சுற்றிக்கொண்டார்கள் (இதனால்), வழுவாத காமநீர் ஓத கடல் கிளர்ந்தால் ஒத்தது - களங்கமற்ற அன்பென்னும் நீர் நிறைந்த கடல் பொங்கியெழுந்ததை ஒத்திருந்தது.

(க - து.) தமயந்திக்கு உறவினர் பலர், தமயந்தியின் துன்பநிலைக்கு வருந்தி அழுவாரும் விழுவாரும் ஐயமடை

வாரும் பெருமூச்செறிவாரும் தொழுவாரும் அவளைச் சூழ்வாருமாக எங்குஞ் சூழ்ந்துகொண்டிருப்பதால் அக் குண்டினபுரம் அன்பென்னும் நீர்ப்பெருக்கெடுத்துக் கடல் பொங்கி வந்ததுபோன்று தோன்றிற்று என்பதாம்.

(வி - ரை.) அழுவார் விழுவார் முதலியன எண்ணும்மைத் தொகைகள். அழுதல், அவள் கண்கொள்ளாத் துன்பநிலை பொறுக்கலாற்றாத நிலையில் புலம்புவது. விழுதல், துன்பந் தாங்க வொண்ணாமையிற் கீழ் விழுவது. அயிர்த்தல் - ஐயங்கொள்ளல் : அஃதாவது அவள் அற்ற துகிலும் அருதொழுகு கண்ணீருமாகத் துன்பமே ஓருருக்கொண்டு வந்ததுபோன்று இருந்த தன்மை கண்டு இவள் தமயந்திதானோ? வேறொருத்தியா? என நன்குணராத நிலைமை. உயிர்த்தல் - பெருமூச்சு விடுதல் : தமயந்தி நிலையை எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் துன்பம் பெருகி நெஞ்சத்தை அலைப்ப அதைத் தாங்கலாற்றாமல் நீண்ட மூசசுக் கொள்ளுதல்,

[1]"ஊதுலைக் குருகின் உயிர்த்தனர்."

என்றார் பிறரும். தொழுதல், இறைவனை வேண்டி, 'இவட்கு நலஞ் செய்க' என வழிபடுதல். சூழ்தல், அவளைவிட்டு நீங்கிவரவொண்ணாத அன்பு நிலையில் சுற்றிக்கொண்டிருத்தல். அழுவார், விழுவார் முதலியன இயல்பாக இறந்தகாலம் எதிர்காலமாக வந்த கால வழுவமைதி. இவைகளை அழுதார் தொழுதார் முதலிய இறந்த காலமாகப் பொருள் கொள்க. கள்ளங்கவடற்ற உள்ளன்பை 'வழுவாத காமநீர் ஓதக்கடல்' என, உருவகமாக்கிக் கூறினார். நாம் - அச்சம்; அது நாமம் என அம் சாரியைபெற்று வந்தது. இஃது இப்பொருட்டாதலை,

[2]"பேம்நாம் உரும்என வரூஉம் கிளவி
ஆம்முறை மூன்றும் அச்சப் பொருள."

என்னும் தொல்காப்பிய நூற்பாவால் அறிக. இது வீமமன்னன் வேற்படைக்கு அடையாக வந்து அவன்றன் வெற்றிப் பெருமிதத்தைச் சுட்டிற்று. நகர் - நகரம். நகர் - நகர்தல் என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஈண்டுத் தொழிலாகுபெயராக வந்தது; நகர்ந்து செல்வது என்பது பொருள். நகர்தலாவது, அங்கு வாழும் மக்களும் பல்வகை ஆடுமாடு முதலிய உயிர்களும் போவதும் வருவதுமாக இருக்குஞ் செயல். இவ்வாறே பல சொற்கள் நம் தமிழ் மொழிக்கண் இயைந்து அதன் உண்மையைக் காரணப் பொருட்டாக விளக்கி நிற்றலை அறியலாம். நிலை

1. சிலப். ௪ : ௫௯. 2. தொல். சொல். உரியியல் : ௬௯.

யென்பது நிற்றல் என்னும் தொழிற் பெயர். அது, வீடுகளில் என்றும் நின்றவண்ணமாக இருக்கும் கதவை இணைக்கும் வழி மரச் சட்டத்தை உணர்த்துதலறிக. உழவு - உழத்தல், வருந்தல். வருந்திச் செய்யும் தொழில்களிலெல்லாம் மிக்க வருத்தந்தரும் வேளாண்மைத் தொழிலைக் குறித்தது. [1]"ஓரேர் உழவன் போல" என்றார் சங்கப்புலவர். எனவே, இவ்வாறு பல சொற்கள் செந்தமிழ் மொழிக்கண் பரவிக் கிடக்கின்றன. அவைகளின் காரணங்களைத் துருவி ஆய்தல் அறிஞர்கடன். எனவே, ஈண்டு மேலும் விரித்திலம். (கௌ௨)

### தமயந்தி, தந்தையைக் கண்டதும் அவன் காலடியில் வீழ்ந்தழுதல்

௩௩௧. தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்கண் நீர்சோரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்—தெந்தாயான்
பட்டதே என்னப்போய் வீழ்ந்தாள் படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ.

(இ - ள்.) (தமயந்தியானவள்) தந்தையை முன் காண்டலுமே - தன் தந்தையாகிய வீமமன்னனைக் கண்டவுடனே, தாமரைக் கண் நீர் சொரிய - தாமரை மலர் போன்ற கண்களிலிருந்து கண்ணீர் கொட்ட, சிந்தை கலங்கி திகைத்து அலமந்து - மனங்கலங்கி நெஞ்சறைபோகி மயங்கி, எந்தாய் - என் தந்தையே, யான் பட்டதே என்ன - அடியேன் பட்ட துன்பத்தைக் கண்டீரோ என்று கூறி, படை நெடுங்கண் விட்டநீர் மேலேவிழ போய் வீழ்ந்தாள் - வாள் போன்ற கூரிய நீண்ட கண்களிலிருந்து தோன்றிய கண்ணீர்ப் பெருக்கானது அவன்மேல் விழும்படி சென்று (அவனடிகளில்) விழுந்து அழுவாளாயினாள்.

(க - து.) தன் தந்தையை நேரிற்கண்ட தமயந்தியானவள், 'ஐயாவோ! நான் பட்டபாட்டைக் கண்டீர்களோ' என்று கூறிக்கொண்டே சென்று அவன் காலடிகளில் வீழ்ந்தழுதாள் என்பதாம்.

(வி - ரை.) தாமரைக்கண் - தாமரை மலர்போன்ற கண்: உவமைத்தொகை; பண்பும் குளிர்மையும் கவர்ச்சியும் மலர்ச்சியும் பற்றிய உவமம். தமயந்திக்குத் தன்னைப் பெற்று வளர்த்துப் பெரும் பேறாக்கிய தாதையை - அன்புக்குரிய ஐயனைக் கண்டதும் மனங் கலங்கிற்று; வருத்தம் பெருகிற்று; கண்கள் நீரைச்

---

1. குறுந்தொகை, ௧௩௧.

சொரிந்தன; அழுதாள்; அவன் காலடிகளில் வீழ்ந்து அலமருவாளாயினள். இதனை ஆசிரியர், 'தந்தையை முன்.........வீழ்ந்தாள்' என்றார். பட்டதே என்னப் போய் வீழ்ந்தாள் என்பதில் அவலச்சுவை நிறைந்திருத்தலை ஓர்க. படை - வேற்படை என்றலுமாம். படை : படுத்தலையுடையது என்னும் பொருளது. படுத்தலாவது : கொல்லல். கொல்லுதல் தொழிலையுடைமையால் பொதுவாக ஆயுதங்கள் எல்லாவற்றுக்கும் பொருந்தும் 'படை கொண்டார் நெஞ்சம்போல்'[1] என்றார் பிறரும். (கஙரு)

## தமயந்தியின் தாயும் தந்தையும் வருந்துதல்

௩௬௨. செவ்வண்ண வாயாளுந் தேர்வேந் தனும்மகளை
அவ்வண்ணங் கண்டக்கால் ஆற்றுவரோ—மெய்வண்ணம்
ஓய்ந்துநா நீர்போய் உலர்கின்ற தொத்ததமர்
நீந்தினார் கண்ணீரின் நின்று.

(இ - ள்.) செவ்வண்ண வாயாளும் - செந்நிறமுள்ள வாயையுடைய வீமன் மனையாளும், தேர்வேந்தனும் - தேரூர்வோனாகிய வீமமன்னனும், மகளை அவ்வண்ணம் கண்டக்கால் ஆற்றுவரோ - தம் புதல்வியாகிய தமயந்தியை அந்தக் கோலத்தில் பார்க்க நேரின் மனந் தாழுவரோ (தாழமாட்டாரன்றே), மெய் வண்ணம் ஓய்ந்து - உடலின் நிலை தளர்ந்து, நா நீர் போய் உலர்கின்றது - நாவில் நீர்ப்பசையற்று வறளுவதாயிற்று, ஒத்த தமர் - இவர்களையொத்த அன்புமிக்க சுற்றத்தோர்களும், கண் நீரின் நின்று நீந்தினார் - கண்ணீர் வெள்ளத்தில் அமிழ்ந்து அதில் மிதந்து கொண்டிருந்தனர். (அழுத வண்ணமாக இருந்து ஏக்கங் கொண்டனர் என்றபடி.)

(க - ரு.) தமயந்தியைக் கண்ட அவள் தாய் தந்தையர் இருவரும் வருத்தத்தால் உடலோய்ந்து, நாவறண்டு நடுங்கினர்; அவள் சுற்றத்தாரும் கண்ணீர் பெருக அழுதவண்ணமாக இருந்தார்கள் என்பதாம்.

(வி - ரை.) செவ்வண்ண வாயாள் : ஈண்டுத் தமயந்தியின் பெற்ற தாய். தேர் வேந்தன் - தேரையுடைய வீமன்; தமயந்தியின் தந்தை; சேய்க்குத் தந்தையினும் தாயே முதன்மையானவள். இதனானே மணிமொழிப் பெருமான் மங்கை நல்லார்க்கு நாணமே சிறந்ததெனக் குறிப்பிட்டபோது,

1. திருக்குறள், உ௫ரு.

[1]"தாயிற் சிறந்தன்று நாண்தைய லார்க்கு."

என்றருளியதோடு ஆண்டவனை விளிக்கும்போதும்,

[2]"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே."

என்றருளியதும், ஔவை மூதாட்டியார்,

[3]"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்."

என்றருளியதும்,

விளம்பிநாகனார் என்னும் புலவர் பெருமான்,

[4]"ஈன்றாளோ டெண்ண கடவுளும் இல்."

என்று புகல்வதும், பிற ஆன்றோர் கருத்துக்களுக்கும் தாய்மையையே முதன்மையாகக் கொள்ளுதல் அறிக. இதனை நுணித்தறிந்த ஆசிரியர், 'செவ்வண்ண வாயாள்' என்று தாயரையே முதலிற் குறித்தாரென உணர்க 'அவ்வண்ணம்' என்பது, அத்தன்மையுள்ள கோலம். அக் கோலமென்பது தென்னை எனின்? 'அற்ற துகிலும் அருதொழுகு கண்ணீரும், உற்ற துயரும் உடையாளாய்' (௫௦௭) இருக்கும் துன்பநிலை. அ என்னும் சுட்டு பண்டறி சுட்டாக வந்தது. 'ஆற்றுவரோ?' என்பதில் உள்ள ஓகாரம், அவலங் கலந்த எதிர்மறைப் பொருளுடையது. மெய்வண்ணம் - உடலின் அழகு. துன்பமிக்க காலத்தில் உடல் மெலிந்து தளர்தலும் நாவின் நீர் வறளலும் இயற்கையன்புடையாருக்கு நிகழும் செயலாதலின், 'மெய்வண்ணம்......... நின்று' என்றார். (௫௫௪)

**தமயந்தியின் தாய், தமயந்தியை நோக்கி வினவி அழுதல்**

௫௫௫. பனியிருளில் பாழ்மண்ட பத்திலே உன்னை
நினையாது நீத்தகன்ற போது—தனியேநின்
றென்னினைத்தாய் என்செய்தாய் என்றுப் புலம்பினாள்
பொன்னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து.

(இ - ள்.) தாய் - தமயந்தியின் தாயானவள், பொன்னினை நோக்கி - திருமகள் போன்ற தமயந்தியைப் பார்த்து, பனி இருளில் பாழ் மண்டபத்தில் - யாரும் அஞ்சி நடுங்குகின்ற இரவுப் பொழுதில் பாழ்பட்ட மண்டபத்தினிடத்தே, உன்னை நினையாது நீத்து அகன்ற போது - (உன் கணவன்) உன்னைப்பற்றிப் (பெண்

1. திருக்கோவையார், உ௦௪. 2. திருவாசகம், பிடித்த : ௫.
3. கொன்றைவேந்தன், க. 4. நான்மணிக்கடிகை, ௬.

ணென்றோ மனையாளென்றோ) கருதாது (இரக்கமின்றி) விட்டுச் சென்ற நேரத்தில், தனியே நின்று என் நினைத்தாய் என்று புலர்ந்து புலம்பினாள் - நீ தன்னந் தனியாக நின்று கொண்டு எவ்வாறான எண்ணங் கொண்டாயோ என்னென்ன கூறிக்கொண்டு தவித்தாயோ என்று சொல்லி வாட்டமுற்றுக் (கண்ணீர்விட்டு) அழுதாள்.

(க - து.) தமயந்தியின் தாய், தமயந்தியைப் பார்த்து, 'என் அரிய மகளே! உன்னை உன் கணவன் அஞ்சத்தகும் இருட்டிலே தன்னந் தனியே விட்டுச் சென்றபோது நீ என்ன நினைத்தாயோ? என்ன செய்தாயோ?' என்று கூறிப் புலம்பிக் கண்ணீர் விட்டு அழுதாள் என்பதாம்.

(வி - ரை.) பனி - நடுக்கம். அஃதாவது அச்சம்; அல்லது இரவுக் காலத்தில் பனி பெய்வது இயற்கை; வெளிச் சென்றால் கை கால்கள் நடுங்கும்படி குளிர் மிகுதியாக இருக்கும்; அதனால், பனிநீர் பெய்கின்ற இருள் என்றலுமாம். 'உன்னை நினையாது' என்றமையால் கணவன் என்ற சொல்லை இசை யெச்சமாக வருவித்துப் பொருள் கூறப் பெற்றது 'என் செய்தாய், என் நினைத்தாய்' என்பன, தாய்மை உள்ளத் துடிப்பை உணர்த்து கின்றன. என்னை?

"[1] பெற்றவட்கே தெரியுமந்த வருத்தம் பிள்ளை,
பெறாமலடி யறிவாளோ?"

என்ற தாயுமான அடிகளார் செம்மொழிக்கேற்ப 'முந்தித் தவங் கிடந்து முந்நூறு நாட் சுமந்து' பெற்ற தாயாகலான், அத் தாய்மையின் உள்ளம் தன் மகளைக் காண்டொறும் காண்டொறும் கரைந்து துன்பம் அலை அலையாய் வந்து வந்து தன் மனத்தை நெகிழ்ப்ப வருந்தும் நிலையைச் சுட்டுகின்றது. தாய்மை உள்ளம் பெரிது; உயரியது; சிறந்தது; அவ்வன்பு கட்டற்ற ஒன்று. இவ் வுள்ளப்பாங்கை அழுது அழுது தொழுது தொழுது ஆண்டவன் இணையடி பற்றிய மணிமொழிப் பெருந்தகையார், ஆண்டவன் பேரிரக்கப் பண்பினையும், அவன் தமக்கு அருள் சுரந்து பெருந் துறையிடத்துப் பெருஞ்சீர்க் குருந்த மரநீழலில் ஆட்கொண்டு, சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கிய சிறப்பையும் வியந்து பாராட் டித், திருவாசகமென்னும் ஒருவாசக மறையில் குறிக்குங்கால், பிற உலகிலுள்ள எப்பொருளையும் உவமை காணாராய் இத்தாய்மைப் பண்பினையே,

1. தாயுமானவர் பாடல், சக : க.

"[1] பால்நினைந் தூட்டும் தாயினும் சாலப்
　　பரிந்துநீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
　　உலப்பிலா ஆனந்தம் ஆய
தேனினைச் சொரிந்து புறம்புறம் திரிந்த
　　செல்வமே.'

என்று, இறைவன் பேரருட் பெருக்கிற்கு இத்தாய்மையன்பையே சுட்டியுரைத் தருளியதும் காண்க. தலைவனும் தலைவியும் உடன் போக்குத் துறையில் தலைவிதன் மென்மைத்தன்மையை நினைந்து வருந்திய நற்றாயின் இயல்பைத் தாய்மையன்பின் உச்சநிலை தோன்ற,

"[2] பூவையுண் டோபுனக் கிள்ளையுண்
　　டோவெண் புதியமணற்
பாவையுண் டோபெற்ற பாவியுண்
　　டோகுன்று பார்த்தழைக்கும்
தேவையுண் டோகற்ற சிற்றிலுண்
　　டோமற்றென் குற்றமுண்டோ
யாவையுண் டோமக ளேசொல்லு
　　நீயவ் வருஞ்சுரத்தே.'

என்னும் அம்பிகாபதிகோவையில் கூறும் தாயன்பும் பாரனைத்தும் பொய்யெனத் துறந்த பட்டினத்தடிகள், தம் அளவற்ற செல்வத்தின்பால் வெறுப்புண்டாகி உடைகோவணமாக உறங்கப் புறந்திண்ணையாகக்கொண்டு திருவோடு கையில் ஏந்தி மெய் யுணர்வுச் செல்வராய் விளங்கியகாலைத் தமக்கு மெய்யுணர்வு ஆண்டவன் கூட்டியதை,

"[3] ................................மெய்யருளாம்
தாயுடன் சென்றுபின் தாதையைக் கூடிப்பின் தாயைமறந்
தேயும தேநிட்டை என்றான் எழிற்கச்சி ஏகம்பனே.'

எனவரும் பாடலில், இறைவன் திருவருட்டிறத்தை 'மெய்யருளாம் தாய்' என்று தாய்மைப் பண்பின் சிறப்புத்தோன்ற உரைத்தருள்வதும்,

---

1. திருவாசகம், பிடித்த : ௯.
2. அம்பிகாபதிகோவை, ௩௯௨.
3. பட்டினத்தார், திருவேகம்ப : ௧௧.

திருவள்ளுவப்பெருமான்,

[1]"அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
செல்வச் செவிலியால் உண்டு.'

என்பதில், ஓரறிவுயிர்களான மரஞ்செடி கொடிகள் முதல் ஆறறிவினரான மக்கள்வரை வேற்றுமையின்றிக் கொள்ளும் பேரன்பின் - பேரிரக்கப் பண்பினுக்கு ஒருதலைச் சார்பாக எழும் அன்பையே தாயாகக்கொண்டு அதனினின்றும் கிளைத்தெழுந்த பேரன்பைச் சேய் (அதன் குழந்தை) ஆக உரைத்தருளியதும் நினைவு கூரற்பாலன. எனவே, இத் தாய்மை உள்ளமே இங்கே தமயந்தியை நோக்கி நோக்கி 'என் நினைத்தாய்' என்றுகூறி வருந்துவதைக் குறித்தார். பொன் : உவமஆகுபெயர். பொன் போன்று உயர்வாகக் கொள்ளத்தக்காள், அன்றித் திருமகள் போன்ற அழகுடையாள், பொன்போன்ற ஒளி பொருந்திய மேனியுடையாள் என்று பல பொருள் நயந்தோன்ற நின்றது, இச்சொல். (கஉரு)

**கலிதொடர் காண்டம் முற்றும்.**

---

1. திருக்குறள், எஎ.

# ரு. கலிநீங்கு காண்டம்

## திருமால் காப்பு

கூடுச. மூலப் பழமறைக்கு முன்னேயும் காணலாம்
காலிக்குப் பின்னேயும் காணலாம்—மால்யானை
முந்தருளும் வேத முதலே எனஅழைப்ப
வந்தருளும் செந்தா மறை.

(இ - ள்.) மால்யானை - கசேந்திரன் என்னும் பெரிய யானை யானது, முந்து அருளும் வேத முதலே என அழைப்ப - (அடியார்கள் வேண்டும்) முன்பே அவர்கட்குத் திருவருள் செய்கின்ற மறைக்கு முதற் காரணமானவனே! என்று கூப்பிட்டபோது, வந்து அருளும் செம் தாமரை - ஏரிக் கரையில் நடந்து வந்து நின்ற சிவந்த தாமரை மலர்போன்ற (திருமாலின்) திருவடிகளை, மூலம் பழமறைக்கு முன்னேயும் காணல் ஆம் - முதல் நூலாகிய வேதத்துக்கு முன்வரிசையிலும் பார்க்கலாம், காலிக்குபின்னேயும் காணல் ஆம் - ஆனிரைகளுக்குப் பின் வரிசையிலும் பார்க்கலாம். (எனவே அத்தகைய திருவடிகளை வணங்குவோமாக.)

(க - ரு.) கசேந்திரனென்னும் பெரிய யானைக்கு வந்து அருள் செய்த திருமாலின் திருவடிகளை வேதங்களின் முன்வரிசையிலும் பார்க்கலாம்; பசுக்கூட்டங்களின் பின்வரிசையிலும் பார்க்கலாம்; எனவே, அத்திருவடிகளை நாம் வணங்குவோமாக என்பதாம்.

(வி - ரை.) மூலம் - முதன்மை, அஃதாவது: கல் தோன்றாக் காலத்திற்கும் முற்பட்ட காலம்; மிகமிக முற்பட்ட காலம் என்பது இதன் திரண்ட பொருள். மூலப் பழமை: ஒருபொருட் பன்மொழி. மறைகளின் முடிபு, இறைவன் அளவற்ற ஆற்றல்களை எடுத்துப் பன்னியுரைப்பது. இறைவன் பிறப்பிறப்பற்றவன்; திணைபால் கடந்த செம்பொருள்; அதைப்பற்றி உரைத்து உரைத்து அவன் ஆற்றல் முழுமையும் விளக்கமுடியாமல் நிற்பதே வேதத்தின் இறுதி நிலையாக உண்மை, பல்வகை நூல்களால் அறியலாம். அம் மறையில் எங்கே எடுத்தாலும் முதன்மையாகக் கூறுவது ஞான காண்டம், கரும காண்டம் என்ற இரண்டி

லும் இறைவனையே ஆகலான், 'மூலப் பழமறைக்கு முன்னேயும் காணலாம்' என்றார்.

> [1]"அல்லை ஈதல்லை ஈதென மறைகளும் அன்மைச்
> சொல்லி னால்துதித் திளைக்கும்இச் சுந்தரன்.'

என்றார் பரஞ்சோதி முனிவர் திருவிளையாடலில். திருவடிகளை அகக்கண்ணால் அறிவு முறையில் காண முற்பட்டால் பழமறையில் முதலிடமாக நிற்கின்றது. கண்ணன் அவதாரமாகத் திருமால் இம் மண்ணுலகிற் பிறந்தகாலத்தில் ஆயர்பாடியில் இடையர் குலத்தாரின் பசுநிரைகளை மேய்த்தபோது அங்கே அந்நிரை மேய்ப்பதற்குப் பின்தொடர்ந்தே சென்றானாகலான், அவைகளின் பின்னணியில் அவன் திருவடி தொடர்ந்துபோய் நின்றது. அவ்வடிகளை அப்பசுக் கூட்டங்களின் பின்புறத்தே காண்டல் கூடுமென்பாராய் 'காலிக்குப் பின்னேயும் காணலாம்' என்றார். காலி - பசுநிரை. 'கன்று காலிகள்' என்பது உலக வழக்கு. மால் - பெருமை. யானை - கசேந்திரன் என்னும் பெயரையுடைய யானை. ஒருகால் நீர் அருந்த இவ்வியானை நீருள்ள ஏரி ஒன்றில் இறங்கியபோது ஒரு முதலை அதன் காலைப் பிடித்திழுத்துக்கொண்டு நீருள் செல்ல, அப்போது அதினின்றும் தப்பிப் பிழைத்தற்கு வழி தோன்றாமல் திகைத்துப் பின்னர் ஓருணர்வு தோன்ற, மூலப் பொருளாக உள்ளவன் ஒருவன் உளனன்றோ! அவனே, உலகை, உலகுயிர்களைக் காப்பவன், அவன் 'உலகம் யாவையும் தாம் உள ஆக்கலும், நிலை பெறுத்தலும் நீக்கலும் ஆகிய அலகிலா விளையாட்டுடையவன்' என்பதை உணர்ந்து 'ஆதி மூலமே' என அலறி அவனை வழுத்த, அவன் இரக்கங் கொண்டு ஓடிவந்து முதலையைத் துமித்து யானையைக் காத்தருளினான் என்பது, புராணங்கள் கூறும் வரலாறு. அதை உட்கொண்டே ஈண்டு 'மூதருளும் வேத முதலே......செந்தாமரை' என்று குறிப்பிட்டார். இதனால் இறைவனை அன்போடு நினைப்பவர்க்கு அவர் நினைந்த வடிவோடு இறைவன் வந்து அருள் சுரந்தருளுவன் என்பதும், அவர் எண்ணிய எண்ணியாங்கு முற்றுவிப்பன் என்பதும் அறியக் கிடக்கின்றது. 'மலர்மிசை ஏகினான்' என்னும் திருக்குறள் அடிக்குப் பரிமேலழகர், [2]"அவர் நினைந்த வடிவோடு விரைந்து சேறலின்' என்று பொருளுரைத்ததும், சிவஞானசித்தியாரில்,

> [3]"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே
> மாதொரு பாகனார்தாம் வருவர்.'

1. திருவிளையாடல்: கூக. 2. திருக்குறள், ௩. உரை.
3. சிவஞானசித்தியார் சுபக்கம், ௨௫

என, அருணந்தி சிவாச்சாரிய அடிகளார் அருளியதும் காண்க. மலர்களில் சிறந்தது, தாமரை மலர். அதனால் அதனைப் 'பூ வெனப்படுவது பொறிவாழ் பூவே' என்றார் சிவப்பிரகாச அடிகளாரும். எனவே, எச்சமயத்தோராயினும் அச்சமயத்தவர்க்கு அவன் வந்து அருள் சுரப்பன் என்பது தெளிவாகின்றது. அவன்றன் திருவடிகளைச் செந்தாமரை யென்றார். தாமரையில் வெண்மை செம்மையென இருவகை உண்டு. அவற்றுள், வெண்டாமரை வெண்ணிறமன்றிப் பிற வேறு நிறமின்மையான் செந்தாமரை அதனின் நிறத்தானும், வெண் தாமரை மலரினும் பார்த்தற்கு அழகுடைத்தாக இருத்தலானும் இறைவன் திருவடி கட்கு அஃது உவமையாகக் கொண்டுரைத்தார். தாமரையென் னும் முதற்பொருளின் பெயர், அதன் சினையாகிய மலருக்காய், தாள்களுக்காதலால் இருமடியாகுபெயர். (க)

## சிவபெருமான் வணக்கம்

௩௩௫. போதுவார் நீறணிந்து பொய்யாத ஐந்தெழுத்தை
ஓதுவார் உள்ளம் எனஉரைப்பார்—நீதியார்
பெம்மான் அமரர் பெருமான் ஒருமான்கை
அம்மான்நின் றாடும் அரங்கு.

(இ - ள்.) நீதி ஆர் பெம்மான் அமரர் பெருமான் - நெறி முறைகள் யாவும் நிறைந்த பெருமையுடையவனும் தேவர்கட்கு முதல்வனும், ஒரு மான்கை அம்மான் - இடக்கையில் மானினை யேந்திய அழகினை யுடையவனுமாகிய சிவபெருமான், நின்று ஆடும் அரங்கு - வீற்றிருந்து திருநடம் புரிகின்ற பொன்னம்பலம் போன்றது, போதுவார் நீறு அணிந்து - எந்த நேரத்தும் நீளமாகத் திருநீற்றினை (நெற்றியினும் மார்பினும் தோளினும்) பூசிக் கொண்டு, பொய்யாத ஐந்து எழுத்தை - உண்மையுள்ள திருவைந்தெழுத்தை, ஓதுவார் உள்ளம் என உரைப்பர் - (தவறாமல்) சொல்லுகின்ற அன்பரின் மனம் என்றே (பெரியோர்) கூறுவார்கள். (அந்த அவைக் குரியவனை வணங்குவோம்.)

(க - து.) சிவபெருமான் நின்று ஆடுகின்ற பொன்னம்பலம் போன்றது, நாள்தோறும் திருநீறணிந்து, அவன்றன் திருவைந்தெழுத்தைத் தவறாமல் சொல்லுகின்ற அன்பர்களின் உள்ளமேயென்று பெரியோர்கள் கூறுவார்கள் என்பதாம்.

(வி - ரை.) போது: பொழுது என்பதன் விகாரம். அது, மக்கள் யாவரும் துயில் நீங்கி யெழுந்து நீராடிக் காலைக்கடன் முடித்து ஆண்டவனை மன மொழி மெய்களால் நினைத்தலும் வாழ்த்தலும் வணங்கலும் ஆகிய வைகறைப் பொழுது. எப்போதும் நினைக்க வேண்டும் ஆண்டவனை என்பதற்காகவே பொதுச் சொல்லாகப் 'போது' என்றார்.

'நின்றும் இருந்தும் கிடந்தும் நினைநெஞ்சே
என்றும் சிவன்தாள் இணை.'

எனவும்,

[1]'' நெக்கு நெக்குள் உருகி உருகி
நின்றும் இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும் அழுதும் தொழுதும் வாழ்த்தி.'

எனவும் கூறுவர் பெரியோர். அந்த முறையில் சைவ நன்னெறிக்கு வெளி அடையாளமாகக் கொள்ளப்படுவது, திருநீறும் உருத்திராக்கமும். உள்ளடையாளமாக அமைவது திருவைந்தெழுத்து. இங்கே திருநீற்றையும் திருவைந்தெழுத்தையும் உரைத்தார். திருநீறணிவதன் உண்மை உயர்ந்த கருத்தான் அமைந்தது. அதுவும் வெண்ணிற நீறே அணிதல் வேண்டுமென்பது, நிறங்களிலெல்லாம் உயர்ந்தது வெண்மை நிறமே இதனுனே ஔவை மூதாட்டியாரும் [2]''வெள்ளைக் கில்லை கள்ளச சிந்தை' என்றருள்வாராயினர். வெண்ணீறு, அழுக்காறு அவா வெகுளி கடுஞ்சொல் முதலியன நீங்கி ஓரறிவுயிர்களிடத்தும் இரக்கமுள்ளவராக இருக்கின்றேம்; எவ்வுயிரும் ஆண்டவன் திருமுன்பு; உயிர்கள் உறையும் உடலெல்லாம் இறைவன் கோயில் எனக் கொள்ளும் தன்மையுடையேம்; எனவே, அத்தகைக் கொள்கையுடைய இறைக்கு அடியேம் எனக்கொண்டு ஒழுகும் நெறிக்கு வெளி அடையாளமே, திருநீறணிதல். அன்றியும் எத்துணைக் காலம் நோய் நொடி இன்றிச் செல்வத்திற் சிறந்து வாழினும் இறப்பு வருவது தவறாதது; உண்மை.

[3]'' முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவதும் கண்டு.'

என்றருளினர் பாரனைத்தும் பொய்யெனவே கண்டுணர்ந்து துறந்த பட்டினத்தடிகளாரும். எனவே உடலின் தன்மையை வெந்து நீறாகும் நிலையை உடல் முதலியன நிலையாமையை நினைப்பூட்டி நல்ல வழியில் மனஞ் செல்வதற்கு நினைவுக் குறியாகக்

1. திருவாசகம், புணர்ச்சிப்பத்து: அ.
2. கொன்றைவேந்தன்: 3. பட்டினத்தார் பாடல்: உஅ

கொண்டதே வெண்ணீறென்பதுமாம். பின்னும் இது குறித்து மருத்துவ முறைப்படி நோக்கினும் நீராடியவுடன் திருநீறணிந்தால் நீரினால் ஏற்படும் நீர்ப்புணர்ப்பு முதலியவற்றை அணுக விடாது தடுப்பதுடன், கெட்ட சொறி முதலியன வாராது காக்கும் மருந்துமாம். இவ்வளவு கொள்கையும் இன்னும் பல வகை நலனுஞ் சான்றதே திருநீற்றின் மேன்மையாகும். இதை இக்கால அறிஞரும் பிறரும் அறியாது மயங்கி, மணப் பொடியாக மேல் நாட்டிலிருந்து வரும் வெண்பொடியை முகத்தினும் உடலினும் அப்பிக்கொண்டு தம் முகப் பொலிவையும் உடற் செம்மையையும் கெடுப்பர்; என்னே உலக அறியாமை! மணம் வேண்டுமேல் இந்நீற்றினும் ஊட்டி அணியலாமன்றோ? இஃதோர் சமயக் குறியாகக் கொள்ளப்பெறினும் அதனால் வரும் நலம் பெரிது; யாவர்க்கும் வேண்டற்பாலதென்க.

எனவே, இத்தகைய திருநீறணிவார் உள்ளம், பண்பட்ட உள்ளம்; அது பளிங்குபோல் களங்கமற்று மிளிரும்; களங்கமற்ற தூய உள்ளத்தில் சிவபெருமான் உறைவான் மனமெனும் புனத்தை வறும் பாழாக்காது இறைவனையே எக்காலும் நினைந்து கொண்டிருக்கும் தன்மைய, ஆசிரியார் மனம் களங்கமில்லாததாகலான்; அவ்வுளத்தில் இறைவன் என்றும் நின்றருளுவன். நீதிஆர் பெம்மான் என்பது, நீதிநெறி என்பன எல்லாம சிற்றறிவும் சிறு தொழிலும் உடைய ஆன்மாக்கள் அறியாரன்றே; அவன் உணர்த்தவே அறியுமன்றோ? அவனிடத்திருந்தே யாவுந்தோன்றின என்பாராய், இதைக் கிளந்தெடுத்துரைத்தார். அமரர் - அமர்ந்திருப்பவர், அஃதாவது எக்காலத்தும் இறவாது வாழ்பவர்; அவர்கட்கெல்லாம் தலைவன் என்பதுதான் இறவாது உலகைக் காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடும் அவன்றன் முழுமுதல் தன்மை ஆதலை,

> [1] 'நூறு கோடி பிரமர்கள் நொந்தினார்
> ஆறு கோடிநா ராயணர் அங்ஙனே
> ஏறு கங்கை மணல்எண்ணில் இந்திரர்
> ஈறில் லாதவன் ஈசன் ஒருவனே.'

எனவும்,

> [2] 'எண்ணுடை மூவர் இராக்கதர்கள் எரிபிழைத்துக்
> கண்ணுதல் எந்தை கடைத்தலையில் நின்றதற்பின்
> எண்ணிலி இந்திரர் எத்தனையோ பிரமர்களும்
> மண்மிசை மால்பலர் மாண்டனர்காண்'

எனவும் வரும் பெரியார் திருமொழிகளானும் உணர்க.

1. திருநாவுக. தேவா: உகச: ௯. 2. திருவாசகம், திருத்தோ: ௪.

மானைக் கைக்கொண்டதைப் புராணம் வேறு கதையாகக் கூறுமேனும் எவ்வுயிரையும் தாங்குகின்ற நிலையைக் குறித்தற்கே மானைக் கையிற்கொண்டிருப்பதாக இறைவன் கைப்பகுதியைக் குறித்தனர் எனக்கொள்க. அரங்கு - சபை: அவை. பொன் அம்பலம் - பொன் போன்ற ஒளிவிட்டெறிக்கின்ற பேரொளியிடம். இறைவன் பேரொளிப் பிழம்பாகவே இருக்கின்றானென்பதற்கு ஒளிவட்டம் குறிக்கப்பட்டது. அக் குறிப்பிடமே இங்கே அரங்கு எனப்பட்டதென்க. இத்தகைய இறையை, இங்குக் குறிகள் அமைத்துக்கொள்ளினும் குறிகுணங் கடந்த ஒன்றை 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழம்பொருளைப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியனாய் இருக்கும் பெருமானை வணங்குவோம்' என்று குறிப்பாற் பெறவைத்தார் ஆசிரியர் என்க. இறைவன் இயல்பைக் கச்சியப்ப சிவாசாரியரும்,

[1]'ஊரிலான்குணம் குறியிலான் செயல்இலான் உரைகளும்
பேரி லான்ஒரு முன்இலான் பின்இலான் பிறிதோர்
சாரி லான்வரல் போக்கிலான் மேல்இலான் தனக்கு
நேரி லான்உயிர்க் கடவுளாய் என்னுளே நின்றான்.'

என அருளியதும் ஒப்ப நோக்குக.

இவ்வாசிரியர் இந்நூல் துவக்கத்திலும் பின் கலிதொடர் காண்டத்திலும் இக் காண்டத்திலும் திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் வணக்கங் கூறுதலால், இவர் வைணவ நெறியோ சைவ நெறியோ எதையும் வேறு வேறாகக்கொள்ளாது, எல்லாச் சமயமும் உண்மையை உரைப்பனவே என்னும் பொதுக் கொள்கையுடையவர் என உணர்க. அதனால் இவர் சமயக் கணக்கரல்லர் எனவும் ஒரு தலையாகக்கொண்டு, சமரச மனநிலையுடையாரெனவும் கொள்க. ஆனால், திருமால் வணக்கத்தை முன் வைத்துரைத்தலால், திருமால்பாற் பேரன்புடையார் எனக் கொள்ளக்கிடக்கின்றது. (உ)

தமயந்தியைப் பிரிந்து சென்ற நளன் செய்தி

கூடுகூ. மன்னா உனக்கபயம் என்னா வனத்தீயில்
பன்னாக வேந்தன் பதைத்துருகிச்—சொன்ன
மொழிவழியே சென்றான் முரட்கலியின் வஞ்சப்
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

1. கந்தபுராணம், மாயைப் : க.

(இ - ள்.) முரண் கலியின் வஞ்ச பழிவழியே செல்கின்றான் - தன்னோடு மாறுபட்ட கலிமகனுடைய வஞ்சனையாகிய தீய வழியிற் செல்கின்றவனாகிய நளன், வனத்தீயில் பல்நாக வேந்தன் பதைத்து உருகி - காட்டுத்தீயில் ஒரு பெரும் பாம்பு அகப்பட்டுக்கொண்டு துடித்து மனம் வாடி, மன்னா உனக்கு அபயம் என்னா - வேந்தே! அடியேன் உனக்கு அடைக்கலம் என்று, சொன்ன மொழிவழியே பார்த்து சென்றான் - அப்பாம்பு கூறிய சொற்கள் வந்த வழியாகவே பார்த்துக்கொண்டு போனான்.

(க - ரு.) வஞ்சக்கலியின் தீய வழியிற் செல்பவனான நளன், காட்டுத்தீயில் அகப்பட்டுக்கொண்டு வருந்தும் பாம்பொன்று 'வேந்தனே! உனக்கு அடைக்கலம்' என்று கூறிய மொழி வந்த வழியாகவே சென்றான் என்பதாம்.

(வி - ரை.) பல்+நகம் - பன்னகம் என்று புணர்ந்தது. அது தொடை நோக்கிப் பன்னாகம் என நீண்டது. அதற்குப் பற்களையே நகமாகவுடையது என்பது பொருள். வேந்தன் - அரசன். அஃதாவது அரசன் மக்களுட் சிறந்திருப்பதுபோல் உயர்ந்த சிறந்த பெரும்பாம்பு. பாம்பினை ஆண்பாற் சொல்லால் கூறுவது அதன் சிறப்பு நோக்கி. பாம்பு ஐயறிவுயிரேயாயினும், இப்பாம்பு மக்கட் பண்புகளான செய்ந்நன்றியறிதல், பிறர்க்கு உதவிபுரிதல் முதலிய நற்குண நற்செயல்கள் உள்ள தன்மையினாலும், அறிஞரும் வியக்கும் அறிவு மேம்பாட்டினாலும் எனத் தெளிக. அப்பாம்பு காட்டுத் தீயில் அகப்பட்டுக்கொண்டு தத்தளித்தது. அவ்வழியே நளன் சென்றதைத் தமயந்தியைத் தன்னந்தனியளாகக் காட்டில் நள்ளிருளில் விட்டுவிட்டுச் சென்ற நெறியல்லா நெறியை நளன் தன் உரிய அறிவொடு செல்லவில்லை யென்பாராய்க் கலிதன் வஞ்சச்சூழ்ச்சியால் நெஞ்சைத் திரிக்க அதனால் செல்கின்றான் என்பாராய், 'முரண்கலியின் வஞ்சப் பழிவழியே செல்கின்றான்' என்றார். வஞ்சம் - கபடம். பழி - பாவச்செயல்: தீயசெயல். செல்கின்றான் - செல்கின்றவனென நிகழ் காலத்தில் கூறினார், அவன் செல்லும் வழியில் பாம்பு நெருப்பில் கிடந்து வருந்துவதைக் குறிக்க. அது நளமன்னனைக் கண்டது; 'மன்னா, உனக்கபயம்' என அழைத்தது. வேந்தனென இவன் தோற்றத்தானும் இவன் உறுப்பு இலக்கணங்களானும் உணர்ந்தது. எனவே, அரசர்கள் மன்னுயிர்களையெல்லாம் காக்கும் கடப்பாடுடையராகலான் இவ்வாறழைத்து அவனை வேண்டிற்றென்க. (க)

**நளன், தீக்கடவுள் தந்த வரத்தால்**
**அந்நெருப்புக்கு ஊடே அஞ்சாது போகுதல்**

௩௩௮. **தீக்கடவுள் தந்த வரத்தைத் திருமனத்தில்**
**ஆக்கி அருளால் அரவரசை—நோக்கி**
**அடைந்தான் அடைதலுமே ஆரழலோன் அஞ்சி**
**உடைந்தான்போய்ப் புக்கான் உவந்து**

(இ - ள்.) *தீ கடவுள் தந்த வரத்தை* - நெருப்புக்கடவுள் தனக்குக்கொடுத்த வரத்தினை, *திருமனத்தில் ஆக்கி* - தன் நல்ல நெஞ்சத்தில் எண்ணி, *அரவு அரசை அருளால் நோக்கி அடைந்தான்* - அக்கார்க்கோடகனென்னும் பெரும் பாம்பைத் தன் இரக்க உணர்வால் கண்ணுற்று பார்த்துக்கொண்டு அதன் பக்கத்தே போனான், *அடைதலுமே ஆர அழலோன் அஞ்சி உடைந்தான்* - இவன் சென்றவுடனே நெருப்புக்கடவுள் அச்சங் கொண்டு தன் வேகந்தணிந்து நின்றான், *உவந்துபோய் புக்கான்* - (அதனால் நளன்) மனம் மகிழ்ந்து உள்ளே சென்று நுழைந்தான்.

(க - து.) நெருப்புக்கடவுள் தந்த வரத்தை எண்ணிக்கொண்டு நளன் அஞ்சாது பாம்பருகே சென்றான்; அவன் சென்றவுடன் நெருப்புக்கடவுள அஞ்சித் தன் வேகந்தணிந்தான்; அதனால் மகிழ்ந்து அந்நெருப்பின் உள்ளே சென்று நுழைந்தான் என்பதாம்.

(வி - ரை.) *தீ கடவுள் - தீக்கடவுள்* இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கடவுள் என்பது, கட என்னும் பகுதியும் உள் என்னும் விகுதியும் பெற்ற தொழிற்பெயா. இதற்குக் கடத்தல் என்பது பொருள். கடத்தல் என்பது எல்லா நிலையையும் கடந்து நிற்றல். நெருப்புக்குமுன் எது நிற்பினும் அவைகளையெல்லாம் அழித்து அதன் நிலையைக் கடந்து நிற்பதென்பதாகும். இதேபோன்று உலக நிலையெல்லாங் கடந்து மனமொழி மெய்களுக்கு எட்டாத வான்பொருளாய் நிற்கும் இறைவனையும் கடவுளென அழைப்பர். இவ்வாறு ஆற்றல் மிக்க பொருள்களையெல்லாம் 'கடவுள்' எனக்கூறுதல் பண்டைத்தமிழ்ச் சான்றோர் மரபு. நீர்க்கடவுள், நிலக்கடவுள் முதலிய வழக்குகளையும் ஓாக. இம்முறையிலேயே ஈண்டுத் 'தீக்கடவுள்' என்றார். *திருமனம்* - சிறந்த மனம். சிறந்த மனமாவது அன்பு அருள் நிறை பொறை ஓர்ப்பு முதலிய மக்கட்பண்பு அடுத்த தன்மைகள் படைத்த மனம். முன்னர், நளன் தமயந்திபால் தூது சென்றமைக்கு மகிழ்ந்து வருணன் முதலியோர் நளனுக்கு வரங்கொடுத்தபோது தீக்கடவு

**நளன், காட்டுத்தீயில் கிடந்து வருந்தும் பாம்பைக் காணல்**

கூ௩௭. ஆரும் திரியா அரையிருளின் அங்ஙனே
சோர்குழலை நீத்த துயரோடும்—வீரன்
திரிவான்அத் தீக்கானில் செந்தீயின் வாய்ப்பட்
டெரிவானைக் கண்டான் எதிர்.

(இ - ள்.) ஆரும் திரியா அரை இருளின் அங்ஙனே - எத்தகைய அஞ்சாநெஞ்சினரும் துணிந்து செல்லற்கியலா நடு இரவில் (பாழ் மண்டபத்தைவிட்டு) வந்தவாறே, சோர் குழலை நீத்த துயரோடும் - தாழ்ந்த கூந்தலையுடைய தமயந்தியைவிட்டு விட்டுப் பிரிந்துவந்த துன்பத்துடனே, வீரன் திரிவான் - வீரனும் அங்கே சுற்றித்திரிகின்றவனுமாகிய நளமன்னன், அத் தீக்கானில் செந்தீயின் வாய்பட்டு - அக் கொடிய காட்டினிடத்தே செந்நெருப்புத் தழலில் அகப்பட்டுக்கொண்டு, எரிவானை எதிர்கண்டான் - வருந்திக்கொண்டிருக்கின்ற கார்க்கோடகனென்னும் அப் பாம்பை நேரே பார்த்தான்.

(க - து.) பாழ் மண்டபத்தில் தன் மனையாளாகிய தமயந்தியைவிட்டுப் பிரிந்துவந்த நளன், யாரும் செல்லவொண்ணாத நள்ளிருட் பொழுதில் அக்காட்டில் நெருப்பின் வாய்ப்பட்டு வருந்துகின்ற பாம்பினை நேரே கண்டான் என்பதாம்.

(வி - ரை.) ஆரும் : யாரும்: யார் என்பதன் மரூஉ. உம்மை இருளின் திண்மையையும் அஞ்சத்தக்க நிலையையும் தருதலால், உயர்வு சிறப்பும்மை. அங்ஙனே - அவ்வாறே என்னும் பொருளில் வந்தது. சோர்குழல்: வினைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகத் தமயந்தியைக் குறித்தது. வீரன் - கலங்கா மனநிலை கொண்டவன். எரிதல் - ஈண்டுச் சுடுதல் என்னும் பொருளாய் அதனாலாகிய துன்பத்தைக் குறித்தது. முற்பாட்டில் 'மொழிவழியே சென்றான்' என்றதற்கேற்ப, அம்மொழி தோன்றிய இடத்தே பெரும்பாம்பு ஒன்று நெருப்பில் அகப்பட்டுக்கொண்டு தத்தளிப்பதை நேரே கண்டானென்பாராய்க் 'கண்டான் எதிர்' என்றார். எதிர் - நேர். முன்னே என்னும் பொருளது. காட்டின் மிக்க வெப்பத்துக்குத் 'தீக்கான்' என்றும், அவ்வெப்பத்தோடு வெப்பமாய்க் கனன்றெறிக்கும் நெருப்பின் மிக்க கொதிப்புக்குச் 'செந்தீயின் வாய்' என்றும் தெளிவுற ஆசிரியர் எடுத்து விளக்கியிருக்கும் ஒட்பம் மகிழ்வும் இறும்பூதும் மிக்குள்ளமை யறிந்தின்புறுக. (௪)

நளன், தீக்கடவுள் தந்த வரத்தால்
அந்நெருப்புக்கு ஊடே அஞ்சாது போகுதல்

௩௩௯. தீக்கடவுள் தந்த வரத்தைத் திருமனத்தில்
ஆக்கி அருளால் அரவரசை—நோக்கி
அடைந்தான் அடைதலுமே ஆரழலோன் அஞ்சி
உடைந்தான்போய்ப் புக்கான் உவந்து

(இ - ள்.) *தீ கடவுள் தந்த வரத்தை* - நெருப்புக்கடவுள் தனக்குக்கொடுத்த வரத்தினை, *திருமனத்தில் ஆக்கி* - தன் நல்ல நெஞ்சத்தில் எண்ணி, *அரவு அரசை அருளால் நோக்கி அடைந்தான்* - அக்கார்க்கோடகனென்னும் பெரும் பாம்பைத் தன் இரக்க உணர்வால் கண்ணுற்றுப் பார்த்துக்கொண்டு அதன் பக்கத்தே போனான், *அடைதலுமே ஆர அழலோன் அஞ்சி உடைந்தான்* - இவன் சென்றவுடனே நெருப்புக்கடவுள் அச்சங் கொண்டு தன் வேகந்தணிந்து நின்றான், *உவந்துபோய் புக்கான்* - (அதனால் நளன்) மனம் மகிழ்ந்து உள்ளே சென்று நுழைந்தான்.

(க - து.) நெருப்புக்கடவுள் தந்த வரத்தை எண்ணிக்கொண்டு நளன் அஞ்சாது பாம்பருகே சென்றான்; அவன் சென்றவுடன் நெருப்புக்கடவுள அஞ்சித் தன் வேகந்தணிந்தான்; அதனால் மகிழ்ந்து அந்நெருப்பின் உள்ளே சென்று நுழைந்தான் என்பதாம்.

(வி - ரை.) *தீ கடவுள் - தீக்கடவுள்* : இருபெயரொட்டுப் பண்புத்தொகை. கடவுள் என்பது, கட என்னும் பகுதியும் உள் என்னும் விகுதியும் பெற்ற தொழிற்பெயர். இதற்குக் கடத்தல் என்பது பொருள். கடத்தல் என்பது எல்லா நிலையையும் கடந்து நிற்றல். நெருப்புக்குமுன் எது நிற்பினும் அவைகளையெல்லாம் அழித்து அதன் நிலையைக் கடந்து நிற்பதென்பதாகும். இதேபோன்று உலக நிலையெல்லாங் கடந்து மனமொழி மெய்களுக்கு எட்டாத வான்பொருளாய் நிற்கும் இறைவனையும் கடவுளென அழைப்பர். இவ்வாறு ஆற்றல் மிக்க பொருள்களையெல்லாம் 'கடவுள்' எனக்கூறுதல் பண்டைத்தமிழ்ச் சான்றோர் மரபு. நீர்க்கடவுள், நிலக்கடவுள் முதலிய வழக்குகளையும் ஓர்க. இம்முறையிலேயே ஈண்டுத் 'தீக்கடவுள்' என்றார். திருமனம் - சிறந்த மனம். சிறந்த மனமாவது அன்பு அருள் நிறை பொறை ஓர்ப்பு முதலிய மக்கட்பண்பு அடுத்த தன்மைகள் படைத்த மனம். முன்னர், நளன் தமயந்திபால் தூது சென்றமைக்கு மகிழ்ந்து வருணன் முதலியோர் நளனுக்கு வரங்கொடுத்தபோது தீக்கடவு

னும் நளனைச் சுடாத - வெப்பந்தராத வரங்கொடுத்தான். அதை நளன் ஈண்டுக் கருதினனென்க. கருதினவன், பாம்பின் பக்கலிலே நெருப்பு மிக்க இடத்தே சென்றான்; நளன் வந்ததைக் கண்ட நெருப்புக்கடவுள் தான் கொடுத்த வரத்தை யெண்ணினான்; தன் சுடுந்தன்மையைக் குறைத்தான்; அதனால் நளன் நெருப்புத் தணல்களுக்கு ஊடே அஞ்சாது சென்றான். இக் கருத்துக்களை அமைத்து, 'ஆரழலோன் அஞ்சி.........புக்கான்' என்றார். உடைந்தான் என்பது இங்கே நெருப்பின் சுடுந் தன்மை குறைந்து நின்றதைக் குறித்தது. அதனால் தன் வேகந் தணிந்தான் என்று பொருள் கூறப்பட்டது. புக்கான் - சென்றான்: தன்னொற்றிரட்டிப் பகுதியே இறந்த காலங்காட்டிற்று. (ரு)

**பாம்பு, நளனை நோக்கித் தன் வரலாறு உரைத்தல்**

௩௩௬. வேத முனிஒருவன் சாபத்தால் வெங்கானின்
ஆதபத்தின் வாய்ப்பட் டழிகின்றேன்—காதலால்
வந்தெடுத்துக் காவென்றான் மாலை மணிவண்டு
சந்தெடுத்த தோளானைத் தான்.

(இ - ள்.) (பாம்பு மன்னன்) மாலை மணிவண்டு சந்து எடுத்த தோளானை தான் - மலர்மாலையிலுள்ள அழகான வண்டுகளானவை இசைப்பாடல் பாடுகின்ற தோள்களையுடைய நள மன்னனை நோக்கி, வேதமுனி ஒருவன் சாபத்தால் - மறைப் பொருளுணர்ந்த முனிவன் ஒருவனுடைய கெடுசொல்லினால், வெம்கானில் ஆதபத்தின் வாய்பட்டு அழிகின்றேன் - இக்கொடிய காட்டினிடத்தில் நெருப்பினுள் அகப்பட்டுக்கொண்டு வருந்துகின்றேன், காதலால் வந்து எடுத்து கா என்றான் - (என்பால்) அன்புகொண்டு (என் அருகில் வந்து என்னை இந்நெருப்பினின்றும்) எடுத்துவிட்டுக் காப்பாயாக என்று வேண்டினான்.

(க - து.) பாம்பு அரசனானவன், நளமன்னனைப் பார்த்து 'வேதப்பொருளறிந்த ஒரு முனிவன் கெடுமொழியினால் நான் இந்நெருப்பின்வாய்ப்பட்டு வருந்துகிறேன்; என்னை எடுத்துக் காப்பாற்றுக' என்று வேண்டிக்கொண்டான் என்பதாம்.

(வி - ரை.) வேதமுனி - மறைப்பொருளறிந்தவன். ஒருவன் - ஒப்பற்றவனென்றலுமாம். ஒப்பற்றவன், வெகுண்டு கூறினும் அருளிக் கூறினும் அப்பயனைத்தரும் சொல்லாற்றல் மிக்க சிறப்புள்ளவன். முனிவராவார் மனத்தைப் புலன்வழிச் செல்ல

விடாது அடக்கி ஆளும் தகுதியுடையார். அவர் வெகுண்டால் அவ்வெகுளியால் ஆகும் தீங்கைத் தாங்கவொண்ணாது எத்தகைய ஆற்றலுடையார்க்கும் என்பர், திருவள்ளுவப் பெருமான்.

"[1] குணமென்னும் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயும் காத்தல் அரிது.'

"[2] ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.'

என்பவாகலான், வேதமுனி ஒருவன் சாபத்தால் என்றானென்க.

காடு கொடுங்காடு, நினைப்பினும் நினைந்த நெஞ்சையும் சுடும் வெப்ப மிக்க இடம். அதில் செல்லுதலோ, தங்குதலோ இயலாதது. அந்தக் கொடிய காட்டில் வெப்பத்துக்குமேல் வெப்பமான நெருப்பு; அதனுள் அகப்பட்டுக்கொண்டு தத்தளிக்கின்றேன் என்பானாய் 'வெங்கானின்....................அழிகின்றேன்' என்றான். துயருற்றார் ஒருவர், அத்துயர் தீர்ப்பதற்கு அத்துயரின் கொடுமையையெல்லாம் அத்துயர் தீர்ப்பார் உளங்கொள்ளுமாறு விளக்கியெடுத்துச் சொல்லவேண்டுமாகலான், அம்முறைமை தோன்ற விரித்துக் கூறினான். காதல் - அன்பு முன்பின் தொடர்பில்லையாயினும் ஒருவர்க்குத் துன்பம் நேர்ந்த காலத்தில் காக்குதல் வேந்தர்கள் கடன்; அன்றியும் அறமுமாகும் என்பதை விளக்க, 'காதலால் வந்தெடுத்துக்கா' என்றான் என்க. (௬)

அப்பாம்பு, 'நீ தொட்டால் என் சாபந்தீரு'மென நளனை வேண்டுதல்

௩௭௦. சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூருந் தழலவித்துக் கொண்டுபோய்—பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழலால் வெம்மைப்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து.

(இ - ள்.) அந்த வெம் தழலால் வெம்மை படுகின்றான் - அக்கொடிய காட்டெரியினால் வேகின்றவனாகிய அப்பாம்பரசன், வேல் வேந்தை பார்த்து - வேற்படைகொண்ட நளமன்னனைப் பார்த்து, சீரியாய் நீ எடுப்ப தீமை கெடுகின்றேன் - மேன்மைக் குணமுடையோய்! நீ என்னை வந்து தொட்டு எடுப்பாயானால்

1, 2. திருக்குறள், ௨௯; ௮௯௯.

நான் சாபம் நீங்கப்பெறுவேன், கூரும் தழல் அவித்து - இந்த மிக்க நெருப்பைக் கெடுத்து, கொண்டுபோய் பாரில் விடுக என்றான் - என்னை எடுத்துக்கொண்டுபோய்த் தரையில் விடுவாயாக என வேண்டினான்.

(க - து.) அப்பாம்பரசன் நளமன்னனை நோக்கிச், 'சிறப்புடையாய், நீ என்னை இந்நெருப்பினின்றும் எடுத்துக்கொண்டுபோய்த் தரையில் விடுவாயானால் நான் இச் சாபத்தினின்றும் விடுபடுவேன்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) சீரியன் - சிறப்புடையவன்: விளி வேற்றுமையாதலால் அன், ஆயாக மாறிற்று. எடுப்ப: எடுத்தால் என எதிர்காலங் குறித்த செயவென் எச்சம். கெடுகின்றேன் - நீங்குகின்றேன் என்னும் பொருளது. கெடுகின்றேனென்பது ஈண்டுத் துன்பங் கெடுகின்றேனென்னும் பொருட்டாய்த் துன்ப நீக்கத்தைக் குறித்த குறிப்புச்சொல். அது தெளிவு பற்றி எதிர் காலம் நிகழ்காலமாக வந்த காலவழுவமைதி. கூர்தல் - மிகுதல் என்னும் குணப்பண்பு பற்றிய உரிசசொல். இங்கே நெருப்பின் மிகுதி குறிக்கவந்தது. பார் - பூமி, பரந்த (விரிந்த) தன்மை உள்ளதென்னும் பொருளது. விடுக: வியங்கோள் எவல். விகாரத்தால் அகரம் தொக்கு நின்றது. வேல் வேந்தென்பது, தீமை கடிந்து நலஞ்செய்யும் நன்மை சான்றவன் என்னும் குறிப்பிற்று. (எ)

**நளன், பாம்பரசன் வேண்டியவாறு அவனை எடுத்துக் கொண்டு வெளியே செல்லல்**

நூசக. என்றுரைத்த அவ்வளவில் ஏழுலகும் சூழ்கடலும்
குன்றும் சுமந்த குலப்புயத்தான்—வென்றி
அரவரசைக் கோண்டகன்றான் ஆரணியம் தன்னில்
இரவரசை வென்றான் எடுத்து.

(இ - ள்.) என்று உரைத்த அவ்வளவில் - (என்னை வெளியே எடுத்து விடுக) என்று அரவரசன் வேண்டிக்கொண்ட அவவேளையில், எழ் உலகும் சூழ்கடலும் குன்றும சுமந்த குலப் புயத்தான் - எழு உலகங்களையும் அவ்வுலகங்களைச் சூழ்ந்திருக்கின்ற கடலையும் மலைகளையும் தன் ஆட்சிமுறையில் தாங்கிய மேன்மை பொருந்திய தோள்களையுடையவனும், ஆரணியம் தன்னில் இரவு அரசை வென்றான் - (கொடிய) கானகத்தினிடத்தே கொடிய இருட்டையும் பொருட்படுத்தாது செல்கின்ற

வனுமான நளமன்னன், எடுத்து அரவு அரசை கொண்டு அகன்றான் - அக்கார்க்கோடகனைத் (தன் கைகளால்) தூக்கிக் கொண்டு அவ்விடத்தைவிட்டுச் சென்றான்.

(க - து.) அப்பாம்பரசன், அவ்வாறு வேண்டிக் கொண்டபோதே நளமன்னன் அவனைத் தன் கைகளால் தூக்கி எடுத்துக்கொண்டு அவ்விடத்தைவிட்டு நீங்கிச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) என்று என்னும் இடைச்சொல், மேற் கூறியதைக் குறித்து நின்றது. ஏழு உலகு - எல்லா நாடுகளையும் என்னும் பொருளது. சூழ்கடல் : வினைத்தொகை. கடல் சூழ்ந்த உலகையெல்லாம் தன் குடைக்கீழ் அடக்கியாண்ட நள மன்னன் சிறப்பைக் குறிக்க 'குன்றும் சுமந்த குலப்புயத்தான்' என்றார். குலப்புயம், போரென்ன வீங்கும் பொற்புடையதென்னும் கருத்துக்கொண்டது. ஆரணியம்: வடசொல், பெருங்காடு. இரவு-இருள். அரசு - அரசன்போன்றது. இரவு சிறந்ததென்னும் பொருளது. சிறந்த தென்னையெனின் இருள் கன்னங்கரேலெனக் கட்புலன் கதுவாதவாறு செறிந்து நிறைந்திருத்தல். அந்த இருளினும் அஞ்சாது தமயந்தியைவிட்டுவிட்டுத் தன்னந் தனியாக ஊக்கத்துடன் சென்ற நளனுடைய மனத்திண்மை நிலைதோன்ற 'இரவரசை வென்றான்' என்றார். வெல்லுதல் - கண்டு அதனைப் பொருட்படுத்தாது செல்லல். (அ)

**அரவரசன், பத்துவரை எண்ணித் தன்னைக் கீழே விடுமாறு நளனை வேண்டல்**

நடசஉ. மண்ணின்மீ தென்றனைநின் வன்தாளால் ஒன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடுகென்றான் - நண்ணிப்போர்
மாவலான் செய்த உதவிக்கு மாறாக
ஏவலால் தீங்கிழைப்பேன் என்று.

(இ - ள்.) போர்மா வலான் - போர்க்குதிரைகளின் மன நிலையறியும் தன்மையுடையவனாகிய நளமன்னன், நண்ணி செய்த உதவிக்கு மாறு ஆக - தன் பக்கலில் வந்து தனக்குச் செய்த நன்றிக்குக் கைம்மாறுதவியாக, ஏவலால் தீங்கு இழைப்பேன் என்று - நளன் கட்டளையாலாயே அவனுக்கு (நன்மை தரும்) தீமையைச் செய்வேனென்று துணிந்து, மண்ணின் மீது - இப் பூமியிடத்தில், என்தனை நின் வன்தாளால் ஒன்று முதல் - என்னை நீ உன்னுடைய வலிமையுள்ள கால்களினால் ஒன்று முதலாக, தச

என்று இடுக என்றான் - பத்து வரை எண்ணிக்கொண்டு தச வென்று கூறி விடுக என்று (பாம்பரசன்) நளனை வேண்டினன்.

(க - ரை.) பாம்பரசன் நளனை நோக்கி, நளன் செய்த நன்மைக்குக் கைம்மாறு தீங்கு செய்து நன்மை இழைப்ப தாக முடிவு செய்து 'நீ ஒன்று முதல் பத்துவரை எண்ணி உன் கால்களினால் தசவென்று சொல்லி என்னைக் கீழே விடுக' வென்று வேண்டினன் என்பதாம்.

(வி - ரை.) மண்ணின் மீது - பூமியில். தன்னை விடும்படி கார்க்கோடகன் வேண்டினன். அவன் கடிப்பது நன்றி செய் தார்க்குத் தீமையே யென உலகோர் கொள்ளக் கிடக்கின்றது; ஆயினும் அதனால் பின் நளனுக்குப் பல்வகை உதவி கிட்டுதலால் 'உதவிக்கு மாறாக.........தீங்கிழைப்பேன்' என்ற சொற்களாற் குறித்தார். வன்தாள் - வலிமை செறிந்த தாள். 'தச' என்னும் வட சொல் பத்து என்னும் எண்ணுப் பெயரையும், கடிக்க (தீண்டுக) என்னும் ஏவல் வினையையும் குறிப்பது. இதனால் 'என்னை நீ கடி' என்று நளனவன் வேண்டிக் கொண்டதுபோற் கொண்டு அவன் கட்டளைப்படியே செய்தேன்; தான் மாறாகச் செய்யவில்லை என்பது தோன்ற 'தசவென்றிடுக' என வேண் டிக் கடிக்கத் தனக்கு உரிமை பெற்றுக்கொள்ள ஒரு சூழ்ச்சியைத் தேடிக்கொண்டான் என்க.

நளன் குதிரை இலக்கணம் அறிந்து குதிரைகளை நன்கு செலுத்துவதில் சிறந்தவனென்பதைக் காட்ட 'மாவலான்' என்றார். வல்லான், வலான்: தொகுத்தல் விகாரம். (க)

அப்பாம்பு நளனைக் கடித்தல்

நூசரு. ஆங்கவன்றான் அவ்வா றுரைப்ப அதுகேட்டுத்
தீங்கலியால் செற்ற திருமனத்தான்—பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மையால்
எண்ணினான் வைத்தான் எயிறு.

(இ - ள்.) ஆங்கு அவன் அவ்வாறு உரைப்ப - அவ்விடத்தில் அவ்வரவரசன் அவ்வாறு கூற, தீகலியால் செற்ற திருமனத் தான் அதுகேட்டு - தீமையை யுடைய கலிமகனால் தன்வய மாக்கப் பெற்ற மேன்மைக் குணமுடையவனாகிய நளமன்னன் அதைக்கேட்டு, பூகழலை மண்ணின் மேல் வைத்து - தன் அழகிய கால்களை நிலத்தின் மேல் வைத்து, வாய்மையால் - உண்மை

என்று நம்பியதால், தச என்று எண்ணினான் - (ஒன்றென்று தொடங்கிப்) பத்தென்று எண்ணிக் கணக்கிட்டான், எயிறு வைத்தான் - (உடனே பாம்பரசன்) தன் நச்சு நிறைந்த பல்லை வைத்து (நளன் காலில்) தீண்டினான்; (கடித்தான்.)

(க - ரு.) பாம்பரசன் சொன்ன மொழியைக் கலியின் வயப்பட்டதனால் உண்மையென நம்பிய நளன், ஒன்றென்று தொடங்கிப் பத்தென்றெண்ணினான்; உடனே பாம்பரசன் தன் நச்சுப்பற்களை நளன் கால்களில் வைத்துக் கடித்தான்.

(வி-ரை.) தீக்கலி: தீங்கலியென எதுகை நோக்கி மெலிந்து நின்றது. செற்ற - கெடுத்த: தன் இயற்கைநிலையை மாற்றிய என்னும் பொருளில் வந்தது. திருமனம் - சிறந்த மனம்: அதனையுடைய நளன் எனக் குறிப்புவினையாலணையும் பெயர். தசம் - பத்து. மேற்பாட்டில் அரவரசன் வேண்டியவாறு ஒன்றுமுதல் துவங்கிப் பத்தென்பது வரை எண்ணியதைக் குறித்தது. எயிறு - பல். நஞ்சு நிறைந்தது பாம்பின் பற்கள் ஆனதால், நச்சுப் பல் என்று பொருள் கூறப்பெற்றது. வைத்தான் என்பது கடித்ததைக் குறித்தது: காரணப் பொருள் காரியப் பொருளாக வந்தது.

[1] "கலுழன்மேற் சரணம் வைத்தான்."

என்னும் கம்பர் கருத்தும் இதனோடொப்ப வருதலை ஓர்க. (கO)

பாம்பு கடித்ததால் நளனது திருமேனி குறுகுதல்

௩௪௪. வீமன் மடந்தை விழிமுடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோருக்—கேமம்
கோடாதார் அகம்போல் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் திருமேனி வெந்து.

(இ - ள்) மெய்ம்மை விடாதான் திருமேனி வெந்து - உண்மை நெறியைக் கடவாதவனாகிய நளமன்னனுடைய அழகான உடல் (நஞ்சினால்) கருநிறமாக மாறி, வீமன் திருமடந்தை - வீம மன்னனுடைய செல்வமகளாகிய தமயந்தியினுடைய, விழி முடிய கண்டு அறியா வாம நெடும் தோள் - கண்களும் முழுவதும் கண்டு அறியவொண்ணாத (நளனின்) அழகு பொருந்திய

1. கம்பராமா. பால. திருவவதார. உ௫.

நீண்ட தோள்கள், வறியோருக்கு ஏமம் கொடாதார் அகம்போல் குறுகிற்று - இரப்போர்க்குப் பொருள் ஈயாத உலோபர்தம் இல்லத்தின் செல்வம் சுருங்குவதுபோல் குறுகிப் பொலிவிழந்தன.

(க - ரு.) நளன் உடலானது நஞ்சு உடலிற் சேர்ந்தவுடன் தீயப் பெற்றுக் கருகிப்போனதுமன்றி, உலோபரின் செல்வவளம் சுருங்குவது போலத் தோள்களும் குறுகின என்பதாம்.

(வி - ரை) வீமன் திருமடந்தை - வீமனுடைய திருமகள் போன்ற அழகு மிக்க மகளென்றலுமாம். 'விழிமுடியக் கண்டறியா......தோள்' என்பது நளனுடைய தோற்றப் பொலிவும் அழகும் மிக்கன வென்பதை விளக்கி நின்றது. அழகிற் சிறந்த ஆடவர் பெண்களின் உறுப்புக்கள் ஒவ்வொன்றும், அவ்வவர்பாற் காதலுற்றார்க்குக் காண்டொறும் காண்டொறும் புதுப் புதுத் தோற்றமுடையனவாய் அழகின் செறிவு மிக்கனவாய்க் காணக் கிடக்குமாதலின், இங்கே நளன் தோளழகைப் பன்முறை பார்த்துப் பார்த்துக் களித்தும் அவளால் அதன் அழகெல்லையை வரையறுக்க வொண்ணுததாய் மேலும் மேலும் புத்தம் புதிய தோற்றமும் அழகுந் தந்து அவள் கண்களுக்கு விருந்தளித்தலின் இவ்வாறு கூறினரென்க. அயோத்தி யேந்தல் இராமபிரானின் திருவுலாக் காட்சியைக் கண்ட நங்கையர் பலர், அவன் அழகில் ஈடுபட்டு விழித்த கண் விழித்தபடியே எழுது சித்திரம் போல நின்று தாம் தாம் கண்ட அவன் உறுப்புக்கள் ஒவ்வொன்றையும் பார்த்துப் பார்த்துப் பின் வேறு உறுப்புக்களைக் காண்டற்கு இயலாத நிலையில் அவன்றன் ஒருறுப்பைக் கண்டார்க்கு அவ்வொன்றே நிரம்பக் கண்டு முடிக்க வொண்ணுத பேரழகுடையதாய் இருந்ததாகக் காட்டி இராமன் வனப்பைச் சித்திரித்த காட்சி இககருததோடொப்ப இருத்தலின், அதனையும் ஈண்டெடுத்துக் காட்டுகின்றும்:

[1]"தோள்கண்டார் தோளே கண்டார்
 தொடுகழற் கமலமன்ன
தாள்கண்டார் தாளே கண்டார்
 தடக்கைகண் டாரும் அஃதே
வாள்கொண்ட கண்ணார் யாரே
 வடிவினை முடியக் கண்டார்.'

என்பதது. ஏமம் - பொன்: பணம். பாம்பு கடித்து நஞ்சு நளன் உடலில் கலந்தவுடன், அவன் அழகிய நிறம் மாறிக் கருநிற

1. கம்பராமா. பால. உலாவியற். கக.

மாயிற்று; அழகு மிக்க தோள்களும் தன் வனப்பின் பொலிவும் உயர்ச்சியும் கவர்ச்சியும் சுருங்கின. இதற்கு ஓர் உவமங் கொடுத்து, அதன் மூலம் ஒரு நீதி முறையையும் மன்பதை உலகிற்குக் கொடுத்து உதவுகின்றார் ஆசிரியர். செல்வம் பெற்ற மக்கள் தம் செல்வத்தை இடனின்றி இரந்தார்க்கொன்றீதலே கடமையாகும்; அதுவே இறைவன் படைப்பு நோக்கத்துக்கும் உலகியல் நெறிக்கும் ஒத்த முறையாகும். அவ்வாறு ஈதலின்றிச் செல்வத்தைப் பயனின்றித் தொகுத்து வைப்பதால் அச்செல்வம் பயனுமின்றிப் பிறரால் கொள்ளை முதலியவற்றால் கொள்ளப் பெற்று அழிந்து கெடுவதும் உறுதியாகலான், அதனை உவமமாக்கி அசசெல்வம் நாளுக்கு நாள் குறைந்து கெடுவது போல, இத்தோள்களும் பொலி வழிந்தன என்பாராய்க் 'கொடாதார் அகம்போல் குறுகிற்றே' என்று அவர் இல்லத்தின் மேலேற்றிக் கூறினார். அன்றியும் அகம் என்பதற்குக் கொடுக்காதவர் மனம் விரிவடையாததுபோல என்றலுமாம். அற நூலும் இதனனே.

> [1]'துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்
> வைத்துக் கழியும் மடவோனை—வைத்த
> பொருளும் அவனை நகுமே உலகத்
> தருளும் அவனை நகும்.'

என முழங்குதலும் அறிக.

> [2]'செல்வத்துப் பயனே ஈதல்
> துய்ப்பேம் எனினே தப்புந பலவே.'

என்றும்,

> [3]'இல்லென இரந்தோர்க் கொன்றீயாமை இளிவு.'

என்றும் சங்ககாலச் சான்றோர் கூறுதலானும்,

> [4]'அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வம் மிகநலம்
> பெற்றாள் தமியள்மூத் தற்று.'

என்னும் வள்ளுவர் வான்மறையானும் அறிக.

மெய்ம்மை விடாதான் - உண்மை நெறிக்கு மாறுபடாமல் நடப்பவன். அஃதாவது, பொய்ந்நெறி புகாத புகழுடையான் என நளன்றன் தகுதிப்பாடுரைக்கப் பட்டதென்க. (கக)

1. நாலடியார், உளங.  2. புறம். கஅக.
3. கலித்தொகை, உ.  4. திருக்குறள், கOOஎ.

நளன், தன்னைக் கடித்த பாம்பரசனை நோக்கி வினவுதல்

௩௪௫. ஆற்றல் அரவரசே ஆங்கென் உருவத்தைச்
சீற்றமொன் றின்றிச் சினவெயிற்றால்—மாற்றுதற்கின்
றென்கா ரணமென்றான் ஏற்றமரில் கூற்றழைக்கும்
மின்கால் அயில்முகவேல் வேந்து.

(இ - ள்.) ஏற்ற அமரில் கூற்று அழைக்கும் - (பகைவர்க்கும் தனக்கும்) மூண்ட போர்க்களத்தில் (அவர்கள் உயிரைக் கொண்டு செல்லுதற்கு) இயமனை (வருக வருக) என்று கூப்பிடுகின்ற, மின்கால் அயில்முக வேல் வேந்து - ஒளிவிட்டெறிக்கின்ற கூரிய நுனியுடைய வேற்படை யேந்திய நளமன்னனானவன், ஆற்றல் அரவு அரசே - வல்லமைமிக்க பாம்புக் கரசனே!, இன்று சீற்றம் ஒன்று இன்றி - இப்பொழுது (என்னால் நலம் பெற்ற நீ) என் மேல் சினம் வரக் காரணமில்லாதிருக்கவும், ஆங்கு என் உருவத்தை-முன்பிருந்த என் உடல் வடிவ நிறத்தை, சின எயிற்றால் மாற்றுதற்கு காரணம் என் என்றான் - உன்னுடைய சினம் பொருந்திய பற்களால் கடித்து வேறு படுத்தியதற்குக் காரணம் என்ன என்று கேட்டான்.

(க - து.) நளமன்னன் அப் பாம்பரசனை நோக்கி, 'பாம்பரசனே! இப்பொழுது உனக்கு உதவி செய்த என் மேல் உனக்குச் சினமுண்டாகக் காரணமே இல்லை; அவ்வாறிருந்தும் உன் சினம் பொருந்திய பற்களால் என்னைக் கடித்து என் உருவத்தையே மாற்றினாய்; அதற்குக் காரணம் என்ன?' வென்று கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) ஆற்றல் - வன்மை யானைபோன்ற பேருருவ உயிர்களையும் தன் பல்லென்னும் படையால் வெல்லும் திறம். உருவம் - நிறத்தைக் குறித்தது. சீற்றம் அதன் காரணத்துக்கு ஆகுபெயர். ஒன்று என்பதில் இசை நோக்கி முற்றும்மை குறைந்து நின்றது. ஒன்றும் என உம்மைவிரிக்க. பாம்பின் சினத்தைப் பல்லின்மேல் ஏற்றிச் 'சின எயிறு' என்றது இலக்கணை வழக்கு. ஏற்ற அமரில் : ஏற்றமரில் என நிலைமொழி அகரம் விகாரத்தால் தொக்கது. கூற்றழைத்தல் : கூற்றத்தை அழைத்தல் என விரிதலால் இரண்டனுருபு மறைந்து நின்றது; இரண்டன் தொகை. கூற்றத்தை அழைத்தலென்னும் குறிப்புச் சொல், தவறாது வெல்லுந் தன்மையைச் சுட்டி நின்றது.

[1]"கூற்றத்தைக் கையால் விளித்தற்றால்."

என்பர் திருவள்ளுவரும். தவறாது வெல்லுதல் என்றது தன்னை எதிர்த்த பகைவரைத் தன் ஆற்றலால் கொன்று வாகை மாலை சூடுகின்ற வெற்றிப் பெருமிதத்தை. இலங்கை வேந்தன், இராம பிரானால் முறியடிக்கப் பெற்றுத் தன் தலைகள் அறுபட நின்ற காலை அவன்றன் மேன்மையை - வீர மேம்பாட்டை,

[2]"வெல்லுமத்தனை அல்லது தோற்றிலா விறலோன்."

என்று கம்பநாடர் குறித்ததும் அறிக. அம் முறையில் நளன், தோற்றிலா விறல் தோன்ற, அவன் வேல்மேலேற்றிக் 'கூற்றழைக்கும் வேல் வேந்து' என்றார்.

[3]"நீரேந்தி நெய்ம்மிதந்து நிணம்வாய்ப் பில்கி அழல்விம்மிப்
போரேந்திப் பூவணிந்து புலவு நாறும் புகழ்வேலோன்."

என்று பிறரும் வேல்மேல் ஏற்றிக் கூறுதலானும் அறிக.

அத்தகைய ஆற்றலான் ஊழ் வலியால் இன்று பாம்பரசனால் பற்றப்பட்டான் ; என்னே உலகநிலை என்னும் அவலக் குறிப்புத் தோன்ற அமைத்தார். ஊழின் வலியை உணர்த்தியவாறுமாம். (கஉ)

பாம்பரசன், நளனை நோக்கி, 'உன் உருவை மாற்றவே கடித்தேன்' எனல்

௩௪௬. காயும் கடகளிற்றாய் கார்க்கோ டகன்என்பேர்
நீயிங்கு வந்தமை யான்நினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணமா
வேறாக்கிற் றென்றான் விரைந்து.

(இ - ள்.) (பாம்பு மன்னன் நளனை நோக்கி) காயும் கடகளிற்றாய் - (பகைவரைச்) சினக்கும் மதம் பொருந்திய ஆண் யானையை யுடைய வேந்தே, என்பேர் கார்க்கோடகன் - என்னுடைய பெயர் கார்க்கோடகனென்பது, இங்கு நீ வந்தமை யான் உணர்ந்து - நீ இக்காட்டிற்கு வந்ததை நான் தெரிந்துகொண்டு, காயத்தை மாறு ஆக்கிக் கொண்டு - நீ உன் உடல் நிறத்தை வேறுருவமாக்கியிருந்து, மறைந்து உறைதல் காரணமா - மறைந்து வாழ்வது காரணமாக, வேறு ஆக்கிற்று என்றான்

1. திருக்குறள், அ௯௪. 2. கம்பராமா. யுத்த. உ௪அ.
3. சீவகசிந். முத்தி. க.

விரைந்து - உன் உருவத்தை வேறு உருவமாக மாற்றியதாகு மென அறிவாயாக என்று விரைவாகக் கூறினான்.

(க - ரை.) பாம்பு மன்னன் நளனை நோக்கி, 'அர சனே! என் பெயர் கார்க்கோடகன்; நீ இக்காட்டிற்கு வந்ததை யான் அறிந்துகொண்டு, உன் வடிவத்தை வேறாக் கிக்கொண்டு மறைந்து இருக்கவேண்டும் காரணமாகவே உன்னை நான் கடித்து உதவி செய்தேன்' என்று கூறி னான் என்பதாம்.

(வி - ரை.) காய்தல் - வருத்துதல், அல்லது சினத்தல் என்னும் பொருளது. இங்குப் பகைவரைச் சினக்கும் என்று பொருளுரைக்கப்பட்டது. கடம் - மதநீர். ஆண் யானைக்குக் காது களிலும், மத்தகத்திலும், ஆணுறுப்பிலுமிருந்து மதநீர் ஒழுகும். அவ்வாறொழுக்கு ஏற்பட்டால் அது மிக்க ஆற்றலுடையதாய் - யாராலும் அடக்கவொண்ணாததாய்த் - தன் கண்முன் காண்பன வற்றையெல்லாம் அழிக்கும். அது போர்க்களத்தில் மதங்கொண் டால் அதன் ஆற்றல் கூறவேண்டா; அத்தகைய ஆற்றல் மிக்க கடா யானைகளையுடையா னென்பாராய்க் 'காயும் கடகளிற்றாய்' என்றார். காயம் - உடல். வேறு ஆக்கிற்று - வேறாக்கியது: வினைப் பெயர். அவ்வரசன் தான் நன்றிமறவாதவனல்லன் என்பானாய் 'வேறாக்கிற் றென்றான் விரைந்து' என்றார். விரைந்து : இறந்த கால வினையெச்சம். அஃது, என்றான் என்னும் வினைமுற்றுச் சொல் கொண்டு முடிந்தது. (கரு)

கார்க்கோடகன், நளனுக்கு ஆடை கொடுத்தல்

௩௪௭. கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிறால் பாயும் திருநாடா—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினாய் இந்த
அணியாடை கோள்கேன்றான் ஆங்கு.

(இ - ள்.) (கார்க்கோடகன் நளனை நோக்கி) கூன் இறால் பாய - வளைவுள்ள இறால் மீன்கள் துள்ளிப் பாய்வதனால், தவளை வாய் குவளை தேன் இறால் பாயும் திரு நாடா - தவளைகளின் வாயி டத்தே குவளை மலர்களிலுள்ள தேனானது (தேனிறாலிலிருந்து ஒழுகுவதுபோல்) பாய்ந்தோடுகின்ற நீர்வளமிக்க அழகிய நிடத நாட்டு வேந்தே!, கானில் தணியாத வெம் கனலை தாங்கினாய் - காட்டிடத்தே ஆறாத கொடிய தீயை எனக்காகப் பொறுத்துக்

கொண்டாய் (அதற்குக் கைம்மாறாக), இந்த அணி ஆடை கொள்க என்றான் - இந்த அழகிய ஆடையைப் பெற்றுக்கொள்க என்று கூறி வேண்டினான்.

(க - து.) கார்க்கோடகன் நளனை நோக்கி, 'கொடிய காட்டில் நீ நெருப்புக் கனலைப் பொறுத்துக்கொண்டு என்னைக் காப்பாற்றினாய்; அதனால் அதற்கு ஈடாக இந்த ஆடையைப் பெற்றுக்கொள்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) கூன் - வளைவு. இறால் - இறால் என்னும் ஒரு வகை மீன். நீர் நிலையில் வாழ்கின்ற இறால் மீன்கள் துள்ளுதலால், அந்நீரில் படர்ந்து கிடக்கின்ற குவளைக் கொடிகளில் மலர்ந்துள்ள பூக்களில் உராயப் பெற்று அதில் நிறைந்து பெருகி நிற்கின்ற தேன் இறாலிலிருந்து ஒழுகுவதுபோல் ஒழுகித் தவளை வாய்க்குட் செல்லுகின்றது என்பதில், நாட்டின் நீர வளன், நில வளன் ஏற்றங் கூறி, நிடத நாட்டின் சிறப்பையும் குறித்தவாறாம். இறால் முன்னது மீனும் பின்னது தேன் கூடும் ஆம். அணி ஆடை - அணிகின்ற ஆடை, அல்லது அழகிய ஆடை என்றலுமாம். ஆங்கு, அவ்விடத்து என்றேனும் அல்லது அசைநிலையாக வேனும் கொள்க. (கச)

**கார்க்கோடகன், அவ்வாடையின் பயன் கூறல்**

ருசடு. சாதி மணித்துகில்நீ சாத்திஞல் தண்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்குநா நீட்டும் துறைநாடர் கோவே
ஒளிக்குநாள் நீங்கும் உரு.

(இ - ள்.) தண் கழு நீர் போதின் கீழ் மேயும் புதுவரால் - (கார்க்கோடகன் நளனை நோக்கி) குளிர்ச்சி பொருந்திய செங்கழுநீர் மலரின் கீழே மேய்கின்ற இளவரால் மீன்களானவை, தாதின் துளிக்கு நா நீட்டும் துறை நாடர் கோவே - அம்மலர்களின் தேன் துளிகட்குத் தம் நாக்கை நீட்டுகின்ற நீர்வளமிக்க துறைகளையுடைய நிடத நாட்டுக்கு வேந்தே!, ஒளிக்கும் நாள் - (நீ) மறைந்துறையுங் காலத்து, சாதிமணி துகில் நீ சாத்தினால் உரு நீங்கும் - உயர்ந்த மாணிக்கம் போன்ற இந்த ஆடையை அணிந்தால் இவ் வேற்றுருவம் போகும். (உன் இயற்கையுருவம் வரும் என்றபடி.)

(க - து.) கார்க்கோடகன் நளனை நோக்கி, 'நிடத நாட்டு வேந்தே! நீ மறைந்து உறைந்து வெளிப்பட வர

என்னும்போது இவ்வழகுள்ள ஆடையை அணிந்தால் உன் உண்மை வடிவம் வரும்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) சாதிமணி-போலிமணியல்லாத உயர்ந்த மாணிக்கக்கல். அது செந்நிறத்தால் அழகொளி மிளிர்வது. அது போன்ற ஆடை யென்றமையால் செந்நிற ஆடையெனக் கருதலாம். அல்லது அதுபோல் விலையுயர்ந்ததெனவும் கொள்ளலுமாம். மணித்துகில் - மணிபோன்ற துகில் என விரிதலால் உவமைத்தொகை. துகில் - உயர்ந்த மெல்லிய ஆடை. துகில் உயர்ந்த ஆடை யென்பதனை,

> [1]'வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே
> பட்டும் துகிலும் உடுத்து.'

எனவரும் நாலடியார் உரையானும் அறிக. 'தண்கழுநீர்......... துறை நாடு' என்பது, நிடத நாட்டின் நீர்வளச் சிறப்புக் கூறியவாறு. 'ஒளிக்கும் நாள் நீங்கும் உரு சாதி மணித்துகில் நீ சாத்தினால்' எனக்கொண்டு பொருள் அறியக் கிடத்தலால் விற்பூட்டுப் பொருள்கோள். (கரு)

### கார்க்கோடகன், நளனை நோக்கி, 'உன் பெயர் வாகுகன் என்றாகுக' எனல்

நடசகூ. வாகு குறைந்தமையான் வாகுகனேன் றுன்னாமம்
ஆக அயோத்தி நகரடைந்து—மாகனகத்
தேர்த்தொழிற்கு மிக்கானீ ஆகென்றன் செம்மனத்தால்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து.

(இ - ள்.) (கார்க்கோடகன்) செம்மனத்தால் பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து - நடுநின்ற நல்நெஞ்சப் பாங்கினால் அரசாட்சி முறையிற் சிறந்த நளமன்னனை நோக்கி, வாகு குறைந்தமையால் - (உன்னுடைய) தோள்களின் அழகு மெலிவடைந்து குறைபட்டமையால், உன் நாமம் வாகுகன் என்று ஆக - உன் பெயரானது வாகுகனென்று வழங்கும்படி, நீ அயோத்திநகர் அடைந்து - நீ அயோத்திமாநகரத்திற்குச் சென்று, மாகனக தேர்த்தொழிற்கு மிக்கான் ஆக என்றான் - சிறந்த பொன்னணியன்ற தேர்ஓட்டுந் தொழிலிற் சிறந்தவனாக இருப்பாயாக வென்றான்.

---

1. நாலடியார், உகசு.

(க - து.) கார்க்கோடன் நளனை நோக்கி, 'உன் வாகு குறைந்தமையால் உன் பெயர் வாகுகனென்று வழங்கும் படி நீ அயோத்தி நகருக்குச் சென்று சிறந்த தேரோட்டு பவனாக இருப்பாயாக' என்று கூறினான் என்பதாம்.

(வி - ரை.) வாகு - அழகு. உலக வழக்கிலும் அழகிற் சிறந்தவனை நல்ல 'வாகன்' என்பர். இது வடசொல்லன்று, தூய தமிழ்ச்சொல். பிறரெல்லாரும் வடசொல்லென மயங்கிப் பொருள் விரிப்பர். குறைதல், நளனுக்கு இயற்கையாக இருந்த அழகு குறைந்து நிறம் மாறுபடல். மா கனகத்தேர் - குதிரை பூட்டிய பொன்னாலியன்ற தேரெனினும் பொருந்தும். தேர்த்தொழிற்கு, பார்த்தொழிற்கு என்பன, குவ்வுருபு ஏழனுருபுப் பொருளில் மயங்கி வந்த வேற்றுமை மயக்கம். நளன் சிறப்பை நூல் துவக்கத்தில் தமயந்திக்கு அன்னம் அறிமுகப்படுத்துவதாகக் குறித்த காலத்தில் 'செம்மனத்தான் தண்ணளியான்' என்னும் கருத்தையே ஈண்டும் 'செம்மனத்தான்' என்று புகுத்துரைத்தார். செம்மனமாவது, ஓர்ந்து கண்ணோடா திறைபுரிந்து யார்மாட்டும் தேர்ந்து செய்யும் நடுநிலை மாறா மனப்பண்பு. அப் பண்பு மேம்பாட்டினால் உலகைக் காக்கும் அரசுமுறை கொண்டவனை இப்போது தேர்த்தொழில் செய்யுமாறு கூறுகின்றான்; இஃது ஊழின் வலிபோலும் எனக் கழிவிரக்கந் தோன்ற ஆசிரியர் கூறினர். (கசு)

நளன், கார்க்கோடகன் கூறியவாறு புறப்படல்

௩௫௦ இணையாரும் இல்லான் இழைத்த உதவி
புணையாகச் சூழ்கானில் போனான்—பணையாகத்
திண்ணாகம் ஓரெட்டும் தாங்கும் திசையனைத்தும்
எண்ணாக வேந்தன் எழுந்து.

(இ - ள்.) பணை ஆகம் திண் நாகம் ஓர் எட்டும் - பருத்த உடல்வலிமை மிக்க எட்டு யானைகளும், தாங்கும் திசை அனைத்தும் - சுமக்கின்ற (உலகின்) எல்லாத் திசைகளினும், எண் ஆக வேந்தன் எழுந்து - தன் எண்ணம் போலவே நடக்கும்படி ஆண்ட நளமன்னன் புறப்பட்டு, இணையாரும் இல்லான் - தனக்கு ஒப்புச் சொல்வதற்கில்லாதவனான கார்க்கோடகனானவன், இழைத்த உதவி புணை ஆக சூழ்கானில் போனான் - செய்த உதவியையே தனக்குத் துணையாகக் கொண்டு (புதர்கள்) மண்டியுள்ள காட்டின் வழியாகச் சென்றான்.

(க - து.) நளமன்னனானவன், கார்க்கோடகன் செய்த உதவியையே தனக்குத் துணையாகக் கொண்டு முட்புதர்கள் மண்டிக்கிடக்கின்ற அக்காட்டின் வழியாகச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) இணையாரும் இல்லான், யாரும் இணையில்லான் என மாறுக. உலகில் நன்றி மறப்பவரே மிகப்பலர். நன்றியை அறிந்து அந் நன்றிக்கேற்ற தம்மால் இயன்ற உதவியைச் செய்வோர் மிக மிகச் சிலர். நளன் தன்னைக் கொடிய நெருப்பினின்றும் காத்த உதவியை மறவாது, பின் நளனுக்கு வேண்டும் நலங் குறித்துக் கவன்றவனாய் நளனைத் தீண்டி அவன் தன் பகைவர்க்கு எளியனாயிராமல் காண்டற்கரியனாய் இருத்தற்குத் தன் நஞ்சினால் உருவை மாற்றியும், பின் அவன் தன் இயற்கை உருவைப் பெற ஆடை வழங்கியும் தன் நன்றிமறவாக் கடப்பாட்டைக் கடைப் பிடித்தொழுகிய கார்க்கோடகன் விழுமிய சிறப்புத் தோன்ற 'இணையாரும் இல்லான்' என்னும் அடைபுணர்த்துரைத்தார். இல்லான்: குறிப்புவினையாலணையும் பெயர் புணை - பற்றுக் கோடு; ஆதரவு. நளன் அக் காட்டைவிட்டுச் செல்வதற்கு உதவி யாகத் தனக்குத் துணையாக இருந்தன அவன்றன் உண்மை உரைகளும் ஆடைகளுமேயாம். இவைகளே தனக்குத் துணை யாகக் கொண்டு சென்றானென்பாராய் 'உதவிபுணையாக' என்று சாதியொருமை கொடுத்துக் கூறினார். தாய்சொற் றாங்கிக் கானஞ் செலப்புறப்பட்ட கமலக் கண்ணனை இராமன், தனக்குத் துணையாகக் காட்டில் வாழ்தற்கு உதவியாகக்கொண்டு சென்றவைகளைக் கம்பர் குறித்தவை இக் கருத்தோடொப்ப இருத்தலானும், விழுமிய கருத்துச் செறிவுடைமையானும் அதனையும் இதனோடொப்ப வைத்து மகிழ ஈண்டுக் குறிக் கின்றாம்.

[1] 'தையல்தன் கற்பும்தன் தகவும் தம்பியும்
மையறு கருணையும் உணர்வும் வாய்மையும்
செய்யதன் வில்லுமே சேமம் ஆகக்கொண்
டையனும் போயினான் அல்லின் நாப்பணே.'

என்பது காண்க. இதுபோன்றே இங்கே, 'உதவிபுணையாக' என்பதில் உம்மை விகாரத்தால் மறைந்து நின்றதாகக் கொண்டு 'உதவியும் புணையாக' என்று எச்சவும்மையாக்கி, 'உதவியும்' என்றமையால் தன் அரிய பண்புகளான அருள் அன்பு வாய்மை

1. கம்பராமா. தைல. சஅ.

அறம் மறம் ஆண்தகைமை முதலியவற்றையும் துணையாக அதனோடு கொண்டு என விரித்துப் பொருள் கொள்ளலுமாம்.

நாகம் - யானை. ஒரெட்டும் என்னும் தொகைக் குறிப்பினால் திக்கிலுள்ள எட்டு யானைகளையும் உணர்த்திற்று. எட்டுத் திசைகளையும் யானைகள் தாங்குகின்றன என்பது புராணக்கூற்று. அதனால் 'நாகம்.........தாங்கும் திசை' என்றார். நளன் வேந்தனாக விளங்கிய காலத்தில் அவன் புகழ் எங்கும் மண்டிக்கிடந்தது; அவன் ஆட்சியும் எங்கும் பரவி நின்றது; இவன் நாட்டில் பசியும் பிணியும் பகையும் இல்லாதாயின; வசியும் வளனும் சுரந்து பெருகியிருந்தன; இவன் நாடு அரவும் சூரும் இரைதேர் முதலையும், உருமுஞ் சார்ந்தவர்க் குறுகண் செய்யா உயர்நிலை பெற்றுத் திகழ்ந்தது. அத்தகைய ஆட்சியில் உயர்நிலை பெற்றிருந்த மன்னன் என்பாராய்த 'திசையனைத்தும் எண்ஆக வேந்தன்' என்றார். ஆக என்னும் செயவெனெச்சம் ஈண்டுக் காரியப் பொருட்டாய் இறந்தகாலங் காட்டிற்று. 'மழை பெய்ய நெல் விளைந்தது' என்பதுபோல. ஆண்ட என்னும் சொல், ஆக என்னும் சொற்கேற்ப வாராததால் சொல்லெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. (கஎ)

### நளன், காட்டைவிட்டு நீங்கிச் சென்று கடலைக் காணுதல்

௩௫௧. நினைப்பென்னும்காற்றசைப்பநெஞ்சிடையேமூளும்
கனற்புகைய வேகின்றான் கண்டான்--பனிக்குருகு
தண்படா நீழல் தனிப்பேடை பார்த்திரவு
கண்படா வேலைக் கரை.

(இ - ள்.) தண்படாம் நீழல் பனிகுருகு - குளிர்ச்சி பொருந்திய கொடிகளின் மேற்கட்டி போன்ற நிழலின்கீழ் (குளிரால்) நடுங்கிக்கொண்டிருக்கின்ற ஆண் நாரையானது, தனி பேடை பார்த்து - ஒன்றியாப் பிரிந்து சென்றுள்ள தன் பெண் நாரையைக் காணாது எதிர்நோக்கி, இரவு கண்படா வேலைகரை - இரவு முழுதும் தூங்காமல் விழித்துக்கொண்டிருக்கின்றதான கடலின் கரையை, நினைப்பு என்னும் காற்று அசைப்ப - (தன் காதல் மனையாளாகிய தமயந்தியை) நினைத்தல் என்னும் காற்றுமோதித் தன்னை அலைத்தலினால், நெஞ்சு இடையே மூளும் - தன் மனத்திடத்தே பற்றிநிற்கின்ற, கனல்புகைய - (அவள் பிரிவாகிய துன்பத்) தீ புகைந்து எரிவதனால், வேகின்றான் கண்டான் - புழுங்குகின்றவனான நளமன்னன் பார்த்தான்.

(க - து.) தமயந்தியின் பிரிவுத்துன்பத்தால் வருந்துகின்றவனான நளமன்னன், ஆண் நாரையானது தன் பேடையைப் பிரிந்து அதனை எதிர்நோக்கி வருந்தி இரவு முழுதும் தூங்காமல் இருக்கின்றதான கடற்கரையைக் கண்டான் என்பதாம்.

(வி - ரை.) தமயந்தியைக் காட்டில் விட்டுப் பிரிந்துசென்ற நளன், தன் மனையாளை நினைந்ததைக் காற்றாகவும் பிரிவுத்துயரை நெருப்பாகவும் உருவகஞ் செய்து, 'நினைப்பென்னும் காற்றசைப்ப........வேகின்றான்' என்ற தொடரால் உணர்த்தினார். குருகு - வெண்ணிறமுள்ள பறவை: ஈண்டு நாரை. 'பேடை' எனப் பின்வருதலால் ஆண் நாரையென்று பொருள் கூறப் பட்டது. கடற்கரை ஓரங்களில் அடம்பு முதலிய கொடிகள் பின்னிப் பிணைந்து படர்ந்து கிடக்கின்றன. அக்கொடிகளின் வளைந்த வெளிக்குள் நாரைகள் இருத்தலால் அக்கொடிகள் மேற்கட்டி (விதானம்) போல் இருக்கின்றன. அதனுள் இருக்கும் ஆண் நாரை தன் பேடையை நினைந்து வருந்துகின்றன என்னுங் குறிப்பு, நளன் பிரிந்து தன்னந்தனியாகச் செல்வதை யொப்ப இருப்பது போன்ற தன்மையை உணரவைத்துணர்த்தினார். கண்படுதல் - கண்ணுறக்கங் கொள்ளல்; கண்படா - தூங்காத என்னும் பொருள். தான்: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பேடை பெண்ணினத்துக்கு வந்த மரபுச் சொல். [1]"பேடையும் பெடையும்.........பெண்ணே' என்னும் மரபியல் நூற்பாவினால் அறிக. (கஅ)

நளன், நாரையை நோக்கிக் கூறுதல்

௩௫௨. கோம்பார் இளங்குருகே கூறு திருத்தியால்
அம்புயத்தின் போதை அறுகாலால்—தும்பி
திறக்கத்தேன் ஊறும் திருநாடன் போன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கோன்று.

(இ - ள்.) (இவ்வாறான கடற்கரைப் பாங்கில் சென்ற நளன் அக்குருகை நோக்கி) கொம்புஆர் இளம் குருகே - மரக்கிளைகளில் தங்கயிருக்கின்ற தன்மையையுடைய இளநாரையே!, தும்பி - வண்டுகளானவை, அம்புயத்தின் போதை அறுகாலால் திறக்க - தாமரை மலர்களைத் தம் ஆறுகால்களினால் கிண்டி நெகிழ்த்த, தேன் ஊறும் திருநாடன் பொன்னை - உடனே தேன் ஊற்

1. தொல். பொருள். மரபியல், ௩.

றெடுத்து அதிலிருந்து வருகின்ற அழகிய விதர்ப்பநாட்டு வேந்தனை வீமன் திருமகளை, உறக்கத்தே நீத்தேனுக்கு - அவள் தூங்குங்காலத்தில் விட்டுவந்தவனாகிய எனக்கு, ஒன்று கூறாது இருத்தி - தேறுதலாக எனக்கொரு சொற்கூடச் சொல்லாமல் இருக்கின்றாயே? (இது உனக்குத் தகுதியாகுமா? என்று கூறினான்.)

(க - ரை.) 'நாரையே! நீ விதர்ப்பநாட்டு வேந்தன் மகளைத் தூக்கத்தில் விட்டுப்பிரிந்து வந்து வருந்துகின்ற எனக்கு ஓர் ஆறுதல் உரைகூட கூறாமல் வாளா இருக்கின்றாயே, இது ஏன்?' என்று நளன் வினவினான் என்பதாம்.

(வி - ரை.) கொம்பு - மரக்கொம்பு; புன்னை முதலிய மரக் கிளைகள். 'கொம்பார் இளங்குருகு' என்பது சாதியடை. இளங் குருகு: அது தன்னைத்தனியாகப் பிரிந்துவாழ இயலாத காதற் பருவமிக்க தென்னுங் குறிப்பிற்று. தன் பிரிவுபோன்று அதன் பிரிவை நளன் கருதினான். அறுகால் - ஆறுகால்: குறுக்கம் பெற்றது. வண்டுகளுக்கு ஆறுகால்கள் உள்ளன ஆதலால் 'அறு காலால்' என்றார்.

[1]'அறுகாற்பே டிசைபாடும் கூடல் மான்மியத்தை.'

என்றார் பரஞ்சோதி முனிவரும். வண்டுகள் தேனுண்பதற்கு மலர்கள்தோறும் சென்று பாடிக்கொண்டு ஊதிக் காலால் மிதித்து மலர்களை நன்கு விரித்துத் தேனுண்பதியற்கை. இதைக் கூறுமுகத்தான் விதர்ப்பநாட்டுச் செல்வவளனும் நீர்நிலவளனும் குறித்தாராயிற்று. திறக்கத் தேனூறும் என்றமையால் விதர்ப்ப நாடு, பாணர்க்கும் புலவர்க்கும் இரவலர்க்கும் வேண்டிய வேண்டி யாங்கு ஈந்து புரக்கும் தன்மையுடையது என்னும் கருத்துடை அடை அணியிலிருதல் காண்க. பொன் - பொன் போன்றவள்; அல்லது திருமகள் போன்றவள் என்று கொள்க. (கக)

**நளன், வண்டுகளின் காதன்மை கண்டு கவலல்**

௩௫௩. புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு
கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்—இன்னருள்கண்
டஞ்சினான் ஆவி அழிந்தான் அறவுயிர்த்து
நெஞ்சினான் எல்லாம் நினைந்து.

---

1. திருவிளையாடல். அவையடக்கம், ௫:

(இ - ள்.) பொறிவண்டு புன்னை நறும்தாது கோதி - புள்ளிகளையுடைய ஆண் வண்டு புன்னைப் பூவின் நறுமணமுள்ள மகரந்தப் பொடியைக் கிண்டிவிட்டு, கன்னிபெடை உண்ண காத்து இருக்கும் - (தன் காதலியாகிய) பெண் இளவண்டு தேனை உண்ணும்வரை காத்துக்கொண்டிருக்கின்ற, இன் அருள்கண்டு - (அதன்) நல்ல பேரன்பினை நோக்கி, அஞ்சினான் - (நளமன்னன் தன்னிலையை யெண்ணி) அச்சங்கொண்டான், அறஉயிர்த்து நெஞ்சினான் எல்லாம் நினைந்து ஆவி அழிந்தான் - மிகவும் பெருமூச்சுவிட்டுத் தன் மனத்தில் (தான் தமயந்தியை விட்டுவந்த செயலை) எண்ணியெண்ணி உயிர்வாடினான்.

(க - ரு.) தன் பெண்வண்டு தேனுண்பதைப் பார்த்துக்கொண்டு அது உண்ணுமட்டும் காத்திருக்கின்ற ஆண் வண்டின் பேரன்பு நிலையைப் பார்த்த நளன் தான் தன் மனையாளை வஞ்சித்துவந்த செயலை நினைந்து வருந்தினான் என்பதாம்.

(வி - ரை.) புன்னை யென்னும் முதற்பொருளின் பெயர் அதன் சினையாகிய மலருக்காதலால் பொருளாகு பெயர். கோதுதல் - தன் வாயாலும் கால்களாலும் கிளைத்தல் (கிளறிவிடுதல்).

[1]"குப்பை கிளைப்போவாக் கோழிபோல்,"

என்பதூஉம் அது. பொறிவண்டு தன் உடம்பெல்லாம் புள்ளிகள் பெற்ற ஆண்வண்டு 'பொறிவண்டு' என்று ஈண்டுப் பொதுப் பெயராகக் கூறினாரேனும் ஒன்றொழி பொதுச்சொல்லாக ஆண் வண்டினைக் குறித்தது; மேல், 'கன்னிப்பெடை' என்றமையான். கன்னி - இளமை, கட்டழகுமாம்.

[2]"கன்னி இளவாழை கனி ஈவ."

என்ற கம்பருரையும் இப்பொருட்டு. ஆண்வண்டு, தன் பெடை வண்டு தேன் உண்ணாது இருப்பதறிந்து தான் புன்னைப்போதைக் கிளைத்துக்கொடுத்து அதிலுள்ள தேனை அது பருகும்வரையும் காத்துக்கொண்டிருப்பதை நளன் கண்டான்; அதன் பேரன்பைத் தன் காதலிமாட்டுக்கொண்ட வற்றாத இன்னருளைக் கண்டான்; ஓர் அஃறிணை உயிர். அது தன் காதலிபால் இவ்வாறான வானினுமுயர்ந்த அன்புகாட்ட நாம் கற்பிற் சிறந்த காதலியை, 'குற்றமில்...மைந்தரையும், பெற்றுக்கொளலாம் பெறலாமோ... கோக்காதலனைக் குலமகளுக்கு.' (கலிதொடர். ௬௬) என்று

1. நாலடியார், ௩௪௧. 2. கம்பரா. ஆரணிய. அகத்திய. ௩௮.

கூறி, நிழல்போல் விடாது தன்னோடு தொடர்ந்து வந்து கானில் ஆறுதலளித்த அன்புக்கிழத்தியைத் - தன் ஆருயிர் மருந்தைத் - தமயந்தியை - நாம் கொடுங் காட்டில், சிங்கம் புலி கரடி பாம்பு பெரும்பேய் முதலிய கொடிய விலங்கும் பிறவும் திரிதரும் அடவியில் ஆள் வழக்கற்ற அருநெறியில பாழ்மண்டபத்தில் விட்டுப் பிரிந்தோமே, அதுவும் பகற்போதிலா! இரவிலன்றோ? அவள் என்னிலை எய்தினளோ! இவ்வண்டுக்குரிய அன்பில் ஒரு கூறு என்பால் உளதா! இல்லையே எனப் பலப்பல எண்ணினன்; தன் சீர்நிலை திரிந்தமைக்கு அஞ்சினன்; பெருமூச்செறிந்தான்; உயிரும் தளர்வுற்றது. இக்கருத்துக்களை யெல்லாம் ஒரு கோவைப்படுத்தி 'அஞ்சினன்...... ..எல்லாம் நினைந்து' என்றார். இக்கருத்தோடொப்பப் பொருள்வயிற் பிரிந்து சென்ற தன் காதலனைத் தலைவி நினைந்து வருந்துந் துறையில் ஐந்திணை ஐம்பதில் அமைந்துள்ள பாடல் நினைக்கத் தக்கது. பாலை வனம்; அங்கு நீருமில்லை, நிழலுமில்லை: ஆணும் பெண்ணுமாகிய மான்கள் இரண்டு; தப்பித்தவறி இரைதேடி வந்து இப்பாலையில் கால்வைத்துவிட்டன. கடும்பகல்; பகலவன் தன் கதிர்களை நிலமெங்கும் பரப்புகின்றான்; நிலத்தில் கால் பாவமுடியவில்லை; அவை வெப்பந் தாஙகலாற்றாது தத்தளிக்கின்றன; ஒன்ற நிழலில்லை; ஒதுங்கப் புதர்களுமில்லை; நீர் வேட்கையும் மிகுந்தது. நீர்தேடி அப்பாலையில் ஓடின; தேடின; கானலை நீரெனக் கருதின; ஓடி ஓடி இளைத்தன. இறுதியில் ஒரு சிறுகுண்டு; அதில் கலங்கலாகவுள்ள நீர் சிறிது ஒட்டிக் கிடந்தது. அவைகள் கண்டன; ஆனால் அந்நீர் ஒன்றுக்குககூடப் போதாத அளவு; இவை இரண்டு; நீர்வேட்கையோ மிகுதி; ஆவலுடன் இரண்டும் அந்நீர்ப் படுகரில் இறங்கின. ஆண் மான் ஒன்று கருதிற்று: 'நீரோ சிற்றளவு, நாம் கொண்ட வேட்கையோ பேரளவிற்று. இதை இருவரும் எப்படிக் குடிப்பது?' என்று எண்ணிப் பெண் மானை நோக்கி, 'என் அன்பு! நீர் சிறிது; நம் தாகம் பெரிது; ஆகவே நீமட்டும் இதனைப் பருகு; நான் வேறொரு நீர்நிலை கண்டு உணபல்' என்றது. பெடை, 'அருளே! நீ உண்டிலையேல் நானும் பருகலேன்' என்று வருந்திக் கூறிற்று. பின் ஆண் மான் வேறொரு கருத்துக்கொண்டது. நீரைக்குடியாமல் நீரைப் பருகுவதுபோல் அதன்மீது வாயை வைத்துக்கொண்டு அது குடிக்கும் மட்டும் இருப்பதென் முடிபு செய்துகொண்டு, 'உள்ள ஒருமையே! வருக நாம் இருவேமும் நீருணபேம்' என்றது. அதைப் பெடை உண்மையென நம்பிற்று. நீரைப் பருகத் தொடங்கின; ஆண் மான் தன் முடிபுப்படி நீர் பருகாது வாயை வைத்தபடி நீர் குடிப்பதுபோல் பாசாங்கு செயதுகொண்டிருந்தது பெண் மான் நீர் பருகித் தன் வேட்கை தணிந்தது. பின் நீரினின்று தன் வாயை யெடுத்தது. பின்னரே எஞ்சிய சேறுகலந்த கலங்கலை ஒரு சிறிது உறிஞ்சிக்

குடித்தது ஆண் மான். இக்கருத்தை உள்ளடக்கியதே இதன் கீழ் வருவது. இவைகளோடொத்ததே இவ்வண்டுகளின் அன்பும்.

"சுனைவாய்ச் சிறுநீரை எய்தாதென் றெண்ணிப்
பிணைமான் இனிதுண்ண வேண்டிக்—கலைமாத்தன்
கள்ளத்தின் ஊச்சும் சுரமென்பர் காதலர்
உள்ளம் படர்ந்த நெறி.'[1]

இந்நிலை கண்டே நளன், தான் காதலிக்கிழைத்த தீமையெனக் கருதினான், தான் பிரிந்துவந்த நிலையையெனக் கொள்க. (௨0)

நளன், கடற்கரையிலுள்ள நண்டினைக் கண்டு கூறுதல்

௩௫௪. காதலியைக் காரிருளில் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கலவ ஓடி
ஒளிக்கின்ற தென்னோ உரை.

(இ - ள்.) (நளன் அங்கு வந்த நண்டொன்றை நோக்கி) அலவ - ஓ நண்டே! நாதம் அளிக்கின்ற ஆழிவாய் ஆங்கு ஓடி ஒளிக்கின்றது - பேரோசை தரும் அலைகளையுடைய கடற்கரை ஓரத்தில் நீ சென்று உன் வளைக்குள் புகுந்து ஒளித்துக்கொள்ளுதல், காதலியை கார் இருளில் கானகத்தே கைவிட்ட தன் மனைவியைக் கரிய நள்ளிரவில் கடிய காட்டில் கைவிட்டுப் பிரிந்து வந்த, பாதகனை பார்க்கப்படாது என்றோ - இப்பாவியைப் பார்த்தல் தகாதென்ற காரணமோ?, என்னோ உரை - வேறு என்ன காரணமோ? (நான் அறியக்) கூறு.

(க - ரை.) நளன் அங்கோடிய நண்டொன்றைப் பார்த்து, 'நண்டே! என்னைக்கண்டு உன் வளைக்குள் ஒளிந்துகொள்கின்றாயே, காதலியை நடு இரவில் கொடிய காட்டில் விட்டுப்பிரிந்து வந்த இப்பாவியைப் பார்க்கக் கூடாதென்றா? வேறு என்ன காரணமோ? சொல்லு' என்றான் என்பதாம்.

(வி - ரை.) 'நின் பிரிவினும் சுடுமோ கொடுங்காடு' என்று கூறிச் சார்முகில் வண்ணனைத் தொடர்ந்துவந்த மிதிலைப் பொன்னையொப்பத் தன் காதற் கணவனைத் தொடர்ந்துவந்த

1. ஐந்திணை ஐம்பது, ௩௮.

தமயந்தியின் உள்ளன்பை விளக்க வேறு பெயர்களாற் கூருது 'காதலியை' என்றான். பகற்பொழுதாயினும் ஆகலாம் இரவுப் பொழுது என்பானாய், அதினும் நிலவொளி இல்லாத பேரிருள் என்பானாய்க் 'காரிருள்' என்றான். ஆள் அரவமற்றது; புலியுங் கரடியும் போதரும் இடம்; அஞ்சாநெஞ்சும் அஞ்சும் தன்மையதாம் என்பானாய்க் 'கானகத்தே' என்றான். இவ்வளவு கொடிய நிலைகள் அடுக்கடுக்காக இருந்தும் அவைகளைக் கருத்திற்கொள்ளாது தமயந்தியைத் தனித்துவிட்டுவந்த தன் செயலைக் 'கைவிட்ட' என்றான் இவ்வளவு நிலையை அறிந்திருந்தும், பெண்மை உள்ளம் இக்கொடுமைகளைத் தாங்காது என்பதை நன்குணர்ந்து விட்டுவரத் துணிவது நல்லியல்புடையார்க்குச் சாலாதென்பான் தன்னிலையே வெறுத்துக் கூறுவானாய்ப் 'பாதகனை' என்றான். இதுகாறும் நளன் தன்னிலை பற்றி வருந்திய திறம் உணர்த்தினார் ஆசிரியரென்க.

'காதலியை ........கைவிட்ட' எனத்தொடர்ந்து வருவது முற்றுமோனைத் தொடை நயம் தோன்ற நின்றமை அறிக. நாதம் - கடலலை ஓசை. அலவன் - நண்டு. அலவ என விளிவேற்றுமையால் ஈற்று னகரம் குறைந்தது. ஒன்றில் கருத்து வைத்தாரொருவர்க்குக் காண்பனவெல்லாம், தாம் கொண்டதே தோன்றுவது மனவியல்பு மககளையோ பிறவற்றையோ கண்ட நண்டு, கணடவுடன் ஓடி, தன் வளைக்குள் மறைவது இயற்கை. அம்முறையில் நளன் கடற்கரை போந்தபோது நண்டு தற்செயலாக ஓடி ஒளிக்க, அதைக் கண்டு தன்னிலையை அதனோடு கழறினான் என்க. (உக)

## நளன், கருங்குவளை முதலியவற்றோடு கூறுதல்

கூடு. பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவும்
கானலே வேலைக் கழிக்குருகே—யானுடைய
மின்னிமைக்கும் பூணாளவ் வீங்கிருள்வாய் ஆங்குணர்ந்தால்
என்னினைக்கும் சொலவீர் எனக்கு.

(இ - ள்.) (நளனானவன்) பானலே - கருங்குவளைகளே !, பசும் தென்றல் வந்து உலவும் சோலை கானலே - குளிர்ந்த தென்றற் காற்று வந்தசைகின்ற சோலைகளையுடைய கடற்கரையே !, வேலை கழிகுருகே - கடற்கரையை அடுத்த உப்பங்கழிகளில் வாழும் நாரையே!, யான உடைய மின் இமைக்கும் பூணாள் - நான் (மணந்து என்) மனையாளாம் உரிமை பூண்ட ஒளியெறிக்கும் அணிகளணிந்த தமயநதியானவள், ஆங்கு அவவீங்கு இருள்வாய் உணர்ந்தால் - அக்கொடுங் காட்டில அந்நள்ளிருட்

போதில் விழித்தெழுந்த காலை, என் நினைக்கும் எனக்கு சொல்வீர் - என்னைக் குறித்து என்ன நினைந்திருக்கமாட்டாள் நீவிர் எனக்கு அதைச் சொல்வீராக.

(க - ரை.) நளனானவன், 'குவளைகளே! கடற்கரையே! நாரையே! என் காதலியாகிய தமயந்தியானவள் அக்காட்டில் நான் விட்டுவந்தபோது விழித்து உணர்வு வந்ததும் என்னைப்பற்றி என்ன நினைந்திருப்பாள்? எனக்கு அதனைக் கூறுங்கள்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) பானல் - நீலோற்பலம் என்பர். அதன் மலராகக் கோடலுமாம் பசுந்தென்றல் - பசுமை+தென்றல். பசுமை: இளமையென்னும் பொருளது. [1]"உசசி மோந்தும் அப்பச்சிளங்குழவி" என்றவிடத்துப் பசுமை இளமை என்னும் பொருள் தருதலை ஓர்க. இளந்தென்றலாவது மென்மையாகத் தவழ்ந்து செல்லும் நறுங்காற்று. கானல் - கடற்கரை. 'கானல் வரி' என்னும் சிலப்பதிகாரத் தொடரில், கானல் இப்பொருட்டாதல் அறிக. குருகு - நாரை. தன்முன் காட்சியளிக்கின்ற கடற்கரைப் பொருள்களையும் பிறவற்றையும் முன்னிலைப்படுத்தித் தன் பிரிவாற்றாமையை அவைகளுடன் கழறி ஆற்றாமை கொள்கின்றான் நளன்.

'மின் இமைக்கும் பூணாள்' என்பது, தமயந்தி களங்கமற்ற உள்ளத்தாள் என்னும் குறிப்புணர நின்றது. என் நினைக்கும், என்ன தாழ்மையாகக் கருதுவாள் எனவும், இரண்டனுருபு தொக்க தொடராகக்கொண்டு என்னை நினைக்கும் என்று கொள்ளலுமாம். நினைக்கும் என்பது செய்யுமென் வினைமுற்று. ஈண்டுத் தமயந்திக்கு ஆதலால் பெண்பாலைக் குறித்தது.

> [2]"பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையில்
> செல்லா தாகும் செய்யுமென் முற்றே."

என்பது நன்னூல் விதியாகலான் இம்முற்று பலர்பாற் படர்க்கைபெயருக்கும் முன்னிலைப்பெயருக்கும் தன்மைப்பெயருக்கும் வாராதென்றமையால் மற்ற ஆண்பால், பெண்பால், ஒன்றன்பாற் படர்க்கைக்கு வருமென்பது உடன்பாடாகக் கொள்க. சொல்வீர்: முன்னிலைப்பன்மை ஏவல்முற்று. எனக்கு - என்னிடம் என்னும் பொருளது. ஈங்கு நான்கனுருபு ஏழனுருபுப் பொருளில் மயங்கி வந்தது. (உஉ)

1. திருவாரூர் நான்மணிமாலை, ௫.
2. நன்னூல், ௩௪௮.

நளன், கடலொடு கழறுதல்

௩௫௩. போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்றும் என்போல ஆர்கலியே! மாதை
இரவகற்றி வந்தாய்கொல் இன்று.

(இ - ள்.) (நளன் கடலை நோக்கி) ஆர்கலியே - மிக்க ஓசையையுடைய கடலே!, விழுந்து போவாய் புரண்டு வருவாய் - (நீ, எழுந்து) விழுகின்றாய் போகின்றாய் புரள்கின்றாய் (திரும்ப) வருகின்றாய், நாவாய் குழற இரங்கி நடுங்குறுவாய் - உன் நடுவிடமெங்கும் அசைய அலையலையாக இரைச்சலிட்டுக்கொண்டு ஓவென்றலறி இரைந்து அலைகின்றாய், (உன்மேல் கப்பல்கள் அலைய ஓவென்னும் ஒலியுடன் இரைந்து அசைகிறாய்) தீ வாய் அரவு அகற்றும் என்போல - நெருப்பிடத்து அகப்பட்டுக்கிடந்த பாம்பை அதனின்றும் விலக்கியெடுத்துக் காப்பாற்றின என்னைப் போல, மாதை இரவு அகற்றி இன்று வந்தாய் கொல் - உன் மனைவியை இரவு நேரத்தில் தன்னந்தனியாக விட்டுவிட்டு இன்றைக்கு (நீயும் இங்கு) வந்தாயோ? (என்னைப்போல் அங்குமிங்கும் செல்கின்றாய்; புரள்கின்றாய்; கதறுகின்றாய்; நாவும் வாயும் குழற நடுங்குகின்றாய்; பாம்பு கடித்ததால் என் நிறம் கருமையாக மாறி இருப்பதுபோல உன்னிறமும் கருமை நிறமாக இருக்கின்றதே? என்றபடி.)

(க - ரு.) நளன் கடலைநோக்கி, 'கடலே, போவாய், வருவாய், புரண்டு விழுந்திரங்குவாய்; ஆதலால் நீயும் என்னைப்போல உன் மனைவியை நள்ளிரவில் பிரிந்து இன்று இங்கு வந்தாயோ கூறுக?' என்றான் என்பதாம்.

(வி - ரை.) நளன் கடலை நோக்கிக் கூறுவதாக அமைத்துள்ள தொடரில் போவாய் முதலிய சொற்கள், இருபொருள் நயந்தோன்ற நின்றமை தெளிக. நாவாய் - மரக்கலம். நாவும் வாயும் என்று உம்மைத் தொகையாகக் கோடலுமாம். நடுங்குறுதல்: ஒருசொல், அழுக்காறு என்பதுபோல. நடுங்குறுதல், கடலுக்கு அசைதல், நளனுக்கு நடுக்கங்கொள்ளுதல். தீவாய் அரவகற்றும் என்போல என்பதில் உருவுவமமாக நளன் பாம்புக் கடியால் அடைந்த கருநிறத்தைக் குறித்தது. கடல் கரிய நிறமுடையதாகலான் என்க. கடல் இயற்கையாகப் போவதும் வருவதும் அலைகள் இரைந்து ஒலித்தலும் உடையது. இங்கே இரக்கமிகுதியால் தன்னைப்போலவே இருப்பதாக நளன் கருதி,

'மாதை இரவகற்றி வந்தாய் கொல்' என்று வினவுகின்றான். இவ்வாறே தன்னிலையைத் தான் காணும் பொருள்களிடத்துக் கேட்டுத் தன் ஆற்றாமையை வெளிப்படுத்தல் அவலமனநிலை கொண்டாரின் இயற்கையாதலால் இவ்வாறு வினவினான் என்க. இவ்வாறே இறைவன்பால் ஆரா அயரா அன்புகொண்ட காதலி யொருத்தி, தன் கண்முன் காட்சியளிக்கும் கடலை நோக்கித் தனக்கு இரக்கங்கொண்டு தன்னைப்போல் உறங்காது இரவு முழுதும் விழித்துக்கொண்டு இருப்பதாகக் கழறுவதும் இதனோ டொத்த கருத்தாக அமைந்திருத்தலின் அதனையும் ஈண்டுக் காட்டுதும்.

> [1]" ........................அயர்வேற்கிரங்கி
> சூழ்ந்து கிடந்த கரைமேல் திரையெனும் கையெறிந்து
> வீழ்ந்து கிடந்தல றித்துயி லாதிவ் விரிகடலே.'

என்பது அது. தான் கடலைக் கண்டபோது, தன்னோடொத்த தன்மையாக இருந்தது அற்றைநாளேயாதலான் 'இன்று' என்றான் என்க. (உகூ)

## நளன், அயோத்தி நகரை அடைதல்

௩௫௭. முன்னீர் மடவார் முறுவல் திரள்குவிப்ப
நன்னீர் அயோத்தி நகரடைந்தான்—பொன்னீர்
முருகுடைக்கும் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கும் நன்னாட் டரசு.

(இ - ள்.) பொன்னீர் முருகு உடைக்கும் தாமரையின் மொய்ம் மலரை - பொன்னின் தன்மையான அழகையும் தன் சிறப்பால் தோற்கச் செய்கின்ற தாமரையின் மிக்க மலர்களை, தும்பி - வண்டுகளானவை, அருகு உடைக்கும் நல் நாட்டு அரசு - அருகிற் சென்று அதன் இதழ்களை விரிக்கின்ற நீர்வளம் செறிந்த நிடத நாட்டு வேந்தனான நளன், முன்னீர் மடவார் முறுவல் திரள் குவிப்ப - கடலானது பெண்களின் பற்கள் போன்ற முத்துக் கூட்டங்களை அலைகளால் ஒதுக்கிக் குவிக்கின்ற, நன்னீர் அயோத்தி நகர் அடைந்தான் - நல்லியல்பு மிக்க அயோத்தி நகரில் சென்று சேர்ந்தான்.

(க - து.) நளன் கடற்கரை வழியாகச் சென்று நல்லியல்பு பொருந்திய மக்கள் வாழுகின்ற அயோத்தி மா நகரைச் சென்றடைந்தான் என்பதாம்.

---

1. திருவாரூர்மும். ௩௦.

(வி - ரை.) முன்+நீர் முன்பே உள்ள நீர். பழங்கால முதற்கொண்ட இந்நீர் இருத்தலின், முன்னீ ரென்றார் முந்நீர் என்றும் வழங்குவர். இதற்கு மூன்று தன்மையான குணமுடைய தெனப் பொருளுரைப்பர்; அவை, காத்தல் படைத்தல் அழித்தல் என்பன. பலவகைப் பொருள்களும் தன்னிடம் கொண்டு மக்கள் முதலிய எல்லாவுயிர்களையும் காப்பதும், எல்லாவகை உயிர்களையும் தன்னகத்துக் கொண்டுள்ளமையால் படைத்தலும், பள்ளத்தை மேடாகவும் மேட்டைப் பள்ளமாகவும் ஆக்கி அவ் விடங்களிலுள்ளவைகளை யெல்லாம் அடங்கப் போககுதலின், அழித்தலுமாம். முந்நீர் என்பதும் முன்னீர் என்பதும் பண்புத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்க் காரணப் பெயராயிற்று. முறுவல் - பல். இளமடவார் பற்கள் வெண்மையும் ஒளியும் உடைமையால் முத்துக்கட்கு உவமஆகு பெயராக்கி, ஈண்டு 'முறுவல்திரள்' என்றார். இவ்வாறே ஆகு பெயராகக்கொண்டு திருஞானசம்பந்தர் தேவாரத்து அருளி யிருப்பதும் ஈண்டு ஒப்ப நோக்கிப் படித்து மகிழற்பாலதாகலின் ஈண்டுக் குறிப்பாம்.

[1]"எண்ணார் முத்தம் ஈன்று மரகதம் போற்காய்த்து
கண்ணார் கமுகு பவளம் பழுக்கும் கலிக்காழி."

என்பதில் கமுகின் வெண்ணிறப் பூவை முத்தென்றும், அதன் பழத்தைப் பவளமென்றும் அருளுதல் காண்க. குவித்தல் - கடல் தன் அலைகளினுல் முத்துக்களை ஒதுக்கிக் கொணர்ந்து கரைகளில் நிரப்புதல் இங்ஙகை அயோத்தி நகருக்குரிய கடலின் சிறப்புக் கூறியவாறும். நல்+நீர் - நல்ல நீரையுடைய என்று பொருள் கூறலுமாம. அதினும் நன்னீர் - நல்ல பண்பு; அதையுடைய மககட்குக் குணவாகு பெயராகக் கொண்டு பொருள் கூறப் பட்டது. மககளாவார் நற்குண நற்செயல் உடையராக வாழ்தல் வேண்டும்; அவ்வாறு வாழ்வதே ஒரு நாட்டுக்குச் சிறப்புடைமை யாகும். வள்ளுவர் நாட்டுக்கு இலக்கணங் கூறுங்கால்,

[2]"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு."

என்றார். எனவே, அயோத்தி அத்தகைய சிறப்புடையது. ஆகவே, நளனைக் கார்க்கோடகன் அங்கே சென்று இருக்க எனப் பணித்ததும், அவ்வாறே நளன் சென்றதும் நல்லாரைச சார்ந் தொழுகல் நன்றென்ற தன்மையான் என்க. முருகு: அழகு இளமை மணம் தேன் முதலிய பல பொருள் குறிக்கும் தூய தமிழ்ச் சொல். இதன்கண் முதலில் மெல்லெழுத்தும் இடையில்

1. திருஞான. தேவாரம், க0உ: ச. 2. திருக்குறள், எங்க.

இடையெழுத்தும் இறுதியில் வல்லெழுத்தும் அவைகள் மூன்றி னும் உகர உயிரும் சேர்ந்து மென்மையில் தோன்றி வன்மையில் முடிவதால் என்றுங் குன்றா இளமையும் அழகும் மணமும் இனிமையும் மிக்க இறைவனை 'முருகு' என்ற பெயரால் அமைத்து வழிபட்டனர் நம் பண்டைத் தமிழ்ச் சான்றோர். அம் முருகு என்னும் சொல்லை அழகென்ற பொருளில் ஈண் டமைத்தார் புகழேந்திய இப்புகழேந்தியார். தும்பி மலரை அருகுடைத்தல் - வண்டுகளானவை தேனைப்பருகுதற்குத் தம் கால்களால் அரும்பை நெகிழ்த்து விரித்தல். நளனுடைய நிடத நாட்டு வளங் கூறியவாறு. (உ௭)

## நளன், இருதுபன்னனிடம் போய்த் தன்னை அறிமுகப் படுத்தல்

௩௫அ. மான்தேர்த் தொழிற்கும் மடைத்தொழிற்கும் மிக்கோனென்
றூன்தேய்க்கும் வேலான் உயர்நறவத்—தேன்தோய்க்கும்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமின் என்றுரைத்தான்
தேர்வேந்தன் வாகுகனாய்ச் சென்று

(இ - ள்) தேர்வேந்தன் வாகுகன் ஆய் சென்று - தேரூரும் மன்னனாகிய நளன் வாகுகனென்னும் பெயருடையவனாகப் போய் (அரசன் ஏவலாளரிடம்), ஊன் தேய்க்கும் வேலான் உயர் நறவம் தேன் தோய்க்கும் தார் வேந்தற்கு - பகைவர் உடலைக் குத்தி அழிக்கின்ற வேற்படை தாங்கியவனாகிய நறு மணமுள்ள தேன் பொருந்திய மலர் மாலையணிந்த உம் இருது பன்ன வேந்தனுக்கு, மான் தேர்த் தொழிற்கும் மடை தொழிற் கும் மிக்கோன் என்று - குதிரைகள் பூட்டிய தேரோட்டுகின்ற தொழில் வன்மையினும், சமையல் தொழில் வன்மையினும் சிறந்தவனென்று, என் வரவு உரைமின் என்று உரைத்தான் - என் வருகையைச் சொல்லுமினென்று (நளன்) கூறினான்.

(க - நு.) நளன் வாகுகன் என்னும் பெயருடையவனாக அயோத்தி நகருக்குச் சென்று, அங்கு அரசன் ஏவலரைக் கண்டு, 'நான் தேரோட்டவும் மடைத் தொழில் செய்யவும் வல்லேன் என்று நும் அரசற்கு அறிவிப்பீர்' என்றான் என்பதாம்.

(வி - ரை.) மான்-குதிரை. மடைத்தொழில்-உணவமைக் கும் தொழில். ஊன் - ஈண்டு உடலை உணர்த்திற்று

[1]" ஊனடைந்த உடம்பின் பிறவி.'

என்றார், சேக்கிழாரும்.

1. பெரியபுராணம், உ.

தோய்க்கும்: தோயும். தன்வினை; ஈண்டுப்பிறவினை வாய் பாட்டாற் கூறப்பட்டது.

இருதுபன்னன் வெற்றிச சிறப்பும், தறுகண்மையும் வேலின் மேல் வைத்துக் கூறப்பட்டது நறவம் - மணம். மலர் மாலைக்கு அடைமொழி. தேரோட்டும் தொழிலில் வல்லவனாக நளமன்னன் வாகுகனென்னும் பெயருடன் சென்று தன்வரவு கூறினாகை லான், 'தேர் வேந்தன்' என்றார். (உ௫)

## நளன், இருதுபன்னன் அழைக்கச் சென்று அவனைக் காணுதல்

ஙடு௫க. அம்மொழியைத் தூதர் அரசற் கறிவிக்கச்
செம்மொழியாத் தேர்ந்ததனைச் சிந்தித்தே—
இம்மொழிக்குத்
தக்கானை இங்கே தருமின் எனஉரைப்ப
மிக்கானும் சென்றான் விரைந்து.

(இ - ள்.) அம் மொழியை தூதர் அரசற்கு அறிவிக்க - (இவ்வாறு நளன்) கூறியவற்றைச் சென்று தூதர்கள் இருது பன்ன மன்னனுக்கு அறிவிக்க, அதனை சிந்தித்து செம்மொழியா தேர்ந்து - அவன் அதனைக் கேட்டு எண்ணி உண்மை மொழி யென்று தெளிந்து, இம் மொழிக்கு தக்கானை இங்கே தருமின் என உரைப்ப - நீர் கூறிய இச் சொற்களுக்கு ஏற்ற தகுதியுள்ள அவனை இங்கு அழைத்துக்கொண்டு வருக என்று சொல்ல, விரைந்து மிக்கானும் சென்றான் - (தூதுவர் வந்து அழைக்க) மேன்மை மிக்கவனான நளனும் விரைந்து (அவனிடம் உள்ளே) போனான்.

(க - ரு.) நளன் கூறியவற்றைத் தூதர்கள் தம் அரச னுக்குச் சொன்னார்கள்; அதைக்கேட்ட மன்னவன் அதனை நன்கு எண்ணித் தெளிந்து 'நீர் கூறியவனை அழைத்து வருக' என்றான் அவர்கள் அழைக்க நளன் விரைந்து இருதுபன்னனிடம் சென்றான் என்பதாம்

(வி - ரை) செம்மொழி - உண்மை மொழி; அல்லது உண்மையான மொழியென்பதைத் தான் குறிப்பறிதலில் வல்ல னாதலால் அச் சொற்களை நன்கு ஆராய்ந்து தெளிந்தான் என்க. ஒருவன் தன்னைப்பற்றி வல்லவன் என்று தானாகக் கூறுவதானால்

ஆற்றல் படைத்தவனாகவே இருத்தல் கூடுமெனக் கருதினான். அதனால் அவன் கூறியவாறு அவ்வவ் வேலைகளில் தேர்ச்சியுடையவனே யென்று கொண்டு 'தக்கானை இங்கே தருமின்' என்றான் என்க. தருமின்-அழையுங்கள் என்னும் பொருளது தருமின் என்பது முன்னிலை யேவற்பன்மை வினைமுற்று. மின்: ஏவற் பன்மை விகுதி உரைக்க என்பது காரியப்பொருட்டாக வந்த இறந்தகாலச செயவெனெச்சம். நளன் தேர்த்தொழில் முதலிய யாவினுஞ் சிறந்தானாகலான் 'மிக்கான்' என்றான்: குறிப்பு வினைப் பெயர், ஈண்டு இறந்தகாலங் காட்டிற்று. (உசு)

இருதுபன்னன், நளன் பெயர் முதலியவற்றை வினவல்

ரு௬0. பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தான்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன்—ஐயாநீ
எத்தொழிலின் மிக்கனைகோல் யாதுன் பெயரென்றன்
கைத்தொழிலின் மிக்கானைக் கண்டு.

(இ - ள்.) தேர் வேந்தன் கைத் தொழிலின் மிக்கானை கண்டு - தேரையுடைய மன்னனாகிய இருதுபன்னன் வேலைகளில் கைதேர்ந்து உயர்ந்தவனான நளமன்னனை நோக்கி, பொய்யடையா சிந்தை புரவலனை நோக்கி - உண்மையுடைய மனத்தானாகிய நளன் தன்மையை அறிந்து, செய்ய முகம் மலர்ந்து - அழகிய முகம் மகிழ்ச்சியால் பொலிவுற்று, ஐயா - ஐயனே!, நீ எத்தொழிலின் மிக்கனை உன் பெயர் யாது என்றான் - நீ எத்தொழிலில் வல்லமையுடையை, உன் பெயர் என்னவென்று வினவினான்.

(க - து.) இருதுபன்னன் நளனை நோக்கி, அவன் சொல்லியனுப்பியன உண்மையென உணர்ந்து, முகமலர்ச்சியுற்று, 'ஐயனே! நீ எந்தத் தொழிலில் வல்லை; உன் பெயர் என்ன?' வென்று வினவினான் என்பதாம்.

(வி - ரை.) நளன் மெய்ம்மையையே கடமையாகக் கொண்டு நடப்பவனாதலான், 'பொய்யடையாச சிந்தைப் புரவலன்' என்றார். புரவலன், புரத்தலில் வல்லவன்; பாதுகாத்தலிற் சிறந்தவன் என்பது பொருளாம். செய்ய - செம்மையுடைய, செம்மை ஈண்டு அழகென்னும் பொருளில் வந்தது. ஒருவர் ஒருவரைப் புதிதாகக் காணுங்கால் காணப்படுவோர் நல்லியல்புடையராக இருப்பின், பார்ப்பவர்க்கு அவரிடத்து ஒரு கவர்ச்சிநிலை ஏற்பட்டு அவர்பால் அன்பை உண்டாக்கும்; அனபு உண்டாயபோழ்து மகிழ்ச்சி மிகும்; அம் மகிழ்ச்சியின் அறிகுறி முகத்தோற்றப் பொலிவு.

இது உள நூலார் கண்ட இயல்பும், இயற்கையுமாகும். இதனைப் பொய்யில் புலவர்,

> [1]‘முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினும்
> காயினும் தான்முந் துறும்.’

என்றார். முகத்தைப் போன்று அறிவுடைப் பொருள் வேறொன் றுளதோ எனின் இல்லை; ஏனென்றால்? ஒருவன் மகிழ்ந்தாலும் சினந்தாலும் தன் நிலையை முன் காட்டி நிற்குந் தன்மையினால் என்பது பொருள். எனவே, நளனைக் கண்ட இருதுபன்னன் முகம், நளன் தோற்றப்பொலிவால் மகிழ, மலர்ச்சிகொண்ட தென்பாராய்ச் ‘செய்ய முகம் மலர்ந்து’ என்றார்.

ஒருவரை மற்றொருவர் வினவுங்கால் ஊரும் பேரும் பிறவும் வினவுவது உலகியல் வழக்கமும் இயல்புமாகும். அம் முறையில் நளன் ‘தேர்த் தொழிலில் வல்லேன்; சமையற் றொழிலிலும் சிறந்தேனென்று முன்னரே கூறித் தூது விடுத்தானாகலான், முதலில் ‘ஐயா நீ எத்தொழிலில் மிக்கனை’யென்றும், பின் பெயர் யாதென்றும் வினவினான் என்க. தேரோட்டுந் தொழிலினும் சமையல் தொழிலினும் கைதேர்ந்த சிறப்புடையவனாகலான் ‘கைத் தொழிலின் மிக்கான்’ என்றார். கைத் தொழிலிற் சிறந் தாரைத் திருவள்ளுவர்,

> [2]‘இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
> கைசெய்தூண் மாலை யவர்.’

எனப் பாராட்டுவர். (உ.எ)

### இருதுபன்னன் வினவியதற்கு நளன் மறுமொழி கூறல்

ருகூக. அன்னம் மிதிப்ப அலர்வழியும் தேறல்போய்ச்
செங்நெல் விளைக்கும் திருநாடர்—மன்ன
மடைத்தொழிலும் தேர்த்தொழிலும் வல்லேன்யான்
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து. [என்றான்

(இ - ள்.) கொடை தொழிலின் மிக்கான் - ஈகையிற் சிறந்தவனாகிய நளமன்னன், அன்னம் மிதிப்ப அலர் வழியும் தேறல் போய் - அன்னப்பறவைகள் மிதித்தலினால் தாமரைப் பூக்களிலிருந்து பெருக்கெடுத்து ஓடுகின்ற தேன் (நீருடன் கலந்து) சென்று, செங்நெல் விளைக்கும் திருநாடர் மனன - செந்நெற்

1, 2. திருக்குறள், எ0எ; க0ருரு.

பயிர்களை வளர்க்கின்ற அழகிய நீர்வளமிக்க கோசலநாட்டுக்கு வேந்தே!, மடைத்தொழிலும் தேர்த்தொழிலும் வல்லென் யான் என்றான் குறித்து - சமையல் வேலையினும் தேரோட்டுந் தொழிலினும் நான் வல்லவன் ஆவேன் என்று அவைகளைக் குறிப்பிட்டுரைத்தான்.

(க - ரு.) 'கோசல நாட்டுக்கு வேந்தே! நான் சமையல் தொழிலிலும் தேரோட்டுகின்ற தொழிலிலும் வல்லவன்' என்று நளன் அவைகளைக் குறித்துக் கூறினான் என்பதாம்.

(வி - ரை.) அன்னம் - அன்னப்பறவை. அலர் - மலர், நீர்ப் பூக்களைக் குறிக்குமாயினும் ஈண்டு வற்றாத நீரில் வளத்துடன் மலரும் பூவாகிய தாமரைப் பூவென்று பொருள் கூறப்பட்டது. அதனால் அந்நாட்டு நீர்வளத்தைக் குறித்தவாறாம். மலரிலிருந்து ஒழுகிய தேனானது பெருகி நீரோடு கலந்து செந்நெற் பயிர்களை வளர்க்கின்ற நாடு என்றமையால், மலரிலுள்ள தேன் தனக்குப் பயன் கருதாது பிறபொருளான நெற்பயிர்களுக்குப் பயனாக இருப்பதுபோலத் தன்னலங் கருதாது பிறர்நலமே கருதுகின்றவன் என்னும் குறிப்பிற்றாக நளன், 'செந்நெல் விளைக்கும் திருநாடர் மன்ன' என்றானென்று கொள்க. குறித்து - சுட்டிக் கூறி என்னும் பொருளது. (உஅ)

### தமயந்தி, நளனைத் தேடற்கு ஆளனுப்பல்

ருகூஉ. என்னை இருங்கானில் நீத்த இகல்வேந்தன்
தன்னைநீ நாடுகெனத் தண்கோதை—மின்னுப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
உரைபகர்வ தானாள் உணர்ந்து.

(இ - ள்.) தண்கோதை - குளிர்ச்சி பொருந்திய கூந்தலையுடைய தமயந்தியானவள், மின்னுபுரை கதிர்வேல் வேந்தன் புரோகிதனுக்கு - மின்போன்று ஒளிவிட்டெறிக்கின்ற வேற்படை தாங்கிய (தன் தந்தையாகிய) வீமமன்னனுடைய புரோகிதனுக்கு, என்னை இருங்கானில் நீத்த இகல்வேந்தன் - என்னைப் பெரிய கானகத்தில் விட்டுப்பிரிந்த போர்மன்னனாகிய நளமன்னனை, நீ நாடுக என - நீ தேடிக்கொணர்ந்து வாவென்று, உணர்ந்து இந்த உரை பகர்வது ஆனாள் - (அவன் தேடற்குரிய ஆற்றல் உள்ள

வன் என்பதை) நன்கு தெளிந்து இவ்வாறாகக் கூறத் தொடங்கினாள்.

(க - து.) தமயந்தியானவள் தங்கள் புரோகிதன் ஒருவனை நோக்கி, அவன் தேடி அறியத் தக்கவன் என்பதை உணர்ந்து, 'நீ என்னை வனத்தில் தனியே விட்டுச் சென்ற மன்னனைத் தேடித் தெரிந்து வருக'வென்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) இரு - பெருமை. இகல் - பகை. பகைக்குரிய போரை உணர்த்திற்று, ஆகுபெயர். தன் : அசைச்சொல். நாடுக என்னும் வியங்கோள்முற்று, இறுதி அகரம் விகாரத்தாற்றொக்கது. மின், மின்னு என உகரசாரியை பெற்றது; நெல்லு புல்லு கொள்ளு என்பனபோல. இந்த உரைபகர்வதானாள் என்பது, மேல் அடுத்த செய்யுளில் வருகின்ற தமயந்தி கூறுகின்றமொழிகளைக் குறித்து நின்றது. (உகூ)

தமயந்தி, நளனைக் கண்டு தெளிதற்குப்
புரோகிதனுக்கு யோசனை கூறல்

௩௯௩. காரிருளிற் பாழ்மண்ட பத்தேதன் காதலியைச்
சோர்துயிலில் நீத்தல் துணிவன்றே—தேர்வேந்தற்
கென்றுரைந்தால் நேர்நின் றெதிர்மாற்றம் தந்தாரைச்
சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து.

(இ - ள்.) கார்இருளில் பாழ்மண்டபத்தே - கரியநிறமுள்ள இருட்டில் (நள்ளிராப் பொழுதில) பாழடைந்த ஒரு மண்டபத்திடத்து, தன் காதலியை சோர்துயிலில் நீத்தல் தேர்வேந்தற்கு துணிவு அன்றே - தன் காதல் மனைவியை அயர்ந்த உறக்கத்தின் போது விட்டுவிட்டுச் செல்லுதல் தேரையுடைய மன்னனுக்கு ஒத்த செயலாகுமோ?, என்று அறைந்தால் - என்று நீ கூறினால் (அதைக் கேட்டவருள்), எதிர்மாற்றம் தந்தாரை - அதற்கு மறுமொழியாக உரைக்கின்றவர் எவராக இருப்பினும் அவரை, சென்று அறிந்துவா என்றாள் தேர்ந்து - நீ போய் அறிந்து கொண்டு வருகவென்று நன்கு உணர்ந்து கூறினாள்.

(க - து.) தமயந்தி புரோகிதனை நோக்கி, 'கொடிய இருட்டில் தன் மனையாளைப் பாழ் மண்டபத்தே அயர்ந்த தூக்கங்கொண்டிருக்கும்போது விட்டுவிட்டுச் செல்லுதல்

அரசர்களின் செயலாகுமோ என்று நீ கூறினால், அதைக் கேட்டு மறுமொழி கூறுகின்றவர் யாரோ? அவரை அறிந்துகொண்டு வருக' என்று கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) கருமை + இருள் = காரிருள் எனப் புணர்ந்தது; மிக்க இருட்டு என்னும் பொருளது. பாழ்மண்டபம் முள்ளும் கல்லும் செறிந்து ஆள நடமாட்டமற்ற மண்டபம். தமயந்தி புரோகிதனை நோக்கி 'மன்னனானவன் தன் மனையாளைக் கொடிய இருட்டில் பாழ்மண்டபத்தே தன்னந்தனியாக விட்டு விட்டுப் பிரிந்து செல்லுதல் இயற்கையாகுமோ?' என்று நீ கூறினால் அதற்கு எவரேனும் மறுமொழி கூறினால் அவர் எவராயிருப்பினும் அவர் தன்மையைக் கேட்டு அறிந்துவா என்று கூறினாளெனப் பொருள் கூட்டியுரைக்க. தேர்தல் - நன்கு தெளிதல். (௩௦)

புரோகிதன், நளனைத் தேடிச் சென்று
அயோத்தி நகர் அடைதல்

௩௩௪. மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடும் கானகமும் நாடினான்—மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
அடைந்தான் அயோத்தி நகர்.

(இ - ள்.) (புரோகிதனானவன்) மின் ஆடும் மால்வரையும் - மின்னல் ஒளி யெறிகின்ற மேகங்கள் தவழ்கின்ற பெரிய மலைகளிலும், வேலையும் - கடற்கரைப் பகுதிகளிலும், வேலை சூழ்நல் நாடும் - கடல்சூழ்ந்த பல்வகை நல்ல நாட்டுப்புறங்களிலும், கானகமும் - காடுகளிலும், நாடினான் - பார்த்துக்கொண்டே சென்று, மன்னுகடம் தாழ களியானை காவலனைத் தேடி - நிலைபெற்ற மதநீர் ஒழுகுகின்ற மயக்கத்தையுடைய ஆண்யானைகளையுடைய நளமன்னனைத் தேடி, அயோத்திநகர் அடைந்தான் - அயோத்தி நகரத்துக்குப் போய்ச் சேர்ந்தான்.

(க - ரு.) நளனைப் புரோகிதனானவன் மலைகளிலும் கடற்கரை ஓரங்களிலும் காடுகளிலும் தேடிக்கொண்டே சென்று இறுதியில் அயோத்தி நகருக்குப் போய்ச் சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) மால்வரை யென்றமையால் குறிஞ்சியும், வேலை சூழ் நன்னாடு என்றமையால் நெய்தலும், கானகமும் என்றமை

யால் முல்லையும், அயோத்திநகர் என்றமையால் மருதமும் என நால்வகை நிலமும் பெறப்படும். புரோகிதன் நளனைத் தேடாத இடமில்லையென்பது குறிப்பு. உலகமே நால்வகை நிலத்துள் அடங்கும். அதனால், நளனை உலகெங்கும் தேடினனெனக் கொள்க. எல்லா நிலங்களையும் படிப்படியாகக் கூறிய ஆசிரியர், 'அடைந்தான் அயோத்திநகர்' என்றமையால் அதில் அரசன் இருக்கின்றான் என்னும் குறிப்பை உணர்த்தியவாறும். (௩க)

புரோகிதன், 'மனைவியைக் காட்டில் விட்டுச்செல்லல் அரசர்கட்குத் தகுமோ?' எனல்

௩௯௫. கானகத்துக் காதலியைக் காரிருளில் கைவிட்டுப்
போனதூஉம் வேந்தற்குப் போதுமோ—தானென்று
சாற்றினான் அந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தான் எதிர்.

(இ - ள்.) (புரோகிதனானவன் அவ்வயோத்தியில்) கானகத்து காதலியை காரிருளில் கைவிட்டு - காட்டினிடத்தே நள்ளிரவில் தன் மனைவியைத் தன்னந்தனியாக விட்டுவிட்டு, போனதூஉம் வேந்தற்கு போதுமோ என்று சாற்றினான் - பிரிந்து சென்ற நிலையும் அரசனுக்குப் பொருத்தமாமோ என்று கூறினான், அந்த உரை தார்வேந்தன் தன் செவியில் ஏற்றினான் - நளமன்னன் அந்தச் சொற்களைத் தன் காதினுள் ஏறுகக்கொண்டு, எதிர் வந்தான் - (அவனுக்கு) முன்னிலையில் வந்து சேர்ந்தான்.

(க - து.) புரோகிதனானவன் அங்கே, 'தன் மனைவியைக் கரியஇருட்டில் தனியே விட்டுவிட்டுச் செல்லுதல் அரசர்கட்குத் தக்கதாகுமோ?' என்றான். அதை நளன் தன் காதில் கேட்டு, உடனே புரோகிதனுக்கு முன்பாக வந்தான் என்பதாம்.

(வி - ரை.) கானகத்து என்றமையால் ஆள்வழக்கற்ற வெப்பம் பொருந்தியதென்பது தோன்ற நின்றது. காரிருள் - கரிய இருட்டு. வெளிச்சமே இல்லாத நேரம் என்னும் தன்மையைச் சுட்டிற்று. காதலி என்பது அவள் தன் பேரன்புடைமை தோன்ற நின்றது. காடு, அதினும் இருள், அதினும் பேரன்புடையாள். இவையனைவையும் கருதாது சென்றது கொடுமையென்பானாய் 'வேந்தற்குப் போதுமோ' என்றான். அச்சொல் காதில் கேட்பது நளனுக்குப் பொருத்தமாகவில்லை. அச்சொல் சுடுவது

போல் இருந்ததால் கேட்டான் என்னாது, 'ஏற்றினான்' என்றார். ஏற்றுதல் - தைத்தல். தைத்தல் எளிதில் செல்லாத தொன்றை வேறொரு கருவிகொண்டு அடித்து உட்செலுத்துதல் என்னும் பொருளது. நளன் தன்மைக்கு அவன் மனசசான்றுக்குப் பொருத்தமற்ற செயலாதலால் இச் சொல்லால் கூறினார்.

அயோத்தி மன்னன் தசரதன்பால் அவன் மனையாள் கைகேயி வேண்டிய வரங்கள் இரண்டு: ஒன்று, தன் மகன் பரதனுக்கு முடிசூட்ட வேண்டும் என்பது; மற்றொன்று இராமன் நாடு துறந்து காடுநோக்கிச் செல்லவேண்டுமென்பது. இச் சொல்லைக் கேட்டபோது அவன் காதில் அச் சொல் விழுந்த நிலையைக் கம்பர்,

[1]'' இந்த நெடுஞ்சொல் அவ்வேழை கூறு முன்னே
வெந்த கொடும்புணில் வேல்நுழைந்த தொப்ப.'

என்றார். வெந்தபுண், அது தன்புறத்திகொண்டே ஆறாமல் இருக்கின்றது. அதில் வேலெடுத்துக் குத்தி அதுவும் உள்ளே பதிந்து செல்லுமானால் அப்புண்ணுடையார்க்கு எவ்வளவு தாங்க வொண்ணாத் துன்பமாக இருக்கும். அதுபோன்றிருந்ததாம் அம் மன்னனுக்கு; இங்கும் நளமன்னனுக்குப் புரோகிதன் 'கானகத்து .......போதுமோ' என்றான். தான் தன் காதலியை விட்டுப் பிரிந்துவந்த செயலையே எண்ணி யெண்ணி ஏங்கிக் கொண்டிருந்த நிலையில் இவ்வெஞ்சொற் கேட்டது, காதில் ஈயத்தை உருக்கிவிட்டதுபோல் துன்பமாக இருந்ததால் அதைக் குறிக்க 'தன் செவியில் ஏற்றினான்' என்றார். பின்பு அவ்வுரைக்கு மறுமொழி கூறி அதனை மறக்க எண்ணியவனாய் அவனை நோக்கி வந்தான் என்பாராய், 'வந்தான் எதிர்' என்றார். ஏற்றினான் என்பது முற்றெச்சம் இறந்தகால வினையாலணையும் பெயர்களாகச் சாற்றினான், ஏற்றினான் என்பன வந்தன. எதிர் - முன்னால் என்னும் பொருளது. முதனிலைத் தொழிற் பெயர். தான் என்பது அசைநிலை. (௩௨)

### நளன், புரோகிதனிடம் விடை கூறல்

௩௬௬. ஒண்டொடி தன்னை உறக்கத்தே நீத்ததூஉம்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டரளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறேல் நீ.

---

1. கம்பராமா. அயோத்தி, கைகேசிசூழ்: ௨௦.

(இ - ள்.) (வாகுகனாகிய நளன் புரோகிதனைப் பார்த்து) தண்தரள பூதாம வெண்குடையான் - குளிர்ச்சி பொருந்திய முத்துக்களால் கோக்கப்பட்ட மாலைகளைக்கொண்ட வெண்கொற்றக் குடையையுடைய வீம மன்னனின், பொன்மகளை - திருமகள் போன்ற புதல்வியாகிய தமயந்தியை, வெவ்வனத்தே நீத்தான் என்று ஐ உறேல் நீ - கொடிய காட்டிடத்தே விட்டுவிட்டுச்சென்றானென்று கருதி ஐயப்படாதே நீ, ஒண்தொடியை உறக்கத்தே நீத்ததுவும் - ஒளிபொருந்திய வளையலையுடைய தமயந்தியை அவள் தூங்குங்கால் விட்டுப் பிரிந்ததும், பண்டை விதியின் பயனே காண் - முன்செய்த ஊழ்வினையின் பயனேயாகும் என்பதை அறிவாயாக.

(க - து.) வாகுகனாகிய நளன் புரோகிதனை நோக்கி, 'தமயந்தியை அவள் உறங்குங்கால் அவள் கணவன் விட்டுப் பிரிந்தது முற்காலத்துச் செய்த ஊழ்வினையே; நீ அவளைக் கொடிய காட்டில் விட்டுச் சென்றானேயென்று ஐயப்படாதே' என்றான் என்பதாம்.

(வி - ரை.) ஒண்தொடி-ஒளிபொருந்திய வளையலையுடையாள் எனப்பொருள் கொள்க: பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை. பண்டை விதியின் பயன் என்பது,

"[1]பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்.'

என்பது தமிழ்மறை. ஒருவன் செய்த நல்வினையோ தீவினையோ அவனைத் தவறாது சென்று அதன் பயனை ஊட்டுமென்பது ஆன்றோர் கொள்கை. அந்த முறையில் நளன் தன் மனையாளிடத்து வெறுப்பற்றவனாக இருந்தும் காரணமின்றித் தமயந்தியைக் காட்டில் தனியே உறக்கத்தின்போது விட்டுச் சென்றதற்குக் காரணம் என்ன கூறுவது? ஆகவே விதியென்றான்.

அயோத்தி அண்ணலாகிய இராமனைக் காடுசென்று 'ஏழிரண்டாண்டின் வா' என்று கைகேசி சொற்றகாலை, இராமன் காடு செல்லற்கு ஒருப்படாத அன்புடை இளவலாகிய இலக்குவன் சீற்றங்கொண்டு, 'பெண்ணுரைட்டம் ஒட்டேன் இப்பேருலகத்துள்' எனச் சினந்து வில்லெடுத்து நின்றான்; அதுகாலை இராமன் போந்து 'தம்பீ! இஃதென்ன உனக்குச சினம்; நம் தாயின் குற்றமா நம்மைக் காட்டுக்குப் போகசசொன்னது; தந்தையின் குற்றமா வரங்கொடுத்தது; விதியின் குற்ற'மென்று தேறுதல்

1. திருக்குள், ௩ ௧ ௧.

மொழிகூறி, அவன் சினத்தை மாற்றி ஆற்றினான். இலக்குவனும் சினமாறி அமைதியடைந்தான். அது:

"[1]நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை அற்றே
பதியின் பிழையன்று பரிந்து நமைப்புரந்தாள்
மதியின் பிழையன்று மகன்பிழை யன்றமைந்த
விதியின்பிழைநீ இதற்கென்னை வெகுண்டதென்றான்.'

இக் கருத்தொப்பவே நளன் வாகுகனாக மாறுகோலத்தோடிருந்தும் 'விதியால் நிகழ்ந்தது : நீ தமயந்தியை விட்டுப் பிரிந்ததைப் பற்றி ஐயமுறாதே' என்று புரோகிதனிடம் கூறினானெனக.

தாளம்பூ தாமம் - முத்தாலாகிய அழகு பொருந்திய மாலை. வெண்கொற்றக் குடையில் ஓரங்களில் முத்துச சரங்களைத் தொங்கவிடுவது வழக்கமாதலின், இவவாறு ஃமன் சிறப்புக்கு உயர்த்துக் கூறினார். (௯௯)

புரோகிதன் சென்றதும் தமயந்தி அவனை வினாதல்

௬௬௭. எங்கண் உறைந்தனைகொல் எத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தம் காவலனை—அங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீர்
அலைப்பட்ட கொங்கையாள் ஆங்கு.

(இ - ள்.) கண்ணீர் அலைப்பட்ட கொங்கையாள் - கண்களின் நீரானது அலைபோற் பெருக்கெடுத்தோடுகின்ற கொங்கைகளையுடையாளாகிய தமயந்தியானவள், (புரோகிதனாகிய சுவேதனைக் கண்டபோது), எங்கண் உறைந்தனை - நீ எவ்வெவ்விடத்தே தங்கியிருந்தாய், கங்கை வளநாட்டர் காவலனை - கங்கை நீர்வளம் பெருக்கும் நிடதநாட்டுக்குரிய மன்னனை, எத்திசைபோய் நாடினை - எந்தெந்தத் திக்குகளெல்லாஞ் சென்று போய்த் தேடிவந்தனை, அங்கு தலைப்பட்ட ஆறு உண்டோ சாற்று என்றாள் - அந்த இடங்களிலெல்லாம் என் நாயகா உனக்கு நேரே தென்பட்டதுண்டோ கூறுக என்று வினவினாள்.

(க - து) 'ஐய! நீ எங்கெங்குத் தங்கினை? எந்தெந்தத் திசைகளெல்லாஞ் சென்று எம் வேந்தனைத் தேடினை? அங்கே எங்கேனும் எம் கணவரைக் கண்டதுண்டோ சொல்லுக?' என வினவினாள் தமயந்தி என்பதாம்.

---

1. கம்பராமா. அயோத்தி. நகர்நீங்கு, ௧௯௯.

(வி - ரை.) எ + கண் = எங்கண்; வினாவடியாகப் பிறந்த இடப்பெயர். கங்கை வளநாடு - கங்கைநீர்வளம் பெருக்கும் நிடத நாடு கங்கையென்பது அதன் நீருக்காதலால் இடவாகு பெயர். காவலன் - காத்தற்றொழிலையுடையவன்: அரசன்.

[1]'ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூல்மறப்பர்
காவலன் காவான் எனின்.'

என்னும் வள்ளுவர் மறையில் காவலன் வேந்தன் என்பதை உணர்த்தல் அறிக. அங்கு: சேய்மைசுட்டு, அஃது அவன் தேடிய அவ்வவ்விடங்கட்கு ஆயிற்று தலைப்படுதல் - நேர்படல்: சந்தித்தல். [2]"தலைப்பட்டார் தீரத்துறந்தார்' என்னும் திருவள்ளுவத்தானும் உணர்க.

அன்புகொண்டார் துன்பமோ இன்பமோ கொண்டவிடத்து ஒருவருக்கொருவர் தம் உள்ளக்கசிவால் துன்பக்கண்ணீரும் இன்பககண்ணீரும் உகுப்பது இயற்கை. அவ்வியற்கையினால் தமயந்தி தன் காதற்கணவன் தன்னை விட்டுப் பிரிந்துசென்ற நிலையையும், தான் அவனைவிட்டுப் பிரிந்து வாழ்கின்ற அவல நிலையையும் எண்ணியெண்ணிக் கண்களில் நீர்பெருக அழுது கொண்டே இருந்தாளாதலின், அவள் கண்கள் துன்பக் கண்ணீர் உகுத்தன; இதனை, 'கண்ணீர அலைப்பட்ட கொங்கையாள்' என்றார். கண்ணீர் அலைப்படலாவது, நீர்அலைபோல் பெருகி வழிதல். கொங்கைமுற்றத்துக்கண் நீர் பெருகியோடுதலை இவ்வாறு கூறினார். அன்புகொண்டவரின் துன்பத்தையோ இன்பத்தையோ கண்டவிடத்துக் கண்ணீர் வாருமென்பது நாம் கண்கூடாகக் கண்டுவரும் இயற்கையுமாகும். இதனை,

[3]'அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.'

என வள்ளுவரும்,

[4]'மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி.'

என்று பத்திச்சுவைநனி சொட்டச் சொட்டப் பரமனடி பேணி நின்ற மணிமொழிப் பெருமானும் அருள்கினறவாற்றால் அறியப் பெறும்.

---

1, 2, 3, திருக்குறள், ருகூ0; ௩௨௮; எக.
4. திருவாசகம், திருசதகம், க.

கோவலனைப் பிரிந்துறைந்தகாலைக் கண்ணகியாரும், அவனைச் சேர்ந்து வாழ்ந்தகாலை மாதவியாரும் முறையே பிரிவுத் துன்பத்தாலும் புணர்ச்சி இன்பத்தாலும் துன்பக் கண்ணீரும் இன்பக் கண்ணீரும் வடித்திருந்தனர் என்று ஆசிரியர் இளங்கோவடிகளார் ஆக்கியருளிய சிலப்பதிகாரச் செஞ்சொற் காப்பியத்தில் ஓர் அரிய உவமங்காட்டி உணர்த்துகின்றார். அது:

[1]"உள்ளக நறுந்தா துறைப்பமீ தழிந்து
கள்ளக நடுங்குங் கழுநீர் போல
கண்ணகி கருங்கணும் மாதவி செங்கணும்
உள்நிறை கரந்தகத் தொளித்துநீர் உகுத்தன.'

என்பதாகும். இதில் அவ்விருவர்தம் கண்களும் பிரிவுத்துன்பும், புணர்வுஇன்பும் கொள்ளலால் நெஞ்சங்கள் தாம் நிறையழிந்து துன்பும் இன்பும் கொண்டு கண்கள்நீர் பெருக்கின என்றருள்வதாலும் அவ்விருவர்தம் அன்புநிலையும் தெளியப்படும். இவ்வன்பின் திறப்பாடே தமயந்தி கொண்டதூஉ மென்க. (௩௪)

### புரோகிதன், தமயந்திக்கு விடை கூறுதல்

௩௬௮. வாக்கினான் மன்னவனை ஒப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கின் அவனல்லன்—பூக்கமழும்
கூந்தலாய் மற்றக் குலப்பாகன் என்றுரைத்தான்
ஏந்துநூல் மார்பன் எடுத்து.

(இ - ள்.) ஏந்து நூல் மார்பன் - பூணூலணிந்த மார்பையுடையவனாகிய புரோகிதன் (தமயந்தியை நோக்கி), பூ கமழும் கூந்தலாய் - மலர்மணம் கமழுகின்ற கூந்தலையுடைய தமயந்தி!, அ குலப்பாகன் - (நான், அயோத்தி மாநகரில் கண்ட) அவ்வுயர் குலத்தோன்றலாகிய தேரோட்டியொருவன், வாக்கினான் மன்னவனை ஒப்பான் - (அவன்) தன் மொழிகளினால் நளமன்னனையே ஒத்திருக்கின்றான், மறித்து ஒருகால் ஆக்கையே நோக்கின் அவன் அல்லன - மீட்டும் ஒருமுறை அவன் உடம்பை உற்றுப் பார்த்தால் அம்மன்னன் அல்லாதவனாக இருக்கின்றான், என்று எடுத்து உரைத்தான் - என்று விளக்கமாகக் கூறினான்.

(க - து.) புரோகிதனானவன் தமயந்தியை நோக்கி, 'பூக்குழலாய், நான் அயோத்தியில் ஒரு தேரோட்டியைக்

1. சிலப். ௫ : ௨௩௫-௮.

கண்டேன்; அவன் பேச்சு முறையினால் நம் நளமன்னன் போன்றே தோன்றுகின்றான்; ஆனால் உற்று நோக்கினால் அவன் உடல்நிலை அவனல்லன் என்று தோன்றுகின்றது' என்று கூறினான் என்பதாம்.

(வி - ரை.) வாக்கு - பேச்சுமுறை. தான் 'காதலியைக் காரிருளில்............வேந்தற்குப் போதுமோ' என்று தானாகச் சொற்றதற்கு வேறொரு தொடர்பில்லாதிருந்தும் தொடர்புடையான்போல் நேரில் வந்து 'ஒண்டொடி....... விதியின் பயனே காண்' என்று கூறினான். எனவே, வாக்கினான் மன்னவனென்று கூறினான். ஆனால் நளன் செந்நிறமுள்ள உடலமைப்பு வாய்ந்தவன். இவ்வாகுகன உடல்நிறம், கருமையாகவுள்ளது, ஆதலால், 'ஆக்கையே.........அவன் அல்லன்' என்றான். அவன்: சுட்டுப்பெயர். அல்லன்: எதிர்மறைக் குறிப்பு வினையாலணையும் பெயர். ஆக்கை - தோல் நரம்பு எலும்பு முதலியவற்றால் ஆக்கப் பட்டதென்னும் பொருளது. ஆக்கு + ஐ - ஆக்கை: ஐகாரவிகுதி பெற்ற தொழிற்பெயர். பூக்கமழும் கூந்தலாய் என்பது நல்ல இயற்கைத் தன்மையுடையாள் என்னும் குறிப்புப்பொருள் கொள்ள நின்றது. மற்று: அசைநிலை. (௩௫)

**தமயந்தி, தன் இரண்டாம் சுயம்வரத்தை அறிவியெனல்**

௩௩௬. மீண்டோர் சுயம்வரத்தை வீமன் திருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கோடைவேந்தற் கித்தூரம் தேர்க்கோலங் கொள்வான்
படைவேந்தன் என்றாள் பரிந்து.

(இ - ள்.) (தமயந்தி அந்தணனை நோக்கி) அந்தண - மறையவனே!, வீமன் திருமடந்தை மீண்டு ஓர் சுயம்வரத்தை - வீம மன்னனுடைய அழகுள்ள மகளாகிய தமயந்தியானவள் மறுமுறையும் ஒரு சுயம்வரத்திருமணத்தை, பூண்டாள் என்று நீ போய் உரைத்தால் - மேற்கொண்டாளென்று நீ அயோத்திக்குச் சென்று கூறுவாயானால், நீண்டகொடை வேந்தற்கு - பெருங் கொடை மிக்கவனாகிய இருதுபன்ன வேந்தனுக்கு, இத்தூரம் படைவேந்தன் தேர்க்கோலம் கொள்வான் என்றாள் பரிந்து - இவ்வளவு தொலையுள்ள இவ்விடத்துக்குப் படைகளையுடைய என் காதற் கணவன் தேரோட்டியாக அமைந்து வருவான் என்று அன்புடன் கூறினாள்.

(க - து.) 'அந்தண! வீமன் மகளாகிய தமயந்தி மீண்டும் ஓர் சுயம்வரத்திருமணத்தை விரும்பினாளென்று

நீ அயோத்திக்குச் சென்று கூறினால் இருதுபன்ன வேந்தனுக்குத் தேரோட்டுபவனாக அமைந்த எம் காதற் கணவனாகிய நளமன்னன் வருவா'னென்று அன்போடு கூறினாள் தமயந்தி என்பதாம்.

(வி - ரை.) மீண்டு - மறுமுறை என்னும் பொருளது. சுயம்வரம் - தானே தேர்ந்தெடுத்து மணஞ்செய்து கொள்ளும் முறை. அந்தணன் - அறவோன் என்பர் திருவள்ளுவர். அவர், 'அந்தணர் என்போர் அறவோர்' என்றல் காண்க. அந்தணன் - மறையவர் குலத்தோன் என ஈண்டுப் பொருள் கொள்க நீண்ட கொடை - மிக்க கொடை. இல்லையென்றிரப்பார்க்கு இல்லையென்று கூறாது கொடுக்கும் ஈகைத்தன்மை. இம்முறையில் பண்டுதொட்டே தமிழகத்தில் வள்ளல்கள் பலர் இருந்தனர். அவர் பாரி காரி ஓரி முதலியவராவர். இதனால் இருதுபன்னன் ஏழைகட்கிரங்கி யீயும் சிறப்புக்குறித்து நின்றது. நளனைப் படை வேந்தன் என்றார், அவன்றன் வெற்றிமேம்பாடு தெளித்தற் கெனக்கொள்க. பரிவு - இரக்கம்: அன்பு, ஈண்டுப் பரிந்து என வினையெச்சமாய், என்றாள் என்னும் வினைப்பெயர் கொண்டு முடிந்தது. (௩௨௬)

மறையவன், அயோத்தி சென்று தமயந்திக்குச் சுயம்வரமென வீமன் பறையறைவித்தான் எனல்

௩௨௭. எங்கோன் மகளுக் கிரண்டாம் சுயம்வரமென்
றங்கோர் முரசம் அறைவித்தான்— செங்கோலாய்
அந்நாளும் நாளை அளவென்றான் அந்தணன்போய்த்
தென்னாளும் தாரானைச் சேர்ந்து.

(இ - ள்.) அந்தணன்போய் - மறையவன் (தமயந்தி கூறிய வாறு அயோத்திக்குச்) சென்று, தென் ஆளும் தாரானை சேர்ந்து- அழகுமிக்க மலர்மாலையணிந்த இருதுபன்ன மன்னனைச் சேர்ந்து, செங்கோலாய் - முறையுடைய ஆட்சிகொண்ட வேந்தனே!, எம் கோன் மகளுக்கு இரண்டாம் சுயம்வரம் என்று - எம் விதர்ப்ப நாட்டு வேந்தனான வீமனானவன், தன் மகள் தமயந்திக்கு இரண்டாவது திருமணம் நிகழ்கின்றதென்று கூறி, அங்கு ஓர் முரசம் அறைவித்தான் - அவ்விதர்ப்ப நாட்டில் ஒரு பறையறைவித்து யாவர்க்கும் தெரியப்படுத்தினான், அந்நாளும் நாளை அளவு என்றான் - அச்சுயம்வரத்திருநாளும் (நெடு நாட்களில் இல்லை) நாளையளவிலேயே இருக்கின்றதென்று கூறினான்.

(க - து.) மறையவன் சென்று அயோத்தியரசனை நோக்கி, 'வேந்தே! எங்கள் வீமமன்னன் தன் மகள் தமயந்திக்கு இரண்டாஞ்சுயம்வரம் என்று பறையறைவித்துள்ளான்; அது நாளையே நடைபெறவிருக்கின்றது' என்றான் என்பதாம்.

(வி - ரை.) எம்கோன் - எம் வேந்தன்; மறையவன் கூற்று. உரிமை பாராட்டி எம்கோன் என்றான். அங்கு என்பது சேய்மைச் சுட்டாய் விதர்ப்பநாட்டை உணர்த்திற்று. ஓர் - ஒரு என்பதன் விகாரம். ஒப்பற்ற என்று பொருள்கொண்டு திருமண நிகழ்ச்சியை அறிவித்தலான் சிறப்புப்பற்றிக் கூறினனெனக் கொள்ளலுமாம். அறைவித்தல்: பிறவினை. செங்கோல்: செவ்விய வளைவில்லாத கோல்போன்றதென்னும் பொருட்டாய் முறையொடுபட்ட நாட்டாட்சிக்கு ஆயிற்று; ஆதலால், உவமவாகுபெயர். இருதுபன்னன் ஆட்சிமுறையைக் கண்ட மறையோன், அவன் ஆட்சிச்சிறப்பை வியந்து, 'செங்கோலாய்!' என விளித்தான். அண்மையில் நிகழவிருக்கின்றதென அறிவிப்பானாய 'அந்நாளும் நாளை அளவு' என்றான், கேட்பவன் உள்ளம் எந்நாளோ என்று ஐயுறாமற் பொருட்டு. தமயந்தி மீண்டும் சுயம்வரம் நடத்துதற்கு நைடத நூலாசிரியர், தமயந்தி கன்னிப் பருவமெய்தியதாகக் காரணங் கற்பித்துரைக்கின்றார். அது:

"[1]நாட்டம் மூன்றுடை நாயகன் வரத்தினால் நங்கை
மீட்டும் கன்னிகை ஆயினள் சுயம்வரம் விழைந்தாள்.'

என, மறையோன் கூற்றாக இருதுபன்னனுக்கு அறிவித்ததாக வரும் தொடரும் அறிக. (கஎ)

### தமயந்திக்கு இரண்டாஞ் சுயம்வரமெனக்கேட்ட இருதுபன்னன் கூறல்

கஎக. வேத மொழிவாணன் மீண்டும் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்—றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்றான் இகல்சீறும்
மின்செய்த வேலான் விரைந்து.

(இ - ள்.) இகல்சீறும் மின்செய்த வேலான் - பகைவரைச் சினக்கின்ற ஒளிவிடுகின்ற வேற்படையேந்திய இருதுபன்னன்,

1. நைடதம், கலிநீங்கு, உ.

வீமன் தன் காதலி - வீமமன்னன் மகளாகிய தமயந்தியானவள், மீண்டும் சுயம்வரத்தை காதலித்தாள் என்று - மறுபடியும் சுயம் வரத் திருமணஞ்செய்துகொள்ள விரும்பினாள் என, வேத மொழிவாணன் விளம்பினான் - மறையவனாகிய சுவேதன் கூறி னனே, இதனுக்கு என் செய்கோ என்றான் விரைந்து - இந்தச் சுயம்வரத்திருமணத்துக்குச் செல்வதற்கு நான் என்ன ஏற்பாடு செய்வேன் என்று பரபரப்புடன் கூறினான்.

(க - து) இருதுபன்னனானவன் மறையவன், தமயந் திக்கு இரண்டாஞ்சுயம்வரமென்று கூறினனே, அதற்கு நான் என்ன ஏற்பாடு செய்துகொண்டு போவேனென்று பரபரப்புடன் கூறினான் என்பதாம்.

(வி - ரை.) வேதமொழிவாணன் - மறையோதி வாழ்பவன் என்பது பொருள். மீண்டும் - மறுமுறையும்: உம்மை இறந்தது தழுவிய எச்சம். காதலித்தாள் - மிக விரும்பினாள் என்னும் பொருளால் காதலிக்க வேண்டாத முதன்மையைக் குறித்தது. காதலி - காதலுக்குரியாள். ஈண்டு மகள் என்ற பொருளில் வந்தது என்செய்கோ - செய்கு: தன்மை யொருமை. ஓகாரம் கழிவிரக்கப் பொருளில் வந்தது. நாள் நெருங்கி நாளையென்று தமயந்தி சுயம்வரம் வைத்திருக்கின்றது, இவ்வளவு சுருங்கிய நாளில் எவ்வாறு இவ்வளவு தொலைதூரத்தைக் கடந்து செல்வது என மனத்தில் விரைந்த குறிப்புடையனாய் நாழிகை நாழிகை யாகப் போது கழிந்து செல்வதற்கு வருந்திக் கூறினனாதலால் அவன் மனநிலைத்தன்மை உணர 'என் செய்கோ' என்ற சொல் லால் உணர்த்தினார். மற்று: அசைநிலை. மின் செய்த வேல் - மின்னல்போன்று ஒளிவிட்டெறிக்கின்ற வேல். நாட்டை முறைப் படுத்திப் பகைவரின்றி ஆள்கின்றான் இருதுபன்னன் என வேலின்மேல் ஏற்றிக்கூறியவாறும். (௩அ)

அதுகேட்ட வாகுகன், இருதுபன்னனிடம் கூறல்

௩௭௨. குறையாத கற்பினாள் கொண்டானுக் கல்லால்
இறவாத ஏந்திழையாள் இன்று—பறிபீறி
நெல்லிற் பருவரால் ஓடும் நெடுநாடா
சொல்லப் படுமோஇச் சொல்.

(இ - ள்.) (நளமன்னன் ஆகிய வாகுகன் அதுகேட்டு இருதுபன்னனை நோக்கி) பறிபீறி நெல்லில் பருவரால் ஓடும் நெடுநாடா - (மீன் பிடிக்கும் கருவியாகிய) ஊற்றாலைக் கிழித்துக்

கொண்டு நெற்பயிர்கள் வளர்ந்துள்ள வயல்களில் பெரிய வரால் மீன்கள் தப்பிக்கொண்டு செல்கின்ற (நீர்வளம் மிக்க) பெரிய கோசலநாட்டுக்கு வேந்தே!, குறையாத கற்பினள் - நிறைந்த கற்புடையாளும், கொண்டானுக்கு அல்லால் இறவாத எந்திழையாள் - தன்னை மனையாளாகக்கொண்ட கணவனுக்கேயல்லாமல் (பிறர் யார் பொருட்டும் தன்னுயிரை) விடுவதற்குத் துணியாத தன்மையுடையவளுமாகிய மங்கையானவள், இன்று இச்சொல் சொல்லப்படுமோ (தன் கணவனை விட்டுப்பிரிந்து தனித்திருக்கின்ற) இக்காலத்தில (இரண்டாம் சுயம்வரம் என்று சொல்லப்படுகின்ற) இச்சொல்லையும் துணிந்து தன் வாயாற் சொல்லத் தக்கதோ? (தகாது என்றபடி.)

(க - து.) இதைக்கேட்ட வாகுகனாகிய நளன், 'வேந்தே! தன்னைக்கொண்ட கணவனுக்கேயல்லாமல் பிறர் யாருக்கும் தன்னுயிரைவிடத் துணியாத கற்புடை மங்கையானவள், தனியாகப் பிரிந்து இருக்கிற காலத்தில் இவ்வாறான இரண்டாஞ்சுயவரம் என்னுஞ் சொல்லைத் தன் வாயினாற் கூடச் சொல்வதற்கு ஒருப்படுவாளோ?' என்றான் என்பதாம்.

(வி - ரை.) குறையாத - தன்னிலையினின்றும் மாறாத. கற்பு- தன் கணவன் வழியே நடக்கின்ற உயரிய பண்பு. இறவாத - இறந்துபடாத என்பது, கணவன் ஊறுபட்டோ இயற்கையாகவோ இறந்தவழி அவன் பிரிவு நோக்கி மனந்தாழாது இறந்துபோவது. இது, பேரன்புக்கறிகுறியாம். இவ்வன்புடைமை சாலச்சிறந்ததென்பாராய், 'இறவாத எந்திழையாள்' என்றார். இதற்கெடுத்துக்காட்டாகப் பூதப்பாண்டியன் மனைவி வரலாறும், கற்புக்கடம்பூண்ட கண்ணகியார் வரலாறும், ஆரியப்படை கடந்த பாண்டியன் நெடுஞ்செழியன் மனைவி கோப்பெருந்தேவி வரலாறும், பிற வரலாறும் சான்றாகக் காணக்கிடக்கின்றன. பறி - மீன்களைப் பிடித்துப்போடுகின்ற கூடையுமாம். நீர்வளம் மிக்கது கோசலம், அதனோடு நிலவளத்திலும் உயர்ந்தது என்பன தெளிதற்கு வரால்மீன் பறிபீறி ஓடுவதைக் குறித்தார். நீர்வளத்தின் மேன்மையினால் நன்கு இரை உண்டு கொழுத்திருக்கும வரால் மீன்கள், பறியைக் கிழிக்கும் வலிமையுடையனவாயின. அவைகள் கிழித்துக்கொண்டு செல்லுமிடங்கள் வெறும வெளியிடமன்று, நெற்பயிர்கள் மண்டிக்கிடக்கும் பண்ணை நிலங்கள் என்பாராய், 'நெல்லில்.........ஓடும்' என்றார். நெல் என்பது இருமடியாகு பெயர். தமயந்தி இரண்டாஞ் சுயம்வரம் என்று சொன்ன சொல்

லைத் தன் வாயாற் சொல்வதற்கு நாணினனாகி 'இச்சொல் சொல்லப்படுமோ' என்றான். ஓகாரம் சொல்லுதல் ஒண்ணாது என்னும் பொருளில் வருதலால் எதிர்மறை. (நஉ)

இருதுபன்னன், தமயந்தி சுயம்வரமாலை முன் தனக்கே கிடைக்கவேண்டியதெனல்

நஎந. என்மேல் எறிகின்ற மாலை எழில்நளன்றன்
முன்னே விழுந்ததுகாண் முன்னாளின்—அன்னதற்குக்
காரணந்தான் ஈதன்றோ என்றான் கடாஞ்சோரியும்
வாரணந்தான் அன்னான் மதித்து.

(இ - ள்.) கடாம் சொரியும் வாரணம் அன்னான் - மதநீரைப் பொழிகின்ற ஆண்யானையை ஒத்தவனான இருதுபன்னன், என்மேல் எறிகின்ற மாலை - தமயந்தியினால் என்மேல் வீசியெறியப் பட்ட சுயம்வர மணமாலை, எழில் நளன் முன்னே விழுந்தது காண் முன்னாளின் - அழகு பொருந்திய நளன்மேல் முன் சுயம் வரம் நாளிற்போய் விழுந்தது என்று அறிக (வாகுகனே), அன்ன தற்கு காரணம்தான் ஈது அன்றோ என்றான் மதித்து - அப்படி நான் எண்ணுதற்குரிய காரணமும் இவ்விரண்டாஞ் சுயம்வரமே இருக்கின்றதல்லவா எனப் புரோகிதன் கூறியதை ஆராய்ந்து கூறினான்.

(க - து.) இருதுபன்னன் நளனை நோக்கி, 'தமயந்தி முதற் சுயம்வர காலத்தில் எறியப்பட்ட சுயம்வர மண மாலை எனக்குக் கிடைப்பதாக இருந்தது; அது தவறி நளன்மேல் போய் விழுந்தது; அதற்குக் காரணம் இவ் விரண்டாஞ் சுயம்வரமே' என்று கூறினான் என்பதாம்.

(வி - ரை.) என்மேல் எறிகின்ற மாலை என்ற தொடருக் கேற்ற கருவிப்பொருளாகத் தமயந்தி என்னும் சொல் வருவித் துரைக்கப்பட்டது. எறிகின்ற - எறிந்த என்னும் பொருளில் இயல்பாக வந்த கால வழுவமைதி. எழில் நளன் - தோற்றமிக்க நளன் என்னலுமாம். முன் என்பது அவன்மேல் என்னும் பொருளில் வந்தது. இருதுபன்னன் தன் தேர்ச்சாரதியாகிய வாகுகன் 'கற்பினாள்.........சொல்லப்படுமோ இச்சொல்' என்று கேட்ட கேள்விக்கு நேர் மறுமொழி கூறாது இருதுபன்னன் காமமிக்கவனாய் 'என்மேல்.........முன்னே விழுந்தது காண்' என்று விடை வழுவாகக் கூறியது, விரைவில் தேர்கொணருக

விதர்ப்ப நாடு செல்லுதற்கெனக் குறிப்பினுற் சுட்டுதற்கெனக் கொள்க. ஈது : இதுவென்னும் சுட்டு நீண்டது. கடாம் - மதநீர். வாரணம் - யானை. வார் + அ(ண்)ணம் = வாரணம் : நீண்ட மேல் வாயையுடையது என்னும் காரணப் பெயராய் ஈண்டு யானையைக் குறித்தது. இதனுனே கோழிக்கும் சங்குக்கும் பெயராயிற்று. ஒன்றொழி பொதுச்சொல்லாக ஈண்டு ஆண் யானைக்கு வந்தது. நேர் விடை கூறாது தன்மேல் விழுகின்ற மாலை நளன்மேல் தவறி விழுந்ததெனக் கூறின தன்மை மக்களுக்கொத்த அறத்தொடு பட்டதாக இல்லாததால் தன்னிலை திரிந்து மதங்கொண்டலையும் விலங்காகிய ஆண்யானையை ஒப்பாக வைத்து 'வாரணந்தான் அன்றுன்' என்று கூறினுர். ஓகாரம் வாகுகனை நோக்கி வினவலால் வினப்பொருளில் வந்தது. தான் : அசைநிலை. காண் : முன்னிலை ஏவல் ஒருமைவினைமுற்று. (௪0)

### வாகுகன், தமயந்தி இரண்டாஞ் சுயம்வரம் குறித்துப் பலவாருக நினைத்தல்

௩௭௪. முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண இசைந்ததோ—தன்மரபுக்
கோவ்வாத வார்த்தை உலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ இது.

(இ - ள்) தன் மரபுக்கு ஒவ்வாத வார்த்தை - தமயந்தியின் குலமுறைக்கு ஏற்காத (இம்மறு சுயம்வரமென்னும்) சொல், உலகில் உரைப்பட்டது-உலகில் நிலவிவருவது, முன்னை வினையான் முடிந்ததோ - இச்சொல் (அக்குலம்) முன்செய்த தீவினை விளைவினுல் ஏற்பட்டதோ, மொய்குழலால் என்னை காணத்தான் இசைந்ததோ - தமயந்தியானவள் என்னைக் காண்பதற்காகவே உரைத்த மாற்றமோ, இது எவ்வாருே - இது எந்தவிதமோ அறிகின்றிலேன் (எனத் தனக்குள் எண்ணி இரங்கினுன் நளன்.)

(க - ரு.) 'தமயந்தியின் குலப்பழிப்புக்கு இடனுன மறு சுயம்வரம் என்னும் இச்சொல், முன் செய்த வினையினுல் ஏற்பட்டதோ? அன்றி என்னைக் காண்பதற்குச் செய்த ஏற்பாடோ? யாதென்றறிகிலே'னென்று வாகுகன் தன் மனத்துள் எண்ணினுன் என்பதாம்.

(வி - ரை.) முன்னை - முற்காலம். வினையால் என்பதில் ஆல் கருவிப்பொருளில் வந்த மூன்றன் உருபு. மொய் குழலாள் :

நெருங்கிய கூந்தலையுடைய தமயந்தி. நளனுக்குத் தமயந்தி மறு சுயம்வரம் வைத்தாளென்று கேட்டதும், அதற்கு இருதுபன்னன் தனக்கு முன்சுயம்வர காலத்தில் கிடைக்கவேண்டிய மணமாலை நளன் கழுத்தில் தவறி விழுந்ததென்று சொன்ன சொல்லும் துன்புறுத்தித் தன் மனத்தை அலைப்ப, அதனால் வாகுகன் பல வாறாக எண்ணி வருந்தினானென்று கொள்க. தன் மரபுக்கு ஒவ்வாத வார்த்தையாவது கற்புடைடபண்பினளாகிய தமயந்தியின் குலமுறைக்கு ஏற்காத சொல். அஃதாவது கற்புடையார் கனவி னும் கருதாத மறு சுயம்வரம் என்னுஞ்சொல். கொல்: ஐயப் பொருள். இது என்பது இச்சொல் என்பதைக் குறித்த சுட்டு. (௬௪)

## வாகுகன், இருதுபன்னனுக்குத் தேரோட்டிச்செல்லலே தன் கடன் என எண்ணல்

௬௫. காவலனுக் கேவற் கடன்பூண்டேன் மற்றவன்றன்
ஏவல் முடிப்பேன் இனியென்று—மாவைக்
குலத்தேரில் பூட்டினான் கோதையர்தம் கொங்கை
மலர்த்தேன் துளிக்குந்தார் மன்.

(இ - ள்.) கோதையர் தம் கொங்கை - மங்கையர்களின் கொங்கை முற்றத்திடத்தே, மலர்த்தேன் துளிக்கும் தார் மன் - தன் மலர்களிலுள்ள தேனைச் சொரிகின்ற மாலையணிந்த மார்பின னாகிய நளமன்னன், காவலனுக்கு ஏவல் கடன் பூண்டேன் - இவ்வயோத்தி வேந்தனாகிய இருதுபன்னனுக்கு நான் பணி செய்யுங் கடமையை மேற்கொண்டுள்ளேன், ஆதலால், அவன் ஏவல் முடிப்பென் இனி என்று - இனிமேல் அவன் கட்டளைப்படி செய்து முடிப்பேனெனக் கருதி, மாவை குலத்தேரில் பூட்டினான் - குதிரைகளைச் சிறந்த தேரில் பூட்டிக்கொண்டு வந்து நிறுத்தினான்.

(க - து.) வாகுகனானவன், அரசனுக்குப் பணிபூண்ட நான், இன்னும் எண்ணிக்கொண்டிருப்பது தகாது, இதோ போய் அவன் கட்டளைப்படி செய்வேனெனக் கருதிக் குதிரைகளைத் தேரிற் பூட்டிக்கொண்டு வந்து நிறுத்தினான் என்பதாம்.

(வி - ரை.) காவலனுக்கு என்பதில் நான்கனுருபு சேர்ச்சிப் பொருளில் வந்தது. கடன் - கடமை; செய்யவேண்டிய முறை. மா - குதிரை. குலத்தேர் - உயர்ந்த தன்மையிற் செய்யபபட்ட

அழகிய தேர். சுயம்வரத்துக்குச் செல்லவேண்டியதாக இருத்தலான் அதற்கேற்ற தேர் வேண்டும். அதனுன், 'குலததேர்' என்றூர். மன் - நிலைபெறுதல் என்பது பொருள். வேந்தர்கள் எல்லாச் செல்வங்களும் தம்பாற் பொருந்த விளங்குதலின் 'மன்' எனப்படுவர். மன் ஆகுபெயராய் இங்கே நளனுக்காயிற்று. (௬௨)

வாகுகன், இருதுபன்னனை நோக்கித் 'தேர் கொணர்ந்தேன் ஏறுக' எனல்

௩எ௬. ஒற்றைத் தனியாழித் தேரேன்ன ஓடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றுரைத்தான் பொம்மென் றளிமுரலும்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய்.

(இ - ள்.) பொம் என்று அளி முரலும் - பொம்மென்னும் இசையுடன் வண்டுகள் முழங்குகின்ற, தீம்தேறல் வாக்கும் தார் சேய் - தித்திப்புள்ள தேனைச் சொரிகின்ற மாலையணிந்த வாகுகனுகிய நளமன்னன், ஒற்றை தனி ஆழி தேர் என்ன ஓடுவதோர - ஒப்பற்ற ஓர் உருளையையுடைய சூரியன் தேர் என்னும்படி ஓடுகின்ற சிறந்த மிகக விரைவு பொருந்திய குதிரைகளைப் பூட்டி, கொற்ற நெடும் தேர் கொடுவந்தேன் - வெற்றி மிக்க தேரினைக் கொண்டுவந்திருக்கின்றேன், இதற்கு போந்து ஏறுக என்று உரைத்தான் - இத் தேரில் வந்து ஏறிக்கொள்க என்று (இருதுபன்னனை நோக்கிக்) கூறினன்.

(க-து.) வாகுகன், இருதுபன்னனை நோக்கி, 'சூரியன் தேர்போன்று விரைந்து செல்லுகின்றதற்கான நல்ல குதிரைகளைப் பூட்டிக்கொண்டுவந்து தேரை நிறுத்தியுள்ளேன், அதில் வந்து ஏறிக்கொள்க' என்று கூறினன் என்பதாம்.

(வி - ரை.) ஒற்றை ஆழி - ஒருருளை. சூரியன் ஒருருளை போன்று வட்டமாக இருப்பதால் ஒருருளையுடைய தேரென்றும் அதன் எழுவகை நிறங்களை எழு குதிரைகளென்றும் கூறுவது புராண மரபு. அம் முறை பற்றி ஒற்றை ஆழி எனப்பட்டது. அது விரைந்து தடையின்றிச் செல்வதுபோல இத்தேரும் நல்ல இலக்கணம் வாய்ந்த குதிரைகள் பூட்டப்பெற்றுள்ளமையால் 'ஓடுவதோர்...........தேர்' என்றான். ஏறுக என்பதிலுள்ள இறுதி அகரம் தொக்கு நின்றது. பொம் என்பது ஒலிக்குறிப்பு

உணர்த்தும் இடைச்சொல். விண்ணென இசைத்தது, துண்ணெனத் துடித்தது என்பனபோற் கொள்க. மேற்பாட்டில், 'மலர்தேன் துளிக்கும் தார் மன்' என்றும், இப் பாட்டில், 'தேறல வாக்கும்தார்ச சேய்' என்றும் நளனைக் குறிக்கும்போதெல்லாம் இச சொல்லாற் குறிப்பதென்னையெனின்? நளன் பிறரெல்லாம் தன்னைச் சார்ந்து வாழுதற்கேற்ற ஈகைப் பண்புடையான் என்பதையும் அஃறிணை உயிர்களிடத்தும் அன்பு பூணடொழுகும் கடப்பாடுடையான் என்பதையும் குறிப்பால் உணர்த்ததற்கெனக் கொள்க. என்னை?

> [1] ' அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்
> என்பும் உரியர் பிறர்க்கு.'

எனத் தேவர்மறை கூறுதலானுமென்க. (சாங)

வாகுகன் ஓட்டுகின்ற தேர், விரைந்து செல்லும் சிறப்புரைத்தல்

௩எஎ. முந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரைத்
தார்குன்று மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்றான் ஊர்கின்ற தேர்.

(இ - ள்.) சந்தவிரைத் தார் குன்று மெல் ஓதி தன் செயலை- அழகும் மணமும் பொருந்திய மாலையை மாறுதுகொண்ட மெல்லிய கூந்தலையுடைய தமயந்தி (இரண்டாம் சுயம்வரத்தை) நாடிய செயலைப்பற்றியே, தன் மனததே தேர்கின்றான் ஊர் கின்ற தேர் - தன் மனத்திடத்தே யெண்ணியெண்ணி அதைக் குறித்தே ஆராய்ந்துகொண்டிருக்கின்ற வாகுகனான நளமன்னன் செலுத்திச் செல்கின்ற தேரானது, முந்தை வினை குறுக மூவா மயலகொண்டான் - பழவினையானது தன்னை நெருங்கிவருதலால் (அதனால் தன் மானமிழக்கவேண்டித் தமயந்திபால) அளவுகடந்த காம மயக்கத்தைக கொண்டவனான இருதுபன்னனது, சிந்தையினும் கடுக சென்றது - மனத்தின விரைவைப் பார்க்கினும் மிக விரைவாகப் போயிற்று.

(க - து.) நளன் ஓட்டிச்செல்கின்ற தேரானது, தான் முன் செய்த தீவினைப்பயனால் மானமிழக்க வேண்டித் தமயந்திபால் விடாத காம மயக்கத்தைக்கொண்ட

1. திருககுறள், எஉ.

வனை இருதுபன்னன் மனத்தைப் பார்க்கினும் விரைந்து சென்றது, என்பதாம்.

(வி - ரை.) முந்து+ஐ=முந்தை: ஐகாரச்சாரியை பெற்ற மென்றொடர்க் குற்றுகரம்.

[1]'ஐயீற் றுடைக்குற் றுகரமும் உளவே.'

என்பது நன்னூல் விதியாகலான், முந்துவினை, முந்தைவினையென்றாயிற்று. இருதுபன்னன் செய்த தீவினையானது, தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரமென்று கேட்ட காலமுதல் தமயந்தியை நினைந்து நினைந்து காதல் மிக்கு நாம் இன்னுஞ் சிறிது நேரத்தில் போய்விடுவோம்; காண்போம்; திருமணத்திருமாலை நமக்கே கிடைக்குமென்று இடையறாத எண்ணமிட்டுக்கொண்டிருக்கும் அவன்றன மனம்போல, நளன் பூட்டிய தேர்க்குதிரைகளும் இடையறாது விரைந்து சென்றது என, அவன் மனநிலையை விளக்கி அவன் வழியல்லா வழிச் செலலுகின்ற அறந்திறம்பும் நெறியைக் கடிந்து கூறுவாராய் 'மூவா மயல்கொண்டான் சிந்தையினும் கடுகச் சென்றதே' என்றார். சிறந்த நல்லிசைப் புலவர்கள் தாம் ஆக்கியருளுகின்ற வரலாற்று நூல்களிலோ கட்டுக்கதை போன்ற புனைந்துரை நூல்களிலோ தம் குறிக்கோள்களை விளக்கி அதன் வாயிலாக நாட்டுமக்களுக்கு அறிவுரை புகட்டுந் தன்மையராய் இலகுவர். இந் நன்முறையைக குறிக்கோளாகக கொண்டே ஈண்டுப் பிறன்மனை நோக்காத பேராண்மையின் உயர்வும் அதனைக் கைந்நழுவவிடுதலானுய இழிபும் புலப்பட ஈண்டு இவ்வாறு கூறினார்.

இக் கருத்தோடொப்பவே ஆசிரியர் இளங்கோவடிகளார் தாம் ஆக்கியருளிய சிலப்பதிகாரச் செஞ்சொற் காப்பியத்தில் அக் காபபியத் தலைவனான கோவலன் தன் காதலன்பின் இல்லக் கிழத்தியாகிய கண்ணகியைவிட்டுத் துறந்து, கணிகை மகளாகிய மாதவிபால் விடுதலறியாவிருப்பினனாய் ஒழுக்கந்திறம்பி, அவ்வினையாளரோடு பழகிக், கூத்தியர் பரத்தையர் இல்லங்களிலும் அவர் சேர்ந்து திரிதரும் தெருக்களிலும் போய்ப் போய்த் திரிந்ததை, அறமுறைககு ஒவ்வாதது; இல்லறக்கடமை கொண்டார்க்கு ஏலாததெனக் கடிந்து அறமுறை கிளத்தி, மக்கட்கு அறிவுரை பகர்வாராய்த் தெருக்கள் தோறும் புதுப்புது மணங்களைக் கவர்ந்துகொண்டு வருகின்றதென்றலை, அதன் காட்சியைக் கற்பார்க்கு அறிமுகப்படுததுங்கால்,

---

1. நனனூல், கஅ௯.

[1] 'குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல
இளிவாய் வண்டினொ டின்னிள வேனிலொடு
மலய மாருதம் திரிதரு மறுகு.'

என்று உவமை கொடுத்துக் கணிகையருடன் கூடி வாழும் கயமைப்பண்பைக் கடிந்து கூறி, உலகமாந்தர்க்கறிவுரை புகட்டு மாற்றால் அறியலாம். சந்தம் - அழகு. விரை - மணம். அழகும் மணமும் பொருந்திய தார் என மாலைக்கு அடைகொடுத்துரைத் தனரேனும், தமயந்தியின் புற அழகையும் உள்ளழகாகிய கற்பு அன்பு நாண் ஒப்புரவு முதலிய உயரிய குணங்களையும் உரைத்த வாறும். தன் மனத்தே நளன் தேர்கின்ற செயலாவது, 'கற்புடையாள் கொண்டானிற் சிறந்த தெய்வம் இன்றன்றே யெனப் போற்றுவரன்றோ? கற்புடைப்பெண்டிர் பிற ஆடவர் நெஞ்சிற் புகாரன்றோ? அப் பெண்டிரும் பிறரைக் கனவினும் கருதாரன்றோ? மீண்டுஞ் சுயம்வரமா? திருமணமா?' எனப் பல வாறாகச் சிந்தித்த நிலை. ஊர்தல் - செலுத்தல்: பிறவினைப் பொருளில் வந்தது. (௪௪)

## இருதுபன்னனுடைய மேலாடை விழ, அதை எடுக்குமுன் தேர் பத்துக்காதம் செல்லல்

௬௭௮. மேலாடை வீழ்ந்த தெடுவென்றான் அவ்வளவில்
நாலாறு காதம் நடந்ததே—தோலாமை
மேல்கொண்டான் ஏறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

(இ - ள்.) தோலாமை மேல் கொண்டான் ஏறிவர - வெற்றி மிக்கவனான இருதுபன்னன் ஏறிவருதற்கு, வெம்மை கலிச சூதின் - கொடுமை பொருந்திய கலியின் வஞ்சமுள்ள சூதாட் டத்தின்மீது, மால்கொண்டான் கோல்கொண்ட மா - மயக்கங் கொண்ட வாகுகனாகிய நளமன்னன் முட்கோல் கொண்டு முடுக்கி ஓட்டிய குதிரைகள், மேல் ஆடை வீழ்ந்தது எடு என்றான் - (இருது பன்னன்) தன் மேலாடை கீழே விழுந்துவிட்டது அதனை எடு வென்று வாகுகனை நோக்கிக் கூறினான், அவ்வளவில் - அது சொல்லி முடிப்பதற்குள், நால் ஆறுகாதம் நடந்தது - பத்துக்காத தூரம் பறந்து சென்றன (என்றான).

1. சிலப். ௩: ௨00-௩.

(க - து) நளன் ஓட்டிச் செல்கின்ற தேர்மேல் இருக்கின்ற இருதுபன்ன மன்னன், 'என் மேலாடை கீழே வீழ்ந்துவிட்டது; அதனையெடுத்துத் தருக' வென்று வாகுகனை நோக்கிக் கூறினன்; அதற்குள் தேரிற் பூட்டியிருக்கும் குதிரைகள் பத்துக்காத தூரம் பறந்து சென்றன (என்றான்) என்பதாம்.

(வி - ரை.) மேல் ஆடை - தோள் உத்தரீய ஆடை. விழுந்தது: வீழ்ந்ததெனமுதனீண்டது. நால் ஆறுகாதம்: நாலும் ஆறும் கூடிய காதமெனப் பொருள் கொள்க. எனவே பத்துக் காதம்: உம்மைத்தொகை; எண்ணுப்பொருளில் வந்தது. நால் ஆறு எனக்கொண்டு நாலாறு இருபத்து நான்கெனப் பெருக்கிப் பொருளுரைப்பர் சிலர். அது பொருந்தாது. நைடத நூலினும் பத்து யோசனையென்றே குறிப்பதும் கருதத்தக்கது. காதத்தை யோசனையெனக் கொண்டனர்போலும்! அதையும் காட்டுதும்:

[1]"முத்த வெண்குடை வேந்தர்கோன் முழவுறழ் தடந்தோள்
உத்த ரீயமங் நெறியிடை வீழ்தலும் உணர்ந்து
தத்து வாம்பரி நிறுவியத் துகில்தரு கென்னப்
பத்து யோசனை கடந்தது தேரெனப் பகர்ந்தான்.'

யோசனை நூறுகல் தொலை என்றும், காதம் பத்துக்கல் தொலை என்றும் கூறுவர். ஒவ்வோராசிரியரும் அவ்வவர் கொண்ட குறிக்கோள்களுக்கு ஒப்பக் கூறுவர் போலும்! தோலாமை - தோல்வியடையாத தன்மை; வெற்றிமிக்க நிலை: இருதுபன்னன் சிறப்பு. தன் அரசசெல்வமும் புகழும் பெருமையும் இழந்து இன்று ஒரு தேரோட்டியாய் இருக்க நேர்ந்த தீயூழை 'வெம்மைக் கலிச்சூதின் மால் கொண்டான்' என்றார். மீகால் - தாற்றுக் கோல். அக்கோல்கொண்டு குதிரைகளை ஓட்டுகின்றானாகலான் 'கோல் கொண்ட மா' என்றார். மா: பலபொருள் குறித்த உரிச்சொல். ஈண்டுக் குதிரைக்கு வந்தது. (சகூ)

### இருதுபன்னன், ஒரு தான்றி மரத்தின்காய்களை இவ்வளவென்னல்

நஎகூ. இத்தாழ் பணையில் இருந்தான்றிக் காயெண்ணின்
பத்தா யிரங்கோடி பாரேன்ன—உய்த்ததன்பால்
தேர்நிறுத்தி எண்ணினான் தேவர் சவைநடுவே
தார்நிறுத்தும் தோள்வேந்தன் தான்.

1. நைடதம், கலிநீங்கு: கக.

(இ - ள்.) (இருதுபன்னன் நளனை நோக்கி) இத்தாழ் பணையில் இரும்தான்றிக் காய் எண்ணின் - இந்தத் தாழ்ந்த கிளையில் பெரிய தான்றிமரத்தின் காய்களைக் கணக்கிட்டுரைத்தால், பத்து ஆயிரம் கோடி பார் என்ன - பதினாயிரங்கோடியாகும் (10,00,00,00,00,00) நீ இதை எண்ணித் தெரிந்துகொள் என்று கூற, தேவர் சவை நடுவே தார் நிறுத்தும் தோள் வேந்தன் - தேவர்கள் முதலிய யாவரும் கூடியிருந்த சுயம்வர மண்டபப் பேரவையிலே பிறர் எவருக்கும் கிட்டாதவாறு தனக்கே பெற்ற மணமாலையணிந்த தோள்களையுடைய நளமன்னனானவன், அதன்பால் தேர் உய்த்து நிறுத்தி எண்ணினான் - அந்தத் தான்றி மரத்தின் அருகில் தேரைச்செலுத்தி நிறுத்திக் காய்களையெண்ணிக் கணக்கிட்டான்.

(க - து.) இருதுபன்னன் நளனை நோக்கி, 'வாகுக! இதோ பார் இத்தான்றி மரத்தின் கிளையொன்றில் பதினாயிரங்கோடி காய்கள் இருக்கின்றன, நீ காண்' என்றான்; நளன் தேரை மரத்தின் அருகே கொண்டு நிறுத்திக் காய்களை எண்ணிக் கணக்கிட்டான் என்பதாம்.

(வி - ரை.) இத்தாழ்பணை யென்பதற்கு இந்தப் பள்ளமான வயலிடத்துள்ள என்று பொருள் கூறுவாருமுளர். அதற்கோர் பொருட் சிறப்பின்மை உணர்க. இரும் - பெரிய. தான்றி: ஒருவகை மரம். இருதுபன்னன் தான் கற்ற அரிய விஞ்சைத் திறத்தினால் எண்ணிக்கணக்கிட்டுக் கூறாது எண்ணமேலே பார்த்த அளவிற் கூறினானாகலான் 'எண்ணின்......பார்' என்றானென்றார். பத்தாயிரங்கோடி மிக்க எண்ணலளவை. அதனை விரைவில் எண்ணிக்கணக்கிடல் அரிதாகலான் தேரை நிறுத்தியே எண்ணவேண்டுவதாயிற்று. இதனைத் 'தேர் நிறுத்தி எண்ணினான்' என்றார். தேவர் சவையென்பதில் உள்ள இறந்தது தழுவிய எச்சவும்மை விகாரத்தால் தொக்கது அவ்வும்மை விரித்துப்பொருள் கொள்ளப்பட்டது. தமயந்தி சுயம்வரத் திருமணத்துக்குத் தேவர்களும் விரும்பிவந்திருந்தனராதலின் அப்பேரவையாரெல்லாம் வெள்கி மனஞ்சுளிக்கத் தனக்கே மணமாலை பெற்ற நளன் சிறப்புத்தோன்ற அவன் தோள்களைப் பாராட்டி 'தார் நிறுத்தும் தோள் வேந்தன்' என்றார். தார் நிறுத்துதல், மாலையை நிலைபெறச் செய்தல். அஃதாவது, இம்மாலை நளமன்னனுக்கே உரியது; வேறுயாருக்கும் பெற இயலாதது; அப்பேறு கிட்டியது, தோள்களுக்கன்றி வேறு உறுப்புக்கட்கு இல்லை யென்பதை உணர்த்துவதற்கே தோளின்மேல் வைத்துக்கூறினார். ஏயும் தானும் அசைநிலைகள். (சசு)

### இருதுபன்னன், வாகுகனை நோக்கிக் கூறுதல்

௬௨௦. ஏரடிப்பார் கோலெடுப்ப இன்தேன்தொடை பீறிக்
காரடுத்த சோலைக் கடல்நாடன்—தேரடுத்த
மாத்தொழிலும் இத்தொழிலும் மாற்றுதியோ
என்றுரைத்தான்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து.

(இ - ள்.) ஏர் அடிப்பார் கோல் எடுப்ப - உழவு எருதுகளை ஓட்டுகின்ற உழவர்கள் தங் கைகளிலுள்ள தாற்றுக்கோலை ஓச்சுதலால், இன்தேன் தொடைபீறி - (பக்கத்திலிருக்கின்ற மரக்கிளையில் உள்ள) இனிமையான தேன்இறால் கிழிபட்டுத் தேன் ஒழுகுகின்ற, கார் அடுத்த சோலை கடல்நாடன் - மேகங்கள் தங்குகின்ற சோலைகள் சூழ்ந்த கடற்கரை நாடனாகிய இருதுபன்னன், தேர்த்தொழிலின் மிக்கானை தேர்ந்து - தேரோட்டுந்தொழிலிற் சிறந்த வாகுகனாகிய நளனை நன்கு மதித்து, தேர் அடுத்த மா தொழிலும் - தேரிற் பூட்டிய குதிரைகளை ஓட்டுகின்ற தொழில் முறையையும், இத்தொழிலும் மாற்றுதியோ என்று உரைத்தான் - இம்மரத்தில் காயெண்ணுகின்ற இத்தொழிலையும் மாற்றிக் கொள்வாயோ என்று கேட்டான். (அஃதாவது இருவரும் அவ்வத்தொழிலைக் கற்றுக்கொளவோம் என்றபடி.)

(க - ரு.) இருதுபன்னன் நளனை நோக்கி, 'தேர்க் குதிரைகளை விரைவாக ஓட்டுகின்ற உன் தொழிலையும் காய்களை எண்ணிக்கணக்கிடும் என் தொழிலையும் மாற்றிக் கொள்வாயா?' என்று கேட்டான்.

(வி - ரை.) ஏர் - ஏருக்குரிய எருதுக்காதலால் ஆகுபெயர். கோல் - தாற்றுக்கோல். எடுப்ப - ஓச்ச. தொடை - தேனிறால். கார் - மேகம். நிலவளத்தில் சோலைகள் மேகமண்டலம் வரை வளர்ந்திருத்தலைக் குறித்தது. கடல் - கடற்கரை. தேரடுத்தமா - தேரிற் பூட்டிய குதிரை. இத்தொழில் என்னும் அண்மைச் சுட்டு, எண்ணிக்கணக்கிடுதலை உணர்த்திற்று. மாற்றுதி : முன்னிலை ஏவல் ஒருமை. இருதுபன்னன் வாகுகனை நோக்கி அவன் தேர்த்தொழிலுக்கு வியந்து, நீ எனக்கு இத்தேரோட்டுகின்ற தொழிலைக் கற்றுக்கொடு; நான் உனக்கு இக்கணக்கு முறையைக் கற்றுக்கொடுக்கின்றேன். இருவரும் இத்தொழில்களிற் பயிற்சி பெற்றவராக விளங்குவோம் என்பது குறிப்பு. மாத்தொழில்-குதிரைகளின் மனநிலை தெரிந்து அவைகளைத் தேர்ந்து தேரிற்பூட்டி ஓட்டுகின்ற அரிய வித்தை. இத்தொழில் - இருதுபன்னன் தான்கற்ற கணக்கு வித்தை. (௪௭)

## கலி, நளனைவிட்டு நீங்குதல்

௩௮௧. வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி—கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பால் நின்ற கலி.

(இ - ள்.) இருதுபன்னன் (தன் வித்தையை நளனுக்குக் கற்றுக்கொடுத்தும், தான் அவன் வித்தையைக் கற்றும் முடிந்த பின்) காவலன்பால் நின்றகலி - நளமன்னனிடம் பொருந்தியிருந்த கலியென்னும் துன்பம், வண்டு ஆர் வளவயல் சூழ் - வண்டுகள் மொய்க்கின்ற நீர்வளம் மிக்க வயல்கள் சுற்றியிருக்கின்ற, மள்ளுவநாட்டு எம் கோமான் - மள்ளுவநாட்டை ஆட்சி புரிகின்ற எம தலைவனை, தண்தார் புனை சந்திரன் சுவர்க்கி - குளிர்மை பொருந்திய மலர் மாலையணிந்த சந்திரன் சுவர்க்கி யென்னும் அரசனால், கொண்டாடும் - பாராட்டப்படுகின்ற, பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்று - பாவாணனிடத்தில் நிலைத்திருந்த பசிகெட்டொழிந்தாற்போலத் தீர்ந்தது.

(க - து.) இருதுபன்னன் தன் வித்தையைக் கற்றுக் கொடுத்தும், தான் அவன் வித்தையைக் கற்றும் முடிந்த பின், நளமன்னன்பால் நின்ற கலித்துன்பம் விலகி நின்றது என்பதாம்.

(வி-ரை.) வண்டு ஆர் வளவயல் என்றது, நாட்டு வளங்கூறிய வாறு. நாட்டுவளங் கூற அமைத்த தொடராயினும், வண்டுகள் போன்ற எந்த உயிரும் வாழ்வதற்கு நிலைக்களனை நாடு எனக் கொள்க. மள்ளுவநாடு - மள்ளுவதேசம். ஆசிரியர் புகழேந்தியாரைப் போற்றிப் பாதுகாத்த புரவலன் சந்திரன் சுவர்க்கி. அவன் பாராட்டப்படுகின்ற புலவர், பசி முதலியவான துன்பங்கள் நீங்கி வளம்பெற வீற்றிருப்பர். ஆதலால் அதுபோன்று, நளன் இருதுபன்னன்பாற் கற்றவித்தை கண்டதும் கலி நீங்கிச சென்றதைப் 'பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே' என்று உவமங் கொடுத்துக்கூறித் தமக்குச்செய்த நன்றியைப் பாராட்டுகின்றார். புனை : வினைத்தொகை. சுவர்க்கி கொண்டாடும் என்பது மூன்றும் வேற்றுமைத்தொகையாக்கிப் பொருள் கூறப்பட்டது. சிலர் சந்திரன் சுவர்க்கியைக் கொண்டாடுகின்ற பாவலன் என இரண்டன் தொகையாகக்கொண்டு பொருள் விரிப்பர். அவ்வாறு பொருள் கூறுவது, விரும்பாத ஒருவன்பால் சென்று தன் குறையையெடுத்து கூறிப் பயன்பெறுதல் சிறப்பின்மையோடு

பொருட் பொருத்தமும் இதுபோன்று இன்றாம். ஆகலான் இவ்வாறான வரலாற்றுண்மையை ஔவையார் அதிகமான் இடத்தும், கபிலர் பாரியிடத்தும், மோசிகீரனார் சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறையிடத்தும், பிசிராந்தையார் கோப்பெருஞ்சோழனிடத்தும், பிறரிடத்தும் காண்க. ஆகலான் அவ்வாறு பொருள் கொள்ளுதற்குச் சிறப்பின்மை தெளியலாம் (சஅ)

இருதுபன்னன், வீமமன்னனுடைய நகரடைதல்

கூஅஉ. ஆமை முதுகில் அலவன் துயில்கோளும்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்றன்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட்
அன்னகரி ஒன்றுடையான் ஆங்கு. [டெழுங்கூற்றம்

(இ - ள்.) போர் வேட்டு எழும் கூற்றம் அன்ன - போரினை விரும்பி மேலெழுந்து வருகின்ற இயமனையொத்த, கரி ஒன்று உடையான் - பட்டத்து யானை ஒன்றையுடையவனாகிய இருதுபன்ன மன்னன், ஆமை முதுகில் அலவன் துயில்கொளும் - ஆமையின் முதுகினிடத்தே நண்டுகள் உறங்குகின்ற நீர்வளமிக்க, காமர் நெடு நாடு கைவிட்டு - அழகான பெரிய கோசல நாட்டைவிட்டு நீங்கி, வீமன் தன் பொன்னகரி சென்று ஆங்கு அடைந்தான் - வீமமன்னனுடைய விதர்ப்ப நாட்டின் அழகிய நகரான குண்டினபுரத்தின் இடத்தே சென்று சேர்ந்தான்.

(க - து.) இயமனையொத்த பட்டத்து யானையையுடைய இருதுபன்ன அரசன், தன் கோசலநாடு கடந்து சென்று, வீமமன்னனது குண்டினபுர நகரடைந்தான் என்பதாம்.

(வி - ரை.) ஆமை முதுகில் நண்டுகள் தூங்குதலாவது, கோசலநாட்டு மக்கள் பகையின்றி ஒருவர்க்கொருவர் அன்புடையவராய் வாழுகின்ற நிலை. இளங்கோவடிகள் ஆக்கியருளிய செஞ்சொற் காப்பியத்தில், பாண்டியர் தம் ஆட்சிச சிறப்பைக் குறித்துக் கூறுங்கால், 'பாண்டிநாடு பகை முதலியன இன்றிச் சிறந்து விளங்குவதாக அமைத்து,

[1] 'கோள்வல் உளியமும் கொடும்புற் றகழா
வாள்வரி வேங்கையும் மான்கணம் மறலா

1. சிலப். கரு : ரு - க.

*அரவும் சூரும் இரைதேர் முதலையும்*
*உருமும் சார்ந்தவர்க் குறுகண் செய்யா*
*செங்கோல் தென்னவர் காக்கும் நாடு.'*

என அருள்வதும் காண்க. இதுபோன்றே இருதுபன்னன் நாடு மிக்க உயர்ந்த நாடாக இருக்கின்றதெனக் கோசலநாட்டுச் சிறப்பும், அந்நாட்டை ஆள்கின்ற வேந்தனை இருதுபன்னன் மாண்பும் கூறியதுணர்க. பொன் - திருமகள் போன்ற தமயந்தி வாழ்கின்ற என்று கொண்டு பொருள் கூறலுமாம். இருதுபன்னன், தமயந்தி சுயம்வரங்காணவே போந்தானாகலின் அது புலப்படப் 'பொன்னகரி சென்றடைந்தான்' என்றார். நகர்: நகரி என இகர விகுதிபெற்ற தொழிற்பெயர். உரிமைப்பொருள் விகுதியுமாம். போர் வேட்டல் என்பது, போரை விரும்புதல்: போரென்றால் மகிழ்ச்சி கொண்டு செல்லல்.

[1] 'போரெனிற் புகலும் புனைகழல் மறவர்.'

எனப் புறநானூற்றினும்,

[2] 'நானிலம் அதனின் உண்டு போரென நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யும் சிந்தையர்.'

என்று கம்பர்தம் காப்பியத்தும் வருதல்கொண்டு தெளிக. எனவே, இருதுபன்னன் வீரத்தை அவன்றன் யானைமேல் இலக்கணையாக வைத்து ஏற்றிக் 'கூற்றம் அன்னகரி ஒன்றுடையான்' என்றார். (சகூ)

### இருதுபன்னன், தேரினின்றும் இறங்கிச் செல்லுதல்

௩௨௩. வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயில்
முற்றத் திருத்தி முறைசெய்யும்—கோற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து.

(இ - ள்.) மன் விரவு தாரான் - ஆட்சிச் சிறப்புப் பொருந்திய வெற்றிமாலையணிந்த இருதுபன்ன மன்னன், வெற்றி தனி தேரை - வெற்றி பொருந்திய ஒப்பற்ற தன்னுடைய தேரினை, வீமன் பெரும் கோயில் முற்றத்து இருத்தி - வீமமன்னனுடைய பெரிய அரண்மனை வாசலின் முன்பாக நிறுத்தச்செய்து, முறை செய்யும் கொற்றவற்கு - நடுவுநிலையோடு ஆட்சி புரிகின்ற மன்ன

1. புறம்: ௩௧. 2. கம்பராமா. சுந்தர, கிங்கரர்: ௪.

னை வீமனுக்கு, தன் வரவு கூற பணித்து - தன் வருகையை அறிவிக்கும்படி (வாயில் காவலர்கட்குக்) கட்டளையிட்டு அனுப்பி, (தான் தேரினின்றும் கீழிறங்கிச் சென்று), மகிழ்ந்து தனி புக்கான் - மகிழ்வுகொண்டு தான் மட்டும் (அரண்மனையினுள்) சென்றான்.

(க - து.) இருதுபன்னன், தான் வந்த தேரை அரண்மனை முற்றத்திடத்தே நிறுத்திவிட்டுத் தன் வருகையை வீமமன்னனுக்கு அறிவிக்கும்படி வாயிற் காவலர்களிடம் கூறியனுப்பித் தான் மட்டும் அரண்மனைக் குள் மகிழ்வோடு சென்றான் என்பதாம்.

(வி - ரை.) வெற்றித்தனித்தேர் - தான் மட்டும் சுயம்வர மென்று கேள்வியுற்றுச் சென்றவனாதலால் அதை விளக்க வெற்றித் தனித்தேரென்றார். அன்றி, வெற்றி பெறாத தன்மை யைச் சுட்டிக் காட்டி இழிவு சிறப்பாகக் கூறினாரென்றலுமாம். கோ + இல் = கோயில் : அரசன் இல்லம். அது அரண் சூழ்ந்திருப் பதால் அரண்மனையெனப்படும். பின்னரே இறைவன் உறையும் கோட்டத்துக்கு ஆயிற்று. முற்றம் - அரண்மனைவாசல் இடம். தன் வரவு கூறப்பணித்து என்றமையால் அதற்கேற்ற எழுவா யாகக் காவலர் என்ற சொல் வருவித் துரைக்கப்பட்டது. தனிப் புக்கான் என்றமையால் தேரோட்டிவந்த நளன் உட்செல்லாது வெளியே நின்றான் என்பது பெற வைத்தார். பணித்தல் - சொல் லுதல், ஏவுதல் என்னும் பொருட்டாக வந்தது. மன் - நிலை பெறுதல். விரவுதல் - கலத்தல், ஒன்றுதல், நிலைபெறுதல் என்பது மாலைக்கு என்னையெனின்?, மாறுமல் என்றும் வீரத்திரு நிலைத் திருக்க வாகை வனமாலை சூடி அரசர் உறைகின்ற அத்தாணி மண்டபத்தே வீறுடன் இருத்தல். (௫0)

### இருதுபன்னனை வீமன் வினவுதல்

நூஅச. கன்னி நறுந்தேறல் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவும் நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றேன்.

(இ - ள்.) கமலத்தின் கன்னி நறும் தேறல் மாந்தி - (இருது பன்னனை வீமன் நோக்கி) தாமரை மலரில் உள்ள புதிய மண முள்ள தேனைக் குடித்து, மன்னி துயின்ற வரிவண்டு - அதில்

இருந்து தூங்கியெழுந்த பொறிவண்டுகள், பின்னையும் போய் நெய்தற்கு அவாவும் நெடுநாட - அதன் பின்பும் (நெய்தல் நிலத்துக்குச்) சென்று அங்குள்ள கருங்குவளை மலர்த்தேனை உண்பதற்கு விரும்புகின்ற பெரிய கோசல நாட்டுக்கு வேந்தே, நீ என்பால் எய்தற்கு அவாவிய ஆறு என் - நீ என்னிடத்தே வருவதற்கு விரும்பிய காரணமென்ன? (என்று கேட்டான்.)

(க - நு.) 'தாமரை மலர்த்தேனை உண்ட வரிவண்டுகள், அதில் தூங்கி எழுந்து நெய்தல் நிலத்திற்குச் சென்று அங்கே கருஙகுவளை மலர்த்தேனை உண்பதற்கு அவாவுகின்ற கோசலநாட்டு வேந்தே! நீ இங்கே என்னிடம் வருதற்குரிய காரணமென்ன?' வென்று இருதுபன்னனை நோக்கி வீமன் கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) கன்னி - இளமை; ஈண்டுப்புதுமை என்னும் பொருளில் வந்தது. புதுத்தேனாவது மேலும் மேலும் ஊற்றெடுத்து வருகின்ற தேன். தாமரை மலரிலுள்ள தேனானது பெருகிவர அதனை உண்ட வரிவண்டுகள், கண்ட மட்டும் தேனைக் குடித்த மயக்கத்தினால் அதிலேயே தூங்கிவிட்டுத் தூங்கிவிழித்த பின்னும் தேனுண்ண அவாவிக் கருங்குவளை மலர்த்தேனை உண்பதற்கு அவாவும் நாடன் என்றமையால், நாட்டின் மருதநிலச சிறப்பும் நெய்தல் நிலச் சிறப்பும் புலப்படக் கூறிய திணைமயக்கம்.

[1] 'கரும்பொற் கோட்டிளம் புன்னைவாய்க்
கள்ளுண்டு காளைச்
சுரும்பு செவ்வழிப் பாண்செயக்
கொன்றைபொன் சொரிவ.'

என்னும் திருவிளையாடற் புராணச் செய்யுளில் வண்டுகள் புன்னைப் பூவின் தேனை உண்டு பாடக் கொன்றைகள் மலர்ந்தன என்பதில புன்னை, நெய்தல்நிலக் கருப்பொருள். கொன்றை, முல்லைநிலக் கருப்பொருள். இவ்விரண்டுக்கும் திணைமயக்கம் கூறியவாறுபோற் கொள்க.

இங்கே கமலத்தேன் உண்ட வண்டானது, கருங்குவளைத் தேனை விரும்பிச் சென்றதுபோல, நீ உன் அயோத்திநகரில் உன் இல்லக்கிழத்தியுடன் வாழ்வதை விட்டுவிட்டு இங்கே மற்றொரு சுயம்வரம் விரும்பிவந்தவாறென்னெனக் குறிப்பால் வினவுவான் போல உள்ளுறை உவமமாக அமைத்த ஆசிரியரின் சதுரப்பாடு

1. திருவிளையாடல், நாட்டுப் : ௩௧.

வியப்பும் மகிழ்வும் தருவதாகும். வரி - புள்ளிகள். பொறிவண்டு - அழகுள்ள வண்டுகள் என்பதைக் குறித்தார். வண்டுகள் கள்ளுண்டு உறங்குமென்பதனை,

"[1]வேலை மடற்றாழை உட்பொதிந்த வெண்தோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு."

என்பது இளங்கோவடிகளாரின் இயற்கை மொழி.

பின்னையும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருளன்றி இழிவு சிறப்புமாம்; என்னை? முன்பே தேன் உண்டது போதாவென்று மேலும் விரும்புதல் ஒவ்வாதென்பதைக் குறிக்க வந்ததாகலான். கமலம், நெய்தல் என்பன அவ்வவற்றில் மலருக்காதலால் ஆகுபெயர் எய்துதல் - எய்தல் எனக் குறைத்தல் விகாரம் பெற்றது. என், என்னவென்னும் வினா வினைக் குறிப்பு. இதனால் இருதுபன்னனை வந்த காரணம் என்னவென்று வீமன் கேட்டான் என்க. (௩௧)

இருதுபன்னன் மறுமொழி கூறல்

௩அ௫. இன்றுன்னைக் காண்பதோர் ஆதரவால் யான்இங்ஙன்
மன்றல் மலர்த்தாராய் வந்தடைந்தேன்—என்றான்
ஒளியார்வேற் கண்ணாள்மேல் உள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய்.

(இ - ள்) ஒளிஆர் வேல் கண்ணாள்மேல் உள்ளம் துரப்ப - ஒளிபொருந்திய வேல்போன்ற கண்களையுடைய தமயந்தியிடத்துத் தன் உள்ளம் சென்றமையால், தெளியாது முன்போந்த சேய் - முன் ஆராய்ச்சியின்றி வந்தவனான இருதுபன்ன வேந்தன், மன்றல் மலர் தாராய் இன்று உன்னை காண்பது ஓர் ஆதரவால் - மணங்கமழும் மலர்மாலையணிந்த அரசனே! இன்றைக்கு உன்னைக் காணவேண்டுமென்னும் ஓர் ஆசை மிகுதியினால், யான் இங்ஙன் வந்து அடைந்தேன் என்றான் - நான் இங்கே வந்து சேர்ந்தேன் என்று கூறினான்.

(க - து.) முன்பின் ஆராயாது வந்த இருதுபன்னன், 'மலர்மாலையணிந்த வேந்தனே! நான் இன்று உன்னைப் பார்ப்பதற்கே வந்து சேர்ந்தேன். வேறு யாதுமில்லையென்று சொன்னான்' என்பதாம்.

---

1. சிலப். ௬ : இறுதி வெண்பா.

(வி - ரை.) ஆதரவு-பேரன்பு. இஃது இப்பொருள் தருதலை 'ஆதரவுபட்டதே இன்பம்' என்னும் ஒளவையார் திருமொழியானும் அறிக. இங்ஙன்-இங்ஙனம் என்பதன் கடைக்குறை; இவ்விடம் என்னும் பொருளது. மன்றல்-மணம். ஒளியார்வேல் - ஒளிமிக்க வேல்போன்ற: உவமத்தொகை. தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம் நிகழவிருக்கின்றது என்று கேட்டவுடனே தமயந்தியிடத்தே காதல் கைம்மிக உடனே குண்டினபுரத்துக்குப் புறப்பட்டு வந்தானாகலின், முன்பின் அதுபற்றிச் சிறிதும் எண்ணி ஆராயாது 'என்மேல் எறிகின்ற மாலை எழில் நளன்றன், முன்னே விழுந்தது' என்று கூறிப் பெருங்காதல் உந்தநின்று வந்த இருதுபன்னனை 'தெளியாது முன்போந்த சேய்' என்ற சொற்களாற் குறித்தார். சேய் - இளைஞன் என்னும் பொருளது. இளங்கோலத் திறைவனாகிய முருகவேளை [1]"எய்யா நல்லிசைச செவ்வேற் சேஎய்' என்று ஆசிரியர் நக்கீரனாரும், [2]"சேயோன் மேய மைவரை உலகமும்' என்று ஆசிரியர் தொல்காப்பியனாரும் அருளுமாற்றால் தெளியப்பெறும். சேய் - செந்நிறமுடையான் என்றலுமாம். இளம் பருவத்தினர் எதையும் எண்ணாது 'இளங்கன்று பயமறியாது' என்பதற்கேற்ப நடப்பர் ஆகலின், அவ்விளைஞர் பெயர் குறிக்கும் சொல்லான் 'சேய்' என்றும், தெளியாமல் செய்கின்ற செயலைக் காட்ட 'தெளியாது முன் போந்த' என்னும் அடையும் புணர்த்துக் கூறினார். துரப்ப என்பது காரியப்பொருட்டாக வந்த இறந்தகாலங் காட்டிய செயவெனெச்சம். [3]"ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப' என்றார் பிறரும். (௬௨)

வாகுகன், குதிரைகளை அவிழ்த்துக் கட்டிவிட்டுச் சமைக்க ஒருப்படல்

௩௬௩. ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவைஆற்றிக்
கோதில் அடிசில் குறைமுடிப்பான்—மேதிக்
கடைவாயில் கார்நீலம் கண்விழிக்கும் நாடன்
மடைவாயில் புக்கான் மதித்து.

(இ - ள்.) மேதி கடைவாயில் கார்நீலம் கண்விழிக்கும் நாடன் - எருமைகளின் கடைவாயிடத்தே (மேய்ந்து குதட்டுகின்றபோது) கருங்குவளை அரும்பானது பூவாக மலருகின்ற நிடதநாட்டு வேந்தனான நளன், ஆதிநெடும் தேர் பரிவிட்டு அவை

1. திருமுருகு. ௬௧. 2. தொல். அகத்திணை : ௫.
3. சிலப். ௧0 : ௪.

ஆற்றி-முதன்மையான நீண்ட தேரில், பூட்டியிருந்த குதிரைகளை அவிழ்த்துவிட்டு அவைகளை இளைப்பாற்றி, கோதுஇல் அடிசில் குறைமுடிப்பான் மதித்து - குற்றமற்ற சமையல் முடித்தலாகிய தான் செய்யவேண்டிய வேலையின் அறுகுறையை முழுதும் முடிப்பதற்கு எண்ணங்கொண்டு, மடைவாயில் புக்கான் - சமைய லறைக்குச சென்றான்.

(க - து.) வாகுகனாகிய நளன், தேர்க்குதிரைகளை அவிழ்த்துவிட்டு, அவைகளைக் களைப்பாற்றியபின் சமையல் தொழிலை முடிக்கக் கருதிச் சமையலறைக்குச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) ஆதி - பழமையென்ற பொருளில் வாராது ஈண்டு முதன்மையென்ற பொருளில் வந்தது. மற்ற எல்லா வகைத்தேரினும் இஃது உயர்ந்ததென்னும் பொருளது என்பதை விளக்க நெடுந்தேர் என்னும் சொல்லாற் குறித்ததூஉமறிக. பரி - குதிரைகள்: சாதியொருமை. விட்டு - அவிழ்த்துவிட்டு என்னும் பொருளது. அவை : பன்மை. மேதி - எருமை. கடைவாயில் - வாயிற்கடை என மொழி மாற்றுக: இது சொல்நிலை மாறிய இலக்கணப் போலி. கார்நீலம் - கருநிறமுள்ள குவளைமொட்டு. குவளை தன் அரும்பு அவிழ்ந்து மலர்தலை 'கண் விழிக்கும்' என்றார். அது இளநங்கையர் இருவிழி போன்றிருத்தலால் 'கண்' என்றார்: உவம ஆகுபெயர். குவளையை மேய்ந்து செல்லும் எருமைகள், தம் வாயிற்கொண்ட குவளைக் கொடிகளைச் சிறிது சிறிதாக மென்றுகொண்டு வாய்க்குள் அடக்குங்கால் அக்கொடி களில் மலரும் பருவத்திலுள்ள பேரரும்புகள் அவ்வதிர்ச்சியினால் மலர்கின்றன. அத்தகைய நீர்வளனும் நிலவளனுஞ் செறிந்தநாடு, நிடதநாடு; அந்நாட்டுக்குரிய வேந்தன் இன்று என்ன செய்கின் றான்? தேரோட்டுகின்றான்; குதிரையை அவிழ்த்து விடுகின்றான்; அவைகட்குக் களைப்பாற்றுகின்றான்; பின்னர் மடைத்தொழில் புரிகின்றான் எனக் கழிவிரக்கங் கொள்வாராய், அவன் அரசாட்சிச் சிறப்பும் பண்பும் பிறவும் கூறி, இவ்வாறு 'கடைவாயில்......... மதித்து' என்றார். புகு + ஆன் = புக்கான் எனத் தன்னொற்றிரட்டி இறந்தகாலம் காட்டிற்று, நக்கான் என்பதுபோல. (ருக)

வாகுகன் சமையல் தொழிலால் சோறு கறிகள் நிரம்புதல்

ருஅஎ. ஆதி மறைநூல் அனைத்தும் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாமல் எல்லாம் நிரம்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை.

(இ - ள்.) பொன்தேர் வரபாகன் புக்கமனை - அழகுமிக்க தேரோட்டுந் தொழிலிற் சிறந்த வாகுகனென நளமன்னன் புகுந்த மடைப்பள்ளி வீடானது, ஆதிமறை நூல் அனைத்தும் தெரிந்து உணர்ந்த - பழமையான வேதநூல் முதலிய அறநூல்கள் யாவற்றையும் கற்றுத் தெளிந்த, நீதிநெறி ஆளர் நெஞ்சம்போல் - உயர்ந்த வழியில் நடக்கின்ற பெரியோர் மனம் (நல்ல அமைதியான பண்புகளில் நிரம்பியிருப்பது) போல, யாதும் நிரப்பாமல் எல்லாம் நிரம்பிற்று - (நெருப்பு நீர் விறகு முதலிய சமைத்தற்கு வேண்டும் பொருள்களில் எதுவும் பிறர் கொண்டுவந்து நிறைக்காமலே சோறு கறிகள்) யாவும் வந்து நிரம்பின.

(க-ரு.) வாகுகன் புகுந்த மடைப்பள்ளி இடமானது, நீதிவழியில் நடக்கின்ற பெரியோர் மனம்போன்று நெருப்பு நீர் முதலிய எந்தப் பொருள்களும் இல்லாமலே சோறு கறிகள் யாவும் நிரம்பியிருந்தன என்பதாம்.

(வி - ரை.) ஆதி - பழமை [1]'ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதி' எனத் திருவாசகத்தும், [2]'ஆதி பகவன் முதற்றே உலகு' எனத் திருக்குறளினும், 'ஆதித் தனிக்கோலம் ஆனான்' என இந்நூலகத்தும் ஆதி என்ற சொல் பழமை என்னும் பொருளில் வழக்குற்று வருதலையறிக. மறைபொருள்களையுடையது மறையெனப்பட்டது. மறைபொருளாவது காண்டற்கரிய - எளிதில் ஆய்ந்துணர்தற்கரிய பொருள் என்னும் பொருளாது. காண்டற்கரிய பொருள்களாவன மக்கட்கு வேண்டிய அன்பு அருள் கொடை வாய்மை முதலியவான அரும்பொருள்கள். இவ்வரும்பொருள்களை யெல்லாம் நன்கு ஆய்ந்துணர்ந்த பெரியார் நெஞ்சம் [3]'அறனறிந்தேம்; ஆன்ற பொருள் அறிந்தேம்; இன்பின் திறனறிந்தேம்; வீடுதெளிந்தேம்' என்று இன்புற்று இருக்கும் மன அமைதித் தன்மையே நிறைவு. இந்நிறைவு பெற்றோர்க்கு உலக நிலையாமை உணர்வும், அதுகாரணமாக யான் எனது என்னும் செருக்கும் நீங்கி உண்மை உணர்வே மேலோங்கி நிற்க, அதனால் மனக்குறைவின்றி இடுக்கண் வரினும் அதற்கு ஏங்காது அதற்கும் மகிழ்கொண்டு வாழ்வாராதலின், அம்மன நிறைவை நளமன்னன் சென்று மடைப்பள்ளியில் சோறும் கறியும் நிறையத் தன் விஞ்சையால் அமைத்த சிறப்புமுறைக்கு உவமையாக்கி 'நெறியாளர் நெஞ்சம்போல்' என்று கூறினார். சமைத்தற்கு வேண்டும் பொருள்களான, விறகு, நீர், நெருப்பு இன்றியே தான் பெற்ற வரத்தின் உதவியால் எளிதில் இவ்வுணவுப் பொருள்கள்

1. திருவாசகம், திருவெம்பாவை: க. 2. திருக்குறள், க.
3. திருவள்ளுவ மாலை, ௫.

நிரம்ப மடைப்பள்ளிக்கட் பெருக்கினுன். ஆதலால் அச்சிறப்புத் தோன்ற, 'யாதும் நிரப்பாமல் எல்லாம் நிரம்பிற்றே' என்ருர். பொன்தேர் - பொன்னுல் இயன்ற தேரென்னலுமாம். வரம்+பாகன் — வரப்பாகன் = வரம்பெற்ற மடைத்தொழிலாளன்; மேன்மை பொருந்திய தேரோட்டுவோன் என்றலுமாம். உணவு முதலியவற்றை அறுசுவையும் பொருந்தப் பாகம் செய்வோன், 'பாகன்' எனப் பெற்ருன். சுயம்வரம் நிகழ்வதற்குமுன் தமயந்தி பால் தேவர்கள் வேண்டுகோட் கிணங்கித் தூதுபோய் வந்த நன் றிக்குக் கைம்மாருக ஒவ்வொருவரும் நீர் முதலியன இன்றிச் சமைக்கின்ற வித்தை வரும்படி வரம் ஈந்தாராகலின் அதை உட் கொண்டு, 'வரப்பாகன்' என்ருர். (ருச)

தமயந்தி, தன் தோழியிடம் கூறல்

ருஅஅ. இடைச்சுரத்தில் தன்னை இடையிருளில் நீத்த
கொடைத்தொழிலான் என்றயிர்த்த கோமான்—
மடைத்தொழில்கள்
செய்கின்ற எல்லாம் தெரிந்துணர்ந்து வாவென்ருள்
நைகின்ற நெஞ்சாள் நயந்து.

(இ - ள்.) நைகின்ற நெஞ்சாள் - தன் கணவன் பிரிவினுல் வருந்துகின்ற மனத்தையுடையவளாகிய தமயந்தியானவள், நயந்து - விரும்பி, இடை சுரத்தில் இடைஇருளில் தன்னை நீத்த - நடுக்காட்டில் நடு இரவில் தன்னைத் தனியே விட்டுப்பிரிந்த, கொடை தொழிலான் என்று அயிர்த்த கோமான் - ஈகையாளுகிய நளமன்னனென்று தன்னுல் ஐயங்கொள்ளப்பட்ட (வாகுகனென்னும்) தலைவனுடைய, மடைத் தொழில்கள் செய்கின்றது எல்லாம் தெரிந்து உணர்ந்துவா என்ருள் - சமையல் முறைகளையெல்லாம் கண்டு அறிந்துஉணர்ந்து வருவாயாக என்று தன் தோழியொருத் திக்குச் சொல்லி அனுப்பினுள்.

(க - து.) தமயந்தியானவள், தன் கணவரோ என்று ஐயங்கொண்ட வாகுகனிடம், தோழி ஒருத்தியை அழைத்து அவன் மடைத்தொழில்கள் செய்பவை யெல்லாம் கண்டறிந்துணர்ந்து வருகவென்று கூறியனுப் பினுள் என்பதாம்.

(வி - ரை.) இடைச்சுரம், இடையிருள் என்பன சொல் நிலை மாறிய இலக்கணப் போலி. இவை காட்டின் கொடுமையையும் பிரிதற்கியலாத காலத்தையும் உணர்த்தின. கொடைத் தொழி

லான், 'இல்லையென்றிரப்போர்க்கு இல்லையென்றுரையாத இதயம்' படைத்தவன். இது குறிப்புவினையாலணையும் பெயர். அயிர்த்தல்-சந்தேகித்தல். கோமான் - தலைவன்; மன்னன். மடைத் தொழில்கள் என்று பன்மையாற் கூறியது, சோறு கறி குழம்பு முதலியவற்றை ஆக்குதலான் என்க. தமயந்தி தன் கணவன் தன்னைக் காட்டில் நடு இரவில் தன்னந்தனியாக விட்டுச்சென்றது முதல் அவனையே நினைந்து நினைந்து மனம் உடைந்துபோய் வருந்திய வண்ணமாயிருந்தாளாதலான், 'நைகின்ற நெஞ்சாள்' என்ற பெயர் கொடுத்துரைத்தார். 'தெரிந்துணர்ந்துவா' என்னும் முன்னிலை ஏவலொருமை வினைகொண்டு எழுவாயுருபாகத் தோழி யென்று வருவித்துரைப்பட்டது. நயப்பு - விருப்பம். அது நயந்து என வினையெச்சமாயிற்று. (௫௫)

## தமயந்தி, மற்றொரு தோழியை அனுப்பி வாகுகனிடம் தன் மக்களை விட்டுவரக் கூறுதல்

௩௯௬. கோதை நெடுவேல் குமரனையும் தங்கையையும்
ஆதி அரசன் அருகாகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செயல்நா டென்றாள்
வளையாடும் கையாள் மதித்து.

(இ - ள்.) வளை ஆடும் கையாள் மதித்து - வளையல்கள் மேற் போவதும் கீழிறங்குவதுமாக அசைந்தோடிக் கொண்டிருக்கின்ற கைகளையுடைய தமயந்தியானவள் நன்றாக எண்ணி முடிபுசெய்து, கோதை நெடுவேல் குமரனையும் தங்கையையும்-மலர்மாலை யணிந்த நீண்ட வேலினையுடைய மகன் (இந்திரசேனனையும்) அவன் தங்கை (இந்திரசேனை)யையும், ஆதி அரசன் அருகு ஆக போக விளையாடவிட்டு - நம் முன்னை அரசனென்று கருதப்படுகின்ற வாகுகன் பக்கத்தில் விளையாடும்படி விட்டுவிட்டு, அவன்மேல் செயல்நாடு என்றாள் - அதற்குமேல் அவனுடைய செய்கைகளைக் கண்டறிந்து வருகவென்று (பின்னுமோர் தோழியிடம்) சொல்லி யனுப்பினாள்.

(க - து.) தமயந்தியானவள், பின்னுமோர் தோழியை நோக்கி, 'என் மகனையும் அவன் தங்கையையும் எம் கணவனென்று ஐயங்கொண்டுள்ள அரசன்பால் கொண்டுபோய் விளையாட விட்டுவிட்டு மேல் நடக்கின்றவைகளைக் கண்டறிந்து வா'வென்று கூறியனுப்பினாள் என்பதாம்.

(வி - ரை.) கோதை - மாலை. அரசர்கட்கு வேல்தாங்குதல் மரபாகலான் இவன் அரசகுமரன் ஆதலால் அவ்வடை கொடுத்துக் கூறப்பட்டது. தமயந்தி தன் மக்கள் இருவரையும் தன் கணவனென்று ஐயப்படுகின்ற வாகுகன்பால் அனுப்பி விளையாடவிட்டு, மேல் அங்கு நிகழ்வதை அறிந்து வருகவென்று தோழியொருத்தியை அனுப்பினாளெனக் கொள்க. ஆதி அரசன் - முன்புள்ள மன்னன். வளையாடுதல் - வளையல்கள் அசைந்துகொண்டு செல்லுதல். அன்றிச் சங்க இரேகையுள்ள கையென்றலுமாம். [1]"வளையாடும் வண்கைப் பொலன்சங் கொடும் பொங்க" என்றார் குமரகுருபர அடிகளாரும். போத : புகுத என்பதன் மரூஉ மொழி. (௫௯)

வாகுகன், மக்களைத் தழுவிக்கொண்டு வினவல்

௩௬௦. மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காள்நீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்கள் என்றுரைத்தான்
வன்மக் களியானை மன்

(இ - ள்.) வன்மக் களியானை மன் - பகைமைத் தன்மை கொண்ட மதயானையையுடைய வாகுகனாகிய நளமன்னன், மக்களை முன்காணா - தன் புதல்வர்களைத் தன் எதிரே கண்டு, மனம் நடுங்கா வெய்து உயிரா - (வருத்தங்கொண்டு) மனம் பதைத்துப் பெருமூச்சுவிட்டு, புக்கு எடுத்து வீரபுயத்து அணையா - (விரைந்து அவர்பாற்) சென்று அவர்களைத் தூக்கியெடுத்து வீரமிக்க தன் தோள்களில் அணைத்துக்கொண்டு, மக்காள் - குழந்தைகளே! 'நீர் என் மக்கள் போல்கின்றீர் - நீவிர் இருவரும் என் புதல்வர்களைப் போலவே இருக்கின்றீர், யார் மக்கள் என்று உரைத்தான் - (நீவிர்) யார் பெற்ற மகக்ள் என்று கேட்டான்.

(க - து) வாகுகன், மக்களைக் கண்டவுடன் மனம் நடுங்கிப் பெருமூச்சுவிட்டு விரைந்தோடித் தூக்கியெடுத்து, 'நீர் இருவரும் என் மக்களைப்போலவே இருக்கின்றீர்; நீர் யார் பெற்ற புதல்வர்கள்?' என்று கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) நடுங்கா உயிரா அணையா என்பன செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். நளன் தன் மக்களைக்

1. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், அ௪.

கண்டதும் அந்தோ இத்தகைய புதல்வர்களையும் காலக்கோட் பாட்டால் பிரிந்து இருக்க நேர்ந்ததேயென்று மனத்தில் வருத்தங் கொண்டானாதலால் 'மனம் நடுங்கா' என்றார். வருத்தம் மிகுந்த விடத்துப் பெருமூச்சு விடுவது இயல்பு. [1]"ஊதுலைக் குருகின் உயிர்த்தனன்" என்றார் இளங்கோவடிகளும். உடனே, விரைந் தெடுத்துத் தழுவி அக் குழந்தைகளின மொழிகளைக் கேட்க விரும்பி 'என் மக்கள் போல்கின்றீர் யார் மக்கள்?' என்று வினவினான் என்க. முற்றத்துறந்த முனிவர்களாயினும் குழந்தைமேல் பற்றறுதல் கூடாததும் முடியாதது மாகுமாதலால் நளனுக்குத் தன் மக்களைக் கண்டதும் மனம் உருகிற்றென்க. நைடதக் காப்பியத்தில் நளன் தன் மக்களைக் கண்டதும், வருந்தி நின்ற நிலையை,

> [2]"அடைந்த மக்களைக் காண்டலும் அழலிடு மெழுகின்
> உடைந்த துள்ளம்நீர் ஊற்றிருந் தொழுகின நெடுங்கண்."

என்றதும் காண்க. (௯எ)

வாகுகனுக்குப் புதல்வர்கள் மறுமொழி கூறல்

௩௯௧. மன்னன் நிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்னைதனைக் கான்விட் டவன்ஏக—இந்நகர்க்கே
வாழ்கின்றோம் எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான் என்றார் அழுது.

(இ - ள்.) (பிள்ளைகள் நளனை நோக்கி) மன்னன் நிடதத் தார் வாழ்வேந்தன் மக்கள் யாம் - நாங்கள் பேரரசனும் நிடத நாட்டு மக்கள் வாழ்வுக்குக் காரணனுமாகிய நளமன்னனுடைய புதல்வராவோம், அவன் அன்னைதனை கான்விட்டு ஏக - அவ் வேந்தன் எம் தாயாகிய தமயந்தியைக் காட்டில் விட்டுவிட்டுப் பிரிந்து செல்ல, இந்நகர்க்கே வாழ்கின்றோம் - இந்தக் குண்டின புரத்தில் (எம் அன்னையாரோடு) வாழ்ந்துகொண்டிருக்கின்றோம், எங்கள் வளநாடு மற்று ஒருவன் ஆள்கின்றான் என்றார் அழுது - எங்களுடைய செழிப்புமிக்க நிடத நாட்டை வேறோர் அரசன் இப்போது ஆட்சிபுரிந்து வருகின்றான் என்று அழுதபடியே கூறினார்கள்.

(க - து.) 'நாம் நிடதநாட்டுக்கு வேந்தனான நள னுடைய மக்கள்; நாங்கள் எம் அன்னையாரோடு இந்நகரில்

---

1. சிலப். கரு : சஙு. 2. நைடதம், தேவியை. கஙு.

இருக்கின்றோம்; எங்கள் நிடதநாட்டை வேறொருவன் ஆட்சிபுரிந்து வருகின்றா' னென்றார் என்பதாம்.

(வி - ரை.) மன்னன் - நிலை பெற்றோன்; அரசன். உலகில் அல்லன கடிந்து நல்லன புரிந்து வருவதால் எல்லா நலமும் நாட்டில் நிலைபெற நிற்கச் செய்யும் வாய்ப்பினால் மன்னன் எனப்பட்டது. என்னை ?

[1]'மாதவர் நோன்பும் மடவார் கற்பும்
காவலன் காவல் இன்றெனின் இன்றால்.'

என்பது ஆன்றோர் கருத்தாகலின். நிடதத்தார் - நிடத நாட்டுக்குரிய குடிகள். வாழ்வேந்தன் - வாழுதற்குரிய வேந்தன். அவர் வாழ்க்கை செம்மைப்படத் தககாங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால் ஒத்து நெடுநுகத்துப் பகல்போல் நடுநின்று, ஆட்சி புரிந்து வாழ்வை வகுத்துக்கொடுப்போன்; எனவே நெறி முறை தவறா மன்னன் என்பதாம். அன்னையெனப் பொதுப்படக் கூறினார், அரசன் தேவி உலகிலுள்ள எவர்க்கும் தாயாம் என்ற கருத்தினால்.

[2]'தன்னை அளித்தாள் தமையன் மனைகுருவின்
பன்னி அரசன் பயில்தேவி - தன்மனையைப்
பெற்றாள் இவர்ஐவர் பேசில் எவருக்கும்
நற்றாயர் என்றே நவில்.'

என்னும் நீதி வெண்பா உரையினாலும் இஃதுணரப்பெறும். இந்நகரில் என்பது, இந்நகர்க்கு என வந்தது வேற்றுமை மயக்கம். மேல் 'நிடதத்தார் வாழ்வேந்தன்' என்றதோடமையாது, தம் நாடு பறிபோய் வேறொரு வேந்தன் ஆட்சிக்கு உள்ளானது பொறாது விம்முதல் கொண்டவராய் உரிமை பாராட்டி, 'எங்கள் வளநாடு' என்றார். தம் அரசுரிமையை நெறியல்லா நெறியிற் கவர்ந்தவன் பெயர் சொல்வதற்குக்கூட ஒருப்படாத நெஞ்சினராய் 'வேறொருவன் ஆள்கின்றான்' என்றார். இவைகள் ஒவ்வொன்றும் அலைஅலையாக ஒன்றன்பின் ஒன்றாக வந்து தம் நெஞ்சகத்தை அலைப்ப அதுபொறாது விம்முதலுற்று நின்ற நிலையை 'அழுது' என்ற சொல்லால் உணர்த்தினா. இதனால் இளங்குழந்தைகளானும், மறக்குடியில் பிறந்து வளரும் வாய்ப்புடையவராகலான், தம் நிலைமாறி ஊழால் கீழ்மை யடைந்தமை பொறாராய்த் தம் வீர மரபின் மாண்பு தோன்றச சினத்தோடு மறுமொழி கூறினமை விளக்கியவாறும். (௩அ)

1. மணிமேகலை, உஉ: உ0அ - க. 2. நீதிவெண்பா, சஉ.

மக்கள் மொழியைக்கேட்ட வாகுகன் வருந்துதல்

கூகூஉ. ஆங்கவர் சொன்ன உரைகேட் டழிவெய்தி
நீங்கா உயிரோடு நின்றிட்டான்—பூங்காவின்
வள்ளம்போல் கோங்கு மலரும் திருநாடன்
உள்ளம்போல் கண்ணீர் உகுத்து.

(இ - ள்.) பூங்காவில் வள்ளம்போல் கோங்கு மலரும் திருநாடன் - பூஞ்சோலைகளில் கிண்ணம் போன்று கோங்கரும்புகள் மலர்கின்ற அழகிய நிடதநாட்டு வேந்தனாகிய நளன், ஆங்கு அவர் சொன்ன உரைகேட்டு அழிவு எய்தி - அவ்வாறு அழுதபடியே அக்குழந்தைகள் கூறிய சொற்களைக் கேட்டுணர்ந்து மனச்சோர்வுற்று வருந்தி, உள்ளம்போல் கண் நீர் உகுத்து - தன் மனம் உருகி வழிவதுபோலத் தன் கண்ணீர் கலகலவென்று பாய்ந் தோடச் சொரிந்து, நீங்கா உயிரோடு நின்றிட்டான் - தன் உடலை விட்டுச் செல்லாமல் (ஊசலாடிக் கொண்டிருக்கின்ற) உயிரோடு ஒன்றும் தோன்றாமல் அசைவற்று நின்றுகொண்டிருந்தான்.

(க - து.) பிள்ளைகள் சொன்ன அம்மொழியைக் கேட்ட நளமன்னன், மிக வருத்தங்கொண்டு கண்ணீர் சொரிந்து ஊசலாடிக்கொண்டிருக்கும் உயிரோடு நின்று கொண்டிருந்தான் என்பதாம்.

(வி - ரை.) ஆங்கு - அவ்விடம் என்று பொருள் கூறலுமாம். அழிவு எய்தல் - வருத்தங்கொள்ளல். நீங்கா உயிர் என்பதில் கடைக்குறைந்து நின்றது: எதிர்மறைப் பெயரெச்சம். நின்றிட் டான் என்பதிலுள்ள இடு, பகுதிப்பொருள் விகுதி. இடு பகுதிப் பொருளல்லவென்று மயங்குவாருமுளர். வள்ளம் - கிண்ணம். கோங்க மலர் கிண்ணம் போன்றிருத்தலால் உவமவுருபு கொடுத்துக் 'கிண்ணம்போல் கோங்குமலரும்' என்றார். தன் மக்களை நேரில் கண்டதும் மனமுருகிக் கரைய நின்றான் ஆத லால், அன்பினாற் கண்ணீர் வார நின்ற செயலுக்குத் தொழி லுவமமாக்கி 'உள்ளம்போல்' என்று கூறினார்.

"[1] அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்
புன்கணீர் பூசல் தரும்.'

என்பது தேவர் மறையாகலான், அன்புக்கு அடையாளமாகக் 'கண்ணீர் உகுத்'தென்ற சொற்பெய்து உரைத்தார். (கூக)

1. திருக்குறள், எக.

வாகுகன், குழந்தைகளைப் பார்த்து வினவுதல்

௩௯௩. உங்கள் அரசொருவன் ஆளநீர் ஓடிப்போந்
திங்கண் உறைதல் இழுக்கன்றே—செங்கை
வளவரசே என்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி எடுத்து.

(இ - ள்.) *மாதவத்தால் பெற்ற* - (வாகுகனாகிய நளன் தான்) பெரிய தவத்தால் பெற்றெடுத்த, *இளஅரசை நோக்கி* - (தன் மகனாகிய இந்திரசேனனென்னும்) இளவரசனைப் பார்த்து, *செங்கை வள அரசே* - சிவந்த கைவளமுடைய இளவேந்தே!, *உங்கள் அரசு ஒருவன் ஆள* - உங்களது உரிமையாகிய அரசாட்சியைக் கைப்பற்றிக்கொண்டு வேறொருவன் ஆண்டுகொண்டிருக்க, *நீர் ஓடிப்போந்து* - நீங்கள் (அவனுக்கு அஞ்சி) ஓடிவந்து, *இங்கண் உறைதல் இழுக்கு அன்றே என்று எடுத்து உரைத்தான்* - (உன் தாய் பிறந்த இடமாகிய) இந்த நகரில் வாழ்ந்திருத்தல் மானக் குறைவன்றோ என்று விளக்கமாகக் கூறினான்.

(க - ரை.) வாகுகனான நளன், தன் புதல்வனாகிய இளவரசனை நோக்கி, 'வேந்தே! உங்கள் அரசாட்சியைக் கைப்பற்றிக்கொண்டு வேறொரு மன்னன் தனக்குரிமையாக ஆள, நீங்கள் அவனுக்கு அஞ்சி வந்து இங்கே வாழ்தல் மானக் கேடல்லவா?' என்று கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) உங்கள் அரசு: ஆறும் வேற்றுமைத் தொகை. ஒருவன் - வேறு ஒருவன்; சிறிதும் உங்களுக்கு உரிமையில்லாதவன் என்று கூறியபடி. ஓடிப்போதல் - ஓடிவருதல். இங்கண் - இவ்விடம்; ஈண்டுக் குண்டினபுரம். இழுக்கு - இழிவு. அன்றோ என்பதில் ஓகாரம் வினாப்பொருள். செம்கை - சிவந்த கை. வளம் - கொடை, அல்லது செல்வமென்றலுமாம். மாதவம் - பெரிய தவம். பெரிய தவமாவது செயற்கரிய செய்து மகனைப் பெறவேண்டி முயன்ற கடமை.

[1]'மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை
என்னோற்றான் கொல்எனுஞ் சொல்.'

என்னும் வள்ளுவர் மறைமொழிக் கருத்தும் அரும்பெறற் புதல்வரைப் பெறுதற்குப் பெருந்தவஞ் செய்யவேண்டு மென்பதைச் சுட்டுகின்றது காண்க. எடுத்தல் - பெருங்குரலெடுத்துப் பேசுதல். எடுத்தல், இப்பொருள் தருதலை,

1. திருக்குறள், ௭0.

> "[1] எடுத்தல் படுத்தல் நலிதல் உழப்பின்
> திரிபும் தத்தமில் சிறிதுள ஆகும்.'

என்னும் நன்னூல் நூற்பாவில் உயர்த்திக் கூறுதலை, எடுத்தல் என்றதூஉம் அறிக. (கூ0)

**இந்திரசேனன் சினந்து வாகுகனுக்கு மறுமொழி கூறுதல்**

௩கூச. நெஞ்சால்இம் மாற்றம் நினைந்துரைக்க நீஅல்லால்
அஞ்சாரோ மன்னர் அடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலாய் எங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி.

(இ - ள்.) (இளவரசன் நளனை நோக்கி) அடுமடையா - சமையல் தொழில் புரிகின்றவனே!, எஞ்சாது தீமையே கொண்ட சிறுதொழிலாய் - எப்போதும் தவறாமல் இழிவேகொண்ட கீழ்மையான தொழில்களையுடையவனே!, நெஞ்சால் இம்மாற்றம் நினைந்து உரைக்க - இவ்வாறு (நீங்கள் ஓடிப்போந்து இங்கண் உறைதல் இழுக்கென்று) கூறுஞ் சொல்லை மனத்தால் நினைந்து சொல்வதற்கு, நீ அல்லால் மன்னர் அஞ்சாரோ - நீயேயல்லாமல் அரசர்களும் கூடக் கூறுவதற்குக் கூசமாட்டார்களோ?, எம் கோமான் வாய்மையே வலிகண்டாய் - எம் அரசனாகிய நளனின் உண்மை நெறியே உறுதியாகும் என்பதை நீ அறிவாயாக. (மற்றவைகளை அவன் மதித்து நடப்பதில்லை யென்றபடி.)

(க - து.) இளவரசன் வாகுகனை நோக்கி, 'ஏ மடையனே! சிறுமைத்தொழில் புரிவோய்! நெஞ்சினால் எண்ணிப் பார்த்து இவ்வாறு இங்கண் உறைதல் இழுக்கென்று கூறுஞ்சொல், உன்னையன்றி மன்னர்களும்கூற மனங் கூசுவர்; எம் வேந்தன் உண்மைநெறியே உறுதியென்பதை அறிக' என்றான் என்பதாம்.

(வி - ரை.) நெஞ்சால் என்பதில் மூன்றனுருபு கருவிப் பொருளில் வந்தது. மாற்றம்: சொல். மறுதலையான நேர்மையற்ற மொழி. அல்லால்: குறிப்பு எதிர்மறை வினையெச்சம். அஞ்சாரோ என்பதில் ஓகாரம் வினாப்பொருட்டு. மன்னரும் என்பதிலுள்ள உம்மை விகாரத்தால் தொக்கது.

> "[2] சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
> வெல்லுஞ்சொல் இன்மை அறிந்து.'

1. நன்னூல், அஅ. 2. திருக்குறள், ௬கூச.

என்பது, சொல்லின் தொகையுணர்ந்த நல்லார் கண்ட முடிபு. இம்முறையில் யாரிடம் எவ்வாறு பேசுவது, எதைக் கூறுவது, எவ்விடத்து எதையுரைப்பது என்று எண்ணுமல் கூறிய மாற்றத்தைக் கேட்டதும் தன் தொழிலுக்கேற்பத் தன் சூழ்நிலைக் கேற்பவே இவன் பேசுகின்றுனென்று சினங்கொண்டவனுய் 'நீ அல்லால் அஞ்சாரோ' என்றதோடமையாது 'அடிமையடையா' என்றான்; அதனேடும் அவன் சினந்தணியாது 'சிறுதொழிலாய்' என்றும் கூறினுன். வாய்மை - உண்மை நெறி. அல்லது மெய்யே உரைத்தல். தன் தந்தையாகிய நளன் உண்மைநெறி யொன்றே பற்றியொழுகுவோன்; அதற்குப் புறம்பான வேறென்றையும் மதிப்பதில்லை. தான் உண்மை நெறியை நிலைநாட்டுதற்கே தான் சூதுப்பணயமாக வைத்தாடிய நாடு நகரத்தையெல்லாம் புட்கரனுக்கே விட்டுவிட்டு வந்தான்; உண்மை தவறி நடப்பதாக இருந்தால் அவனைப் போர்செய்து வென்று நாட்டைக் கைப்பற்றியிருக்கலாம். அது தகாதென்றே கருதி விட்டுவிட்டு வந்தது இழுக்கா? இதனைத் துணிந்து கூறுவோர் உன்போன்ற சிறுதொழிலும் சிற்றினப் பழக்கமும் கொண்டவர்க்கே தகுமென்றும், பெருந்தன்மைமிக்க அரசர்களும் துணிந்து கூறுதற்கு ஒருப்படார் என்றும் வாகுகனுக்கு இடித்துரைத்தான், அரசிளங் குமரன்; தன் தந்தையைப்பற்றி இழித்துக் கூறிய வெஞ்சொல் தாங்காத உள்ளத்தவனுய் என்க. இது உண்மையன்புள்ளாரிடத்து இயற்கையாக எழும் உள்ளக் கசிவு.

சமயகுரவர்களுள் ஒருவராகிய திருநாவுக்கரசு நாயனுரிடத்து அளவிறந்த அன்புகொண்டவர் அப்பூதி நாயனுர். திருநாவுக்கரசர் வேளாண் குலத்தினர்; அப்பூதியடிகள் அந்தணர் மரபினர்; அன்பிற்கு அடைக்கும் தாழ் எது? அது சாதி சமயம் முதலிய கட்டுக்களைக் கடந்ததன்றே? அவ்வன்பினுல் நாவரசரைத் தம் ஆசிரியராக, அருட்குரவராகக் கொண்டார். முன்பின் இருவரும் ஒருவரை ஒருவர் கண்டு உரையாடியதில்லை. நாவுக்கரசர் செய்துபோதரும் சைவநன்னெறி முறைகளைக் கேள்வியுற்றே அவர்பால் அன்புகொண்டார். அதனுல் அவர் தாம் செய்துபோதரும் தண்ணீர்ப்பந்தர் முதலிய அறவிடுதிகட்கும் தம்புதல்வர்கட்கும் பிறவற்றுக்கெல்லாம் தம் அருட்குரவராகிய நாவரையர் பெயரையே இட்டு வழங்குவதானுர். இஃது இவ்வாறு நிகழ, அடிகளார் ஒருகால் இறைகோயில்கள் தோறுஞ் சென்று வழிபாடு செய்துவந்தார்; வருங்கால் வழியில் ஒரு தண்ணீர்ப் பந்தல், அதில் தம் பெயர் பொறித்திருந்ததைக் கண்டார்; வியந்தார்; உசாவி அறிந்து அப்பூதியடிகள் ஊராகிய திங்களூருக்குச் சென்றுர்; கண்டார்; அவர் இவரை யாரோ துறவுக்கோலம் பூண்ட ஒரு பெரியாரென்று வணக்கங்கூறி இருக்கை கொடுத்து

அமரச்செய்தார். இருவரும் அளவளாவி உரையாடினர். அது காலைத் திருநாவுக்கரசர் 'ஐய! தாங்களமைத்த தண்ணீர்ப்பந்தர், மடம் முதலியவைகட்குத் தங்கள் பெயரைச் சூட்டாது வேறொரு பெயர் தீட்டியுள்ளதே' என்றார். இதைக் கேட்டதும் அப்பூதியடிகட்குச் சினம் மூண்டது. 'ஐய! நீர் துறவுக்கோலம் பூண்டு சைவ நன்னெறியில் ஒழுகுபவர்போற் காட்சியளிக்கின்றீர் ; அவ்வாறிருந்தும் எம்பெருமான் திருநாவுக்கரசரின் பெருமையுணராதவராக இருக்கின்றீர் ; அவர் கல்லைத் தெப்பமாகக் கொண்டு கடலைக் கடந்து கரையேறிய செயற்கருஞ் செயலை உலகில் கேட்டறியாதவர் எவருமே இரார் ; நீரோ தவக்கோலம் பூண்ட துறவி ; திருநீறு, கண்டிகளணிந்த திருமேனியீர் ; இம்மங்கலக் கோலமுள்ள நீர் அறியாதிருக்கின்றீர்? எந்த உலகத்தில் இருக்கின்றீர் ; உம்மைப்பற்றி அறிந்துகொள்ளவேண்டு' மென்று கடுகடுத்து மொழிந்தார். இதனைச் சேக்கிழார் பெருமான்,

[1]"பொங்குகடற் கன்மிதப்பிற்
போந்தேறும் அவர்பெருமை
அங்கணரும் புவனத்தின்
அறியாதார் யாருளரே
மங்கலமாம் திருவேடத்
துடனின்றிவ் வகைமொழிந்தீர்
எங்குறைவீர் நீர்தாம்யார்
இயம்புமென இயம்பினார்.'

என, தாம் ஆக்கிய திருத்தொண்டர் புராணத்துள் அழகுற எடுத்தமைத்து அருளுவாராயினர் இவ்வாறான உணர்ச்சி வயத்தால் அரசிளங்குமரனாகிய இந்திரசேனனுக்குத் தன் தந்தையைக் குறித்து மாறுபட்ட கருத்துடன் பேசிய உரை கேட்டதும் சினம் மூண்டதென்க. (சுக)

இதுவும் அது

நூகூரு. எந்தை கழல்இணையின் எம்மருங்கும் காணலாம்
கந்து சுளியும் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள்
மணிமுடியில் தேய்ந்த வடு.

1. பெரியபுராணம், அப்பூதி : கரு.

(இ - ள்.) (வாகுகனே! இன்னும் எந்தை பெருமையைக் கேள்) பணிமுடியில் பார்காக்கும் பார்வேந்தர் தங்கள் - ஆதிசேடனென்னும் பாம்பால் சுமக்கப்படுகின்ற உலகமன்னர் யாவரும், கந்து சுளியும் கடாகளிற்றின் வந்து - கட்டுத்தறியை முறிக்கின்ற இயற்கையையுடைய வலிமை பொருந்திய ஆண்யானையின்மீது ஏறிவந்து, தாழும் மணிமுடியில் தேய்ந்த வடு - வணங்குதலால் மணியழுத்திய முடிகள்பட்டு அழுத்தி உண்டான சுவட்டுத் தழும்பினை, எந்தை இணைகழலின் எம்மருங்கும் காணல் ஆம் - எந்தந்தையாகிய நளமன்னன் திருவடிகள் இரண்டிலும் எல்லாப் பக்கங்களிலும் அடையாளமாகப் பார்க்கலாம். (எந்தை, அரசர்கள் வணங்கும் ஆண்டகை என்றபடி.)

(க - து.) 'வாகுகனே! இன்னுங்கேள். பேரரசர்கள் யாவரும் யானைமீதேறிவந்து தம் மணிமுடிகள் அழுத்த வணங்குதலால், அம்முடிகள் பட்ட தழும்புகளை எம் தந்தை நளமன்னன் திருவடிகளில் எல்லாப் பக்கத்திலும் காணலாம்' என்றான், இந்திரசேனன் என்பதாம்.

(வி - ரை.) எம் + தந்தை: எந்தை, மரூஉமொழி. கழல்: ஆகு பெயராகக் கால்களுக்கு ஆயிற்று. இணை - இரண்டு. எ + மருங்கு-எந்தப்பக்கமும். இனைத்தென்றறிந்த வினையாகலான் உம்மை முற்றாக வந்தது. கந்து - யானைகட்டும் தூண். சுளிதல்-சினத்தல் என்றலுமாம். கடாக்களிறு: ஒரு பொருட் பன்மொழி. வேற்று நாட்டு வேந்தர்கள் நளமன்னனைக் கண்டு அவன் தயை பெறற் பொருட்டும், சினத்தை மாற்றி அருள்பெறற்பொருட்டும், திறை கொணர்ந்து செலுத்துதற் பொருட்டும் வருங்காலத் தம் மணி முடிகள் நளமன்னன் கால்களில் பதிந்து தழும்பேற வணங்குவ ராதலின், அதனைப் புதல்வன் கூறித் தன் தந்தையேற்றங் கூறினான்.

இவ்வாறே முத்தொள்ளாயிரத்தும் சோழமன்னனுக்குத் திறையளக்கும் பொருட்டு வேந்தர்கள் வந்து நெருங்கிக் காத்துக் கொண்டிருந்தகாலை, அங்கிருந்த வாயில் காப்போன் அவர்களைப் பார்த்து, 'நீங்கள் இப்போது செல்லவேண்டா; பல அரசர்கள் வணங்குதலால் அவர்கள் முடிகள் தாக்கி எம் வேந்தன் கால்கள் புண்ணாக இருக்கின்றன. அதனால் போய்ப் பார்ப்பதற்கு இது காலை ஏற்றதாக இல்லை, எனவே செல்லன்மின்' என்று தடுத்து நிறுத்தியதாகக் கூறும், கருத்தோடொப்பவே நளனை வணங்கியதால் அவன் கால்களில் தழும்பேறியதைக் கூறினார். அப் பாட்டு:

[1] "நின்றீமின் மன்னீர் நெருநல் திறைகொணர்ந்து
முன்தந்த மன்னர் முடிதாக்க - இன்றும்
திருந்தடி புண்ணாகிச் செவ்வி இலனே
பெருந்தண் உறந்தையார் கோ.'

என வருவது கண்டு இன்புறுக. (கூஉ)

வாகுகன் மறுமொழி கூறல்

கூகூகூ. மன்னர் பெருமை மடையர் அறிவரோ
உன்னை அறியா துரைசெய்த—என்னை
முனிந்தருளல் என்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண்.

(இ - ள்.) (இளவரசனை வாகுகன்நோக்கி) மன்னர்பெருமை மடையர் அறிவரோ - அரசர்களுடைய அருமை பெருமைகளை அடிமடையர் அறிவார்களோ?, உன்னை அறியாது உரைசெய்த என்னை - உன் பெருமையறியாமல் பேசிய என்னை, முனிந்து அருளல் என்று - சினந்துகொள்ள வேண்டாவென்று கூறி, கனிந்து உருகி கண் நீர்வார முடிசாய்த்து நின்றான் - மனம் தளர்ந்து கரையக் கண்களிலிருந்து நீர் (தாரைதாரையாகப்) பெருக்கெடுத்தோடத் தலைவணங்கி நின்றான்.

(க - து.) 'ஐயனே! மன்னர்களின் உயர்வை மடையர்கள் அறிவார்களோ? உன் அருமை பெருமை உணராது சொன்னதற்கு என்மீது சினந்துகொள்ள வேண்டா' என்று கூறி, நளன் மனங்கரைந்து கண்ணீர் ஒழுக நின்றான் என்பதாம்.

(வி - ரை.) மன்னர், மடையர் என்பன அவ்வவர்களின் தன்மைகளை விளக்கிநின்றன. மடையர் என்பது சமையல் செய்வோர் என்னும் பொருளோடமையாது, மடையர் - அறிவற்றவர் என இருபொருள் நயந்தோன்றி நிற்றலை அறிக. மடையர்: மடம் என்னும் பண்புப் பெயரடியாகப் பிறந்த குறிப்பு வினைப்பெயர். அறிவரோ என்பதில், ஓகாரம் அறியாரென்ற மறுதலைப் பொருளைத் தருதலால் எதிர்மறை. முனிந்தருளல் - முனியாதே என்னும் எதிர்மறைப் பொருளில் வந்த முன்னிலை ஏவல் வியங்கோள், அல்விகுதி பெற்றுவந்தது. அல்

1. முத்தொள்ளாயிரம், கூஎ.

விகுதி உடன்பாட்டினும் எதிர்மறைப் பொருளினும் வரும். இதனை,

[1] 'பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.'

என்னும் திருக்குறளில் இவ்விருபொருளும் உணர்த்துதல் அறிக. முடிசாய்த்தல் - தலைவணங்குதல். தன் குழந்தைகளின் மென் சொற்கேட்டின்புற அவர் உளப்பாங்கையறியக் கூறினன் நளனு யினும் தன்மக்கள் கூறிய மொழிகளும், அதிலும் தன் மகன் கூறிய வீரவுரைகளும் கேட்டதும் பணிந்த மொழியால் கூறி, அவன் சினத்தை மாற்ற முற்பட்டு 'என்னை முனிந்தருளல்' என்றனென்க. அவர்கள் நிலையையும் தன்னிலையையும் உணர உணர ஆற்றொணுத்துன்பமும் அளப்பற்ற காதலும் பொங்கி மேலெழ நின்றதை, 'கனிந்துருகி நீர்வாரக் கண்' என்றார். உவப் பினும் வருந்தினும் உள்நின்ற கருத்தை வெளிப்பட நீரைப் பெருக்கிக் காட்டுவது கண்ணேயாதலான் அதன்மேல் வைத்துக் கூறினர்.

[2] 'மண்டு பிணியால் வருந்து பிறவுறுப்பைக்
கண்டு கலுழுமே கண்.'

என்றார் பிறரும். (கூ௩)

தமயந்தி, இச் செய்திகள் கேட்டுத் துயருறல்

௩கூஎ. கொற்றக் குமரனையும் கோதையையும் தான்கண்டு
மற்வன்தான் ஆங்குரைத்த வாசகத்தை—முற்றும்
மொழிந்தார்அம் மாற்றம் மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தாள் அழுது.

(இ - ள்.) (முன் அனுப்பிய தோழியர்கள் தமயந்தியிடத்திற் சென்று) கொற்றக் குமரனையும் கோதையையும் அவன் கண்டு - வெற்றிக்கேற்ற பண்புள்ள தன் மகனையும் தன் மகளையும் வாகுகன் பார்த்து, அங்கு உரைத்த வாசகத்தை - அவ்விடத்தில் அவன் கூறிய மொழிகளை, முற்றும் மொழிந்தார் - முழுதும் விடா மற் கூறினர்கள், அம்மாற்றம் மொழியாத முன்னே - அவ்வுரை களை அவர்கள் சொல்லி முடிப்பதற்கு முன்பே, அழிந்தாள் அழுது விழுந்தாள் - (அவள்) மனமுடைந்து அழுதபடியே கீழே விழுந்தாள்.

1. திருக்குறள், கக௬. 2. நன்னெறி, ௨0.

(க - து.) தமயந்தியனுப்பிய தோழியர், தமயந்தி பாற் சென்று கண்டு, வாகுகன் தன் மக்களைப் பார்த்துப் பேசிய உரைகளை முற்றும் விடாமல் எடுத்துரைத்தார்கள்; அதைக் கூறுதற்குள் தமயந்தி மனமுடைந்து கீழ்விழுந்தழுவாளாயினாள் என்பதாம்.

(வி - ரை.) கொற்றம் - வெற்றி. அரசகுமாரனாதலால் மெய்யிலக்கணம் வெற்றிக்குரிய பண்புடன் இலகுவதென்பார் 'கொற்றக்குமரன்' என்றார்.

> [1] 'அன்னையவள் மெய்க்குறிகள்
> அனைத்தையும்பார்த் துனக்கோர்
> ஆண்பிள்ளை உண்டு.'

என, மெய்யிலக்கணம் கண்டுணர்வதாகப் பிறரும் கூறுதல் காண்க.

கோதை - கூந்தல். ஆகுபெயராகத் தமயந்தி புதல்வியை உணர்த்திற்று. மற்று, தான் இரண்டும் அசைச் சொற்கள்; பாரயம் குறித்து வந்தன. வாசகம் - பேச்சு; குழந்தைகளோடு வாகுகன் பேசிய உரையாடல். முற்றும் என்பதில் உம்மை முற்றும்மை; இனைத்தென்றறிந்த பொருளில் வந்தது. அழிந்தான்: முற்றெச்சம். தமயந்திக்குத் தோழிமார்கள் வந்து நிகழ்ந்ததைக் கூறியவுடன் தன் கணவனாகவே இருத்தல் கூடுமெனத் தெளிவும் ஒருபால் ஐயமும் நிகழ்ந்த இடுக்கண்களை எண்ணியவுடன் வருத்தமும் மிக்கெழ, உணர்விழந்து உள்ளம் உடைந்து கீழ்விழுந்தழுததை 'மொழியாத முன்னே.........அழுது' என்றார். (கூச)

### தமயந்தி, நளன் உருமாறிய நிலைக்கு இரங்கிக் கூறல்

௩கூ௫. கோங்கை அளைந்து குழல்திருத்திக் கோலஞ்செய்
அங்கை இரண்டும் அடுபுகையால்—இங்஑ன்
கருகியவோ என்றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேல் கண்ணாள் பதைத்து.

(இ - ள்.) காதலனை முன்னாள் பருகிய வேல் கண்ணாள் - பிரிவதற்கு முந்தின காலத்தில் தன் காதற்கணவனாகிய நளனின் அழகைக் கண்டு நுகர்ந்த வேல்போன்ற கண்களையுடைய

1. மீனாட்சியம்மை குறம், உ௩.

தமயந்தியானவள், கொங்கை அளைந்து குழல்திருத்தி கோலம் செய் அம்கை இரண்டும் - மணப்பொருள்களைத் தொட்டுத் தடவி (என்) கூந்தலை ஒழுங்குசெய்து அழகுபடுத்திய அழகிய கைகள் இரண்டும், அடுபுகையால் இங்ஙன் கருகியவோ என்று பதைத்து அழுதாள் - சமைக்குங்கால் உண்டாம் புகையினால் இப்படிக் கருநிறம் பெற்றனவோ என்று மனந் துடிதுடித்துப் புலம்பினாள்.

(க - ரை.) முன்பு தன் கணவனைக் கண்டுகளித்த தமயந்தியானவள், நளனைக்கண்டு, 'என் கூந்தற்கு மணமூட்டி அழகுபடுத்திய அழகுள்ள கைகள் சமையல் தொழில் செய்ததால் இவ்வாறு கருநிறம் பெற்றனவோ!' என்று மனம் பதைபதைத்து அழுதாள் என்பதாம்.

(வி - ரை.) கொங்கு - மணம். அது இறுதி ஐகாரச் சாரியை பெற்றது. அளைதல் - கலக்குதல்; மணப்பொருள்களை ஒன்றுபடுத்திச சேர்த்தல். முன்பு தம் நகரில் வாழ்ந்த காலத்தில் தனக்கு அழகுபடுத்தி ஒப்பனை செய்த சிறந்த கைகளின் நிறம் மாறி, இன்று கன்னங்கரேல் என்றிருக்கின்றனவே என்று கதறினாள்; பதறினாள். இவனே தன் காதலனாகிய வேந்தன் என்று தெளிந்த பின். கம்பரும் தம் காப்பியத்தில் திருமாலும் திருமகளும் என அவதாரம் கற்பித்து இவ்விருவரும் பிரிந்துறைந்ததாகக் கொண்டு முதல்முதல் இராமனும் மிதிலைப் பொன்னும் ஒருவரை ஒருவர் கண்டபோது காதல் கைம்மிகுந்து இருவர் மனமும் ஒன்றுபட்டன. அப்போது [1]'பிரிந்தவர் கூடினால் பேசவேண்டுமோ' என்றார். இங்கேயும் பிரிந்துறைந்த காதலன் வந்தானென்று குணங்குறி செயல்களினால் உய்த்துணர்ந்த தமயந்தி தனக்குப் பண்டைக்காலத்தில் அவன் செய்த ஒப்பனை முதலியவற்றை நினைந்தும் அன்பின் திறத்தை ஆழ்ந்தெண்ணியும் கலக்கமுற்றாள். அக் கலக்க நிலையை 'இங்ஙன் கருகியவோ' என்று கூறினாளாகக் கூறினார். பருகுதல் - உண்டல். நாவின் செயல் இங்கே இலக்கணை வழக்காகக் கண்ணுக்கு ஏற்றி உரைக்கப்பட்டது. [2]"நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்' என்றும், [3]"பருகுவன் பைதல் நோய் எல்லாம் கெட' என்றும் பிறர் கூறுதலானும் அறிக. வேல் கண்ணாள்: வேல் போன்ற கண்ணாள் என விரிதலால் உவமைத் தொகை. வேல், கண்கட்கு எதிர்ப்பட்ட காதல் ஆடவர் உயிரைக் கொள்ளை கொள்ளுதலான் உவமமாகக் கூறப்படுவதாம். எனவே, வினை உவமமெனக் கொள்க. (கூரு)

1, 2. கம்பராமா. பால, தாடகை: கூச.

3. திருக்குறள், கஉகூகூ.

தமயந்தி, தன் தந்தையிடம் கூறுதல்

௩௯௯. மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேரும் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்காண் எங்கள்
கொடைத்தொழிலான் என்றாள் குறித்து.

(இ - ள்.) (தமயந்தி தன் தந்தையை நோக்கி) இத்திரு நகர்க்கு வந்து அடைந்த மன்னவற்கு - இந்தச் சிறந்த நகரத்துக்கு வந்து சேர்ந்த இருதுபன்ன மன்னவனுக்கு, கொற்ற தனி தேரும் கொண்டு அணைந்து - வெற்றி பொருந்திய ஒப்பற்ற தேரையும் செலுத்திக்கொண்டு வந்து, மற்றும் மடைத்தொழில் செய்கின்ற மன்னவன் - (அதற்கு) மேலும் சமையல் தொழிலும் செய்கின்ற வேந்தனே, எங்கள் கொடைத்தொழிலான் என்றாள் குறித்து - ஈகையிற் சிறந்தவனாகிய எங்கள் நளமன்னனாவான் என்று உறுதிப் படுத்திக் கூறினாள் தமயந்தி.

(க - து.) தமயந்தி தன் தந்தையைப் பார்த்து, 'இங்கு வந்திருக்கின்ற இருதுபன்னனுக்குத் தேரோட்டியாகவும் சமையல் தொழில் பார்ப்போனாகவும் இருக்கின்றவனே, எங்கள் நளமன்னன் ஆவன்' என்று உறுதியுடன் கூறினாள் என்பதாம்.

(வி - ரை.) மற்று இரண்டில் முன்னது அசைநிலை, பின்னது வினைமாற்று. திருநகர் - அழகிய நகர், அல்லது திருமகள் உறைகின்ற கலைமகள் உறைகின்ற நகரென்றலுமாம்; கல்வியும் செல்வமும் சிறந்த நகராக இருத்தலான். தனி - ஒப்பின்மை. கொடைத்தொழில் - ஈகைக்குணத்தின் மேம்பாடு. தன் தந்தைக்குத் தன் கணவனே, இருதுபன்னன் தேரோட்டியாகவும் சமையல் தொழில் புரிபவனாகவும் வந்திருப்பவனென்று கூறினாளெனக் கொள்க. (௯௯)

வீமமன்னன், வாகுகனிடம் செல்லல்

௪00. போதலரும் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்—ஓதம்
வரிவளைகண் டேறும் வளநாடன் தன்னைத்
தெரிவரிதா நின்றான் திகைத்து.

(இ - ள்.) போது அலரும் கண்ணியான் - பூவரும்புகள் மலர்கின்ற மாலையையுடையவனாகிய வீமமன்னன், போர்வேந்தர் சூழப்போய் - போர்த்தொழிலில் வல்ல வேந்தர்களெல்லாம் தன்னைப் பின் தொடர்ந்து வரச்சென்று, காதலி தன் காதலனை கண் உற்றான் - தன் மகளாகிய தமயந்தியின் கணவனைக் கண்டான், (பார்த்தவன்) ஓதம் வரிவளைகொண்டு ஏறும் வளநாடன் தன்னை - கடல் தன் அலைகளினால் கீற்றுகள் உள்ள சங்கினங்களை வாரிக்கொண்டு கரைகளின் மேலேறிச செல்கின்ற நீர் வளப்பமுள்ள நிடதநாட்டுக்கு வேந்தனான நளனை, தெரிவு அரிது ஆக திகைத்து நின்றான - அடையாளம் அறிந்துகொள்ள இயலாமல் மயங்கி நின்றான்.

(க - ரு.) தமயந்தி கூறியதைக்கேட்ட வீமமன்னன், அரசர்கள் சூழ நளமன்னனைப் பார்க்கச்சென்றான்; சென்று அவன் அடையாளம் தெரியாது மயங்கி நின்றான் என்பதாம்.

(வி - ரை.) போது - பொழுது என்பது விகாரம். குறித்த காலத்தில் தவறாது மலர்தலால் கால இடவாகு பெயராய் மலருக்காயிற்று. கண்ணி - விட்டுவிட்டுக் கட்டப்பட்ட மலர்சசரம். போர்வேந்தர்: அரசர்க்குரிய இயற்கையடை. 'இகலரசர்' என்பது போல. காதலி தன் காதலன் என்பதற்குக் காதலிக்குரிய காதலன் எனக்கொள்ளினுமாம். ஓதம் - ஓசையை யுடைமையால் கடலுக்கு ஆகிப் பின் அலையைக் குறித்தலால் இருமடி ஆகுபெயர். வரிவளை - வரிகளையுடைய சங்குகள்: இரண்டனுருபும் பயனும் தொக்க தொகை. தெரிவு அரிது ஆக - தெரிவரிதா என ஈற்றுயிர் மெய்க்ககரம் குறைந்தது; விகாரம் திகைத்தல் - ஒன்றுந்தோன்றாமல் நிற்றல். யாரும் தாம் குறித்த பொருளை மனத்துட்கொண்டு செல்வது இயற்கை. சென்றால் தாம் கருதியதற்கு மாறாக இருப்பின் தம் மனம் அதனால் கலக்கமுற்று ஒன்றுந் தோன்றாமல் நிற்பர். இஃது உலகியல்பு. இவ்வியற்கைக்கு ஒப்பவே, வீமன் தன் மகள் கூறியதைக் கேட்டு விரைந்து நளனைப்பார்க்கச் சென்றான். சென்று கண்டகாலை, குறுகிய வடிவம், கருநிறம், இந்நிலையில் வாகுகன் தோற்றமளித்தான். இவனா நம் மருகன்? அவற்கும் இவற்கும் ஒன்றும் ஒற்றுமையில்லையே; நம் மகள் அறியாது கூறினாள் என்ற எண்ணமிட்டவனாய்ப் பேசாது நின்றான். இக் காட்சிப்படத்தை ஆசிரியர் 'தெரிவரிதா நின்றான் திகைத்து' என்றார். தெரிவு - தெரிதல், அறிதல். திகைத்தலாவது, தான் எண்ணியது வேறு, நடந்தது வேறாகக் கண்டதும் உண்டாகும் மனக்கலக்கம். (கூஎ)

**வீமன், வாகுகன் பேச்சால் நளனே எனத்தெளிதல்**

௪0௧. செவ்வாய் மொழிக்கும் செயலுக்கும் சிந்தைக்கும்
ஒவ்வாது கொண்ட உருவென்றே—எவ்வாயும்
நோக்கினான் நோக்கித் தெளிந்தான் நுணங்கியதோர்
வாக்கினான் தன்னை மதித்து.

(இ - ள்.) (வீமன் வாகுகன் தன்மையைக் கண்டு) கொண்ட உரு - இவன் கொண்டுள்ள உருவமானது, செவ்வாய் மொழிக்கும் செயலுக்கும் சிந்தைக்கும் ஒவ்வாது என்றே - இவனுடைய செம்மையான சொற்களுக்கும் செய்கின்ற தொழிற் சிறப்புக்கும் எண்ணத்துக்கும் பொருந்தாததாக இருக்கின்றதென்று, எவ்வாயும் நோக்கினான் - எல்லாத்தன்மைகளையும் சீர்தூக்கி ஆராய்ந்தான், நோக்கி நுணங்கியது ஓர் வாக்கினான் தன்னை மதித்து தெளிந்தான் - ஆராய்ந்து நுட்பமான சிறந்த சொல்லாளனாகிய வாகுகனை (நளனேயாவான் என) எண்ணி உறுதிகொண்டான்.

(க - து.) வீமமன்னன் வாகுகன் சொற்களும் செயலும் எண்ணங்களும் உருவத்துக்கு ஒத்த தன்மையில் இல்லாது மேம்பாடாக இருந்ததனால், இவன் நளனேயாகுமென்று எண்ணி முடிவு செய்தான் என்பதாம்.

(வி - ரை.) செம்மை + வாய் = செவ்வாயென விகாரப்பட்டுப் புணர்ந்தது, பண்புப் பெயராகலான். செம்மை - ஈண்டு நிறத்தைக் குறிக்காது நேர்மை, சிறப்பு என்னும் குணப்பண்பு குறித்து நின்றது. ஒருவர் நன்னிலையையும் தீய நிலையையும் அவர்தம் வாய்மொழி கொண்டே அறியப்பெறும். என்னை?

[1] 'நிலத்திற் பிறந்தமை கால்காட்டும் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.'

[2] 'ஒழுக்கம் உடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.'

எனப் பொய்யில்புலவர் பொருளுரைக்கண் கூறுதல் கொண்டு, வாய்மொழியே ஒருவன் தன்மையை அளக்குங்கோல் எனக் கொள்க. இங்கே வாகுகன் என்பான் வாய்சசொற்கள், செயல்கள், எண்ணங்கள் யாவும் உயர்ந்த பண்பு வாய்ந்தனவாக இருக்கின்றன. ஆனால் உருவோ அதற்கு முரண்பாடுடையதாக இருக்கின்றது. உருவைக்கொண்டு மதித்தல் கூடாதெனக் கருதினானாய் நன்கு

1, 2. திருக்குறள், ௯௫௯, ௧௩௯

ஆராய்ந்து இவன் நளனேயென வீமமன்னன் முடிபு செய்தான். 'இதனைத் தெளிந்தான்.. .........மதித்து' என்றார். நோக்குதல் - ஆராய்தல் என்னும் பொருண்மையில் வந்தது. கம்பர் காவியத்தில் அயோத்தி வந்தலும் இலக்குவனும் மிதிலைச் செல்வியைத் தேடிக் கானில் நெடுகச் சென்றபோது அனுமான் வேறொரு உருவில் தோன்றுகின்றான்; இவ்விருவர்களையும் சிறந்த நற்பண்பினர் எனக்கருதிச் சில மொழிகள் கழறுகின்றான்; அதைக்கேட்டு ஆய்ந்த இராமன், 'இவன் உருவோ வேறு; இவன் சொற்கள் உயர்ந்த பண்புடையன; கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் இருக்கின்றன; இவன் யாரோ?' எனக்கருதினனாய்த் தன் இளவலை நோக்கி வினவிய காலை,

[1]'இல்லாத உலகத் தெங்கும் ஈங்கிவன்
இசைகள் கூரக்
கல்லாத கலையும் வேதக் கடலுமே
என்னும் காட்சி
சொல்லாலே தோன்றிற் றன்றே யார்கொல்இச்
சொல்லின் செல்வன்
வில்லார்தோள் இளைய வீர விரிஞ்சனோ
விடைவல் லானோ?'

என்பதில் சொல்லின் செல்வனாகிய இவன், நான்முகனோ முக்கண் முதல்வனோ என்று பாராட்டினான். இங்கு உருவம் மாறுபட்டும் சொற்செயல்கள் உயர்ந்திருந்ததைக் கொண்டு இவ்வுருவத்துக் கேற்ற பண்பன்று; உயர்ந்த பண்பு இவன்கண் உள்ளது என்று அனுமானை உயர்ந்தவனாக எண்ணியதுபோன்றே வீமமன்னனும் நளனெனவே கருதி முடிவுசெய்தான் என்க. [2]'உருவுகண் டெள்ளாமை வேண்டும்' என்பது திருவள்ளுவர் காட்டும் செம்மொழி. நுணங்கு - நுட்பம். [3]'நுணங்கிய கேள்வியர்' என்ற வள்ளுவர் வாய்மையினும் இஃது இப்பொருட்டாதல் காண்க. வாக்கு-வாய்ச் சொல். மதித்தல் - மேலாகக் கொள்ளல். தன்: அசைநிலை. (கூஅ)

### வீமன், வாகுகனிடம் வேண்டிக் கேட்டல்

௪௦௨. பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை ஐயுற்று—மந்தி
தெளியா திருக்கும் திருநாடா உன்னை
ஒளியாது காட்டுன் உரு.

---

1. கம்பராமா. மராமரப்: ௨௦. 2, 3. திருக்குறள், ௬௬௭; ௪௧௯.

(இ - ள்.) (பின்னும் வீமன் வாருகனை நளனெனவே தெளிந்து) மந்தி பூகத்தின் ஐ தலையின் பாளை தனை - பெண் குரங்கானது கமுகமரத்தின் அழகிய மேலிடத்திலுள்ள பாளையை, பை தலைய நாக பணம் என்று ஐ உற்று - நச்சுப் பையைத் தன்னிடத்து உடைய நாகப்பாம்பின் படமென ஐயங்கொண்டு, தெளியாது இருக்கும் திருநாடா - மனத்துணிவில்லாமல் (அச்சமுற்று) இருக்கின்ற அழகிய வளப்பமிக்க நிடதநாட்டுக்குரிய நளவேந்தே, உன்னை ஒளியாது உன்உருகாட்டு-உன்னை இன்னும் மறைக்காமல் உன் உண்மை வடிவத்தை எங்கட்குத் தெரிய வெளிப்படுத்திக் காட்டுவாயாக (என்றான்).

(க - ரு.) 'நிடதநாட்டு வேந்தே! நாங்கள் உன் உருவத்தைத் தெளியாமல் இருக்கின்றோம்; நீ இன்னும் உன் வடிவத்தை ஒளிக்காமல், உன் உண்மை வடிவத்தைக் காட்டுவாயாக' என்றான், வீமன் என்பதாம்.

(வி - ரை.) பை - நச்சுப்பை. பாம்பின் வாயிடத்தே பற்களுக்கு அடியில் அமைந்திருப்பது; பணம் - படம்: மெலித்தல் விகாரம்; நாகப்பாம்பின் படம் நிடதநாடு நீாவளனும் நிலவளனும் மிக்கது. அங்குள்ள சோலைகளில் செழித்துக்கொழுத்து வளர்ந்திருக்கும் கமுகுகள் குலைகள் தள்ளுகின்றன. அச் சோலைகளில் வாழும் பெண் குரங்குகள் அதன் வடிவு நாகப்பாம்பின் படம் போன்று விரிந்து வளைவுற்று இருத்தலால் அதனை நாகப்பாம்புகள் என்று கருதுகின்றன; ஐயுறுகின்றன; தெளியாமல் இருக்கின்றன; அதனால் அஞ்சுகின்றன. 'இவ்வளவு இயற்கை வளமுடைய நாட்டுக்குரிய வேந்தே உன் உருவை நாங்கள் தெரிதற்கு உன் உண்மைவடிவை ஒளிக்காமல் காட்டு' என்றான். இங்கே நாட்டுவளங் கூறியதற்கேற்ப உள்ளுறை உவமமாகக் குரங்குகள் பாக்குப் பாளைகளைப் பாம்பென்று கருதி அஞ்சுவது போல, 'உன் உண்மை உருவைத் தெரியாமல் வாருகனென்று கருதி வெளித்தோற்றத்தால் மயங்கி அஞ்சுகின்றோம்' என, விரித்துப் பொருளுக்கியைய அமைத்துக்கொள்க. மந்தி - பெண் குரங்கு ஆதலால், தமயந்தி மயங்குகின்று ளென்ற குறிப்புங் கொள்க. தமயந்தியென்றே உய்த்துணர்தற்கு ஆசிரியர், பொதுவாகக் குரங்கென்று கூருது, "'மந்தி' தெளியாதிருக்கும் திருநாடா" என்றார்.

இவ்வாறே, அகநானூற்றினும் 'விலங்குகளும் குறியாத இன்பங்கொள்கிற மலைநாடனே!' எனத் தலைவனைத் தோழி விளிக்குமுகத்தான், தலைவன் பேரின்பத்துக்குரியன் என உள்ளுறை கொள்ள வைத்ததுபோற் கொள்க.

[1]"கோழிலை வாழைக் கோண்மிகு பெருங்குலை
ஊழுறு தீங்கனி உண்ணுநர்த் தடுத்த
சாரற் பலவின் சுளையொடு ஊழ்படு
பாறை நெடுஞ்சுனை விளைந்த தேறல்
அறியா துண்ட கடுவன் அயலது
கறிவளர் சாந்தம் ஏறல்செல் லாது
நறுவீ அடுக்கத்து மகிழ்ந்துகண் படுக்கும்
குறியா இன்பம் எளிதின் நின்மலைப்
பல்வேறு விலங்கும் எய்தும் நாட!"

உன்னை ஒளியாது - உன்னை மறைக்காமல் உன்னுருக்காட்டு எனக் கூட்டிப் பொருள் கொள்க. ஐதலை, பைதலை யென்பன, ஐந்தலை, பைந்தலையென இசை இன்பம்பெற மெலி விரிந்து நின்றன. (சுகூ)

வாகுகன் கார்க்கோடகன் தந்த ஆடைகளை உடுத்தல்

சா௦ரு. அரவரசன் தான்கொடுத்த அம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி உடுத்தான்—ஒருதுகிலைப்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையால்பூண்டளிக்கும்
கோத்தாயம் முன்னிழந்த கோ.

(இ - ள்.) (இவ்வாறு இருதுபன்னன் வேண்டியகாலை) பொருகலியின் வஞ்சனையால் - பகைமையை விளைவிக்கும் கலியினது வஞ்சச் சூழ்ச்சியினால், பூண்டு அளிக்கும் கோ தாயம் முன் இழந்த கோ - சூதுவிளையாடலைத் தனக்கு உரிமையாகக்கொண்டு தான் யாவரையும் பாதுகாக்கின்ற அரசாட்சியுரிமையை அக்காலத்தில் (எளிதாக) இழந்துவிட்டவனான நளமன்னன், அரவு அரசன் தான் கொடுத்த அம் பூந் துகிலின் - பாம்புக்கு வேந்தனான கார்க்கோடகன் தனக்கு முன்புதந்த அழகிய மெல்லிய ஆடைகளுள், ஒரு துகிலை வாங்கி உடுத்தான் ஒரு துகிலை போர்த்தான் - ஓர் ஆடையை யெடுத்துத் (தன் அரையில்) கட்டிக் கொண்டான், மற்றொன்றை (மேலாடையாகப்) போர்த்துக் கொண்டான்.

(க - து.) இவ்வாறு இருதுபன்னன் வேண்டியகாலை, நளமன்னன், தனக்குக் கார்க்கோடகன் முன்புகொடுத்த

1. அகம். உ.

ஆடைகள் இரண்டில் ஒன்றை அரையில் எடுத்துடுத்தினன்; மற்றொன்றை மேலாடையாகப் போர்த்தினன் என்பதாம்.

(வி - ரை.) அம்-அழகு. பூ - பொலிவு. பொலிந்து தோற்றமளிப்பது தன் மென்மைத் தன்மையினாலாகலான் மென்மையென்று பொருள்கூறப்பட்டது. துகில் - மெல்லிய ஆடையென்பதற்கு,

[1]" வட்டும் வழுதுணையும் போல்வாரும் வாழ்வரே
பட்டும் துகிலும் உடுத்து.'

என்று பிறர் துகில் என்று கூறுமாற்றுமல் தெளிக. உடுத்தான் - உடுத்து என முற்றெச்சமாகக் கோடலுமாம். பொருதல் - போர் செய்தல். போருக்குக் காரணமான பகையைப் போரென்றது காரியவாகு பெயர். நளனுக்கும் புட்கரனுக்கும் நட்பேயன்றிப் பகைமையில்லை. கலியின் வஞ்சத்தால் பகைமை உண்டாக்கிச் சூதாடச் செய்வித்தானாகலான் 'பொருகலியின்' என்றார். கோ - அரசு. தாயம் - உரிமை தன் வழிவழியாக வாழையடி வாழை போல் தவறுமல் உரிமையாகக் கிடைத்த அரசாட்சி. அதனைச் சூதாடித் தோற்க நேர்ந்ததை 'இழந்த கோ' என்றார். (௭0)

வாகுகன் உரு நீங்கி, நளன் உருவாகத் தோன்றல்

௪0௪. மிக்கோன் உலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோர் அருவினைபோல் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

(இ - ள்.) (இவ்வாறு நளன் அவ்வாடைகளை அணிந்தவுடன்) அக்காலம் - அந்தக் காலத்தில், காதலியை கானகத்தே நீத்து - தன் காதலியாகிய தமயந்தியைக் காட்டிடத்தே விட்டுப் பிரிந்து, கரந்து உறையும் மான் அக தேர்ப்பாகன் வடிவு - மறைந்து வாழ்கின்ற குதிரை பூட்டிய தேர்ப்பாகனாகிய வாகுகன் உருவமானது, மிக்கோன் - தேவர்களுட் சிறந்தவனாகிய திருமாலின், உலகு அளந்த மெய் அடியே சார்வு ஆக - உலகம் முழுதையும் (குறளுருவெடுத்து மூவடி யளவினதாக) அளந்த உண்மைத் திருவடிகளே பற்றுக்கோடாகக் கொண்டு, புக்கோர் அருவினைபோல் போயிற்றே - (விடாதுபற்றிச்) சார்ந்த அடியார்களின் தீராத

---

1. நாலடியார், ௨௬௪.

தீவினைகள் தீர்ந்து ஒழிவதுபோல விட்டு நீங்கிற்று. (பழைய தன்னுருவம் வந்தெய்திற்று.)

(க - ரு.) அக்காலத்தில் தன் மனைவியைப் பிரிந்தது முதல் மறைந்து வாழும் வாகுகனாகிய நளனுக்குத் திருமாலின் திருவடிகளைப் பற்றுக்கோடாகக்கொண்டு வாழும் மெய்யடியார்களின் தீராத தீவினைகள் தீர்ந்து ஒழிவது போலத் தன் உண்மை வடிவம் வந்தது என்பதாம்.

(வி - ரை.) மிக்கோன்: மிகு என்னும் உரிசசொல்லடியாகப் பிறந்த பண்புப் பெயர். திருமால் தேவர்களுள் சிறந்தவனாதலான், 'மிக்கோன்' என்றார். 'தேவில் திருமால் எனச் சிறந்த தென்பவே' எனத் திருவள்ளுவ மாலையினும் திருமாலைத் தேவர்களுட் சிறந்தானென உரைத்தலால், மிக்கோன் என்பதற்குத் தேவர்களுள் சிறந்தவன் என்று பொருள் கூறப்பட்டது. உலகளந்த மெய்யடி என்பது, மாவலியரசன்பால் வாமன வடிவெடுத்து மூவடி மண் பெற்று, உலக முழுதையும் தன் அடிகளால் ஈரடியளவினதாக அளந்த பாகவதக் கதைபற்றிய வரலாற்றைக் கொண்டுரைத்தார். ஊழி பெயராப் பிறவா இறவாப் பெருமையன் என்பாராய் அவன் திருவடிமேல் வைத்து 'மெய்யடி' என்றார். இறைவன் திருவடி சார்பாகப் பற்றுக்கொண்டொழுகுவார்களுக்குப் பந்த பாசங்கள் நீங்கி என்றும் மாறா இறையடி இன்பத்தில் திளைத்திருப்பது உறுதியாகலான், அவ்வுறுதிப்பாட்டின் உண்மை தோன்ற 'புக்கோர் அருவினைபோல்' என்றார். நளன் கார்க்கோடகன் ஈந்த ஆடைகளைப் புனைந்தவுடன் அவன் கொண்டிருந்த 'வாகுகன்' என்னும் பெயர் தாங்கிய கரிய சிறுவடிவம் தடுமென நீங்கி நளனுக்குரிய உண்மை உருவம் தோன்றிய காட்சிக்கு உவமங் கொடுத்தார். திருமால் அடியைச் சேர்ந்தார் தீவினை நீங்கி உண்மையொளி பெற்று இன்புறுதல் போல, நளனும் தான் இடையிற்கொண்ட கரிய உரு நீங்கி இயற்கையான செவ்விய வடிவுபெற்று நின்றானென உவமத்துக் கேற்ற உவமேயம் விரித்துக் கொள்க.

அக்காலம் - பண்டறிசுட்டாய்க் காட்டில் பிரிந்த நிகழ்ச்சிக்கு அடிப்படையாக நின்ற காலத்தைக் குறித்தது. கரந்து உறைதல் - நளன் தன்னை இன்னானென யாரும் தெரியாவாறு மறைந்து வாழுதல். மான் - குதிரை. அகம் - அதனை உள்ளிட்டது என்னும் பொருட்டாகக் கொண்டு பூண்ட என உரை வகுத்துரைக்கப் பட்டது. நளன் செலுத்தும் தேர், நல்ல இலக்கணம் வாய்ந்த குதிரைகளைத் தேர்ந்தெடுத்து மனநிலை தெரிந்து ஓட்டுதற்

குரிமை பெற்றதாதலால், அச்சிறப்புக் குறிக்க 'மானகத் தேர்' எனக் கூறப்பட்டது. பிறரெல்லாம் மால்+நகம்+தேர்=மானகத் தேரெனக் கொண்டு பெரிய மலைபோன்ற தேர் என உரைத்தார். அப்பொருள் தேரின் பெருமையையும் உயரத்தையும் குறிப்பதன்றிச் சிறந்த பொருளின்று. பெரிய உருவத்தால் சிறப்பில்லை. குதிரைகளின் மனநிலை வேகம் முதலியன தேர்ந்தறிந்து ஓட்டுவதுதான் சிறப்பு. இச்சிறப்பை நளன் தேரோட்டிச் சென்ற காலை, இருதுபன்னன் வியந்ததாக நைடத நூலாசிரியர் உரைக்கும் உரை இதையே மிக்க சிறப்புடையதாகக் குறிக்கின்றது.

> [1]" கூந்தல் மாவுளம் அறிதலின் சாலிகோத் திரனோ
> ஆய்ந்த கேள்வியின் மாதலியோ அன்றி நளனும்
> ஏந்தல் வேற்றுரு எடுத்தன னோஎன எண்ணி
> வேந்தர் வேந்தனும் மணிமுடி துளக்கினன் வியந்தான்."

என்பதால் உணர்க. பாகன் - பகுதியறிவோன் என்னும் பொருட்டாய் ஈண்டுத் தேர்ச்சாரதிக்கு ஆயிற்று. (எக)

### நளன் புதல்வர்கள், தந்தையைக் காண்டல்

சுoரு. தாதையைமுன் காண்டலுமே தாமரைக்கண் நீரரும்பப்
போதலரும் குஞ்சியான் புக்கணைந்து—கோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து.

(இ - ள்.) போது அலரும் குஞ்சியான் - நாளரும்புகள் மலர்கின்ற மயிர்முடிப்பையுடைய இந்திரசேனன், தாதையை முன் காண்டலும் - தன் தந்தையாகிய நளனைக் கண்டவுடனே, தாமரைக்கண் நீர் அரும்ப - (அன்பினால்) தாமரை மலர்போன்ற தன் கண்களிலிருந்து நீர் பெருக, மின் இடையாளோடும் - மின்னற்கொடி போன்ற இடையையுடைய தன் தங்கை இந்திரசேனையுடனும், புக்கு அணைந்து - சென்று தன் தந்தையைக் கட்டித் தழுவி, விழுந்து - கீழ்விழுந்து வணங்கி, கோதிலா பொன் அடியை கண்ணின் புனலால் கழுவினான் - குற்றமற்ற அழகிய திருவடிகளைத் தன் கண்ணீரால் அலம்பினான்.

(க - து.) இந்திரசேனன் தன் தந்தையைக் கண்டவுடன், தன் தங்கை இந்திரசேனையுடன் சென்று கட்டித்

1. நைடதம், கலிநீங்கு: கo

தழுவிக் கீழ்விழுந்து தன் கண்ணீர் அவன் அடிகளை நனைக்கும்படி அழுதரற்றினான் என்பதாம்.

(வி - ரை.) தாதை - தந்தை. முன் - நேரில். தாமரைக் கண் : உவமைத் தொகை. குஞ்சி - ஆண்பாலாரின் தலைமயிர்.

> [1]"குஞ்சி ஆண்மயிர் புட்பார்ப்புக்
> குன்றியின் கொடிமுப் பேரே.'

என்னும் சூடாமணி நிகண்டானும்,

> [2]"குஞ்சி அழகும் கொடுந்தானைக் கோட்டழகும்.'

என்னும் நாலடியாரானும் 'குஞ்சி' இப்பொருள் தருதலை அறிக. மின் இடையாள் - மின்போன்ற இடையாள் என்பது, மகளிரின் பொதுப்பெயராயினும் உடனிகழ்ச்சிப் பொருளாக ஓடு என்னும் மூன்றனுருபும் எச்சவும்மையும் கொடுத்துரைத்தலால் சிறப்பாக இந்திரசேனன் தங்கையைக் குறித்தது. மிகைப்பட்டு அழுங்காலைக் கண்களினின்றும் வழிந்த நீர் பெருகி நளன் கால்களை நனைத்ததை இலக்கணை வழக்காகக் 'கண்ணிற் புனலாற் கழுவினான்' என்றார். (எஉ)

தமயந்தி, நளன் காலடியில் வீழ்ந்தழுதல்

சாஎ. பாதித் துகிலோடு பாய்ந்திழியும் கண்ணீரும்
சீதக் களபதனம் சேர்மாசும்—போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீர் அவற்கு.

(இ - ள்.) (தமயந்தி தன் கணவனைக் கண்டதும்) பாதி துகிலோடு பாய்ந்து இழியும் கண் நீரும் - (நளன் அறுத்துவிட்டுச் சென்றதான கிழிந்த) அரை ஆடை உடுத்த கோலத்துடன் கீழே பாய்ந்தோடுகின்ற கண்களின் நீரும், சீதகளபதனம் சேர்மாசும் - குளிர்ச்சி பொருந்திய கலவைச் சாந்தணிகின்ற கொங்கைளில் படிந்துள்ள அழுக்கும், போத - (தன் உடலில்) பொருந்த, மலர்ந்ததார் வேந்தன் மலர் அடியில் வீழ்ந்தாள் - அரும்பு விரிந்த பூமாலை யணிந்த நளமன்னனின் தாமரை மலர்போன்ற திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள், அவற்கு கண்நீர் அலர்ந்தது - அந் நளமன்னனுக்கும் (இதைக்கண்டவுடன்) கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் பெருக்கெடுத்தோடிற்று.

---

1. சூடாமணி நிகண்டு, ஞகர . ங. 2. நாலடியார் : கஙக.

(க - ரு.) தமயந்தி தன் கணவனைக் கண்டதும் அவன் காலடிகளில் வீழ்ந்தாள்; அதைக்கண்டதும் நளனுக்கும் கண்ணீர் பெருக்கெடுத்தோடிற்று என்பதாம்.

(வி - ரை.) நளன், வனத்தில் தமயந்தியை விட்டுப்பிரியும் போது இருவருக்கும் ஓராடையாக இருந்ததை இரண்டு துண் டாக்கிக்கொண்டு வெளியேறினானாகலான், அதனை முதலில் வைத்துப் 'பாதித் துகிலோடும்' என்றார் தன் கணவனைக் கண்டதும் அன்பு மேலீட்டினாலும், துயர மிகுதியாலும் தன்னை யறியாது கண்கள் நீரைச் சொரிந்து கொண்டிருந்ததால் 'பாய்ந் திழியும் கண்ணீரும்' என்றார். நளனைப் பிரிந்தது முதல், நன்கு உண்ணாதும் உடுக்காதும் நீராடாதும் ஒப்பனைகொள்ளாதும் இருந்துவந்தாளாதலான், மார்பிடமெல்லாம் அழுக்குப்படிந் துளது. அதனால் 'தனம் சேர் மாசும்' என்றார். தமயந்தி வந்த போது அவள் தோற்றம் அரை ஆடை, இடையறாத கண்ணீர், நீராடாத மேனி இவைகளே பார்ப்பவர்க்குப் புலனாயின. இவை களை உடனிகழ்ச்சியாக வைத்துக்கூறினார். இவ்வாறே கண்ணகி யாரின் கண்கொள்ளா அவலக்காட்சியைப் படம் பிடித்ததுபோல் ஆசிரியர் இளங்கோவடிகளார் சித்திரித்துள்ள காட்சி போல வென்க. என்னை ?

[1]'மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையில் தனிச் சிலம்பும் கண்ணீரும்.'

என்றதூஉம் காண்க. 'பிரிந்தவர் கூடினாற் பேசல்வேண்டுமோ' என்பதற்கேற்ப நளனும் தமயந்தியும் ஒருவரை ஒருவர் நேரிற் கண்டகாலை நெருப்பிலிடு வெண்ணெயென நெஞ்சுருகி நின்றா ராதலால் இருவர் தன்மைகளையும் ஒன்றாக்கி, 'கண்ணீரும் ........ கண்ணீரவற்கு' என்று கூறினார். (எரு)

இதுவும் அது

௬௦௭. வெவ்விடத்தோ டொக்கும்விழியிரண்டும் வீழ்துயில்கோள்
அவ்விடத்தே நீத்த அவரென்றே—இவ்விடத்தே
வாரார் முலையாளம் மன்னவனைக் காணாமல்
நீரால் மறைத்தனவே நின்று.

(இ - ள்.) வெவ்விடத்தோடு ஒக்கும் விழி இரண்டும் - கொடுமையுடைய நஞ்சை ஒத்திருக்கின்ற கண்கள் இரண்டும்,

1. சிலப். ௨௦: இறுதி வெண்பா - ரு.

வீழ் துயில்கொள் அவ்விடத்தே நீத்த அவர் என்று - சோர்ந்த தூக்கத்தின்போது அந்தக் காட்டினிடத்தே விட்டுப் பிரிந்தவ ரென்று (பார்க்க நாணுவதுபோல்), இவ்விடத்தே - இங்கு வீம மன்னன் அரண்மனையில், வார்ஆர் முலையாள் அம்மன்னவனைக் காணமல் - கச்சார்ந்த மார்பினையுடையவளாகிய தமயந்தி அந்த நளமன்னனை (நன்கு) காண்டற்கியலாவண்ணம், நீரால் மறைத் தனவே நின்று - தம் நீரினுல் இடையே தம் ஒளியை மறைத்து விட்டன. (தமயந்தி கண்களில் நீர் பெருக்கெடுக்கலாயிற்று என்றபடி.)

(க - ரை.) ஆழ்ந்த தூக்கத்தில் விட்டுப் பிரிந்தவரே இவரென்று தமயந்தியின் கண்கள் இரண்டும் பார்க்க நாணுவதுபோல், தம் நீரினுல் நளனுருவைக் காணுதவாறு ஒளியை மறைத்துவிட்டன என்பதாம்.

(வி - ரை.) வெம்மை + விடம் = வெவ்விடம் எனப் புணர்ந் தது. ஒடு - ஈண்டு இரண்டனுருபாகிய ஒப்புப்பொருளில் வருத லால் வேற்றுமை மயக்கம். வீழ்தல் - விரும்புதல்; தங்குதல் என்னும் பொருளது. உறக்கத்துக்குத் தங்குதலாவது மிகவும் தூங்குதல; உணர்வு தெளியாத நிலே. அவ்விடம் - பண்டறி சுட்டாய்க் காட்டை உணாத்திற்று. அவர்: பிரிந்தவன், இரக்க மில்லாதவன் எனச் செறற் பொருளாக வந்த உயர்வு குறிக்கும் பன்மை. 'கசையடி பெறுவீர் காளேயீரே!' என்பதுபோல சிறப்பால் மகிழ்ச்சியால் உயர்வு குறிப்பதும் உண்டு.

"செந்தார்ப் பசுங்கிளியார் சென்றூர்க்கோர் இன்னுரைதான்
தந்தாரேல் தந்தார்.'[1]

எனச் சிந்தாமணியினும் கிளியை உயர்வு கொடுத்துப் பேசியதாக வருதல் காண்க. வார் - கச்சு, இதுகாலே வழக்கில் இரவிக்கை யென வழங்குவர். தமயந்தி நளனைக் கண்டதும் 'மலரடியில் வீழ்ந்தாள்' என்றூர். வருத்தம் மிகுதியினுல் நீர் பெருகிக் கண் ணெளியை மறைத்தது. அதனைத் தற்குறிப்பேற்ற அணியாகக் கொண்டு காட்டில் விட்டுத் தன்னந்தனியாக்கிச் சென்ற கல்வி னும் வல்லென்ற நெஞ்சினுரைப் பார்த்தல் தகாதெனக் கருதித் தமயந்தியின் கண்கள் இரண்டும் ஒன்றுபட்டுத் தம் நீரைக் கொண்டு தம் ஒளியை மறைத்து நளனுருவைத் தமயந்தி காணு வாறு செய்துவிட்டன. என்னே! கட்புலன்களின் உணர்ச்சி யென நகைச்சுவையும் சொன்னயமும் பொருள் நயமும் பொதுள

1. சீவகசிந்தாமணி, குணமாலே: கஅசு.

'மன்னவனைக்..................நீரான் மறைத்தன' என்றார். தமயந்தியின் கண்கள் இரக்கப்பண்பு வாய்ந்த இன்கணைகள்; நளன் உருவைக் காணாதவாறு கண்ணீரால் மறைத்த கொடுந்தன்மை கருதி அவைகளை 'வெவ்விடத்தோ டொத்த விழி இரண்டும்' என்றார், விடத்துக்கு நல்ல தன்மை இல்லாத காரணங்கொண்டு. இங்குத் தாம் செய்யாத தன்மையவான கண்களைச் செய்வன போல் கூறியது, [1]"நோயும் இன்பமும்' என்னும் பொருளியல் (உ) நூற்பாவில் 'உணர்வுடையதுபோல்' என்னும் பகுதிக்கண் வரும் உணர்வில்லாததை, அஃதுடையதுபோல் ஏற்றிக் கூறுவதாகச் சொன்ன விதியால் அமைத்துக் கொள்க. ஆல் என்னும் மூன்றனுருபு கண்ணொளியை மறைத்தலாகிய கருவிப் பொருளில் வந்தது. இவ்வாறே இளங்கோவடிகளும் தற்குறிப்பேற்ற அணியாகக் கோவலன் மதுரைக்குச் சிலம்பு விற்றற்குத் தன் காதலி கண்ணகியாரோடு சென்றகாலை மதுரை நகரத்தின் மாடக் கொடிகள் காற்றால் அசைவதைக் 'கோவல! இங்கே வாராதே' என்று பின்விளைவறிந்து தடுத்துக் கைகாட்டித் திரும்பிச் செல்லச் சொல்வதுபோற் காட்சியளித்ததாகக் கூறுவதும் இக் கருத்தோடொத்ததே என்க. அது :

> [2]"போருழந் தெடுத்த ஆரெயில் நெடுங்கொடி
> வாரலென் பனபோல் மறித்துக் கைகாட்ட.'

என்பதாகும். (எச)

### வானவர், நளன்மேற் பூமாரி பொழிதல்

சஎ௫. உத்தமரில் மற்றிவனை ஒப்பார் ஒருவரிலை
இத்தலத்தில் என்றிமையோர் எம்மருங்கும்-கைத்தலத்தின்
தேமாரி பெய்யும் திருமலர்த்தார் வேந்தன்மேல்
பூமாரி பெய்தார் புகழ்ந்து.

(இ - ள்.) இமையோர் - தேவர்கள், இத்தலத்தில் உத்தமரில் இவனை ஒப்பார் ஒருவர் இலை - இம்மண்ணுலகத்தில் சிறந்தவர்களுள் இவனோடொத்த பண்புடையார் எவருமே இல்லை, என்று புகழ்ந்து - என்று கூறிக்கொண்டாடி, தேமாரி பெய்யும் திருமலர்த்தார் வேந்தன்மேல் - தேனை மழைபோல் பெய்கின்ற அழகிய மலர்மாலையணிந்த நளவேந்தன்மீது, கைத்தலத்

1. தொல். பொருளியல் : உ.
2. சிலப். கங : கஅக - கூ0.

தின் பூமாரி எம்மருங்கும் பெய்தார் - தத்தம் கைகளினால் அள்ளி அள்ளி எல்லாப் பக்கங்களிலும் மலர்மாரியைப் பெய்தார்கள் .

(க - து.) உலகில் நளன் ஒருவனே உயர்ந்த பண்பாடுடையான், இவனையொப்பார் ஒருவருமில்லையென்று புகழ்ந்து தேவர்கள் தம்தம் கைகளினால் அள்ளி அள்ளி மலர் மாரி தூற்றினார்கள் என்பதாம்.

(வி - ரை.) உத்தமன் - ஆண்களில் சிறந்தவன். சிறப்பாவது தன்னுயிர்போல மன்னுயிரையும் எண்ணிப் பாதுகாக்கும் பண்புடைமையும், இன்சொற் கூறலும், ஈகையுடையனாதலும், அன்பு, நாண், கண்ணோட்டம் முதலியவற்றினையுடையனாக இருத்தலும் முதலிய அரிய செயல்கள். மற்று : வினைமாற்றுப் பொருளில் வந்தது. ஒருவரும் இலை என்பதிலுள்ள உயர்வு சிறப்புக்குறிக்கும் உம்மை, செய்யுள் விகாரத்தால் தொக்கது. இத்தலத்தில் என அண்மைச் சுட்டாக வருதலால் விண்ணுலகத்தினும் என்று கூறலும் பொருந்தும். எம்மருங்கும் - எல்லாப் பக்கமும். தலம் - இடம் என்னும் பொருளது. தேன் + மாரி = தேமாரி; நிலைமொழி னகரம் கெட்டுப் புணர்ந்தது. நளன் அன்றலர்ந்த நாண் மலரால் தொடுக்கப்பட்ட மாலையணிதலால் மாலையிலிருந்து தேன் பெருக்கெடுத்து மழைத்தாரைபோல் வழிகின்றதென்று நளன் அணியும் மாலையேற்றங் கூறினார். தேவர்கள் எல்லா இடங்களினும் மலர்களை வாரி வாரி இறைத்து நளன் சிறப்பை மகிழ்ந்து கொண்டாடுவதால் பூக்கள் எங்கும் மழைத்தாரைபோல் சளசளவென்று விழுவதைப் 'பூமாரி பெய்தார்' என்றார். (எ௫)

**கலிமகன் நளனை வரம்பெற்றுக்கொள்ளுமாறு வேண்டுதல்**

௪௦௬. தேவியிவள் கற்புக்கும் செங்கோல் முறைமைக்கும்
பூவுலகில் ஒப்பாயார் போதுவார்—காவலனே!
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றன்பால் பாரளிப்பான் முன்.

(இ - ள்.) (கலியானவன்) முற்று அன்பால் பார் அளிப்பான் முன் - நிறைந்த அன்பினால் உயிர்களைப் பாதுகாக்கும் நளமன்னன் முன்னிலையில் (தோன்றி), காவலனே - நளமன்னனே!, தேவி இவள் கற்புக்கும் செம்கோல் முறைமைக்கும் - உன் மனையாளாகிய இத்தமயந்தியின் கற்பு மேம்பாட்டுக்கும் உனது ஆட்சி முறையினுக்கும், ஒப்பு ஆக பூ உலகில் போதுவார் யார் - ஈடாக

இந்நிலவுலகத்தில் இனித் தோன்றுவார் எவர்?, என்பால் வேண்டும் வரம் கேட்டுக்கொள் என்றான் - (ஆதலால் நீ) என்னிடத்தில் விரும்பிய வரத்தைக்கேட்டுப் பெற்றுக்கொள்வாயாகவென்று வேண்டினான்.

(க - ரை.) கலிவேந்தன் நளன்முன்பு தோன்றி, 'அரசே! உன் மனைவி தமயந்தியின் கற்பு மேம்பாட்டுக்கும், உன் ஆட்சி ஒழுங்குக்கும் ஒப்பாக உரைத்தற்கு எவருமே இல்லை; ஆதலால் உனக்கு வரங்கொடுக்க விரும்புகிறேன்; வேண்டிய வரத்தைக் கேள்; தருகிறே'னென்று கூறி வேண்டினான் என்பதாம்.

(வி - ரை.) தேவி இவள்: இருபெயரொட்டுப் பண்புப் பெயர்; இவள்: அண்மைச் சுட்டுப்பெயர். செங்கோல் - நேர்மையான அரசாட்சி 'ஒப்பார் யார் போதுவார்' என்பது இனி எதிர்காலத்தில் ஒருவரும் இருக்கப்போவதில்லை என, நளன் ஆட்சிச்சிறப்பை வியந்தான். கணவன், மனைவியராகிய நீவிர் இருவரும் உயர்ந்த பண்புடையவர்கள். பெண்பிறவியின் விழுமிய பண்பு, கற்பு நெறியில் ஒழுகுதல். ஆண்பிறவியின் விழுமிய பண்பு, தமவும் பிறவும் ஒப்பநாடி நடுநிலை பிறழாது வாழ்தல்; முறை செய்தல். இவ்விருவேறு பிறப்பின் மேன்மையை உங்கள் இருவர்பாலும் கண்கூடாகக் கண்டேனென்று கலி புகழ்ந்து கூறி வரங்கொடுக்கக் கருதி, 'வரங்கேட்டுக்கொள்' ளென்று வேண்டினான் என்க. தன் அன்பினால் ஆட்சி புரிகின்றவனேயன்றித் தன் கடுகடுத்த மொழியினாலும் கை இகந்த தண்டத்தினாலும் ஆள்கின்றவனில்லை யென்பாராய் 'முற்றன்பால் பாரளிப்பான்' என்றார். இவ்வாறே அன்பானும் அறத்தானும் பண்டைக்காலத் தமிழ்வேந்தர்கள் அண்டமை ஆவின் கன்றை அறியாது கொன்ற குற்றத்துக்குத் தன் மகனைத் தேர்க்காலிற்கிடத்திக் கொன்றும், கதவைத் தட்டிச் சோரனென ஐயுறச் செய்த குற்றததுக்காகத் தன் கை குறைத்துப் பொன்கை கொண்டும் நெறிமுறை நிலையை உயர்த்திய சோழ பாண்டியர்களின் வரலாறும் காண்க. இவ்வரலாற்றை வழக்குரை காதையில் ஆசிரியர் இளங்கோவடிகள்,

> [1]"வாயிற் கடைமணி நடுநா நடுங்க
> ஆவின் கடைமணி உகுநீர் நெஞ்சுசுடத், தான்றன்
> அரும்பெறற் புதல்வனை ஆழியின் மடித்தோன்.'

என்றும்,

1. சிலப். உ0 : ருரு - ரு

[1]"கை, குறைத்த செங்கோற் குறையாக் கொற்றத்து
இறைக்குடிப் பிறந்தோர்.'

என்றும் அருள்வது காண்க. (எசு)

நளன், கலியின்பால் வரம் வேண்டுதல்

சகo. உன்சரிதம் செல்ல உலகாளும் காலத்தும்
மின்சோரியும் வேலாய் மிகவிரும்பி—என்சரிதம்
கேட்டாரை நீயடையேல் என்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மதித்து.

(இ - ள்.) கிளர்மணிபூண் வாள்தானை மன்னன் மதித்து - ஒளிவிடுகின்ற கல்லிழைத்த அணிகளணிந்த வாட்படையைக் கொண்ட சேனைகளையுடைய நளமன்னன் (நன்கு) எண்ணி, மின் சொரியும் வேலாய் - ஒளிவீசுகின்ற வேற்படையேந்திய கலியே, உன் சரிதம் செல்ல உலகு ஆளும் காலத்தும் - உன் ஆளுகையே எங்கும் நடக்கும்படி நீ உலகையெல்லாம் ஆட்சிபுரிகின்ற கலி காலத்துங்கூட, என்சரிதம் மிகவிரும்பி கேட்டாரை நீ அடையேல் என்றான் - என் வரலாற்றை மிகவும் விருப்பங்கொண்டு கேட்பவர்களை நீ சேராது இருப்பாயாகவென்று வரங்கேட்டான்.

(க - து.) நளன் கலியை நோக்கி, 'மின்சொரியும் வேலாய்! உன் பெயரால் வழங்கப்போகும் கலியுகத்திலும் என் வரலாற்றை விரும்பிக் கேட்டாரைச் சேர்ந்து வருத்தாதிருக்கும் வரந்தருக'வென்று கேட்டான் என்பதாம்.

(வி - ரை.) உன் என்னும் முன்னிலைச்சொல், கலிக்கு ஆயிற்று, அவனிடமே நளன் பேசுகின்றானாதலின். சரிதம்-ஈண்டு ஆட்சிக்கு ஆகுபெயர். செல்லுதல் - முட்டின்றி நடத்தல். கலி காலமுறை, முறைபிறழ்ந்து நடக்க, எங்கும் தீமையே பல்கியிருக் கும் என்னும் கொள்கையை உட்கொண்டது. கலிகாலத்தில் நல் லார் பொல்லா ரென்பதையறியாது மக்கள் நடப்பர்; அதனால் அறங்குன்றி எங்கும் பாவமே தலைவிரித்தாடும். அப்பாவநிலை சூழ்ந்தபோது கலி, மக்களை ஆட்டி அலைத்து வறுமைத் துன்பத் துக்காளாக்குவன். அக்காலத்திலும் என் வரலாற்றை விரும்பிக் கேட்பாரிடத்து நீ சேர்ந்து துன்புறுத்தாதே என்னும் இவ் வரத்தைத் தன்னலங்கருதாது மக்கள் நலனொன்றையே கருதி வேண்டினான். ஆதலால் நளன் உயர்ந்த அருள்முறை இதனால்

1. சிலப். உங : ருக-ரு.

குறிக்கப் பெறுவதறிக. மதுரைமாநகரை அரசுமுறை கோடாது ஆண்ட மீனாட்சியம்மையார் சிறப்பைக் குறிக்கக் குமரகுருபரர், அம்மையார் பிள்ளைத் தமிழ்க்கண்,

[1]'அதிரப் பொருது கலிப்பகை ஞன்தமிழ் நீர்நா டாளாமே.'

என்றருளியதும் கலியின் கொடுமையைக் குறிக்கவே என அறிக. நல்லோர்கள்,

[2]'தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்.'

என்னும் விழுமிய வுரைக்கு இலக்காக இலகுவர். நளன் செயலும் அவ்வாறு இருப்பதை ஓர்க. நல்லோர் நல்லனவற்றையே நாடிப் பிறர் நலத்தையே விரும்புவர் என்பதற்கிலக்காக அயோத்தி யேந்தல் இராமன், தன் தந்தை தெய்வ வடிவில் இலங்கைக்குப் போந்து வரங்கொடுக்க எண்ணி, நீ விரும்பிய தொன்றைக் கேளென வுரைத்தபோது, அவன் பிறவற்றை எதுவும் வேண்டாது கைகேயிபால்கொண்ட வெறுப்பும், பரதன்பால் வைத்த மனக்கசப்பும் நீங்கி, அவ்விருவரும் எனக்குத் தாயும் தம்பியும் ஆகும் வரத்தையே தருகவென வேண்டி நின்றதும், இப்பயன் கருதாப் பரந்த மனநிலையை உணர்த்துதல் அறிக. அதைக் குறிக்கும் செய்யுள் கருத்துக்குரியதாதலான், ஈண்டு அதைக் குறிக்கின்றாம்.

[3]'ஆயி னும்உனக் கமைந்ததொன் றுரையென அழகன்
தீய ளென்றுநீ துறந்தஎன் தெய்வமும் மகனும்
தாயும் தம்பியும் ஆம்வரம் தருகெனத் தாழ்ந்தான்.'

என்பது. இவ்வாறே நளன் செயலும் என்பதை உணர்க. (எஎ)

**கலிமகன், நளன் விரும்பியவாறே வரமளித்தல்**

எஅஅ. என்காலத் துன்சரிதம் கேட்டாரை யானடையேன்
மின்கால் அயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்கும் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனான் கலி.

(இ - ள்.) கலி - கலியானவன், (இவ்வாறு கூறிய நளனை நோக்கி) மின்கால் அயில்வேலாய்-ஒளிவிட்டெறிக்கின்ற கூர்மை

1. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், ருஉ. 2. நன்னெறி, கo.
3. கம்பராமா. உயுத்த. மீட்சி. கஉக.

பொருந்திய வேற்படையையுடைய வேந்தே, என்காலத்து - என் ஆட்சி நடக்கின்ற கலிகாலத்தும், உன் சரிதம் கேட்டாரை யான் அடையேன் - உன் வரலாற்றை (விரும்பிக்) கேட்பவரிடத்தே நான் சார்ந்து துன்புறுத்தமாட்டேன், மெய் என்று - இஃது உண்மையாகச் சொல்கின்றேனென்று, நன் காவி மட்டு இறைக்கும் சோலை வளநாடன் முன்னின்று - நல்ல குவளைமலர்கள் தேன் சுரந்து பெருக்கெடுத்தோடிச் செல்கின்ற சோலைகள் சூழ்ந்த வளப்பம் பொருந்திய நிடதநாட்டு அரசனாகிய நளனுக்கு முன்பாக நின்று, கட்டு உரைத்துப் போனான் - உறுதிமொழி கூறிச் சென்றான்.

(க - து.) கலியானவன், நளனுக்கு நேராகத் தோன்றி நின்று, 'நிடதநாட்டுக்கு வேந்தே! என் காலமாகிய கலியுகத்திலும் உன் வரலாற்றைக் கேட்போரிடத்துச் சேர்ந்து துனபுறுத்தேன்; இஃது உண்மை' யென்று உறுதிமொழியுரைத்துச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) என் காலம் என்பது, கலி ஆட்சிக் காலமாகிய கலியுகத்தைக் குறித்தது. கேட்டாரை அடையேன் என்பதிலுள்ள எச்சவும்மை விகாரத்தால் தொக்கது. ஆதலால் கேட்டாரையும் அடையேனென்று உம்மைத் தொகையாகக் கொண்டு சரிதம் எழுதினாரையும் படித்தாரையும் படிப்பித்தாரையும் எழுதுவித்தாரையும் அடையேன் என்று கலி கூறியதாகக் கொண்டு பொருளுரைக்க.

[1] 'ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே.'

என்பது விதியாகலான். மின்கால் - மின்னலைக் கக்குகின்ற என்னும் பொருளது. கக்குதலாவது, ஒளியை மிகுதியாகத் தருதல். அயில் - கூர்மை. காவி - நீலோற்பலமலர்: ஆகுபெயர். கட்டுரை - பொருள்பொதிந்த சொல். நளனுக்கு, 'என்காலத்து............ யான் அடையேன்' என்று உறுதிப்பட உண்மையுரை பகர்ந்தமையால் அது பொருள் பொதிந்த சொல்லாயிற்று. உயர்ந்த பண்புடையவர், சொற்களைத் திறம்படப் பேசுதல் வேண்டும். பயனில்சொல், பொய்யுரைத்தல் முதலியன, மக்கட் பண்புடையவர்க்குச் சாலாதது; அவைகளை நீக்கி உண்மை பேசுதல் வேண்டும்; அவரே இறவாத புகழ்படைத்தோராவர் என்று அறநூல்கள் முழங்கும். (எஅ)

1. நன்னூல், நடுஅ.

### வீமன், நளனுக்கும் தமயந்திக்கும் குழந்தைகட்கும் விருந்தளித்தல்

௪௧௨. வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கண்
கோதையையும் மக்களையும் கொண்டுபோய்-தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து.

(இ - ள்.) *தாது புதைய - மகரந்தப் பொடிமறைய, தேன் பாய்ந்து ஒழுகும் பூஞ்சோலை வேலி - தேன் பெருக்கெடுத்து ஓடுகின்ற மலர்கள் செறிந்த சோலைகளையே வேலியாகக் கொண்ட, விதையக்கோன் - விதர்ப்பநாட்டு அரசனான வீமனானவன், வேத நெறிவழுவா வேந்தனையும் - வேதநெறியைக் கடந்து நடவாத ஒழுக்கமுடையவனான நளமன்னனையும், பூந்தடம்கண் கோதையையும் மக்களையும் - தாமரை மலர்போன்ற பெரிய கண்களையுடைய தமயந்தியையும் அவர்தம் குழந்தைகளையும், கொண்டு போய் விருந்து செய்தான் - (மடைப்பள்ளிக் கண்ணின்றும்) அழைத்துக்கொண்டு அரண்மனைக்குச் சென்று விருந்துணவூட்டினான்.*

(க - து.) *விதர்ப்பநாட்டு வேந்தனான வீமன், தன் மருகனான நளமன்னனையும் தமயந்தியையும் அவர் மக்களையும் அரண்மனைக்கு அழைத்துச் சென்று விருந்து செய்தான் என்பதாம்.*

(வி - ரை.) *வேதநெறி-மறைகள் கூறிய ஒழுக்கவழி. நளன், அறநூல்களில் விதிக்கப்பட்ட நல்லனவற்றைச் செய்து தீயனவற்றை நீக்கியொழுகுவோனாகலான், 'வேதநெறி பிழையா வேந்தன்' என்றார். பூ - அழகு என்னலுமாம். தடம் - அகலம். நல்லிலக்கணம் வாய்ந்த பெண்டிர்க்குக் கண்கள் பெரிதாக இருப்பது சிறந்ததென்பது உடற்கூறுவல்லார் கண்ட முடிபு. நாம் கண்கூடாகக் கண்டு வருவதுமாகும்.*

[1]'*அகலல்குல் தோள் கண்ணென மூவழிப் பெருகி.*'

*என்றார் பிறரும். தமயந்தி இவ்விலக்கணமெல்லாம் பொருந்த அமைந்த பேரழகுடையளாதலின் 'பூ தடங்கண் கோதை' என்றார். மக்கள் என்றமையால் அவ்விருவர் மக்களைக் குறித்தது: ஒன்றொழி பொதுச் சொல். உம்மைகள் எண்ணுப் பொருளில்*

---

1. *கலித்தொகை, ௧0௮.*

வந்தன. தாது - பூந்துகள். புதைதல் - மறைதல். விதர்ப்பநாடு நீர் வளனும் நிலவளனும் மிக்குடையது என்பது தோன்ற, 'பூஞ்சோலை வேலி விதையம்' என்றார். விதையம் - விதர்ப்பநாடு என்பதன் மரூஉ. விருந்து - புதுமை எனினும் பொருளது. ஆகுபெயராய் நளன் தமயந்தி குழந்தை இவர்கட்கு உபசரித்து உணவூட்டிக் கொண்டாடிய செயலைக் குறித்து நின்றது. நளன் மருகன் ஆதலானும், வேந்தனாதலானும் முகமன் உரைகூறி விருந்தளித்தான் எனக் கொள்க (எக)

## இருதுபன்னன், தன் நகர்போய்ச் சேர்தல்

சகங. உன்னையான் ஒன்றும் உணரா துரைத்தவெலாம்
பொன்னமரும் தாராய் பொறுக்கென்று-பின்னைத்தன்
மேனீர்மை குன்ற வெறுந்தேர் மிசைக்கொண்டான்
மானீர் அயோத்தியார் மன்.

(இ - ள்.) மால்நீர் அயோத்தியார் மன் - சிறந்த நீர்வளமுள்ள அயோத்தி நகரத்தார்கட்கு வேந்தனான இருதுபன்னன் (நளனைப் பார்த்து), பொன் அமரும் தாராய்-அழகுமிக்க மாலையையுடைய வேந்தே, உன்னை யான் ஒன்றும் உணராது உரைத்த எலாம் பொறுக்க என்று - (நீ என்னிடம் தேரோட்டுந் தொழிலில் அமர்ந்திருந்ததால்) உன்னை இன்னாரென்று அறியாமற் பேசிய சில கடுஞ்சொற்களையெல்லாம் பொறுத்தருளல் வேண்டுமென்று கூறி (மன்னிப்புக் கேட்டுக்கொண்டு), பின்னை தன் மேல்நீர்மை குன்ற வெறும் தேர் மிசை கொண்டான் - அப்பால் (தமயந்தி சுயம்வரமென்று நினைந்து வந்த) தனை மேல்பகட்டுத் தன்மையெல்லாம் ஒடுங்கி, பொலிவற்றிருக்கின்ற தன் தேர்மீதேறி (அயோத்திக்குச்) செல்லப் புறப்பட்டான்.

(க - து.) இருதுபன்னன் நளனை நோக்கி, 'அரசே! உன்னை இன்னாரென அறியாது யான் கூறிய கடுமொழிகளையெல்லாம் பொறுத்துக்கொள்க' வென்று கூறி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டு தன் நகருக்குத் தன் தேரில் புறப்பட்டான் என்பதாம்.

(வி - ரை.) ஒன்றும் - சிற்றளவேனும் என்னும் பொருளது. நளன் இருதுபன்னனிடத்துத் தேரோட்டியாகவும் மடைத் தொழில் புரிபவனாகவும் இருந்து பணிபுரிந்தான். பணிஞனை ஒருமைச் சொல்லால் அழைத்தலும் கடுஞ்சொற் கூறிக் கண்டித்தலும் அவற்குத் தலைமையாயினாரது இயல்பு. இங்கே நளனை

அம்முறையில் தான் அழைத்தமை, பேசியமை யெல்லாம் தன் மனத்தில் இருதுபன்னன் எண்ணி 'உன்னை இன்னானென உணராதநிலையில் இவை நிகழ்வுற்றனவாகும். அதனை மனத்தில் கருதாது நான் செய்த இப்பிழைபாட்டைப் பொறுத்து மன்னிக்க வேண்டு'மென நளனை வேண்டினனென்பாராய், 'பொன்னமரும் தாராய் பொறுக்க' என்றான் என்றார். பொன் - அழகு; திருமகள் என்றலுமாம் இயற்கையழகு பொருந்திய பொருள்களிலெல்லாம் திருமகள் குடிகொண்டிருப்பள். மலர் ஒவ்வொன்றினும் அவள் தன் சாயல் பொருந்தியிருப்பது என்பதே தமிழ்ப்பெருமாந்தர்கொண்ட முடிபு. 'திருவளர் தாமரை' என்ற சிற்றம்பலக் கோவைப் பாட்டில், 'திரு-கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்க முடையது' எனப் பேராசிரியர் கூறும் உரையும் காண்க. ஆகலான், திருமகள் அமரும் என்ற பொருள் பொருந்தும். பொறுக்க என்பதில் பொறுக்கெனக் கடை அகரம் செய்யுளிசை நோக்கித் தொக்கது. மேல் - வெளி என்னும் பொருளது ; புறத்தில் என்பதாகும். நீர்மை - தன்மை ; இயல்பு. குன்றா - குன்றி யென்னும் பொருளது . செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். தமயந்திக்கு இரண்டாம் சுயம்வரம் நிகழ்வதாகக் கேளவியுற்று வந்தான் ; நிகழ்ந்தது இவ்வாறு. அதனால் தன் அகக்கிளர்ச்சி குன்றிற்று ; குன்ற, வெளியே தன்னை அழகுபடுத்திப் பல்வகை அணி ஆடை முதலியன புனைதலும் இலனாகி வருந்தியிருந்தான். அதனால் வெளித் தோற்றமும் இழந்திருந்தானென்பாராய்த் 'தன் மேல்நீர்மை குன்றா' என்றார். அரசன் புறப்படுங்கால் தேரைப் பல்வகை அழகிய ஆடை, மாலை, கொடுங்கை முதலியவற்றால் அழகுபடுத்திக் குதிரைகளையும் நன்கு தடவிக் கொடுத்து அதற்கு வேண்டும் அணிமணி சதங்கை யெல்லாம் அமைத்துப் பூட்டுதல் இயற்கை. ஆனால் இங்கே இருதுபன்னன் கருதினது வேறு, நிகழ்ந்தது வேறாக முடிந்தது. தன் தேர்க்குரிய சாரதியும் வேந்தனாக மாறினன். தேரைத் தெரிந்து அழகுபடுத்துவார் எவர்? ஒருவருமிலர். ஆதலால் 'வெறுந்தேர்' என்றார். வெறுமை - பொலிவுகுன்றுதல். மிசை - மேல். கொள்ளல் - ஏறுதல் : தேரிலேறினான் என்பது பொருள். (அ0)

**நளன், தன் மனைவி மக்களுடன் நிடதநாட்டுக்குச் செல்லல்**

சகச. விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேல் தேவியோடும் போயினான்-முற்றம்பல்
தேனீர் அளித்தருகு செந்நெல் கதிர்விளைக்கும்
மாநீர் நிடதத்தார் மன்.

(இ - ள்.) முற்று ஆம்பல் தேன்நீர் அளித்து - மலரும் பருவ அல்லி அரும்புகள் மலர்ந்து தேனாகிய நீரை ஒழுக்கி, அருகு செம் நெல் கதிர்விளைக்கும் - தன் பக்கத்திலுள்ள செந்நெற் பயிர்களை வளர்த்துக் கதிர்கள் கொண்டு விளையச்செய்கின்ற, மாநீர் நிடதத் தார் மன் - மிக்க நீர்வளம் பொருந்திய நிடதநாட்டுக்கு அரசனான நளன், வில்தானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்ல - விற் படை கொண்ட படைவீரர்கள் தனக்கு முன்புறமாகப் போகவும் வேற்படை ஏந்திய அரசர்கள் தனக்குப் பின்புறமாகத் (தொடர்ந்து) வரவும், பொன் தேர்மேல் தேவியொடும் போயி னான் - பொன்னாற் செய்த தேரின்மேலேறிக்கொண்டு தன் மனையாளோடும் (தன் நகர்நோக்கிப்) புறப்பட்டுச் சென்றான்.

(க - து.) நளமன்னனானவன், தனக்கு முன்பு வில் வீரர்கள் போகவும், தனக்குப் பின்பு வேல்வேந்தர்கள் தொடர்ந்துவரவும், பொன்னாலியன்ற தேரில் தன்மனையா ளோடும் ஏறிக்கொண்டு தன் நகர்நோக்கிப் புறப்பட்டுச் சென்றான் என்பதாம்.

(வி - ரை.) வில்+தானை—விற்றானையெனப் புணர்ந்தது. விகாரப் புணர்ச்சி. இது உருபும் பயனும் உடன் தொக்கதொகை. எறிபடையினும் விடுபடை சிறந்ததாகலின், அதனை முற்கூறினார். அரசர்க்குரிய உறுப்புக்கள் ஆறனுள், படையே முதன்மையானது, அரசர்கட்குப் பாதுகாப்பாக இருத்தலின். வள்ளுவரும் அரசர் கட்கு வகுத்த உறுப்பு ஆறனுள்,

[1]"படைகுடி கூழமைச்சு நட்பரண் ஆறும்
உடையான் அரசருள் ஏறு.'

என, முதற்கண் படையைவைத் தோதினமையும் அறிக. அரசர் கள் புறப்படுங்கால் அவர்தம் உரிமைச் சின்னங்களை அனுப்பிப் பின்னரே செல்லுதல் அரசர் மரபாகக்கொள்வது பண்டுதொட்ட மரபு.

'அரசர்தம் உரிமை போக்கி அதன்பின்னே செல்வர்.'

எனத் திருத்தக்கதேவர் சிந்தாமணியினும்,

[2]"சிறை சுற்றித் திருமகள் பின்செல
மூரி விற்கை இளையவன் முன்செல
காரை ஒத்தவன் போம்படி கண்டவவ்
வூரை உற்ற துணர்த்தவும் ஒண்ணுமோ.'

---

1. திருக்குறள், ருஅக.
2. கம்பராமா. நகர்நீங்கு, உருசு.

எனக் கம்பநாடர் இராமாயணத்தும் கூறுதலால் அறிக. இம்முறையில் விற்றூனை முன்சென்றது. பின்புறத்தில் அரசன்பால் அன்புபூண்டொழுகும் வேந்தர்கள் வில்லேந்திய கையினராய் வருவாராயினர். அதனை, 'வேல் வேந்தர் பின்செல்ல' என்றார். இங்கே சிறப்புப்பற்றி ஆட்படையாகிய விற்படை வேற்படைகளைக் கூறினாரேனும் 'ஒருமொழி ஒழிதன் இனங்கொளற் குரித்தே' என்பது கொண்டு யானைப்படை குதிரைப்படை தேர்ப்படைகளும் சென்றனவெனக் கொள்க. பொன் தேர் - அழகிய தேர் என்னலுமாம். பொன்னுனியன்ற தேராவது பொற்றகடுகளால் அமைக்கப்பட்ட தேரெனக் கொள்க. பொன்னால் தேர் செய்தல் கூடுமோ எனின், அரசர்கட்கு அஃதொரு பெரிதில்லை யென்பது அறிந்த தொன்றாகலான், பொன்தேரென்றே கொள்க.

[1]'உருண்ட வாய்தொறும் பொன்னுருள் உரைத்துரைத் தோடி
இருண்ட கல்லையும் தன்னிற மாக்கிய இரதம்.'

என்னும் கம்பர் காட்டும் கருத்தும் இதற்கு அரண் செய்யும். தேவியொடும் என்ற எச்சவும்மை குழந்தைகளையும் குறித்தது. நிடதநாட்டின் நீர்வளனும் நிலவளனும் பலவிடங்களிற் குறித்தமைபோல ஈண்டும் நாட்டுச் செழிப்பினையும் வேலியாயிரம் விளையும் மேம்பாட்டையும் விளக்கற்கு 'ஆம்பல் தேனீர்......... செங்நெல் கதிர்விளைக்கும்' என்றார். மா - கருமை. நீரின் தெளிவுக்குக் கருமை நிறத்தைக் கொள்வது வழக்கம். கருமையாவது நீலநிறம். இதனைத் திருவள்ளுவர் [2]'மணி நீரும்' என்றார். [3]'மாசறத் தெளிந்த மணிநீர் இலஞ்சி' என்றார் மணிமேகலையினும். மன் - நிலைபேறு; அதனையுடையனாகிய அரசற்கு ஆகுபெயர். (அக)

தமயந்தி, நளனிடம் 'நம்நகர் எவ்வளவு தூரம்?' என வினவல்

சகரு. தானவரை வெல்லத் தரித்தநெடு வைவேலாய்
ஏனைநெறித் தூரமினி எத்தனையோ—மானேகேள்
இந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
விந்தமெனும் நம்பதிதான் மிக்கு.

1. கம்பராமா. வரைக்காட்சி, அ.
2. திருக்குறள், எசஉ. 3. மணிமேகலை, எ

(இ - ள்.) (இவ்வாறு நிடதநாட்டுக்குச் செல்லுங்கால் தமயந்தி நளனை நோக்கி) தானவரை வெல்ல தரித்த நெடுவை வேலாய் - அரக்க நெறியினரை வெல்வதற்குக் கொண்ட நீண்ட கூர்மை பொருந்திய வேற்படையையுடைய வேந்தே!, ஏனெறி தூரம் இனி எத்தனையோ - (இன்னும் நம் நகர் செல்வதற்குக் கடந்து செல்லவேண்டிய) வழித் தூரம் எவ்வளவிருக்கின்றதோ (என்று வினவினாள்), (அதற்கு நளன்) மானே கேள் - மான் போன்றவளே கேட்பாயாக, இந்த மலைகடந்து ஏழுமலைக்கு அப்புறம் - இதோ நம் கண்முன் தோன்றுகின்ற இந்தப் பெரிய மலையைத் தாண்டி அதற்கப்பாலுள்ள ஏழுமலைகளையும் கடந்து அதன் பின்னுள்ள இடத்தே, மாவிந்தம் எனும் நம் பதிதான் மிக்கு - மாவிந்தமாநகரமென்னும் நம் நகரம் சிறந்து விளங்குகின்றது (விரைவில் காண்போம் என்றான்.)

(க - ரு.) நளனைத் தமயந்தி நோக்கி, 'வேந்தே! நம் நகர் இன்னும் எவ்வளவு தூரம் உள்ளது' என்று வினவினாள். அதற்கவன் 'மானே! இதோ தெரிகின்ற மலைக்கு அப்புறம் ஏழுமலைகள் உள்ளன; அவைகளைக் கடந்தால் அப்புறம் இருப்பது நம் நகரமே' என்றான் என்பதாம்.

(வி - ரை.) தானவர் - அரக்க நெறியினர். அரக்க நெறியாவது எவ்வுயிருக்கும் இரக்கங்கொள்ளாத வல்லென்ற நெஞ்சத் தன்மை.

[1]"இரக்கமென் றொருபொருள் இலாத நெஞ்சினர்
அரக்கர்.'

என்றார் கம்பரும். இத்தகைய கொலையிற் கொடியார்ரை வேந்தர் ஒறுத்தல் செங்கோன் முறைமை. அம்முறையை நிறுவ வேற்படை தாங்கியவனாகலான், 'தரித்த நெடுவைவேலாய்' எனத் தமயந்தி விளித்தாள். பெண்மை மனம் மிக்க மென்மையுடையது; எதினும் விரைவில் இளகும் தன்மைத்து; துன்பத்தினும் இன்பத்தினும் சார்ந்ததன் வண்ணமாய் ஆகும் தன்மையது; ஆதலால் எதையும் தாங்கும் மதுகை இன்று. அத்தன்மை வாய்ந்த பெண்ணருங்கலமாகிய தமயந்திக்கு வழிசெலவு போகப்போகத் தொலையாத பெருவழியாகத் தோன்றுகின்றது. உடனே தன் காதற் கணவனை நோக்கி, 'அரசே! ஏனெறி தூரம் இனி எத்தனையோ' என மறுக்கங்கொண்டு கேட்டாள்; அதற்குப் பெண் மனநிலையறிந்த நளன், இவ்வளவு தூரம் இருக்

1. கம்பராமா. ஆரணிய. அகத்திய: கஉ.

கின்றதென அறுதியிட்டுரைப்பின், அதனால் மனம் கலங்கி வருந்துவள் என்பதை உட்கொண்டு, 'இதோ அண்மையில் தெரிகின்றதே மலை, இந்த மலையைக்கடந்தால் இதற்கப்புறம் ஏழு மலைகள் இருக்கின்றன. அவைகளைக் கடந்ததும் நம் மாவிந்த மாநகரமே' என்று அவள் மனத்துக்கு ஏற்பக் கூறி, அவளுக்குக் கிளர்ச்சியூட்டினான். இதனை ஆசிரியர், 'சுருங்கச்சொல்லி விளங்க வைத்தல்' என்னும் அழகு தோன்ற, 'இந்த மலை கடந்தேழு மலைக்கப்புறம் மாவிந்தம்' என்றார். இவ்வாறே கற்புக் கொழுந்தாகிய கண்ணகியார் தம் கணவன் கோவலனோடு மதுரைக்குப் புறப்பட்ட காலை, காவிரிப்பூம்பட்டின நகரைக் கடந்து வழியிற் கால் வைத்தபோதே 'மதுரை மூதூர் யாதென வினவ' அது காலை,

> [1]" ஆறைங் காதம்நம் அகல்நாட் டும்பர்
> நாறைங் கூந்தல் நணித்து.'

என்று, அவ்வினாவிற்குக் கோவலன் ஆறுகாதம் ஐந்துகாதம் என உரைத்து வழித்தூரம் மிகைதோன்றாதவாறு சொன்னதும், மிதிலைச்செல்வி தன் கணவன், கருமுகில் வண்ணனோடு நாடு கடந்து காடு சென்ற காலை, அயோத்திநகர் மதிற்புற வாயிலைக் கடக்குமுன் எது காடு என வினவியதை,

> [2]" ஆண்டநகர் ஆரையொடு வாயிலக லாமுன்
> யாண்டையது கான்.'

என்றதும் இக்கருத்தோடொப்ப நோக்கி மகிழற்பாலன. (அஉ)

**நளன் செல்லுங்கால் சூரியன் கீழ்த்திசையில் எழுதல்**

சுகசு. இக்கங்குல் போக இகல்வேல் நளன்எறிநீர்
செய்க்கங்கு பாயும் திருநாடு—புக்கங்
கிருக்குமா காண்பான்போல் ஏறினான் குன்றில்
செருக்குமான் தேர்வெய்யோன் சென்று.

(இ - ள்.) இகல்வேல் நளன் - வீரம் பொருந்திய வேற்படையையுடைய நளமன்னன், எறிநீர் செய்கங்கு பாயும் திருநாடு - கரைகளை மோதுகின்ற நீரானது வயல்களின் வரம்புவரை பாய்ந்து செல்கின்ற அழகிய நிடதநாட்டில், இக்கங்குல் போகபுக்கு அங்கு இருக்குமா காண்பான்போல்-இன்றிரவு நீங்கும்படி சென்று

1. சிலப். கO: சஉ - ந.
2. கம்பராமா. சுந்தர. உருக்காட்டு: சு.

அவ்விடத்தே தங்கியிருக்கின்ற நிலையைப் பார்க்க வருகின்றவன் போல, செருக்குமான் தேர் வெய்யோன் சென்று குன்றில் ஏறினான் - ஓட்டம் மிக்க குதிரை பூட்டிய தேரின்மீது பகலவன் போய்த் தோன்றும் மலையாகிய கீழ்த் திசைக்கண்ணின்று புறப்பட்டான்.

(க - ரை.) நளன் தன் நிடதநாட்டிற் புகுந்து தங்கியிருப்பதைக் காண வருவான்போல, சூரியன் தனது தேரில் கீழ்த்திசையாகிய தோற்றத்துக்குரிய மலைமேல் புறப்பட்டான் என்பதாம்.

(வி - ரை.) இக்கங்குல் - இவ்விரவுப்பொழுது. நளனும் தமயந்தியும் இவ்வாறு வழித்தூரத்தைப் பேசிக்கொண்டே செல்லுங்காலை, பகற்பொழுது போய் இரவு வந்து, அதுவும் யாமம் யாமமாகக் கழிந்து விடியற்காலை வந்தது. சூரியனும் தோன்றினான் என்பது இதனாற் பெறப்படுகின்றது. ஆசிரியர் ஒரோ இடங்களில் வரலாற்றுப் போக்கைச் சுருக்கிக்கொண்டே செல்கின்றாராதலின், இங்கும் சூரியன் மறைந்ததும் இருள் வந்ததும் பிறவும் கூறாது, சூரியன் தோற்றத்தை மட்டும் சுட்டி 'இக்கங்குல்' என்று துவங்கி, 'தேர் வெய்யோன் சென்று' என்று முடித்தார். இதன் உள்ளுறை பொருளாக அமைந்தது, சூரியன் தோன்றிய காட்சி, நளன் தன் நிடதநாட்டிற்சென்று தங்கியிருப்பது எவ்வளவு சிறப்பாக இருக்கின்றது என்பதை நன்கு கண்டு உணர்தற்குப் புறப்பட்டுவர ஆயத்தஞ்செய்து விரைபரி பூட்டிய தன் தேர் மீதேறிக் கீழ்த்திசைக்கண் தோன்றினானெனத் தற்குறிப்பேற்ற அணிதோன்றக் குறித்தார். இருக்கும்+ஆ= இருக்குமாறு: ஈறுகெட்டது; [1]'கொள்ளுமா கொள்வோர்க்கு' என்புழிப்போல. சூரியன் தோற்றமளிக்குங்கால் செந்நிறத்தோடு பல்வகை மேகப்படலங்கள் மலைகள்போல் உயர்ந்தும் தாழ்ந்தும் வான் தோற்றமளித்தலால் குன்றென்று கூறுவர். அதன்மேல் பகலவன் தோன்றிக் காட்சியளிப்பது மலைமேல் ஏறி வருவதுபோல் தோன்றும். மாலைப்பொழுதும் இவ்வாறே தோன்றும். ஆகவே இவையிற்றை வடநூலார் உதயகிரி, அத்தகிரியென்பர். அதனால் 'ஏறினான் குன்றில்' என்றார். ஏறினான் என்னும் சொல்லினால் சூரியன் தோற்றமென்பது பெறப்பட்டது குன்றில் ஏறுவதுபோன்று தோற்றமளிப்பதை மக்கட்குச் சுவையின்பம் பயக்க இவ்வாறு அழகு மிக்க தொடராக அமைத்து ஆசிரியர் கூறினார்; 'இலக்கணக் கவிஞர் சொல் இன்பந் தேடுவர்' என்பதற்கேற்ப. (அரு)

---

1. நீதிநெறி விளக்கம், உஅ.

நளன், மாவிந்த நகரின் ஒரு சோலையில் தங்குதல்

சுகஎ. மன்றலிளங் கோதையோடு மக்களும் தானுமோரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்—சென்றடைந்தான்
மாவிந்தம் என்னும் வளநகரம் சூழ்ந்தவொரு
பூவிந்தை வாழும் பொழில்.

(இ - ள்.) மாவிந்தம் என்னும் வளநகரம் சூழ்ந்த - மாவிந்த மாநகரமென்னும் பெயரமைந்த வளப்பம் பொருந்திய நகரத்தைச் சுற்றியமைந்துள்ள, பூ விந்தை வாழும் ஒரு பொழில் - மலர்கள் வெவ்வேறு காட்சிகளுடன் தோற்றமளிக்கின்ற ஒப்பற்ற சோலை யிடத்தே, (நளமன்னனானவன்), மன்றல் இளங்கோதையொடு மக்களும் தானும் - மணங்கமழுகின்ற மெல்லிய கூந்தலையுடைய தன் மனையாளாகிய தமயந்தியுடன் குழந்தைகளும் தானும், வென்றி மணி நெடுந்தேர்மேல் ஏறி சென்று அடைந்தான் - வெற்றிபொருந்திய மணிகள் கட்டிய நீண்ட தேரின்மேல் ஏறிப் போய்ச் சேர்ந்தான்.

(க - ரு.) நளன் தன் மனைவி மக்களோடு ஒரு வெற்றி பொருந்திய தேரின் மீதேறிச்சென்று, அழகிய மலர்கள் பூத்திருக்கின்ற மாவிந்த மாநகர்ச் சோலையைச் சென் றடைந்தான் என்பதாம்.

(வி - ரை) மன்றல் - மணம் : இளமை. ஈண்டு மென்மை யென்னும் பொருட்டு. கூந்தலுக்கு மணமுள்ள எண்ணெய் பூசுதலாலும் பல்வகை மணமலர்கள் சூட்டுதலாலும் மணம் தங்குவ தாயிற்று. அதனால் தமயந்தியின் கூந்தலழகுச் சிறப்புக் கூறினார். கோதை - கூந்தல் : ஆகுபெயர். தான் - நளன். வென்றி - வெற்றி. நளன்தேர் வென்றே மீளும் சிறப்புடையது ஆகலான், நளன் தன்மைக்கு வெற்றி மேம்பாட்டுக்கு எடுத்துக்காட்டு. [1]"வெல்லும் அத்தனை அல்லது தோற்றிலா விறலோன்' என்றார் கம்பரும். பூவிந்தை என்பதற்குப் பூவில் வீற்றிருக்கின்ற திருமகளென்று கூறலுமாம். அஃது அவ்வளவு பொருட்சிறப்பின்று. இங்கே சோலைக்கு ஏற்றங் கூறுகின்ற இடம்; சோலைக்குச் சிறப்பு பல்வகை மரச்செறிவும் அம்மரங்களிடையே தளிரும் இலையும் பூவும் பிஞ்சும் காயும் கனியும் பல்கி அவைகளை விரும்பி வருகின்ற வண்டும் கிளியும் பிற பறவைகளும் குயிலும் மயிலும் சேர்ந்து வாழ, அதனால் பார்ப்பவர் கண்ணுக்கினிமையும் காதுக்கின்பமும்

1. கம்பராமா. உயுத்த. முதற்போர், உசஅ.

பல்க இருக்குமாதலால், அச்சிறப்புத் தோன்றவே 'பூவிந்தை' என்றார். விந்தை - வியப்பு; பல்வகை நிறமும் குணமும் மணமும் பெற்ற தன்மை. வாழ்தல் - நிலைத்திருத்தல். பொழில் - சோலை. ஒரு - ஒப்பற்ற, ஒன்று என்னும் எண்ணுப் பொருளினும் வந்தது. (அ௪)

நளன், புட்கரனுக்குத் தூதனுப்பி
அவனை அழைத்துவரக் கூறுதல்

சக௫. மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணையம் உளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீர் என்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்தெரியல் தேர்வேந்தன் தான்.

(இ - ள்.) தண்தெரியல் தேர்வேந்தன் - குளிர்ச்சி பொருந்திய மலர் மாலையணிந்த தேரினையுடைய நளமன்னன், கொற்றவனுக்கு என் வரவு சொல்லி - வெற்றி வேந்தனான புட்கரனுக்கு என் வருகையை அறிவித்து, மறு சூதுக்கு உற்ற பணையம் உளது என்று - என்னிடத்தில் இரண்டாம் சூதுக்குப் பந்தயப்பொருள் இருக்கின்றதென்று கூறி, அவனை கொண்டு அணைவீர் என்று குலதூதரைவிடுத்தான் - அவனை அழைத்துக்கொண்டு வருவீர்களாக வென்று கூறிச் சிறந்த தூதர்களை அனுப்பினான்.

(க - து.) நளன் தூதர்களை அழைத்து, 'தூதர்களே! நீவிர் புட்கர மன்னனிடம் போய் என் வருகையைக் கூறி என்பால் மறு சூதாடுதற்குரிய பந்தயப்பொருள் இருக்கின்றதென்று அறிவித்து அவனை அழைத்துக்கொண்டு வாருங்கள்' என்று சொல்லித் தூதர்களை அனுப்பினான் என்பதாம்.

(வி -ரை.) மற்று : அசைநிலை. அவனுக்கு : பண்டறி சுட்டு உருபேற்றது. பணையம் - பந்தயப்பொருள். உளது - உள்ளது. கொற்றவன் - வெற்றியுடையவன். ஈண்டு அரசனைக் குறித்தது. குலத்தூதர் - தூதுபோதற்கேற்ற தகுதி வாய்ந்தவர். தூது செல்வார்க்குத் தகுதியாவது, அன்பு, நற்குடிப்பிறப்பு, அரசர்க்கு மனங்கொள்ளும்படி சொல்லும் சொல்வாய்ப்பு முதலியனவாகும். இதனைத் திருவள்ளுவரும் அமைச்சரின் சிறப்புக்கு எடுத்துக் காட்டாக 'சொலல் வல்லன் சோர்விலன்' என்று கூறியதோடமையாது தூதனுக்கும்,

[1]"அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு."

[2]"தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாம் தூது."

என, அருளுமாற்றால் அறிக. தண்மை - குளிர்ச்சி. தெரியல் - மாலே. தேர் வேந்தன் என்பதற்கு முதனிலைத்தொழிற் பெயராகக்கொண்டு தேர்ச்சி (தெளிதல்; ஆராய்தலே)யுடைய அரசன் என்று பொருள் கூறலுமாம். (அ௫)

### புட்கரன், நளனிடம் வருதல்

௪கக. மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வல்நெஞ்சன்
தூய நறுமலர்ப்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டான் எதிர்.

(இ - ள்.) மாயநெடும் சூதில் வஞ்சித்த வல்நெஞ்சன் - வஞ்ச மிக்க சூதாட்டத்தில் (நளனை ஏமாற்றி அவனுடைய நாடு நகர் முதலியவற்றைக்) கைப்பற்றி வஞ்சஞ் செய்த கல்நெஞ்சையுடையவனாகிய புட்கரன், தூயநறுமலர் பூ சோலைவாய் - தூய்மையான மணம் பொருந்திய பூக்களையுடைய பொலிவுற்ற சோலையினிடத்தே, ஆய பெரும்தானை சூழ - சிறந்த பெரிய படைகள் சூழ்ந்து நிற்க, பெடை நடையாளோடும் இருந்தானை - அன்னப் பேடுபோன்ற மென்னடையுடைய தமயந்தியோடும் தங்கியிருந்த நளமன்னனை, எதிர்கண்டான் - நேரிற் போய்ப் பார்த்தான்.

(க - து.) நல்ல சோலையிடத்தே சேனைகள் சூழ்ந்து நிற்கத் தமயந்தியோடும் தங்கியிருந்த நளமன்னனைப் புட்கரன் போய் நேரிற் கண்டான் என்பதாம்.

(வி - ரை.) மாயநெடும், நெடுமாயம் என மாற்றி மிக்க வஞ்சம் என்று பொருள் கொள்ளலுமாம். நெடுமாயமாவது, கலியால் தான் வென்ற சூழ்ச்சிமிக்க வஞ்சம். வல் - வலிமை. வலிமையெல்லாவற்றினும் மிக்க வலிமையும் நெகிழாத தன்மையும் உடையதாகலான் வல் என்ற சொற்குக் கல் என்று பொருள் கூறப்பட்டது : ஆகுபெயர். தூய்மை - பரிசுத்தம். மலர் மாசற்றது; மென்மையுடையது ; கண்டாரால் விரும்பப்படும் தன்மை

1, 2. திருக்குறள், ௬௮௧, ௬௮௫.

புடையது; ஆதலால் தூய என்னும் அடைபுணர்த்துக் கூறப் பட்டது. பெடை - பெட்டை; பெண் என்னும் பொதுமைப் பெயராயினும் நடையென்ற வினையால் அன்னப் பேடெனப் பட்டது. பெண்கள் நடைக்கு அன்னப் பறவையின் நடையினைத் தொழிலுவமமாகக் கூறுவது ஆன்றோர் மரபு. [1]"பேட்டன மடவ நடைபயில் பிடியை' என்றார் பிறரும். இருந்தானை - நளனை: வினையாலணையும் பெயர், உருபேற்றது. எதிர் - எதிர்ப்புறம், நேராக என்னும் பொருளது. (அகூ)

### புட்கரன், நளனை நலம் வினவல்

சஉ௦. செங்கோல் அரசன் முகம்நோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோல் அரசன் வினவினான்—அங்கோலக்
காவற்கோடை வேந்தே! காதலற்கும் காதலிக்கும்
யாவர்க்கும் தீதிலவே என்று.

(இ - ள்.) தேர்ச்சி இலா வெம்கோல் அரசன் - தெளிவற்ற கொடுங்கோல் மன்னனான புட்கரன், செம்கோல் அரசன் முகம் நோக்கி - முறையொடு பொருந்திய ஆட்சியையுடைய நளமன்னன் முகத்தை எடுத்துப் பார்த்து, அம்கோல காவல் கொடை வேந்தே - அழகிய வடிவமும் உலகையாளும் சிறப்பும் ஈகைத் தன்மையும் கொண்ட அரசனே, காதலற்கும் காதலிக்கும் யாவர்க்கும் - உன் புதல்வனும் புதல்வியும் (மற்ற உன் மனையாள் முதலிய) யாவரும், தீது இலவே என்று வினவினான் - நலந்தானே என்று (நலம் பற்றிக்) கேட்டான்.

(க - து.) புட்கரன் நளமன்னனை நோக்கி, 'வேந்தே! உன் மக்கள் இருவரும், உன் மனையாளாகிய தமயந்தியும், மற்ற யாவரும் நலந்தானே?' என்று நலம்பற்றி உசாவினான் என்பதாம்.

(வி - ரை.) நளனின் கோல்முறை கோடாது ஆட்சிசெய்யும் சிறப்பும் முறைமாறிக் கொடுங்கோல் மன்னனாய் நாட்டை வருத்தும் புட்கரன் ஆட்சிக் கொடுமையும் தோன்ற, முறையே, 'செங்கோல் அரசன்', 'வெங்கோல் அரசன்' என்றார். அம்கோலம் - அழகிய வடிவம். நளன்றன் உடலழகு உரைத்தவாறு. காவல் கொடை: உம்மைத் தொகை காவலும் கொடையும் என விரிக்க. காதலற்கும் காதலிக்கும் என்பதற்கு, காவலனாகிய உனக்கும்

1. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், ௩.

காதலியாகிய தமயந்திக்கும் என்று பொருள் உரைப்பர் சிலர். அதற்கு முன்னிலைப் படர்க்கை. இடவழுவமைதியென இலக்கணமும் கூறுவர். அவ்வாறு பொருள்கூறல் சாலாது. அது பொருட் சிறப்புமின்று. பழகிய ஒருவரோ, அறிமுகமானவர் ஒருவரோ பன்னெடுங்காலம் பிரிந்து இருந்து எதிர்ப்பட்டபோது முதலில் அவர்களை வினவுவது 'உன் மக்கள் நலமா?' என்பதுவே. இவ்வாறே புட்கரனும் முன்பு பழகியவன், இருவரும் அண்ணன் தம்பி முறைகொண்டு அளவளாவியவர் இடையில் கலியின் சூழ்ச்சியால் மாறுபட்டுச சூதாடினர். ஆயினும் பழைய நட்புமுறை தோன்ற இவ்வாறு வினவினான் என்க. காதலற்கும் காதலிக்கும் என்பன வேற்றுமை மயக்கம். ஈண்டு நான்கனுருபு முதலுருபோடு மயங்கிற்று. தீது இலவே - நலந்தானே? என்னும் பொருளது. ஏகாரம் வினாப்பொருளில் வந்தது. (அஎ)

நளனும் புட்கரனும் சூதாட முனைந்து பணையம் வைத்தல்

சஉக. தீது தருகலிமுன் செய்ததனை ஓராதே
யாது பணையம் எனஇயம்பச்—சூதாட
மையாழி யில்துயிலும் மாலனையான் வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து.

(இ - ள்.) (நளனும் புட்கரனும் மறுசூதாட இசைந்தனர்; அப்போது புட்கரன் நளனை நோக்கி) தீதுதரு கலிமுன் செய்த அதனை ஓராது - கேட்டைத்தரும் கலியானவன் (தனக்கு முன் காலத்தில் சூதில்) வெல்லும் தன்மையைச் செய்த செயலை எண்ணிப்பாராமல், சூது ஆட யாது பணையம் என இயம்ப - (நாம் இருவரும்) மறுசூது ஆடுவதற்கு என்ன பந்தயம் வைக்கிறாய் என்று கேட்க, மைஆழியில் துயிலும் மால் அனையான் - கருங்கடலில் யோகநித்திரை செய்கின்ற திருமாலை யொத்தவனான நளமன்னன், வண்மை புனை கை ஆழி கழித்து வைத்தான் - கொடைக் கடமை பூண்ட தன் (வலக்) கைவிரலி லணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றிப் (பணையப் பொருளாக) வைத்தான்.

(க - து.) நளனும் புட்கரனும் மறுசூதாட இசைந்து, புட்கரன் அப்போது நளனை நோக்கி, 'மறுசூதாடுதற்கு என்ன பணையம்?' மென்று கேட்க, நளன் தன் (வலக்) கைவிரல் மோதிரத்தைக் கழற்றிப் பணையமாக வைத்தான் என்பதாம்.

(வி - ரை.) கலி நலஞ்செய்பவனல்லன் என்பதை விளக்கத் 'தீதுதருகலி' என்றார். புட்கரன்முன் சூதால் வென்றது, தன் ஆற்றலான் அன்று. கலியின் உதவியொன்றினாலேயே. அதனை யெண்ணாது தன் அறியாமையால் இன்னும் வெல்லலாமென்று கருதினானென்பாராய், 'ஓராதே யாது......இயம்ப' என்றார். மை-கருநிறம். கடல்நீர் கரியநிறமுடைமையால் மையாழி எனப்பட்டது. பாற்கடலில் திருமால் அறிதுயில் கொள்கின்றார் என்பது வைணவ சமயக் கொள்கை. ஆனால் இங்கே மையாழியென்ற தென்னை யெனின்? கடலென்னும் பொதுமை நோக்கிக் கூறினார். இவ்வாறே கம்பரும் இராமாயணப் பெருங்காப்பியத்தில்,

[1]'கருங்கடற் பள்ளியில் கலவி நீங்கிப்போய்ப்
பிரிந்தவர்.'

என்றதூஉம் காண்க. இதில் கருங்கடல் என்றதுபோலக் கொள்க. அரசர்கட்குத் திருமாலை உவமமாகக் கூறுதல் மரபு. [2]'திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்' என்று ஆழ்வார் கூறுதலானும்,

[3]'முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்.'

என வள்ளுவர் வகுத்துரைத்தலானும், இவ்வாசிரியரே பிறிதோரிடத்தில் 'செங்கண்மால் அல்லனேல் தேர்வேந்தர் ஒப்பரோ' என்று கூறுதலானும் ஈண்டும் நளன்றன் காத்தற் சிறப்புப்பற்றி 'மாலனையான்' என்றார். கை + ஆழி = கையாழி. கை, விரலுக்கு ஆகுபெயராக வந்தது. ஆழி - மோதிரம். வண்மை - கொடை. இல்லையென்றிரந்தோர்க்கு இல்லையென்னாது ஈயும் கைக்கு அடைமொழி. கழித்தல் - நீக்குதல். கையிலிருந்து கழற்றுதலுக்கு ஈண்டு வந்தது. (அஅ)

### நளன், வெற்றிகொண்டு தன் நாடு நகரைக் கைப்பற்றல்

சஉஉ. அப்பலகை ஒன்றின் அருகிருந்தார் தாம்மதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும்—ஒப்பரிய
வன்தானை யோடு வளநாடும் வஞ்சனையான்
வென்றானை வென்றானவ் வேந்து.

1. கம்ப. பால, மிதிலைக்: ௩அ. 2. திருவாய்மொழி, ௩0சஎ.
3. திருக்குறள், ௩அஅ.

(இ - ள்.) அப்பலகை ஒன்றின் - அந்தச் (சொற்கேட்டான் சூதுக்) கருவிப் பலகை ஆட்டம் ஒன்றிலேயே, அருகு இருந்தார் மதிக்க - தன் பக்கத்திலிருந்த மன்னர் முதலிய எல்லோரும் நன்கு மதிக்கும்படி, செப்ப அரிய செல்வ திருநகரும் - புகழ்ந்துரைத்தற் கருமையான செல்வமிக்க அழகிய தன் நகரத்தையும், ஒப்பு அரிய வன் தானையோடு வளநாடும் - இணையற்ற வலிமைமிக்க (நால் வகைப்) படைகளுடன் நீர்வள நிலவளமுள்ள தன் நிடதநாட்டையும், வஞ்சனையால் வென்றானை - முன் மாயச்சூதினால் வென்ற புட்கரமன்னனை, அவ்வேந்து வென்றான் - அந்த நளமன்னன் வென்று அவைகளைத் தனக்குரிமையாக்கினான்.

(க - து.) நளமன்னனானவன், ஒரே சொற்கேட்டான் ஆட்டத்தில் முதற் சூதில் வென்ற புட்கரனை மறு சூதில் வென்று தன் அழகிய நகரம் சேனை நாடு முதலிய எல்லாவற்றையும் தனக்குரிமையாக்கினான் என்பதாம்.

(வி - ரை.) அப்பலகை - அந்தப் பலகை என முன் ஆடிய சூதாட்டத்தைப் பண்டறி சுட்டாகக் குறித்தது. பலகை: ஆகு பெயர். அருகு இருந்தார் மன்னர்கள், அரசன் ஆதலால் பக்கத்தில் பிறர் இருத்தல் பொருந்தாது. அவர்களும் வியக்கும்படி என்பாராய்த் 'தாம் மதிக்க' என்றார். செப்ப அரிய செல்வமுள்ள திருநகராவது,

> [1] 'கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக்
> குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்'

மிக்கநகர். செப்புதல் - புகழ்தல் அன்றிச் சொல்லல் என்றலுமாம். ஒப்பு-உவமை. தானை-சேனை. யானை குதிரை தேர் ஆள் என்னும் நால்வகைப்படை. அரசர்க்குரிய அங்கங்கள் ஆறனுள், படை ஒன்றாகலான், அதனையும் வென்றானென்க. வளநாடு - வேலியாயிரம் விளைகின்ற சிறப்புமிக்க நிடதநாடு. (அகூ)

## புட்கரன், நளனிடம் நாடுநகர்களைக் கொடுத்துவிட்டுத் தன் நாடு செல்லல்

சஉரு. அந்த வளநாடும் அவ்வரசும் ஆங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லால் நளனென்று போற்றிசைக்கும்
கோவேந்தற் கெல்லாம் கொடுத்து.

1. சிலப். உ: எ - அ.

(இ - ள்.) செந்தமிழோர் நாஏய்ந்த சொல்லால் - செந்தமிழ்ப் புலமைமிக்க அறிஞர்கள் தம் நாவிற் பொருந்திய சொற்பொருள் மிக்க பாவகையினுல், நளன் என்று போற்றி இசைக்கும் - நள மன்னனென்று வாழ்த்திப் பாடுகின்ற, கோவேந்தற்கு - மன்னர் மன்னனாகிய நளனுக்கு, அந்த வளநாடும் அவ் அரசும் ஆங்கு ஒழிய - அவ்வளப்பம் பொருந்திய நிடதநாடும் அந்நாட்டின் ஆட்சியும் அவ்விடத்தே சூதினுல் தன்னைவிட்டு நீங்கும்படி, எல்லாம் கொடுத்து-மற்ற அரண்மனையிலுள்ள செல்வங்கள் யாவற்றையும் நளனுக்கே சாரும்படி தோற்றுவிட்டு, வந்தபடியே வழிக்கொண்டான்-தான் வெறுங்கையோடு வந்தது போலவே தன் நகருக்குப் புட்கரன் சென்றுன்.

(க - ரு.) புட்கரமன்னன், மறுசூதில் நிடதநாடு நகர் முதலிய செல்வங்களை யெல்லாம் நளனுக்கே சாரும்படி சூதில் தோற்றுவிட்டுத் தான் வெறுங்கையோடு முன்வந்தது போலவே தன் நகர்க்குத் திரும்பிச் சென்றுன் என்பதாம்.

(வி - ரை.) அந்த என்பது, அ என்னும் சுட்டின் மரூஉ. ஒழிய - தனக்கு உரிமையில்லாது போக. வந்தபடி என்பது, புட்கரன் முன்பு கலியோடு வரும்போது எப்பொருளும் தான் தனக்குரிமையாகக்கொண்டு வந்தானில்லை; வந்தான்; சூதாடினுன்; வென்றுன்; அரசனுனுன்; ஆட்சிபுரிந்தான். இக்கால் மறுசூதில் அவைகளைத் தோற்றுன்; யாவும் நளனுக்கே உரிமையாகத் தான் சென்றுன் ஆகவே, 'வந்தபடியே வழிக்கொண்டான்' என்றுர். வழிக்கொள்ளல் - செல்லும் வழியே போதல். வழிக் கொள்ளல்: ஒரு சொல்; அழுக்காறு, வன்கண்மை, இடுக்கண் என்பனபோல. செம்தமிழோர், செவ்விய தமிழுக்குரியோர். செவ்விய தமிழாவது, வேற்றுச் சொற்கள் கலவாத தூய தமிழ்ச் சொல். அதற்குரிமையாக அதனைக் கற்றுத் துறைபோய அறிஞரைச் 'செந்தமிழோர்' என்றுர். நாஏய்ந்த சொல் - நாவிற் பொருந்திய சொல்லானியன்ற செய்யுள். அஃதாவது சொன்னலங் கனிந்து கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாவிக் கேளாரும் விரும்பிக் கேட்டின்புறுமாறு இயன்றது: சொல்லாகிய பாவிற்குக் கருவி ஆகுபெயர். இதனைக் கம்பரும்,

"[1] புவியினுக் கணியாய் ஆன்ற பொருள்தந்து
புலத்திற் ருகி
அவியகத் துறைகள் தாங்கி ஐந்திணை நெறி அளாவிச்

1. கம்பராமா. ஆரணிய, சூர்ப்ப: க.

சவியுறத் தெளிந்து தண்ணென் றொழுக்கமும்
தழுவிச் சான்றோர்
கவி.'

என்பர்.

"[1] புலவர் பாடும் புகழுடையோர்
வலவன் ஏவா வான ஊர்தி எய்துப.'

எனப் புறம் கூறுமாறு, நளன் செந்தமிழ்ப்புலவர் பாடும் புகழுடையான் என்றார். புலவர் மீக்கூறும் மேன்மை ஒருவனுக்கு வருவதாயின், அவன் அன்பும் அறனும் உடையனாய்க் காண்டற்கு எளியனாய், கருது பேரளியனாய் இருத்தல்வேண்டும். அத்தகைய சிறப்பு மிக்கவன் நளன் என்பாராய் ஆசிரியர், 'நா ஏய்ந்த......... போற்றிசைக்கும்' என்றார். கோவேந்தன் என்றார், மன்னர் மன்னன் என்பதைக் காட்டற்கு, இதனை ஏகசக்கிராதிபதி என்பர். எல்லாம் என்பதில் முற்று உம்மை விகாரத்தால் தொக்கது; இதனை எல்லாமும் என விரிக்க. எல்லாம் என்பது, ஒன்றும் விடாது செல்வமெல்லாம் தோற்றுப் போனான் என்பதற்குத் தெளிவுபட வந்தது. (கூ0)

நளன், தன் நகரத்தை யடைதல்

சஉச. ஏனை முடிவேந்தர் எத்திசையும் போற்றிசைப்பச்
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகரம் எய்தும் புரந்தரனைப் போற்பொலிந்து
நன்னகரம் புக்கான் நளன்.

(இ - ள்.) ஏனை முடிவேந்தர் எத்திசையும் போற்றி இசைப்ப - புட்கரனொழிந்த மற்ற அரசர்கள் எல்லாப் பக்கங்களினும் புகழ்ந்து வாழ்த்துரை கூறவும், சேனை புடைசூழ - படைகள் ஒரு பக்கமாகச் சூழ்ந்து வரவும், நளன் தேர்ஏறி - நளமன்னன் தன் தேரின்மேல் ஏறி இருந்துகொண்டு, ஆன புகழ் பொன் நகரம் எய்தும் புரந்தரனைபோல் பொலிந்து - நிலைத்த புகழையுடைய தேவருலகத்தைச் சேரும் இந்திரன் என்னும்படி விளங்கி, நல்நகரம் புக்கான் - தனக்கேயுரிய மாவிந்தமென்னும் நல்ல நகரில் சென்று சேர்ந்தான்.

(க - து.) மன்னர்களும் படைகளும் தன்னைச் சூழ்ந்து பின்தொடர்ந்துவர, மிக்க புகழுடன் தேவருலகம்

---

1. புறம் : உஎ.

புகும் இந்திரன்போலத் தனக்கே உரிமையான மாவிந்த நகரில் சென்று சேர்ந்தான் என்பதாம்.

(வி - ரை.) ஏனைமுடிவேந்தர் - மற்றவரசர், நளனுக்குப் பகைமையுடையவன் புட்கரனாதால் 'ஏனை' என்ற சொல் அவனையொழித்து நின்றது. எல்லோரும் என்பதிலுள்ள உம்மை முற்று. சேனை-நால்வகைப் படைகள். ஆன - முடிந்த: அறுகுறை யில்லாத, எனவே நிலைத்த புகழ் என்று பொருள் கூறப்பட்டது; 'முடித்த கேள்வி' என்பதுபோல. பொன் நகரம் - தேவருலகம். நளன் தன் சேனைகள் புடைசூழ, அரசர்கள் புகழ்மாலை சூட்டிப் போற்றி இசைப்ப, தன் நகரில் புகுந்த காட்சி, இந்திரன் தன் பொன்னகரில் புகுந்த காட்சிபோல் இருந்ததெனை ஒப்பிட்டுரைத் தார் புக்கான்: பகுதி தன்னொற்றிரட்டி இறந்தகாலங் காட் டிற்று. 'புக்க விடத்தச்சம்' என்புழித் தன்னொற்றிரட்டி இறந்த காலப் பெயரெச்சமாதலை உணர்க. அதுபோற் கொள்க. (௪௪)

நளன், மனைவி மக்களுடன் வரக்கண்ட நகரமாந்தர் மகிழ்தல்

௪௨௫. கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாள்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பாரபெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ உரைப்பன் எதிர்.

(இ - ள்.) பார்பெற்று மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்கு - தான் முன் இழந்த நாடு நகர் முதலியவற்றை மீட்டிக்கொண்டு, தன் மனையாளாகிய தமயந்தியுடன் திரும்பி வரக்கண்ட பெருமைமிக்க மாவிந்த நகருக்கு, எதிர் ஏதோ உரைப்பன் - ஒப்பாக எதைத் துணிந்து சொல்லுவேன், கார் பெற்ற தோகையோ - (நெடுங்காலம் எதிர்பார்த்திருந்த) மேகத் தைக் கண்ட மயிலென்பேனோ?, கண்பெற்ற வாள்முகமோ - இழந்த கண்களைப் பின் மீண்டும் பெற்ற ஒளிபொருந்திய முக மென்றுரைப்பேனோ?, நீர்பெற்று உயர்ந்த நிறைபுலமோ - (நெடுங் காலம் எதிர்பார்த்திருந்த மழைபெய்ய) அந்நீரை ஏற்று வளர்ந்த நெற்பயிர்கள் என்று கூறுவேனோ? (அதற்கு யாதும் ஒப்புச் சொல்ல இயலாது என்றபடி.)

(க - து.) நளமன்னன் தான் இழந்த ஆட்சியை மீண்டும் பெற்றுத் தமயந்தியோடு வரக்கண்ட மாவிந்த மாநகரமக்கள் கொண்ட பெருமகிழ்ச்சிக்கு மேகத்தைக்

கண்ட மயில் முதலியவற்றின் மகிழ்ச்சியையும் உவமை சொல்ல இயலாது; அதினும் மிக்க மகிழ்ச்சியுற்றார் என்பதாம்.

(வி - ரை.) நளன் வரக்கண்ட மாவிந்த மாநகர மக்கள் கொண்ட அளவற்ற மகிழ்வுக்கு, மேகத்தைக் கண்ட மயிலின் மகிழ்வும், கண்ணையிழந்த முகம் மீண்டும் அதைப் பெற்றுச் சிறந்த தோற்றப் பொலிவும், நீரின்றி வாடிக்கிடந்த நெற்பயிர் களுக்கு மழைபெய்து நீர்பெருகி வளர்ச்சியுற்ற நிலையும் உவம மாகக் கூறப்பெற்றன. ஒவ்வொன்றன் இறுதியிலும் வந்த ஓகா ரங்கள் இன்னதென்று துணிந்து சொலற்கியலாத நிலையில் இருந்தனவென்று பொருள் தருதலால், ஐயப்பொருளிலும் வியப்புப் பொருளிலும் வந்தன. மேகத்தைக் கண்டவுடன் மயில் மகிழ்வதுபோல, நளன் தன் மனைவி மக்களோடு வரக்கண்டதும் நகரமாந்தர் மகிழ்ந்தனரென்றும், கண்ணொளியிழந்த முகம் மீண்டும் அவ்வொளியைப் பெற்றுக் கிளர்ச்சிகொண்டு அழகு மிகுவதுபோல, தன்னைவிட்டுப் பிரிந்து காடேகி மீண்டும் வரக் கண்டு ஏற்ற நகரம், மிக்க சிறப்புப் பொலியக் காட்சியளித்த தென்றும், நெற்பயிர்கள், ஈரப்பசைகூட இல்லாத வயலில் இருந்து எப்போது நீர் கிடைக்கும் - கிடைக்குமென்று வாடி வதங்கி ஏக்கற்று நின்று விரும்பியவாறு மழை பொழிந்தவுடன், அம்மழைநீரை யேற்றுக் கிளர்ச்சியும் தெளிவுங்கொண்டு வளர்ச்சி யடைவதுபோல, நகரமாந்தர் என்றினி நம் வேந்தனைக் காண் பேம்; என்று மீண்டும் இவ்வாட்சியைப் பெறுவார் என்று ஏங்கி ஏங்கி வருந்திக் கிடந்தனர்; அவர் விரும்பியவாறு மீண்டும் தம் வேந்தன் வரக்கண்டதும் மனவாட்டந் தீர்ந்து மகிழ்வுகொண்டு உடற்பூரிப்புற்றுத் தலைநிமிர்ந்து வீறுற்று நின்றாரென்றும் உவ மைக்கேற்பப் பொருள் விரித்துக் கொள்க.

தலைவன் பிரிவால் வாடியிருந்தாள் தலைவி; அவன் வரவு கண்டதும், 'நீ ஓராண்டுக் கொருமுறையாவது இங்கே வந்து போவது, நீரின்றி வாடிக்கிடக்கும் நெற்பயிர்களுக்கு இடை விடாது துளிக்கின்ற மழைத்துளி போன்றிருக்கின்ற' தென்று கலித்தொகைத் தலைவி கூறும் கருத்து, இக்கருத்தோடொத்தலை அறிக. அக்கலித்தொகை வருமாறு:

[1]"மாரிக்கு அவாவுற்றுப் பீள்வாடும் நெல்லிற்காங்கு
ஆராத் துவலை அளித்தது போலுநீ
ஓர்யாட் டொருகால் வரவு."

---

1. கலித்தொகை, எக.

தோகை முகம் புலமென்பன ஆகுபெயர்களாக அவ்வச் செயல்கள் முதலியவற்றிற்கு வந்தன. 'மாது ஓடு' என்பதில் உள்ள உம்மை விகாரத்தால் மறைந்து நின்றது. அதனை மாதோடும் என இறந்தது தழீஇய எச்சமாகக்கொண்டு குழந்தைகளோடும் என்று விரித்துப்பொருள் காண்க. ஆசிரியர் கூற்றாக உவமை கூறி முடித்தற்கியலாத நிலையில் 'ஏதோ உரைப்பன் எதிர்' என்றார். அம்மகிழ்ச்சிக்கு ஒரு வரையறை கூற இயலாதென்னும் கருத்தால் இவ்வாறுரைத்தார். அகநானூற்றில் வரும் தோழி கூற்றாக நல்லிசைப்புலவர் கபிலரும் அவள் கொண்ட மகிழ்வுக்கு ஓர் எல்லைக்கோடமைத்து; மழையின்றிப் பல்லாண்டு துன்புற்ற உயிர்கள், மழை பெய்தவுடன் அடைந்த மகிழ்ச்சிகளையெல்லாம் ஒன்றுபடுத்தி என் உள்ளத்தில் அடைத்தால் எவ்வளவு பெரியதோ? அவ்வளவு பெரியது என தலைவிக்குக் குறித்தவாறு திருமணம் நடக்கப்போவது குறித்து,' என்று கூறுவதாக மகிழ்ச்சிக்கு அளவு காட்டி உரைத்தார்; ஆசிரியர் புகழேந்தியார் மகிழ்ச்சிக்கு ஓர் அளவெடுத்துக் காட்டி அவைகளிலெல்லாம் ஐயத்தைப் பெய்து, இறுதியில் மகிழ்ச்சி வரையறையற்றது; அவர் மனங்கொண்ட அளவே அளவு என்று நாம் கண்டுணருமாறு கபிலரையும் விஞ்சி 'ஏதோ உரைப்பன்' என்றுரைத்துச் சுருங்கச்சொல்லி விளங்கவைத்தார். அன்றி வியாசர் கூற்றாக்கினுமாம். (கூஉ)

### வியாசமுனிவர் 'இதுதான் நளன் கதை' என்று கூறித் தருமனை வாழ்த்திச் செல்லல்

சஉகூ. வென்றி நிடதத்தார் வேந்தன் சரிதையீ
தென்றுரைத்து வேத இயல்முனிவன்—நன்றிபுனை
மன்னா பருவரலை மாற்றுதியென் றாசிமொழி
பன்னா நடந்திட்டான் பண்டு.

(இ - ள்.) பண்டு வேத இயல் முனிவன் - முற்காலத்தில் வேதநடையைச் சிக்கறுத்து ஒழுங்குபடுத்திய வியாசமுனிவரர் (தருமனைப் பார்த்து), நன்றி புனைமன்னா - நல்லொழுக்கத்தையே கடமையாகக்கொண்டு நடக்கின்ற தருமராசனே!, வென்றி நிடதத்தார் வேந்தன் சரிதை ஈது என்று உரைத்து-வெற்றிமாலை சூடிய நிடதநாட்டினர்க்கு மன்னனாகிய நளன் வரலாறு இஃதாகுமென்று (விரித்துக்) கூறி, பருவரலை மாற்றுதி என்று-நீ (சூதால் நடந்ததை நினைத்து வருந்துகின்ற) துன்பத்தை இனி விட்டு விடுக என்று கூறி, ஆசிமொழி பன்னா நடந்திட்டான் - (ஆறுதல் மொழி பகர்ந்து) வாழ்த்துரை கூறிவிட்டுச் சென்றார்.

(க - ரை.) வியாசமுனிவரானவர், 'இதுதான் வெற்றி மாலை சூடிய நளமன்னன் வரலாறாகும்; இதனால் நீ வருந்தாதிரு,' என்று தருமராசனுக்குத் தேறுதல் சொல்லித் தேற்றி, வாழ்த்துரை மொழிந்துவிட்டுப் போயினார் என்பதாம்.

(வி - ரை.) வென்றி - வெற்றி: மெலித்தல் விகாரம். இயல் - இயற்கை: நடக்கை. வென்றியால் சூடிய மாலைக்கு ஆகுபெயர். [1]'வாகை வனமாலை' என்றார் பிறரும். அம்மாலை வெற்றி கொண்டமைக்கு அடையாளமாகப் புனைவது. நன்றி - நன்மையென்னும் பொருளது பண்புப்பெயர்; அதனால் ஆகிய ஒழுக்கத்துக்கு ஆகுபெயர். புனைதல் - அணிதல் என்னும் பொருட்டு. இடைவிடாதுகொண்டிருக்கும் உயர்ந்த செயல்கட்கு இவ்வாறு கூறுதல் அடிப்பட்ட ஆன்றோர் மரபு. [2]'அருங்கலை விநோதன் அமரா பரணன்' என்னும் நன்னூற் சிறப்புப் பாயிரத்தில் போர் செய்தலை அணியாகப் பூண்டவன் என்றுரைத்தல் கொண்டுதெளிக. சரிதை - வரலாறு; வடசொல். இது; ஈதெனச்சுட்டு முதல் நீண்டது. பருவரல் - துன்பம். மாற்றுதி: முன்னிலை எவல் ஒருமை வினைமுற்று. ஆசி - வாழ்த்துரை; இதுவும் வடசொல். பன்னு - பன்னி; சொல்லி. செய்யா என்னும் வாய்பாட்டு இறந்தகால வினையெச்சம். நடந்திட்டான் என்பதில் இடு, பகுதிப்பொருள் விகுதி. பண்டு - முற்காலம். ஈண்டு துவாபரயுகத்தில் வேதத்தைச் சிக்கறுத்து ஒழுங்குபடுத்தினார் வியாசமுனிவர் என்பது வரலாறாகக் கூறுவர் ஆதலான், அதனைக் குறித்தது. இச்செய்யுள் கொண்டுகூட்டாகப் பொருள் கொள்ளக் கிடத்தலின், சொற்களைப் பொருள்கோடற்கேற்றவாறு சேர்த்தமைத்துப் பொருள் உரைக்கப்பட்டது. (கூ௩)

## இந்நூலின் வாழ்த்து

௬௨௭. வாழி அருமறைகள் வாழிநல் அந்தணர்கள்
வாழிநளன் காதை வழுத்துவோர்—வாழிய
மள்ளுவநாட் டாங்கண் வருசந் திரன்சுவர்க்கி
தேள்ளுறமெய்க் கீர்த்தி சிறந்து.

(இ - ள்.) அருமறைகள் வாழி - (ஓதற்கும் அறிதற்கும்) அரியதான நான்மறைகள் வாழ்வதாக, நல் அந்தணர்கள் வாழி- நல்ல ஒழுக்கத்தை விடாதொழுகும் முனிவரர்கள் வாழ்க, நளன் காதை வழுத்துவோர் வாழி - நளமன்னன் வரலாறும் அவ்

1. முத்தொள். ௨௦. 2. நன்னூல் சிறப்புப்பாயிரம்.

வரலாற்றைக் கூறுவோரும் கேட்போரும் வாழ்க, மள்ளுவநாடு ஆங்கண்வரு - மள்ளுவநாடென்னும் நீர்வளப்பமிக்க இடத்தில் தோன்றி ஆட்சி புரிகின்ற, சந்திரன் சுவர்க்கி தெள்உற மெய் கீர்த்தி சிறந்து வாழிய - சந்திரன் சுவர்க்கியென்னும் வேந்தனது குற்றமற்ற உண்மைப்புகழ் சிறப்புற்றோங்கி நெடுநாள் வாழ்க.

(க - து.) மறைகள் வாழ்க; மறையுணர்ந்த முனிவர்கள் வாழ்க; நளன் கதை படிப்போர் வாழ்க; மள்ளுவநாட்டில் தோன்றி அரசாளுகின்ற சந்திரன் சுவர்க்கிமன்னன் மெய்ப்புகழ் வாழ்க என்பதாம்.

(வி - ரை.) வாழி : வாழியவென்பதன் ஈற்றுயிர்மெய் கெடநின்ற வியங்கோள் வினைமுற்று. அது வாழ்க என்னும் பொருளது. எந்நூல் செய்யினும் நூலின் முதற்கண் கடவுள் வாழ்த்துக்கூறித் தொடங்குதலும், முடிவின்கண் உலகநலங் கருதி வாழ்த்துரைகூறி முடித்தலும் ஆன்றோர் கொண்ட மரபாகலான், இவரும் அவ்வாறே வாழ்த்துரைகூறி இந்நூலை முற்றுவித்தார். முதற்கண் மறைகளை வாழ்த்தினார். மறை: காண்டற்கியலா அரிய கருத்துக்களையும் உலகியற் பழக்க வழக்க அறமுறைகளையும் உணர்த்துவது. அந்நூலை என்றும் மக்கள் பயின்று வந்தால் அதனால் நாட்டில் அறங்கள் பெருகி, மக்கள் உயர்ந்த குறிக்கோளுடன் வாழ்வாராகலின், முதல் முதலில் மறையை வாழ்த்தினார். அம்மறைப்பொருளை உணர்ந்து கற்றோர்க்குத் தாம் வரம்பாகிய நிலைமையராய்த் தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் வாழும் பெற்றியுடையார் பெரியோர்கள். அப்பெரியோரே அந்தணரெனப்படுவார். அவர் வாழின் உலகமக்கள் நன்னெறியினின்று வழுவாது வாழ்வர். ஆகவே, இரண்டாவதாக அந்தணரை வாழ்த்தப்பட்டது. இந்காதைத் தலைவன் நளவேந்தன், கோல்முறைகோடாக் கொற்றவன்; காண்டற்கெளியன்; தமவும் பிறவும் ஒப்பநாடி ஒருபாற் சாராத நடுநிலைத்தகையோன்; இத்தகையோன் வரலாற்றைத் தெரிந்துணர்ந்தால், நாடு நல்வழியில் அவன்போல் வாழும். ஆதலால், மூன்றாவதாக நளன்காதை படிப்போர்களை வாழ்த்தப் பெற்றது. இறுதியாக ஆசிரியர் தமக்குச் செய்த நன்றியை மறவாத கடப்பாடுடையராய்ச் சந்திரன்சுவர்க்கி அரசனை வாழ்த்தினார். இந்நூற்கண் பல்விடங்களில் அவன் உயர்பண்பைப் பாராட்டிக் கூறியதுபோலவே ஈண்டுங்கூறி, நூலை முற்றுவிப்பாராயினார்.

பிற ஆசிரியர்களும் தாம் பாடும் நூல்களின் முடிவில் வாழ்த்துரை கூறி முடிப்பதுவே மரபாகக்கொண்டுள்ளனர். ஆசிரியர்

இளங்கோவடிகள் தாம் மக்கட்பயன் கருதி ஆக்கியருளிய சிலப்பதிகாரச் செஞ்சொற் காப்பியத்தில், துவக்கத்தில் உலக உயிர்கட்குக் கண்ணொளி கதுவத் தன் ஒளிக்கதிரால் தட்பத்தையும் வெப்பத்தையும் தந்து அவ்வெப்பத்தால் நீரை ஆவியாக்கிக் கொண்டுசென்று பின் மழையாகப்பெய்து தட்பத்தையும் தந்து, அத்தட்பத்தால் பல்வகை விளைபொருளும் பெருகி விளைந்து உயிர்கள் பசியின்றி வாழ உறுதுணை புரிதலால்,

[1]'திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
அங்கண் உலகளித்த லான்.'

என, முதலில் திங்கள் வாழ்த்தும், அதற்கடுத்து,

'ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோல் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்.'

என, ஞாயிற்றின் வாழ்த்தும் கூறி, நூலின் இறுதியில் வாழ்த்துக் காதை என, ஒரு தனிக்காதை அமைத்து வாழ்த்தியும் இருப்பது அறிக.

தேவாரமென்னும் திருமறையை உலகு பயன்கருதி அருளிச்செய்த திருஞானசம்பந்தரும் வாழ்த்துரையாகப் பதிகஞ்செய்திருப்பதும் இக்கொள்கையை வலியுறுத்துவதாகும்.

[2]'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாம்அரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.'

என, வாழ்த்துவதுபோன்று நாமும் உலகம் நலம்பெற வாழ்த்தி, இவ்வுரையை முடிப்பாம். (கூச)

## கலிநீங்கு காண்டம் முற்றிற்று

## நளவெண்பா மூலமும் உரையும் முற்றுற்றன.

---

1. சிலப். மங்கல வாழ்த்து : க - கூ.
2. திருஞானசம். தேவாரம்.

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

